| ஞா. | சீர். | தமி. | |
|---|---|---|---|
| ஞ | ௩௰ | ௰சு | S. Rosæ, அர்ச். உரோசம்மாள், க. |
| ட | ௩௧ | ௰எ | S. Raymundi Nonnati, அர்ச். பிறவாமைமுந்தப்பர், து. |
| | | | SEPTEMBER செப்தெம்பர் மீ. |
| ண | ௧ | ௰அ | S. Ægidii. அர்ச். எசிதியார், ம. |
| த | ௨ | ௰கூ | S. Stephani, அர்ச். முடியப்பர், இ |
| க | ௩ | ௨௰ | S. Serapiæ, அர்ச். செருப்பியம்மாள், க. மே. |
| ந | ௪ | ௨௧ | S. Rosæ, அர்ச். உரோசம்மாள், க. |
| ச | ௫ | ௨௨ | S. Laurentii Justiniani, அர்ச். சுஸ்தினியானு லவரோஞ்சியார், மே. |
| ஞ | ௬ | ௨௩ | S. Onesiphori, அர்ச். ஒனெசிபபோர், வே. |
| ட | எ | ௨௪ | S. Reginæ, அர்ச். இரெச்சீனம்மாள். க. வே. |
| ண | அ | ௨௫ | Nativitas B. V. M. தேவமாதாபிறந்ததிருநாள். |
| த | கூ | ௨௬ | S. Gorgonii, அர்ச். கொற்கோனியார், வே. |
| க | ௰ | ௨எ | S. Nicolai de Tolentino. அர்ச். தொலேந்தினு நிக்கொலாஸ், து. |
| ந | ௰௧ | ௨அ | S. Proti, அர்ச். பிரேத்தப்பர், வே. |
| ச | ௰௨ | ௨கூ | S. Nominis B.V.M. அர்ச். கன்னிமரியாயிதிருநாமத்தின்திருநாள். |
| ஞ | ௰௩ | ௩௰ | S. Maurilii, அர்ச். மவுரிலியார், மே. |
| ட | ௰௪ | ௩௧ | Exaltatio S. Crucis, அர்ச். சிலுவையுயர்த்தப்பட்டதிருநாள். |
| | | | புரட்டாசி. |
| ண | ௰௫ | க | S. Nicomedis, அர்ச். நிக்கொமேத |

| ஞா. | சீர். | தமி. | |
|---|---|---|---|
| | | | ப்பர். வே. [பா. வே. |
| த | மசு | உ | S. Cornelii, அர்ச. கொற்னெலியார், |
| க | மஎ | ரு | Impressio sacr. Stigm. S. Francisci, அர்ச. பிறஞ்சீஸ்குவிற்பதிந்த-ஐ-திருக்காயங்களின் திருநாள். |
| ங | மஅ | ச | S Thomæ de Villanovâ, அாச. வில்லநொவ தோமையார், மே. |
| ச | மசூ | ரு | S. Januarii, அாச. சனுவரியார், மே. வே. [ர், வே. |
| ஞ | உம | சு | S Eustachii, அாச. எவுஸ்தாக்கியா |
| ட | உக | எ | S. Matthæi, அாச. மத்தேயு, அ. சு. |
| ண | உஉ | அ | S Mauritii, அாச. மவுரீசியார், வே. |
| த | உரு | சூ | S. Lini அாச. லீனப்பர், பா. வே. |
| க | உச | ம | B. V. Mariæ de Mercede, அடிமைப்பட்டவாகளை மீட்ட வுபகாரமாதா. [மே. வே. |
| ங | உரு | மக | S. Firmini, அாச. பிர்மீனப்பர், |
| ச | உசு | மஉ | S. Cypriani, அாச. சிப்பிறியான், வே. [வே. |
| ஞ | உஎ | மரு | S. Cosmæ, அாச. கோஸ்மப்பர், |
| ட | உஅ | மச | S. Wenceslai, அாச. வெஞ்சேஸ்லாஸ், இ. வே. |
| ண | உசூ | மரு | S. Michaelis Arch. அதிதூதரான அாச. மிக்கயேல். [வேத. |
| த | ரும | மசு | S. Hieronymi, அாச. இயெரோனிமு, |
| | | | OCTOBER, ஒக்டோபர்மீ. |
| க | க | மஎ | S. Remigii, அாச. ரெமீசியார், மே. |
| ங | உ | மஅ | SS. Angelorum Custodum, காவலானசம்மனசுகளின திருநாள். |
| ச | ரு | மசூ | S. Gerardi, அாச. செராார்தப்பர், ம. |

| ஞா. | சீர். | தமி. | |
|---|---|---|---|
| ஞ | ச | உய | S Francisci, அாச. பிருஞ்சீஸ்கு, து. |
| ட | ரு | உக | S. Placidi, அ'ச. பிலசீதப்பர், வே. |
| ண | சா | உஉ | S. Brunonis, அாச. புருனோ, து |
| த | எ | உங | S. Marci, அா . மாற்கு, பா. [வி. |
| க | அ | உச | S. Birgittæ, அாச. விறிசித்தமமாள், |
| ந | கூ | உரு | S. Dionysii, அாச. தியொனிசியார், சே. வே. |
| ச | ய | உசா | S. Francisci Borgiæ. அாச. பிருஞ் சீஸ்குபொற்சியார், கு. து. |
| ஞ | யக | உஎ | S. Tharaci, அாச. தருக்கப்பர், வே. |
| ட | யஉ | உஅ | S. Walfridi, அாச. உவல்பிறிதப்ப ர், வே. |
| ண | யங | உகூ | S. Edwardi, அாச. எடவார், இ. |
| த | யச | ஙய | S. Callisti, அாச. கல்விஸ்தார், பா. வே. [க. |
| க | யரு | ஙக | S. Teresiæ, அாச. தெரேசம்மாள், |
| | | | **ஐப்பசி.** |
| ந | யசா | க | S. Galli. அாச. கால்லியார், ம. [வீ. |
| ச | யஎ | உ | S. Hedwigis, அாச. எட்வீசம்மாள், |
| ஞ | யஅ | ங | S. Lucæ, அாச. லூக்காஸ், சு. |
| ட | யகூ | ச | S. Petri de Alcantara, அாச. அல் காந்தருஇராயப்பர், கு. த. [வே. |
| ண | உய | ரு | S. Irenes, அாச. இரேனம்மாள், க. |
| த | உக | சா | S. Ursulæ, அாச. உர்சுல்மமாள் முதலியகன்னியாஸ்திரீகள், வே. |
| க | உஉ | எ | S. Cordulæ, அாச. கொற்துலம்மா ள், க.வே. [இராயப்பர், மே. வே. |
| ந | உங | அ | S Petri Pa scha sii, அாச. பஸ்காசி |

| ஞா. | சீர். | தமி. | |
|---|---|---|---|
| ச | உச | கூ | S. Raphaelis Arch. அதிதூதரான அர்ச. இரபயேல். [வே. |
| ரு | உரு | ய | S. Chrysanti, அர்ச. கிறீசாந்தார், |
| ட | உசா | யக | S. Evaristi அர்ச எவரீஸ்தார், பா. வே. [வே. |
| ணா | உஎ | யஉ | S. Vincentii, அர்ச. விஞ்சேஞ்சியார், |
| த | உஅ | யங | SS. Simonis et Judæ, அர்ச. சிமோனும்யூதாவுமென்கிறஅப்போஸ்தலர். |
| கி | உகூ | யச | S. Narcissi, அர்ச. நற்சீசியார். மே. |
| வெ | ஙய | யரு | S. Marcelli, அர்ச. மர்செல்லியார், வே. [வே. |
| ச | ஙக | யசா | S. Quinctini, அர்ச. குயிந்தீனப்பர், |
| | | | NOVEMBER, நவெம்பர்மீ. |
| ஞ | க | யஎ | Festum Omnium Sanctorum, சகல அர்சசியசிஷ்டர்களின் திருநாள். |
| ட | உ | யஅ | Commoratio Omnium Fidelium Defunctorum, உத்தரிக்கிற ஆத்துமாக்களின் திருநாள். [ம. |
| ணா | ங | யகூ | S. Malachiæ, அர்ச. மலக்கியாஸ், |
| த | ச | உய | S. Caroli Borromæi, அர்ச. கார்லுபொரோமெயார், மே [வே. |
| கி | ரு | உக | S. Galationis, அர்ச. கலாசியோன், |
| வெ | சா | உஉ | S. Leonardi, அர்ச. லெயோணர், த. |
| ச | எ | உங | S. Willibrordi, அர்ச. உவில்லிபுரோர்தப்பர், மே. [டிபெற்றநால்வர். |
| ஞ | அ | உச | SS. 4 Coronatorum, வேதசாட்சிமு |
| ட | கூ | உரு | Dedicatio Basilicæ Salvatoris, இரட்சகர் கோயிலின்பிஷேகத் திருநாள். |

| ஞா. | சீர். | தமி. | [ன்பெல்வேந்திரர், கு. து. |
|---|---|---|---|
| ண | ய | உசு | S. Andreæ Avellini, அாச. அவல்வி |
| த | யக | உஎ | S. Martini, அாச. மற்தீன், மே. |
| க | யஉ | உஅ | S. Martini, அாச. மற்தீன், பா. வே. |
| ங | யரு | உகூ | S. Didaci, அாச. திதாக்கியார், து. |
| | | | **கார்த்திகை.** |
| ச | யச | க | S. Laurentii, அாச. லவுரொஞ்சியார், மே. [மாள், க. |
| ஞ | யரு | உ | S. Gertrudis, அாச. சேற்துறுதம |
| ட | யசு | ரு | S. Edmundi, அாச. எட்முந்தப்பர், மே. |
| ண | யஎ | ச | S. Gregorii Thaumaturgi, புதுமை செய்பவரான அாச. கிறகோரி, மே. |
| த | யஅ | ரு | Dedicatio Basilicarum SS. Petri & Pauli, அாச. இராயப்பர் சின்னப்பர் கோயில் பிரேஷகம. [மாள், வி. |
| க | யகூ | சு | S. Elisabeth, அாச. எலிசபெத்தம |
| ங | உய | எ | S. Felicis de Valois, அாச. பெலீக்ஸ்தெவ்லோயி, கு. து. |
| ச | உக | அ | Præsentatio B. M. V. தேவமாதா தேவாலயத்திற் காணிக்கையான திருநாள். [க. வே. |
| ஞ | உஉ | கூ | S. Cæciliæ, அாச. செசிலியம்மாள். |
| ட | உரு | ய | S. Clementis, அாச. சாந்தகப்பர், பா. வே. [அருளப்பர், ந. து. |
| ண | உச | யக | S. Joannis à Cruce, அாச. சிலுவை |
| த | உரு | யஉ | S. Catharinæ, அாச. கத்தரீனம்மாள், க. வே. |
| க | உசு | யரு | S. Petri, அாச. சாயப்பர், மே. |

| ஞா. | சிர். | தமி. | |
|---|---|---|---|
| வ | ௨௭ | ௰௪ | S. Jacobi, அாச.யாகப்பர், வே. |
| ச | ௨௮ | ௰௫ | S Stephani Junioris, அாச.சின்ன |
| | | | முடியப்பர், த. வே. [வே. |
| ஞ | ௨௯ | ௰௬ | S. Saturnini, அாச.சத்துர்னீனூர். |
| ட | ௩௰ | ௰௭ | S. Andreæ, அாச.பெலவந்திரர், அ. |
| | | | DECEMBER, டிசம்பர்மீ. |
| ணை | [illegible] | ௰௮ | S Eligii, அர்ச. எலிசியார், மே. |
| த | ௨ | ௰௯ | S.Bibianæ, அாச.பிபியாண்மமாள். |
| | | | க. வே. |
| க | ௩ | ௨௰ | S. Francisci Xaverii, இந்துதேசத் |
| | | | துக்கு அப்போஸ்தலரான அாச். |
| | | | சவேரியார். கு. து. [க வே. |
| வ | ௪ | ௨௧ | S. Barbaræ, அர்ச். பார்பரமமாள், |
| ச | ௫ | ௨௨ | S. Sabbæ, அர்ச். சப்பாஸ், ம. |
| ஞ. | ௬ | ௨௩ | S. Nicolai, அர்ச். நிக்கோலாஸ், |
| | | | மே. [மே.வேத. |
| ட | ௭ | ௨௪ | S. Ambrosii, அர்ச்.அமிர்தநாதர், |
| ணை | ௮ | ௨௫ | Conceptio B. V. M. அர்ச். கன்னி |
| | | | மரியாயி சன்மப் பாவமில்லாம |
| | | | லுற்பவித்ததிருநாள். |
| த | ௯ | ௨௬ | S. Leocadiæ, அாச். லெயோகதிய |
| | | | ம்மாள், க. வே. |
| | ௰ | ௨௭ | S. Melchiadis, அர்ச். மெல்கியத |
| | | | ப்பர், பா. வே. [து. |
| வ | ௰௧ | ௨௮ | S. Damasi, அர்ச். தமாசியார், பா. |
| ச | ௰௨ | ௨௯ | S.Epimachi, அாச்.எப்பிமக்கியார், |
| | | | மே. [க.வே. |
| ஞா | ௰௩ | ௩௰ | S. Luciæ, அர்ச்.பிரகாசியம்மாள், |

| ஞா. | சீர். | தமி. | மார்கழி. |
|---|---|---|---|
| — | ௰௪ | ௧ | S. Spiridionis, அர்ச். ஸபிரிதியோன், மே. |
| ண | ௰௫ | ௨ | S. Valeriani, அர்ச. வலேரியாண். மே. வே. [மே. வே. |
| த | ௰௬ | ௩ | S. Eusebii, அர்ச. எவுஸ்சபியார், |
| க | ௰௭ | ௪ | S. Lazari, அர்ச. தேவசகாயர், மே. |
| ங | ௰௮ | ௫ | S. Gratiani, அர்ச. கிருசியான், மே. |
| ச | ௰௯ | ௬ | S. Timothei, அர்ச. திமோத்தயு, வே. |
| ஞ | ௨௰ | ௭ | S. Dominici, அர்ச. சாமிநாதர், ம. |
| ட | ௨௧ | ௮ | S. Thomæ, அர்ச. தோமையார், அ. |
| ண | ௨௨ | ௯ | S. Flaviani, அர்ச. பிலாவியார், வே. |
| த | ௨௩ | ௰ | S. Victoriæ, அர்ச. செயமமாள, க. வே. |
| க | ௨௪ | ௰௧ | S. Tharsillæ அர்ச. தார்சில்லம்மாள், க. ☞ கடனெருசந்தி. |
| ங | ௨௫ | ௰௨ | ☞ Nativitas D. N. J. C. கர்த்தர் பிறந்த திருநாள. |
| ச | ௨௬ | ௰௩ | S. Stephani Protom. முதல்வேத சாட்சியான அர்ச. முடியப்பர். |
| ஞ | ௨௭ | ௰௪ | S. Joannis Ap. & Ev. அர்ச. அருளப்பா, அ. சு |
| ட | ௨௮ | ௰௫ | SS. Innocentiu,m, M. மாசில்லாக் குழந்தைகள, வே. [வே. |
| ண | ௨௯ | ௰௬ | S. Thomæ அர்ச. தோமையார், மே. |
| த | ௩௰ | ௰௭ | S. Sabini, அர்ச. சபினர், மே. வே. |
| க | ௩௧ | ௰௮ | S. Silvestri, அர்ச். சில்வேஸ்தர், பாது. |

# கடனொருசந்தி
# சுத்தபோசன நாட்களின்
# அட்டவணை.

தபசுகாலத்தில் ஏழுவெள்ளிக்கிழமையுமல்லாமற் கடைசிசனிக்கிழமையுங் கர்த்தர்பிறந்ததிருநாளுக்குமுந்தின நாளுங்கடனொருசந்தி.

கர்த்தர் பிறந்த திருநாளதவிர வருஷத்தின் சகலவெள்ளிசனிக்கிழமைகளுந் தபசுகாலமுழுதுஞ் சுத்தபோசனக்கடன்.

தபசுகாலத்தின் முதல்ஞாயிற்றுக்கிழமைக்குப் பிறகும், இஸ்பிரீத்துசாந்துவின் திருநாளுக்குப்பிறகும், செப்டெம்பர் மீ ௰௪உக்குப்பிறகும், டிசெம்பர் மாதம ௰௩உக்குப்பிறகும் வருகிற புதன் வெள்ளி சனிக்கிழமைகள் சதுர்காலமெனனப்பட்ட சுத்தபோசனக்கடன்.

நவெம்பர் மீ ௩௰உயில்வருகிற அர்ச்.-பெலவந்திரொன்னுடைய அப்போஸ்தலர் திருநாளுக்குமுந்தியாவது பிந்தியாவது அடுத்துவருகிற ஞாயிற்றுக்கிழமையே ஆகமனகாலத்தின முதலஞாயிறும்.






நம்முயிரைமீட்கக்கர்த்தர்
தம்முயிரைத்தந்தாரையோ !
அம்முறையாய் நேசித்தநாதனை
யெம்மனநேசிக்காதென்னோ !



அநாதிநமஸ்து.



பிரதிதினச்சுகிர்த

# செபங்கள்.

## அர்ச்சியசிஷ்டசிலுவை மந்திரம்.

அர்ச்சியசிஷ்டசிலுவை அடையாளத் தினாலே எங்கள்சத்துருக்க ளிடத்திலே நின்று எங்களை யிரட்சித்துக்கொள்ளும் எங்கள் சர்வேசுரா பிதாவுடையவும் சுத னுடையவும் இஸ்பிரீத்துசாந்துவுடைய வும் நாமத்தினாலே. * ஆமென்சேசு.

## சுகிர்த-அப்பியாசம்.

விடியற்கண்விழிக்கிறபொழுது.
ஓதுதல்.

சேசுமரியாயிசூசை உங்கள்டைக்கல த்திலே நான்கண்விழித்துப் பொல்லாப் பைக்காணுமலும், நினையாமலுமிருக்கக் கடவேன்.

எழுந்திருக்கிறபொழுது.

சேசுநாதருடைய திருநாமத்திேைல யெழுந்திருக்கிறேன், படுக்கையிலேநி ன் றெழுந்ததுபோலே நான்சர்வபாவத் தையும்விட்டெழுந்து மறுபடியும்பாவ த்தில்விழாதபடிக்கு என்னைத் தற்காத் தருளுஞ்சுவாமீ.

உடுக்கிறபொழுது.

ஆண்டவரே யிந்தச்சரீரத்தைமூட வ ஸ்திரங் கொடுத்ததுபோல ஆத்துமத் தையலங்கரிக்க உமதுகருணைப்பிரசாதத் தைக் கொடுத்தருளுவீராக.

உதய ஆராதனை.

பிதாச்சுதனிஸ்பிரீத்துசாந்துவாகிய தி ரித்துவமும் ஏகமுமானசர்வேசுரா தே

வரீரைவணங்கித் துதிக்கிறேன். தேவரீரு
டையதிருவாக்கெல்லாமுழுமனதோடே
விசுவசித்து நம்பிச் சகலத்தையும் பார்க்
க உம்மையே நேசிக்கிறேன். தேவரீரடி
யேனுக்குச்செய்த உபகாரங்களுக்காக
வும், விசேஷமா யென்னை யிந்நேரமட்
டும் பிழைத்திருக்கப் பண்ணினதற்காக
வும், உமக்கிடைவிடாத தோத்திரம்ப
ண்ணுகிறேன். இன்றும்முடைய கற்பனை
தவறாமல் நடக்கக் கெட்டிமனதாயிருக்
கிறேன். ஆனதிரு லென்சிந்தனைவாக்கு
க்கிரியை யாத்துமஞ்சரீரஞ் சகலத்தையு
மும்முடைய பணிவிடைக்கேற்க நடப்பி
த்துக்கொள்ள உமக்கேகையளிக்கிறே
ன். இதல்லாமல், நான்செய்கிற நற்கிரி
யையெல்லாஞ்சேசுநாதருடையபுண்ணி
யங்களோடே தேவரீர் கையேற்றுக்கொ
ள்ளும். இவைகளால்வருகிறபூரணபலனை
நான்டைந்து சகலபாவங்களுக்காகவுமு
த்தரிக்கமனதாயிருக்கிறேன். உமது அள
வில்லாதகிருபையா லென்னையிரட்சித்த
ருளுஞ்சுவாமீ. ஆமென் சேசு.





## திறிகாலச்செபம்.

ஆண்டவருடைய சம்மனசானது மரி யாயியுடனே விசேஷிஞ்சொல்லிற்று; அவள் இஸ்பிரீத்து சாந்துவினாலே கர்ப்ப ணியானாள். பிறியதத்தமந்திரம்.

இதோ ஆண்டவருடைய அடிமையானவள்; உம்முடைய வார்த்தையின்படியே எனக்கு ஆகக்கடவது. பிறி.

வார்த்தையானது மாம்ஸமாகி யெங்களுடனேகூட வாசமாயிருந்தது. பிறி.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ சம்மனசு சொன்னதினாலே யுமக்குக்குமாரனாகிய சேசுகி

றீஸ்து மனுஷனானதை யறிந்திருக்கிற நாங்கள் அவருடைய பாடுகளினாலேயுஞ் சிலுவையினாலேயும், உத்தாநத்தின் மகிமையை யடையத்தக்கதாக, எங்களுக்கு அநுக்கிரகம் பண்ணியருளவேணுமென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம். இந்தமன்றாட்டுக்களை யெல்லாஞ் சேசுகிறீஸ்துநாதருடைய திருமுகத்தைப்பார்த்து, எங்களுக்குத் தந்தருளும். ஆமென்சேசு. பரமண்டலமந்திரம்.

அர்ச்.-தமதிறித்துவத்தின் தோத்திரம்.

பிதாவுக்கும் - சுதனுக்கும் - இஸ்பிரீத்துசாந்துவுக்கும் - தோத்திரமுண்டாகக்கடவது. ஆதியிலேயும் இப்பொழுதும் எப்பொழுதும் அநாதிசதாகாலமு மிருக்கும்படியே. ஆமென் சேசு.

---

முன்சொன்ன தற்குவதிரைப்பெரியபுதன்கிழமைச்சாயங்காலந்துவக்கிப் பெரியசனிவாரங் காலமேமட்டுந்திரிகாலச்செபமாகச்சொல்லு மந்திரமாவது.

---

கிறீஸ்துவானவர் நமக்காகமரணமட்டுக்குங் கீழ்ப்படிதலானார்.

மேலுஞ்சிலுவையின்மேலே மரித்தார்.

ஆதலாற் சர்வேசுரன் அவரை யுயர்த்தி யெல்லாநாமத்துக்கு மேலானநாமதேயத்தை யவருக்குத்தந்தருளினார்.

பரமண்டல...

சர்வேசுரா சுவாமீ எங்களாண்டவராகிய சேசுகிறீஸ்துநாதர் பாவிகளாகிய யூதர்களுடைய கையிற் காட்டிக்கொடுக்கப்பட்டுச் சிலுவையி னிர்ப்பந்தத்தை யநுபவித்து இரட்சித்தருளின விந்தக் குடும்பத்தைக் கிருபைக்கண்கொண்டு பாரும். இந்தமன்றாட்டைத் தேவரீரோடும் இஸ்பிரீத்துசாந்துவோடும் ஏகதேவனுமாய்ச் சதாகாலஞ் சீவியருமாய்ப் பரிபாலனம்பண்ணுகிறவருமா யிருக்கிற சேசுநாதரைக்குறித்து எங்களுக்குத் தந்தருளும். ஆமென் சேசு.



பாஸ்குக்காலத்தின் திறிகாலச்செபம்.

இதுபெரியசனிவாரந்துவக்கி அர்ச்.-தமதிறித்துவத்தின் திருநாள்வரைக்குஞ் சொலலத்தக்கது.

பரலோகத்துக்கிராக்கினியே மனங்களிகூரும். அல்லேலூய்யா.

அதேதெனிற் பாக்கியவதியான வுமது திருவுதரத்தில்வதரித்தவர். -

அல்லேலுய்யா. -

திருவுளம்பற்றின வாக்கின்படியே உயிர்த்தெழுந்தருளினார்.

அல்லேலுய்யா.

எங்களுக்காகச் சர்வேசுரனை மன்றாடும். அல்லேலுய்யா.

மு. எப்பொழுதுங் கன்னிகையான மரியாயே யகமகிழ்ந்துபூரிக்கக்கடவீர். அல்லேலுய்யா.

து. அதேதெனில், ஆண்டவர்மெய்யாகவே யுத்தாநமாயினார்.
அல்லேலுய்யா.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ யும்முடையதிருக்குமாரனுமா யெங்களாண்டவருமாயிருக்கிறயேசுகிறீஸ்துவி னுத்தாநத்தினாலேயுலகங்களிக்கச் சித்தமானீரோ! கன்னிமரியாயியாகிய அவருடைய திருத்தாயாராலே நித்தியசீவியமான பரலோகவாழ்

வை நாங்கள்டையும்படிக்கு அநுக்கிரகம்பண்ணியருளும். இந்த மன்றாட்டுக்களையெல்லா மெங்களாண்டவரான சேசுநாதருடைய திருமுகத்தைப்பார்த்தெங்களுக்குத்தந்தருளும்.

ஆமென்சேசு.



திவ்வியகர்த்தாவே! சம்மனசுகள் நந்த பத்தியோடே உம்மையாராதித்து ஸ்துதித்துச் சேவிக்கிறதுபோலே அடியேனுந் தேவரீரையாராதித்து ஸ்துதித்துச்சேவிக்கும்படியாகவெனக்கு அநுக்கிரகஞ்செய்தருளுஞ்சுவாமீ.



## அதிகாலைச்செபம்.

கிறீஸ்துவனானவன் அதிகாலமே யெழுந்திருந்தவுடனே மிகுந்தபத்தியோடேயும் வணக்கத்தோடேயுங் கைகுவித்து முழங்காலிலேயிருந்து ஏகசர்வேசுரனைப்பார்த்துச் சொல்லத்தக்கதாவது.

தானு யநாதியுமாய்ச் சரீரமில்லாதவருமாய், அளவில்லாதசகலநன்மைச் சுரூபியுமாய், ஞானத்தினாலேயும் பலத்தினாலேயுங் காரணத்தினாலேயும் எங்கும் வியாபித்திருக்கிறவருமாய், எல்லாத்திற்குமாதிகாரணமுமா யாவர்க்குங்கதியுமாய்ப் பொல்லாதவர்களை நரகத்திலே தள்ளி நல்லவர்களுக்கு மோக்ஷங்கொடுக்கிறவருமாகிய, பிதாச்சுத இஸ்பிரீத்துசாந்துவென்னு மூன்றாட்களா யிருந்தாலும் ஒரேசர்வேசுரனாயிருக்கிற வென்னாண்டவரே, தேவரீர்மாத்திர மெய்யானதேவனா யிருக்கிறபடியினாலே யுமக்குமாத்திரஞ் செய்யத்தக்க தேவாராதனையையுமக்கேபண்ணுகிறேன்.

இந்தவார்த்தைகளைச்சொல்லும்பொழுது மிகுந்ததாழ்ச்சியோடே சாஷ்டாங்கமாகவிழுந்து முழுமனதோடே சர்வேசுரனை வணங்கிறது.

*அதன்பிறகெழுந்திருந்து பரிசுத்ததேவமாதா வைப்பார்த்துச் சொல்லத்தக்கதாவது.*

சர்வேசுரனாலே யுண்டாக்கப்பட்டபு த்தியுடைத்தான வஸ்துக்களுக்குள்ளே மேலானவளாயிருக்கிற அர்ச்சியசிஷ்ட மரியாயே, நீர் மோக்ஷவாசிகளென்ன ப்பட்ட யாவரையும்பார்க்க வெண்ண ப்படாத நன்மைகளினாலேயதிசயித்துச் சர்வலோகத்துக்கு மிராக்கினியா யிருக் கிறதினாலேயும், எப்பொழுதும் பரிசுத் தகன்னியாஸ்திரீயாயிருந்து மெய்யா ன சர்வேசுரனு மெய்யான மனுஷனு மொன்றான சேசுநாதருக்குத் திவ்விய மாதாவாயிருக்கிறதினாலேயுஞ் சகலமா ன அர்ச்சியசிஷ்டர்களுககுஞ் செய்யத்த க்க சாதாரண ஆராதனையைப்பார்க்க உ மக்குமாத்திரமே * விசேஷாராதனைப ண்ணுகிறேன்.

*இந்தவார்த்தைகளைச் சொல்லும்பொழுது மிகு ந்ததாழ்ச்சியோடே முழந்தாளிட்டு நெற்றிதரையி லேபட நமஸ்காரம்பண்ணுகிறது.*

*அதன்பின்பெழுந்திருந்து காவலாயிருக்கிற சம் மனசானவரையும் பரமநாதர்களையுஞ் சகலமான அர்ச்சியசிஷ்டர்களையுங் குறித்துச் சொல்லத்தக்க தாவது.*  * (உ)

சுகலமோக்ஷவாசிகளே ! சர்வேசுர னைப் பிரத்தியக்ஷதரிசனமாய்த் தரிசித்துக்கொண்டு ஆண்டவருக்கு உகந்தவர்களாயிருக்கிறபடியினாலேயும், நன்மையிலே நிலைகொண்டவர்களாயிருக்கிறபடியினாலேயும், உங்களுடைய வேண்டுதல் மன்றாட்டுக்களினாலே சர்வேசுரனுங்களைக்கொண் டெங்களுக் கநேகசகாயவுபகாரங்களைப்பண்ணிக்கொண்டு வருகிறதினாலேயும், திருச்சபை கட்டளையிட்டபிரகார முங்களுக் காராதனைபண்ணுகிறேன்.

இந்தவார்த்தைகளைச்சொல்லும்பொழுது மிகுந்ததாழ்ச்சியோடே தலைகுனிந்து தண்டன்பண்ணுகிறது.

இப்படிப்பட்டவாராதனைகளெல்லா முடிந்தபிற்பாடு சுவாமியைப்பார்த்துச்சொல்லத்தக்கதாவது.

சர்வேசுராசுவாமீ தேவரீ ரொன்றாத்துமத்தையுஞ் சரீரத்தையு மொன்றுமில்லாதிருக்கையிலே யுண்டாக்கி, இந்த ஆத்துமமுஞ் சரீரமும் பிழைக்கிறதுக் கெண்ணப்படாத நன்மைகளைத் தந்தருளினதினாலே - உமக்கேதோத்திரமுண்டாகக்கடவது.

பின்னையுந் தேவரீ ரிந்தப்பூலோகத்தி லே யெனக்காகவந் து மனுஷாவதாரம் பண்ணிப் பாடுபட்டுச் சிலுவையிலேய றையுண்டு கடினமானமரணத்தையடை ந்ததினாலே, - சுவாமீயுமக்கேதோத்திர முண்டாகக்கடவது.

மேலும் உம்முடைய திருமரணத்தி னாலேவந்த அளவில்லாதபலனை யெனக் கு ஞாஸ்நானத்தின் வழியாகக் கொடுத் தருளினீரோ - சுவாமீ யுமக்கேதோத்தி ரமுண்டாகக்கடவது.

ஞானஸ்நானம்பெற்றபிற்பாடு நான் அநேகமுறை பாவங்களைச் செய்திருக்க அந்தப்பாவங்களையெல்லாம் பாவசங்கீ ர்த்தன முகாந்தரமாகப் பொறுத்துத் தெய்வீகபோசனமாகிய நற்கருணையுங் கொடுத்துக் காவலாயிருக்கிற சம்மன சானவரையுங் கட்டளையிட்டு, இவைமு தலான வெண்ணிக்கைக்குள்ளடங்காத ச காய உபகாரங்களைப்பண்ணிக்கொண்டுவ ருகிறதினாலேயும், விசேஷமாயிந்த இ ராத்திரிகாலத்திலே யென்னைத்துமத்துக்

குஞ் சரீரத்துக்குமியாதொரு பொல்லா ப்பில்லாமற் காத்திரட்சித்ததிலேயும், என்றாற்கூடினமாத்திர நன்றியறிந்தம னதோடே தேவரீரைவணங்கித் தோத் திரம்பண்ணுகிறேன். - சுவாமீ யுமக்கே தோத்திர முண்டாகக்கடவது.

அதற்குப்பின் தன்னைமுழுதுஞ் சர்வேசுரனுக் கொப்புக்கொடுக்கிறவகையாவது.

சர்வலோகத்துக்கும் ஆண்டவரே! தே வரீரொல்சரீரத்தையும் பஞ்சேந்திரியங் களையு மதுகளிலேயுண்டான தத்துவங்க ளையு மென்னாத்துமத்தையு மதிலேயுள் ள புத்தி நினைவு மனதென்கிற மூன்று புலன்களாகிய உள்ளிந்திரியங்களையுமெ னக்குக் கொடுத்தருளினீரே இவையெ ல்லாந் தேவரீருக்குப்பிரியமாயிருக்கிற தற்குச் சேசுநாதர் பண்ணினபுண்ணிய ங்களோடேயுஞ் சகலவர்ச்சியசிஷ்டர்க ளுடைய தேவ்வசீகிர்தமான காணிக் கைகளோடேயுந் தேவரீருக்குக் காணி க்கையாகவொப்புக்கொடுக்கிறேன். ஆ னபடியினாலே யிப்பொழுது துவக்கிமா

ணபரியந்தம் நான்செய்யுந்தருமகாரிய
ங்களெல்லாத்தையுந் தேவரீருக்குத்தோ
த்திரமாக வொப்புக்கொடுக்கிறேன்.

அதற்குமேற் சர்வேசுரனுடைய
அநுக்கிரகத்தைக் கேட்கிறவகையாவது.

சர்வேசுராசுவாமீ தேவரீருக் களவி
ல்லாதபலமும் மட்டில்லாத ஞானமும்
அளவறுக்கப்படாத கிருபாகடாட்சமு
ம் உண்டாயிருக்கிறபடியினாலேசேசுநா
தருடைய திருமுகத்தைப்பார்த்து, அ
டியேனுக்குந் திருச்சபைக்குஞ்சகலமா
னசனங்களுக்கும் வேண்டியசகாயங்க
ளைப்பண்ணுகிறதுமல்லாமல், விசேஷ
மாய் நானின்றுபாவங்களைச்செய்யாம
ற் புண்ணியவழியிலே சுமுத்திரையாய்ந
டக்கத்தக்கதாகவு மெனக் கநுக்கிரகம்
பண்ணியருளுஞ் சுவாமீ.

இந்தச்செபமுடிந்தவுடனே பத்தியோடே பரம
ண்டலமந்திரமும் பிறியதத்தமந்திரமும் விசுவாச
மந்திரமுஞ் சொல்லுகிறது.

---

பரமண்டலமந்திரம்.

பரமண்டலங்களிலேயிருக்கிற எங்கள்
பிதாவே உம்முடையநாமம் அர்ச்சிக்க

ப்படுவதாக, உம்முடைய இராச்சியம்வ ருக, உம்முடையசித்தம் பரமண்டலத் திலே செய்யப்படுமாப்போலப் பூமியி லேயுஞ் செய்யப்படுவதாக, அன்றன் றுள்ள எங்களப்பம் எங்களுக்கு இன்று தாரும், எங்கள் † கடன்காரருக்கு நா ங்கள்பொறுக்குமாப்போல் எங்கள்கட ன்களை யெங்களுக்குப்பொறும், எங்க ளைச்சோதனையிலே பிரவேசிப்பியாதே யும், தின்மையிலேநின்று எங்களையிரட் சித்துக்கொள்ளும். ஆமென்சேசு.

பிறியதத்தமந்திரம்.

பிறியதத்தத்திலுலே பூரண மரியா யே வாழ்க, கர்த்தர் உம்முடனே, பெ ண்சாதிகளுக்குள்ளே யாசீர்வதிக்கப்ப ட்டவளுநீரோ, உம்முடைய திருவயிற்றி ன்கனியாகிய சேசு ஆசீர்வதிக்கப்பட்ட வருமாமே, அர்ச்சியசிஷ்டமரியாயேசர் வேசுரனுடைய மாதாவே பாவிகளாயி ருக்கிற வெங்களுக்காக இப்பொழுது

---

† இதிலேகடனென்கிறதுகுற்றமென்றர்த்தமாம்.

மெங்கள் மரணநேரத்திலும் வேண்டிக் கொள்ளும். ஆமென்சேசு.

### விசுவாசமந்திரம்.

பரலோகத்தையும் பூலோகத்தையும் படைத்த, சர்வத்துக்கும்வல்ல பிதாவாகியசர்வேசுரனை அதியோக்கிய பத்தியாகவிசுவசிக்கிறேன், அவருடைய ஏகசுதனாகிய நம்முடையநாதர் சேசுகிறீஸ்துவையும் அதியோக்கியபத்தியாகவிசுவசிக்கிறேன், இவர் இஸ்பிரீத்துசாந்துவினாலே கர்ப்பமாயுற்பவித்து அர்ச்சியசிஷ்ட கன்னிமரியாயி இடத்திலே நின்றுபிறந்து போஞ்சுபிலாத்தன்கீழ் பாடுபட்டுச் சிலுவையிலேயறையுண்டுமரித்தடக்கப்பட்டார், பாதாளங்களிலே யிறங்கி மூன்றுநாள் மரித்தவர்களிடத்திலேநின்று உயிர்த்தெழுந்தருளினார், பரமண்டலங்களிலேயேறிச் சர்வத்துக்கும் வல்ல பிதாவாகிய சர்வேசுரனுடையவலதுபாரிசத்திலே உட்கார்ந்திருக்கிறார், அவ்விடத்திலேநின்று சீவியர்களுக்கும் மரித்தவர்களுக்கும் நடுத்தீர்க்கவருவார்.

இஸ்பிரீத்துசாந்துவை அதியோக்கியபத்தியாக விசுவசிக்கிறேன், பொதுவாயிருக்கிற அர்ச்சியசிஷ்ட சபையையும் அர்ச்சியசிஷ்டர்களுடைய சமுதீதப்பிரயோசனத்தையும்விசுவசிக்கிறேன், பாவப்பொறுத்தலை விசுவசிக்கிறேன், மாம்ஸ உத்தாநத்தை விசுவசிக்கிறேன், சந்தமான சீவியத்தைவிசுவசிக்கிறேன்.

ஆமென்சேசு.

---

பத்துக்கற்பனைகளையுந் திருச்சபையின் கட்டளைகளையுஞ்சொல்லித் தன்னிலுள்ள பாவத்துர்க்குணங்களை நினைத்து வெறுக்கிறது.

## பத்துக்கற்பனை.

சர்வேசுரன் நமக்கு அருளிச்செய்த வேதகற்பனைபத்து, அதின் முதலாவது.— உனக்குக்கர்த்தாவான சர்வேசுரன்நாமே, நமக்குமுன்பாக வேறேசர்வேசுரன் உனக்கில்லாதே போவதாக.

இரண்டாவது. — சர்வேசுரனுடைய திருநாமத்தைவியர்த்தமாகச் சுவீகரியாதே யிருப்பாயாக.

மூன்ருவது.— சர்வேசுரனுடைய திருநாட்களை ஆசரிக்கத்தக்கதாக நினைப்பாயாக.

நாலாவது.—பிதாவையு மாதாவையுஞ் சங்கித்திருப்பாயாக.

அஞ்சாவது.— கொலைசெய்யாம லிருப்பாயாக.

ஆருவது.—மோகம் அகமியாகமனம் பண்ணுதிருப்பாயாக.

எழாவது.—களவாணு திருப்பாயாக.

எட்டாவது.— பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக.

ஒன்பதாவது.—பரதாரத்தை அபேட்சியாதிருப்பாயாக.

யத்தாவது.— பாருடைமையை அபேட்சியாதிருப்பாயாக.

இந்தப்பத்துக்கற்பனைகளும் இரண்டு கற்பனையில் அடங்கும், அதின் முதலாவது.— எல்லாத்தையும்பார்க்கச் சர்வேசுரனைச்சினேகிக்கிறது.

இரண்டாவது.—தன்னைத்தான் சினேகிக்குமாப்போலே மற்றவர்களைச்சினேகிக்கிறது. ஆமென்சேசு.

திருச்சபைக்கற்பனைகள்

அஞ்சு.

முதலாவது.— ஞாயிற்றுக் கிழமையி லேயுங் கடன்றிருநாட்களிலேயும் முழு ப்பூசைகாண்கிறது.

உ-வது.—வருஷித்துக்குஒருவிசையாகிலும் நல்லபாவசங்கீர்த்தனம் பண்ணுகிறது.

ங-வது —பாஸ்குத் திருநாட்களிலே பாவசங்கீர்த்தனம்பண்ணித் தேவநற்கருணையுட்கொள்ளுகிறது.

ச-வது —வெள்ளிசனிக்கிழமைகள் தபசுகாலமுதலிய நாட்களிற் சுத்தபோசனமும் ஒருசந்திநாட்களி லொருசந்தியு மநுசரிக்கிறது.

ரு-வது.—விலக்கப்பட்டகாலத்திலுங் குறையானபிராயத்திலும் விக்கினமுள்ள உறவின்முறைமையோடுங் கலியாணஞ்செய்யாதிருக்கிறது. ஆமென்சேசு.

---

பின்னுந்தன்பாவங்களால் துக்கப்பட்டு உத்தம மனஸ்தாபமந்திரஞ் சொல்லுகிறது.

## உத்தம்மனஸ்தாபமந்திரம்.

அநந்ததயை சுரூபியாயிருக்கிற என் சர்வேசுராசுவாமீ தேவரீர் அளவில்லாத சகலநன்மையு நிறைந்தவராயிருக்கிறபடியினாலே எல்லாத்தையும்பார்க்க உம்மைநான் முழுமனதோடே சிநேகிக்கிறேன். இப்படிப்பட்டதேவரீருக்குப் பொருந்தாத பாவங்களைச் செய்தேனென்கிறதினாலே மிகவும்மனநொந்துமெத்தமனஸ்தாபமாயிருக்கிறேன். எனக்கிதுவேமனஸ்தாபம்லாமல் வேறேமனஸ்தாபமில்லை, எனக்கிதுவே துக்கமல்லாமல் வேறேதுக்கமில்லை. இனிமேலொருகாலு மிப்படிப்பட்ட பாவங்களைச்செய்வதில்லையென்று கெட்டியானமனதுடனே பிரதிக்கினைபண்ணுகிறேன். பின்னையும் என்பலம்போதாதென்கிறதினாலே சேசுநாதசுவாமி பாடுபட்டுச்சிந்தின திரு இரத்தப்பலன்களைப் பார்த்து என்பாவங்களையெல்லாம்பொறுத்து எனக்கு உம்முடையவரப்பிரசாதங்களையு மோக்ஷபாக்கியத்தையுந் தந்

தருளுவீரென்று முழுமனதோடே நம்பி யிருக்கிறேன். திருச்சபைவிசுவசித்துப் படிப்பிக்கிற சத்தியங்களை யெல்லாந் தேவரீர்தாமேயறிவித்தபடியினாலே நானும் உறுதியாகவிசுவசிக்கிறேன்.

ஆமென்சேசு.

அதன்மேலுஞ் சுவாமியைநோக்கி நல்லபிரதிக்கினைபண்ணுகிறவகையாவது.

சர்வேசுராசுவாமீ தேவரீரருளிச்செய்த வேதகற்பனையின்படியே யடியேன்சுமுத்திரையாய்நடக்கத் துணிந்திருக்கிறபடியினாலே யென்னிடத்திலிருக்கிற ஆங்காரங்கோபமுதலிய விசேஷதுர்க்குணங்களை நீக்கி யின்று அநேகதருமங்களைச்செய்து வாக்கினாலேயுங் கிரியையினாலேயுந் தாழ்ச்சி பொறுமை கற்புமுதலிய புண்ணியங்களையடையப்பிரயாசப்படுவேன்.

இவையெல்லா மென்னுடைய பலத்தினாலேகூடாதே, பரிசுத்ததேவமாதாவே யெனக்காக வும்முடையதிருக்குமாரனைவேண்டிக்கொள்ளும்.

என்காவலானசம்மனசானவரே யெ ன்னைப்புண்ணியநன்னெறியில் நடப்பித் துக்காத்தருளும்.

நான்பேர்கொண்டிருக்கிற அர்ச்சிய சிஷ்டவரே யும்மைப்போலே நானிவ்வு லகத்திற் சர்வேசுரனைப் பத்தியோடே சேவிக்கவும் உம்மோடே யவரைப் பர லோகத்திலே தெரிசித்துத் துதிக்கவுந் தேவகிருபை யெனக்குக்கிடைக்கும்படி யாகமன்றாடிக்கொள்ளும்.

ஆமென்சேசு.

அதன்பின்பு தன்னாற்கூடுமானால் முப்பத்துமூன் றுமணிச்செபம்பண்ணுகிறது உத்தமம்.

---

## சேசுநாதரைக்குறித்து முப்பத்துமூன் றுமணிச்செபம் பண்ணுகிற வகையாவது.

சர்வத்துக்கும்வல்ல பிதாவாகிய சர் வேசுராசுவாமீ! நீசமனுஷருமாய்நன் றியறியாதபாவிகளுமா யிருக்கிற வடி யோர்கள் மட்டில்லாதமகிமைப்பிரதா பத்தைக்கொண்டிருக்கிற தேவரீருடை

ய சந்நிதியிலேயிருந்து செபம்பண்ண
ப் பாத்திரமாகாதவர்களாயிருந்தாலுந்
தேவரீருடைய அளவறுக்கப்படாத கி
ருபாகடாட்சத்தை நம்பிக்கொண்டுசே
சுநாதருக்குத் தோத்திரமாக முப்பத்
திமூன்றுமணிச்செபம்பண்ண வாசை
யாயிருக்கிறோம். இப்படிப்பட்டசெப
த்தைப் பத்தியோடேசெய்து பராக்கி
ல்லாமல்முடிக்கத் தேவரீருடைய வெர
த்தாசை கட்டளைபண்ணி யருளுஞ் சு
வாமீ.

சகலமானபுண்ணியங்களுக்கும் விசுவாசமென்கிற புண்ணியம் அஸ்திவாரமாயிருக்கிறபடியினாலே மூந்தமுந்தவிசுவாசமந்திரஞ்சொல்லுகிறது.

மெய்யானசர்வேசுரனுமெய்யான மனுஷனுமொன்றுயிருக்கிற சேசுநாதசுவாமியுடைய மூன்றுபிரதானமகிமைகளைக்குறித்து மூன்றுபுண்ணியங்களைக் கேட்கிறது.

மெய்யானசர்வேசுரனுயிருக்கிறவெங்
களாண்டவரே! எங்களிடத்திலேதேவவி
சுவாசமென்கிறபுண்ணியமுண்டாகிப் ப
லன்ளிக்கும்படிக் கநுக்கிரகம் பண்ணி
யருளும். பர.

மெய்யானமனுஷனுமாயிருக்கிற வெ
ங்களாண்டவரே! எங்களிடத்திலே தே

வநம்பிக்கையென்கிறபுண்ணியமுண்டா கி வளரும்படிக் கநுக்கிரகம்பண்ணிய ருளும். பர.

மெய்யான இரட்சகருமா யிருக்கிற வெங்களாண்டவரே! எங்களிடத்திலே தேவ சினேகமென்கிற புண்ணியமுண் டாகியதிகரிக்கும்படிக் கநுக்கிரகம்பண் ணியருளும். பர.

அர்ச்.-திறித்துவத்தோத்திரம்.

பிதாவுக்கும் சுதனுக்கும் இஸ்பிரீத்து சாந்துவுக்குந் தோத்திரமுண்டாகக்கட வது. ஆதியிலேயுமிப்....

பரிசுத்தகன்னியாஸதிரீயாயிருக்கிற அர்ச்.-தேவ மாதாவுக்குக் கபிரியேலென்கிறசம்மனசானவர் மங் களவார்த்தைசொன்னதைக்குறித்துப் பிறியதத்த மந்திரஞ்சொலலுகிறது. பிறி.

மன்றாட்டு.

சர்வத்துக்கும்வல்ல சர்வேசுராசுவா மீ! தேவரீரருளிச்செய்ததிவவியகற்பனை களுக்கு விரோதமான குற்றங்களைச்செ ய்தோமே, அதுகளையெல்லாந்தேவரீரு ம்முடைய மட்டில்லாதகிருபையினாலே பொறுத்துக்கொண்டு இனிமேலடியோ

ர்கள் சுமுத்திரையாய்நடக்கவும், தேவ ரீருடையதோத்திரம் விக்கினமின்றியெ ங்கும்பரம்பவும், உத்தரிக்கிறஸ்தலத்தி லேயிருக்கிற ஆத்துமாக்கள்வதியி லிளை ப்பாற்றியடைந்து, மோக்ஷபாக்கியத் தைச்சுதந்தரித்துக்கொள்ளவுங்கிருபை பண்ணியருளுஞ்சுவாமீ. பத்துப்பர...

திறித்துவத்தோத்திரமுஞ் சொன்னபின்

பரலோகத்துக் கிராக்கினியாயிருக்கி ற அர்ச்.-தேவமாதாவே! பாவிகளாயிரு க்கிறநாங்கள்வேண்டிக்கொண்டவிந்தப் பத்துமணிச்செபத்தையு மும்முடைய தோத்திரங்களோடேகூட ஒன்றாகக்கூட் டியும்முடையதிருக்குமாரன் சேசுநாத ர்திருப்பாதத்திலே பாதகாணிக்கையாக வைக்கவும்மைமன்றாடுகிறோம். பிறி.

மறுபடிமுன்கேட்டமன்றாட்டைச்சொல்லிப் பத் துப்பரமண்டலமந்திரம் வேண்டிக்கொள்ளுகிறது.

திறித்துவத்தோத்திரமுஞ் சொன்னபின்.

பூலோகத்துக்கு ஆண்டவளாயிருக்கி ற அர்ச். - தேவமாதாவே! பாவிகளாயி ருக்கிற நாங்கள்பண்ணின இந்தப்பத்து

மணிச்செபத்தையு மும்முடையதோத்திரங்களோடேகூட ஒன்றாகக்கூட்டி யும்முடைய திருக்குமாரன் சேசுநாதர் திருப்பாதத்திலேபாதகாணிக்கையாகவைக்கவும்மைமன்றாடுகிறோம். பிறி.

மறுபடிமுன்கேட்டமன்றாட்டைச்சொல்லிப் பத்துப்பரமண்டலமந்திரம்வேண்டிக்கொள்ளுகிறது.

திறித்துவத்தோத்திரமுஞ்சொன்னபின்.

விடியற்காலத்தி னட்சத்திரமாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! பாவிகளாயிருக்கிறநாங்கள்பண்ணின இந்தமுப்பத்துமூன் றுமணிச்செபத்தையுமும்முடையதோத்திரங்களோடேகூட ஒன்றாககக்கூட்டி யும்முடையதிருக்குமாரன் சேசுநாதர்திருப்பாதத்திலே பாதகாணிக்கையாகவைக்க வும்மைமன்றாடுகிறோம். பிறி.

பிரார்த்திக்கக்கடவோம்.

அவதரித்ததேவனுமாய்க் கிருபைநிறைந்தகர்த்தருமாய்மதுரமுள்ள இரட்சகருமா யிருக்கிற அன்புக்குரியசேசுவே! தேவரீ ரிவ்வுலோகத்தில் வாசம்பண்ணி

ளுமுப்பத்துமூன்றுவருஷகாலம் மனித ர்களுக்குத் திவ்வியமாதிரிகையாகச்செய் துவந்தசுகிர்தபுண்ணியங்களை அடியோ ர்கள் நுசரிக்கவும், தேவரீரெங்களையிரட் சிக்கத்தக்கதாக வும்முடைய திருவிரத்த மெல்லாஞ்சிந்தியடைந்தகடினமரணத் தின் பலனாலே நாங்கள் மோட்சத்தின் பேரின்பபாக்கியத்தைப்பெற்று, உம் மை யென்றென்றைக்குந் தெரிசித்துச் சிநேகித்து ஸ்துதிக்கவுங் கிருபைசெய் தருளுஞ்சுவாமீ. ஆமென்சேசு.



சேசுநாதருடைய
திருநாமத்தின் பிரார்த்தனை.

சுவாமீகிருபையாயிரும்.
கிறீஸ்துவேகிருபையாயிரும்.
சுவாமீகிருபையாயிரும்.
கிறீஸ்துவே யெங்கள்பிரார்த்தனையை க்கேட்டருளும்.
கிறீஸ்துவே யெங்கள்பிரார்த்தனையை நன்றாகக்கேட்டருளும்.

பரமண்டலங்களிலேயிருக்கிறபிதாவாகியசர்வேசுரா.

உலகத்தைமீட்டிரட்சித்த சுதனாகியசர்வேசுரா.

இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரா.

அர்ச் - தமதிறித்துவமாயிருக்கிற ஏகசர்வேசுரா.

நித்தியபிதாவின் றிருச்சுதனாயிருக்கிறசேசுவே.

பிதாவின்பிரகாசமாயிருக்கிறசேசுவே.

நித்திய ஒளியின் தூய்மையாகிய சேசுவே.

மட்டில்லாத மகிமையுடைத்தான இராசாவாகிய சேசுவே.

நீதியாதித்தனாகிய சேசுவே.

பரிசுத்தகன்னிமரியாயிகுமாரனாகிய சேசுவே.

மகா அன்புக்குரிய சேசுவே.

ஆச்சரியத்துக்குரிய சேசுவே.

மிகுந்தவல்லப கடவுளாயிருக்கிற சேசுவே.

எங்களுக்குத்தயைபண்ணியிரட்சியுஞ்சுவாமீ.

வரப்போகிற பாக்கியங்களுக்குக் காரணராயிருக்கிற சேசுவே.

பரம ஆலோசனைகளின் திவ்விய தூதனான சேசுவே.

மகாசத்தியுடைத்தான சேசுவே.

மகாபொறுமையுள்ள சேசுவே.

மகா சிரவணம்பொருந்திய சேசுவே.

மனத்தாழ்ச்சியையும் மதுரகுணத்தையுங்கொண்டிருக்கிறசேசுவே.

கற்பைச்சிநேகிக்கிறசேசுவே.

எங்கள்ன்பராகியசேசுவே.

சமாதானத்தேவனாகியசேசுவே

சீவியத்துக்குக்காரணராயிருக்கிற சேசுவே.

சகலபுண்ணியங்களுக்குமாதிரிகையாயிருக்கிறசேசுவே.

ஆத்துமங்களை யிரட்சிக்கிறதிலேமகா அபேட்சையுள்ளசேசுவே.

எங்கள்தேவனாயிருக்கிற சேசுவே.

எங்களுக் கடைக்கலமா யிருக்கிற சேசுவே.

எங்களுக்குத் தயைபண்ணி யிரட்சியுஞ் சுவாமி.

தரித்திரருடைய பிதாவாயிருக்கிற சேசுவே.

விசுவாசிகளுடைய பொக்கிஷமாயிருக்கிறசேசுவே.

நல்ல ஆயராயிருக்கிற சேசுவே.

உண்மையான பிரகாசமாயிருக்கிற சேசுவே.

நித்தியஞானமாயிருக்கிற சேசுவே

மட்டில்லாத நன்மைத்தன்மையைக்கொண்டிருக்கிற சேசுவே.

எங்கள்சீவியமும் உண்மையும் வழியுமாயிருக்கிறசேசுவே.

சம்மனசுகளுடைய சந்தோஷமாயிருக்கிறசேசுவே.

பிதாப்பிதாக்களுக் கிராசாவாகிய சேசுவே.

தீர்க்கதரிசிகளுக்கு ஞானங்கொடுக்கிறசேசுவே.

அப்போஸ்தலருக்குக் குருவாகிய சேசுவே.

சுவிசேஷகருக்குப் போதகரான சேசுவே.

எங்களுக்குத் தயைபண்ணி இரட்சியும் சுவாமீ.

வேதசாட்சிகளுக்குத் திடனான சேசுவே.

ஸ்துதியருடைய பிரகாசமான சேசுவே.

விரத்தருடைய துப்புரவானசேசுவே.

சகல அர்ச்சியசிஷ்டர்களுக்கு முடியானசேசுவே.

எங்களுக்குத் தயைபண்ணியருளுஞ்சுவாமீ.

தயாபரராயிருந்து - எங்கள்பாவங்களைப்பொறுத்தருளுஞ்சுவாமீ.

தயாபரராயிருந்து - எங்கள்பிரார்த்தனையைக்கேட்டருளுஞ்சுவாமீ

சகலபாவங்களிலுநின்று.

தேவரீருடைய கோபத்திலே நின்று.

பசாசின்தந்திரங்களிலேநின்று.

மோக ஆசையிலேநின்று.

நித்தியமரணத்திலேநின்று.

தேவரீர்தருகிற தருமவிசாரங்களையசட்டைபண்ணுகிற துர்க்குணத்திலேநின்று.

தேவரீருடைய மனுஷாவதாரத்தின்பரமஇரகசியத்தைப்பார்த்து.

எங்களையிரட்சித்துக்கொள்ளுஞ்சுவாமீ.

தேவரீருடைய பிறப்பைப் பார்த்து.

தேவரீருடைய பாலத்துவத்தைப் பார்த்து.

தேவரீருடைய விருத்தச்சேதனத்தைப்பார்த்து.

தேரீருடைய திவ்வியநடக்கையைப்பார்த்து.

தேவரீருடைய பிரயாசத்தையும் பிரயாணங்களையும்பார்த்து.

தேவரீருடைய ஆருட்டத்தையும் இரத்தவேர்வையையும்பார்த்து.

தேவரீருடையசிலுவையையும் பாடுகளையும்பார்த்து.

தேவரீருடைய உபத்திரவங்களையும் நிர்ப்பந்தங்களையும்பார்த்து.

தேவரீருடைய மரணத்தையும் அடக்கத்தையும்பார்த்து.

தேவரீருடைய மகிமையான உத்தானத்தைப்பார்த்து.

தேவரீருடைய ஆச்சரியமான ஆரோகணத்தைப்பார்த்து.

எங்களை இரட்சித்துக்கொள்ளுஞ் சுவாமீ.

தேவரீருடைய சந்தோஷத்தை யுமிமையையும்பார்த்து. ஐஞ. துசு. : எங்களைப்பிர.

தேற்றுகிறவராகிய இஸ்பிரீத்துசாந்துவின் ஆகமனத்தைப்பார்த்து.

நடுத்தீர்க்கிறநாளிலே.

உலகத்தின்பாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையாகியசேசுவே. — எங்கள் பாவங்களைப் போக்கியருளுஞ்சுவாமீ.

உலகத்தின்பாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையாகியசேசுவே. — எங்கள் பிரார்த்தனையைக்கேட்டருளுஞ் சுவாமீ.

உலகத்தின்பாவங்களைப்போக்குகிறசர்வேசுரனுடைய செம்மறிப் புருவையாகிய சேசுவே. — எங்களுக்குத் தயைபண்ணியிரட்சியுஞ் சுவாமீ.

சேசுவே எங்கள் பிரார்த்தனையைக்கேட்டருளும். — சேசுவேஎங்கள்பிரார்த்தனையை நன்றாகக்கேட்டருளும்.

முதலோதி. { இப்பொழுது மெய்பொழுதுமென்றென்றைக்கும்,

துணைவர். { ஆண்டவருடைய திருநாமம்வா ழ்த்தப்படக்கடவது.

பிரார்த்திக்கக் கடவோம்.

எங்கள்திவ்விய இரட்சகருமாயாண்டவருமாயிருக்கிற சேசுகிறீஸ்துவே எங்களாத்துமத்தையுஞ் சரீரத்தையும் புத்தி மனது நினைவையும் எங்களுக்குண்டான சகலத்தையு முமக்குக்காணிக்கையாகவைக்கிறோம். நாங்களெங்கள் சிந்தனை வாக்குக் கிரியைகளினாலே முழுதுமுமைச்சினேகிக்கவும் ஸ்துதிக்கவும் உமது திவ்வியசினேகத்தின் அக்கினியினாலெங்களிருதயம்பற்றியெரியவுந் தயைசெய்தருளுஞ் சுவாமீ. எங்களுக்கிதுவே போதும். பிதாவோடேயும் இஸ்பிரீத்து சாந்துவோடேயுஞ் சதாகாலஞ் சீவியருமா யிராச்சியபரிபாலகருமா யிருக்கிற ஆண்டவரே. ஆமென் சேசு



## கிருபைதயாபத்து மந்திரம்.

கிருபைதயாபத்துக்கு மாதாவாயிருக்கிற வெங்களிராக்கினியேவாழ்க, எங்கள் சீவமே யெங்கள்தஞ்சமே யெங்கள் மதுரமேவாழ்க. பரதேசிகளா யிருக்கிற நாங்கள் ஏவையின்மக்கள், உம்மைப்பார்த்துக் கூப்பிடுகிறோம். இந்தக்கண்ணினீர்க் கணவாயிலேநின்று பிரலாபித்தழுது, உம்மையேநோக்கிப்பெருமூச்சுவிடுகிறோம், ஆதலாலெங்களுக்காக வேண்டி மன்றாடுகிறதாயே, உம்முடைய தயாபமுள்ள திருக்கண்களை யெங்கள்பேரிலே திருப்பியருளும், இதன்றியே நாங்களிந்தப்பரதேசங் கடந்தபிற்பாடு உம்முடைய திருவயிற்றின் கனியாகிய சேசுநாதருடைய பிரத்தியட்சமான தெரிசனத்தை யெங்களுக்குத்தந்தருளும், கிருபாகரியே, தயாபரியே, பேரின்ப இரசமுள்ள கன்னிமரியாயே.

மு. { சேசுகிறீஸ்து நாதருடைய திருவாக்குத்தத்தங்களுக்கு நாங்கள்பாத்திரமாயிருக்கத்தக்கதாக.

௯ { சர்வேசுரனுடைய பரிசுத்ததேவமா தாவே யெங்களுக்காக வேண்டிக் கொள்ளும்.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வசத்தியுடையவருமாய் நித்தியரு மாயிருக்கிற சர்வேசுரா, முத்திபேறு பெற்ற கன்னித்தாயான மரியாயியுடைய ஆத்துமமுஞ்சரீரமு மிஸ்பிரீத்துசா ந்துவி ன நுக்கிரகத்தினாலே தேவரீரு டைய திருக்குமாரனுக் கியோக்கியமா ன பீடமாயிருக்க எற்கனவேநியமித்தரு ளினீரே, அந்தத்திவ்வியதாயை நினைத் து மகிழ்கின்றநாங்க ளவளுடைய விரக் கமுள்ள மன்றாட்டினாலே யிவ்வுலகின் சகலபொல்லாப்புக்களிலேயும், நித்திய மரணத்திலேயுநின் றிரட்சிக்கப்படும் படிக்குக் கிருபைகூர்ந்தருளும், இந்த மன்றாட்டுக்களையெல்லா மெங்களாண்ட வரான சேசுநாதருடைய திருமுகத்தை ப்பார்த்தெங்களுக்குத்தந்தருளும்.

ஆமென் சேசு.

## தேவசம்பந்தமான மூன்று புண்ணிய முயற்சி.

### விசுவாசமுயற்சி.

என் சர்வேசுராசுவாமீ, திருச்சபைவிசுவசித்துப் படிப்பிக்கிற சத்தியங்களையெல்லாந் தேவரீர்தாமே யறிவித்தபடியினாலே நானும் உறுதியாகவிசுவசிக்கிறேன். ஆமென் சேசு.

### நம்பிக்கைமுயற்சி.

என் சர்வேசுராசுவாமீ, தேவரீர்வார்த்தைப்பாடு கொடுத்தபடியினாலே சேசுநாதசுவாமி பாடுபட்டுச்சிந்தின திருஇரத்தப்பலன்களைப்பார்த்து என்பாவங்களையெல்லாம்பொறுத்து எனக்கும்முடைய வரப்பிரசாதங்களையும் மோக்ஷபாக்கியத்தையுந் தந்தருளுவீரென்று உறுதியாக நம்பியிருக்கிறேன.

ஆமென் சேசு.

### தேவசிநேகமுயற்சி.

என்சர்வேசுராசுவாமீ, தேவரீர் மட்டில்லாத சிநேகத்துக்குப் பாத்திரமாயிருக்கிறபடியினாலே, எல்லாத்தையும் பா

ரீக்க உம்மைநான் முழுமனதோடே சிநேகிக்கிறேன். பின்னையும் உம்மைப்பற்றி என்னைநான் சிநேகிக்கிறாப்போலே மற்ற எல்லாரையும் சிநேகிக்கிறேன். ஆமென்சேசு.

கடைசியிலே அவரவர் பத்திக்குத்தக்க வேண்டுதல் சொல்லிமுடிக்கிறது.

அதிகாலைச்செபமுற்றிற்று.

---

## அசனத்துக்குமுன்

### கேட்கும் ஆசீர்வாதம்.

சர்வேசுராசுவாமீ † என்னையும் உமதருளினாலே நான்பொசிக்க விருக்கின்ற இந்தப்பொசிப்புக்களையும் என்னாண்டவராகிய சேசுகிறீஸ்துநாதருடைய திருமுகத்தைப்பார்த்து ஆசீர்வதித்தருளும். ஆமென் சேசு.

---

## அசனத்துக்குப்பின்

### நன்றியறிந்ததோத்திரம்.

சதாகாலத்துக்கும் நித்தியருமா யிராச்சியபரிபாலனம பண்ணுகின்றவருமா

யிருக்கிற சர்வவல்லபமுள்ள சர்வேசு ரா, தேவரீரெனக்குத் தந்தருளின இந் த ஆகாரங்களுக்காகவுந் தேவரீரெனக் குச் செய்துவருகிற சகலவுபகாரங்களு க்காகவுந் தேவரீருக்குநன்றியறிந்ததோ த்திரம்பண்ணுகிறேன். ஆமென்சேசு.

சுவாமீகிருபையாயிரும்.

கிறீஸ்துவே கிருபையாயிரும்.

சுவாமீகிருபையாயிரும். பர.

இப்பொழுது மெப்பொழுதும் ஆண் டவருடைய திருநாமம் வாழ்த்தப்படக் கடவது.

பிரார்த்திக்கக்கடவோம்.

எங்களுக்குபகாரம்பண்ணுகிறவர்களு க்கெல்லா மநுக்கிரகஞ்செய்துநித்தியசீ வியத்தையுங் கட்டளையிட்டருளுஞ் சுவா மீ. ஆமென் சேசு.



## பிரயாணத்துக்கு

அல்லது தன் னலுவலுக்குவீட்டிலே
யிருந்து புறப்படும்பொழுது.

ஆண்டவரே யடியேன்வீட்டிலேநின்று புறப்படுகிற இந்தப் பிரயாணத்தில் (அலுவலில்) சகல ஆபத்துக்களிலேயு நின்றென்னைத் தற்காத்து, உமதடைக்கலத்துக்குள் வாசமாயிருக்கப்பண்ணி நினைத்த நற்காரியத்தைச் சுபலமாக்கி, மோட்சவழியைத்தவறாமல் நடக்கத்தக்கதாகக் கிருபைசெய்தருளும். ஆமென் சேசு.

## யாதொரு வேலை

ஆரம்பிக்கிறபொழுது.

சர்வேசுராசுவாமீ தேவரீருடைய திருநாமத்துக்குப் புகழ்ச்சியுண்டாகும்படிக்குத் துவக்கின இந்தவேலையை முடிவுமட்டுஞ் சேசுநாதருடைய புண்ணியங்களோடே யுமக்கொப்புக்கொடுக்கிறேன். ஆமென் சேசு.

யாதொருவேலை செய்யும்பொழுது அடிக்கடி சுவாமியை நினைக்கக்கடவது.

வாக்கினாலேயுங் கிரியையினாலேயு நீங்கள்செய்கிறதெல்லாஞ் சேசுகிறீஸ்து நாதருடைய திருநாமத்தினாலே செய்து, அவர்மூலமாகப் பிதாவாகிய சர்வேசுரனுக்கு நன்றியறிந்த தோத்திரம்பண்ணுங்கள். *

வேலைசெய்கிறபோது.

ஆண்டவரே நாங்கள் செய்கிறகிரியைகளுக்குத் தேவரீர் ஆசீர்வாதந்தந்தருளியும்முடைய அநுக்கிரகத்தினாலெங்களை நடப்பிக்கவேணுமென் றும்மைமன்றாடுகிறோம் - அப்படியேயெங்கள் சகல காரியங்களும் உம்மாலே துவக்கவு முடிக்கவுங்கடவது. ஆமென் சேசு.

கோயிலுக்குள்ளே
போகிறபோது.

ஆண்டவரே நானும்முடைய செபத்தியானத்தின் ஆலயத்திலேபிரவேசிக்கிற இந்நேரத்திற் சகல லோகநினைவுகளைப் புறத்தியிலேவைக்கவு மும்மை அந

* அர்ச்.- சின்னப்பர், கொலோசேயர்.௩-மன.

ந்தபத்தியோடே தியானித்து நேசிக்க வுந் தேவரீருடையசந்நிதியில் தக்கமே மைரியாதையோடிருந்து கவனமாய்ச்செபிக்கவும் அநுக்கிரகஞ் செய்தருளுஞ்சுவாமீ. ஆமென் சேசு.

தீர்த்தந்தொட்டுச் சிலுவைவரைகிற வேளை.

சர்வேசுராசுவாமீ யிந்தத்தீர்த்தத்தின் முயற்சியால் உம்முடைய திருக்குமாரனாகிய சேசுகிறீஸ்துவி னிரத்தத்தைக் கொண்டு என்னாத்துமத்தைக் கழுவியெ ன்பாவங்களைப் பொறுத்துப் பசாசினுடையதந்திரங்களையெல்லாம்விலக்கியும் முடையஆசீர்வாதம் அடியேனுக்குத்தந்தருளும். ஆமென் சேசு.



# இராசசெபம்.

## இஸ்பிரீத்து சாந்துவின் மந்திரம்.

இஸ்பிரீத்துசாந்துவே தேவரீரெழுந்தருளிவாரும். பரலோகத்திலேநின்றும் மூடைய திவ்வியபிரகாசத்தின் கதிர்களை வரவிடும். தரித்திரருடைய பிதாவே, கொடைகளைக்கொடுக்கிறவரே, இருதயங்களின்பிரகாசமே எழுந்தருளிவாரும். உத்தமஆறுதலானவரே, ஆத்துமங்களுக்குமதுரமானவிருந்தாடியே, † பேரின்பஇரசமுள்ள இளைப்பாற்றியே,பிரயாசத்திற்சுகமே, வெயிலிற்குளிர்ச்சியே, அழுகையிற்றேற்றரவே எழுந்தருளிவாரும். வெகு ஆநந்தத்தோடேகூடியிருக்கிறபிரகாசமே, உம்முடையவிசுவாசிகளுடையஇருதயத்தின் உற்பனங்களை நிரப்பும். உம்முடையதெய்வீகமின்றியே மனிதரிடத்திற் குற்றமல்லாத தொன்றுமில்லை, அசுத்தமாயிருக்கிறதைச் சுத்தம்ப

† (ச)

ண்ணும், உலர்ந்ததைதனையும், நோவா யிருக்கிறதைக் குணமாக்கும், வணங்கா த்தை வணங்கப்பண்ணும், குளிரோடி ருக்கிறதைக் குளிர்போக்கும், தவறின தைச் செவ்வேநடத்தும், உம்மைநம்பி ன வும்முடையவிசுவாசிகளுக்கு உம்மு டைய திருக்கொடைகளேழையுங் கொ டுத்தருளும். புண்ணியத்தின் பேறுகளை யும், நல்மரணத்தையும், நித்தியமொ ட்சாநந்தத்தையு மெங்களுக்குத் தந்தரு ளும். ஆமென் சேசு.

நன்றியறிந்ததோத்திரம.

சர்வேசுராசுவாமீ யென்னையொன்று மில்லாதிருக்கையிலேமனுஷனாகவுண்டா க்கினீரே. — சுவாமீ யுமக்கேதோத்திர முண்டாகக்கடவது.

நான்செய்தபாவங்களினாலே நரகத்து க்குப்போகக்கடனுண்டாயிற்றே யந்தக் கடனை யென்னாலுத்தரிக்கக் கூடாதென் று தேவரீர்மனுஷனாகப்பிறந்து பாடுப ட்டுத்தரித்தீரே. சுவாமீயுமக்கே.

அந்தப் புண்ணியபலன்களையெல்லா

ம் ஞானஸ்நானமுகாந்தரமாக வெனக்குத்தந்தருளினீரோ. சுவாமீயுமக்கே.

நான் ஞானஸ்நானம் பெற்றபிற்பாடு அநேகமுறை பாவங்களைச்செய்தேனே யந்தப்பாவங்களையெல்லாம் பாவசங்கீர்த்தன முகாந்தரமாகப் பொறுத்து, என்னை நரகத்திலேதள்ளாமல் மோட்சத்துக்குப் போகிற வழியிலே நிறுத்திக் கொண்டிருக்கிறீரோ சுவாமீயுமக்கே.

நீரின்றெனக்கு எண்ணிறந்த வுபகாரங்களைச் செய்ததல்லாமலும் பசாசு எனக்குநினைத்திருந்த வநேக பொல்லாப்புக்களையும் விலக்கினீரோ. சுவாமீயுமக்

நானின்று செய்தபாவங்களெல்லாம் என்நினைவிலேவரவும் அதுகளுக்காக நான் மெய்யான மனஸ்தாபப்படவும் உம்முடைய வொத்தாசை கட்டளைபண்ணியருளுஞ்சுவாமீ.

போனஆத்தும சோதனைதொடங்கி யிந்நேரம் ட்டுஞ் சிந்தனையினாலேயும் வாக்கினாலேயுங் கிரியையினாலேயுஞ் செய்தபாவங்களையெல்லாம் பத்துக்கற்பனைப் பிரகாரமாக நினைத்துக்கொள்ளத்தக்கதாகப்பத்துக்கற்பனையுந் திருச்சபையின் கட்டளையுஞ் சொல்லி யாத்துமசோதனைசெய்யவும்.

பாவசங்கீர்த்தனயந்திரம்.

சர்வத்துக்கும்வல்லசர்வேசுரனுடனே யும் எப்போதுங் கன்னியாயிருக்கிறமு த்திப்பேறுபெற்ற மரியாயியுடனேயும் பிரதான சம்மனசாயிருக்கிறமுத்தனான மிக்கயேலுடனேயும்ஸ்நாபகனாயிருக்கி றமுத்தனான அருளப்பருடனேயும் அப் போஸ்தலர்களாயிருக்கிற அர்ச்சியசிஷ்ட இராயப்பருடனேயுஞ் சின்னப்பரு டனேயுஞ் சகல அர்ச்சியசிஷ்டர்களுட னேயும் (எனக்குக்குருவாயிருக்கிற உம் முடனேயும்) பாவசங்கீர்த்தனம்பண்ணி க்கொள்ளுகிறேன். அதேதென்றால் எ ன்சிந்தனையினாலேயும் வாக்கினாலேயும் கிரியையினாலேயும் மகா பாவங்களைச் செய்தேனே, என்பாவமே என்பாவ மே என்பெரும்பாவமே ஆகையால் எ ப்போதுங் கன்னியாயிருக்கிற முத்திப் பேறுபெற்ற மரியாயியையும் பிரதான சம்மனசாயிருக்கிற முத்தனான மிக்க யேலையும் ஸ்நாபகனாயிருக்கிற முத்தனா ன அருளப்பரையும்அப்போஸ்தலர்களா

யிருக்கிற அர்ச்சியசிஷ்ட இராயப்பனை
யுஞ் சின்னப்பனையுஞ் சகல அர்ச்சியசி
ஷ்டர்களையும் (எனக்குக் குருவாயிருக்கிற
உம்மையும்) நம்முடைய கர்த்தராகிய
சர்வேசுரனிடத்திலே எனக்காக வேண்
டிக்கொள்ள வேணுமென்று மன்றாடுகி
றேன். ஆமென்சேசு.

மேலான உத்தம்மனஸ்தாப
மந்திரம்.

பராபரவஸ்துவாயிருக்கிற சர்வேசுரா
சுவாமீ, தேவரீராண்டவர், நான் நீசனுயி
ருக்கிற அடிமை. இவ்வடிமையளவில்லா
தசகலநன்மைச் சுரூபியாயிருக்கிற தே
வரீராச்சட்டைபண்ணுமல் தேவரீருக்கு
ப்பொருந்தாத பாவங்களைச் செய்தே
னேசுவாமீ. தேவரீருக்கேற்காத் துரோக
ங்களை நினைத்தேனேசுவாமீ. நான்செய்
தபாவங்களினுலே சேசுநாதரோ தேவரீ
ராச் சிலுவையிலேயறைந்தேனே சுவா
மீ. தேவரீருடைய திருக்காயங்களை நிஷ்
டூரமாக வம்நகமுறை நோகப்பண்ணி
னேனேசுவாமீ. தேவரீர் படாதபாடு

ட்டுச் சிலுவையில்றையுண்டு கடினமா
ணமரணத்தை யடைகிறதற்குப் பாவி
நான் காரணமாயிருந்தேனேசுவாமீ. நா
ன்செய்தபாவங்களினாலே யென்னாத்து
மத்தைக்கெடுத்துப் பசாசுக்கடிமையா
ய்ப்போய் நரகபாதாளத்திலேயிருந்து
என்றென்றைக்கு மெப்போது மெப்
போதும் ஊழியுள்ளகால மாருதநெரு
ப்பி ல்வியாதகட்டையாய்க் கிடந்துவே
கிறதற் கென்பேரிலே யளவில்லாதகட
னைச் சுமத்திக்கொண்டேனே சுவாமீ!
இதினாலே நரகத்துக்குப்போவே னெ
ன்கிறபயத்தைப்பார்க்கவும் மோட்சமி
ழந்துபோவேனென்கிற் சேதத்தைப்
பார்க்கவும், அளவில்லாத சகலநன்மை
ச்சுரூபியாயிருக்கிறதேவரீரைச் சட்டை
பண்ணாமல் தேவரீருக்குப் பொருந்தா
தபாவங்களைச் செய்தேனென்கிறதினா
லேயும், தேவரீருக்கேற்காத துரோக
ங்களை நினைத்தேனென்கிறதினாலேயும்,
மிகவும்மனநொந்து, உத்தம்மனஸ்தாப
மாயிருக்கிறேன், எனக்கிதுவேமனஸ்தா

பமல்லாமல் வேறேமனஸ்தாபமில்லை, இதுவே துக்கமல்லாமல் வேறேதுக்கமில்லை, இந்தப்பாவங்களையெல்லா மறிந்துசெய்த னென்பாவங்களைப்பொறுத்தருளுஞ்சுவாமீ, அறிந்தேசெய்தேனென்பாவங்களைப்பொறுத்தருளுஞ்சுவாமீ, அறிந்துந் துரோகமாய்ச் செய்தே னென்பாவங்களைப் பொறுத்தருளுஞ்சுவாமீ.

இனிமேலொருகாலு மிப்படிப்பட்டபாவங்களைச் செய்கிறதில்லையென்று கெட்டியானமனதோடே பிரதிக்கினை பண்ணுகிறேன். பின்னையுமென்பலம் போதா தென்கிறதினாலே சேசுநாதசுவாமிபாடுபட்டுச்சிந்தின திரு இரத்தத்தின் பலன்களைப்பார்த்து, என்பாவங்களைப்பொறுத் தெனக்குமோட்சபாக்கியந் தந்தருளுவீரென்று முழுமனதோடே நம்பியிருக்கிறேன்.

† இதுகளெல்லா மென் பலத்தினாலேகூடாதே. அர்ச். - தேவமாதாவே எனக்காகவும்முடைய திருக்குமாரனைவேண்டிக்கொள்ளும்.

‡ ஆண்டவராயிருக்கிற சேசுகிறீஸ்து வே யுலகத்தினுடையபாவங்களைப்போக்குகிறவரோ யெங்கள்பேரிலேதயையாயிரும்.

† முதலோதி, ‡ துணைவர், இப்படி மூன்றுதரஞ்சொல்லுகிறது.

அதற்குப்பின் பரமண்டல. பிறியதத்த. விசுவாச மந்திரஞ்சொல்லவும்.



உலகெலாம்படைத்தேயாளும் - ஒருமுதற் கடவுளிவ்வா
றளவிலாத்துயருற்றெம்மேல் - அன்பினூற் கருணைகூர்ந்து
சிலுவைமுண்முடிநீள்சுத்திகசையிருப்பாணியீட்டி
நலமுடனேற்றபின்னர் நமக்குமேற்காத்தேதோ.

# சேசுநாதசுவாமி பட்டபாடுகளின்பேரில் தியானம்.

வெள்ளிக்கிழமைகளிலுந் தபசுகாலத்திலும் விசேஷமா யிதைவாசிக்கவும்.

சர்வேசுராசுவாமீ! நிகரில்லாத தயையினாலே உலகத்தைமீட்டிரட்சிக்கிறதற்காகத் தேவரீர் மனுஷனாகப்பிறக்கவும், விருத்தச்சேதனப்படவும் †, யூதர்களினாலேபிறக்கணிக்கப்படவும், குருத்துரோகியான யூதாஸென்பவ னும்மைக்கன்னத்திலேமுத்தஞ்செய்து காட்டிக்கொடுக்கவும், தேவரீர் கயிறுகளினாலேகட்டுண்டு குற்றமில்லாத * செம்மறிப்புருவைபோலேபலிக்கு எவப்படவும், ஆனசன் கைப்பாசன் பிலாத்தன் எரோதனென்கிற இவர்கள்ண்டைக்கு அவமானமாகக்கூட்டிக்கொண்டுபோய் விடப்படவும், பொய்ச்சாட்சிகளினாலே குற்றஞ்சாட்டப்படவும், திருக்கன்னத்திற்கைகளினாலேயுந் திருமேனியிற் கசைகளினாலேயு

† (ரு) * (கா)

ம் அடிக்கப்படவும், திருமுகத்திலே துப்பப்படவும், தூஷணங்களினாலே நிந்திக்கப்படவும் முண்முடி தரிக்கப்படவும், மூங்கிற்றடியா லடிக்கப்படவும், திருமுகம்வஸ்திரத்தினாலே மூடப்படவும், திருத்தோளின்மேரிற் பாரமான சிலுவைமரத்தைச்சுமத்திக்கபாலமலைமட்டுக்குங் கூட்டிக்கொண்டு போகப்படவும், திருச்சட்டையுரியப்படவும், இருப்பாணிகளினாலே அறையுண்டு இரண்டுகள்ளருக்குநடுவிற் சிலுவையோடுயர்த்தப்படவும், தாகத்துக்குப்பிச்சோடேகலந்த தேவதாழ்ச்சிப்பழத்தின்புளித்த இரசத்தைக் குடிக்கக்கொடுக்கப்படவும், திருவிலாவானது ஈட்டியாற்குத்தித் திறக்கப்படவும், திருவுளமானீரோசுவாமீ! பாவியாயிருக்கிற அடியேனிவையெல்லாம் பத்தியோடேதியானிக்க வநுக்கிரகஞ்செய்தருளும். தேவரீருடைய அர்ச்சியசிஷ்ட இந்த நிர்ப்பந்தங்களையுஞ் சிலுவையையுந் திருமரணத்தையம்பார்த்து நரகவேதனையைவிட்டகற்றி யடி

யனையிரட்சிக்கவும், உம்முடையவல துபாரிசத்திலிருந்தபச்சாத்தாபக்கள்ளனுக்குத்தந்தருளின மோட்சபாக்கியத்தி லடியேனையுங்கூட்டிக்கொண்டுபோகவுங் கிருபைபண்ணியருளுஞ் சுவாமீ.

பிதாவோடேயும் இஸ்பிரீத்துசாந்துவோடேயுஞ் சதாகாலஞ்சீவியருமா யிராச்சியபரிபாலனம் பண்ணுகிறவருமாயிருக்கிற ஆண்டவரே ஆமென்சேசு.

சேசுகிறீஸ்துநாதரே சுவாமீ! தேவரீர் சிலுவையிலே யறையுண்டிருக்கிறபோது அளவில்லாத கஸ்திநோவுகளையநுபவிதீரே விசேஷமா யும்முடைய திரு ஆத்துமந் திருச்சரீரத்தைவிட்டுப்பிரியும்போதுமிகுந்த துக்கத்தையடைந்தீரே அந்தத்துக்கத்தைப்பார்த்துப் பாவியாயிருக்கிற அடியேன் சாகிறதரீவாயிலே உலகம் பசாசு சரீரமென்கிறசத்துருக்களாலே என்னாத்துமத்துக்கியாதொரு மோசம்வரவொட்டாமற் கிருபைபண்ணி யிரட்சியுஞ்சுவாமீ.

ஆமென்சேசு.

† பிதாவாகியசர்வேசுராதேவரீருக்கு கந்தகுமாரனுமா யெங்களுக்குக் கர்த்தருமாயிருக்கிற சேசுகிறீஸ்துநாத ரெங்களுக்காக இத்தனைபாடுகளைப்பட்டாரே அவருடைய திருமுகத்தைப்பார்த்தெங்கள்பாவங்களைப் பொறுத்துக்கொள்ளுஞ்சுவாமீ.

† இப்படி மூன்றுவிசைசொல்லுகிறது.

---

## ஐம்பத்துமூன்றுமணிச் செபந் துவக்கிறவகையாவது.

அளவில்லாத சகலநன்மைச் சுரூபியாயிருக்கிற சர்வேசுராசுவாமீ! நீசமனுஷருமாய் நன்றியறியாத பாவிகளுமாயிருக்கிற அடியோர்கள் மட்டில்லாதமகிமைப் பிரதாபத்தைக் கொண்டிருக்கிறதேவரீருடைய சந்நிதியிலேயிருந்து, செபம்பண்ணப் பாத்திர மாகாதவர்களாயிருந்தாலுந் தேவரீருடைய அளவில்லாததயையை நம்பிக்கொண்டு, தேவரீருக்குஸ்துதிவணக்கமாகவும், அர்ச்.-தே

வமாதாவுக்குத் தோத்திரமாகவும், ஐம்
பத்துமூன்றுமணிச் செபம்பண்ண ஆ
சையாயிருக்கிறோம். இந்தச்செபத்தை
ப் பத்தியோடேசெய்து பராக்கில்லாம
ல்முடிக்கத் தேவரீருடைய வொத்தாசை
கட்டளைபண்ணியருளுஞ் சுவாமீ.

சகலமானபுண்ணியங்களுக்கும் விசுவாசமென்கி
றபுண்ணியம் அஸ்திவாரமாயிருக்கிறபடியினாலே மு
ந்த முந்த விசுவாசமந்திரஞ் சொல்லுகிறது.

பின்பு மெய்யானசர்வேசுரனு மெய்யானமனுஷ
னுமொன்றாயிருக்கிற சேசுநாதசுவாமிபடிப்பித்தப
ரமண்டலமந்திரஞ் சொல்லுகிறது.

பரிசுத்த கன்னியாஸ்திரீயாயிருக்கிற தேவமாதா
வினுடைய பிரதானமகிமைகளைக்குறித்து, மூன்றுபி
ரதானபுண்ணியங்களைக்கேட்கிறது.

பிதாவாகிய சர்வேசுரனுக்குக் குமார
த்தியாயிருக்கிற பரிசுத்த தேவமாதா
வே! எங்களிடத்திலே தேவ்விசுவாசமெ
ன்கிறபுண்ணியமுண்டாகிப் பலனளிக்கு
ம்படிக் கும்முடைய திருக்குமாரனை
வேண்டிக்கொள்ளும். பிறி.

சுதனாகிய சர்வேசுரனுக்குத் தாயாரா
யிருக்கிற பரிசுத்ததேவமாதாவே! எங்க
ளிடத்திலே தேவநம்பிக்கையென்கிறபு

ண்ணியமுண்டாகிவளரும்படிக் கும்மு
டைய திருக்குமாரனை வேண்டிக்கொள்
ளும். பிறி.

இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனு
க்கு மிகவும் பிரியமுள்ளவளாயிருக்கிறப
ரிசுத்ததேவமாதாவே! எங்களிடத்திலே
தேவபத்தியென்கிற புண்ணியமுண்டா
கி யதிகரிக்கும்படிக் கும்முடையதிருக்
குமாரனை வேண்டிக்கொள்ளும். பிறி.

திறித்துவமந்திரஞ்சொல்லவும்.

\+ சந்தோஷித்தேவரகசியங்கள்.

பர... முதல் - தேவரகசியம்.

அர்ச்சியசிஷ்டகன்னிகையே! உம்மு
டையகிட்டச்சம்மனசுவந்து மங்களவார்
த்தைசொன்னதினாலே அளவறுக்கப்ப
டாதசந்தோஷத்தையடைந்து, அவர்வ
ந்தகாரியத்தையறிந்து, மகா தாழ்ச்சி
யோடே யங்கீகாரம்பண்ணிச் சர்வேசு

---

\+ சகல திங்கள் வியாழத்திலும, ஆகமனகால
த்தின் துவக்கமுதல், தபசுநாள் பரியந்தம்வருகிற
ஞாயிறுவாரங்களிலு மிதுகளைச்சொல்லுகிறது.

ரனை யும்முடைய திருக்ஈர்ப்பத்திலே பிள்ளையாகத்தரித்தீரோ! சர்வேசுரனுக்கு நீர் மாதாவானீரென்கிற சந்தோஷித்தைப்பார்த்தெங்களுக்காகமன்றுடிப்பத்தியினாலே யவனைநாங்க ளெங்களிருதயத்தி லெப்பொழுதும் வைத்திருக்கத்தக்கதாகவும்முடையதிருக்குமாரனாகிய அவனைவேண்டிக்கொள்ளும். பத்துப்பிமி.திமி

சம்மனசுகளுக்கெல்லாம் பிரதானசும்மனசாயிருக்கிற அர்ச். - மிக்கயேலென்கிற சம்மனசானவரே! நாங்களெத்தனை பாவிகளாயிருந்தாலும் வேண்டிக்கொண்ட விந்தப் பத்துமணிச்செபத்தையும அர்ச். - தேவமாதாவின் றிருப்பாதத்திலே யும்முடைய தோத்திரங்களோடேகூட ஒன்றாகக்கூட்டிப் பாதகாணிக்கையாகவைக்க வுமமைப்பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

பர... உ-ம். தேவரகசியம்.

கன்னியாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! உமதுசினேகத்தால் உமக்குப்பந்துவாயிருக்கிற எலிசபேத்தம்மாளை மி

ளவப்போனபோது சர்வேசுர னவள்வீ ட்டிலே பண்ணினதயையைக்கண்டு அத் தியந்த சந்தோஷமானீரோ! அந்தச் சந் தோஷத்தைப்பார்த்து, லவ்கீகசந்தோ ஷித்தை நாங்கள்சட்டைபண்ணமல் ஞா னசந்தோஷத்தின் இன்பமான இரசத்தை வருந்தித்தேடியடையத்தக்கதாக வும்மு டைய திருக்குமாரனை வேண்டிக்கொள் ளும். பத்துப்பிறி. திறி.

அர்ச். - கபிரியேலென்கிற சம்மனசா னவரோ! நாங்களெத்தனை பாவிகளாயிரு ந்தாலும் வேண்டிக்கொண்டவிந்தப்பத் துமணிச்செபத்தையும் அர்ச். -தேவமா தாவின் றிருப்பாதத்திலே யும்முடைய தோத்திரங்களோடேகூட ஒன்ருகக் கூ ட்டிப் பாதகாணிக்கையாகவைக்க வும் மைப்பிரார்த்தித்துக்கொள்ளுகிறேம்.

பர... ஈ-ம். தேவரகசியம்.

சம்மனசுகளுடையஇராக்கினியே!உம துகன்னிசுத்தத்துக்குப்பழுதில்லாம லு லகரட்சகரான சேசுநாதரைப் பெற்ற திலுலே நீரநுபவித்த சந்தோஷ மெங்

கள் வாக்கினுற் சொல்விமுடியாதே யந்தச்சந்தோஷித்தைப் பார்த்துப் பாவிகளாயிருக்கிற வெங்களிருதயத்திலே யவர் ஞானவிதமாகவந்து பிறக்கத் தக்கதாகவும்முடைய திருக்குமாரனுகிய அவரை வேண்டிக்கொள்ளும். பத்துப்பிறி. திறீ.

அர்ச்.-இரபயேலென்கிற சம்மனசானவரே! நாங்களெத்தனே பாவிகளாயிருந்தாலும் வேண்டிக்கொண்ட விந்தப்பத்துமணிச்செபத்தையும்- அர்ச். - தேவமாதாவின் றிருப்பாதத்திலே யும்முடைய தோத்திரங்களோடேகூட ஒன்றுகக்கூட்டிப் பாதகாணிக்கையாகவைக்க வும்மைப்பிரார்த்தித்துக்கொள்ளுகிறேம்.

பர... ௨-ம். தேவரகசியம்.

பரிசுத்த கன்னியாஸ்திரீயா யிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! கோயிலுக்குக்கர்த்தராயிருக்கிற வும்முடைய திவ்விய பிள்ளேயைப் பெற்ற நாற்பதாநாள் கோயிலிற்கொண்டுபோய் அநாதிபிதாவுக்குக் காணிக்கையாக வொப்புக்கொடுத்து மீட்டுக்கொண்டீரே! அப்போ

தவ்விடத்திலிருந்த மகாத்துமாக்க ளவ ருடைய மகிமையையறிந்து, அவரையநேகவிதமாகத்தோத்திரம்பண்ணினதைக்கண்டு மகாசந்தோஷிப்பட்டீரோ! அந்தச்சந்தோஷத்தைப்பார்த்துப் பத்திமுதலான புண்ணியங்களினாலே யெங்களாத்தும மவருக்கியோக்கியமான கோயிலாயிருக்கத்தக்கதாக வும்முடைய திருக்குமாரனாகிய அவரை வேண்டிக்கொள்ளும். பத்துப்பிறி. திறி.

அப்போஸ்தலர்களுக்குள்ளே பிரதான அப்போஸ்தலர்களாயிருக்கிற, அர்ச். இராயப்பரே! சின்னப்பரே! நாங்களெத்தனை பாவிகளாயிருந்தாலும் வேண்டிக்கொண்ட விந்தப் பத்துமணிச்செபத்தையும்-அர்ச்.-தேவமாதாவின் றிருப்பாதத்திலே யுங்களுடைய தோத்திரங்களோடேகூட ஒன்றாகக்கூட்டிப் பாதகாணிக்கையாகவைக்க வுங்களைப்பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

பர. ௫-ம். தேவரகசியம்.

பரலோகத்துக்கிராக்கினியே! உம்முடையபிள்ளையாகிய சேசுநாதருக்குப்

பன்னிரண்டுவயது நடக்கிறபோது மூ
ன்றுநா ளவரைக்காணுமல் மகா துக்கத்
தோடுதேடி, மூன்ருநாள் சாஸ்திரிகள்
சபைநடுவிலே கோயிலுக்குள் அவரைக்
கண்டு பரிபூரண சந்தோஷத்தையடைந்
தீரே! அந்தச்சந்தோஷத்தைப் பார்த்
து நாங்களொருபோதும் பாவத்தால்வ
ரைவிட்டுப் பிரியாமலிருக்கப்பண்ணிய
ருளும். யாதொருகாலம் அஞ்ஞானத்தா
ற்பாவம்பண்ணி யவரைப்பிரிந்தோமே
யாகிற் சீக்கிரமாகப் பச்சாத்தாபத்தி
ஞலே யவரையண்டி அவரிடத்திலே அ
டியோர்கள் ஸ்திரமாயிருக்க வும்முடை
யதிருக்குமாரஞகிய அவரைவேண்டிக்
கொள்ளும். பத்துப் பிறி. திறி.

அப்போஸ்தலரா யிருக்கிற அர்ச். -
அருளப்பரே! நாங்களெத்தனே பாவிக
ளாயிருந்தாலும் வேண்டிக்கொண்ட வி
ந்தப் பத்துமணிச்செபத்தையும் அர்ச்.
தேவமாதாவின் றிருப்பாதத்திலே யும்
முடைய தோத்திரங்களோடேகூட ஒ
ன்றாகக் கூட்டிப் பாதகாணிக்கையாக

வைக்க வும்மைப்பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம்.

## † துக்கத்தேவரகசியங்கள்.

மேற்சொல்லியபடி ஒவ்வொருதேவரகசியத்துக்கு முன்பு. ௧.-பரமண்டலமந்திரமும; பின்பு, ௰.-பிறியதத்த. ௧.-திறித்துவமந்திரமுஞ் சொல்லவும.

மேலும, அர்ச்.-மிக்கயேல்முதலான மூன்றுபிரதான சம்மனசுகளையும் அர்ச்.-சூசையப்பரையு மவரவர் பத்திக்குரிய மோட்சவாசிகளையுங்கொண்டு முறையோடே அந்தந்தப் பத்துமணிச்செபத்தை யொப்புக்கொடுத்தலுமுண்டாம.

௧.— அத்தியந்ததயையுள்ள அர்ச்.-தேவமாதாவே! உம்முடைய திருக்குமாரனாகிய சேசுநாதர் அடிபட்டுச் சிலுவையிலே யறையுண்டதுபோலே நீரடிபட்டுச் சிலுவையிலே யறையப்படாதிருந்தாலும் அவர் தம்முடைய திருச்சரீரத்தி லநுபவித்தவாதைகளெல்லா நீரும்முடையமனதி லநுபவித்தீரே! அவர் பூங்காவனத்திலே யெங்கள்பாவங்களுக்காக மிகவுந் துக்கப்பட்டதினா லவரு

---

† சகல செவ்வாய், வெள்ளியிலும, தபசுநாளில் வருகிறஞாயிறு வாரங்களிலு மிவைகளைச் சொல்லுகிறது.

டைய திருச்சரீரமெல்லாம் உதிரவேர்வையாகவேர்த்ததை நினைத்து நீர் திரளாய் விட்டகண்ணீராற் றரையைநனைத்துச் சொல்லப்படாத துக்கசாகரத்தி ல்மிழ்ந்தினீரோ அந்தத்துக்கத்தைப் பார்த்துப் பாவிகளாயிருக்கிற நாங்கள் பண்ணின பாவங்களுக்காக மிகவும்முழுது மனஸ்தாபப்பட்டுப் பாவ்விமோசனம் டையத்தக்கதாக வும்முடைய திருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

உ.—மகாவிரக்கமுள்ள அர்ச்.-தேவமாதாவே! தேவசுபாவத்தைக் கொண்டிருக்கிறவும்முடையதிருக்குமாரன் சேசுநாதர் நிஷ்டூரராலே தூணோடிறுகக்கட்டப்பட்டு, வலுவாயடிபட்டதினலேயவர் திருச்சரீரமுழுதுந் தழும்பும் உதிரக்காயமுமாய்நீச்ச்சேவகருடைய வசுத்தவுமிழ்நீரா ல்வர்திருமுக ம்ழுக்கடைந்ததுமா யிருக்கிறதைக்கண்டு, துக்கசமுத்திரத்தி ல்மிழ்ந்தினீரோ! அந்தத்துக்கத்தைப்பார்த்து, எங்கள்பாவங்களுக்கு வருகிறகடினமான வாக்கினைகளையெல்லா

ஞ் சர்வேசுரனிக்கத்தக்கதாக வும்முடை ய திருக்குமாரனை வேண்டிக்கொள் ளும்.

௩.—பொறுமைப்பிரவாக ஆறணியா ன அர்ச்.-தேவதாயாரே! பரலோக இரா சாவாகிய வும்முடையதிருக்குமாரன்சே சுநாதரை யூதர்கள்பரியாச இராசாவாக ஸ்தாபித்து, அவருடையதிருத்தலையிலே முண்முடிவைத்தடித்ததினாலே முள்ளுக் களுருவினதைப்பற்றி யவர்திருமுகத்தி லோடுகிற விரத்தத்தைநீர்கண்டு, அந்தமு ள்ளுக்களெல்லா மும்திருதயத்திலே யூ டுருவினதாக மிகுந்த துக்கப்பட்டீரே! அந்தத் துக்கத்தைப்பார்த்துப் பாவிக ளாயிருக்கிறநாங்க ளெங்களிருதயத்தி லிருக்கும் பாவமாகியமுள்ளுக்களை யுத் தம்மனஸ்தாபத்தினாலே பிடுங்கியெறிய த்தக்கதாக வும்முடைய திருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

௪.—பூலோகத்துக் காண்டவளாயிரு க்கிற அர்ச்.-தேவமாதாவே! உம்முடை ய திருக்குமாரனாகிய சேசுநாதரை யூத

ர்கள் கொல்லவேணுமென்று நிச்சயம்ப ண்ணி, அவருடையதிருத்தோளின்பேரி லே பாரமானசிலுவைமரத்தைச் சுமத் திக் கபாலமலைமட்டு மவரைத்தள்ளிக் கொண்டுபோகிறபோது, நீருங்கூடத் துக்கப்பட் டழுதுகொண்டு போனீ ரோ! அந்தத் துக்கத்தைப்பார்த்துப் பாவி களாயிருக்கிற நாங்களு மெங்களுக்குவ ருகிறதுன்ப ஆக்கினையான சிலுவையை நல்லமனதோடு சுமந்துகொண்டு, அவ ர்திருவடியைப் பின்பற்றி நடக்கத்தக்க தாக வும்முடையதிருக்குமாரனாகிய அ வரைவேண்டிக்கொள்ளும்.

ரு.—பாவிகளுக் கடைக்கலமாயிருக் கின்ற பரமதாயாரே! உம்முடைய திரு க்குமாரன் சேசுநாதனை யூதர்கள் சிலு வைமரத்தோடு சேர்த்துச் சொல்லிடங்காதகொடுமையாய் அவருடையதிருக் கைகளையுங் கால்களையும் பாரவிருப்பா ணிகளாற்கடாவி யிருகள்ளருக்கு நடுவே யெடுத்து நாட்டினபின்பு, மகா அவமா னத்தோ டவர்தொங்கியிருக்கின்றதைக்

கண்டதினாலே, மட்டில்லடங்காத துக்க வியாகுலப்பட்டீரோ! நீருமதுமனதிலே யநுபவித்த அவருடையபீடைகளையுஞ் சிலுவையையும் பார்த்துப் பாவிகளாயிருக்கிறவடியோர்கள் அந்தத் திவ்வியமாதிரிகையைக்கைக்கொண்டு, செவ்வழிநடந்து பாவப்பொறுத்தலுடையத்தக்கதாகவும்முடையதிருக்குமாரனாகிய அவரை வேண்டிக்கொள்ளும்.

† மகிமைத்தேவரகசியங்கள்.

க.—வருஷிகாலமுங்குளிர்காலமு நீங்கிப்போக வசந்தகாலம் வருகிறதுபோலேபிரசந்நமாயிருக்கிற மோட்சத்தினுடைய இராக்கினியே! உம்முடையதிருக்குமாரனாகிய சேசுநாதர்பாடுபட்டுமரித்த துக்கக்காலத்துக்குப்பின் மூன்றுநாட் கல்லறையைவிட்டுச் செயசீலராய்ச் சூரியனிலுங்காந்தியான சுபசௌந்தரியசுடரா யுயிர்த்தெழுந்த அவரைநீர்கண்

---

† சகலபுதன் சனியிலுங் கர்த்தருயிர்த்ததின்முதல் ஆகமனகாலபரியந்தம் வருகிற ஞாயிறுவாரங்களிலுஞ் சொல்லுகிறது.

டதிருமேல் உமக்கு அளவற்ற மகிமை பொருந்திய சந்தோஷகாலம் வந்ததே! அந்தமகிமையைப்பார்த்து, நாங்கள்பாவமாகிய மரணத்தைவிட்டு, ஞானவிதமாயுயிர்த்தெழுந் திருக்கத்தக்கதாகவும்முடைய திருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

௨.—† அட்சயமும்பரிசுத்தமுமாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! மட்டில்லாதமகிமையும் மாறாத் திருச்செயமுங்கொண்ட வும்முடைய திருக்குமாரனாகிய சேசுநாதர் உத்தாநமாயின நாற்பதாநாள்வானவரணியாகச்சூழ, அறிவிதாக்களோடே யொட்டோலகராய்ப் பரலோகத்துக்கு* ஆரோகணமானதைக்கண்டத்தியந்த சந்தோஷமகிமை யடைந்தீரே! அந்தமகிமையைப்பார்த்து, இவ்வுலகத்திற் பரதேசிகளாயிருக்கிறநாங்கள் பரலோகத்தையே வருந்திநாடிப் பரலோகபாக்கியமான மோட்சாநந்தத்தைப் பெறத்தக்கதாகவும்முடையதிருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

† (எ) * (அ)

௩.—தேவநன்மைகளாற் பூரிக்கப்பட்டவளுமாய், வானோர்க்கரசியுமாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! உம்முடைய திருக்குமாரனாகிய சேசுநாதருடைய சீஷர்களோடு நீர் தியானத்திலிருக்கிறபோது அக்கினிநாக்குரூபமாய் இஸ்பிரீத்துசாந்து இறங்கிவந்து, உமதிருதயத்தையுஞ் சீஷர்களிருதயத்தையுந் தேவ இஷ்டப்பிரசாதங்களினாலே நிரப்பினதினால் அத்தியந்தசந்தோஷமகிமையடைந்தீரே! அந்தமகிமையைப்பார்த்து இஸ்பிரீத்துசாந்துவின் வரப்பிரசாதத்தை நாங்கள்டைந்து, தேவசித்தத்தின்படியே நடக்கத்தக்கதாக வும்முடையதிருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

௪.—பூசிக்கப்படத்தக்கயோக்கியமுமாய்ப்புண்ணியவழிக்கு மாதிரிகையுமாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! உமது திருஆத்துமந்திருச்சரீரத்தைவிட்டுப்பிரிந்து, உம்முடையதிருக்குமாரனாகிய சேசுநாதருடைய திருக்கரஞ்சேர்ந்த மூன்றுநாள் திவ்விய சுகந்த பரிமளவாசமும் மகாகாந்தியுமுடைத்தான உமது திருச்

சரீரத்தோடுகூடக் கல்லறையை விட்டு, வானோர்களுடைய பரிவாரஞ்சூழ்ந்து மதுரமான கானசங்கீதங்கள் தொனிக்கப் பரலோகத்துக் கெழுந்தருளி, அத்தியந்த சந்தோஷமகிமையடைந்தீரோ! அந்தமகிமையைப்பார்த்துப் பூலோகமென்கிற துக்கசாகரத்திலே மிகுந்த ஆபத்துக்குள்ளிருக்கிற வெங்களை யுமதுகிருபாகடாட்சத்தினாலே நோக்கிப் பாவிகளாயிருக்கிற நாங்கள் மோட்சக்கரையேறத்தக்கதாக வும்முடைய திருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

ரு.— நன்மைக்கடலுமாய், நம்பினவர்க்காதாரமுமாயிருக்கிற அர்ச்.-தேவமாதாவே! சிஷ்டிக்கப்பட்ட சர்வபொருட்களையும்பார்க்கச் சகல சுகிர்தங்களினாலே நீர் நிறைந்தலங்கரிக்கப்பட்டவராகையால் நீர்பரலோகத்துக் கெழுந்தருளினவுடனே சகல அர்ச்சியசிஷ்டர்களையும்விட வதிகமான மோட்சசம்பாவனை பெற்று, அர்ச். - தமதிறித்துவத்தினால் வானோர்களுக்கெல்லா மிராக்கினியாகக் கிரீடந்தரிக்கப்பட்டு, சம்மனசுகள்மோ

ட்சவாசிகளெல்லோர்க்கு மேலாகவுயர்த்தி ஸ்தாபிக்கப்பட்டு, நித்தியபேரின்ப வாழ்வு நிறைந்தமகிமையடைந்தீரோ! அந்தமகிமையைப்பார்த்து, நீரநுபவிக்கிற மோட்சாநந்தபாக்கியத்தி லோரற்பபங்கு பாவிகளாயிருக்கிற வடியோர்களும் பெறத்தக்கதாக வும்முடையதிருக்குமாரனை வேண்டிக்கொள்ளும்.

ஐம்பத்து மூன்றுமணிச் செபம் செய்துமுடிக்கிறவகையாவது.

அதிதூதரான அர்ச். - மிக்கயேலே! தேவதூதர்களான அர்ச். - கபிரியேலே, இரபயேலே! அப்போஸ்தலர்களான அர்ச். - இராயப்பரோ, சின்னப்பரோ, அருளப்பரோ! நாங்களெத்தனை பாவிகளாயிருந்தாலும் வேண்டிக்கொண்ட விந்த ஐம்பத்துமூன்றுமணிச் செபத்தையும் அர்ச். - தேவமாதாவின் திருப்பாதத்திலே யுங்கள் தோத்திரங்களோடே யொன்றாகக்கூட்டிப் பாதகாணிக்கையாக வைக்க வுங்களைப்பிரார்த்தித்துக் கொள்ளுகிறோம். ஆமென் சேசு.

## அர்ச்சியசிஷ்ட தேவமாதாவின் பிரார்த்தனை.

சுவாமீ கிருபையாயிரும்.

கிறீஸ்துவே கிருபையாயிரும்.

சுவாமீ தயையாயிரும்.

கிறீஸ்துவே யெங்கள்பிரார்த்தனையைக்கேட்டருளும்.

கிறீஸ்துவே யெங்கள்பிரார்த்தனையை நன்றாகக்கேட்டருளும்.

பரமண்டலங்களிலே யிருக்கிற பிதாவாகிய சர்வேசுரா.

உலகத்தைமீட்டிரட்சித்தசுதனாகிய சர்வேசுரா.

இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரா.

அர்ச்சியசிஷ்டதமதிரித்துவமாயிருக்கிற ஏகசர்வேசுரா.

எங்களுக்குத் தயைபண்ணி ரட்ஷியும் சுவாமீ.

அர்ச். மரியே.

சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே

கன்னியாஸ்திரீகளுக்குள்ளே யுத்தமதம அர்ச். கன்னிகையே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

கிறீஸ்துவினுடைய மாதாவே.
தேவப்பிரசாதத்தின் மாதாவே.
மகாபரிசுத்த மாதாவே.
அத்தியந்தவிரத்தியாயிருக்கிற மாதாவே.
பழுதற்ற கன்னியாஸ்திரீயாயிருக்கிறமாதாவே.
கன்னிசுத்தங்கெடாத மாதாவே.
மகா அன்புக்குப்பாத்திரமாயிருக்கிற மாதாவே.
ஆச்சரியத்துக்குரியமாதாவே.
சிஷ்டிகருடைய மாதாவே.
இரக்ஷகருடைய மாதாவே.
மகாபுத்தியுடைத்தான கன்னிகையே.
மகா வணக்கத்துக்குரிய கன்னிகையே.
பிரகாசமாய் ஸ்துதிக்கப்படயோக்கியமாயிருக்கிற கன்னிகையே.
சத்தியுடையவளாயிருக்கிற கன்னிகையே.
தயையுள்ளகன்னிகையே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

விசுவாசியாயிருக்கிறகன்னிகையே.
தருமத்தினுடைய கண்ணாடியே.
ஞானத்துக் கிருப்பிடமே.
எங்கள்சந்தோஷத்தினுடைய காரணமே.
ஞானபாத்திரமே.
மகிமைக்குரியபாத்திரமே.
அத்தியந்த பத்தியுடைத்தான பாத்திரமே.
தேவ இரகசியத்தைக்கொண்டிருக்கிற இரோசையென்கிற புஷ்பமே.
தாவீதிராசாவுடைய உப்பரிகையே
தந்தமயமாயிருக்கிற உப்பரிகையே.
சொர்ன்னமயமாயிருக்கிற ஆலயமே.
வாக்குத்தத்தத்தின் பெட்டியே.
பரலோகத்தினுடைய வாசலே.
விடியற்காலத்தின் க்ஷத்திரமே.
வியாதிக்காரருக் காரோக்கியமே.
பாவிகளுக் கடைக்கலமே.
கஸ்திப்படுகிறவர்களுக்குத் தேற்றரவே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

கிறீஸ்துவர்களுடையசகாயமே.

சம்மனசுகளுடைய இராக்கினியே.

பிதாப்பிதாக்களுடைய இராக்கினியே.

தீர்க்கதரிசிகளுடையஇராக்கினியே

அப்போஸ்தலர்களுடைய இராக்கினியே.

வேதசாட்சிகளுடைய இராக்கினியே.

ஸ்துதியருடைய இராக்கினியே.

கன்னியாஸ்திரீகளுடைய இராக்கினியே.

சகல அர்ச்சியசிஷ்டர்களுடைய இராக்கினியே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

உலகத்தின் பாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையாகிய சேசுவே.

எங்கள்பாவங்களைப் போக்கியருளுஞ் சுவாமீ.

உலகத்தின் பாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையாகியசேசுவே.

எங்கள் பிரார்த்தனையை நன்றாகக்கே ட்டருளுஞ்சுவாமீ.

உலகத்தின் பாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவை யாகிய சேசுவே.

எங்களுக்குத்தயைபண்ணி இரட்சியுஞ் சுவாமீ.

சர்வேசுரனுடைய அர்ச்சியசிஷ்டமா தாவே யிதோ வும்முடைய சரணமாக வோடிவந்தோம், எங்கள்வசரங்களிலே நாங்கள்வேண்டிக்கொள்ளுகிறதற்கு நீர் பராமுகமாயிராதேயும். ஆசீர்வதிக்கப் பட்டவளுமாய் மோக்ஷமுடையவளுமா யிருக்கிறநித்தியகன்னிகையே சகல ஆப த்துக்களிலேநின்றுஎங்களைத்தற்காத்துக் கொள்ளும்.

மு. சேசுகிறீஸ்துநாதருடைய திரு வாக்குத்தத்தங்களுக்கு நாங்கள் பாத்திரமாயிருக்கத்தக்கதாக.

தி. சர்வேசுரனுடைய பரிசுத்த மா தாவே யெங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

## பிரார்த்திக்கக்கடவோம்.

சுவாமீ முழுமனதோடே தெண்டனு கவிழுந்துகிடக்கிற விந்தக்குடும்பத்தை ப்பார்த்து எப்போதும்பரிசுத்த கன்னி கையான முத்திப்பேறுபெற்றமரியாயி யுடையவேண்டுதலினாலே சகலசத்துருக் களின் சர்ப்பனையிலேநின்று பிரசன்னரா ய்த்தயைசெய்து இரட்சியும். இந்தமன் றாட்டுக்களையெல்லா மெங்களாண்டவரா ன சேசுநாதருடைய திருமுகத்தைப் பார்த்து எங்களுக்குத்தந்தருளும்.

ஆமென்சேசு.

பின்னுங்கிருபைதயாபத்துமந்திரம அல்லதுதே வமாதாவின் தோத்திரங்களில் வேறேயாதொன்ற ல்லாமலும் விசுவாச நமபிக்கை தேவசினேக முயற் சிகளைச்சொல்லவும.

## சயன ஆராதனை.

சர்வேசுரா சுவாமீ மனுஷர்சயனத்தா லினைப்பாற இராத்திரிகாலங்கட்டளையிட் டருளினீரோ, உமக்கேதோத்திரமுண்டா கக்கடவது. இன்றெனக்குச்செய்த சக ல உபகாரங்களுக்கு முமக்குத்தோத்திர

ம்பண்ணி என்றுற்செய்யப்பட்ட பாவ ங்களையெல்லாம் பொறுத்தருள வேணு மென்று தேவரீரையமன்றாடுகிறேன். அ துகள் தேவரீருடைய அளவில்லாதமகி மைக்கும் நன்மைத்தனத்துக்கும்விரோ தமாயிருக்கிறதினாலே முழுதும் துகளை வெறுக்கிறேன். இந்தஇராத்திரியிலேசடி திமரணத்தாலுந் துர்க்கனவுமுதலான ப சாசுசோதனைகளாலும்டியேனுக்குமோ சம்வரவொட்டாமற் காத்துக்கொள்ளு ம். ஆ என்சேசுவே என்மரணவேளையிலே யுமது இஷ்டப்பிரசாதத்தோடிருந்து உமதுசிலுவையை யாவலோடுதழுவி யுயி ர்விடவு மும்திராச்சியத்தி லும்மோடு நி ரந்தர மடியேனிளைப்பாறவுங் கிருபை செய்தருளும். ஆமென்சேசு.

நித்திரையொழுக்கம்.

நீ நித்திரைசெய்யப்போகையி லுன்படுக்கையைக் கல்லறையாகவெண்ணி, நித்திரைச்சாயலாக மரண மெத்தனைவிரைவாய்வரலாமென்றும் அப்போதுலக சுகவெகுமானவெண்ணங்களெல்லா மெவ்விதமாமெ ன்றுஞ் சிந்திப்பாய். சயனவிளைப்பாற்றியாற் சுவாமி க்குப்பணிபுரிய வதிகசத்தியுண்டாக வுன்சயனத்தை யவர் அமலதிருவுளத்துக்குத் தூயமனதோடொப்பு க்கொடு. நித்திரையிலே நீவிடுஞ்சுவாசமெல்லா நித்தி

னாயற்றபரமதூதரும் மற்றப பரலோகவாசிகளுமி டைவிடாது செய்யுந்தோத்திரத்துக் கொப்பாகவே ண்டுமென்று விரும்பி யுனனிரட்சகருடையதிருக்கரத் திலுறங்குவதாகஎண்ணுவாய்.

இரவில்விழித்தாயாகில், சுவாமிக்குன்னேநேர்ந்து அவனை யபேட்சித்துச்சொல்லத்தக்கதாவது:

† நான் என்னாத்துமத்தோடு இரவிலு ம்மையபேட்சிக்கிறேன்.

* தீயோர்யோசனைக் குள்ளாகாமலும் பாவிகளுடைய மார்க்கத்தில் நடவாமலு ங்கெடுதலுள்ளபோதகத்தி லூன்றாமலு ஞ் சர்வேசுரனுடையவேதத்திலே மனம் வைத் திரவும்பகலு மவர்வேதத்தைத் தி யானிக்கிறமனிதனே பாக்கியவான்.

‡ இருளாகிலு மென்னைமறைப்பதாகு மோ வென்றேனே. இரவுமென்சுகங்களி லெனக்குப்பிரகாசமாமேசுவாமீ. ஏனெ னில் தேவரீருக் கிருள்ந்தகாரமாயிரா து. இரவும்பகலைப்போலவிளங்கும். தேவ ரீருக்கு அதினிருளுமிதின்வெளிச்சமுஞ் சரி.

† இசையாஸ்-உகூ - அதி. கூ * தாவீதரசன் - க- சங்கீதம்- க-உ-வசனம். ‡ ாகயஅ - சங்கீதம். யக.

இராச்செப முற்றிற்று.




## என்ற

## நாமதேய வியாக்கியானம்.

வானத்திலுதயமாகிற நட்சத்திரங்களைக்கண்டு கணிதசோதிடர் அதுகளுக்கான நாமஞ்சொல்லுவர், பூமியில்விளைகிற நவரத்தினங்களுக்கு இரத்தினப்பரிட்சையிற் கதித்தவர்த்தக வணிகவியாபாரியர் அதுகளினொளிவுகண்டு தக்கபெயரிடுவர். ஆனால்விண்மண்டலத்திற் பண்டில்லாது நவமாய்த்தோன்றி யற்புதமாயொளிர்ந்தபரமதாரகைக்கும் பூமண்டலத்தில் முன்காணாதநூதனகாந்திவீசுஞ் சீவரத்தினத்துக்கு மியன்றநாமகரணம் பூவாசிகளிலொருவராலுங் கொடுக்கலாயிராதே அப்படியேகன்னிசுத்த தேவமாதாவுக்குச்சமான ஆத்துமசௌந்தரியமும் அங்கவடிவலங்காரமும் பரலோகபூலோகத்திலுங் காணப்படாமல் நிகரில்லாத்தற் கியோக்கியவாக்கியம் வழுத்தற் பூலோகத்திலேலாத்தினாலே சர்வேசுரன்றமே விசே

ஷகட்டளையினால் மரியாயியென்ற நிறைந்தநாமதே யஞ்சூட்டத் திருவுளம்பற்றியருளினார். ஆகையால் வணக்கத்துக்குரியமரியாயி எனறநாமதேயத்தின் அர்த்தம் யாதோவெனில்,

லத்தீன்பாஷையிற் சமுத்திரங்களென்றுசொல்லப் படும-அதேதெனில் தேவகருணைச்சலஞ்சமுத்திரப்பிரவாகமாய்வளிருதயத்தில் நிறைந்திருக்கின்றதினாலேயும்வள் தம்முடையதிருச்குமாரன்பட்ட நிர்ப்பந்தமானபாடுகளையு மடைந்தகடினமரணத்தையுங் கண்டபோது துக்கசாகரத்தி லமிழ்ந்தினதினாலேயு மவருயிர்த்தவல்லமையையு மோக்ஷவிராச்சியத்தி லணிந்த மகிமைப்பிரதாபத்தையுந் தரிசித்ததினா லத்தேவதாயி னுநந்தசந்தோஷமகிமைபாக்கியங் கரையற்றசமுத்திரம்போலப் பெருகினதினாலேயுஞ் சமுத்திரங்களென்கிறபெய ரவளுக்குத்தகுமே.பினனும-மரியாயியென்றநாமதேயஞ்சீரியபாஷையில் உத்தமநாயகியாம். அதாவது இகலோகபரலோக பாதாளமென்னுந் திறிலோகத்தையும் ஏகசக்கரமாயாளும் ஏகநாயகனைப்பெற்றதினாலாம்.

எபிறேடபாஷையில் - உத்தரநக்ஷத்திர மென்றுஞ் சமுத்திரநக்ஷத்திரமென்றுமாம. அதாவது சமுத்திரயாத்திரைசெய்கிறவர்கள் உத்தரநட்சததிரத்தைப்பார்த்துத் தங்கள்யாத்திரை நடத்தி நிறைவேற்றுகிறதுமந்தந்த விடங்களி லீடேறுகிறதுமாம. இப்படியே அஞ்ஞான * திமிரத்தாற் பரலோக † நடவைப்பிசகியிருக்கிறவர்கள் இந்தத்தாரகையைப்பார்த்து நிலவுவெளிச்சத்தைக்கண்டதுபோலத்தெளியலாகுவதாலுமாம்.

மரியாயியென்ற நிறைந்தநாமதேயம் இனியதமிழ்ப்பாஷையிலோவெனில் சாகாதவளென்றுஞ் சாகாத்தாயென்றும் பயனாம். சாகாதவளென்பது நித்

* இருள். † வழி.

தியசீவியமுள்ளவளாம் அதேதென்னில் ஆதித்க ப்பனும் ஆதிதாயும்விலக்கினமரத்தின்கனியைப்பொ சித்துத் தேவசாபத்தாற் றங்களாத்துமதனைதச் சா கடித்தார்களே. அந்தச்சாபந் தேவமாதாவுக்கணு காத்திலே யந்தவாண்டவள் சாகாதவளென்று சொல்லுதலுமாம். சகலசாதிகளுக்குமா ஆதிபிதாவா ன ஆதன்தேவகட்டளைமீறியடைந்தஞானகேடு ச கலமனுஷசாதிகளுக்குஞ் சன்மதோஷமாய்ச் சித்தி க்கபபட்டுவருகையில் அவன்சந்ததிவழியாய் வந்த தேவமாதாவுக்கும் அந்தத்தோஷ மணுகாதிருந்த தெப்படியெனில், ஆதித்கப்பனைச் சர்வேசுரன்ப டைக்கச் சித்தமானபோதே யவனால்மேல்விளையும் பாவதோஷங்கள்பரிகாரமாம்படிக்குப் பூலோகத்தி லேதம்முடைய திவ்வியசுதனவதரிக்கவேண்டியதெ ன்று ஆண்டவரநாதியாய்த தமதுசித்தத்திற்பிரததி யக்ஷமாய் நியமித்திருந்தார். அப்படிப்பட்ட தேவ உற்பத்திக்குத தாயாயிருக்கதத்க்கவள் யாதோரற் பபழுதில்லாம விருக்கவேணுமென்றதினாலேயும் ஆதி மனுஷன்முதற் சர்வசங்காரகாலபரியந்த மேற்சிஷ டிக்கப்படப்போகிற சமஸ்த மனுஷாத்துமாக்களுக் குள்ளே கிறீஸதுநாதர் நீங்கலாய் மனுக்குலமட்டிற் சர்வததிலுமேலான தெய்வஸநேகமுந் தன்னிலுந்தி க பிறஸநேகமு மகாதாழ்ச்சியுமுன்னதவிரதததுவ மூஞ் சகலசுகிர்த்ததில் நிறைவும் வேதகற்பனைகளி லொன்றுங்கட்டாயமின்றிச் சுதந்தரியம்பெற்ற தி ன * சுவேச்சையாய்த தானேபழுதில்லாமல்நிறைவே ற்றப்பட்ட மகா பரிசுததாத்துமமுமுள்ளவளாயிரு க்கவேண்டுமென்றதினாலேயுந் தேவதாய்ப்பட்டத் துககு நியமிக்கப்பட்ட ஆராதிஷட கன்னிமரியாயிய டைட்டுண்டவஸ்துக்களிற் சமானமின்றிய பரலோக பூலோகத்திலுள்ள ஆத்துமாக்களில் விசேஷிக்கப்ப

* சுய-இச்சை

ட்டு மாசற்றவளாயிருக்கத்தான் வேண்டியிருந்தது. இப்படிப்பட்ட பரிசுத்தாத்துமமே தம்முடையதிரு க்குமாரனுக்குத் தாயாராயிருக்கத் தேவயோக்கியம் பெற்றபேறுபேறுள்ளதென்று ஆதியாய்த்தெரிந்து கொண்டகடவுள் பாவியான ஆதனுக்குச் சாபமிடுகி றபோ த்தற்குள்ளாகத் தேவமாதாவையுட்படுத்தா மல் அநாதிதுவக்கமாய்ப் புறம்பாக்கிவைத்தார். இப் படி ஆதனுக்குமுன்னமே கன்னிசுத்ததேவமாதா தேவசித்தத்திற் சனித்திருந்ததினாலேயும் விசேஷ தேவகிருபை பெற்றுக்கொண் டிருந்ததினாலேயும் ஆதனாற்பலுகின சன்மப்பாவதோஷமொன்று ம் அணுகாதவளாய் ஆத்துமஞ்சாகாதநித்தியஞானசீவிய முண்டானவளென்னத்தகும். இதெவ்விதமோவெனி ல்-உலோகாதீஸ்வரஏக்சக்கரராயன்தனக்கடங்கியஇ ராச்சியத்தி லியாதொருமண்டலாதிபதிசெய்த விரா சததுரோகங்களுக்காக அவனையும்வன்சந்ததிபட்ட ணகிராம * நிவாசங்களையுமழிக்க ஆக்கியாபிக்கிறபோ து அந்நகரிற்றான் வசிக்கிறதாமுடைய பிரியமுள்ள தாயும் அரமனைசிங்காசனமும் கெடாதபடிக்குக் காப்பனே. அப்படியே-ஆதன்செய்ததேவதுரோகத் துக்காக அவன்வம்சமாகிய உலோகவாசிகள்சமஸ்த ருக்கும் பொதுவில்ஞானகேடுவருகிறபோது தாம்வ சிக்குந்தேவாலயச்சிம்மாசனமுந்தமக்குப்பிரியமுள் ளமாதாவுமாகிய பரிசுத்தகன்னிமரியாயை யோரற் பதோஷமும்அணுகாது பரமகர்த்தர் காத்தருளினரெ ன்றறிக. மீளவுஞ் சாகாத்தாயென்பது அழியாதசீ வியமுள்ளதாயென்ப தெப்படியெனில் லவ்கீக ஐவ கைத்தாய்மார் சரீரசம்பந்தத்தோடு மாய்ந்துபோ னாலு மிந்தப்பரமநாயகி நித்தியசீவியமுள்ள கர்த்த ரைப்பெற்றதைப்பற்றி மரணநித்திரையடைந்தவுட னே யாத்துமத்தோடுஞ்சரீரத்தோடும் மோக்ஷத்து

* இருப்பிடம்.

க்கெழுந்தருளி யழியாதசீவியங்கொண்டிருக்கிறதிரு லும் இகத்திலும்பரத்திலு ம்வளைச்சமஸதருக்கும் நித்தியதாயாராகநியமித்துத் தேவசுதன் றன்மாணு க்கன் அருளப்பர்முன்னிலையாக இதோஉன் தாயென றருளின திருனுமாம்.

தத்துவபோதகசுவாமி - உ-ங் காண்டம் - உய-ம் பாடத்தையுஞ் சாங்கோபாங்கர் பச்சிமகாண்டம் ௬ ருத்தயுகத்தின் " உ-ம் - அதிகார-௩-ம். இலம்பகத் தையுங்காண்க.



அன்புக்குரியமாதாவேயுமககுப்பிள்ளைக்ளாகிய எங் களுக்குமுடைய வாசீர்வாதத்தைத்தந்தருளி யும்மு டைய நேசகுமாரனும் எங்களுககுத்தம்னு பரிபூரண வாசீர்வாதந்தந்தருளும்படியாக வவரை வேண்டிக கொள்ளும்.

# அர்ச்-தேவமாதாவுககுத்

## தோத்திரச்செபங்கள்.

சமுத்திரத்தின்ட்சத்திரமே, சர்வேசுரனுடைய பூசிக்கப்பட்டமாதாவே நித்தியகன்னிகையே பரலோகத்தின் பாக்கியமானவாசலே,

காபிரியேலென்கிற சம்மனசினுடையவாக்கிலேநின்று புறப்பட்டமங்களவார்த்தைக்கேட்டு * ஏவையின்பெயரைமாற்றி யெங்களைச் † சமாதானத்திலே நிலைநிறுத்தும்.

ஆக்கினைக்குப் பாத்திரமானவர்களுடையகட்டுக்களையவிழும். குருடருக்குப் பிரகாசத்தைக்கொடும். எங்கள்பொல்லாப்புக்களைத்தள்ளும். சகல நன்மைகளையெங்களுக்கு வரமன்றுடும்.

நீரெங்களுக்குத் தாயாராயிருக்கிறீரென்றுகாண்பியும். எங்களுக்காக அவதரித்தவும்முடையதிருக்குமாரன் சேசுநாதரு

* கூ † ம




சேசுநாதர் தம்முடையசீஷனை நோக்கி
யிதோ-உன் தாயென்றார்.
கிறீஸதுவனே! இதுனக்கே சொல்லப்
பட்டதாமே.

ம்மாலே யெங்கள்வேண்டுதலைக் கேட்கக்
கடவாராக.

உத்தமகன்னிகையே யெல்லாத்திலு
ஞ்சாதுவே நாங்கள்பாவங்களினின்று வி
டப்பட்டவர்களாகிச் சாதுக்களாகவுங் க
ற்புடையராகவும் பண்ணியருளும்.

நாங்கள்சேசுநாதரைத் தரிசித்து நி
ரந்தரங் களிகூர்ந்திருக்கச் சுத்தநடக்கை
யைத்தந்து பயமில்லாதவழியிற் கூட்டி
க்கொண்டுபோகவு மநுக்கிரகம்பண்ணி
யருளும்.

சர்வேசுரனாகிய பிதாவுக்குத்தோத்திர
ம், உத்தமகிறீஸ்துவுக்குப் பூசை, இஸ்பி
ரீத்து சாந்துவுக்குமங்களம், இந்தமூன்
றாட்களுக்கு மொரேயுத்தம தேவாராத
னையுண்டாகக்கடவது. ஆமென்சேசு.

---

† கிறீஸ்துவே யும்மைச் சுமந்தவுதர
மும், நீரமுதுண்ட கொங்கைகளும், பா
க்கியம்பெற்றதுகளாமே.

---

† அர்ச். லூக்காஸ்-௰௧-அதி. ௨௭-வச. || வேதவி
ளக்கத்தில்-௪ம். அதி-௬௰ம். விரிவுமுதற்காண்க.

மிகவுமிகுந்த மதுரமுள்ள அர்ச்.-மரியாயே, ஒன்றான சர்வேசுரனைப் பழுதற்ற கன்னியாயிருந்து உமது கர்ப்பத்திலே பிள்ளையாகத்தரித்தீரோவாழ்க. அத்தேவசுதனைக் குறையற்ற கன்னிகையாயிருந்துகொண்டு பிறவித்துன்பமில்லாமற் பெற்றீரோவாழ்க. அவரைப்பெற்றபின்னு மெப்போதும்பரிசுத்த கன்னியாஸ்திரீயா யிருந்தீரோவாழ்க. சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே யெங்களுககாகவேண்டிக்கொள்ளும். ஆமென்சேசு.

---

தேவசுவையுந் திவ்வியகன்னிகையுமான சர்வேசுரனுடைய அர்ச். மாதாவே நீதியாதித்தனாகிய சேசுகிறீஸ்து உம்மிடத்திலவதரித்ததினாலே நீரதிகபாக்கியவதியுமாய்ச் சகலதோத்திரங்களுக்கும் பாத்திரமுமாயிருக்கிறீர். நிர்ப்பாக்கியருக்குதவியாயிரும். அழுகிறபேர்களை யாவணையும். அல்லற்படுகிறவர்களுக் காறுதலாயிரும். சர்வசனங்களுக்காகமன்றாடும். பூசைசபைக்காகப் பிரார்த்தித்துக்கொ

னீரும். உம்முடையபேரிற் பத்தியாயிரு க்கிற ஸ்திரீ பூமான்களுக்காகமன்றுடும். உம்முடைய திருநாமத்தை யாரார்கொ ண்டாடுகிருர்களோ அவர்களெல்லாருமு மது உபகாரத்தின்பலனை யடையக்கட வார்கள்.

சர்வேசுராசுவாமீதேவரீரைஸ்துதிக்கிற வர்களுக்குவெகுமானம்பண்ணுகிறீர்.உம முடையதிருவடியார்களுடைய மகிமைக ளாற் பூசிக்கப்படுகிறீர். தேவரீருடையதி ருவடியார்களாகிய-அர்ச்.-இன்ஞசியார்-அர்ச்.-சவேரியா ரிவர்களுடைய புண்ணி யங்களை ஸ்துதிக்கிற நாங்களிவர்களுடை யவிரக்கமுள்ள வேண்டுதலின்பலனைக்க ண்டுகொள்ளத்தக்கதாகப் பிரசந்நராய்த் தயைபுரிந்திரட்சியும். இந்தமன்றாட்டு க்களையெல்லா மெங்களாண்டவரானசே சுநாதருடைய திருமுகத்தைப்பார்த் தெ ங்களுக்குத் தந்தருளும். ஆமென்சேசு.



அர்ச்.-தேவமாதா சுவாமியைப்புகழ்ந்து
வசனித்தபததுவாக்கியம்.

என்னாத்துமமானது ஆண்டவரை வணங்கித் தோத்திரம்பண்ணுகிறது.

என்னிரக்ஷணியமாகிய சர்வேசுரனிடத்திலென்னாத்தும மாநந்தமாயெழும்பி மனமகிழ்கின்றது.

தமது அடிமையானவளுடைய நீசத்தனத்தைக் கிருபாகடாக்ஷத்தாற் பார்த்தபடியினாலே, இதோ எல்லாரும் இக்காலமுதல் தலைமுறை தலைமுறையாகவென்னைப் பாக்கியமுள்ளவளென்பார்கள்.

வல்லபமிக்கவர் தம்முடைய பெருமையுள்ளதுகளை யென்னிடத்திற்செய்தருளினார். மேலும் அவருடையநாமமானது - அர்ச்சியசிஷ்டநாமந்தானே.

தமக்குப் பயந்திருக்கிறவர்களுக்கே தலைமுறைதலைமுறையாகத் தமதுகிருபையைச்செய்வார்.

தம்முடையகையின் பலத்தைக்காட்டித் தங்கள்தங்களிருதயத்தின் விசாரத்தினாலேகர்வமுள்ளபேர்களைச் சிதறப்பண்ணினார்.

பலமுடைத்தானவர்களை யாசனத்தினி
ன்றுதள்ளித் தாழ்ந்தவர்களையுயர்த்தினார்
பசித்திருக்கிறவர்களைத் தம்முடைய
நன்மையினாலே நிரப்பித் தனமுள்ள
பேர்களை வறுமையுள்ளவர்களாக்கினார்.

அபிராமென்பவருக்கும் - ஊழியுள்ள
காலமவருடைய * சுதபரம்பரையாகிய
வெங்கள் பிதாப்பிதாக்களுக்குஞ்சர்வேசு
ரன் திருவுளம்பற்றினபடியே,

தமதுகிருபையை நினைத்துத் தம்மு
டைய தாசராகிய-இசராயேல்சனங்களை
ப் † பரிக்கிரகம்பண்ணினார்.

பிதாவுக்குஞ்சுதனுக்குமிஸ்பிரீத்துசா
ந்துவுக்குந் தோத்திரமுண்டாகக்கடவ
து. ஆதியிலேயு மிப்பொழுது மெப்
பொழுதும்நாதிசதாகாலமு மிருக்கும்ப
டியே. ஆமென்சேசு.

---

‡ அமலோற்பவியான அர்ச்.-தேவமாதாவின் பிரதா
னமான ஐந்துமகிமைகளைக்குறித்து ஐந்து பிரியதத்
தமந்திரம் வேண்டிக்கொள்ளுகிறவகை.

பூவதுபரலோகத்துக்கிராக்கினியாயி
ருக்கிற-அர்ச். மரியாயே யெங்களுக்காக

* ௰க.  † ௰உ.  ‡ ௰ரு.

வும்முடைய திருக்குமாரனை வேண்டிக்
கொள்ளும். பிறி.

உ-து. பூலோகத்துக்காண்டவளாயிரு
க்கிற-அர்ச். மரியாயே யெங்களுக்காக வு
ம்முடைய திருக்குமாரனை வேண்டிக்
கொள்ளும். பிறி.

ஙு-து. சமுத்திரத்தி ணட்சத்திரமாயி
ருக்கிற - அர்ச்.-மரியாயே யெங்களுக்கா
க வும்முடையதிருக்குமாரனை வேண்டிக்
கொளளும். பிறி.

சு-து. முப்போதுங் கன்னிகையான
பரிசுத்தத்தனத்தைக் கொண்டிருக்கிற-
அர்ச்.-மரியாயே யெங்களுக்காகவும்மு
டைய திருக்குமாரனை வேண்டிக்கொள்
ளும். பிறி.

ரு-து. எங்களா ல்ளவறுக்கப்படாத
ஞானப்பிரகாசத்தைக் கொண்டிருக்கி
ற-அர்ச்-மரியாயேயெங்களுக்காகவும்மு
டைய திருக்குமாரனை வேண்டிக்கொள்
ளும். பிறி.

* ஆகமனகாலத்திலோதல்.

இரட்சகருடைய பரிசுத்தமாதாவே வ ரும்வழியான பரகதிவாசலே, சமுத்திர த்தின்றாரகையே, பாவத்தில்வீழ்ந்தவ ரொழுந்திருக்கப் பரிதபிக்கையி லுமது வேண்டுதலா லுதவியருளும். உலகத்தி யல் பதிசயிக்க வும்மைப்படைத்தவரை ப்பெற்றதாயே, பெறுமுன்னும் பெற் றபின்னுங்கன்னிகையே, தேவதூதனு டைய மங்களவாய்மொழியைக்கேட்டுப் பாவிகள்பேரிலிரக்கமாயிரும்.

மு. { ஆண்டவருடைய சம்மனசானது ம ரியாயியுடனே விசேஷஞ்சொல்வி ற்று.

து. { அவள் இஸ்பிரீத்துசாந்துவினுலே கர்ப்பணியானாள்.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ சம்மனசுசொன்ன. தினுலே....     .. ச-ம். பககம்.

கர்த்தர்பிறந்த திருநாள்தொடங்கிக் கூாணிர்கைமாதா திருநாள்மட்டுக்குஞ் சொல்லத்தகுஞ்செபம்.

இரட்சகருடைய.......... இப்பக்கம்.

மு. { திருப்பேறுபெற்ற பின்னுஞ் * சி
தைவில்லாதகன்னிகையே.

து. { சர்வேசுரனுடையதாயாரே யெங்க
ளுக்காகமன்றாடும்.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ பாக்கியவதியான அர்ச்.-மரியாயியுடைய கன்னிமைகுன்றாததிருக்கருப்பத்தினாலே மனுக்குலத்துக்குநித்திய இரட்சணையின் சம்பாவனையைத் தந்தருளினீரே. எங்கள்சீவகாரணராகன சேசுகிறீஸ்துவை யெங்களுக்குத்தந்தருளின அந்தத்தேவதாயா ரெங்களுக்காகத் தேவரீரைக்கேட்டு மன்றாட்டுக்களின்பலனை யெங்கள் அவசரங்களிலேநாங்கள் கண்டுகொள்ளத்தக்கதாகத் தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம்.

ஆமென்சேசு.

காணிக்கைமாதாதிருநாள்முதல்
பெரியவியாழமட்டுககுஞ்
சொல்லுஞ்செபம்.

பரலோகத்துக் கிராக்கினியே வாழ்க. சம்மனசுகளுக்கிறைவியே வாழ்க. உலகத்

* அழிவில்லாத

ளதைப் பிரகாசிப்பிக்கவந்த பரஞ்சோதி யாகிய கர்த்தரொழுந்தருளின திருவாசலேவாழ்க. தேவகனியைத்தந்த தூய்மையான திவ்வியபூங்கொடியேவாழ்க. சகலகன்னியாஸ்திரீகளினு மகிமைபொருந்திய அதிசௌந்தரிய ரூபலாவண்ணிய கன்னிகையே களிகூரும். ஆராதனைக்குப் பாத்திரமான வுமமுடைய திருக்குமாரனிடத்தி லெங்கள் பாவப்பொறுத்தலுக்காக மன்றுடும்.

மு. { அர்ச்.- கன்னிகையே நானும்மைஸ்துதிக்கக்கிருபைசெய்தருளும்.

து. { உம்முடைய சத்துருக்களை வெற்றிகொள்ள வெனக்குச் சத்துவத்தைத் தந்தருளும்.

பிரார்த்திக்கக்கடவோம்.

தயாபர சர்வேசுராசுவாமீ யெங்கள் துர்ப்பலத்துக்கு உமது திருச்சரணக் காவலைக் கட்டளையிட்டருளும். தேவமாதாவைநினைத்துக் கொண்டாடுகிற நாங்கள் அந்தத் திவ்வியதாயாருடையவேண்டுதலுதவியாற் பாவமாகியமரணத்திலே

நின்று உயிர்க்கும்படிக்கு அநுக்கிரகம் பண்ணியருளும். இந்தமன்றாட்டுக்களை யெல்லா மெங்களாண்டவரான சேசுநா தருடைய திருமுகத்தைப்பார்த் தெங்க ளுக்குத்தந்தருளும். ஆமென்சேசு.

பாஸகுக் காலத்திலோதல்.

பரலோகத்துக்கிராக்கினியே... கூ-ம்.பக்.

அர்ச்.-தமதிறித்துவத்தின் றிருநாள்தொடங்கி ஆ கமனகாலபெரியந்தஞ்சொல்லத்தகுஞ்செபம்.

கிருபைதயாபத்து.... ௩டு-ம். பககம்.

---

எநகாலத்திலுமோதல்.

தேவசிநேகத்தின்மாதாவே பரிசுத்த மரியாயே யிடைவிடாமலடியேனுக்காக வும்முடைய திருக்குமாரனை மன்றாடி நா னொருகாலும் சாவானபாவத்தில்விழாம லென்னுயிர்க்காலமெல்லா மவரை யுமும் மையு மநந்தபத்தியோடே சேவித் தும் மோடேகூட மோக்ஷவிராச்சியத்தி லவ ருடையபேரின்பதரிசனத்தை யடையும் படிக்கு அவருடையவநுக்கிரகத்தையெ னக்குக்கேட்டருளும்.



# அர்ச்சியசிஷ்ட பூசை

## * விளக்கம்.

ஒன்றாகியமெய்யானகடவுளெல்லாவற்றையு முண்டையவராகி யவரனைத்தையுமாளுகினறவாண்மைவிளங்கவும், அவருக்கு நாங்கீழ்ப்படிந் துரியவணக்கத்தைச்செய்யவும், ஸதாபிக்கபபட்ட குருக்களாலியாதொரு ஞானவர்த்தத்தைக்காட்டும் புறச்சடங்கோடேலவ்கிகப்பொருளைத் தேவபலியாகும்படிக்குத் திருப்பொருளாகச் செய்தயினபு, அந்தப்பலியழிக்கப்பட்டுக் கடவுளுககுமாத்திரஞ் செய்யப்படுமபடைப்புப்பூசையெனறு சொல்லப்படும. இந்தமெய்யானபூசையானது வணக்கப்பூசை, தோத்திரப்பூசை, பாவப்பொறுத்தற் பூசை, வரமபெறுபூசை என நாலுவகையாகவகுக்கப்படும.

ஆண்டவராளுகையைக்காட்டச் செய்யப்படுவது வணக்கப்பூசை யெனவும, அவர் நமக்குததந்த நனறியையறிந் தவருக்குத்தோத்திரமாகச்செய்யப்படுவது தோத்திரப்பூசையெனவும, ஆண்டவர்கோபமாறவும பாவிகள்மேல மனமிரங்கவும அவர்கள் திருமபிமனஸதாபப்பட்டுப பாவப்பொறுத்தற்கு வேண்

---

* வேதவிளககம்-௰௫ம் அதி. ௱௭ம் பிரிவுமுதற் காண்க.

டினதெல்லாஞ் செய்யத்துணிவதற்கு ஆண்டவ ரவ ரவர்களுககு உதவிபுரியுமபடியாகச் செய்யப்படுவ து பாவப்பொறுத்தற்பூசை யெனவும , பகை படை பஞ்ச முதலிய துயர்கள்தீரவும, இஷடப்பிரசாதமு தலிய ஞான நனமைகளை யடையவும, ஆரோககிய முதலிய வெங்கீக நனமைகளைப் பெறவுஞ் செய்யப்ப டுவது வரமபெறு பூசை யெனவுமாம.



## பூசையின் மகத்துவம்.

அர்ச். - அகுஸதீனெனபவர் சொல்லுமாப்போலே திருச்சபையிலே நடககுமபூசைபபலியொப்புககொடு ககிறவருஞ்சர்வேசுரன் , ஒபபுககொடுககிறதுஞ் சர் வேசுரனுககு, ஒப்புககொடுககப்படுகிறவருஞ் சர்வே சுரன, ஒப்புககொடுககப்படுகிறதுஞ் சர்வேசுரனுக காக எனறதினாலே யிந்தப்பூசைபபலி யொருகாலுஞ் சர்வேசுரனுககுப் பிரியமில்லாமறபோகவுங்கூடாது. இதைவிடச் சர்வேசுரனுககுப்பிரியமானதொனறுமி ருககவுங்கூடாது.

இந்தப்பூசையினபலன சர்வலோக பாவத்தைப் போககவல்லதா யிருககிறதல்லாம லினனம்நேக கோடாகோடி யுலகத்தின் பாவங்களையும போ ககவல்லதாயிருககிறது. இத்தனைவல்லபமுள்ள பூ சை யொருநாளிலு மோரிடத்திலு மொருநேரத்திலு மாத்திரமொப்புககொடுககப்படாமல் எந்நாளுமெவ் விடத்திலு மெந்நேரமுந்தானே கொடுககப்படச்ச ர்வேசுரன திருவுளமானார். இப்படிப்பட்ட பூசை யு லகத்தி லில்லாவிட்டால் இப்பொழு துலகத்திலே ந டந்துவரு மககிரமத்தா லுலகமெல்லாம வெந்தழி ந்து சோதுங் கொமோராவெனற பட்டணங்களைப்

போலாகுமெனனத்தகுமே. அநீதநிறைந்த விந்த வுலகத்தினமேரிற் சர்வேசுரனுககுவருங்கோபத்தை யிந்தப்பலியொனறே மாற்றித் தயைவருவிககிறது. இந்தப்பூசையை யெல்லாருங்காணலாமெனகிறதும் ல்லாமல் எல்லாருந்தானேகுருவோடேகூட வொப்பு கொடுத்துச் சகலநனமையடையலாமெனகிறத்து வே யிந்தப்பூசைப்பலியின மகத்துவத்தை வர்ணித் துச்சொல்ல வொருவராலேயுங் கூடாது.

---

# பூசைகாணப்போகு மொழுங்கு.

நீ பூசைகாணப்போகையில் உனசிந்தனை பற்பல் காரியங்களிற் பலவாய்ப் பிரிந்தலையவொட்டாமலொ னறுபடுத்தி ஒரேநிலையாகநிறுத்த உனறுவியனறம ட்டு முந்தமுந்தபிரயாசப்படககடவாய். உனதிவ் வியவிரட்சகரானவர் தாமபலியாகப்போகிறதை நீ காணவுந் தமமோடு நீ யயிககியமாகவு முனனைககூப் பிடுகிறவினியசத்தமுன துகாதிற் கேட்கப்படுகிறதா கவெண்ணிககொள்ளுவாய்.

நீ கோயிலுககுப் போகுமபொழுது நமமுடைய ஆண்டவர் பட்டதிருப்பாடுகளுககுந் திருமரணத்து ககுங் கூடவிருககத் தேவமாதாவோடும மற்றப்பத் தியுள்ள ஸதிரீகளோடும நீயுங்கல்வாரிமலைககுப்போ கிறதாகச் சிந்தனைசெய்வாய். இரட்சகர் உனபா வங்களினிமித்தஞ்சிலுவையினமேரிற்பலியாகிறதற்கு அதை யுனககுமுனனுகக் சுமந்துகொண்டுபோகிரு ரெனறும அவருடைய பாடுகளுககெல்லா முனபா வங்களேகாரணமெனறும நினைத்துருகுவாய். நீகோ யிலுககுள்ளே பிரவேசிககுமபோது அந்தத்தேவா

லயத்துககுக கர்த்தரான சர்வேசுரனுடைய சந்நிதானத்திலே மகாவொடுககவணககத்தோ டுண்ணே மிகவுந் தாழ்ந்துககடவாய். அங்கே திவ்வியநற்கருணை ஸதாபகமபண்ணியிருந்தால முழந்தாளிட்டு, உனனிரட்சககருககுமகாயயபத்தியோடாராதனைசெய்வாய். தீர்த்தத்தைத்தொட்டுச் சிலுவைவரைந்துகொள்ளுகையில் உனபாவங்களுக்குப் பொறுத்தலையடையவுந் திவ்வியசெமமறிப்புருவையாகிய சேசுகிறீஸதுநாதரிரத்தத்தால நீ யுனபாவங்களிலே நினறு கழுவப்பட்டுச் சுத்தமாகவும மகாதாழ்ச்சியோடுவேண்டிககொண்டு அறபவிககினமுமினறி நீ தியானமபண்ணத்தகுமானவிடந்தேடி முழந்தாளிலேயிரு. அங்கேசுவாமிபிரத்தியட்சமாயிருககிறனெனறு உறுதியாகவிசுவசித்து, இந்தப்பரமபூசித பயங்கரமானபலியை நீ தககநற்கருத்தோடேகண்டு ஒபபுககொடுகக ஆண்டவரிரங்கித்தயைபுரியவேணுமெனறு வேண்டிககொள்ளுவாயாக.



## பூசைக்குமுன்
### ஆயத்தச்செபம.

கருணைநிறைந்த பிதாவே யிரக்கம் நிறைந்தகர்த்தாவே! பாவத்தாற் கெட்டழிந்த மனுஷசந்ததியை மீட்டிரட்சிக்கும்படி யும்முடைய ஏகசுதன் முன்னாலே கொடியவேதனைப்பட்டுச் சிலுவையிலுயிர்விடத் திருவுளமானது மல்லாமல் அவர்ப்பொழுது சிலுவையிலுமக் கொப்புக் கொடுத்தபலி தேவரீருக் கென்றென்றை

க்குஞ் செலுத்தப்பட்டிருக்கவும் நாங்களிறு ல்லடையவேண்டியபலனை யிடைவிடாதடையவு மிந்தப்பூசைப்பலியெந்நாளுந் திருச்சபையில் நிறைவேறும்படிச் சித்தமானீரோ. உமது மட்டற்றவல்லபமுமளவற்றஞானமுங் குறையற்றநன்மைத்தனமும் விளங்குகிறவாச்சரியமான விந்தப்பூசையி லடியோர் சாவதானத்தோடும் பயபத்தியோடு மிருக்கவும் உதிரஞ்சிந்தாத விந்தப்பலியைக்கொண்டு சிலுவையிற்செலுத்திய வுதிரப்பலியின்பேறுகளைக்குறையில்லாமற் கைக்கொள்ளவும் நுக்கிரகம் பண்ணியருளவேணுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

ஆ! மட்டற்றபிரதாபமுடைத்தான பிதாவே யடியேன் தேவரீருடைய கிருபாகடாட்சத்துக்கு அபாத்திரவானாயினு மும்முடைய நேசகுமாரனெனக்காகச் சிந்தின விலைமதியாத திருவிரத்தத்தைப் பார்த்து எனக்குத் தயைசெய்தருளும்.

ஆராதனைக்குப் பாத்திரமான கர்த்தாவே யுமது திவ்வியபூசையின் பலியைக்

காணவேணுமென்று உமதுபீடத்தையண்டிவருகிறேன். இந்தத்திவ்வியபலியினாலடியேனுக்கு வரவேணுமென்றுதேவரீர் சித்தமாயிருக்கிற நன்மைகளியாவையு நான்குறைவில்லாமலடையவும், அதற்குவிக்கினமாக வென்னிடத்திலுள்ள குற்றங்களையெல்லாம் பரிகரிக்கவும், தேவரீர் சித்தம்வைத்தருளவேணுமென்றும்மைமன்றாடுகிறேன்.

என்திவ்வியசேசுவே தேவரீருடையவினியகருணையைப்பெற வென்னிருதயத்தைத்தக்கதாக்கி யென்னுடைய பொறிகளைநன்னெறியிலே நிறுத்திப் பாவியானவடியேனுடையபாவங்களை யுமதுதிருவுதிரத்தாற்போக்கி யென்னாத்துமத்தைப் பரிசுத்தப்படுத்தியருளும்.

தயாபரனான சர்வேசுராதேவரீரடியேனுடையபாவங்களைப்பாராட்டாதேயும். தேவரீருக்குப் பொருந்தாதென்கிறதினாலே யதுகளை முழுதும்வெறுத்துத் தள்ளுகிறேன். யாராகிலு மெனக்குப் பொல்லாப்புச்செய்திருந்தாலவர்களுடைய

குற்றங்களை நான் நல்லமனதோடு பொறுத்துக்கொண்டு தேவரீரு மடியேனுடையபாவங்களைப்பொறுத்தருளவேணுமென்று மகாதாழ்ச்சியுடனே வேண்டிக்கொள்ளுகிறேன்.

என்மதுரயேசுவே! தேவரீரடியேனுக்காகமுழுது மும்மைப்பலியாகத் தந்தீரே. அவ்வண்ணமாய்த் தேவரீருடையதிருவுளத்தோ டென்கருத்தையு மொன்றுபடுத்தி யடியேனை முழுதுமுமக்குப் பலியாகக்கொடுக்கிறேன். ஆமென்சேசு.

---

## பூசை ஒப்புக்கொடுக்கிறசெபம்.

அகண்டமு நிர்மலமுமான திறித்துவ எகசர்வேசுரா எங்கள் நாதரான சேசுகிறீஸ்து பாடுபடுநாளுக்குமுதனாள் * இரவமுது செய்யும்பொழுதும், சிலுவைப்பீடத்திற்பலியாகும்பொழுதும், தேவரீருக்குக் கொடுத்தமாசற்ற பலியோடும், உலகமெங்குமுள்ள சகலகுருக்களாலொப்புக்கொடுக்கப்பட்டபலியோடும்,

* இராப்போசனம்.

இனியொப்புக்கொடுக்கப்படப்போகிற பலியோடும் நீசப்பாவியாயிருக்கிற வடியேனு மகாபத்தி நம்பிக்கையுடனேயு ந், தாழ்ச்சிவிநயத்துடனேயும், சேசுநாதருடையகருத்தோடும், திருச்சபையினுடையகருத்தோடும், என்கருத்தையுமேகரித்துக் குருவின்*கைங்கரியத்தைக்கொண்டிந்தப்பலியைத்தேவரீருக்குக் காணிக்கையாகவைக்கிறேன். ஆண்டவரே யுமது மகிமைப்பிரதாபத்துக் கர்ச்சனையாகவும், கர்த்தத்துவத்துக்குக் கப்பமாகவும், சேசுகிறீஸ்துவின் பாடுகளையெப்பொழுது நினைப்பூட்டும் † ஸ்மரணமாகவும், தேவமாதாமுதற் சகலவர்ச்சியசிஷ்டர்களுக்குச்சங்கையாகவும், சேசுகிறீஸ்துவின் மனுஷீகத்துக்கு மெப்பொழுதுங் கன்னிகையான அவர்திருத்தாயாருக்கும், சகலமான சம்மனசுகள் அர்ச்சியசிஷ்டர்களுக்கும், நீசப்பாவியாயிருக்கிறவடியேனுக்கும், இதுவரைக்குந்தேவரீர் செய்துவருகிறமட்டில்லாத வுபகாரங்களையும், இனி நித்தியமுஞ்செய்

* ஊழியம். † நினைப்பு.

யப்போகிறவுபகாரங்களையும் பற்றி நன்றியறிந்ததோத்திரமாகவுஞ் சீவித்திருக்கிறவர்கள் மரித்திருக்கிறவர்களான சகல விசுவாசிகளுடைய பாவப்பொறுத்தலுக்காகவும், அடியேனுடைய வெண்ணிறந்த பாவப்பொறுத்தலுக்காகவும், (இன்னாரின்னின்ன வுதவிசகாயமடையும்படிக்கும்) நானாருக்காகவேண்டிக்கொள்ள வேண்டியிருக்குமோ அவர்களெல்லாருக்காகவும், கடைசியாய் மரித்தவர்களிளைப்பாற்றியடையவும், உயிரோடிருக்கிறவர்கள் தேவரீரையறிந்து சிநேகித்திந்தப்பரதேசத்திலும்மைத்தோத்திரித்தபின் நித்தியமுந் தங்கள்சுயசீமையாகிய பரலோகத்திலும்மை வாழ்த்திஸ்துதித்து வணங்கும்படியாகவும், குருவின் கைங்கரியத்தைக்கொண் டடியேன் தேவரீருக்கொப்புக்கொடுக்கிறவிந்தப்பூசைப்பலியைத்தேவரீர்கையேற்றுக்கொண்டு நீசனாயிருக்கிறவடியேன் மன்றாட்டுக்குச் செவிகொடுத்தருள வேணுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன். இந்தம

னீருட்டுக்களையெல்லாம் உம்முடைய ஏகசுதனான சேசுநாதருடைய திருமுகத்தைப்பார்த்துத் தந்தருளும்.

ஆமென்சேசு.

---

## பூசை-ஒப்புக்கொடுக்க விசேஷகருத்து.

☞ மேற்சொல்லிய மந்திரத்தில விவரிக்கப்பட்ட சாதாரணகருத்துககளையலலாம லவனவன் தன் தன் னவசரங்களுககு ம்ந்தஸ்துககும் பத்திககுந் தககபடி விசேஷநற்கருத்துககளைககுறித்துப பூசையையொபபுககொடுககலாம். அதெபபடியெனில தனககுள்ளவிசேஷபாவககுணத்தைதச்செயித்து விலககி யதற்குவிரோதமான புண்ணியத்தைத் யநுசரிகக வேண்டியதேவ அநுககிரகத்தை யடைவதற்காகவும். தனககுநேரிடுகிறசோதனை பொலலாபபு ஆபத்துககளிலேநின்றிரட்சிககபபடுவதற்காகவும், தனககுவேண்டிய விசேஷதேவ உதவி யுபகாரத்தைக்கேட்பதற்காகவும, மரித்தவர்களி லியாதொருவர்ககு விசேஷமாயிளைபபாற்றி வருவிபபதற்காகவும , தேவசிநேகத்திலே நிலைமை நலலமரணத்துககாயத்த வரபபிரசாதங்க ளிவைமுதலியநனமைகளைப்பெறுதற்காகவுந் தனித்தனியே யொபபுககொடுககத்தகும.



# பூசைகாணும்வகை.

## பூசை ஆரம்பிக்கிறபோது.

ஆராதனைக்குப்பாத்திரமான எகதிறித்துவமே நீசப்பாவியாயிருக்கிறவடியேன் தேவரீருடையவுந்நதமகிமைப்பிரதாபசோபனத்துக்குச் செய்யவேண்டியபணிவிடைநமஸ்காரங்களைச் செய்யவேணுமென்கிற சுத்தகருத்துடனே யுமதுதிருநாமத்தைக்குறித்து இந்த வுந்நதபரமபூசையைக்காண்கிறேன். என் திவ்விய இரட்சகரே யென் னீடேற்றத்துக்காகக் கொடுக்கப்படுகிற விந்தமாட்சிமைபொருந்திய பலியைச்செலுத்துகிற குருவுடனேகூட நானுமென் கருத்திலேயேகரித்து இந்தப்பலியை யொப்புக் கொடுக்க வெனக்குவிடைகொடுத்தருளு

ம். என்பாவங்களுக்காகத் தேவரீர்கபால மலைமேற் சிலுவையில்றையுண்டு செலுத் தின இரத்தப்பலியை நான் கண்ணுற்க ண்டா லென்னிருதயத்தி லெத்தன்மையா ன தேவப்பற்றுதலுண்டாகத்தகுமோ அ த்தன்மையான வுத்தமகருத்தை யிரத்த ஞ்சிந்தாத பலியாகிய விந்தப்பூசைநே ரத்திலு மென்னிருதயத்திற் பிறப்பித்த ருளுஞ்சுவாமீ.

குரு-பாவசங்கிர்த்தனமந்திரஞ் சொல்லுகிறபோது.

என்சர்வேசுரா நான் தேவரீருக்குச்செ ய்தபாவத்துரோகங்களெல்லாந்தேவரீரு டையதிருச்சமூகத்திலே சங்கீர்த்தனம்ப ண்ணுகிறேன். நானென்சிந்தனைவாக்கு க்கிரியைகளினு லநேகபாவதோஷங்களை க்கட்டிக்கொண்டபடியினுலே கன்னிய ரெல்லாரிலுந் தூய்மையான பரிசுத்தக ன்னியாஸ்திரீயாகிய அர்ச்.-மரியாயி சக ல அர்ச்சியசிஷ்டர்கள் சமஸ்தவிசுவாசிக ள் இவர்கள்முன்பாக நான்பாவியென்று வெளிப்படுத்துகிறேன்.என்பாவமேஎன்

பாவமே என்பெரும்பாவமே ஆகையா லெப்போதுங் கன்னிகையாகிய அர்ச்.-மரியாயியையுஞ் சகல அர்ச்சியசிஷ்டர்களையு மெனக்காக ஆண்டவரைவேண்டிக் கொள்ள வேணுமென்று மன்றாடுகிறேன். என்னாண்டவரோ தயையோடேயென் மன்றாட்டைக்கேட்டுக்கொண்டு எனக்குப் பாவவிமோசனமும் பொறுத்தலு மிஷ்டப்பிரசாதமுந் தந்தருளவேணுமென் றும்மை மன்றாடுகிறேன்சுவாமீ.

குரு-சுவாமீகிருபையாயிருமெனகிற மந்திரஞ்சொல்லுகிறபோது.

எங்களாத்துமசிஷ்டிகரானகர்த்தாவே! உம்மாலேபடைக்கப்பட்ட வெங்களாத்துமங்கள்பேரிலிரக்கமாயிரும். தயாளசம்பூரணரானபிதாவே! யும்முடைய பிள்ளைகள்பேரிற்றயையாயிரும். எங்களிரட்சணியத்தின் காரணருமா யெங்களுக்காகப் பலியானவருமாயிருக்கிற கர்த்தாவே யுமது திருவிரத்தத்தினாலுந் திருமரணத்தினாலும்வந்தபலன்களை யெங்களுக்குக் கட்டளையிட்டருளும். மகாநேசத்துக்குரிய

மதுரசேசுவே யெங்கள் நிர்ப்பாக்கியத்தைக் கண்டிரங்கி யெங்கள் பாவங்களைப் பொறுத்தருளுஞ்சுவாமீ.

குரு-சமமன்சுகள்பாடின
தேவஸ்துதிசொல்லுகிறபோது.

உந்நதபரமண்டலத்திற் சர்வேசுரனுக்குத் தோத்திரமும் பூலோகத்திற் சுத்தமனதுள்ளவர்களுக்குச் சமாதானமும் உண்டாகக்கடவது. ஆண்டவரே! இராசாக்களுக் கதிபதிராசாவே! உந்நதபரமகடவுளே! மெய்யானதேவனே! சர்வவல்லபமுள்ளபிதாவே தேவரீரைவாழ்த்தி ஸ்துதித்து ஆராதித்துவணங்கி நமஸ்கரித்து, மிகுந்ததாழ்ச்சி விநயத்துடனே யுமக்குநன்றியறிந்ததொத்திரம் பண்ணுகிறோம். ஆராதனைக்குப்பாத்திரமானசேசுநாதா, பிதாவின் ஏககுமாரா, சர்வசுயம்பரகர்த்தரான்சர்வேசுர உலகத்தினுடைய பாவங்களைப்போக்கவந்த சர்வேசுரனுடைய திவ்விய செம்மறிப்புருவையே, எங்கள்பேரி லிரக்கமாயிரும். பரமண்டலத்திலும்முடைய பிதாவோடேகூட விராச்சிய

பாரம்பண்ணுகிறநீ ரெங்கள்பேரிலேயும
துகருணைக்கண்ணைத்திருப்பும். எங்கள்கர்
த்தரானசேசுவே தேவரீரொருவர்மாத்தி
ரமேபிதாவினுடையமகிமைச்சோபனத்
தில் இஸ்பிரீத்துசாந்துவோடுகூட முடி
வற்றதோத்திரத்துக்குப் பாத்திரமானவ
ருமாய் மட்டற்றபரிசுத்தருமா யளவற்ற
வல்லபமுள்ளவருமாயிருக்கையில் தேவரீ
ரொருவர்மாத்திரமே யெங்களையிரட்சிக்
கக்கூடுமென்கிறதினா லெங்களையிரட்சித்
தருளும்.

செபம.

என்னாண்டவரே அர்ச். தேவமாதாவினு
டைய மன்றாட்டையு நாங்கள் கொண்டா
டுகிற அர்ச்சியசிஷ்டர்களுடைய மன்றா
ட்டையுந் தேவரீர் எற்றுக்கொண்டு குரு
வானவர் தமக்காகவும் எங்களுக்காகவுஞ்
செய்யும்வேண்டுதலையும் நாளுருக்காக
வேண்டிக்கொள்ள வேண்டியிருக்குமோ
அவர்கள்கேட்கிற மன்றாட்டையுங் கட்ட
ளை பண்ணியருளும். பின்னு மென்னா
ண்டவரே நானுமவர்களு மோட்சக்கரை

சே

சேர எங்களுக்குவேண்டிய வரப்பிரசாத ங்களையெல்லாஞ் சேசுகிறீஸ்து நாதருடைய திருமுகத்தைப்பார்த்துத் தந்தருளும்.

குரு.-நிருபமவாசிக்கிறபொழுது.

என்சர்வேசுரா உமது சத்தியவேதத்தையறியாத வநேகமாயிரம் பேர்களுக்குள்ளே யடியேனைத் தெரிந்தெடுத்துக்கொண் டுமது திருவேதத்தை நானறியக் கிருபைசெய்தீர். இந்தத் திவ்வியவேதத்தை நான்முழுமனதோடே கைக்கொண்டு தீர்க்கதரிசிகளைக்கொண்டு தேவரீரறிவித்த சத்தியங்களையெல்லா மிகுந்த பூச்சியத்துடனே செவிகொடுத்துக் கேட்கிறதுமல்லாமல் அதுகள்தேவ வசனங்களாகையால் மிகவும் பணிந்தமனதோடு அதுசளைவந்தித்துமனமகிழ்ச்சியோடே அந்தவசனங்கள் நிறைவேறுகின்றதைக் கண்டு களிகூருகிறேன்.

என்சர்வேசுரா பூர்வவேதத்தி லிருந்த அர்ச்சியசிஷ்டர்களைப்போலே நானும் பரிசுத்தவிருதயங்கொண்டிருந்தால்

ல்லோதாவினை நான்பிதாப்பிதாக்களைப் போலே யும்மையபேட்சித்துத் தீர்க்க தரிசிகளைப்போ லும்மையறிந்து நமஸ்கரித்து அப்போஸ்தலர்களைப்போ லும்மைச்சிநேகித்து முழுதும் உமதுபாரிசமாயிருக்கக்கடவேனாக.

குரு - சுவிசேஷம வாசிககிறபோது.

என்சர்வேசுரா இனி நான் நடக்கவேண்டியவழியை அப்போஸ்தலருந் தீர்க்க தரிசிகளுமல்ல உம்முடைய ஏகசுதன்தானே எனக்குப்படிப்பிப்பவர், அவருடைய திருவசனங்களைத்தானே கேட்கப்போகிறேன். ஆனால் ஐயையோ என்னாண்டவராகியசேசுவே இந்தவசனங்களும்முடையதிருவசனங்களென்று விசுவசித்தும் என்விசுவாசத்துக்கொத்தபிரகாரம் நடவாமற்போனேனாகில்எனக்கென்னபிரயோசனம். உமது திருச்சமுகத்திலே நான்தீர்வைக்கு வரும்போது என்னிடத்திலே தேவசிநேகமும் நற்கிரியையுமில்லாமல் விசுவாசமாத்திர மிருந்தா லெனக்குவரும்பலனென்ன. நான்விசுவசித்தாலும் வி

சுவசியாதவனைப்போலவும் ஒன்றிலும உமதுசுவிசேஷத்துக்கு விரோதமான மற்றொன்றை விசுவசிக்கிறவனைப்போலவும் நடந்துவருகிறேன். என்சர்வேசுரா உமதுபோதனைக்கும் எனது நடக்கைக்குமுண்டாயிருக்கிற மாறுத விரோதத்துக்குத்தக்கபடி யென்னைத் தீர்வையிடாதேயும். என்னாண்டவரே நான்முழுமனதோடுமதுசத்தியத்தை விசுவசிக்கிறேன், என் விசுவாசத்துக்கொத்தவண்ணம் நானடக்க வெனக்குவேண்டிய தைரியமும் பலமுங் கட்டளைபண்ணியருளும். ஆண்டவரே யதினாலுமக்கே ஸ்துதியுந்தோத்திரமுமுண்டாம்.

குரு - விசுவாசமந்திரஞ்
சொல்லுகிறபோது.

சகலத்தையும் படைத்தவருமாய்ச் சர்வவல்லபமுள்ள பிதாவுமாயிருக்கிற ஏக சர்வேசுரனை விசுவசிக்கிறேன். அர்ச்சியசிஷ்டதன்மையிலும் வல்லபத்திலும் நித்தியத்துவத்திலும் தேவத்துவத்திலும் பிதாவுக்குச் சரிசமானமான ஏகசுதனு

மாய் நம்முடைய ஆண்டவருமாயிருக்கி
ற சேசுகிறீஸ்துநாதரையும் விசுவசிக்கி
றேன். இவர் மனுஷர்பேரில்வைத்தபட்
சமிகுதியால் மனுஷாவதாரமெடுத்துக்
கடினபாடுபட்டு மரித்து உயிர்த்தெழுந்
தருளிமோட்சத்துக்கு ஆரோகணமானா
ரென்றும் இனிமனுஷரை நடுக்கேட்கவெ
ழுந்தருளிவருவாரென்றும் பிற்பாடு நித்
தியகாலமு முடிவற்றபாக்கியமான இரா
ச்சியபாரம் பண்ணிக்கொண் டிருப்பா
ரென்றும் உறுதியாகவிசுவசிக்கிறேன். பி
தாவுக்கும் சுதனுக்குஞ் சரிசமானதேவ
னாய் அவர்களிடத்திலேநின்றுபுறப்பட்டு
அவர்களோடொத்த மகிமையையு மர்ச்
சனையையும் உடையவருமாய் நித்திய சி
வியத்தி னூறணியுமாய் மனுஷரையர்ச்
சிக்குங் காரணருமாய்த் தீர்க்கதரிசிகளுக்
கு ஞானங்கொடுக்கிறவருமா யிருக்கிற
இஸ்பிரீத்துசாந்துவையும் விசுவசிக்கிறே
ன். அப்போஸ்தலர்களாற் போதிக்கப்ப
ட்ட எக்கத்தோலிக்குத்திருச்சபையையு
ம் பாவப்பொறுத்தலுக்கான ஞானஸ்நா

னத்தையும் விசுவசிக்கிறேன். சர்வேசுர னுடையகிருபையினால் மரித்தவர்களிடத் திலேநின்றெழுந்து நித்தியசீவியத்தை யடைவேனென்று முழுமனதோடே ந ம்பிக்கொண்டிருக்கிறேன்.

ஆமென்சேசு.

குரு-அப்பத்தைக்கையிலேந்திக்காணிக்கையாக வொப்புக்கொடுக்கிறபோது.

மட்டற்ற வல்லபத்தையு மளவற்ற பரி சுத்ததன்மையையுங் கொண்டிருக்கிற நித்தியசர்வேசுரா நானுமது திருச்சமூக த்திலேநிற்க எவ்வளவு அபாத்திரனாயிருந் தாலு மென்னுடைய இரட்சகராகிய சே சுகிறீஸ்துவானவ ரிந்தப்பலியை யுண்டு பண்ணினபோதும் எனக்காக விந்தப்பீ டத்தின்பேரி லின்னம் பலியாகப்போகி றவிந்தத்தருணத்திலும் அவருக்குள்ள க ருத்துடனே யென்கருத்தையு மொன்றா கக்கூட்டிக் குருவின் கைங்கரியத்தைக் கொண்டு உமக்கிந்தப்பலியை யொப்பு க்கொடுக்கிறேன். அடியேன்மேலுஞ் ச ர்வபடைப்புண்ட வஸ்துக்கள்பேரிலுந்

தேவரீருக்குள்ள மேலான கர்த்தத்துவத்தையறிந்து நமஸ்கரிக்கவும், என்பாவங்களுக்குப் பொறுத்தல்டையவும் எனக்கு நீர்செய்த வெண்ணிறந்த வுபகாரங்களுக்கெல்லா நன்றியறிந்ததோத்திரமாகவும், தேவரீருக்கிந்தப்பலியையொப்புக்கொடுக்கிறேன் சுவாமீ.

கடைசியா யென்சர்வேசுரா சகலபாவப்பொறுத்தலுக்காகப் பலியானவருமாய் எல்லாத்திலும்பரிசுத்தருமா யிருக்கிற வும்முடைய ஏகசுதனுடைய புண்ணியங்களைக்குறித்துப் பாவிகளுக்காகத் தந்தருளப்பட்ட இரட்சணியத்தின் இஷ்டப்பிரசாதப்பலன்களை யடியேனும் என் தந்தைதாய் உறவின்முறையார் உபகாரிகள் சினேகிதர் பகைவர் எல்லோரும் அடையும்படிக்கும் இந்தத்திவ்வியபலியைத்தேவரீருக்கொப்புக்கொடுக்கிறேன்

பின்னும் அடியேன் தேவரீருக்கொப்புக்கொடுக்கிற விந்தப் பூசையின்பலனை அர்ச்சியசிஷ்டபாப்பு மேற்றிராணியார் குருக்கள் இராசாக்கள்பிரபுக்கள் சகலமா

னகிறீஸ்துவர்களு மடையப்பண்ணியரு ளும்.

என்னாண்டவரே யும்முடைய திருக்கு மாரன் பேறுபெற்ற பலன்களைப்பார்த் து, உத்தரிக்கிற ஸ்தலத்திலேயிருக்கிற ஆ த்துமாக்கள்மேலிரங்கியவர்களுக்கு இளை ப்பாற்றியும் பிரகாசமுஞ் சமாதானமு முள்ள இடத்தைக் கட்டளையிட்டருளும்.

என்சர்வேசுரா உம்முடைய சத்துரா திகளுக்குமென்விரோதிகளுக்குந் தயை புரிந்தருளும். அஞ்ஞானிகள் பதிதர் பொல்லாத கிறீஸ்துவர்கள்பேரிலு மிரக் கமாயிரும். என்னை யுபத்திரவப்படுத்து கிறவர்களை யாசீர்வதித்தருளும். அவர்க ளெனக்குச் செய்கிறகுற்றங்களை நான்ந ல்லமனதோடு பொறுத்துக்கொள்ளுகிற துபோலே யடியேன்தேவரீருக்குச் செ ய்தகுற்றங்களெல்லாவற்றையும் பொறு த்தருளும்.

பலிக்கு ஆயத்தமானசெபத்தைக்
குருவானவர்சொல்லுகிறபோது.

சம்மனசுகளுக்கும் மனுஷருக்கும் அ திபதியிராசாவானவர் இதோவிந்தப்பீடத்

தின்மே லெழுந்தருளிவரப்போகிருர். உலக்காரியங்களின்மே லென்சிந்தைகவிழ்ந் துழலாமல் உம்மைமாத்திரமே நாடியிருக்க ஆண்டவமே யெனக்குமதுஞான த்தை நிரம்பத்தந்தருளும். பரலோகத் துக்கும் பூலோகத்துக்கும் பரமகர்த்தருமாய்ச் சர்வவல்லபமுள்ளவருமாயிருக்கிற நித்தியபிதாவே நானெக்காலத்திலுமெவ்விடத்திலும் உம்மைவாழ்த்தி ஸ்துதித் துக்கொண்டுவர வெனக்குக் கடனுண்டே. அவ்விதமாகத் தேவரீரை யிடைவிடாம லாராதித்துக்கொண்டு வரும்படிக் குச் சேசுகிறீஸ்துநாதரோடு ஐக்கியப்படுவதைவிட நீதமும் உத்தமமுமானதொன்றுங்காணேன்சுவாமீ. சகலமுத்திப்பேறுபெற்றவர்களும்வரைக்கொண்டுதேவரீருக்கு அர்ச்சனைபண்ணுகிருர்கள். சகலசம்மனசுகளும் பூசித அச்சத்தோடு நடுக்கமுற்றுத் தங்களிலொருமித்து அவரைக்கொண்டு தேவரீரைஸ்துதித்துப் புகழுகிருர்கள். ஆண்டவமே எங்கள்ற்பபுகழையந்தச்சம்மனசுகளுடைய திருப்புக

ஷோ டொன்ருகக்கூட்டித் தேவரீருக்கு க் காணிக்கையாய்வைக்க எங்களுக்கு உத் தாரந்தந்தருளும்.

குரு-பரிசுத்தர்பரிசுத்தர் பரிசுத்தரொன் னுந் திருப்புகழ் கூறுகிறபோது.

நாங்கள் சந்தோஷித்தினு லகமகிழ்ந் து பிரமித்துத் தளத்துக்குக்கர்த்தனுகிய தேவன் பரிசுத்தர் பரிசுத்தர் பரிசுத்தரொ ன்றும் அவருடையமகிமைப்பிரதாப மு லகமெங்கு நிறைந்திருக்கிறதென்றுஞ் ச ம்மனசுகளும் மூத்திப்பேறுபெற்றவர்க ளு மவரைப்பரலோகத்திலே ஸ்துதிக்கி றதுபோலே நாங்களு மவரைப்புகழக்க டவோமாக. பிதாவுக்குச்சரிசமான தேவ னுயிருந்தும் பிதாவினு லனுப்பப்பட்டு ப் பூலோகத்தி லெழுந்தருளிவருகிறவரு க்கும் மாருந்தோத்திர முண்டாகக்கட வதென்னுந் தேவஸ்துதியைக் கூறுவோ மாக.

பரிசுத்தரொனகிறமந்திரஞ் சொன்னபிறகு.

மட்டற்றதயைநிறைந்த பிதாவே தே வரீருக்கு ஏகசுதனுமா யெங்களாண்டவ

ருமாயிருக்கிற சேசுகிறீஸ்துநாதருடை
ய திருமுகத்தைப்பார்த்து நாங்கள்தேவ
ரீருக்குக்கொடுக்கிற விந்தக் காணிக்கை
யைக் கையேற்றுக்கொண்டுசத்தியசாதா
ரணச்சபையாகிய கத்தோலிக்குத்திருச்ச
பையையும் அதற்குப்பிரத்தியக்ஷ தலைவ
ராகிய அர்ச்.-பாப்பானவரையுமேற்றிரா
ணிமார்களையுஞ் சகலவிசுவாசிகளையும் ஆ
ண்டளித்துக் காத்தருளவேணுமென்று
தேவரீரைமன்றாடுகிறோம்.

பின்னையு மெங்கள் தந்தைதாய் உறவி
ன்முறையார் சினேகிதர் உபகாரிகள் ப
கையாளிகளுக்கும் இந்தத்திவ்விய பூசை
யைக் கேட்கிறவர்களுக்கும் விசேஷமா
ய் (இன்னாரின்னாருக்கும்) வேண்டியவுத
விசகாயங்களைக் கட்டளையிட்டருளுஞ் சு
வாமீ. நாங்கள்கேட்கிறமன்றாட்டுத் தே
வரீருக் கதிகபிரியமாகும்படிக்கு அர்ச்.-
தேவமாதா அப்போஸ்தலர் வேதசாட்சி
க ளிவர்களுடைய மன்றாட்டுக்களுடனே
எங்கள் மன்றாட்டுக்களையுங்கூட்டித் தே
வரீருக்குக் காணிக்கையாகவைக்கிறோம்.

முன்னாள் பிதாப்பிதாக்களுலகவிரட்சக ரெப்போது வருவாரோவென்று ஆவலோடு காத்துக்கொண் டிருந்ததுபோலே யிப்போதீ நானுமிவரிந்தப்பீடத்தின்மே லெப்போ தெழுந்தருளிவருவாரோவென்று மிகுந்தபத்தி ஆசையோடே காத்திராமலிருப்பேனோ அவர்களிடத்திலே விளங்கினவிசுவாசமுந் தேவசினேகமு மென்னிடத்திலும் விளங்காதிருக்குமோ.

ஆண்டவராயிருக்கிறசேசுகிறீஸ்துவே உலோகபாவங்களைப் போக்குகிறவரே எழுந்தருளிவாரும். உம்முடைய அற்புதங்களில்மேலானவற்புதமாகிய இந்தப்பரம இரகசியத்தைநிறைவேற்றவாரும். இதோ உலோகத்தினுடையபாவங்களைப் போக்குகிறசர்வேசுரனுடைய திவ்வியசெம்மறிப்புருவையானவ ரெழுந்தருளிவருகிறார். என்னையுண்டாக்கி யிரட்சித்த கர்த்தருன்னதமோக்ஷத்தினின் றென்னைப்பற்றிப் பலியாயிறங்கிவருகிறார். என்னுத்தும மே பத்தியோ டவஸ்துதித்தாராதிப்பாயாக.



குரு - தேவநற்கருணை யெழுந்தருளப்
பண்ணுகிறபோது.

அவதரித்தவார்த்தையே திவ்வியசேசுவே மெய்யானசேதவனு மெய்யானமனுஷனுமொன்ருனவரோதேவரீரிந்தப்பீடத்தின்பேரில் மெய்யாகவேயெழுந்தருளிவந்திருக்கிறீரொன்று உறுதியாகவிசுவசித்து மிகுந்ததாழ்ச்சியோடு வணங்கியாராதித்து முழுமனதோடும்மை யபேட்சித்து நேசிக்கிறேன். என்மேல்வைத்த நிகரில்லாத அன்பினுல் தேவரீ ரிந்தப்பீடத்தின்மேலெழுந்தருளிவந்தமையால் என்னைமுழுது முமக்குத் தேவவசீகரம்பண்ணுகிறேன்சுவாமீ.

சகல மனுஷருக்காகத் தேவரீர்சிந்தின இந்த விலைமதியாத திருவிரத்தத்தை

யாராதனைபண்ணுகிறேன். என்சர்வேசு ரா எனக்காகச்சிந்தின விந்தத்திருவிரத் தம் வீண்போகாதென்று நம்புகிறேன். உமது திருவிரத்தத்தின் பலன்களை நான டையும்பொருட்டாக வநுக்கிரகம்பண் ணியருளும். மகா அன்புக்குரிய என்திவ் வியசேசுவே எனக்காகவும்முடைய இந் தத் திருவிரத்தத்தைச் சிந்த உண்டாயி ருந்த அளவில்லாத வுமது சினேகத்துக் கு நன்றியறிந்ததோத்திரமாக நானுமெ ன்னிரத்தத்தையெல்லாந் தேவரீருக்குமு ழுதுமொப்புக்கொடுக்கிறேன்சுவாமீ.

தேவ நற்கருணை
எழுந்தருளபபண்ணினபினபு,

என்னாண்டவரோ! தேவரீர்செய்த இந் தவற்புதத்தை நான்கண்ணாற்கண்டிருந்து ந் தேவரீருக் கேலாத் துரோகங்களைச்செ ய்யத்துணித்தேனாகில் என்னக்கிரமமும் நன்றிகெட்ட தன்மையும்இவ்வளவென்று சொல்லிமுடியுமோ?இந்தப்பூசிதமான ப விச்சடங்குகளைக்கொண்டுதவேரீரெனக்கு க்காட்டுகிறவும்முடையபாடுகளின் கடின

வேதனைகளையும் உத்தாநத்தின் ஒட்டோலகத்தையும் நாமொருபோதும்மறப்பதில்லைசுவாமீ. அடிகளாற்கிழிந்துதெறிபட்டவுமது திருச்சரீரமும் எங்களுக்காகச் சிந்தினதிருவிரத்தமும் இதோ என்கண்முன்பாக விந்தப்பீடத்தின்மேற் பிரத்தியட்சமாயெழுந்தருளியிருக்கிறதாமே. நித்தியாதந்த மகிமைப்பிரதாபமுள்ள பிதாவே இதோதேவரீர்சித்தமிரங்கி யடியோர்களுக்குத் தந்தருளின மாசற்றசெம்மறிப்புருவையைத் தேவரீருக்கு மெய்யாகவே பலியாக வொப்புக்கொடுக்கிறோம்.

முன்னாள் அபேல் அபிராம் மெல்க்கிசதேக்கென்கிற மகாத்துமாக்கள் செலுத்தின பலியெல்லாம் இந்தமெய்யான பலியின் குறிப்பாயிருந்ததொழிய வேறல்ல. உமதுநித்திய நேசசாரணசுதனுமாயெங்களாண்டவருமாயிருக்கிற சேசுகிறீஸ்து ஒருவர்மாத்திரமே யுமதுபீடத்துக் கியோக்கியமான பலியாயிருக்கிறார். நாங்கள்வரைத்தானே தேவரீருக்குப் பலியாகவொப்புக்கொடுக்கிறோம்.

இந்தவுந்நதபலியில் தங்கள் தங்கள்மன மொழிகளால் ஒன்றித்திருக்கிறவர்களெல்லாரும் அதினால்வரும்பலனை யடையக்கடவார்கள்.

என்றாண்டவரே திருச்சபையில் மரித்தசமஸ்தவிசுவாசிகளுடைய ஆத்துமங்களுக்கும் இந்தத்திவ்விய பலியின்பலன் பங்குண்டாயிருக்கக்கடவது. விசேஷமாயிந்தத் திவ்வியபலியைப்பார்த்து (இன்னாரின்னாருடைய) ஆத்துமங்களின் வேதனையை நீக்கி யவர்களுக்கு இளைப்பாற்றியைக் கட்டளையிட்டருளும்.

அநந்தகாருண்ணியரான பிதாவே இனியொருநாளெங்களுக்கும் இந்தவுபகாரத்தைக் கட்டளையிட்டு நித்தியகாலம்நாங்கள் அப்போஸ்தலர் வேதசாட்சிகள்சகல அர்ச்சியசிஷ்டர்களுடனேகூடத்தேவரீரைச்சினேகித்துஸ்துதித்துத்தோத்திரித்துக்கொண்டிருக்கும்படியா யெங்களுக்கநுக்கிரகம் பண்ணியருளும்.

குரு- பரமண்டலமந்திரஞ் சொல்லுகிறபோது.

என்சர்வேசுரா தேவரீரெனக்குப் பி

தாவாயிருக்கிறதிறு லெனக் கெத்தனை யோபாக்கியம். தேவரீர் வீற்றிருக்கிற மோக்ஷ இராச்சியமேயொருநாளென்குடியிருப்பாகுமென்று நினைக்கும்போது எனக்கெத்தனையோ அகமகிழ்ச்சி. உமது திருநாம முலகமெங்கும் ஸ்துதிபெறக்கடவது. சகலமனுஷிருதயத்திலு நினைவிலும் ஏகாதிபதியாய் நின்றாண்டருளும். உம்முடையபிள்ளைகளுக்குவேண்டிய ஆத்துமசரீரவுணவுகள் குறைபடவொட்டாதேயும். புறத்தியாருடையகுற்றங்களை நாங்கள் முழுமனதோடு பொறுத்துக்கொள்ளுகிறோம், தேவரீருமெங்கள் குற்றங்களைப்பொறுத்தருளும். இந்தநிர்ப்பாக்கியநிறைந்த வுலகத்தில் நாங்கள்சீவித்திருக்குமட்டு மெங்களையடர்ந்துவருஞ் சோதனையில் நாங்கள்கப்பட்டு மோசம்போகவொட்டாதேயும். சகலகேட்டிலுங்கொடியகேடாகிய பாவத்தி லெங்களை விழவொட்டாமற் காத்திரட்சியும். மற்றச்சகல பொல்லாங்குகளையு மகற்றிநீக்கக் கிருபைசெய்தருளுஞ்சுவாமீ.

ஆமென்சேசு

குரு-உலோகபாவங்களைப போக்குகிற
சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையே
யெனகிறமந்திரஞ்சொல்லியபிழைதட்டிக்
கொள்ளுகிறபோது.

எனக்காகப் பலியான சர்வேசுரனுடைய திவ்வியசெம்மறிப்புருவையேயென்மே லிரக்கமாயிரும். என்னிரட்சணியத்துக்காக வொப்புக்கொடுக்கப்பட்ட ஆராதிஷ்டபலியேயென்னை இரட்சித்துக்கொள்ளும். பிதாவினிடத்திலெனக்காக மனுப்பேசும் பரமகர்த்தரே யும்முடைய பிதாவினிடத்திலெனக்குவேண்டிய இஷ்டப்பிரசாதத்தை நான்டையும்படிசெய்து உமதுசமாதானத்தை யெனக்குத்தந்தருளும்.

† குரு - தேவநற்கருணை
யுட்கொள்ளுகிறபோது.

என்னுத்துமநேசரான இரட்சகரே சுத்தவிருதயமும் உருக்கமுள்ளபத்தியுமேவிட்டிருல் நாள்தோறுந் தேவரீருடைய திவ்வியநற்கருணையை யுட்கொள்ளவருகிற பாக்கியவான்களில் நானுமொருவனுயிருந்தால்லவோ வெனக்கினிய ஆந

† தேவநற்கருணைவாங்கிறல் முனணம்யதற்குரிய செபஞ்செபிககவும்.

ர்த்தமாகும். இந்தத்தருணத்தி லும்மை யென்னிருதயத்தி லடைந்துவணங்கி நமஸ்கரித்து என் அவசரங்களையெல்லா மு மக்குவெளியாக்கி மெய்யாகவே தேவரீரையுட்கொள்ளுகிற பாக்கியவான்களுக்குத் தேவரீர்கொடுத்தருளுகிற இஷ்டப் பிரசாதங்களுக்கு நானும் பங்காளியானு லெனக்கெத்தனையோ நன்மை! ஆனுலென்கர்த்தரே நான்முழுதும் அபாத்திரனுயிருக்கிறபடியினுலென் னுத்துமத்தின்குறைகளைத்தீர்த்தருளும். நான்செய்தபாவதோஷங்களெல்லாம் பொறுத்தருளும். தேவரீருக்குப் பொருந்தாதென்கிறதினுல் துகளையருவருத்துத் தள்ளுகிறேன். நான் உம்மோடு ஐக்கியமாக வேணுமென்று மிகவும் அபேட்சிக்கிற வுண்மையான என்னுசையைக் கையேற்றுக்கொள்ளும். என்னை யுமதுகடைக்கண்ணுற்பார்த்துச் சுத்திகரித்தருளும். தாமதமின்றியே யும்மைநானுரியமுறையோடுட்கொள்ளவென்னை ஆயத்தப்படுத் தும். அந்தப்பாக்கியமான நாள் வருகிறதுக்குள்ளாகக் கு

ருவானவர் தேவநற்கருணையை யுட்கொண்டதினு லிந்தத் திவ்வியபூசையைக்காண்கிற சகல விசுவாசிகளுக்கும் வரவேண்டியபல னடியேனுக்கும் பங்குண்டாயிருக்கக் கிருபைபண்ணியருளவேணுமென்று தேவரீரைமன்றாடுகிறேன். இந்தத் தேவத்திரவிய அநுமானத்தின்பலத்தினுலென்விசுவாசத்தை வளரப்பண்ணும். என்னிடத்திலுள்ள அன்பைச் சுத்தமாக்கும். நானும்மையேநாடி யுமக்காகவே சீவித்திருக்கும்படி யுமது அன்பையெனக்கு நிறையக்கொடுத்தருளும்.

குரு - கடைசிச் செபஞ்
சொல்லுகிறபோது.

என்கர்த்தரோதேவரீரொன்னுடையஇரட்சணியத்துக்காகப்பலியானதினுலென்னைமுழுதுமுமதுதோத்திரத்துக்குப்பலியாகவொப்புக்கொடுக்கிறேன். உமக்குப்பலியானவென்னை யுமது சித்தத்துககொத்தவண்ணமாய்நடத்தும். நான் நுபவிக்கவேணுமென்று தேவரீர் சித்தமாயிருக்கிற துன்பதுரிதங்களை முழுமனதோடு

அங்கீகரிக்கிறேன். அதுகள் தேவரீர்கை யிலிருந்து வருகிறபடியினாலே யதுகளை வாழ்த்திக் கையேற்றுக்கொண்டு தேவரீருடைய துன்பதுரிதங்களோ டொன்றாகக்கூட்டி யுமக்கொப்புக்கொடுக்கிறேன்.

இந்தத்திவ்விய பூசையின்பலனா லென்னைச்சுத்திகரித்தருளும். இனியற்பபாவங்களையும் அருவருத்துத்தள்ளுவேன். விசேஷமா யென்னிடத்திலிருக்கிற பிரதான துர்க்குணத்தினால் மேற்கொள்ளுகிற பாவத்தில்விழாதபடிக் கெச்சரிக்கையாயிருப்பேன். உமதுதிருக்கற்பனைகளின்படியே பிரமாணிக்கமாய் நடக்கவருந்துவேன். உமது திருக்கற்பனைகளை மீறுகிறதைவிடச் சகலதுன்பதுரிதங்களையும் நுபவிக்கவு முயிரைமுதலாயிழக்கவுந் துணிந்திருக்கிறேன்சுவாமீ.

குரு - ஆசீர்வாதங்
கொடுக்கிறபோது.

என்சர்வேசுரா நான்பண்ணின விந்த நல்லபிரதிக்கினைகளை யாசீர்வதித்தருளும். பின்னையு மும்முடைய ஸதானுபதி

யாகிய குருவின்கையாலெங்களையாசீர்வ
தித்தருளும். அந்தவாசீர்வாதத்தின் பல
ன் நிரந்தரமெங்கள்மேற் குடிகொண்டி
ருக்கக்கடவது. பிதாவுடையவுஞ் சுதனு
டையவும் இஸ்பிரீத்துசாந்துவுடையவும்
நாமத்தினாலே ஆமென்சேசு.

குரு-சடைசிச்சுவிசேஷம்
வாசிக்கிறபோது.

திவ்வியவார்த்தையுமாய்ப் பிதாவினு
டைய ஏககுமாரனுமாய் மோட்சவழியை
யடியோர்களுக்குக் காண்பிக்கப் பரலோ
கத்திலேநின் றெழுந்தருளிவந்து இவ்வுல
கத்துக்குப் பிரகாசமுமாயிருக்கிற சேசு
வே தேவரீர்பிதாவினா லனுப்பப்பட்டி
ரொன் றேற்றுக்கொள்ளாமற் பிறக்கணித்
துத்தள்ளிவிட்டு நித்தியகேட்டுக் குள்ளா
ன அவிசுவாசிகளைப்போலே நானாகாத
படிக்குக் காத்தருளும். தேவரீர் தந்தரு
ளவந்த சர்வேசுரனுடைய பிள்ளைகளெ
ன்கிற மகிமையானசுவீகரத்துக்குப் பங்
காளிகளாகிறதைப் பார்க்கிலும் பசாசி
ன் டிமைகளாகிறது தாவிளையென்றெண்

ணின அந்தநிர்ப்பாக்கியருடைய குருட்டாட்டத்திலே நானும் விழாதபடிக்குக் காப்பாற்றி யிரட்சியுஞ்சுவாமீ.

அவதரித்தவார்த்தையே யும்மைமகாதாழ்ச்சிவிநயத்துடனேவணங்கிநமஸ்கரிக்கிறேன். நீரென்னுடைய கர்த்தாவுமாய்ச் சகலமனுஷரையு மிரட்சிக்க மனுஷனான தேவனுமாயிருக்கிறதினாலே நான் அர்ச்சியசிஷ்டனாகவும் உம்மைநிரந்தரம் பரலோகத்திற் றரிசித்திருக்கவும் வேண்டியவரப்பிரசாதங்களைக் கட்டளையிடுவீரென் றுறுதியாகவிசுவசித்து உம்முடையபேரில் என்நம்பிக்கையாவும் வைத்திருக்கிறேன்சுவாமீ. ஆமென்சேசு.

பூசைமுடிந்தபினசெபம்.

ஆண்டவரே யிந்தப்பூசைகாண்கிறபாக்கிய மநேகம்பேர்களுக்குக் கிடையாமலிருக்க வடியேனுக்குக் கிடைக்கத்தயைபுரிந்ததினால் உமக்கு நன்றியறிந்ததோத்திரம் பண்ணுகிறேன். உம்முடையதிருச்சமுகத்தி லென்னுடையவசட்டையினாலேயும் பராக்கினாலேயுஞ் செய்ததப்பி

தங்களையு ம்நாசாரங்களையும் பொறுத்த
ருளவேணுமென்று தேவரீரை மன்றாடு
கிறேன். சர்வேசுராசுவாமீ நான்செய்த
பாவங்களுக்குப்பொறுத்தலுமிதுகளினி
யதில்விழாதபடிக்கிஷ்டப்பிரசாதமும்ப
லமு மிந்தத்திவ்வியபலியினாலெனக்குத்த
ந்தருளும். இதோ தேவரீரை நம்பிக்கொ
ண்டு உம்முடையசித்தத்தின்படியே நட
க்கப்பிரதிக்கினைபண்ணுகிறேன். நீரெ
னக்கிப்போது செய்தவுபகாரத்தை நானி
ந்தநாள்முழுது நினைத்துக்கொண்டுவரு
வதன்றியே நானிப்போதடைந்த பூசை
யின்பலனை யிழந்துபோகப்பண்ணக்கூ
டுமான அற்பதுராசைக்கும் நினைவுக்கும்
வார்த்தைக்கு மிடங்கொடாமலிருக்க உம
துதிவ்விய அநுக்கிரகவுதவியாற்றீர்மானி
த்திருக்கிறேன்சுவாமீ. ஆமென்சேசு.





ஆராதனைக்குரியசேசுவே! அடியேனையிரக்ஷிக்கச் சிலுவைமரத்தி விரத்தப்பலியாகத் திருவுளமானீரோ. அப்போது தேவரீர்சிந்தின திரு இரத்தத்தையு ம்டிகளால் நொறுக்கப்பட்டுச் சிலுவையி லறையுண்டவுமது திருச்சரீரத்தையு மநுதினமுந் திவ்வியபூசையிற்பலியாகவொப்புக்கொடுத்துவருகிறீரோசுவாமீ. அடியேன் தேவரீரோடேயென்னையுந் தேவதிருவுளத்துக்குப்பலியாகவொப்புக்கொடுத்தும்மைச்சிநேகித்து ஆராதிக்கிறேன்சுவாமீ.

# சேசுநாதருடைய

## திருச்சரித்திரங்களையுங் கஸ்தி நிர்ப்பந்தங்களையுந் தியானித்துப் பூசைகாணும் வேறொருவகை.

☞ பூசையில்லாதவிடங்களில் ஞாயிற்றுக்கிழமைகளிலுங் கடன்றிருநாட்களிலுந் திவ்வியபூசையைக் காணவாசையோடுஞ் சுத்தகருத்தோடும் வேறேயிடத்தில் நடக்குப்பூசையுடன் ஏகோபித்து இதன்பின்வரும்ந்திரங்களையாவது மேற்சொல்லிய மந்திரங்களையாவது செபித்துக்கொள்வீர்களாக.

பூசையிலே சேசுநாதசுவாமி யெழுந்தருளப்போகிறாரோ. அவருடையசந்நிதியிலே நானிருந்துபூசைத்தியானம்பண்ணப் பாத்திரமாகாதவனாயிருந்தாலும் அவருடைய அளவில்லாத தயையைநம்பிகொண்டு பத்தியோடுசெபிக்கும்படியாகக்கவனிக்கக்கடவேன்.

பூசையிலே அர்ச். - தமதிறித்துவத்துக்குத் தோத்திரஞ் சம்மனசுகளுக் கானந்தசந்தோஷம் பாவிகளுக்குப் பாவப்பொறுத்தற் கிடைப்பதற்காகத் தேவ அநுக்கிரகம் புண்ணியவான்களுக் கிஷ்டப்பிரசாதம் உத்தரிப்புஸ்தலத்திலே வேதனைப்படுகிறவர்களுக்காறுதல் திருச்சபைக்குச் சேசுகிறீஸ்துவினால் விசேஷவுதவி பூசைபண்ணுகிறகுருவானவருக்கு ஞான அவுழ்தமும் பரமசஞ்சீவியுமாகிறதல்லாமல் தேவ நற்கருணையை யுட்கொள்ளுகிறதினால் வரவர்பாவமெல்லாம்விலக்கப்பலமும் ஆசாபாசக்கட்டவிழ்த்தலும் ஞானத்தெளிவும் ஆத்துமநன்மைச் சம்பூரணமும் புண்ணியத்தைச்செய்யத்திடமும் பசாசின்சோத

ஊயைச்செயிக்கவுதவியும் விசுவாசத்திலுறுதியும் நம்பிக்கையில் ஸதிரமுஞ் சினேகத்திற்சுறுசுறுப்பும் பத்தியில் அபிவிர்த்தியுமடைந்து சேசுகிறீஸதுவோடேயுந்திருச்சபையோடேயுமொன்றுபட் டிருக்கலாமே.

முந்தமுந்தப்பூசையிலே சேசுநாதசுவாமி தம்மைத்தாமே நம்முடையபாவங்களுக்காக அநாதிபிதாவுக்குப் பலியாகவொப்புக்கொடுக்கிறுரென்றறிந்து பூசைபண்ணுகிறகுருவினிடத்தி ல்வரிருக்கிறதாக விசாரித்து மகாபத்திநம்பிக்கையோட்ட பூசைகாணக் கடவோம்.



☞ அதிகமானபலனோடு பூசைகாணத்தக்கதாகப் பூசைக்கிருத்தியங்களு ம்துகளின் பரம அர்த்தங்களும் அதுகளுக்கான வேண்டுதல்களும் வருமாறு.

குரு-முந்தியொரு சிறியவஸதிரத்தைத்
தமதுசிரசின்மேற்போட்டுக் கழுத்தி
லணிகிறபோது.

சர்வத்துக்கு மாதிகாரணமா யிருக்கிற அநாதிபிதாவே தேவரீருடைய ஏகசுதனும் எங்களிரட்சகருமாகிய சேசுகிறீஸதுநாதசுவாமியுடைய திருமுகத்திலே யூதர்கள்வஸதிரத்தைக் கட்டியடித்து உன்னையடித்தவனுரென்று கேட்டார்களென்றுவிசாரித்து, நாங்க ளிவ்வுலகத்தின் வெகுமானத்தைப்பாராமற் , பரலோகத்திலேதேவரீ ரும்முடையவர்களுக்குப் பண்

ளுகிறவெகுமானத்தையாசையோடு தே
டியடைய வெங்களுக் கநுக்கிரகஞ் செய்
தருளவேணுமென்று தேவரீரைவேண்டி
க்கொள்ளுகிறோஞ்சுவாமீ.

குரு. வெள்ளைச்சட்டையைத்
தொடுத்துக்கொள்ளுகிறபோது.

சர்வத்தையும்படைத்தோராகிய அநா
திபிதாவே எரோதனென்கிற இராசாவா
னவன் தேவரீருடைய நேசகுமாரனாகிய
சேசுநாதசுவாமியைப் பைத்தியக்கார
னென் றெண்ணிப் பைத்தியக்காரனுக்
கு இலாஞ்சனையாக வெள்ளையங்கியைத்
தொடுப்பித்து மீளவும பிலாத்
தண்டைக் கனுப்பினானென்று விசாரித்து
நாங்கள் தர்மகாரியஞ் செய்கிறதிலேயுந்
தேவரீருடைய திருவேதத்தையநுசரிக்கி
றதிலேயும் உலகத்தாரெங்களைப் பைத்தி
யங்கொண்டவர்களென்று தூஷணித்து
நிந்தித்தா லந்தத்தூஷணங்களை நாங்கள்
பொறுமையோடேசகிக்க வெங்களுக்க
நுக்கிரகம்பண்ணியருள வேணுமென்று
தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோஞ்சு
வாமீ.

குரு - சூத்திரத்தை யிடையிலே கட்டிக்கொண்டு இடதுகையிலுங் கழுத்திலும் நீளியபட்டுச்களை யணிந்துகொள்ளுகிறபோது.

பரஞ்சோதிமகிமையைக் கொண்டிருக்கிற வநாதிபிதாவே தேவரீரெங்களுக் கன்புக்குரியவிரட்சகராக வனுப்பின வும்முடையதிருச்சுதனை யூதர்கள் அரையிலேயுங் கைகால்களிலேயுங் கழுத்திலேயுங் கயிறுகளாற்கட்டிப்பூங்காவனத்தினின்றிழுத்துக்கொண்டுபோனார்களென்று விசாரித்து நாங்கள்வர்பட்ட அவமானங்களினால்மனமிரங்கி ஆசாபாசமென்கிற கட்டுக்களினாலே பசாசு எங்களைக்கட்டி நரகத்திலிழுத்துக்கொண்டு போகாதபடி யும்முடையநேசகுமாரன் தாமே கட்டுண்டு எங்களை மீட்டிரட்சித்தாரென்கிறதினால்வருக்குமுமக்கு நிரவரதகாலமுந் தோத்திரமுண்டாகக்கடவதென்று தேவரீரைவேண்டிக்கொள்ளுகிறோஞ்சுவாமீ.

குரு-தீர்த்தந்தெளிகிறபோது.

தூயபரிசுத்ததனங் கொண்டிருக்கிற அநாதிபிதாவே தேவரீர் மனிதர்களுக்கு

வரிவேதத்தைத் தந்தருளினபோது கட்டளையிட்ட தீர்த்தத்தைக்கொண்டு சுத்திகரிக்கப்படாத யாவனுந்திருச்சபையினின்று சிதைந்து போகக்கடவானென்று திருவுளம்பற்றினதினால் உம்முடைய திருச்சுதனாகிய சேசுநாத ரிரத்தத்தைக்கொண்டு பரிசுத்தமாகாதயாவரும் நித்தியகேட்டுக்குள்ளாவார்களென்று கற்பித்ததாயிற்றே, ஆகையாற் கிருபைநிறைந்த பிதாவே அந்தத்திவ்விய இரட்சகர்நாமத்தால் மந்திரிக்கப்பட்டவிந்தத்தீர்த்தத்தின்முயற்சியினாலே அவருடையதிருவிரத்தத்தைக்கொண்டு எங்கள்பாவ அழுக்கெல்லாம்போக்கி எங்களாத்துமங்களைச்சுத்திகரித்திரட்சித்தருளுஞ்சுவாமீ. தாவீதென்கிறவிராசா தன்பாவங்களினால்மிகுதியாயழுது துக்கப்பட்டுத்தேவரீரை நம்பிக்கையோடேநோக்கிநீரும் ஈசொப்பென்கிற புல்லினால் என்மேல்தெளித்தருளுவீர் நானுஞ்சுத்தமாவேன் நீரென்னைக்கழுவுவீர். வெண்பனிக்கட்டியிலுந் தூய்மையாவேனென்றுவேண்டினதுபோலேஅடியோ

ர்களுமெங்கள்பாவங்களினிமித்த மனஸ்தாபப்பட்டுத்தேவரீரெங்களைக்கழுவிச்சுத்தமாக்கவேணுமென்று மன்றாடுகிறோம். குருவானவரிந்தத்தீர்த்தத்தை மந்திரிக்கையில், தேவரீரை வேண்டிக்கொண்டபடியே யும்முடைய திருக்குமாரன்முகத்தைப்பார்த்து இந்தத்தீர்த்தத்தின் முயற்சியினாலெங்கள்சத்துருவாகிய பசாசையு மதின்தந்திரச்சோதனைகளையும்விலக்கி வியாதிகளையும் நீக்கி இஸ்பிரீத்துசாந்துவின் இஷ்டப்பிரசாதத்தினாலடியோர்களை அர்ச்சித்துக் காத்தருள வேணுமென்று தேவரீரைமன்றாடுகிறோம்.

குரு பெரியபட்டுத்தரித்துக்
கொள்ளுகிறபோது.

இராசாதிராசாவாகிய அநாதிபிதாவே யடியார்களுடைய பாவங்களுக்காக வுத்தரிக்கவந்த சேசுநாதசுவாமியை யூதர்கள்பரியாச இராசாவாகஸ்தாபித்து அவர்மேலே சிவப்புப்பட்டைத் தரிப்பித்தார்களென்றுவிசாரித்து நாங்களுலகத்தாராலே வருகிறவெகுமானம் விளையாட்டுவெ

குமானமென்றெண்ணி யதையாசைப்ப டாது பிறக்கணிக்கும்படிக் கெங்களுக்கு நல்லபுத்திதந்தருளவேணுமென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம்.

குரு-பீடத்தின்முனபாக நாலேந்தடியிலே நிற்கிற
போதும் பீடத்தினகிட்டப்போ யிடதுப்
சகத்திலொரு சினனசெபஞ் செபிககிற
போதும பீடத்தினடுவினினறு சுவாமீ
கிருபையாயிருங் கிறீஸதுவே
கிருபையாயிரு மெனகிற மந்
திரஞ் சொல்லுகிறபோதும்.

அளவில்லாத கிருபையுடைத்தான அநாதிபிதாவே அடியோர்களுடைய ஆதிதகப்பன் தேவரீருக்குத்துரோக மான பாவம்பண்ணினபிற்பாடு தேவரீ ரவனுடைய ஞானக்கேட்டின்மேல் மனமிரங்கிப் பசாசின்டிமைத்தனத்தினின்று மனிதரைமீட்டுக்கொள்ளுவதற்கு ஓரிரட்சகரை யனுப்ப வாக்குத்தத்தஞ் செய்தருளினீரோ அந்நாள்முதலும்மையறிந்தபுண்ணியாத்துமாக்கள் தங்கள் பாவங்களுக்காக மனஸ்தாபமாயிருந்து தேவரீர்தங்கள்பாவங்களைப்பொறுக்க வுலகவிரட்சகரை ய

னுப்பவேணுமென்றுவேண்டிக்கொண்டு அவனைக்காண்கிறதற்காக மிகுந்தவாசை யைக்கொண்டிருந்ததுபோலே யந்தத் திவ்விய இரட்சகனெங்கள்பாவங்களுக்கா கச் செலுத்தப்போகிற பரம்பலியைப் பத்தியோடுகாண வாசையாயிருக்கிறோ ம். நாங்களு மெங்கள்பாவங்களுக்காக ம னஸ்தாபப்பட்டு அதுகளை வெறுத்துத் தேவரீருடையசமுகத்திலே பாவசங்கீர்த் தனம்பண்ணி யும்முடைய கிருபையைப் பெறமன்றாடுகிறோம். எங்கள்பாவங்களை ப்பொறுத்தருளுஞ்சுவாமீ.

பாவசங்கீர்த்தனமந்திரஞ் சொல்லவும்.

சுவாமீகிருபையாயிரும். ந.
கிறீஸ்துவேகிருபையாயிரும். ந.
சுவாமீதயையாயிரும். ந.

குரு-பீடத்தின்நடுவிலேநின்று
சம்மனசுகள்பாடினதேவஸ்துதி
சொல்லுகிறபோது.

சர்வவல்லபங்கொண்டிருக்கிற அநாதி பிதாவே தேவசுபாவத்திலுல் தேவரீருக் குச்சரிசமானமாகிய நேசகுமார ன்டி

யோர்களுடைய சாயற்கொண்டு பிறந்தாரென்றுமப்போது அவருடையதெய்வீகம்விளங்கத் தேவரீரால்அனுப்பப்பட்ட சம்மனசுகள்வந்து இன்பமானசங்கீதங்களைப் பாடினார்களென்றும் விசாரித்து அடியோர்கள் நன்றியறிந்தமகிழ்ச்சியுடனே தேவரீரை ஸ்துதித்துவணங்குகிறோம். உமதுமட்டற்றகிருபையாலெங்களைமீட்டிரட்சிக்கவேணுமென்று உம்முடையசுத னிப்படி மனுஷாவதாரமெடுத்திவ்வுலகத்தி லெழுந்தருளிவரத் திருவுளமானீரென்கிறதினாலே உலகமெங்குமுமக்கு ம்வருககுந் தோத்திரமுண்டாகக்கடவதென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம் சுவாமீ. பர. பிறி.

குரு-பீடத்திலிடதுபாரிசத்திலே
திருபத்தை வாசிக்கிறபோது.

சத்தியசுரூபியாகிய அநாதிபிதாவே தீர்க்கதரிசிகளைக்கொண்டும் விசேஷமாய் ஸநாயக அருளப்பனைக்கொண்டுந் தேவரீருலகத்துக்குச் சத்தியநெறியை யறிவித்தருளினீரென்றுவிசாரித்து உம்மை

ஸ் துதித்துவணங்குகிறோஞ்சுவாமீ. தேவ
ரீரறிவித்தசத்தியங்களை நாங்களுறுதியாக
விசுவசிக்கவுந் தேவரீர்கற்பித்தசுகிர்த நெ
றியிற் சுமுத்திரையாகநடக்கவும் நுக்கிர
கம்பண்ணியருளவேணுமென்று தேவரீ
ரை வேண்டிக்கொள்ளுகிறோம்.

பத்துக்கற்பனை.

குரு-பீடத்தின வலதுபக்கத்திலே
சுவிசேஷம வாசிக்கிறபோது.

இரக்ஷணியத்தி ஞதிகாரணமாகிய அ
நாதிபிதாவே தேவரீரும்முடைய திருச்
சுதனாகிய சேசுநாதரை யெங்களாத்து
மத்துக்குப் பரமகுருவாகவுந் திவ்விய
போதகராகவுந் தந்தருளி யவர்தாமே த
மது திருவாக்கினாலுஞ்சுகிர்தமாதிரிகையி
னாலும்திசயவற்புதங்களினாலுஞ் சுவிசே
ஷபோதனையை யுலகத்துக்கறிவிக்கத் தி
ருவுளமானீரொன்றுவிசாரித்து உம்மைப்
புகழ்ந் தாராதிக்கிறோஞ்சுவாமீ. நமக்கு
கந்த பிரியகுமாரனாகிய இவர்திருவசன
ங்களைக் கேளுங்களென்றுசொல்வித் த
போரொன்றமலையில் மூன்றுசீஷர்களுக்க

ற்புதமாக வுமது திவ்வியசத்தத்தா லதி
விகதத்திருவுளமானீரோ. அப்படியேயும்
முடைய நேசவசுதன்போதனையைநா
ங்கள் விஞவொடுகேட் டநுசரிக்கும்படி
யெங்களுக்க நுககிரகம் பண்ணியருளவே
ணுமென்று தேவரீரை வேண்டிக்கொள்
ளுகிறேம் சுவாமீ.

குரு·பீடத்தின்டுவிலேநின்று
விசுவாசமந்திரஞ்சொல்லுகிறபோது.

அடியோர்களுடையவிரக்ஷணியத்தை
யபேட்சிக்கிற அநாதிபிதாவே சேசுநா
தருடைய சீஷர்களுலகமெங்குஞ் சுற்றி
த்திரிந் தற்புதங்களைச்செய்து சுவிசேஷ
த்தைப்போதிக்க அதைக்கேட்ட அநே
கமாயிரம்பிரசைகள் பசாசிஞராதனையை
விட்டுச் சத்தியவேதத்தை விசுவசித்ததி
ஞலே யுலகமெங்குஞ் சத்தியவேதம்விள
ங்கச் செய்தருளினீரொன்றுவிசாரித் தும்
மைத்தோத்திரம்பண்ணுகிறேம். இன்
ன முலகத்திலுள்ள அஞ்ஞானிகளெல்லா
ருஞ் சத்தியவிசுவாசத்தைக்கைக்கொள்ள
வுந்திருச்சபை மென்மேலும்பரம்பவுந்

தயைசெய்தருளுஞ்சுவாமீ. தேவரீர்நீசப் பாவிகளாயிருக்கிறவடியோர்கள்பேரிலு மதுமட்டற்றகிருபையைத்தானே பாராட்டியடியோர்களுக்குமதுசத்தியவேதத்தையறிவிக்கத் திருவுளமானீரல்லோ. நாங்கள்ப்படிப்பட்ட சத்தியவேதத்தை விசுவாச நம்பிக்கை பத்தியோடேகைக்கொண்டதின்படியே சுமுத்திரையாக நடந்து மோக்ஷத்தையடையக் கிருபைசெய்தருளவேணுமென்று தேவரீரைத்தாழ்ச்சியோடாராதித்து வேண்டிக்கொள்ளுகிறோம். விசுவாசமந்திரம.

குரு-நற்கருணையாக நியமித்த
கோதுமையப்பத்தையுந்
தேவதாழ்ச்சிக்கனியிரசத்தையு
மொப்புக்கொடுக்கிறபோது.

சர்வகர்த்தத்துவமுடைத்தான அநாதி பிதாவே யும்முடைய திருக்குமாரனை யூதர்கள்பிடிக்க வுத்தியோகமா யிருந்தசமயத்திலே எங்களன்புக்குரிய வீந்தத்திவ்யசுவாமி செருசலேமென்கிற பட்டணத்தைவிட்டுமறைந்து வேறேயூர்களிற் சஞ்சரித்தாரென்று விசாரித்துச்சத்தியதிரு

ச்சபையயா லென்றென்றைக்குந் தேவரீ ருக்குப் பூசையுந்தோத்திரமு முண்டா கும்பொருட்டு உலகத்தினெத்திசையிலா வது பொல்லாதவர்க ளிதைவிரோதித் து வாதித்து உம்முடையபூசைக்குந் தோத் திரத் துக்கும்விக்கினம்பண்ணவொட்டா தபடிக் காத்தருளவேணுமென்று தேவ ரீரைவேண்டிக்கொள்ளுகிறோம்.

இந்தப்பரிசுத்தபலியோ டெங்கள் நி னைவு மனம் வாக்குப்பலமுதலியவெல்லா வற்றையு மொன்றாக்கக்கூட்டி எங்களைமு ழு துந்தேவரீருக்குப் பலியாகவொப்புக் கொடுக்கிறோம் இனியெங்கள்சீவியகால மெல்லாந் தேவரீருடையசினேகத்தினு மூழியத்தினுஞ் செலவாக்கக்கடவது. தேவ ரீரேதாமேயெங்களை நடப்பித்துக் காத்தரு ளும். எங்களுக்கும் எங்களூற்றார் பெற்றா ருறவின்முறையா ருபகாரிகள் சினேகித ர் பகைவர்முதலியவெல்லாருக்கும் வேண் டியஞான நன்மைகளையும் லவ்கீகவுதவிக ளையுஞ்செய் து ஈடேற்றியிரட்சியும். உத்த ரிக்கிறஸ்தலத்திலிருக்கிற வெங்கள் பந்து

கு

க்கள் சினேகிதர்முதலிய சகல ஆத்துமா க்களுக்கு நித்தியவிளைப்பாற்றிலையத் தந் தருளுஞ்சுவாமீ.

குரு-பரிசுத்தர்பரிசுத்தரெனகிற மந்திரஞ்சொல்லுகிறபோது.

இடைவிடாமல் நவ்விலாச்சபைச் சம் மனசுகளி னுத்தமதோத்திரங்களால் ஸ் துதிக்கப்பட்டவராகிய அநாதிபிதாவே தேவரீரோடேகூடத் தேவதூதர்களால் வாழ்த்தியாராதிக்கப்பட்டவும்முடையதி வ்வியகுமாரனாகிய சேசுநாதசுவாமியெங் களுக்காகப் பாடுபடவேணுமென்று மிகு ந்ததாழ்ச்சிபொறுமையுள்ளவிராசாவாக நீசவாகனத்தின் மீதிலெழுந்தருளிச் செரு சலேமென்கிற பட்டணத்திற் பிரவேசித் தசமயத்தி லந்தப்பட்டணத்துச்சனங்க ளவருக்கெதிராகப்போய் மரத்தின்கொ ப்புக்களை யொடித்துப்போட்டுங் குருத் துக்களைக்கையிலேந்தியுந் தங்கள் வஸதிர ங்களைப் பாதையில்விரித்துப்போட்டும்வ ழியையலங்கரித்து அவருக்குமுன்னும்பி ன்னுமாகப் புகழ்கூறிக்கொண்டு போம்

பொழுது அந்தப்பட்டணத்தார்தாமே கொஞ்சநாளுக்குள்ளே தம்மைவாதைப் படுத்திச்செய்யுங் கொடியதேவதுரோகப்பாவத்தால்வர்களினிய நுபவிக்குங்கடினமான நிர்ப்பந்தங்களை நினைத்துத்தயை நிறைந்தவிந்தத்திவ்விய விரட்சகர்மனமிரங்கியழுதுகொண்டுபோனொன்றுவிசாரித்து எங்களுக்குச் சந்தோஷம்வந்தாலதிலே நாங்களாங்காரிகளாகாமல் எங்கள்சந்தோஷத்திற் றேவரீரைத்தோத்திரம்பண்ணும்படி எங்களுக்க நுககிரகம்பண்ணியருள வேணுமென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம்.

குரு-சீவியர்களுக்காகவிரசுபியத்திலே
சற்றுநேரஞ் செபிக்கிறபோது.

அளவில்லாத சகலநன்மைச் சுரூபியாகியபிதாவே தேவரீமீராடே மோக்ஷவாசிகளி னுநந்தமாகியசேசுநாதர் தம்முடைய சிஷ்யர்களோடுகூடப் பூங்காவனத்திற்பிரவேசித்து அடியோர்களுடையபாவங்களினிமித்தமாகக கடினமான துககங்களை யநுபவித்தானொன்றுந் தீர்ககசெய

ம்பண்ணித் தாமநுபவிக்கிறமனேவியா குலமுதலான துக்கதுயரங்களை மனுஷர் பாவங்களுக்குச்செல்லும் கொடிதான வாக்கினைக் குத்தரிப்பாக வொப்புக்கொடுத்தா ரென்றுந் தாமநுபவிக்கப்போகிற மகாகொடிதானவேதனைகளை மாற்ற வேணுமானு மாற்றும விருக்கவேணுமானாலும் பிதாவேயுமுடையசித்தம் என்மனதின்படி வேண்டாமென்று வேண்டிக்கொண்டாரென்றும் விசாரித்து நாங்களுள்ளத்திற்றனே யெங்கள்பாவங்களினிமித்தந் துக்கமனஸ்தாபப்படவும் எங்களுக்குக்கஸ்தி துன்பம்வரும்போது நாங்கள்திகம்திகமாய்ச்செபம்பண்ணிப் பொறுமையாயிருக்கவு மெங்கள்சத்துருக்கள் கையில்கப்பட்டு நாங்கள்மோசம்போகாமலிருக்கவுங் கிருபைபண்ணியருள வேணுமென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம். பரம.

குரு-நற்கருணையை யுயரவெழுந்
தருளப் பண்ணுகிறதற்குமுன.

மட்டற்ற ஆராதனைக்குரிய அநாதிபிதாவே தேவரீருடைய நேசகுமாரனுகிய

சேசுநாதரெங்கள்நிமித்த மெண்ணிலட
ங்காத அடியவமான நிர்ப்பந்தங்களையநு
பவித்து முண்முடி தரித்துச் சிலுவையில்
றையுண்டு எங்கள்பாவங்களுககாகத் தம்
மைத்தாமே தேவரீருககுப்பலியாகவொ
ப்புககொடுத்தாரென்று நினைத்தருளுஞ்
சுவாமீ. அவர்தாமின்னமுந் திவ்வியபூசை
யிலே தேவரீருககுச்செலுத்துகிற அள
வில்லாதவிலையேறப்பெற்ற இந்தப்பலி
யைப்பார்த்துப் பாவிகளாயிருககிற வெ
ங்களுககுத் தயைசெய்யவேணுமென்று
தேவரீரை வேண்டிககொள்ளுகிறோம்.

குரு-தேவநற்கருணையை யுயர
வெழுந்தருளப பண்ணுகிறபோது.

சேசுகிறீஸ்துநாதரே சுவாமீ தேவரீரு
டைய திருச்சிலுவையினு லுலகத்தைமீட்
டிரட்சித்தீ ரென்கிறதினுலே தேவரீரை
வணங்கித் தோத்திரம்பண்ணுகிறோம்.

எங்களுக்காககொடுககப்பட்ட சேசு
நாதருடைய திருச்சரீரமே யுமககேநம
ஸ்காரம்பண்ணுகிறோம். சேசுநாதருடை
ய-அர்ச். பாடுகளே யுமககுத்தோத்திரமு
ண்டாககடவது.

குரு-பாத்திரத்தை யுயரவெழுந்
தருளபபண்ணுகிறபோது.

மிகவுமிகுந்த மதுரமான சேசுகிறீஸ்துவின் விலைமதியாத்திருவிரத்தமேமனுஷன்செய்த பாவங்களுககாகச் சிலுவைமரத்திலேநின்றுசிதறப்பட்ட வுமககேநமஸ்காரம்பண்ணுகிறோம். பாவவிமோசனத்துககாகச் சிந்தப்பட்டதிருவிரத்தமே எங்கள் பாவங்களைப் போககியருளும். சேசுநாதருடைய திருககாயங்களிலேநின்றோடிவிழுந்த திருவிரத்தமே யுலகமெங்கு முமககேநமஸ்காரமுந் தோத்திரமுமுண்டாககககடவது.

வர்ணம் வாசனை ரூபம் ருசி பிரமாணமுதலான குணங்களில் மெய்யாகவே மறைந்திருககும் தேவத்துவமே யும்மைவணங்கிநமஸ்காரிககிறேன். உம்மையோசிக்கிறதி லென்னிருதய மாச்சரியத்தாலும் பக்ஷத்தாலு முழுதும்யர்ந்துபோகிறதிறு லென்மனமுழுது முமக்கேகீழ்ப்படிந்திருக்கிறது. என்சேசுவே! என்னிரட்சகரோ யென்தேவனே கண்ஸ்பரிசம் ருசி

யும்மைக் கண்டுபிடியாமல் தப்பிப்போ
ஞலுந் தேவரீருடைய வாக்கியத்தையுண
ர்ந்தகேள்வித்தனத்தா லிந்தப்பரமதேவ
இரகசியத்தை நிச்சயத்துடனே யறிந்
துவிசுவசிக்கிறேன். பரம்பிதாவின் சத்தி
யவார்த்தையுந் தேவசுதனுமாகிய தேவ
ரீருடையவார்த்தையைவிடச் சத்தியமா
னதொன்றுமில்லையென்கிறதிஞலே தே
வரீர்திருவுளம்பற்றின தெல்லாத்தையுமு
றுதியாகவிசுவசித் துமமை நமஸ்கரிக்கி
றேன். தேவத்துவமாத்திரமே சிலுவையி
ல் மறைந்திருந்தது. இதிலேயாவென்றுல்
தேவத்துவமு மனுஷத்துவமுங் கூடம
றைந்திருக்கிறது. தேவநற்கருணையிலே
தேவசுபாவமு மனுஷசுபாவமுங் கூடவி
ருக்கிறதென்று விசுவசித்துச் சங்கீர்த்தன
ம்பண்ணிப் பச்சாத்தாபக்கள்ளன் கேட்
டவாத்தை நானுங்கேட்கிறேன். அர்ச்.-
தோமையாரைப்போலே தேவரீருடைய
காயங்களின் துவாரங்களைக்காணேனென்
ருலும் உம்மையென்தேவனென்று பிர
சித்தமாகச்சொல்லியாராதித் துவணங்கு
கிறேன். நானும்மிலேயெப்போதும்தி

கம்திகமாய் விசுவாச நம்பிக்கைபத்தியா யிருக்கக்கிருபைசெய்தருளும்.

நாதன்மரணத்தை ஞாபகப்படுத்திம னுஷினுக்குயிரளிக்கும் சீவனுள்ள அப்ப மே யென்னாத்துமமும்மிலே சீவிக்கவு மெக்காலமுநீரதற்கு மதுரமாயிருக்கவுங் கிருபைசெய்யும் அற்புதமானகருணையு ள்ள * பெலிக்கானைசேசுவே! பாவத்தி னால் அசுத்தனாயிருக்கிறவடியேனை யும்மு டைய திருவிரத்தத்தாற் சுத்தனாகப்பண் ணியெனக்கழியாதஞானவுயிரைத்தந்தரு ளும். உமது திருவுதிரத்தி லொருதுளிச கலலோகபாவங்களையுங் கழுவித்துடைக் கவல்லதாகையால் மிகவும் அசுத்தபாவி யாயிருக்கிறவென்னை யுமது திருவிரத்த த்தினாற் சுத்திகரித்தருளும். சேசுவே யி ப்போது மறைவினுமமைத் தரிசிக்கிற நா னினிமறைவின்றித் தரிசிக்க மிகவும் பேட்சிக்கிறேன். தேவரீர்மனமிரங்கியடி யே னுமதாநந்ததரிசனையால் பாக்கிய வானாகும்படிக்கிருபைசெய்யவேணுமெ ன்றுமன்றாடுகிறேன். ஆமென் சேசு.

* யிரு

மிகுந்த வியாகுலக்காரணத்தினாற் சர்வாங்கத்தினின்று வேர்வையாகப்புறப்பட்டு நிலத்திற்சிந்தப்பட்ட சேசுவின்விலைமதியாத திருவிரத்தமே யிந்தப்பாத்திரத்திலும்மைவணங்குகிறேன். கிருபையுடைத்தானசேசுவே தேவரீரடியேனுக்காகச் சிந்தினதிருவிரத்தத்தைப்பார்த்து என்பாவத்தாலெனக்குவருகிறவொழியாதவேதனையை நீக்குவீராக.

ஆராதனைக்குரிய ஆண்டவர் கற்றூணோடே கட்டப்பட்டு வெகுவாயடிபட்டதினா லடியின்வழியாய்ப் புறப்பட்டு அவருடைய திவ்வியாங்கநிறத்தைப் பேதிப்பித்துத் திருமேனியில் நின்றுவிழுந்து பூமியைப்பூச்சியமா யிருக்கச்செய்த சேசுவின் விலைமதியாத திருவிரத்தமே இந்தப் பாத்திரத்திலும்மை வணங்குகிறேன். கிருபையுடைத்தானசேசுவேதேவரீரடியேன்பேரிற் பக்ஷத்தின்மிகுதியாற் சிந்தினதிருவிரத்தத்தைப்பார்த்தென்பாவத்தின்கட்டறுத்து என்னிலுள்ளபாவரூபத்தைத்தள்ளி யிஷ்டப்பிரசாதத்தாலென்னையழகுள்ளவனாகப்பண்ணுவீராக.

கொடியர் முள்ளாலேமுடிபண்ணி நாதனுடைய திருத்தலையிலேவைத் தடித்ததினாலே முள்ளுக்கள்தைத்த காயங்கள்வழியாய்வடிந்துவிழுந்து நாதனுடையதிருமுகத்தழகைநீக்கின வென்சேசுவின் விலைமதியாத திருவிரத்தமே யிந்தப்பாத்திரத்திலும்மைவணங்குகிறேன். கிருபையுடைத்தானசேசுவே யித்தனை வாதைகளுக்குள் ளடியேனுக்காகச்சிந்தின திருக்குருதியைப்பார்த்துப் பாவக்கர்வத்தாலெனக்குவந்த வஞ்ஞானவிருளை நீக்குவீராக.

பாவத்தினின்றென்னை மீட்டிரட்சிக்கப் பாரவாணிகளாற் சிலுவையில்தறையுண்டு பலியானகைகால்களின் துவாரங்களில் நின்றுபுறப்பட்டுப் பேய்க்கடிமையாயிருந்தவென்னை மீட்கக்கிரயமான வென் சேசுவின்விலைமதியாத திருவிரத்தமேயிந்தப்பாத்திரத்திலும்மை வணங்குகிறேன். கிருபையுடைத்தான சேசுவே உம்மோடுகூட நான்மோக்ஷவிராச்சியத்துக்கெழுந்தருளும்படிக் கெனக்கர்கத்தேவு

ரீருடைய காயங்களினின்றுசொரிந்த திரு வுதிரத்தைப்பார்த்து என்னைச்சுத்தமாக்கி யும்முடைய திருப்பாதத்திற் சேர்த்தரு ளுவீராக.

நாதன்திருவிலாவை நிஷ்டூரனொருவ னீட்டியிஞற் குத்தித்திறக்க வதிலேயிருந் றற்புதமாகத் தண்ணீரோடுகூடப்புறப்ப ட்டு ஞான அபிஷேகத்தினாலே பாவிகளை ச்சுத்திகரித்து ஞானமுறைமையிற்பிற ப்பையடையப்பண்ணி நாதனுடைய இ ஷ்டப்பிரசாதத்தால் ஞானத்திலேவளரு கிறதற்குக்காரணமுமாய் ஆத்துமத்தின் திவ்விய இலட்சண அலங்காரமுமாயிருக்கி றவென்சேசுவின் விலைமதியாத்திருவிரத் தமே யிந்தப்பாத்திரத்திலும்மை வணங் குகிறேன். கிருபையுடைத்தான சேசுவே தேவரீருடைய திருவிருதயத்தினின்றுபு றப்பட்ட வுதிரப்பிரவாகத்தைப்பார்த்து உம்மால் மீட்டிரட்சிக்கப்பட்ட வென் னைமுழுதுமுமதுகைவசப்படுத்தி நானு ம்மையல்லாமல் மற்றப்பொருளென்ன ப்பட்டயாவையுமிறக்க அடியேனுக்கநு க்கிரகஞ் செய்தருளும். ஆமென்சேசு.

குரு-மரித்தவர்களுக்காகமன்றுடி
யொருமுறைமபிழைதட்டிக்கொள்ளுகிறபோது

அடியோர்களுடைய கதியும்பாக்கிய
முமாயிருக்கிற அநாதிபிதாவே தேவரீரு
டைய நேசகுமாரனாகிய சேசுநாதமோழ
ை நாழிகைசிலுவையிலுயிரோடேயிருந்
து மனுஷர் மோக்ஷக்கரைசேர வுதவியா
கப்பரமவுணர்ச்சிகளை யுரைத்து மனுஷ
ரீரட்சணியத்திக்காகத் தலைகுனிந்துதே
வரீருடைய திருக்கரங்களில் தமது பிரா
ணனையொப்புக்கொடுத்து மரணமடை
ந்தாரென்று நினைத்தருளுஞ்சுவாமீ. நாங்
கள்மரணமடையுமுன் செய்யத்தக்கதர்ம
ங்களையெல்லாங் குறையறச்செய்துமுடி
த்து நல்லமரணமடையவும்மரித்தோர்பரக
தியிற்சேரவு மநுக்கிரகஞ்செய்தருளவே
ணுமென்றுதேவரீரைமன்றுடுகிறோம்.

குரு-தேவநற்கருணையோடு சிலுவை
வரைந்து பரமண்டலமந்திரஞ்
சொல்லுகிறபோது.

மிகவுமிகுந்தமதுரமான அர்ச்சிக்கப்ப
ட்ட தேவநற்கருணையேதோத்திரம். எங்
கள்பாவங்களைப்போக்கியருளுஞ்சுவாமீ.

இப்படி மூன்றுவிசைசொல்லிப் பரமண்டலமந்தி
ரஞ் செபிக்கவும்.

குரு-நற்கருணையைப் பிடிக்கிறபோது.

அழியாதசீவியங்கொண்டிருக்கிறபிதாவே திருச்சிலுவைப்பலியிற் சேசுகிறீஸ்துவின் திருஆத்துமந் திருச்சரீரத்தைவிட்டுப்பிரிந்ததென்றுவிசாரித்து எங்கள்பாவங்களைப்பொறுத்தருளுஞ்சுவாமீ. எப்போதைக்குந்தேவரீருக்குமிகவும்பிரியமுள்ள அந்தத்திருக்குமாரன் மகா திர்ப்பந்தத்தோடுகற்றூணிற்கட்டுண்டு வெகுவாய்அடிபட்டதையுங்கூர்மையுள்ளமுண்முடி திருத்தலையிலழுந்திமுள்ளுக்களுருவினகாயங்களால் திருமுகம்வீங்கியிருந்ததையும் அந்தக்காயங்களின்வழியாகப்புறப்பட்டவிரத்தத்தால் திருமுகத்தழகு மங்கியிருந்ததையுங் கொடுமையா யநேகமுறைபட்டவடியால் திருக்கன்னம் வீங்கிக்கன்றிக்கறுத்திருந்ததையுங் கொட்டக்காரருடைய வசுத்தவுமிழ்நீர்களினு லவர்திருமுகம்மழுக்கடைந்திருந்ததையுந் திருச்சரீரத்திற் பட்டவடிகளா லவர்திருத்தசைகள்கிழிந்து துண்டு துண்டாய்விழுந்ததையுந் திருப்பாதந் துவக்கித் திருச்சிரசுபரி

யந்தம் பட்டகாயங்களாற் சர்வாங்கமு நொந்திருக்கிற அவர் பாரமானசிலுவை யைத்திருத்தோளிற் சுமந்ததையும் இர ண்டுகள்ளருக்குநடுவிலே நிஷ்டூரமாய் றையப்பட்டுச் சிலுவையிற்றொங்கியிருந் ததையும் பலபலதூஷண அவமானநிந் தைக்கேட்டதையும்பேரொலியாகக்கூப் பிட்டுத் திருத்தலைகுனிந்து திருக்கண்களுஞ் சடைந்து திருவாய்திறந்து மரித்ததையு ம் பிரிந்த அவருடைய ஆத்துமம்பாதா ளங்களிலிறங்கிப் பூர்வீகப்புண்ணிய ஆத் துமாக்களுக் கிரட்சணியத்தை யறிவித்த தையு மவர்திருச்சரீரஞ் சிலுவையிலுயிரி ன்றிநின்றதையு நினைத்தருளுஞ் சுவாமீ. இப்படி யிரக்கத்தை வருவிப்பதற்குரிய வும்முடைய நேசகுமாரனுடைய திருமு கத்தைப்பார்த்துத் தயையுள்ளபிதாவே யெங்களுக்குத் தயைபண்ணியருளும்.

ஆண்டவராயிருக்கிற சேசுகிறீஸ்துவே உலோகத்தினுடைய பாவங்களைப்போக் குகிறவரோ எங்கள்பேரிலிரக்கமாயிரும்.

இப்படி - ௩ - விசை

திவ்வியவிரட்சகரே எங்களுக்குப்பொ ல்லாப்புச்செய்கிறபேர்களுக்கு நன்மை பண்ணி யிரட்சியும். அக்கியானிக ளும் முடைய சத்தியவேதத்திற் பிரவேசிக்கவு ம்பதிதர்களும் சகலபாவிகளுஞ்சத்தியசு கிர்தநெறியிற்றிரும்பவு மநுக்கிரகஞ்செ ய்தருளுஞ்சுவாமீ.

குரு-நற்கருணையையுட்கொள்ளுகிறபோது.

நித்தியசீவியங்கொடுக்கிறவராகிய அ நாதிபிதாவே தேவரீருக்கேகசுதனுமா யி டியோர்களுக்காண்டவருமாயிருக்கிற சே சுநாதர் மனுஷாவதாரமெடுத்து மனுஷ ரையிரட்சிக்கும்பொருட்டாய்ச் சிலுவை யிலறையப்பட்டுக்கடினமரணத்தையடை ந்தபின் கல்லறையிலடக்கப்பட்டாரென் றுவிசாரித்து நாங்களிவ்வுலோகத்துக்குச் செத்தவர்களாயுமக்குமாத்திரமே சீவித் திருக்கக் கிருபைசெய்யவேணுமென்று தேவரீரைமன்றாடுகிறோம்.

திருச்சபை மந்திரம்.

கிறீஸ்துவின்மரணத்தை நினைப்பூட்டு தலுமாய்க் கிறீஸ்துவைத்தானே திவ்விய

போசனமாகக் கொள்ளுதலுமாயிஷ்டப் பிரசாதத்தை யாத்துமத்துக்குத் தந்தரு ளுஞ் சம்பூரணமுமா யினி யடையப்படு மோக்ஷசம்பாவனையின் அச்சாரமுமாயி ருக்கிற அர்ச்சிக்சப்பட்டவிருந்தேயுமக் கே நமஸ்காரம். இதோ சர்வேசுரனுடை ய செம்மறியாட்டின் குட்டியானவர். இ தோ உலோகத்தினுடைய பாவங்களைப் போக்குகிறவர்.

ஆண்டவரோ யடியேன்குச்சுக்குள்ளே தேவரீரெழுந்தருள நான்பேறுபெற்றவ னல்ல. தேவரீ ரொருவார்த்தைமாத்திரந் திருவுளம்பற்றஎன்னாத்துமம்வியாதியினி ன்றுவிடப்பட்டு ஆரோக்கியமடையும்.

ஆமென்சேசு.

ஆ என்னன்புக்குரியசேசுவே! தேவந ற்கருணைவழியாகத் தேவரீரையுட்கொள் ள அடியேன் அபாத்திரவானாயிருந்தா லு மும்மைச்சினேகித்தும்மோ டொன் றித்திருக்க மிகவும்பேட்சிக்கிறேன். சுவா மீ உம்முடைய இஷ்டப்பிரசாதத்தா லெ ன்னாத்துமத்தி லெழுந்தருளிவாரும். என்

ளைச் சுத்திகரித்துக் கொஞ்சநாளைக்குள் தேவநற்கருணைவாங்க வென்னையோக்கி யவானாகச் செய்தருளுஞ்சுவாமீ.

கிறீஸ்துவினுடைய ஆத்துமமானதே யென்னை அர்ச்சியசிஷ்டனாகப் பண்ணிய ருளும். கிறீஸ்துவினுடையதிருச்சரீரமே யென்னையிரட்சித்துக்கொள்ளும். கிறீஸ் துவினுடைய திருவிரத்தமே யென்னையு ம்முடையவசமாக்கி யெனக்குத் திர்ப்தி யுண்டாகப்பண்ணியருளும். கிறீஸ்துவி னுடையவிலாவிலே நின்றோடிவிழுந்த திருத்தண்ணீரோ யென்னைக்கழுவும். கிறீ ஸ்துவினுடைய திருப்பாடுகளே யெனக் குத் தேற்றரவுண்டாகப்பண்ணியருளும் நல்லசேசுவே நான்கேட்கிறதைத் தந்த ருளும். உமது திருக்காயங்களுக்குள்ளே என்னைமறைத்துக்கொள்ளும். என்னையு ம்மைவிட்டுப் பிரியவொட்டாதேயும். து ஷ்ட சத்துருக்களிடத்திலேநின்று என் னையிரட்சித்துக்கொள்ளும். என்மரணத் தரவாயிலே நீயென்னையழைத்து உமது சந்நிதியிலேயுட்பட்ட சகல அர்ச்சியசிஷ்

டர்களோடேகூட ஆழியுள்ளகாலம் நா
னும்மைத் தோத்திரம்பண்ணும்படிக்கு
அடியேனைவரக்கற்பித்தருளும் ஆண்டவ
ரே. ஆமென்சேசு.

குரு நற்கருணையையுட்கொண்டபின்
ஆசீர்வாதங்கொடுக்கிறமட்டும்.

அநவரதகாலத்துக் காண்டவராகிய அ
நாதிபிதாவேயும்முடையதிருக்குமாரனா
கிய சேசுநாத ரநந்தமகிமைப்பிரதாப
த்தோடே மோக்ஷத்துக்கெழுந்தருளின
பின்பு அப்போஸ்தலர்மார் இஸ்பிரீத்து
சாந்துவின் பரிபூரண பிரசாதங்களினா
லேநிரப்பப்பட்டு உலகவிரட்சகருடைய
சுவிசேஷமென்கிற வேதசத்தியங்களை
யுலோகமெங்கும் பிரசங்கித்ததினால் எ
ண்ணிறந்தசனங்க ளக்கியானத்தைவிட்டு
ச் சத்தியத்தின் ஞானவெளிச்சத்தையநு
சரித்துத் திருச்சபைக் குள்ளானார்களே.
அந்நாள்துவக்கி நடுத்தீர்வைக்காலமட்டு
முலகத்தினெத்திசையிலுங் கிறீஸ்துவர்க
ள் தேவரீரைச்சேவித்துத் தோத்திரஞ்
செய்துவருகிறதைவிசாரித்து அகமகிழ்

கிறோஞ்சுவாமீ. தேவரீர்மேலே பத்தியா யிருக்கிற வித்தனையாயிரம்பேர்களைக் கண்டநாங்களுந் தேவரீர்மேலே பத்தியாயிருந்து தேவரீரையிடைவிடாமற் சினேகித்துச்சேவித்துத் தோத்திரம்பண்ணக் கிருபைசெய்தருளுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

குரு-பூசைமுடிவில் ஆசீர்வாதங் கொடுக்கிறபோது.

சர்வநீதியுடைத்தான அநாதிபிதாவே தேவரீருடைய கோபாக்கினியா லுலகமுடிந்தபின்மரித்தவர்களெல்லாரையும் அவரவராத்தும சரீரத்தோடுகூடவெழுப்பித் தேவரீருடைய வலதுபாரிசத்தில் வீற்றிருக்கும் உம்முடையதிருச்சுதனாகிய சேசுநாதர்மகாமகிமைப்பிரதாபத்தோடெழுந்தருளிவந்து அவரவர்செய்த பாவபுண்ணியங்களை யவரவர்களுக் கறியப்பண்ணி யளவற்றநீதியாற் றமதிடதுபாரிசத்திலிருக்கிற பொல்லாதவர்களைச்சபித்து ஆத்துமசரீரத்தோடே நரகத்திலேதள்ளிவிட்டற்றதயையால் தமது வலதுபாரிச

த்திவிருக்கிற நல்லவர்களுக்கு ஆசீர்வாதத்தைங்கொடுத்து ஆத்துமசரீரத்தோ டவர்களை மோக்ஷவிராச்சியத்துக்குக் கூட்டிக்கொண்டுபோவாரென்றுவிசாரித்து அடியோர்கள் பயபத்தியுடனே தேவரீரை நோக்கிச் சுவாமீ யும்மாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்குள்ளே நாங்களுஞ் சேர்ந்தவர்களாயிருந்து தேவரீருடைய பரிபூரண ஆசீர்வாதமடைந்து நித்தியகாலமுந் தேவரீரைப்போற்றிப்புகழ்ந்து இறைஞ்சித்தொழுது தோத்திரம் பண்ண எங்களுக் கநுக்கிரகித்தருளுமென்று தேவரீரை வேண்டிக்கொள்ளுகிறோம் ஆண்டவரே. ஆமென்சேசு.

பூசைமுடிந்தபின்
செபம்.

அளவில்லாதபொறுமையுள்ள எங்கள் சர்வேசுராசுவாமீ தேவரீரடியோர்களைமீட்டிரட்சித்த அளவில்லாத விரக்கத்தையும் பரிசுத்த தமகன்னியாஸ்திரீயான அர்ச். - மரியாயியுடையபுண்ணியங்களிஷிடமாட்சிகளையும் மோக்ஷவாசிகளு

டைய புண்ணியங்களையும் அவர்களுடை ய வேண்டுதல்களையும்பற்றி நானிந்தப்பூ சைமந்திரத்துடனே யும்மைச்செபித்து ச்செய்தபணிவிடைத்தேவரீர்கிருபாகடா ட்சத்தோடு கையேற்றுக்கொள்ளும். எ ன்னன்புக்குரியசேசுவே இந்தப்பூசிதப லியை நான்கண்டபிரகாரத்திலே தேவரீ ரென்னிடத்தில்நேககுறை தப்பிதங்களை ப் பார்த்திருந்தாலுந் தேவரீருடைய அ ளவில்லாத பலன்களுககு நான்யோக்கிய மல்லா திருக்கிறேனென்றுகண்டாலு மு மதுதிவ்வியமான விரக்கத்தின் மிகுதியி னாலே என் அயோக்கியத்தையுங் குற்றங் களையும்பொறுத்து எனக்கும்முடைய வ ரப்பிரசாதங்களைத் தந்தருளும். அடியே னுக் கடுத்ததுகளுமா யுதவியில்லாத்து களுமா யுத்தரிக்கிறஸ்தலத்திலுள்ள ஆத் துமங்களுடைய நித்திய இளைப்பாற்றிக் காகவுந் திருச்சபையின் சகலஞான அவ சரங்களிலுதவியாகவும் இராசாக்கள்முத லான சகலருடைய சமாதானத்துக்காக வும் மற்றுஞ் சகல விசுவாசிகளுடைய ந

ன்மைக்காகவுந் தேவரீரிந்தப் பூசைப்ப லியை ஒப்புக்கொள்ளும்படிக்கு முழுமே ன துடனே காணிக்கையாக வைக்கிறேன். ஆமென்சேசு.

# பாவ சங்கீர்த்தன

## விளக்கம்.



ஞானசன்மத்தையெடுத்த மனுஷனுக்கு ஞான முறையாகவருகிற வியாதியானது பாவமென்றுசொ ல்லப்படும். அப்படிப்பட்டவியாதியாகிறபாவநிவார ணமுண்டாகிறதற்குக் கர்த்தர்கற்பித்தருளின சஞ் சீவியான பரம அவிழ்தம் பாவசங்கீர்த்தனமென்று சொல்லத்தகும். நல்லபாவசங்கீர்த்தனத்துக்குப்பச் சாத்தாபம அல்லது மனஸதாபம் பிரதானமாய்வே ண்டியிருக்கக்கொள்ளப் பாவசங்கீர்த்தனத்துக்குப்ப ச்சாத்தாபமென்கிற நாமமானது செல்லுமென்றறி வாயாக. அவ்வண்ணமே கிரமத்தோடு பெறப்பட்ட ஞானஸநானத்தினிமித்தமாக மனுஷனவன் ஞான மேனாயாகச் சன்மித்துச் சன்மப்பாவமுதலான பாவங்களுடைய நிவாரணத்தையடையுமாப்போலே யப்படிப்பட்டமேனாயாகத்தானே மனுஷன் மறுப டியுங்கெட்டுப் பண்ணினபாவமாகிற வியாதியில்நின் று எழுந்திருக்கிறதற்குப் பாவசங்கீர்த்தனமென்கிற தேவத்திரவிய அநுமானமானது. கர்த்தாவினாலே கற் பிக்கப்பட்ட சஞ்சீவியான பரமாவிழதமாயிருக்கிற தென்று அங்கிகரிக்கக்கடவோம்.

பாவசங்கீர்த்தன முண்டென்பதற்குங் கிறீஸ்து வேதச்சபையிற் கட்டவும்விழ்க்கவும் பாவங்களைப் பொறுக்கவும் பொறுதிருக்கவுஞ் சேசுநாதர்கட்டளை யிட்டமுறையால் தீர்வையிடும்வல்லமை குருக்களுக்கு ண்டென்பதற்கும் வேதவுதாரணங்கள் அர்ச்.-மத்-சுவி-௰௮-௰௮-வச. அப்போஸதலர்முயற்சியாகமம். ௰௯-௰௮-அர்ச்.-யாகப்பர் - ௫ -௰௬-அர்ச்.-மத்-சுவி-௲ - ௬-அர்ச்.-அருளப்பர் - சுவி-௨௰-௨௨-௨௩.

வேதவிளக்கம் - ௰௩ம். அதிகாரம்-௩௩ம். பிரிவு ௪-வது. பச்சாத்தாபத்தைக் காண்க. தத்துவபோ தககுவாமி-௩-ம்காண்டம்-௩௰௪-ம். பாடம்.

---

## பாவசங்கீர்த்தனப்பலன்.

நல்லகிறீஸதுவர்கள் செய்கிற நற்கிருத்தியங்களி லே சர்வேசுரனுடைய பிள்ளைகளாகிற இலட்சணமு மோக்ஷத்துக்கு நிருபிக்கப்பட்டவரொன்றவடையாள மும்விளங்குகிறகிரியையாவதேதெனில்தன்னாத்துமத் தி லோரற்பவழுக்குமிருக்கவொட்டாம லெப்போது ம்பரிசுத்தமாயிருக்கவுஞ் சர்வேசுரனோடொன்றித்தி ருக்கவு மடிக்கடி பாவப்பொறுத்தலடைந்து சற்பி ரசாதம்பெறுகிறபத்தியாமே. அதைல்ப்படியே செய் யாமல் நாட்பட அசட்டையாய்த்திரிகிறவ னநேகவி டறுகளிலேவிழுவானென்கிறது சிலவுவமைகளினாலே காண்பிக்கப்படும்.

முதலாமுவமை யாவது.

கப்பலிலூறுகின்ற தண்ணீரையடிக்கடி யிறையா விட்டால் கப்பல்நிறைந்து அதிற்காப்பாற்றப்பட் டபொருளும்அழிந்து கப்பலுஞ்சிதைந்து கடலில்மிழ்

ந்திப் படியப்பாயுமே. அப்படியே மெய் வாய் கண் மூக்குச் செவியென்கிற பொறிகள்வழியாலும் மனமுதலான கரணங்கள்மாறுபடுநெறியாலும் வந்துசேருகிறபாவங்களை யடிக்கடிபாவநிவாரணம் பண்ணுவிட்டா லடர்ந்துமிருந்த பாவச்சலத்தி ன்திபாரத்தால் ஆத்துமமாகிற வரும்பொருள்கெட்டு ஆத்துமத்துக்கிடமாயிருந்த அழகியவுடலும்பட்டு அகோரமான நரகாக்கினிககடலிலே அமிழ்ந்தி யலறி வருந்தலாகுமே. இதையறிந்தநல்லோர் மனவூக்கமாகிய பாய்மரத்தை மகாவுறுதியாகநாட்டி தேவபத்தியும் பயமுமாகிய விரண்டுபாய்களையும் விரித்துக் கடவுள்தருந்தெளிந்தவரங்களாகிய காற்றுவீச நாள்தோறும்விடாத்தியானமாகிய மாலுமியால் அக்கப்பலைநடத்திக்கொண்டுபோகையில் ஊறுகிற தண்ணீரையொட்ட இறைத்துவிடுவதுபோ லுற்றபாவங்களைப் பாவசங்கீர்த்தனத்தால் விமோசனம்பண்ணி நிறைந்தவினைகளாகியகடலைக்கடந்துவானுலகாகியமோக்ஷக்கரையைசேர்ந்து மலிந்தபேரின்பத்தில் வாழ்ந்திருப்பார்கள்.

இரண்டாமுவமையாவது.

தனதுதோட்டம் வயல் உத்தியானமிதுகளையடிக்கடி யுழுதுசுத்தமாக்கிப்பயிரிடாதிருந்தால் ஒழியாதகளையும் ஊடுருவுமுள்ளுக்களும்டர்ந்து உயிரைக்கொல்லும் விஷசர்ப்பமுதலிய துஷடசெந்துக்களொருங்குடன்மிகுந்து அக்கினிக்கொழிய வேறென்றுக்குமுதவாமற் பலனெலாம்றறுப்பாழாய்ப்போகுமே. அவ்வண்ணமாய் நிலமாகிறவிருதயத்தைப் பாவசங்கீர்த்தனத்தாலுழுது பரிசுத்தமாக்காவிட்டால் நற்பயிராகிய சுகிர்தபலன்விளையாமல் புற்பயிராகிய துர்ப்பவமேவிளைந்து விஷசர்ப்பமாகிய வெறியலகைசேர்ந்து வெகுநரகத்திற போகலாயிருககும்.

மூன்றாமுவமையாவது.

தனதுவயலுக்குத் தண்ணீர்வருகிற வழியைமறித்

தால்நிலமுலர்ந்துவறண்டொருவித்துமுளைத்துப் பல
ன்றரமாட்டாதே. அப்படியே இஷ்டப்பிரசாதசலப்
பிரவாகம் வருகிறவழியாகிற பாவசங்கீர்த்தனமில்லா
மற்போனால் இதயநிலங்காய்ந்து தருமப்பலன்கள் வி
ளைவற்றுச் சலமில்லாமற்கெட்டுப்போம்.

நாலாமுவமையாவது.

தகப்பனுக்குத் துரோகமபண்ணினபிள்ளை மறுப
டியும் பொறுத்தலடையவாராம லெத்தனை நாள் ம
றைந்து பயந்து விரோதமாயிருப்பானோ வத்தனைக்
குப் பிதாவின்முனிவு * அதிகரித் தோருரிமையுங் கொ
டாமறறள்ளிவிடுவானே. அத்தன்மையே தீவிரமாய்ப்
பாவப்பொறுத்தலடையவாராத பாவவாளன் சர்வேசு
ரனுடைய வதிகமுனிவுச்குப் பாத்திரமாகி யவருடை
யவிரக்கத்தையு மோக்ஷவுரிமையையு மிழந்துபோவ
தற்குச்சந்தேகமில்லை.

மீளவு மநேககாலமாய் அசுத்தமாயின வஸதிரத்
தைச் சுத்திபண்ணவும் நெடுங்காலம்வளர்ந்த மர
த்தின் வேர்பறித்துப்பிடுங்கவும் வெகுதண்டிப்பாவ
துபோல் அநேககாலம் பாவநிவாரணம பண்ணாத
மனுஷனுடையமனது மாசற்றுத்தெளிவது அரிதா
மென்றறியவும். ஆகையா லிதிலுள்ளவருத்த மிரட்டி
க்காத்படிகருத் தாமதமில்லாமல் நலலபாவசங்கீர்
த்தனஞ் செய்வாயாக அதற்குமுழுமனதோடே து
ணிந்தாயாகில் தெய்வ அநுக்கிரகத்தினால் வருத்தமெ
லலாநீங்கலாகும். * கோபம்.

---

## சொற்பப்பாவங்களால் வருங்கேடுகள் காண்பிக்கப்படுவது.

முதலாவது.

தண்ணீர்குடத்துச்குச் சிறியசில்லியுண்டானாற்று
ளி துளியா யொழுகித்தண்ணீரெலலாம்போய் வெறுங்

குட்மாவதுபோல நாளுக்குநாட்செய்கிறசொற்பப்பா வங்களால் மனதிலிருந்த தேவபத்திகுறைந்து வெறுமையாகித் தேவப்பிரசாதமென்கிற சீவியம்போக் கடிக்கிற பெரும்பாவங்களில்விழ விடமாயிருக்கும்.

இரண்டாவது:

உருபசௌந்தரியமானஸ திரீயின்முகத்திற்சிறிதுபுண்குஷ்டமுண்டானு லெத்தனை யவலக்ஷணமாமோ அலங்காரமானவஸதிரத்திற்கொஞ்சவசுத்தம்பட்டா லெப்படி யசங்கியமாய்ப்போமோ அப்படியேசொற்பப்பாவப்பழுதுகளாலாத்துமத்தின்சுகிர்தவலங்காரங்கெட்டுத தேவசமுகத்துக் கருவருப்பாகப்படும்.

மூன்றாவது.

சில உரோகவியாதிகளுண்டாயிருக்கிறவன் சாகாமல் அநேககஸதி வருத்தங்களைப்படுகிறதுபோலே ஆத்துமத்தின் வியாதியாகிறசொற்பப்பாவங்களினுலேயிவ்வுலோகத்திலே அநேக கஸதிநிர்ப்பந்தங்களைப்பட்டு அவ்வுலோகத்திலே உத்தரிக்கிற ஸதலத்திலே அநேககாலம் நெருப்பால் வேகவேண்டியிருக்கும். ஆனதினு லுன்னுடைய உடலிலே எந்தெந்தச்சொற்பவியாதிகளு மதிகரிக்கவிடங்கொடாம லுடனேயதற்கான வவிழதம் அருந்திப் பரிகாரமபண்ணுவதுபோலவும் அழுக்காயின ஆடைகளை அடிக்கடி வெளுப்பதுபோலவும அநுதினம அந்திசந்திநீரால்முகங்கைகாற்கழுவிச் சுததமபண்ணி யசுத்தமநீங்கி யிருப்பதுபோலவும உன்னுத்துமத்திலுள்ள ஊத்தையாகியபாவப்பழுதுகளைப் பாவசங்கீர்த்தனத்தினு லு மனஸதாபககண்ணீரா லு மடிக்கடிகழுவிப் பரிசுத்தமாகித் தேவசமுகத்துக்குப் பிரியமாகக்கடவாய்.

# பாவசங்கீர்த்தனத்துக்கு

## ஆயத்தம்.



### பாவசங்கீர்த்தனத்துக்குமுன் யோசிக்கத்தக்கதாவது.

மனிதனானவனொருநாள் சாகிறது நிச்சயமுமாய்ச் சாவு எப்பொழுது வருகிறதோ தெரியாத்துமாய்ச் சாவானபாவத்தோடேசெத்தால் நரகத்தில்விழுகிறது தப்பாத்துமாயிருக்கிறபடியினாலே யாவரும்பாவத்தை நீக்கித் தங்களாத்துமத்தைச் சுத்திகரம்பண்ணுகிறது மிகுந்த அவசரமாயிருக்கின்றது. ஆகையாற் சேசுநாதர் தம்முடைய அளவில்லாத்தயையினாலே தமக்குவதிலாய்க் குருக்களையேற்படுத்தி எவர்களுடையபாவங்களைப் பொறுப்பீர்களோ அவர்களுக்குப்பொறுக்கப்படுமென்றதினாற் பாவவிமோசனஞ்செய்யுமவல்லமையை அவர்களுக்குத் தந்தருளினதைப்பற்றிப் பாவப்பொறுத்தலையடையத்தக்கதாக அவர்களிடத்திலே தகுந்த ஆயத்தத்தோடே பாவசங்கீர்த்தனம பண்ணவேண்டியது. அதுக்காக முந்தமுந்தத்தனக்கியாதொருபகையிருந்தா லதைவிட்டுத் தன்பகையாளியோடே நித்தியசமாதானமபண்ணவும புறத்தியாருக் கியாதொரு அநியாயஞ்செய்திருந்தால் தன்னாலானமட்டு மதைப்பரிகாரஞ்செய்யவும் வேண்டும். பிறருடைமைக்குங் கீர்த்திக்கும் வருவித்த நஷ்டத்தைத் தனனாலியன்றமட்டும் பரிகாரஞ்செய்யாமலும் வற்மமெல்லாம்விட்டுத்தனபகையாளியோடே சமாதானப்படாமலுமிருந்தாற் பாவப்பொறுத்தலு மோக்ஷமுமில்லையென றறிக. ஆகையாற் பகையநியாயமுதலிய பாவவிஷ மொருநிமிஷமு மனதில் வைக்கலாகாது.

ப்படும்போதும்மையுமுமமுடையதிருக்குமாரனை சேசுவையுநம்பி யடைக்கலமென்றுவந்தவர்களிலொருவராகிலுந்தேற்றரவு அடையாமற்போனார்களென்று உலகத்திலேசொல்லக் கேட்டதில்லையென்கிறதினாலே பாவியாயிருக்கிறநானும்வெகுநம்பிக்கையோடும்முடைய திருப்பாதத்தை யண்டிவருகிறேன். பாவிகளுக்கடைக்கலமான தாயே நான்முழுமனதோடும்முழுகையோடும் பெருமூச்செறிந்துகொண் டும்மைமன்றாடி யும்முடையவுபகாரசகாயத்தைக் கேட்கிறேன். என்னமூகையைப்பார்க்கவு மென்வேண்டுதலைக்கேட்கவுஞ் சித்தம்வைத்தருளும். அர்ச்மரியாயே சர்வேசுரனுடைய மாதாவே பாவியாயிருக்கிற நான் நல்ல ஆத்துமசோதனைபண்ணி மெய்யான வுத்தம்மனஸ்தாபப்பட்டுக் கெட்டியானபிரதிக்கினைசெய்து பாவப்பொறுத்தலையுந் தேவஇஷ்டப்பிரசாதத்தையு மடையும்படிக்கு எனக்காகவும்முடைய திருக்குமாரனைவேண்டிக்கொள்ள வும்மை மன்றாடுகிறேன். ஆமென் சேசு.

### காவலானசம்மனசை மன்றாடுஞ் செபம்.

சொல்லிலடங்காத மகிமையுள்ள அச்சீரியுமா யென்னை யாதரித்துக்காத்துக் கொண்டிருக்கிறவருமாயிருக்கிற சம்மனசானவரோ யிந்தச்சமயத்திலெனக்குச்சகாயமாய்வந்து நானுத்தமபிரகாரமாக ஆத்துமசோதனையையும் நல்லபாவசங்கீர்த்தனத்தையுஞ்செய்ய வெனக்கும்முடைய ஒத்தாசைசெய்தருளும்படிக்கும்மைப்பிராா்த்திக்கிறேன். ஆமென்சேசு.

அதற்குப்பின்பு ஒழுங்கோடே
ஆத்துமசோதனைபண்ணுவாயாக.

ஆகையால் நீ சர்வேசுரனுடையசமுகத்திலிருந்து அவர் தனித்தீர்வையிலுன்னைக்கணக்குக்கேட்கிறாரென்றுயோசித்து நீ பத்துக்கற்பனைகளுக்கு விரோதமாய்ச் செய்தபாவங்களையெல்லாம் முந்தமுந்த நினைத்துக்கொள்.

## ஆத்துமசோதனையொழுங்கு.



### முதற்கற்பனை.

மனதுபொருந்தி விசுவாச சத்தியத்திலே சந்தேகப்பட்டதும் விசுவாசத்து

ம்பண்ணினதும் பதிக்குறைவோடே யாசாரமில்லாமற் றூங்கி விழுந்துகொண்டு செபம்பண்ணினதும் சாவானபாவத்தோடிருந்தாலு நித்திரைக்குமுன் உத்தமமனஸ்தாபப்படாமற் சும்மாபடுத்துக்கொண்டதும் பகடிபேசுகிறபோது வேதவாக்கியங்களைக்கொண்டு பேசினதும் காற்றுமழையுவ்விணை யிவைமுதலான காலவேற்றுமையின்மேல் முறையிட்டு இழவுமழை யிழவுகாற்றென் றிவைமுதலான வார்த்தைகளைச்சொன்னதும் முன்செய்தபாவங்களை நினைத்து மனதிலேசந்தோஷிப்பட்டதும் அதுகளின்மேற் பெருமையாகப்பேசினதும் பாவத்துக்குமிகவு மேதுவானசமயத்திலே மனம்பொருந்தித திரிந்ததும் மற்றவர்கள்புண்ணிய வழியிலே நடக்கிறதற்கு விக்கினம்பண்ணினதும் பத்தியோடுநடக்கிறவர்களைப் பரியாசம்பண்ணினதும் யாதொருவார்த்தைதைப்பாடு பொருததினைபண்ணி யதைச்செலுத்தாத்தும் அக்கியாணிகள் துலுக்கர்திருவிழா முதலானதுகளைப் பார்க்கப்

போன்து ம்தற்கூழியமுதவிசெய்ததும் அவர்களுடைய நீறு விபூதிவாங்கினதும் வர்கள்படைததசோறு தேங்காய் முதலி யபண்டங்களைத தின்றதும்வர்களால் தன் னையாவது தன் சுற்றத்தாரையாவது மந் திரிக்கச்செய்ததும் குறததிவள்ளுவர்கெ வுளிசுவடிசாஸ்திரம் நல்லநாள் தகாதநா ள் தும்மல்கள முதலானவபததசாஸ்திர ஞ்சகுனம் பார்தததுங்கேட்டதும்கேட் டதைவிசுவசிததையப்பட்டதும்கண்திரு ஷ்டிபட்டதென்று மிளகாய்சுற்றிப்போ ட்டதுமல்லது வேறேயாதொரு திருஷ் டிபரிகாரமுதலான மந்திரதந்திரங்களை ச்செய்துகொண்டதும் அக்கியானபதித ப் புஸ்தகங்களைவாசிததது மதுகளைத் த ன்வசததிலேவைததது முண்டோவில்லை யோவென்று நன்றாய்நினைததுக்கொள்.

☞ மேலும் அந்தந்தக் குற்றத்தைச் செய்தது எத்தனை தரமென்று நன்றாயோ சித்துக்கொண்டு பாவசங்கீர்த்தனத்திலே வெளிப்படுததவும்.

## இரண்டாங்கற்பனை.

பொய்யானகாரியத்துக்காகிலுஞ் சந்தேகமானகாரியததுக்காகிலுஞ் சர்வேசுரனைச்சாட்சிக்கழைதததும் சததியம்பண்ணினதுமனதிலொன்றுவைததுக்கொண்டு வாயிலொருகாரியததைச் செய்வேனென்றதும் நல்லகாரியததுக்குச் சததியம்பண்ணிக்கொடுததபிறகு பின்வாங்கியதைச் செய்யாமற்போனதும் உன்னாணை யென்னாணை கண்ணாணை குருவாணை அப்பனாணை யென்றுசொன்னதும் புறத்தியார்சத்தியம் பண்ணக்காரணமாயிருந்ததும் புறத்தியார்செய்த வார்ததைப்பாட்டைச் செலுததாதபடிக்கு விக்கினஞ்செய்ததும் தனக்குததானே சாபம்போட்டுக்கொண்டதும் பாஷையிட்டுக்கொண்டதும் புறததியாளாச்சபிததது்ம் இன்ன நன்மையானகாரியததைச் செய்யேன் இன்னதின்மையான காரியததைச்செய்வேனென்று பற்றுக்கூறினதும் இப்படியாணையிடுகிற பொல்லாத வாடிக்கை

யைத்தள்ளப் பிரயாசப்படாமற்போன தும் சர்வேசுரன்மேல் முறையிட்டதும் அவருக்கு மர்ச்சியசிஷ்டர்களுக்கும் வி ரோதமாகத் தூஷணஞ்சொன்னது மு ண்டோ வில்லையோவென்று நன்றாய்வி சாரிததுப்பார். இப்படிப்பட்ட பாவங்க ளுண்டானல் எததனைதப மென்று நன்று ய்நினைததுப்பார்த்துப் பாவசங்கீர்த்தன ததிலே வெளிப்படுதததுவாயாக.

## மூன்ருங் கற்பனை.

ஞாயிற்றுக்கிழமை கடன்திருநாட்களி ல் முழுப்பூசைகாணமற்போனதும், கண் டாலும் பராக்கா யொடுக்கவணக்கமின்றி ப்பூசைகண்டதும் நாட்களைமுழுதும்வீ ணாய் விளையாட்டிலுஞ்சாரியிலுஞ் செலவ ழிததது‌ம், அந்நாட்களி லுத்தாரமில்லா மல்விலக்கப்பட்ட வேலைசெய்ததுஞ் செ ய்விததது‌ம்பாவம். இதுகளுண்டானல் எ ததனைதரமென்று நன்றாய்நினைததுப்பா ர்த்துக்குருவுடனே பாவசங்கீர்த்தனததி லேவெளிப்படுதததுவாயாக.

நாலாங் கற்பனை.

தகப்பன்றாய்முதலானவர்களையும் குருக்கள் துரைகள்முதலான பெரியோரையும் அசட்டைபண்ணி நிந்தித்துப் பிறக்கணித்து அவர்கள்பேரில் வெறுவருப்பாயிருந்ததும் அவர்கள்வார்த்தையைக்கேட் டவர்களுக்குக் கீழ்ப்படியாமலிருந்தது மவர்களுக்குச் சங்கைபண்ணுமற்போனதும் பிதாமாதாவானவர்களுக்குச் செய்யவேண்டியபணிவிடை யூழியங்களைச்செய்யாமற்போனதும் அவர்களுக்கு அன்னவஸ்திரங்கொடுத்துவிசாரியாமற்போனதும் அவர்களை யடித்ததும் அவர்கள் சாகவேணுமென்று மனதாயிருந்ததும் பாவம். தாய்தகப்பன்மார்தங்கள்பிள்ளைகளுக்குமந்திரமுபதேசம் புண்ணியவொழுக்கம் படிப்பியாமலுந் தக்கவுத்தியோகக்கல்விமுதலானதுகளைக் கற்பியாமலும் அவர்களைப்பூசைக்கும் பாவசங்கீர்த்தனத்துக்கு மனுப்பாமலு மவர்களுடைய நடத்தையை விசாரியாமலு மவர்களுடைய துர்க்குணங்களை அடக்கித்தண்டியாமலு மிருந்ததுந்

தண்டித்ததால் நியாயந்தப்பி யதிககோப க்கொடுமையோடே அடித்து நாசனமா ய்த்திட்டிச் சபித்ததும் பாவம். இதுகளு ண்டானால் எத்தனைவிசையென்று நன்றா ய் நினைத்துப்பார்த்துப் பாவசங்கீர்த்தன த்திலே வெளிப்படுத்தவும்.

ஐந்தாங்கற்பனை.

புறத்தியாரோடே கோபஞ்சண்டைப ண்ணினதும் அத்திப்பியமாய்த்திட்டித் தூ ஷணித்ததும் அடித்ததும் பகைவற்மமா யிருந்ததுமுண்டோ? அந்தப்பகை யெத் தனைநாளைந்நேரம்நின்றதென்று வி சாரித்துக்கொள். வற்மத்தினாற் பேசாம லுஞ் சங்கைசெய்யாமலு மிருந்ததும் ம னுஷர்பேரிலே வெறுப்பாயிருந்ததும்வர் களை மிகவும் நீசமாய்ப்பார்த்ததும் புறத் தியாருக்குவந்த பொல்லாப்பைக்கண்டு சந்தோஷிப்பட்டதும் அவர்களுக்குவந் த நன்மையைக்கண்டு கஸதிப்பட்டதும் அவர்க ளிவர்களுக்குச் சாவுகேடு வரவே ணுமென்றாசைப்பட்டதும் சொன்னதும்

பழிவாங்கினதும் பழிவாங்கமனதாயிருந்
ததும் புறத்தியாருக்குவருகிற பொல்லா
ப்பைத் தன்னாலேயானமட்டும் விலக்கா
மலிருந்ததும் தகாதமருந்துகொடுப்பித்
ததுந் தின்றதும் பிறருக்குத்துர்மாதிரி
கையாயிருந்தது ம்வர்கள்யாதொருபாவ
த்திலே விழக்காரணமாயிருந்தது முண்
டோவென்று நன்றாயாராய்ந்து சோதி
த்து அந்தக்குற்றங்களித்தனைவிசையென்
றுகுருவானவரிடத்தில்வெளிப்படுத்தவும்.

ஆறும்-ஒன்பதாங்கற்பனை.

கற்புக்குவிரோதமான கெட்டநினைவு
களுக்கும்பொல்லாதவாசைகளுக்கு மன
திலேயிடங்கொடுத்ததும் சிற்றின்பப்பா
ட்டுக்களைப்பாடினதுங்கேட்டதும் பாவ
த்துக்கடுத்த பேச்சுக்களைப் பேசினதும்
தகாதசரசபரியாசஞ்செய்ததும் ஆகாத
சேஷ்டைபண்ணினதுங் கெட்டபார்வை
பார்த்ததுங்கெட்டபுஸ்தகங்களைவாசித்த
தும் வஸ்திர அலங்கோலமாயிருந்ததும்
அல்லதுகெட்டகருத்துக்குத் தன்னையலங்

ளித்ததும் அநாநடத்தினதும் சுபுக்கு விரோதமாகியலாகிரியானவஸ் துக்களைத் தின்றதுங் குடித்ததும் கற்புடையோர்க ளுக்குத் துர்ப்புத்தி துர்நடத்தை கற்றுக் கொடுத்ததும் பாவத்துக்கேதுவானவிட ங்களிலே திரிந்ததும் பாவப்பழக்கமாயி ருந்தது மின்னம்வேறெயாதொருபாவத் துரோகஞ்செய்தது முண்டோவென்று தேவசமுகத்திலே நினைத்துக்கொள்ளுக. இந்தப் பாவங்களெல்லா மித்தனைவிசை யென்று சொல்லவேண்டியதல்லாமலுந் தான்பேட்சித்தவர்களும் பேசினவர்களு ங் கலியாணக்காரரோ கலியாணமில்லாத வர்களோ கிட்டினவுறவோ தூரவுறவோ அந்நியரோ இதுமுதலானவிசேஷங்களை விவரிக்கவும்வேண்டியது.

ஏழாம் - பத்தாங்கற்பனை.

பிறருடைமைமேலே யாசைப்பட்ட துந் திருடக்கருத்தாயிருந்ததும்திருடின துந்திருட்டுடைமைவாங்கினதும் திருடச் சொன்னது மதற்குதவிசெய்ததும் கொ

ல்ளல்விற்றலிலே அளவுநிறையிலே மோ சம்பண்ணினதும் கூட்டாளிகளுக்கு மற் றவர்களுக்கும் வஞ்சனை துரோகம்பண் ணினதும் செல்லாப்பணங்களைச்செலுத் தி யாகாத்தை நல்லதென்று பித்தலாட்ட ம்பண்ணினதும் திருடினதை யுத்தரீயா மற்போனதும் கண்டெடுத்த வுடைமை யை யதற்குடையவர்களை விசாரித்துக் கொடாமற்போனதும் உடன்படிக்கை த்தப்பினதும் தான்சுமந்த ஊழியக்கட மைகளைச் சரியாய்ச்செலுத்தாமல் அச ட்டையாயிருந்ததும் புறத்தியாருக்குக் கொடுக்கவேண்டிய கடன்களைக்கொடுக்க அவகாசமிருந்துங்கொடாமல் அலைக்கழி த்ததும் புறத்தியார் பிழைப்பைக்கெடுத் துச்சேதம்வருவித்துத்தான்மாத்திரம்பி ழைக்கப் பேராசைப்பட்டதும் அடைக் கலமாகவைத்ததை யபகரித்துக்கொண்ட தும் சேவித்து வேலைசெய்தவர்களுக்கு ண்டான சம்பளங்கூலிகொடாமற்போன தும் எழை பரதேசிகளுடைமைகளைக்க ட்டாயமாய்ப் பறித்ததும் கபடுதந்திரம்

பண்ணிக் கைப்பற்றினது முண்டோவில்லையோவென்று கவனித்து எத்தனைதரமென்றும் புறத்தியாருக்கு எவ்வளவுநஷ்டம் என்னபொல்லாப்பு வந்ததென்றும் வெளிப்படுத்தவும்.

எட்டாங்கற்பனை.

பொய்ச்சாட்சிசொன்னதும் பக்ஷபரியாசத்துக்காகிலும் புறத்தியார் முகப்பிரிதிக்காகிலுந் தன்குற்றங்களை மறைப்பதற்காகிலும் பொய்சொன்னதும் ஒருவனிடத்திலே யில்லாதநன்மைகளைச்சொல்லி யவனைப்பசப்பினதும் புறத்தியாருடையகுற்றங்களை அவரிவருடனேசொல்லிப் பிரசித்தப்படுத்தினதும் ஆவலாதியவதூறுண்டாக்கினதும் கோள்குண்டணிபேசினதும் கேட்டதும் புறத்தியாருடையகருத்துக்கும் வார்த்தைக்கும்நடத்தைக்கும் விரோதார்த்தம்பண்ணி விபரீதஞ்சொன்னதும் அவர்களுடைய இரகசியங்களை வெளிப்படுத்தினதும் இவனவன் சொன்னதையுஞ் சொல்லாததையுங்கங்

கேகொண்டுபோய்ச் சண்டைவற்மங்களை மூட்டினதுமுண்டோ வில்லையோவென் று விசாரித்து இதெல்லாம்பெரியகாரிய மோ சின்னகாரியமோ அதினால்புறத்தி யாருக்கு மெத்தமோசம் வந்ததோவில் லையோ எத்தனைபெயர்முன்பாக அப்ப டிப்பட்ட ஆவலாதிமுதலான பொல்லா ப்புக்களைப் பேசினதோவென்றும் எத்த னைதரமென்றுநன்றாய் ஞாபகம்பண்ணிப் பாவசங்கீர்த்தனத்திலேவிளக்கமாக்கவும்.

பின்னு மேழுதலையான பாவங்களினமே லாத்தும சோதனை செய்வாயாக.

## ௧-வது. ஆங்காரம்.

தனக்குள்ளபுத்தி கல்வி சரீர அலங்கார ங் குலம் ஆஸ்தி முதலானதுகளைக்கண்டு மனதிலே யாங்காரித்துச் சந்தோஷிப்ப ட்டுத் தன்னைத்தானே பெரிதாயெண்ணி மற்றவர்களைநிந்தித்ததும் தனக்குத்தோ த்திரமுங் கீர்த்தியுஞ்சிமையும்வர அந்தந் தக்காரியங்களைச் செய்ததும் சொன்ன துமுண்டோவில்லையோவென்று நன்றா ய்நினைத்துச் சங்கீர்த்தனம்பண்ணவும்.

சாந்தமனமுந் தாழ்ச்சியுமுள்ளவரா யிருக்கிறே ம் எனறுபேசகுநாதர் திருவுளம்பற்றினர். அர்ச்.-மத். யக-அதி-உகூ-வச.

## உ-வது. உலோபம்.

திரவியத்தின்மேல் மிகுந்தவாசையினு லே யதுசம்பாதிக்க வெகுகருத்தா யெ ந்நேரமு மதுவே விசாரமாயிருந்ததும் ஏழைபரதேசிகளுக் கிரங்கியீயாமலிருந் ததும் திரவியத்தின்மேலுள்ள மிகுந்த வாசையினுலே யதைத் தன்சீவனைப்போ லேபார்த்ததும் சர்வேசுரனுக் கேற்காத காரியமாயிருக்கும். இந்தப் பாவங்களை யெல்லாம் நினைத்து அதுகள்சுவாமிக்கெ த்தனைபொருந்தாதென்று விசாரித்து இ ருதயத்திலே விதனமுந் துக்கமும் வருவி த்து நன்ருய்ச்சோதித்துச் சொல்லவும்.

உன்னைக்கைந்நெகிழவுமாட்டோம் விட்டுவிடவுமா ட்டோமென் றுண்டவர் திருவுளம்பற்றினபடியா னு ங்களுக்குள்ளதேபோதுமென்று நீங்கள் உலோபத்த ன்மையின்றியிருக்கக்கடவது. அர்ச்.-சின்-எபிரே-யகூ-ரு.

நாமிவ்வுலகத்தி லொன்றைக்கொண்டு வந்ததுமி ல்லைச் சந்தேகமின்றியாதொன்றைக் கொண்டுபோக வுங்கூடாது. அர்ச்.-சின்ன-க. திமோ-கூ-எ. ஐயோ! ஐசுவரியவானகளே நீங்க ளுங்களாறுதலையடைந்தா யிற்றெனகிறதினுலே உங்களுக்குக்கேடு. அர்ச்.- லூ- கூ-உச.

## ங-வது. மோகம்.

ஆறுங்கற்பனையைக்காண்க.

நீங்கள் சர்வேசுரனுடைய தேவாலயமென்று மவருடைய இஸ்பிரீத்துவானவருங்களிடத்தில்வசிகிகிறுனென்று மறியீர்களோ. ஆனுலியாதொருவன் சர்வேசுரனுடைய தேவாலயத்தை யசுத்தப்படுத்தினுற் சர்வேசுரனவனைச்சங்கரிப்பார். ஏனெனில்சர்வேசுரனுடைய தேவாலயம் பரிசுத்தத்தனமுள்ளது. அந்தத்தேவாலயமோ நீங்கள்தானே. க -கொருந்தியர்-ங-௰எ. வேசிக்கள்ளருவது அசுத்தருவது விக்கிரகங்களின்டிமையாகிய உலோபியாவது சர்வேசுரனுடையதுங்கிறீஸதுவினுடையதுமாகிய விராச்சியத்திற் சுதந்தரம்டைவதில்லை. எபசர்-ரு-ரு.

## ச-வது. கோபம்.

கோபவெறிகொண்டதும் மூர்க்கமாயிருந்ததும் கோபித்துச் சண்டையிட்டுச்சச்சரவுப்பட்டதும் ஆற்றுமற் சஞ்சலமுற்றதும் கடினதண்டனைபண்ணினதுமுண்டோவில்லையோவென் றுராயவும்.

நாமுங்களைநேசித்ததுபோல் நீங்களு முங்களுக்குள்ளொருவனொருவனைச் சிநேகியுங்கள். அர்ச். அருள.௰ங-ஙச-அர்ச்-மத்-௰௧-உ௬-ா அ௰௬-ஏட்டிற்காண்க.

## ரு-வது. போசனப்பிரியம்.

போசனத்திலே மட்டுத்திட்டங்கடந்தாவலோடுபொசித்ததும் கடனெருசந்

திபிடியாமற்போனதும் வெள்ளிசனிசுத்தபோசனநாட்களிலுந் தபசுநாட்களிலுமாம்ஸஞ்சாப்பட்டதும் புத்திமயங்கச்சாராயங்கள்ளுக்குடித்ததும் இனிநரகத்திலே நித்தியதாகத்தைத்தணிக்க வொருதுளியுங்கிடையாமல் தவிப்பதற்கேதுவாகநேரந்தப்பினபோதும் பெருண்டியாயுண்டுங் குடித்துஞ் சரீரவின்பத்துக்குமாத்திரஞ் சார்வதாவடிமைப்பட்டுச்செபதபமுதலான தேவவூழியங்களிற் சீரணித்துத் தீயமிருகம்போலே திரிந்ததுமுண்டோவில்லையோவென்று செவ்வையாகச்சிந்தித்துச் சொல்லவும்.

நாம்நேகம்விசை யுங்களுக்குச்சொன்னபடியே யிப்போதைச்கு மழுதுசொலலுகிறோம். சிலுவைக்கெதிராளிகளா யநேகர்நடக்கிறதுண்டு. அவர்களுடைய முடிவு அழிவாம். வயிறேயவர்களுக்குத்தெயவப். லவ்கிககாரியங்களை நாடுகிற அவாகள்மகிமை வெட்கக்கேடாயிருக்கும. அாச்.-சின்-பிலிப்-ங-யஅ.

## கஈ-வது. காய்மகாரம்.

பொறுமையாற் புறத்தியாருக்கு வந்தவாழ்வைக்கண்டு வருந்தித் தாழ்வைக்க

ண்டுகளித்துப் புறத்தியாரையு மவர்கள் பொருளையு நிந்தித்துப் பழுதுபேசினது‌ம் காய்மகாரத்தாற் றனக்கொருலாபமில்லாமற்போனாலுந் தன்மனங்காய்ந்து புறத்தியாருடையநன்மையைக்குறித்துச் சஞ்சலக்கவலைப்பட்டது முண்டோ வென்று கவனித்துணாக்கவும்.

காய்மகாரங்கள் கொலைகள் வெறிகள் பெருந்தீனிகள் முதலியவைகளை யநுசரிக்கிறவாகள் சாவேசுரனுடையவிராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லையென்றுமுன்னே நாமுரைத்தபடியே யிப்பொழுதுமுங்களுக்குரைக்கிறோம். கலாத்தியா-ரு-உக.

## எ-வது.சோம்பல்.

சீவியகாலமெவ்வளவு கொஞ்சமென்று மதில்றிய வேண்டின நற்காரியங்க ளெத்தனைவிஸ்தாரமென்றும் நித்தியகாலமு மநுபவிக்கப்படு முடியாதபாக்கியத்தையிகத்திலிருக்கு மிந்தக்கொஞ்சக்காலத்திலே சம்பாதித்துக்கொள்ளக்கூடுமானதாயிருக்கையி லொருநிமிஷமாகிலும் வீண்பொழுது போக்கப்படாதென்று நன்றாயோசித் திந்தவரியகாலத்தைச் சுகிர்தத்திற் செலவழிக்கக்கடவாய்.

காலத்தைவிருதாவாய்ச் செலவழித்ததும் விசேஷமாய்த்தன்னுடைய வந்தஸ்துக்கடுத்த தொழில்களைச் சோம்பலினாலேசெய்யாமற் காலத்தை விளையாட்டி

லுந்தூக்கத்திலுஞ்செலவழித்ததுஞ்சோ ம்பலினாலே ஞாயிற்றுக்கிழமை கடன்றி ருநாளிற் பூசைக்குவராமல் தப்பிப்போ னதும் பாதிபூசைக்குப்போனதும் வரு ஷந்தோறும் பாவசங்கீர்த்தனஞ்செய்யா த்தும் பாவசங்கீர்த்தனத்துக்கு நல்லவா யத்தம் பண்ணாத்தும் தன்பாவங்களையெ ல்லாம் போனபாவசங்கீர்த்தனத்திற் சரி யாய்ச்சொல்லாமலேதாகிலு மொளித் ததுமுண்டோவில்லையோவென்றுராய்ந் துபார்த்து வெளிப்படுத்துவாயாக.

சோம்பேறியே! எறும்பைப்பார்க்கப்போ. சோம் பேறிக்கு மனதுமுண்டுமனதுமில்லை. அபேட்சைகள் வனுயிரைக்கொல்லுகின்றன. ஏனெனில்லவனுடையக ரங்கவேலைஞ்செய்யமாட்டாதிருந்தன. சாதுரி யாகமம் - ௬ - ௬௰௩ - ௪௨௧ - ௨௫.

நற்கனிகொடாதமரமெலாம் வெட்டுண்டக்கினி யிற்போடப்படும். அச்.-மத்-எ-௰௯.

---

அடிக்கடிபாவசங்கீர்த்தனஞ் செய்கிறவர்கள் நே ரமொழியாதவர்கள் முதலியவர்க ளிதனபினவருகிற சுருக்கமான ஆத்துமசோதனையை வாசித்தாயத்த ஞ்செய்யவாகும்.

௲-வது.—தினச்செபஞ்செய்யாமல் தப்பினதும், விசுவாசத்துக்காகிலும் நம் பிக்கைக்காகிலும் விரோதமான நினைவு

களுக்குஞ் சந்தேகங்களுக்கு மிடங்கொடுத்ததும், சர்வேசுரனைப் பத்தியோடே சினேகியாமலும் நினையாமலும் ஆராதிக்காமலு மிருந்ததும், கோயிலுக்குந்தேவகாரியங்களுக்கும் வணக்கக்குறைச்சலைப்பண்ணினதும், பசாசிஞராதனையைப் பார்க்கப்போனது மதுக்குப்படைத்த பண்டங்களைத்தின்றதும், சகுனஞ் சாஸ்திரம் பார்த்ததும் நம்பினதும் வியாதியிலே அஞ்ஞானிகளால் மந்திரிக்கச்செய்ததும் திருஷ்டிபரிகார மிதுமுதலான அஞ்ஞானச் சடங்குகளைச் செய்ததுமுண்டோ?

☞ ஒவ்வொருபாவத்தைச்செய்தது எத்தனைவிசையென்று யோசித்துப்பார்.

உ-வது.—பொய்க்காரியத்துக்காகிலும் வீண்காரியத்துக்காகிலுஞ் சுவாமியாணை முதலான ஆணைசத்தியம் பண்ணினேயோ?

௩-வது.—ஞாயிற்றுக் கிழமையையுந் திருநாட்களையும் விலக்கப்பட்ட வேலையினாலேயாவது துர்நடக்கையினாலேயா

வது மீறினையோ அல்லது மீறச்செய்தா யோ?

௪-வது — தாய்தகப்பன்மார்களுக்குக் கீழ்ப்படியாமலு மவர்களைச் சிநேகியா மலும் வணங்காமலும் அன்ன வஸ்திரங் கொடுக்காமலு மிருந்தாயோ? அவர்களை யெதிர்த்துப்பேசித் திட்டி நிந்தித்த துண்டோ? தாய்தகப்பன்றங்கள்பிள்ளைகளை வேதப்பிரகாரமாய் நடப்பியாமலிருந்த துண்டோ?

௫-வது.—புறத்தியாரோடு சண்டை செய்தது மவர்களைத்திட்டினதுஞ் சபித் ததும் பகைத்தது மடித்ததும் அல்லது வேறேயாதொரு பொல்லாப்புச்செய்த துமுண்டோ?

௬-வதும்.— ௯-வதும்.— கற்புக்குவி ரோதமான கெட்டநினைவு துராசை ஆ காதபேச்சுக்கள் சிற்றின்பப்பாட்டுக்கள் தகாதபரியாச மிதுமுதலான பாவத்து ரோகங்களினு லுன்னுத்துமத்தை யசுத் தப்படுத்தின துண்டோ.

எ-வதும்.—௰-வதும்.—புறத்தியாரு டைய உடைமையை அபேட்சித்ததும்

திருனடிதும் இதுமுதலான அநியாயஞ் செய்ததுமுண்டோவென்று நினைத்துப் பார்.

திருச்சபையின கட்டளைகளுககு
விரோதமாய்-

௧-வது.—ஞாயிற்றுக் கிழமைகளிலு ங் கடன்றிருநாட்களிலும் பூசைகாணாம ல் தப்பிப்போனாயோ?

உ-வதும்.—ங-வதும்.—வருஷந்தோ றும் பாவசங்கீர்த்தனம்பண்ணாமலுந் தே வநற்கருணை வாங்காமலு மிருந்தாயோ?

ச-வது.—வெள்ளிசனிக்கிழமைகள் மு தலியசுத்தபோசன நாட்களையாவது ஒ ருசந்தி நாட்களையாவது மீறினாயோ?

மேலும் ஆங்காரத்தினாலுன்னைப் பெ ருமையாயெண்ணிப் புறத்தியாரை நிந்தி த்தாயோ?

கோபங்காமம் உலோபத்தனம் போச னப்பிரியஞ் சோம்பலிதுமுதலான பாவ ங்களுக்கிடங்கொடுத்ததுண்டோ?

உன் அந்தஸ்தின் கடமைகளைச் செலு த்தாமற் செய்ததப்பிதமேதோவென்று நினைப்பாயாக. அப்படியே வேதகற்ப

னைகள் உன்கடமைகளெல்லாத்தையும் ஒவ்வொன்றாய் விசாரித்து உன்பாவங்களையெல்லாம் ஞாபகப்படுத்திக் கொள்ளும்படிக்குத் தகுமானநேரமளவாய் ஆத்துமசோதனைபண்ணுவாயாக.

## ௨-வது. மனஸ்தாபம்.

☞ நல்லபாவசங்கீர்த்தனஞ் செய்வதற்கு மெய்யானமனஸ்தாப மெத்த அவசரமா யிருககிறபடியினாலே உனபாவங்களைவெறுத்து மிகுந்ததுக்கத்தோடே சர்வேசுரனைமன்றாடிப் பாவப்பொறுத்தலைக் கேட்பாயாக.

## ஆத்துமசோதனைக்குப்பின் செபம்.

### மனஸ்தாபப்பிரகரணம்.

ஆ! என்சர்வேசுராசுவாமீ யுமதுசமுகத்திலே யிந்தமுகத்தோடே வெட்கமில்லாம லென்னென்றுவருவேன். எத்தனையோவிசை யிந்தப்பாவங்களைச் செய்யேனென்றுபிரதிக்கினைபண்ணினேன். மீளவுமற்ப முகாந்தரத்துக்காகவுங் கொஞ்சநீ

சச்சுகத்துக்காகவு மும்முடையசமுகத்தி லே கூச்சமில்லாம லுமக்குப்பொருந் தாத விந்தப்பாவங்களைச் செய்யத்துணி ந்தது நியாயமா? ஆ! என் நல்லசேசுவே, யென்றிவ்வியகர்த்தரே! சகல பிதாக்களி லுமுத்தமபிதாவே யென்மேலுமக்குவந் தகோபத்தையமர்த்தி யென்குற்றங்களையு ம்முடைய திருக்காயங்களைப்பார்த்துப் பொறுத்துக்கொள்ளும். உம்முடையநீதி ப்பிரகார மென்னைத் தண்டியாதேயுஞ்சு வாமீ. மட்டில்லாதசிநேகத்துக்குப் பா த்திரமாயிருக்கிறதேவரீருக்கு இந்தப்பா வங்களினாற் குறைவருத்தினேனென்கிறதி னாலே மிகவுமனஸ்தாபமா யிருக்கிறேன் மெய்யாகவே மனஸ்தாபமா யிருக்கிறே ன் முழுமனதோடே மனஸ்தாபமாயிரு க்கிறேன். சுவாமீ யென்மே லிரக்கமாயி ரும்.

தயாபரனாயிருக்கிற வாண்டவரே நா ன்செய்தபாவங்களையும், புறத்தியாராற் செய்வித்தவைகளையும், பொறுத்துக்கொ ள்ளும். நான்செய்யவேண்டிய தர்மங்க

ளைச் செய்யாமற்போனதையும், தாறு மாறாய்ச் செய்ததையும் பொறுத்தருளு ம். இந்தத்துரோகபாவங்களை யெல்லா ஞ்செய்ததினாலேமிகவும்விதனப்பட்டு அறிந்து அநியாயமாய்ச்செய்தேனென்று சொல்லி யந்தப்பாவங்களுக்கெல்லா மு த்தரிப்பாகவும், தேவரீருடைய தேவநீதி க்குப்பரிகாரமாகவும், என்னுடையவிர த்தமெல்லாஞ்சிந்தவும், உயிரைமுதலா ய்ச் செலவழிக்கவு மனதாயிருக்கிறேன்.

ஐயோ! என்னாத்துமமே நான்செய்த விந்தப் பாவங்களுக்குச் சரியானமனஸ் தாபப்பட்டாலல்லோ தாவிளை. நானெத் தனை துக்கப்பட்டாலும் எத்தனை கண்ணீ ர்விட்டாலும் நான்செய்தவெண்ணிறந்த அக்கிரமப்பாவங்களுக்குப்போதுமென் றெண்ணக்கூடுமோ.

என்றிவ்வியவிரட்சகரே என்மதுரமே சுவே! தேவரீர் பூங்காவனத்திலெங்கள்பா வங்களுக்காக மனஸ்தாபப் படும்போது உம்முடைய திருவிருதயத்தை முழுகடி த்த துக்கசாகரத்திலொருதுளி யென்னு

டையவிருதயத்திலே விழப்பண்ணியருளும். இந்தத்துக்கமிகுதியினலேயுயிரைவிடவும் ஒன்றில் மரணபரியந்த மிடைவிடாம லழுதுகொண்டு நாள்விடவு மனதாயிருக்கிறேன் சுவாமீ.

தனபாவங்களைச் சாவேசுரனேடே
சங்கீர்த்தனம்பணணுகிறபிரகரணம்.

ஐயோ! சுவாமீ அடியேனித்தனையசுத்தமுள்ள பாவியாயிருக்கையில் தேவரீருடைய சந்நிதியிலேயெப்படிவரத் துணிந்திருக்கிறேன். உமது திருச்சமுகத்திலென் பாவதோஷங்களை மறைத்தொளிக்க வழியில்லை. நீரொன்னிடத்திலேமிகவு மிரகசியமாயிருக்கிற பாவங்களையும் துகளுடைய தீமைகளையுந் தெளிவாயறிவீர். உம்முடையமட்டில்லாத ஞானத்துக்கு மறைவாயிருக்கிற காரியமொன்றுமில்லையே. அப்படியிருந்தாலு மடியேன் றனே யென்னுடையபாவங்களை யுமது சமுகத்திலே சங்கீர்த்தனம்பண்ணவேணுமென்று திருவுளமாயிருக்கிறீரோ. அடியேனும்முடைய திருவுளப்படியெனக்

கு நான்றுனே விரோதியாயிருந் தென் மேலே நானே மிகுந்த துக்கத்துடனே வியாகுலப்பட்டு முறையிட்டு என்பாவ தோஷத்தைச் சங்கீர்த்தனம் பண்ணுகி றேன்சுவாமீ.

கர்த்தாவேயென்னைப்போல வுலகப்பு ழுக்களாயிருக்கிறமனிதருக்கு நான் தப்பி தஞ்செய்திருந்தாற் பரிகாரம்பண்ணக்க டனுண்டே. ஆனால்தேவரீருக்கேதுரோக ஞ்செய்ததனாலெத்தனையோவதிககடன்சு மந்திருக்கிறது. ஏனெனிற் சர்வத்துக்குங் கர்த்தாவாகிய தேவரீருக்குச்செய்த து ரோகத்துக்குமுன்பாகமனிதருக்குச்செ ய்த குற்றமெல்லா மொன்றுமில்லாததா கத்தோன்றும். என்னக்கிரமப் பாவங்க ளினாற் சுவாமீ யடியேனுமக்குமாத்திர மே துரோகம்பண்ணினேன். உமதுசந் நிதியிலேதானே பாவதோஷத்தைக் கட் டிக்கொண்டேன். உம்முடையகண்கள்த ற்குச் சாட்சியாயிருந்தது.

தாழ்ச்சியின பிரகரணம்.

ஆ! என்றிவ்வியபிதாவே யடியே னும க்கருவருப்பாயிருக்கிறவித்தனை பாவங்க

ளைச்செய்தபிறகு இன்னமும்மை யென் பிதாவென்றுசொல்ல வெப்படிமனந்து ணிவேன். ஐயோ! சர்வேசுரா இந்தப்பாவ தோஷங்களினாலே யும்மை நிந்தித்து அ சட்டைபண்ணி யும்மைவிட்டுப்பிரிந் து மக்குச் சத்துருவாய்ப்போனபின் இன்ன மும்முடையபிள்ளையென்கிற மகிமையா னபேறைக்கொண்டிருக்க நான்பாத்திர முள்ளவனோ. இன்னமுமக்குமெனக்கும் ப்படிப்பட்டமுறை நடக்கவேணுமென் றுதேவரீரைக்கேட்க வெனக்குநாவுமுண் டோ. ஆகையாற் சுவாமீ யடியே னிப் போது தேவரீரைக்கேட்கிற வுபகாரமே தென்று னும்முடைய ஏவலைச்செய்து சேவித்துநிற்கு மூழியக்காரர்களி லொ ருவனாக வடியேனுமிருக்கத் தயைபண் ணும். இம்மாத்திரந் தயைபுரிந்தீரானா லது வேபோதும். அதுவேயெனக்குச்சம் பத்து, அதுவேயெனக்கானந்தம், அது வேயெனக்கு மோக்ஷபாக்கியம்.

ஆமென் சேசு.

தேவநீதியுடையபயத்தினபிரகரணம்.

ஆ! என்னாத்துமமே, நித்தியசீவியமான சர்வேசுரனிடத்திலே யாக்கினைப்பட அகப்படுகிற தெத்தனையோ அகோரம். சுவாமீ தேவரீர் பாபாத்துமாக்களைத் தண்டிக்கிறபோது விளங்குகிற கோபாக்கினியின்கோரத்தை நாவினாலே சொல்லத்தக்கவர்களார். சகலபாவ அக்கிரமமும்அருவருக்கிற தேவரீருடைய நீதித்தீர்வையின் பயங்கரத்தை நடுக்கமுந் துணுக்கமு மில்லாமல்-நினைக்கத்தக்கவர்களார். ஆகையாற்சுவாமீ தேவரீர்கோபத்துடனே யெனக்குத்தீர்வையிடாதேயும். சுவாமீ தேவரீர் பாபாத்துமாக்களுக்குச் செய்கிறபாரபத்தியத்தி னுக்கிரத்தையு மென்பாவத்தின் வலட்சணத்தையுங் கொடுமையையு நினைக்கும்போ தெனக்குவருகிற பயத்தினாலே யென்னுடையவிருதயங் கலங்கிப்போகிறது. என்புத்திமயங்கிப் போகிறது, என்சரீரநடுநடுங்கி மயிர்க்கூர்ச்சிடுகிறது. சுவாமீ தேவரீ ரென்கண்களைத்திறந் துமது நீதியினுக்கிரத்தைக் காண்பித்

தபிறகு என்பாவங்களிடைவிடாமலென்
கண்முன்பாகநிற்கிறது. அதுகளுடைய
தின்மைகளையு மவலட்சணக்கோலத்தை
யு முற்றுப்பார்த்து முன்புமதிதப்பிய
துகளின்மேலெத்தனை பிரியசந்தோஷ
ப்பட்டேனோ வத்தனைக்குமிப்போது து
க்கப்பட்டதுகளைவெறுக்கிறேன். இன்ன
ம் துகளை யதிகமாய்வெறுக்க விரும்புகி
றேன்சுவாமீ. அதற்காகவடியேனுக் கநு
க்கிரகஞ்செய்தருளும்.

ஆ! என்பிரியகர்த்தரோ, நித்தியகாலத்
துக் கும்மைவிட்டெப்படிப்பிரிந்திருக்கி
றது. சபிக்கப்பட்டவனே நம்மைவிட்டு
நித்திய அக்கினியிலேபோவென்று கோ
டையிடிக்குச்சமானமாகவும்முடைய தி
ருவாயினின்று புறப்படுந் தீர்வைவாக்கிய
த்தை யென்னென்றுகேட்பேன். ஆரிதற்
குத் துணிந்துகாதுகொடுக்கிறவர்கள். சு
வாமீ என்சுவாமீ யடியேனையும்முடைய
நீதிப் பிரகாரத்துக்குத் தீர்வையிடாதேயு
ம். உமிதமட்டில்லாத தயையைப்பாரு
ம். அதுவெனக்காகமனுப்பேசுகிறதைக்

கேட்டுமக்கென்மேல் வந்தகோபத்தை யமர்த்தியருளும்.

☞ சர்வேசுரனுடைய கோபாக்கினைக்குமாத்திரப்பயந்து மனஸ்தாபப்படுகிறதுபோதாம ல்வரைச்சினேகிக்கவுமவேண்டியது. மீளவு ம்வரைச்சினேகிக்க வ்நேகாநேகமுகாந்தரங்க ளுண்டாயிருந்தாலும சினேகியாமற் பாவத்துரோகஞ் செய்தபடியினாலே மிகுந்தமனஸ்தாபப்பட வருந்தவேணும.

நன்றியறிந்தசினேகமுள்ளமனஸ்தாபப்
பிரகரணம.

என்சர்வேசுரசுவாமீ ! பாவவழியிலே நடந்தவநேகம்பேர்கள் தங்கள் பாவங்களைவிட்டுத் தபசுபண்ணினபோது அவர்களிடத்திலே நீர் விளங்கப்பண்ணின வும்முடைய தயாபத்தையு மிரக்கத்தையு நினைத்துக்கொண்டு அவர்களைப்போலேமிகுந்த தாழ்ச்சி விநயத்துடனே யுமதருகில்வருகிறவடியேனைப் பிறக்கணித்துத் தள்ளாதேயும். துக்கவியாகுலத்தி ல்மிழ்ந்தியிருக்கிற வென்னை யும்முடைய கிருபாகடாக்ஷத்தினாலேபார்த் தென்மேலிரக்கமாயிரும். என்பாவங்களைப் பொறுத்தருளும்.

ஆ! சுவாமீ யித்தமட்டுந் தேவரீர்மட்டில்லாத பொறுமையுடனே யெனக்காக்

கிணையிடாம லென் அக்கிரமநடக்கையை
ப் பார்த்துக்கொண்டிருந்தீரோ. அந்தப்
பொறுமையான தயாளத்தைக்கண்டாகி
லு நானென்பாவங்களை யருவருக்கவும்
இத்தனை தயாபரனாயிருக்கிற தேவரீரை
மிகுந்தபட்சத்துடனே சிநேகிக்கவும்
நியாயமுண்டு.

அடியே னித்தனை கிருபையுள்ளவரு
மாய் மட்டில்லாத நன்மைத்தனமுள்ளவ
ருமா யிருக்கிறதேவரீருக்குத் துரோகம்
பண்ணினதைக்கண்டு மிகவு மனஸ்தாப
மாயிருக்கிறேன். சுவாமீயடியேனுமது
மட்டில்லாத்தயையைத்தாவரமாகவேண்
டிக்கொண் டென்பாவங்களைவிட்டுத் தப
சுபண்ணமற்போன லென்றலைமேலுமது
துகோபாக்கினியி ன்கோசவிடியை விழ
ப்பண்ணத் திருவுளமாயிருக்கிறீரொன்று
கண்டு இப்படிப்பட்ட வுக்கிரமானகோ
பத்துக்குப் பயந்திருக்கிறேனென்றாலு
ம் இதிலுந்தேவரீருடைய சிநேகத்தைப்
போக்கடிக்கிறதற் கதிகமாய்ப்பயப்பட
க்கடவேன். ஆகையால் நரகத்தினித்திய

நிர்ப்பந்தங்களுக்குப் பயப்படுகிறதைப் பார்க்கிலு மட்டில்லாத நன்மைத்தனமா யிருக்கிற தேவரீரை யென்பாவத்திஞலிழந்துபோகிறே னென்கிறதிஞ லதிகமாய்ப் பயப்படுகிறேன். என்மேலித்தனை யுருக்கமான பக்ஷமாயிருக்கிறதேவரீருக்குத் துரோகம்பண்ணினதை நினைத்து என்னுடையவிருதயங் கஸ்திவியாகுலத்திஞலே மெழுகுபோ லுருகிக் கரைந்துபோகக்கடவதாக சுவாமீ.

ஆ! சுவாமீ யித்தனைதாழ்ச்சிவிநயத்துடனே பாவதோஷிங்களுக்காக மனஸ்தாபப்பட் டும்மை மிகவுஞ் சினேகிக்கவிரும்புகிற வென்பேரி லிரக்கமாயிருந் துமது திருக்கடைக்கண்ணு லென்னெளிமையையப்பார்த்தருளும்.

ஆ! என்சர்வேசுராசுவாமீ, அடியேனிந்தமட்டு மும்திஷ்டப்பிரசாதத்தை யிழந்திருக்கிற ஆத்துமத்திஞுடைய நிர்ப்பாக்கியமின்னதென்று கண்டுபிடித்ததில்லை. ஆஞல் சுவாமீ யிப்போது உமதநுக்கிரகத்திஞல்து எவ்வளவுகேடென்றறிந்து அ

தை மிகவு மருவருத்து மறுபடியுமது தி
வ்விய இஷ்டப்பிரசாதத்தை யடையவே
ணுமென்கிறதினாலே இதோவுமதுதயை
யுள்ள ஆஸ்தானத்தின்சந்நிதியை யண்டி
வருகிறேன். மட்டில்லாதகருணைக்கடலா
யிருக்கிற தேவரீ ரென்னெளிமையையும்
விதனத்தையுங்கண் டென்னைப்பிறக்கணி
த்துத்தள்ளாமலெனக்குத்தயைபுரிவீரொ
ன்று முழுமனதோடே நம்பியிருக்கிறே
ன்சுவாமீ.

☞ நம்முடைய பாவதோஷங்களுக்குச் சரியான மனஸ்தாபம் வரவில்லையென்றுகண்டா லப்படிப்பட்ட மனஸ்தாபம்வரவேணுமென்று மிகவுமாசைப்பட்டு வேண்டிக்கொள்ளவேணும.

மிகுந்தமனஸ்தாபப்படவேணுமெனகிற
ஆசையினபிரகரணம.

மட்டில்லாத சிநேகத்துக்குப் பாத்தி
ரமாயிருக்கிற பரமகர்த்தரோ யடியே னு
மக்கு விரோதமாகச்செய்த தோஷத்து
ரோகங்களுக்காக மரியமதலேனையைப்
போலே மிகுந்தமனஸ்தாபப்பட வாசை
யாயிருக்கிறேன். என்னுடைய இருகண்க
ளிலேநின்றிரண்டு நதிபோல் கண்ணீர் பு

றப்பட்டோடவும் என்னிருதயத்திலிருந்துபெருமூச் சிடைவிடாமற் புறப்படவுமாசைப்படுகிறேன். ஆனால் ஐயோவப்படிப்பட்ட மனஸ்தாபத்துக்கு மெனக்கும்வெகுதூரம் அதையெனக்குத் தந்தருளுஞ்சுவாமீ.

என்கர்த்தரேசுவாமீ! தாவீதென்கிறவர் மூன்னாள் தாஞ்செய்தவிருபாவங்களுக்காகமிகுந்தமனஸ்தாபப்பட் டென்சர்வேசுரா வுமக்கு நான் துரோகம்பண்ணின நாள்முதற்கொண் டந்தத் துரோகங்களுக்காகப் பிரலாபித்தழுகிறதே வேலையாயிருக்கிறேன். ஒவ்வோ ரிராத்திரி தப்பாமலெனது நன்றிகெட்டதனத்தை நினைக்கிறதினா லென்கண்களிலேநின்று கண்ணீர்வெள்ளம்போலேபெருகியோடுகிறது. சற்றிளைப்பாறவேணுமென்று படுத்தெழுந்துபார்க்கும்போ தென் படுக்கையெல்லா மென் கண்ணீராலேநனைந்து கிடக்கிறதென்று மிகுந்த துக்கத்துடனே வேண்டிக்கொள்ளுவார். எண்ணிறந்தபாவங்களைச்செய்தநானோவெனில் இதைவிடவி

ன்ன ம்திக துக்கப்படக்கடவேன்ல்லோ. ஆ! சுவாமீ யென்கெட்டவிருதயத்தை யிளகப்பண்ணும். என்கண்களில் மெய்யானமனஸ்தாபத்தின் கண்ணீரைச் சொரியப்பண்ணும். என்பாவங்களைப் பொறுத்தருளுஞ்சுவாமீ.

ரு-வது. பிரதிக்கினை.

☞ பாவங்களை யினிமேற் செய்வதில்லையென்று கெட்டியானமனதுவைத்து அந்தப பாவங்களுககே துவாயிருககிற சமயங்களையு மிடங்களையு முழுதும விட்டுப பாவங்கள்மேலுள்ள மனபபற்றுதலை யறுத்துவிடாமற்போனா ல்ந்தமனஸ்தாப மெய்யானமஸ்தாபமல்ல. ஆகையாற் கெட்டியானபிரதிககினைபண்ணககடவாய்.

பிரதிககினைபபிரகரணம.

என்சர்வேசுபாசுவாமீ யினிமே லுமககுப்பொருந்தாதவொருபாவத்தைக் கட்டிக்கொள்ளுகிறதிலும் படாத பாடுபட்டுப் பதினாயிரந்தரஞ் சாகத்துணிந்திருக்கிறேனென்று பரலோகமும் இகலோகமுஞ் சாட்சியாயிருக்க மனதோடும்வாக்கோடுங் கெட்டியானபிரதிக்கினை பண்ணுகிறேன் சுவாமீ. விசேஷமா யின்னின்ன பாவத்துக் கேதுவான சமயத்திலு

மிடத்திலு முட்படுவதில்லை. இனிமேலும்
முடைய வநுக்கிரகத்தின லென்மேலே
நானே கண்ணுயிருந்து வருகிறபொல்லா
த விசாரங்களையு மிச்சைகளையுஞ்சுறுசுறு
ப்புடனே தள்ளிப்போடுவேன். என்குரு
வானவ ரெனக்குச்சொல்லுகிற நல்லபுத்
திகளைத் தேவரீர்தாமே சொல்லுகிறீரெ
ன்று விசாரித்து, மிகுந்தபிரமாணிக்கத்
துடனே யதின்படியேநடப்பேன்.

மனுஷரைக்கெடுக்கத்திரிகிற துர்ச்சன
ப்பசாசே யப்புறம்போ. என்றென்றைக்
கும் உன்னையும் உன்னடிமைத்தனத்தையு
ம் வெறுத்துவிட்டேன். இந்தமட்டு முன
து துர்ப்புத்திகேட் டுன்தந்திரத்திலகப்ப
ட்டுக் கெட்டதுபோலே யின்னமகப்பட்
டுக் கெடுவேனென் றெண்ணதே. என்னு
ண்டவராகிய சேசுகிறீஸ்துவினுடையச
காயத்தினாலே யுன்தந்திரமாகியவலையில்
கப்படமாட்டேன். என்னைக்காக்கிறவர்
பரமகர்த்தர்தாமே. அவர்தா மென்னம்பி
க்கையு முறுதியுமாமே.

ஆ! என்னாத்துமமே துணிந்திரு. இனி
யொருகாலுமின்னின்ன பாவங்களைச்செ

யீயப்போகிறதில்லையென்று உன்னன்பு க்குரிய விரட்சகருக்குப் பிரமாணிக்கம் பண்ணக்கடவாய். சுவாமீ யும்முடைய திவ்விய அநுக்கிரகத்தை யெனக்குக்கட்டளையிட்டுமதுசந்நிதியிலேசெய்தவிந்தப் பிரதிக்கினைகளை நானுறுதியாகச்செலுத்தத் தயைசெய்யுஞ்சுவாமீ.

☞ இப்படி நல்ல ஆயத்தம பண்ணினபின நீகுருவானவா சேசுநாதருககுப பதிலானவருமாய் உனககு ஆத்துமவைத்தியருமாய்ப பிதாவுமாயிருககிறொனறுயோசித்துப பயபபடாமலும ஒளிககாமலுந்தக்கதாழ்ச்சியோடுந்துக்கத்தோடும் உன்பாவங்களையெல்லாம் விவரமாய்ச்சொல்லக்கடவாய்.

---

## பாவ-உச்சாரணத்தின் அநுசுத்தி.

சரியான பாவ - உச்சாரணம் பண்ணத்தககதாகத்தாழ்ச்சி அழுகை நிர்வஞ்சகம் சுபைம் விளக்கமென்ற இவ்வைந்திலக்ஷணத்தோடே பாவமுச்சரிக்கவேணும்.

### முதலிலக்ஷணம்

தகுந்த தாழ்ச்சியோடே யுச்சரிக்கிறதெப்படியென்றல் மனதிற்பேசுகையி லிருக்கையி லுடுப்பனையில் அகந்தையில்லாமற் குற்றவாளி நடுககாரன் முன்பாகப் பயந்திருக்கிறதுபோல மனதிற்பயவணக்கமுண்டாய்த் தலைகுனிந்து கைகுவித்துக் குருபாதவடியிலே யிருகால்முட்டிட்டுச்சாய்ந்திராமற் பயபத்

தியோடே பாவங்களைச் சொல்லவும். ஸதிரீகளானல் திகமரியாதையோடே தலைகுனிந்து தலைமூடிக்கொண்டுச்சரிக்கவும்.

இரண்டாமிலக்ஷணம்.

அழுகையோடே யுச்சரிக்கிறவகையேதெனறால் நகைமுகமினறித் தன்னுடையபாவத்தினினைவால் மனதிற்சலிப்புற்றுக கண்ணீர் ததும்பி மரியமதலேனையம்மாள் ஆண்டவர்பாதத்தி லழுதிருந்த பிரகாரந் துக்கித்தச த்தமாய்த் தன்பாவங்களைச் சொல்லவும்.

மூன்றாமிலக்ஷணம்.

நிர்வஞ்சகமேதெனறால் பயத்தினாலும வெட்கத்தினாலு மியாதொருபாவம் வஞ்சியாமலும் பெரியகுற்றஞ் சின்னதாகககாட்டாமலுந் தனகுற்றங்குறைக்க மற்றவர்களுடைய குற்றங்களும் போககுஞ் சொல்லாமலுந் தனமேலேதானே குற்றமெல்லாஞ்சாட்டி மனதிலொன்றும்வையாமற் றண்ணீர்க்குடங் கவிழ்ந்தது போலே நினைவிலிருக்கிறதெல்லாஞ்சொல்லவும். இப்படிச்செய்யாம லியாதொன்றை யொளித்தாற்சொன்ன பாவங்களிலொன்றுக்கும் பொறுத்தலிராது.

நாலாமிலக்ஷணம்.

சுவ்யமா யுச்சரிக்கிற தெப்படியெனறால் பாவத்தின கனந்தெரியவேண்டின வார்த்தைகள்மாத்திரஞ் சொல்லுகிறதல்லாதே முனபினன்டந்த வீண்வார்த்தைகள் சொல்லாமலும் பாவத்தோடேகூடினவர்களுடையபேருர் தனனுடைய எய்ப்பிளைப் பெளிமை முதலானதுகளைச் சொலலாமலும பாவத்துக்கடுத்தது மாத்திரஞ் சுருககமாய்ச்சொல்லவும்.

ஐந்தாமிலக்ஷணம்.

விளககமாயுச்சரிக்கிற தெப்படியெனறால விளங்காதவார்த்தையாகச் சொலலாமலு மியாதொருபா

வம் விவரியாமல கண்ணூற் காதால வாயாற் செய்
ததெலலாமபாவமெனறும ஆயிரமுறை நாறுமுறை
செய்ததெனறுமிப்படிப்பட்டபொதுத்தொகையா
னவார்த்தை சொலலாமலு நியமமா யினனினனபா
வமித்தனைமுறை செய்தேனெனறுசொலலி யதினவி
சேஷவகைகளுங் கனமுந் தெரியத்தக்கதாக வெளி
யாச்சவேணும. இவவைநதிலக்ஷணத்தோடுபண்ணுகி
றபாவ-உச்சாரணஞ் சர்வேசுரனுக்கு வெகுபிரியமு
முனககு மிகுநத பலனுமாமெனறறியவும.

பாவசங்கீர்த்தனம பண்ணத்துவக்குகிறவகை யெ
ப்படியெனறால குருவானவரண்டையி லொருபக்கத்
திலே முழநதாளிலிருந்து சிலுவைவரைநது சாதார
ணபாவசங்கீர்த்தன மநதிரநதுவககி எனபாவமே எ
னபெருமபாவமே யெனறவார்த்தைமட்டுஞ் சொல
லி நிறுத்தித் தனபாவங்களைச்சொலலத்துவககவும.

முதலாவது பாவசங்கீர்த்தனம பண்ணுதநாளித்த
னையெனறுங் குருவானவர்கற்பித்த வபராதநதீர்த்த
துநதிராத்துஞ் சொலலி முநதினபாவசங்கீர்த்தனத்
திலேயாதொருபாவத்தைப்பயத்தினாலேயொளித்திரு
நதால அலலதுமறநதிருநதால அதையெலலாத்துக்
குமுனனே அற்பயமு மிலலாமற் சொலலுவாயாக.
பினனும பத்துக்கற்பனையொழுங்காய்ப்பாவங்களைச்
சொலலி இநதப்பாவங்களோடே நினைவிலலாதபாவ
ங்களையுஞ் சிநதனைவாககுக் கிரியையாற்செய்தபாவ
ங்களியாவையுஞ் சொலலுகிறேனெனறும அதுகளா
ற் சர்வேசுரனுக்குச் செய்ததுரோகங்களுக்காக மெ
த்தவிதனப்பட் டினிமேற்செய்யாதபடிக் கெட்டிம
னதாயிருககிறேனெனறும ஆசீர்வாதமும அபராத
மூந்தாருமெனறு மனறுடி முனனிறுததிவைத்த பா
வசங்கீர்த்தனமநதிரத்தின குறையை முடிவிற்சொல
லவும.

## பாவசங்கீர்த்தனம் பண்ணின பின்செபம்.

*சந்தோஷப் பிரகரணம்.*

என்னுடைய ஆத்துமமே! நாமெத்தனையோ சந்தோஷமா யிருக்கக்கடவோம். இந்தமட்டுஞ் சாவானபாவத்தினாலே பசாசுக்கடிமையாயிருந்த நாமிப்போது சுவாமி யதைப்பொறுத்ததினாலே யந்த அடிமைத்தனம்நீங்கிச் சர்வேசுரனுடைய பிள்ளையானோம்.

ஆ! சுவாமீ, ஒருக்ஷணத்திலென்னிடத்திலே யெத்தனையோ மாற்றமுண்டாயிற்று. உமக்குச்சத்துருவாயிருந்த நானும க்குப் பிரியமானவனானேன். நரகத்துக்குப் பாத்திரமாயிருந்த நான் மோக்ஷத்துக்குச்சுதந்தரவாளனானேன். பசாசுக்கடிமையாயிருந்த நானுமக்குப்பிரியகுமாரனானேன். ஆ! என்சர்வேசுராதேவரீர்மகா நல்லவர். என்கேடுகளைத்தீர்த்து நானித்தனை நன்மையடைவதற் கெளிதானவுபாயங்கட்டளையிட்டீரோ. நீர்மட்டில்லாத தயாபமுள்ளவர். தேவரீரெனக்கிந்தத்தயையைப ண்ணும லென்பாவத்துக்குத்தக்க ஆக்கி

ஊயிட்டீராகி விந்நேர நரகபாதாளத்தி
ற் கிடந்துவேகுவேன்சுவாமீ.

தேவதோத்திரப்பிரகரணம.

சுவாமீயுமக்கு நித்தியதோத்திரமும்பு
கழ்ச்சியு முண்டாகக்கடவது. சகலபடை
ப்புண்டவஸ்துக்களே! ஆண்டவனைத்தோ
த்திரம் பண்ணுங்கள். என்றுத்துமமே
யுன்பாவதோஷிங்களைப்பொறுத் துன் வி
யாதியைக்குணமாக்கி யுனக்குவந்தகேட்
டைநீக்கி யுன்ஊனயிரட்சித்த வாண்டவரு
க்கு நன்றியறிந்திரு. அவருடையதிருநா
மத்தை யென்றென்றைக்கும் வாழ்த்திப்
புகழ்ந்து ஸ்துதிக்கக்கடவாய்.

பிற்பாடு நீ மறுபடிபாவத்திலவிழாதபடிககுச் சர்
வேசுரனுடைய அநுககிரகத்தைக்கேள். தேவமாதா
வையுங் காவலானசமமனசுவையுமுனககுச்சகாயமா
யிருககவேண்டிககொள்.

பரமண்டல - பிறிய்தத்த - மேலானஉத்தமமனஸ
தாபமந்திரஞ்சொலலவும.



# தேவ நற்கருணை

## விளக்கம்.

தேவநற்கருணையிலேசேசுநாதர்தேவசுபாவத்தோடுந திரு ஆத்துமசரீரவிரத்தத்தோடு மெய்யாகவேயெழுநதருளியிருக்கிறானெனகிறதற்குப் பிரத்தியட்ச்மானவேதவுதாரணங்களாவன: அர்ச்.மத்தேயு-உகூ-அதி-உகூ. அர்ச். -மாற்கு-சுவி. யச-அதி. உஉ-உச-அர்ச்.-லூக. உஉ -அதி. யகூ-அர்ச். -அருள. சா-அதி. ருக -ருஉ - முதலிய- அர்ச். சின்னப்பர். க-கொரிந்தி-ய-அதி - யகூ || யக - அதி - உச - உரு- உஎ - உகூ.

அர்ச்.-அருளப்பர் - சுவி. சா-அதி. ருஅ - வசனத்திற்சேசுநாதர்திருவுளமபற்றினதாவது: எனனையுண்பவனெனனுடையிர்பிழைத்திருப்பவனெனறார். இதிலெனசரீரத்தையுண்பவனெனனுமெலனையுண்பவனெனறதனாற் சேசுநாதர் முழுதுந தமமைநமககுத்தந்தருளி நமமுடைய ஆத்துமத்தி னுணவாகிறானெனறு சொல்லக்கடவோம. ஒவ்வொருவகைககுணங்களிற் றுமுண்மையாகமுழுதுமிருக்கிறது நிச்சயப்படுத்தி அப்பத்தினகுணங்களிலேயுந்தமதுசாரமலலாமல்விடாததுணைமுறையாற் றமதிரத்தமுங்கொள்ளப்படுமெனறு விசேஷமாயொப்பிககுமபடிககுச்சேசுநாதரந்தவதிகாரத்திற்றேனே - ருச - வசனத்திலே சகலம்பேர்களையுநோககி எனமாமஸத்தையுமிரத்தத்தையுமுட்கொள்ளாமல் ஞானசீவனை யடையமாட்டீர்களென்றபின்பு-ருகூ-வசனத்தி லிந்த வப்பத்தையுண்பவ னித்தியசீவனையடைவானென்றார்.

இதோ தஞ்சரீரத்தையுண்டு நமதிரத்தத்தைகரு
டித்து அடையும்பலனெல்லாங் குறையாமல் இந்தத்
தேவ அப்பத்தையுண்டமாத்திரத்தி ல்டைந்து உயிர்
வாழ்வானென்று திருவுளம்பற்றினார். ஆகையால்ப்ப
த்தினகுணங்களில்மாத்திர நற்கருணையுட்கொண்டா
லுங் குறையில்லாமல் முழுத்தேவத்திரவி யாநுமான
ங்கொள்ளப்படுமென்பது வேதசத்தியமாமே.

அர்ச்.-மத்.உகூ-அதி.உஎ-வசனத்திற் கர்த்தர் தம
முடையசீஷர்களோ டிரவமுதுசெய்யும்பொழுது ந
ற்கருணைப்பாத்திரத்தை தத்தந்து இதிலெல்லாருங்குடி
யுங்களென்றார்.எல்லாருமெனறமையாற்பதிதர் சகல
யெயரையுங்குடிக்கச்கட டளையிட்டாரென்பார்கள்.ஆ
னூர்பூசைசெய்யச்கட்டளையா யிதையென் னினைப்புக்
காகச் செய்யுங்களெனறவாககியம் அப்போஸதலர்க
ளுககு ம்வர்களிடமாக வருங்குருக்களுக்குமாத்திரஞ்
சொன்னாரல்லோ. அப்படியே அத்தோ டொரே நே
ரத்தில் நீங்களெல்லாரு மிதிலே குடியுங்களென்றவாக்
கியமு ம்ப்போஸதலர்களுக்குங் குருக்களுக்குந் திருவு
ளம்பற்றினரொழிய மற்றப்படியல்ல. பின்னும அர்ச்.
மாற்கு-யச-அதி. உரு-வசனத்தில் அப்போஸதலர்க
ள்மாத்திரம் பாத்திரத்தைகருடித்தமாத்திரத்தி லெ
ல்லாருங் குடித்தார்களென்றார். ஆகையா ல்ந்தவெல்
லாருமென்கிறவார்த்தையைச் சுவாமிசகலகிறீஸதுவர்
களைக் குறித்துச்சொல்லாம லப்போது தமதுசமுக
த்திலிருந்த பன்னிரண்டப்போஸதலரைக்குறித்தே தி
ருவுளம்பற்றினரென்பதற்குச் சந்தேகமில்லை.

அப்போஸதலரெல்லாருக்கு ம்ந்தககட்டளையிட்ட
தனூர்பூசைசெய்யுஞ் சகலகுருக்களுக்குங்கட்டளையா
யிற்றென்று சொல்லவேண்டியதாமே. மற்றச்சனங்க
ளோடுசேசுநாதர்பேசினபோதோவெனில் - ஒருபோ
தும்- அப்பத்தையும் பாத்திரத்தையுங் கொள்ளச்

சொல்வாமற் சரீரத்தையு மிரத்தத்தையுங் கொளள்ச்கட்டளையிட்டார். இதனாலல்லோ- அர்ச்.- அருளப்பர் -சுவி-௬-அதிகாரத்திலெவர்க்குமபொதுவாய்ப்பேசினவிடத்தில்தாம் ஐந்துமுறை யப்பத்தின் பெயரைச்சொல்லியு மொருமுறையாகிலுமிரசத்தின் பெயரைச்சொன்னதில்லை· மேலும் அர்ச்.-அரு-௬-அதி. ௫௰-வசனத்திற் றம்மையுயிர் தருமப்பமென்றபின்பு அந்த வப்பத்தையுண்டு தம்மை நம்பியண்டினவர்க்குப் பசியுந்தாகமு மினிவராதென்றார். இதோ-இந்தத்தேவ-அப்பம் பசியையுந் தாகத்தையுந்திர்ப்தியாக ஆற்றுகிற ஞான அமிர்தமாமே.

ஆர்ச்.-லூக. உஉ-அதி. ௰௯-வசனத்திற்சேசுநாதர் திருவுளம்பற்றின தாவது: என்னினைப்புககாக நீங்களு மிதனைச்செய்யக்கடவீர்களென்றா. அதனாலவரடைந்த மரணநினைவாகவிதனைச் செய்யுங்களென்று - ஆர்ச். - சின்-க-திரு. ௰௧ - உ௬-வசனத்திற் கொரிந்தியாருக்கெழுதினார். அதாவது - நற்கருணைப்பூசையும் நற்கருணையும் உலகமுடியுமட்டுஞ் சேசுகிறீஸ்து மரணமாயின சிலுவைப்பூசையை நினைக்கிற நினைவடையாளமாக அவர் நடுத்திர்க்கவருமளவுந்திருச்சபையிலுண்டாயிருககுமென்று பயனாr. ஆகிலும் ஆண்டவருடையதிருமரணத்தைதக காட்டுகிறதேவநற்கருணையிலே மெய்யாகவே யவர்சரீரமு மிரத்தமுமிராமல் அககாட்டு நினைவடையாளங்கள்மாத்திர மிருககிறதென்று திருச்சபையைவிட்டுப்பிரிந்தவர்கள் போதிப்பார்கள். நாமோவெனி லுள்ளபடியே தேவநற்கருணையுட்கொள்ளுதலிலும் நற்கருணைப்பூசை யொப்புகொடுத்தலிலு நம்மைமீட்டிரட்சித்த கர்த்தாவின்சரீரமு மிரத்தமு மெய்யாகவே யெழுந்தருளியிருககின்றதல்லாம லவருடையதிருமரணத்தை நினைத்துக கொண்டாடப்பட்ட வெறுஃஸமரண மில்லவென்போம்.

உயிர்தரும் அப்பம் நாமேகானகவழியிலுங்கள்மூந்தையார்மன்னாவென்னு மற்புதப்போசனத்தை யுண்டாலுஞ் செத்தார்களல்லோ. இந்த அப்பம்பரலோகத்திலே நின்று வந்ததாகையி லிதனையுண்பவனென்றுஞ்சாகான். நாந்தரு மப்ப உலகிற்குயிராகுமநம்துமாம்ஸந்தானேயெனறபின்பு இது என்சரீரம் இது என்னிரத்தமிதுகளைவாங்கி யுட்கொள்ளுங்களென்றுந்தமமுடையசீஷாககளுககுச்சேசுநாதாதிருவுளம்பற்றியிருககச்சரீரத்தையுமிரத்தத்தையுங்கொடாமல் அதுகளின்டையாளங்களைமாத்திரந்தந்தாரொனறுசலஞ்சாதிககிறவர்கள்மெய்யானகடவுள்பொய்புகனறொனறும் உலகங்களெல்லாமொருவார்த்தையாலுண்டாககினவருககு நற்கருணையிலே தேவசுபாவத்தோடுந்திரு ஆத்தும சரீரவிரத்தத்தோடு மெய்யாகவேயெழுந்தருள வல்லமையில்லையெனறுஞ் சொல்லககடவாாகள். சொல்லாாகளாயின ஆண்டவா திருவுளமபற்றினபடி நமமுடன்விசுவசித்தநுசரிக்கக்கடவார்கள். இப்படிப்பட்டவிடாீதங்களைமறுக்கத்தககவேதவுதாரணங்களோடு விசிதமான நியாயங்களை வேதவிளககம். ௰௪-அதி. தேவநற்கருணை விளககத்திலுந்தத்துவபோதககுவாம ௬-காண்டம. ௰௬. பாடத்திலும்வேதப்புரட்டலைநீக்குஞ்சஞ்சீவி-உ அடு. பக்கத்திலுங் காண்க.

---

# தேவ நற்கருணைவாங்க

## ஆயத்தம்.

சர்வலோகத்துக்கும் ஆண்டவராகிய சேசுநாதர் தேவநற்கருணையிலே மெய்யாகவேயெழுந்தருளி உன்னிடத்தில்வருகிறபடியினாலே அவருடையதிருச்சரீ

ரத்தையுந் திருவிரத்தத்தையும் வாங்கிக்கொள்ளுகி றதுக்கு உன் ஆத்துமமெத்தனையோ பரிசுத்தமுமா யிப்புண்ணியத்தினு லலங்கரிக்கப்பட்டதுமா யிருக்க வேண்டியதென்று நனறுயோசித்துக்கொள். ஆகை யால் முந்தமுந்த உன் ஆத்துமத்தை நல்லபாவசங்கீ ர்த்தனத்திறுலே சுத்தம்பண்ணி உன்றுலானமட்டு மிகுந்தபத்தியோடே ஆயத்தஞ்செய்வாயாக.

நீ நனமைவாங்குகிறதற்குமுன ஞத்துமவொறு த்தல் சரீரவொறுத்தல்செய்து, யோக்கியமாகச் சுவாமியை யுட்கொள்ளும்படிக் கவர்தாமேயுனனிருதயத்தைச்சுத்தம்பண்ணித் தேவவரப்பிரசாதங்களினு லுனனுத்துமத்தை யலங்கரிக்கவேணுமெனறு மனறுடு. தேவமாதாவையுங் காவலானசம்மனசையு முனக்குப்பத்திகாரணமாயிருக்கிற அர்ச்சியசிஷ்டர்களையும் வேண்டிக்கொள். அந்த அர்ச்சியசிஷ்டர்கள், தேவநற்கருணைவாங்குகிறபோதவர்களுக்குண்டாயிருந்தபத்தி யுனக்கும் எவ்வளவாகிலும்வரவுதவிபண்ண வேணுமெனறுமனறுடு. அந்தநினைவோடே நித்திரை பண்ணி விழித்தவுடனே. உனனிடத்திற் சேசுநாதசுவாமி யெழுந்தருளிவரப்போகிறுரெனறும் அதனுலுனக்கெத்தனை பாக்கியமு நனமையும் வருகிறதெனறு நினைத்து, அந்தநினைவோடே கோயிலுக்கு ஒடுக்கவணக்கத்துடனேசெனறு மிகுந்தபத்தியுடனேவிசுவாசம் ஆராதனையிவைமுதலான பிரகரணங்களை மனதோடுங் வாக்கோடுஞ்செய்வாய். அனறளவில் மற்ற நாளைப்பார்க்க வதிகவொடுக்க வணக்கமாயிருந்து ஞானப் புஸதகங்களைவாசித்துச் சாயங்காலங் கோயிலுக்குப்போய்த்தேவநற்கருணையைச்சந்தித்துவணங்கித் தாழ்ச்சி சிநேகமாகைமுதலான பிரகரணங்களைச்செய்யக்கடவாய்.



சம்மனசுசள்முதலா யிநந்தபயப்ததி
யுட ஞராதிககிற தேவபூசித் மதுரமுள்ள
பரமதிவ்வியநற்கருணையில் அநவரதகா
லமுஞ் சேசுநாதருககு ஆராதனைஸ்துதி
தோததிர முண்டாக.

† இதோ சர்வேசுரன் மனிதரோடுவசி
ககிறவாசாராலயம். * மனுமககளோடு
சஞ்சரிப்பதே நமககின்பமென்றா. நம
மையிவ்வளவாக நேசிககு ம்வரை நாமெ
வ்வளவோ நேசிக்கக்கடவோம † ஆச்.
அருள. காட்சி-உக-ரு. * சாதுரியாகம
ம்- அ- ருக.

# தேவநற்கருணை
## வாங்குமுன்
## செபம்.



என் ஆண்டவராயிருக்கிற சேசுகிறீஸ்துநாதரோசுவாமீ தேவரீர்மனுஷிரைக்கிருபாகடாட்சத்தோடேபார்த்துத் தண்டித்திளைத்தயாவரு மென்னண்டையிலே வாருங்கள் நானுங்களைத் தேற்றரவு பண்ணுவேனென்று திருவுளம்பற்றினீரோ. ஐயோ! இப்படிப்பட்ட அமிர்தவசனங்களிற் காண்பித்ததயையெத்தனையோ! அடியேனை யும்முடைய அண்டையிலேவரவழைக்கிறீரோ.

அடியேனார் தேவரீரார்? தேவரீருடையமகிமைக்கும் அடியேன் நீசத்தனத்துக்கும் எத்தனையோ தூலை. என் சரீரம்பார்த்தால் அசுத்தம்நிறைந்தபாத்திரமாயிருக்கின்றதே, ஆத்துமம்பார்த்தால் பாவத்தால்வலக்ஷணகோலமா யிருக்கின்றதே, உமதருகிலெப்படி முடுகிவருவேன். மு

ற்காலத்திலே ஒசாவெஸ்கிறவன் குருப்ப
ட்டமும் பயபத்தியுமின்றி யும்முடைய
பரிசுத்தவுடன்படிக்கைப்பெட்டகத்தை
க் கைதொட்டதினால் உடனேதானேசெ
த்து விழுந்தானே, அடியேன் உம்மு
டைய மெய்யானதிவ்விய சரீரத்துக்குப்
பயமில்லாமலெப்படிமுடுகுவேன். மோ
யீசனென்கிற திவ்வியதரிசி உம்முடைய
சமூகத்திலேயிருந்து திருவாக்கைக்கேட்
க நாற்பதுநா ளொரு அன்னபானமுங்
கொள்ளாமலிருந்தாரோ. அடியேனும்மு
டைய சந்நிதியிலுமது திருவசனங்கேட்க
மாத்திரமல்ல உம்மையே யென்னிருதய
த்தி லுட்கொள்ளவருகிறவிடத்திலே நா
ன துக்கெத்தனையோ சுத்திபண்ண வே
ண்டுமே. செந்துரியோனென்கிற சேர்
வைக்காரன்வீட்டிலே வியாதிக்காரனைச்
சுகமாக்கத் தேவரீ ரெழுந்தருளினபோ
து அதுக்கவன் என்விடுதியிலே தேவரீர்
வர நான்பாத்திரமல்லவென்று மகாதா
ழ்ச்சியோடே ஒல்கிவிண்ணப்பஞ் செய்
தானே. இப்போது தேவரீ ரென்வீட்டில்

ல்ல என்னிருதயத்துக்குள்ளே யெழுந்த ருளுகிறபோது அதற்கென்னபுண்ணிய பேறுகளைக்கொண்டு உம்மைக் கையேற் கத் துணிவேன்.

பூலோகத்திலேயாதொரு இராசா ஒரு குடியானவனுடைய வீட்டுக்குவரக் கிரு பைசெய்தாலதற்கவன் அநந்த அக்களிப் போடும் பயபக்ஷத்தோடும் வழிகளைச் செம்மைசெய்து வீடுவாசலைத்துப்புரவா க்கிச் சோடித்து எத்தனையோ வணக்கத் தைக் காண்பிப்பானல்லோ. அப்படியிரு க்கப் பரலோகராயனை தேவரீரோ யடி யேனண்டையிலே வருகிறபோது நானெ ன் னிருதயத்திலுள்ள பாவவழுக்கெல் லாந்தள்ளி யதைநன்றாய்ச்சுத்தியாக்காம லுஞ் சுகந்ததர்மக்கிரியைகளாலதைச்சோ டிக்காமலு மிருக்கக்கூடுமோ. ஐயோ! அநேக தர்மாத்துமாக்கள் சீவியந்தருந் தேவரீருடைய திருச்சரீரத்தைப்பொசிக் கும்பாக்கிய மநுபவிக்க நியமித்திருக்கு ம்போது அதற்குமுன் அநேகநாள் தி யானத்திலேயிருந்து உம்முடைய மகி

மையையுந் தங்களுடைய நீசத்தனத்தை யும் நினைத்துத் தாழ்ச்சியில் மூழ்கிப் பத்தியால் மனதுசுடர்போலெரிந்திருப்பார்களே. ஆனால் நானிந்தத் திவ்வியசரீரத்தோடு ஐக்கியமாகும்பாக்கிய மருபவிக்கவந்து ஒருநாழிகையுஞ் செவ்வையாய்த் தியானம்பண்ணவுமில்லை, தேவபத்தியின் சுவாலை யென்னிருதயத்திலின்னம் பற்றியெரியவுமில்லை.

ஆனாலும்முடைய அண்டையிலேவராமல் எனக்கீடேற்றங்கிடையாததினால் உம்முடைய அன்புள்ள கிருபைப்பெருக்கத்தைநம்பி வியாதிக்காரனான அடியேன் திவ்விய பண்டிதனாயிருக்கிற உம்முடைய அண்டையிலே சுகமாகவருகிறேன். பசித்துத்தவித்திருக்கிற அடியேன் அமிர்தம் பாய்கிற ஊறணியாயிருக்கிற உம்முடைய அண்டையிலே திருத்தியடைய வருகிறேன். இல்லாவாளனாயிருக்கிறஅடியேன் பரலோகராசாவாகிய உம்முடையவிடத்திற் சம்பத்தடைய வருகிறேன். தாசனான நானென்னுடைய ஆண்டவராகியதே

வீரிடத்திலே சகலசகாய ஆதாரமும்பெறவருகிறேன். இந்தநன்மைகளெல்லாம் உம்முடைய விரக்கத்தினு லெனக்குக் கிடைக்கிறதல்லாமல் மற்றப்படியல்ல.

இப்படிப்பட்டதயையைப்பார்த்துஎன்னுடைய இருதயம்நேசத்தாலெரிந்து ஆசையால் துடித்து உம்மையென்னாத்துமத்தில் வாங்குந்தனேயுமொருநாழிகையநேகநாள்போலே காண்குதே. ஐயோ! என்னுடைய நேசமுள்ள இரட்சகரே! ஆராதனைக்குரிய ஆண்டவரே எப்போது இந்தப்பாக்கிய மெனக்குக் கிடைக்குமோ. எந்தவேளை உம்முடையதிருப்பாத பங்கயங்கட்டியணைத்து முத்திசெய்திருக்க எனக்குக்கிடைக்குமோ. எந்தவேளை யும்முடையதிரு ஆத்துமசரீரமென்னுடைய ஆத்துமசரீரத்தோடே கூடி என்மனது உம்முடைய சித்தத்தோடே ஒருமனதாகி உம்மைவணங்கிப் பூசித்துநேசித் தொன்றித்திருக்கக் கிடைக்குமோ? எழுந்தருளுஞ்சுவாமீ.

என்னுடையமனதிற் சுத்தக்குறைச்சலையுந் தர்மக்குறைச்சலையுங்கண்டு அப்பிர

சந்நமாயிருக்கவேண்டாஞ்சுவாமீ. அதே தெனில் என்னிடத்திற் புண்ணியபேறு போதாமைக்கு உம்முடைய திவ்வியமா தாதம்முடையதிருவுதரத்தி லும்மையெ ழூந்தருளப்பண்ணின பரிசுத்தத்தனத் தையுமக்கு நானொப்புக்கொடுக்கிறேன். இதல்லாமலிவ்வுலோகத்திலே தர்மாத்து மாக்க ளிந்தத்திவ்விய சற்பிரசாதத்தை வாங்கும்பாக்கிய மநுபவிக்கச் செய்த அநுசுத்தியும் பரலோகத்தில் தேவதூ தரும்முடைய மனுஷீகத்துக்குச் செலுத்துகிற நமஸ்கார ஆராதனைபத்தி பக்ஷமுமாகிற விந்தச் சுகிர்தப்பேறெல்லாத் தையும் நான்கேட்டுவாங்கி அதுகளாலெ ன்னுடைய ஆத்துமத்தை யலங்கரித்து என்னிருதயத்தி லும்மை யெழுந்தருளப் பண்ண அபேட்சையாயிருக்கிறேன். எழு ந்தருளுஞ்சுவாமீ எழுந்தருளும்.

சர்வத்துக்கும் ஆண்டவராகிய சேசுநாதர் தேவ நற்கருணையிலே மெய்யாகவே யெழுந்தருளியிருக்கி றாரென் றுறுதியாகவிசுவசித்து இந்தப்பரமதேவ இர கசியத்தை யநந்தபுகழ்ச்சியுடன் பாராட்டுவாயாக.

விசுவாசப் பிரகரணம்.

என் னாண்டவராயிருக்கிற சேசுகிறீஸ்

துவே! அடியேன் தேவநற்கருணை யுட்கொள்ளும்போது தேவரீர் ராத்துமத்தோடேயுந் தேவசுபாவத்தோடேயும்-அர்ச்-கன்னிமரியாயி திருவுதரத்திலெடுத்த திருச்சரீரத்தோடேயு மெழுந்தருளி யென்னிடத்திலே வருகிறீரொன் றுறுதியாக விசுவசிக்கிறேன். சுவாமீ யிது சத்தியமானகாரியமென் றெருப்பிக்கிறதுக்கென்னுடைய விரத்தமெல்லாஞ்சிந்தி யுமக்காகச் சீவனை யிழக்கவேண்டி யிருந்தாலும் நல்லமனதோ டிழக்கத்துணிகிறேன். எனதுவிசுவாசத்தை யின்னமுறுதிப்படுத்தி யருளுஞ்சுவாமீ.

இப்படி விசுவாசமெனகிறகண்ணாலே தேவநற்கருணையிற் கண்டசுவாமியை வணங்குகிறதுக்குச் சகல ஆச்சியசிஷ்டாகளையுஞ் சம்மனசுகளையுங் கோரியழைத் தவாகளோடுகூட மிகுந்ததாழ்ச்சிவிநயத்துடனே யாராதனைசெய்வாயாக.

ஆராதனைப் பிரகரணம்.

என்னைப்படைத் திரட்சித்துப் பரிபாலனம்பண்ணிக்கொண்டுவருகிற வென்னாண்டவரோ! நித்தியபரம கடவுளான கர்த்தாவே உமதுசமுகத்திலென்னுடைய பு

த்திமனதை மிகவுந்தாழ்த்தி மகாதாழ்ச்சிவிநயத்துடனே யும்மை வணங்குகிறேன். தேவரீர் சகலதோத்திரங்களுக்கு மாராதனைக்கும் பாத்திரமாயிருக்கிறீர்.

சம்மனசுகளும் அர்ச்சியசிஷ்டர்களுமாகிய சகல மோக்ஷவாசிகளே! உங்களுக்குமெனக்கும் ஆண்டவராகிய இந்தப்பரமதேவனை யாராதிக்க அடியேனுடனேயேகோபித்து என்னுடைய அற்பவந்தனையோடே உங்களுத்தமாராதனைகளைச் சேர்த்து ஒப்புக்கொடுங்கள்.

சுவாமி யெத்தனைமகிமையுள்ளவரொன்றும், நீ யெத்தனை நீசவஸ்துவெனறுஞ், சற்றுநினைத்துத் தாழ்ச்சியா யிருப்பாயாக.

### தாழ்ச்சிப் பிரகரணம்.

ஆ! சுவாமீ தேவரீரார் நானார்? தேவரீரிடத்திலே யற்பமாகிலும் பழுதில்லை. நான்மட்டில்லாதபழுதுள்ளவன். தேவரீரென்னைப் படைத்தவர் நானும்மாலே படைக்கப்பட்டவன். தேவரீர்மட்டில்லாதமகிமையுள்ளவ ராகையா லுமது சமூகத்திலே பத்திராசனரொன்கிற சம்மனசுகள்

முதலாய்நடுநடுங்குகிறார்கள். நானுலகத்தி னாத்தைக்குள்ளாகிக்கிற புழுவுக்குச் சமானமாயிருக்கிறவன் தேவரீர்மட்டில்லாத பரிசுத்தர் நான்வலக்ஷணப் பாவச்சேற்றிலேபுரண்டு அசுத்த துர்க்கந்தமாயிருக்கிறவன் இப்படிப்பட்ட பாவியாகிய நானோ தேவரீரையுட்கொள்ளுகிறது? இத்தனை நீசனாயிருக்கிற வென்னிடத்திலெழுந்தருளிவர வெப்படி மனந்துணிந்தீர். அற்பபுழுவுக்குச் சமானமா யிருக்கிற வென்னிடத்தி லென்னநன்மை கண்டீர். ஆ! சுவாமீ மெய்யாகவே தேவரீ ரென்னிடத்தி லெழுந்தருளிவர நான்பேறுபெற்றவனல்ல. தேவரீரொருவார்த்தைமாத்திரந் திருவுளம்பற்றினீரானா லென்னாத்துமம் வியாதியினின்று விடப்பட்டு ஆரோக்கியத்தை யடையும். என்னாத்துமமானதே யுன்கர்த்தருடைய மகிமையையு முனது நீசத்தனத்தையுங்கண்டு அவருடைய சமுகத்திலே வெட்கி யுன்னைத் தாழ்த்தக்கடவாய்.

தேவ நற்கருணையி லெழுந்தருளியிருக்கிற பரமகர்த்தாவின மகிமையையுந் தயவையுமாராய்ந்து யோ

சித்துன்னிடத்திற் பயமு நம்பிக்கையுங் கிளப்பக்கட வாய்.

தேவபயமும நம்பிக்கையுமுள்ள பிரகரணம.

சுவாமீ யடியேனுமது பரிசுத்தத்தனத்தையு மகிமைப்பிரதாபத்தையு மென்னுடைய பாவங்களையுங் கொஞ்சத்தனத்தையு நினைக்கும்போது உம்மைத்தேவநற்கருணைவழியாக வுட்கொள்ளப் பயப்படுகிறேன். பின்னொரு பக்கத்திலே யும்மை யுட்கொள்ளாமதபோனால் நித்திய சீவியமில்லாம லுமது கோபத்துக் குள்ளாவேனென்று நினைத்து நடுநடுங்குகிறேன். இனி நான்செய்யவேண்டிய தென்னசுவாமீ. அடியேனெத்தனை யபாத்திரவானாயிருந்தாலு முமதுகிருபையை நம்பிக்கொண்டு நீர் கட்டளையிட்டபடி யும்மையுட்கொள்ளத் துணிகிறேன். தேவரீர்தாமே என் ஆத்துமத்தை யுமதுபிரசாதங்களினா லலங்கரித்து, உமக்கியோக்கியமான இருப்பிடமாக்கத் தயைபண்ணியருளுஞ் சுவாமீ.

இப்போது சேசுநாதருன்னிடத்திலெழுந்தருளி வரப்போகிறாரென்று நினைத்துச் சந்தோஷப்படுவாயாக.

சந்தோஷப் பிரகரணம்.

என்னாத்துமமே என்ன நினைக்கிறாய்? நீ செய்யுங்காரிய மின்னதென் றறிவாயோ? உனக்கெத்தனை கனமானமகிமை வருமென்று விசாரிக்கிறாயோ? நித்திய சர்வேசுரனுடைய எக்குமாரனாகிய திவ்வியசேசு ஆத்துமத்தோடேயுஞ் சரீரத்தோடேயுந் தேவசுபாவத்தோடேயு மவருக்குள்ள பாக்கியங்களோடேயு நம்மிடத்திலே வருவாரோ, அவரு நாமுமேகமா யொருமித்திருப்போமே, அவர் நம்மிடத்திலேயு நாமவரிடத்திலேயும் வாசமாயிருக்கிறாப்போலாகுமே. ஆ! என்னாத்துமமே நமக் கித்தனைபாக்கியம் இத்தனைமகிமை வருகிறதைப்பார்த்து மிகவுஞ் சந்தோஷிப்படக்கடவோமல்லோ.

என் னாண்டவரோ, தேவரீரொன்னையொன்றுமில்லாதகாலத்தி லுண்டாக்கினதும் உம்முடைய திருவிரத்தத்தினா லென்னையிரட்சித்ததுந் தேவரீருடைய தயவுக்குப்போதாமல் வின்னமென்னிடத்தி லெழுந்தருளி வருகிறீர், எனக்கும்மைத் தந்

தருளுகிறீர், உமக்கேதோத்திரமுண்டாக க்கடவது.

உன்னன்புக்குரிய கர்த்தாவை யிளவற்றவாசை ம னருட்டினுலுணனிடத்தி லழைத்துக் கொள்ளக்கட வாய்.

திவ்வியநனமை வாங்குகிறதுக்கு
ஆசைப்பிரகரணம்.

என் திவ்விய அன்பனுமாய் நாதனுமா யிருக்கிற பரமகர்த்தாவே! எனக்குமிகவு ம் பிரியமேசுவே, என்பாக்கியமே, என் சந்தோஷமே, என்னிருதயமே, என்க ண்மணியே, ஆ! என்னன்பே, என்னிருத யத்தி லெழுந்தருளிவாரும். பசிதாகத் தை யநுபவிக்கிறவர்க ளெத்தனையாவலு டனே போசனமுந் தண்ணீருந் தேடுகி றூர்களோ வப்படியே யென்னாத்துமந் தேவரீரை மிகுந்த ஆவலுடனே தேடுகி ன்றது. சுவாமீ சீக்கிரமாகவாரும். தாமத ம்பண்ணுதேயும். நீரொருநாழிகைத் தா மதம்பண்ணுகிற தெனக் கொருவருஷம் போ விருக்கின்றது. உம்மூடனே யொ ன்றிக்கவேணுமென்கிற ஆசையின் மிகு தியினு லென்னாத்தும மயங்கிக்களைத்து ப்போகின்றது சுவாமீ.

☞ பிற்பாடு மிருந்தவனைக்கூட்டனேயுந் தாழ்ச்சியுடனேயு மாசையுடனேயுந் தேவநற்கருணை யுட்கொண்டு பஞ்சேந்திரியங்களையு முள்ளிந்திரியங்களையுமடக்கிஅங்கங்கேபராக்குப்பாராமலும்புறத்திவிசாரங்களுக் கிடங்கொடாமலும் உள்ளத்தில்வாசமாயிருந்து, உனனிருதயத்தி லெழுந்தருளிவந்திருக்கிற சேசுநாதருக்குத் தோத்திரம்பண்ணவு மவரோடே பேசிக்கொண்டிருக்கவுஞ் செய்வாயாக.

# தேவநற்கருணைவாங்கின தற்குப் பின்செபம்.

சேசுநாதா மெய்யாகவே உனதுள்ளத்தி லெழுந்தருளிவந் திருக்கிறதைப்பற்றி யாச்சரியப்படக்கடவாய்.

ஆச்சரியப் பிரகரணம்.

சர்வ லோகத்துக்கும் ஆண்டவராகிய சேசுநாதர் மெய்யாகவேயிப்போது எனக்குள்ளே யிருக்கிறார், இதென்ன ஆச்சரியம்! ஆ! சுவாமீ இதெப்படிப்பட்ட விநயம்! இத்தனை நீசனாயிருக்கிற வென்னிடத்திலே தேவரீ ரெழுந்தருளி வந்திருக்கிறது எத்தனைமிகுதியான தயவு! பரலோகத்திலே சம்மனசுகளும் அர்ச்சியசிஷ்டர்களு முமக்கியோக்கியமான வாராத

னையுந் தோத்திரமுஞ்செய்வார்களேயெ ன்னிடத்தி லுமக்கென்ன பிரியமான காரியங் கிடைக்கும்.

*பிற்பாடு சுவாமியைமிகுந்த தாழ்ச்சிவிநயத்துடனே யாராதித்துவணங்கி நமஸ்கரிப்பாயாக.*

ஆராதனைப் பிரகரணம்.

என்சர்வேசுரா சுவாமீ யென்னைப் படைத்தவரோ! அடியே னுமது திருச்சமுகத்திலே மிகுந்த பத்திவணக்கத்துடனே சாஷ்டாங்கமாகவிழுந் தும்மைவணங்குகிறேன். நீசனுயிருக்கிற வடியே னுமக்கி யோக்கியமான பிரகாரத்துக் காராதனை செய்யக் கூடாதென்கிறதினாலே அர்ச்சியசிஷ்ட கன்னிமரியாயி சகலசம்மனசுகள் அர்ச்சியசிஷ்டர்கள் முதலானவர்களுடையவாராதனைகளை யுமக்கொப்புக்கொடுக்கிறேன் சுவாமீ.

*சேசுநாதர் தேவநற்கருணைவழியாக வுனனிடத்தி லெழுந்தருளிவந்ததினாலே யுனமேல் அவரொத்தனை பட்சமாயிருக்கிறானென்றும் ஆகையால் நீயும்வனாச்சினேகிக்க எத்தனைகடனுண்டென்றும நினைத்து, அவருனனைப்பாாத் தெனமகனே நீயெனனைச்சினேகிக்கிறாயோவெனறு கேட்கிறதாக விசாரித்துக் கொள்ளுவாயாக.*

சினேகப் பிரகரணம்.

ஆ! என்பிரிய சேசுவே, என்சீவமே, என்மதுரமே, உம்மை யெல்லாத்தையும் பார்க்கச் சினேகிக்கிறேன், உம்மைமாத் திரஞ் சினேகிக்கிறேன். அடியேன் தேவரீரைச் சினேகிக்கிறேனோவென்று கேட்கிறீர், சுவாமீ யுமக்கெல்லாந் தெரியுமே. நானும்மைச் சினேகிக்கிறதுஞ் சினேகியாமலிருக்கிறதும் நீரறிவீர். இந்த மட்டு நானும்மைச் சினேகியாமலிருந்தது மெய்தான். ஆனாலிது துவக்கி என் மரணபரியந்த முமமைமாத்திரஞ் சினேகிக்கத் துணிகிறேன் ஆ! என் திவ்வியகர்த்தரோ, இத்தனை நன்மையுமகிமையுமுள்ளவருமாய் மட்டில்லாத்தயைச் சுரூபியுமாய் மனோவாக்குக்கெட்டாத அலங்கிருதவடிவுசோபன முள்ளவருமாயிருக்கிற தேவரீரைச் சினேகியாதவர்களுக்கு உம்முடைய அப்போஸ்தல னெழுதினபடியே சாபம். நானும்மைச் சினேகியாமற்போனு லெல்லாத்துக்குமுன்னே யெனக்குத்தானே சாபம். ஆ! தயவுள்ளகர்த்தாவே,

அடியேன் அப்படிப்பட்ட பயங்கரமா
னதீர்வைக் குள்ளாகாதபடிக்கு உம்மு
டைய தேவசிநேகத்தி னக்கினியை யெ
ன்னாத்துமத்திற் பற்றியெரியச் செய்த
ருளும்.

*உனக்குத் தம்மைத்தாமே தந்தருளிய கர்த்தருக்கு நன்றியறிந்ததோத்திரஞ் செலுத்தக்கடவாய்.*

*நன்றியறிந்த பிரகரணம்.*

அர்ச்சியசிஷ்டகன்னிமரியாயே! சகல
சம்மனசுகளே, அர்ச்சியசிஷ்டர்களே, சு
வாமி யெனக்குச்செய்த வுபகாரத்தின்
பெருமை மட்டில்லாததென் றுங்களுக்
கு நன்றாய்த்தெரியுமென்கிறதினாலே யி
வருக்குத் தோத்திரஞ்செய்ய வுங்களை ம
ன்றாடுகிறேன். மட்டில்லாத சிநேகத்து
க்கு அளவில்லாததோத்திரத்துக்கும் பா
த்திரமாயிருக்கிற சர்வேசுரா வுமக்குச்
சதாகாலத்துக்கும் புகழ்ச்சியும் வாழ்த்
துதலுமுண்டாகக்கடவது.

*சுவாமிக்குத் தனதாத்துமத்தையுஞ் சரீரத்தையு மிருதயத்தையு மொப்புக்கொடுத்து அவருடைய தோத்திரமாக வதுகளை நடத்த அநுக்கிரகங் கேட்பாயாக.*

காணிக்கைப்பிரகரணம.

என்சர்வேசுரா வென்னாத்துமத்தையுஞ் சரீரத்தையு மென்சிந்தனை வாக்குக் கிரியைகளையு மென்னிருதயத்தையு முழுது முமக் கொப்புக்கொடுக்கிறேன். இனிமே லிதுகளையெல்லாந் தேவரீருக்குத் தோத்திரமாகவும், உமக்குப்பிரியப்படவும், உம்மைச்சினேகிக்கவு மேற்கையான பிரகாரத்துக்கு நடத்தும்படியாக வெனக்கு அநுக்கிரகஞ் செய்தருளுஞ்சுவாமீ.

பிற்பாடு சுவாமியுடைய சினேகத்தையும பொறுமை தாழ்ச்சியிவைமுதலான புண்ணியங்களையு முனக்குவேண்டிய மற்றக்காரியங்களையுங் கேட்பாயாக.

மன்றாட்டுப்பிரகரணம.

என்னாண்டவரே! சுவாமீ என்னாத்துமத்துக்கு வேண்டிய காரியங்க ளுமக்கு நன்றாய்த்தெரியுமே, தேவரீருடைய தோத்திரத்துக்கு மென துபிரயோசனத்துக்கு முதவுகிறகாரியங்களைக் கட்டளையிடும். ஆனாலடியே னும்மை மன்றாடவேணுமென்று தேவரீர் சித்தமாயிருக்கிறதினாலே யும்மை நான்கேட்கிற மன்றாட் டே

தென்றால், தேவரீ ரென்னுடைய ஆத்து
மத்தையுஞ் சரீரத்தையும் அர்ச்சித்தருளு
ம். நீர்மனுஷீருக்காகப் பேறுபெற்றபல
ன்களை யெனக்குக்கட்டளையிடும். என்னி
டத்தி லுமக்குத் தோத்திரமுண்டாகப் ப
ண்ணும். எனக்குறுதியான விசுவாசத்தை
யுங் கெட்டியான நம்பிக்கையையுங் கட்
டளையிட்டருளும். உலகவெகுமான பாக்
கியஞ் செல்வஞ் சரீரசுக மின்ப மிதுகள்
மேலே வெறுப்புவருவித் தும்மைமாத்
திரந் தேடவுஞ் சினேகிக்கவுந் தயைபண்
ணும். உமக்குப்பொருந்தாத வோரற்ப
பாவத்தைமுதலாய்ச் செய்யாமலிருக்கவு
ம் உமக்குப்பிரியமான தாழ்ச்சி பொறு
மைமுதலிய புண்ணியங்களைச் சுறுசுறுப்
புடனே செய்யவு மநுக்கிரகம்பண்ணுஞ்
சுவாமீ. விசேஷமாகவென்னிடத்திலிருக்கி
றதுர்க்குணங்களைத் தள்ளி யதுகளுக்குவி
ரோதமான புண்ணியங்களைச்செய்ய என
க்கொத்தாசை பண்ணியருளும்.

கடைசியா யிடியே னுலகத்தி லிருக்கிற
மட்டு முமமுடைய சித்தத்தின்படியே

நடந்துநல்லமரணத்தையடைந்து, மோக்ஷவிராச்சியத்திலும்முடைய திவ்வியதரிசனத்தைக்கண்டு என்றென்றைக்கும் வீற்றிருக்கத் தயைபண்ணியருளுஞ் சுவாமீ. ஆமென்சேசு.

பிற்பாட்டவரவர் தங்களுககு வேண்டிய காரியங்களைக கேட்கலாம, அவரவர்களுககாக வேண்டிககொள்ளலாம்.

கடைசியாய்த் தனனிடத்திலுள்ள விசேஷதூாககுணத்தைத்தள்ளி அதற்கு விரோதமான புண்ணியத்தைச்சமபாதிககப் பிரயாசப்படுவேனென்று பிரதிககினைபண்ணுகிறது.

---

## † பரிபூரணபலனுள்ள செபம்.

மகாமதுரம்பொருந்திய நல்ல சேசுவே! அடியேன் தேவரீருடைய சமுகத்தில் முழந்தாளிலிருந்து சாஷ்டாங்கமாகவிழுந்து என்கைகளையு மென்கால்களையுந் துளைத்தார்கள் என்னெலும்பெல்லா மெண்ணிஞர்களென்று தேவரீர்பெயரால் முன்னர், தாவீதென்கிற தீர்க்கதரிசிதமதுவாக்கிஞல்வசனித்ததை என்கண்மு

ன்பாகக்கண்டு, தேவரீருடைய வஞ்சகா யங்களையு மிகுந்த மன உருக்கத்தோடுந் துக்கத்தோடு மென்னுள்ளத்தில் விசாரி த்து நினைவில்தியானிக்கிற விந்நேரத்தி ல் திடனுனவிசுவாசம் நம்பிக்கை தேவசி னேகமென்கிற சுகிர்தக்கருத்துக்களையும் என்னக்கிரமங்களின்மேல் மெய்யான ம னஸ்தாபத்தையு மதுகளைத்திருத்த மெத் தவுறுதியான பிரதிக்கினையையு மென்னி ருதயத்திற்பதியச்செய்தருள வேணுமெ ன்று என்னல்ல சேசுவே தேவரீரை என் னூத்துமத்தின் மேலான ஆசையாவலோ டிரந்துமன்றுடிப்பிரார்த்திக்கிறேன்.

ஆமென்சேசு.

† மெய்யானமனஸதாபப்பட்டுப்பாவசங்கீாத்தன ம்பண்ணிநனமைவாங்கினபினனா, சேசுநாதசுவாமி பாடுபட்டசுரூபத்துககுமுனபாகப் பத்தியுடனே யி ந்தமந்திரத்தைச் செபிப்பவாகளுககு - ஆச்.-பாப் பானவா பரிபூரணபலனைக கட்டளையிட்டருளினா. இந்தப்பரிபூரணபலனை யுத்தரிககிறஸதலத்திலுள்ள ஆத்துமாககளுககுச் செலுத்தலாகும்.



## தேவநற்கருணை வாங்கினபின் தோத்திரம்.

கரைகாணாதகருணைச்சமுத்திரமானசேசுநாதரே! உம்முடையமாம்ஸமுமுதிரமும் புசிக்கிறவன் உம்மிடத்திலேயும் நீரவனிடத்திலேயு மிருக்கிறதாகத் திருவுளம்பற்றினீரே. அப்படியாகையிலின்று அடியேனும்முடைய திவ்வியசரீரத்தை ஞானப்போசனமாக அநுபவித்ததினால் நீரடியேனிடத்திலேயும் அடியேனும்மிடத்திலேயு மொன்றித்திருக்கிறதுக்குச் சந்தேகமில்லை. உருக்கினமெழுகில் வார்த்தமெழுகு ஒன்றாய்ச்சேர்ந்துபோகிறதுபோல இன்று என்னுடைய ஆத்துமசரீரமும்முடைய திரு ஆத்துமசரீரத்தோடொன்றாகப்பட்டது நிச்சயம். இனி என்னுடையகைகால்முதலான அவயவங்களுங் கண்காதுவாய்முதலான இந்திரியங்களு மும்முடையதுகளென்றுசொன்னாற் பொய்யல்ல.

ஆகையா லினிமே லிந்தக்கைகால்களாலுமக் கேற்றகிரியைகளல்லாதே ஏற்கா

தகிரியைகளைச்செய்யப்போகாது. இந்த நாவினாலும் வாக்கினாலு முமக்குத்தோத் திரமான வசனங்களல்லாதே வீண்வார்த் தை சொல்லவொண்ணாது. இந்தக் கண் செவிமுதலான இந்திரியங்கள் கேட்கப் பார்க்கச் செய்யத்தக்ககாரியங்க ளல்லா தே வேறேயொன்றையுங் கேட்கவும், பார்க்கவும், செய்யவுமிணங்கலாகாது. நீர் சுத்தமாக்கின இந்தச் சரீரவவயவங்க ளி னிப்பாபதுர்க்கந்தச்சேற்றி லமிழ்ந்திப் போகிறதுண்டானா லெத்தனையோபெ ரிய துரோகமாயிருக்கும். ஐயோ! என்னு டைய ஆண்டவரே, நான் மறுபடி தவறி க்கெட்டுப்போகாதபடிக் கென்னைக் கா த்தருளுஞ் சுவாமீ.

தேவரீ ரடியேனுக் கிவ்வளவு கருணை காண்பித்து உம்முடைய திருச்சரீரமு பி ரத்தமு மாத்துமமுந் தெய்வீகமுந் தந் தருளினபோதே தேவரீ ரெனக்குச் செ ய்யமாட்டாத நன்மை யெதாகிலுமுண் டோ. தேரீர் நிர்ப்பாக்கியரான வுலோக வாசிகளுடைய துன்பங்களைத்தீர்க்கிற வு

ம்முடைய தயாபரக்கண்களா லென்னுத்
துமநோய்கள்முதலியதின்மைகளை நிவா
ரணமாக்கியருளும். சமஸ்தருக் கெண்
ணிலடங்காத நன்மைபொழிகிற வும்மு
டையதிருக்கரங்களாலெனக்கும்வேண்டி
ய பிரசாதசம்பத்துக்களைத் தந்தருளும்.
தேவரீர் உம்முடைய திருவாக்கினு லும்
மைச் சிநேகிக்கிறவர்களுக்கு வார்த்தை
ப்பாடுகொடுத்த நன்மையெல்லா மடி
யேனு ம்டையும்படி கிருபைசெய்தரு
ளுஞ்சுவாமீ.

முற்காலத்திலே தேவரீரைப் பார்க்க
வேண்டுமென்று மிகவு ம்பேட்சித்த சக்
கேயுவென்ற ஐசுவரியவானுடைய வீட்டு
க்கு நீரெழுந்தருளினபோது, அவர் களி
கூர்ந்து, மிகுந்த நேசத்தோடே தேவரீ
ரைப்பார்த்து, ஆண்டவரே! இதோ வெ
ன்னுஸ்திகளிற்பாதி தரித்திரர்களுக்குக்
கொடுக்கிறேனென்றதற்குத் தேவரீர் பிர
தியுத்தரமாக இன்று இந்தவீட்டுக்கு
இரட்சணியமாச்சுதென்று திருவுளம்பற்
றினீரே. இப்போது தேவரீ ரென்வீட்டி

லல்ல என்னிருதயத்திலேதானே எழுந்த
ருளினீரோ. எனக்குமிரட்சணியங்கிடைத்
தது நிச்சயமாகத்தக்கதாக வென்னிடத்
தில் மட்டற்றபத்திநேசமுந் தர்மகுண
மும் பிறப்பித்தருளுஞ் சுவாமீ. நீரெ
னக்குச்செய்தருளின வுபகாரங்களுக்குந்
தயைக்கு மடியேன் செய்யத்தக்க பிர
திநன்றியென்ன? தேவரீர்சிமோனென்ற
வனில்லத்திலே பந்தியிலிருக்கும்போது
தேவரீருடைய சுகிர்தவசனங்களைக்கேட்
ட மரியமதலேன்மமாள் தன் பாவங்க
ளுக்காக மிகவுந்துக்கப்பட் டும்முடைய
திருப்பாதங்களை யணைத்துக் கண்ணீர்க
ளாற்கழுவித் தலைமயிர்களால் துடைத்து
நோக்கம்விடாமலிருந்தாளே. அப்படி
யே இப்போது என்னிருதயத்திலே தே
வரீர் வந்திருக்கிறபோதே சீவியந்தருகிற
உம்முடையவமிர்தவசனங்களா லென்னி
ருதயமிளகப்பண்ணும். நானும்முடை
ய திருப்பாதம் விட்டுப்பிரிந்துபோகாம
லென்பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்
டுஉம்முடையதிருப்பாதத்திலே திரளாய்

நேசக்கண்ணீர்விடக்கடவேன். என்னு
டைய தலைமயிர்களால் தேவரீருடைய தி
ருக்கால்களைத் துடைக்குமாப்போலே
தேவரீராக்குறித்துத் தரித்திரர்களுக்கு
ப் பணிவிடைசெய்வேன். எல்லாத்திலு
முமக்கூழியஞ்செய்யவிரும்புவேன். மு
ழுமனதோடே உம்மையே நினைத்து உம்
மையே வணங்கிநமஸ்கரித்து நேசித்திரு
ப்பேன். வேறொன்று நேசிக்கமாட்டே
ன். என்னுடைய ஆண்டவரும் இராசாவு
ந் தேவனும் பூரணநேசமும் நன்மைச்
சம்பத்துமாயிருக்கிற உம்மைவிட வே
றேயொன்று மெனக்குத்தேவையில்லை.
சர்வபாக்கியசுரூபியுமாய்ச் சகலவுலோக
ங்களையுங் கைக்கொண்டவருமாயிருக்கிற
தேவரீரை நான் கைக்கொண்டபோதே
சகலலோகநன்மைப்பொரு ளென்கையி
ல் வந்ததுக்குச்சரி.

இனியொருகாலுந் தேவரீ ரென்னிருத
யத்தைவிட்டுப் பிரிந்துபோக விடமாட்
டேன். பிதாப்பிதாக்களி லொருவராகிய
யாக்கோபென்கிறவ ரும்முடைய இட

மாகவந்த தேவதூதனைக் கண்டவிடத்தி லே அவர்பாதங்களை யிராமுழுதுங்கட்டி யணைத்து எனக்கு ஆசீர்வாதங்கொடாம ற் போகவிட்டேனென்று நேசத்தாற் பல வந்தம்பண்ணியிருந்தாரே. இப்போது தேவரீர் மெய்யாகவே என்னிருதயத்தி லே வந்திருக்கிறபோதே நானும்முடை யதிருப்பாதத்தைத் தெனக் காசீர்வாதங் கொடுக்குமட்டுங் கைவிடுவேனில்லை, சுவா மீ. தேவரீர் பரிசுத்ததேவசினைகத்தி னக் கினியா லென்னுடைய சகல துர்க்குணங் களையு மெரித்துப்போடுவீராக. திவ்விய வித்தென்கிற வரப்பிரசாதத்தா லென்னி ருதயத்திற் சகலசுகிர்தங்களை விளையப்ப ண்ணுவீராக. உம்முடைய திவ்வியவிரத் தத்தா லென்னை முழுதுஞ் சுத்தமாக்கி யினிமேலடியேனெந்தப்பாவத்திலும்வி ழாதபடிக் கும்முடைய வல்லவரப்பிரசா தத்தா லென்மனதை யுறுதிபண்ணியரு ளுஞ்சுவாமீ.

இம்மாத்திரம் நன்மைக ளும்முடை யசரீரபோசனத்தா லெனக்குக் கிடைக்

கிறபோதே இப்படிப்பட்ட திவ்வியவி ருந்தைத் தேவரீருண்டாக்கினதுக்கு மெ னக்குத் தந்தருளினதுக்கும் உமக்கு ஆ ணதோத்திரங்களைச்சொல்ல என்னுடை யமனதுஞ் சிந்தனைகளும் வாக்குவசனங் களும்போதாது. ஆனதினால் உலோகத்தி லிருக்கிற சகலபொருட்களும் என்னோ டேகூட உம்மைஸ்துதிக்கக் கூப்பிட்டுக் கொள்ளுகிறேன். நீருண்டாக்கின வான ம், பூமி, தண்ணீர், காற்று முதலான பூ தியங்களுலோகத்துக்குச் செய்துகொ ண்டிருக்கிற வுபகாரங்களா லும்முடை ய கருணையின்மகிமையைப் பிரசங்கிக்க வருவதாக. நீர்படைத்த மரந் தழைபூக்க னிமுதலான சகலமு முலோகத்துக்குக் கொடுக்கிற இரச்சுகந்தத்தினாலேயுங் கா ண்பிக்கிற அலங்காரத்தினாலேயும் உம்மு டைய சுகுணவிலக்ஷணங்களின் மதுரத் தையுந் தெய்வீகத்தி னலங்காரத்தையும் புகழவருவதாக. நீர் படைத்த மிருகபக்ஷி சர்ப்ப முதலான சீவசெந்துக்கள் தேவரீ ரதுகளுக்குக்கொடுத்தசவிசௌரிய சாம

ர்த்தியத்தினாலே உம்முடைய அளவில்லாதமகிமையைப் பிரசித்தமாக்கக்கடவதாக. நீருண்டாக்கினசந்திரசூரியநட்சத்திரங்கள்முதலான பிரவைகளும்முடையபிரகாசத்தை வருணிக்கவருவதாக. தேவரீர் மேலென்னன்பு அதிகரிக்க ஆண்டவரே தேவரீரடியேனுக்குச் செய்தருளின இந்த மட்டில்லாதநன்மைக்குப் படைப்புண்ட சகலவஸ்துக்களோடேயு மும்மக்கு ஆயிரமாயிரம்விசை தோத்திரம்பண்ணுகிறேன். உம்முடைய திருமாம்ஸமுமிரத்தமும்போசனமாகக்கொண்டவன் ஒருகாலுஞ் சாவைக்காணமலெக்காலத்துக்குஞ்சீவிப்பானென்று தேவரீர் திருவுளம்பற்றினதினாலெனக்குத்துலையாய்நரகமரணத்தையகற்றிச்சத்தமானசீவியத்துக்கு அடியேனைப்பாத்திரமாக்கி யிரட்சித்துக்கொள்ளுஞ்சுவாமீ. ஆமென்சேசு.



# தேவநற்கருணையைச் சந்திக்கிறவகை.

பரமகர்த்தராகியசேசுநாதர்தேவநற்கருணையிலே நமதுபேரிற்காண்பிக்கிற மட்டில்லாத அன்புகளுக்குப் பிரத்தியன்பைச் செலுத்தத்தக்கதாக ஆத்துமசஞ்சீவியாகிய அவருடைய திருச்சரீரத்தை யடிக்கடிபத்தியோடேவாங்கிக்கொண்டு அவரோடு ஐக்கியமாகிறதுந்தவிர அடிக்கடி தேவநற்கருணையைச் சந்திக்கிறதினாலே யவருக்குவணக்கஞ்செய்கிறதும் மிகுந்த நியாயமல்லவோ. ஆகையாற் சிலமுறை அவரை யாராதிக்க இடையர்களையு மூன்றிராசாக்களையும்போலவும், சிலமுறைஅவருடையதிருப்போதகங்களைக்கேட்டுக்கொள்ள, அப்போஸ்தலர்களையுஞ் சீஷர்களையும்போலவுஞ் சிலமுறை நமமுடைய பாவங்களாலே அழுதுகொண்டு அவருடைய ஆச்சரியமான இலட்சணங்களைத் தியானிக்க மரியமதலேனம்மாளைப் போலவு மவரண்டைக்குப்போவோமாக. சுவிசேஷத்திற்சொல்லப்பட்ட பிணியாளிகளைப்போலே நமமுடையஞானநோய்களிலேநின்றுகுணமாக்கப்படவும். அல்லது தரித்திரர்களைப்போலே யவருக்கு நமமுடையவசரங்களைச்சொல்லிக்காண்பிக்கவும், நமமுடைய துன்பதுரித சந்தேககஸ்திகளில் வேண்டிய ஆறுதலையும்வரப்பிரசாதங்களையும்வரிடத்திற் கேட்கவும்வருடைய திருச்சந்நிதியிற் சேருவோமாக. தேவநற்கருணையில் மெய்யாகவேயெழுந்தருளியிருக்கிற ஆராதனைக்குரிய கர்த்தாவின் சமுகத்திலே தகுந்தவணக்கம் பத்தி யொடுக்கம் நன்றியறிதல் விசுவாசம் நம்பிக்கை தேவசிநேகமுதலான சற்குணங்கள் நம்மிடத்தி லெப்பொழுதும் விளங்கும்படியாய்க் கவனித்திருப்போமாக.



# தேவநற்கருணையின்சந்நிதியிலே வேண்டுதல்.



நிகரில்லாத பரம அன்பின் மிகுதியினாலே தேவநற்கருணையிலெழுந்தருளி யெங்கள் பீடங்களின்மேல் நிலையாயிருக்கத் தயைபுரிந்த மதுரயேசுவே! அன்புக்குரிய இரட்சகரே! தேவரீர் பரமகர்த்தரொன்றுஞ் சர்வத்துக்கு மதிபதியான கடவுளாகிய வென்தெய்வமென்றும் விசுவசித்து நம்பி யிதிலே உம்மை மிகுந்த தாழ்ச்சிவணக்கத்தோடே யாராதிக்கிறேன். பரமதிவ்விய நற்கருணையிலிருக்கிற வுமக்குப் பாவிகள்செய்கிற துரோகங்களைத் தேவரீர் பாராட்டாமல் தேவரீ ரடியோர்கள்பேரிற் காண்பிக்கிற மட்டில்லாதப

ட்சத்தைப்பற்றி முழுமனதோடே யும
க்கு நன்றியறிந்த தோத்திரம் செய்கிறே
ன். எங்கள் நன்றிகெட்டதனத்தின்பே
ரில் மிகுந்தவிதனப்பட்டு அநந்தமகிமை
யுள்ளபரமதேவனே! ஆராதனைக்குரிய இ
ந்தத் தேவத்திரவிய-அநுமானத்திலிருக்
கிறவுமக்குச் செய்யப்பட்டதுமினிச்செ
ய்யப்படுவதுமாகிய துரோகங்களுக்கும்
அவமானங்களுக்கும் நிந்தைகளுக்கும்
பரிகாரமாக என்னாலியன்றமட்டும் பத்
திவணக்கத்தோடும் என்னிருதயத்திலுள்
ள முழுப்பக்ஷத்தோடு முமக்கு நமஸ்
காரஞ்செய்யவருகிறேன். ஆ! என் திவ்வி
யகர்த்தாவே, முன்னால் நானே அநேக
ம்விசை யும்முடைய சந்நிதியில் வணக்க
க்குறைச்சலாய் நடந்ததுக்குந் தேவபத்
தி சிநேகமில்லாம ல்சட்டையாய் உம்
மைவாங்கிக்கொண்டதுக்கும் அடியேன்
படுகிற மிகுதியான வியாகுலத்தைத்தே
வரீருக்கு எவ்விதமாய்ச் சொல்லப்போ
கிறேன்.

தயவுள்ளகர்த்தாவே! அடியோர்களு

டையபாவத்துரோகங்களைப்பொறுத்துத்
உம்முடைய அளவில்லாத கிருபையை
மாத்திரம் நினைத்தருளுஞ்சுவாமீ. தேவ
ரீருடைய மட்டற்ற அன்பு விளங்குகிற
இந்தத் தேவத்திரவியாநுமானத்தில் உம்
மைவணங்கவும் எல்லாருடையவணக்கத்
தையு முமக்கு வருவிக்கவும் எனக்குள்ள
பெருமாசையை யேற்றுக்கொள்ளுஞ் சு
வாமீ. மெய்யாகவே சம்மனசுகளும் அர்
ச்சியசிஷ்டர்களும் இதிலே உம்மைச் சி
னேகித்து ஸ்துதித்து ஆராதிக்கிறது
போலே நானு மென்முழுமனதோடே
யும்மை நேசித்துத் தோத்தரித்து வந்
தித்து வணங்க அபேட்சிக்கிறேன். மே
லும் நான் சாஷ்டாங்கமாகவிழுந் தாரா
திக்கிற வுமது இந்தத் திருச்சரீரத்தையு
ம்விலைமதியாதவிரத்தத்தையும்பற்றி, நா
னினித்தேவநற்கருணையிலும்மைப் பயப
த்தி வணக்கத்தோடே நமஸ்கரிக்கிறதினு
லு மதைத் தகுந்த ஆயத்தத்தோடே வா
ங்கிக்கொள்ளுகிறதினுலும் உம்முடைய
கிருபையடைந்து என் மரணத்துக்குப்

பின்பு சகல மோட்சவாசிகளோடேகூட ப்பேரின்பபாக்கியத்தில் நித்தியமா யும்மைத்தரிசித்து ஸ்துதிக்கிறதுக்குப் பாத்திரவானாகும்படியாக எனக் கநுக்கிரகஞ்செய்தருளுஞ் சுவாமீ. ஆமென்சேசு.

‡ சர்வேசுராசுவாமீ! உம்முடைய திவ்வியகுமாரனுமா யெங்கள் பரமகுருவுமாயிருக்கிற சேசுநாதர் அடியோர்கள்செய்த பாவங்களின்பரிகாரமாக உமக்குச்செலுத்துகிற பரிசுத்தபலியை யும்முடைய தேவாலயத்தில் நின்றும் தேவரீர் பரமண்டலங்களில் வீற்றிருக்கிற வுந்நதஸ்தலத்திலேநின்றும் பார்த்து, எங்களெண்ணிறந்த அக்கிரமங்களைப்பொறுத்தருளும். சிலுவையினின்று எங்கள் திவ்விய இரட்சகரு மனுஷாவதாரத்தா லெங்கள்சகோதரருமாகிய சேசுவினுடையதிருவிரத்தத்தின்சத்தம் உம்மைநோக்கிக்கூப்பிடுகின்றது. எங்கள் மன்றாட்டைக்கேட்டருளுஞ்சுவாமீ. சுவாமீ யும்முடைய கோபத்தை யமர்த்தியருளும். எங்கள்மே லும்முடைய கிருபாகடாட்சம்

வைத்து நன்மைபுரியும். எனகர்த்தாவே! அதிகதாமதஞ்செய்யாதேயும். இவ்வூரின்மேலும் இச்சனத்தின்மேலுந் தேவரீர்தயவாயிருக்கும்படிக்கு உம்முடையதிருநாமம் பிரார்த்திக்கப்பட்ட படியினாலே யுமக்குத்தோத்திரமாகத்தானே யெங்களுக்குக் கிருபைசெய்தருளும்.

ஆமென்சேசு.

*பரிசுத்தபரமதிவ்வியநற்கருணைக்குவந்நமஸ்காரமுந் தோத்திரமும் ஸ்துதியுமுண்டாகக்கடவது. இப்படி-௩-தரஞ்சொல்லுகிறது.

‡* அர்ச்... பாப்பானவர்மூந்தின இவ்விரண்டுமந்திரங்களைத் தகுந்தவாயத்தத்தோடேசொல்லுகிறவர்களுக்குமிகுந்தபலன்களைக்கட்டளையிட்டார்.

---

தேவநற்கருணையிலே *புரவலரானசேசுநாதர் தம்மைத்தாமே நமக்குத்தந்தருளிய தயாபத்தகுதியின்விவேகம்.

---

பெற்றபிள்ளைக்குப் பிழைவருமாகிற் பிதாவுக்கன்றி மற்றவர்க்கென்னவருத்த

* இரட்சகர்.

மூண்டு. மனுவைப்படைத் தசுவாமி ஒருவ ரேமக்கள்பிழைக்காய் வருத்தங்களுற்றுத் திக்கெல்லாங்கூசத் திருவுயிரளித்து மக்களுயிரைமாளாது மீட்டார். மாக்களைப்படையாதமாய்ப்பொய்த்தேவர் ஆக்கினதுண்டோ இந்தவரிய நற்செய்கை.

இரப்பவருக்கு நிலநிதி முதலானசெல்வபாக்கியங்களையும் ஊணுடை முதலானவுதவியொத்தாசைகளையு முதாரமாய்க் கொடுப்பது உலகத்திலுள்ள வரியகொடையாளரியல்பாம். ஆயினும் உன்னையுங் கொடுவென்றாற் கொடுப்பவர்யார்.

தரணியையுண்டாக்கித் தரணியிலுள்ளதெல்லாத்தையுமளித்ததயாபரக்கடவுளானசேசுநாத ரொருவரோ நமக்குத்தம்மையுந் தந்தருளினர்.

தம்மையுந்தந்தபின் தாவென்றுகேட்கப் பின்னையேதுண்டுபேருலகத்தில்.

பின்னையொன்றில்லாப் பெருந்தயைக்கொடையாய்த் தம்மையேதந்த தேவதற்பரனை இன்னமுற்தேடி யிறைஞ்சாதிருப்பது இயல்போ அறிவோ எம்மைமனுவீர்.

---

# தேவநற்கருணைச்

## சந்திப்பின்

## ஆராதனைக்காதல்.

---

### ௲-வது.

சியோன்*குமாரத்திகளே! நீங்கள்வெ ளியிற்புறப்பட்டுச் சலொமோனிராசாக லியாணநாளிலும்-அவ ரகம்கிழுநாளிலு மவருடையதாயா ரவருக்குச்சூட்டின மு டியோ டவரைப்பாருங்கள். சலொமோன்- உந்நதகவி-௩-அதி. ௰௧.

இஷ்டப்பிரசாதத்தின் குமாரத்திகளா கிச் சர்வேசுரனை ஸ்நேகிக்கு மாத்துமங் களே! நீங்க ளுலக-அந்தகாரத்தினின்று வெளியிற்புறப்பட்டு-உங்க ளிராசாவாகி ய சேசுநாதர் சிலுவையி லறையட் டுங்க ளோடு ஞானக்கலியாணபந்தனமாகத் தி ருவுளமான நாளிலவருக்குத்தாயாரிடமா யிருக்கவேண்டிய நிஷ்டூரயூதச்சபை நிந் தையவமானமா யவருக்குச் சூட்டின முண்முடியோ டவரைப் பாருங்கள்.

* ௰௬.

இந்த ஸ்நேகதேவத்திரவியாநுமானவழி யாய் மறுபடியு மூங்களோடுபந்தனமா க மகாவாசைப்படுகிற நன்மைநிறைந்த வுங்கள்திருப்பத்தாவின் ஸ்நேகப்பெருக் கத்தைப்பாருங்கள்.

என்னுசைக்குரிய-அன்பனனசேசுவே! தேவரீரடியேன்மேலவைத்தவன்பினுல் மிகுந்த நிந்தையவமானமு நிஷ்டூரமர ணமு மடைந்து என்னுத்துமத்தோடுப ந்தனமாக வித்தனையாசைப்படுகிறதைக் கண்டு நானெப்படி மனமுருகாதிருப் பேன். ஆ! என்னன்பனே, தேவநற்கரு ணைவழியாக வென்னிடத்தில் மெய்யாக வே யெழுந்தருளி-என்னை யும்மோடுப ந்தனமாகச் சேர்த்துக்கொள்ள வாரும். மெய்யாகவே தேவரீ ரென்னிடத்தி லெ ழுந்தருளிவர நான்பாத்திரமாகாதவனுயி ருந்தாலு முமது நன்மைத்தனத்தினுலா வதென்னேடு ஐக்கியமாகவாரும். நெ டுநாள் நானுமக்கிரண்டகம்பண்ணின ச த்துராதியாயிருந்தாலு முமதுநன்மைத் தனத்தைப்பற்றி நீ ரென்னுத்துமத்தையு

மக்குப் பத்தினியாகத்தெரிந்துகொள்ள த்திருவுளமானதினால் என்னன்பரான பத்தாவே! என்னுள்ளத்தி லெழுந்தருளி வாரும். இனி நானுமக்கொருகாலு மிரண்டகம்பண்ணாமற் பதிவிரதையானவள் தன்பத்தாவுக்குமாத்திரமே பிரியப்பட வருந்துமாப்போலே நானுமக்குமாத்திரமே பிரிதியாகவருந்துகிறேன். உம்மைமாத்திரமே ஸ்நேகிக்கிறேன். சேசுவே! நான்முழுது முமக்குமாத்திரமே சொந்தமாயிருக்கிறேன்.

உ-வது.

ஆண்டவருடைய நன்மைத்தனத்துக்கியோக்கிய வெண்ணங்கொள்ளுங்கள்.
சலொமோன ஞானகமம் க-அதி-க.

என்னாத்துமமே! உன்னாண்டவருடைய மட்டில்லாதநன்மையையு மளவறுக்கப்படாத ஸ்நேகத்தையுங் கண்டிருந்து நீ யின்னமித்தனைபயங்காளியுமாய்க்கோழையுமாயிருக்கவேண்டியதென்னே. சேசுநாதர் தம்மையுட்கொள்ளவுன்னையோக்கியமாகப்பண்ணத்திருவுளமாயிருக்கை

யி லுனக்கு நம்பிக்கையில்லாமற் போவ தென்றோ. தம்மைமுழுது முனக்குக் கொடுக்கத் திருவுளமாயிருக்கிற சர்வேசு ரனுடைய மட்டற்ற நன்மைத்தனத்துக் கியோக்கிய எண்ணங்கொள்வாயாக. ஆ ண்டவருடையதீர்வை நடுநடுக்கத்துக்குரி யதீர்வையாயிருக்கிறது மெய்தான். ஆ ளு லாங்காரிகளுக்கும் பாவத்திநிலைகொ ண்டவர்களுக்கு மவர்தீர்வை பயங்கரமா னதீர்வையா யிருக்கிறதல்லாமல் அவரை ஸ்நேகிக்கவு மவருக்குப்பிரியப்படவுமா சையுந் தாழ்ச்சிமனஸ்தாபமுமுள்ள பா விகளுக் கவரிடுந்தீர்வை தயையு மிரக்கமு நிறைந்த அவர்திருவிருதயத்தினின்று பி றக்குந் தீர்வையாகையா லிந்தத்தீர்வை த யையும் ஸ்நேகமு நிறைந்ததீர்வையாயிரு க்கிறது. இதனாலல்லோ ஆண்டவரே! நா னுமது நீதியின்மேல் மகாநம்பிக்கைவை த்திருக்கிறேனென்றும் உமது நீதியை நினைத்து நான்சந்தோஷ அகமகிழ்ச்சி யாயிருக்கிறேனென்றுந் தாவீதனென்பு வர் - ாய அ - சங்கீதத்திற்சொல்லியிருக்கி

ளுர். சர்வேசுரன் றம்மைத் தேடுகிறவர்களு க்கு மகா நன்மையானவரென்று எரேமி யாவென்ற தீர்க்கதரிசியானவர் வசனித்தி ருக்கிறது மில்லாமல் செவ்வைமன துள்ள வர்களுக்குச் சர்வேசுர னெத்தனையோ ந ன்மைநிறைந்தவரா யிருக்கிறரென்று ந் தாவீதனென்பவ ராச்சரியப்படுகின்றூர்.

என் சர்வேசுரா! என்னம்பிக்கையே! நானும்மைமாத்திரமே நாடி யும்மைமா த்திரமே ஸ்நேகித்து உமக்குமாத்திரமே பிரிதியாகவருந்தி யுமதுதிருச்சித்தத்துக் குமாத்திரமே யேற்கநடக்க வருந்துகி றேன். சுவாமீ! நானும்மைக்காணவு மு மதுதிருச்சித்தத்துக் கேற்கநடக்கவுமும் மையொருபோதும் விட்டுப்பிரியாதிரு க்கவுங் கிருபைசெய்தருளும்.

௩-வது.

மாரோடணைக்கப்படுவீர்கள். தீர்க், இசை யாசியார்-௬௰௬-அதி-௰௨.

தேவநற்கருணையி லெழுந்தருளியிருக் கிற சேசுநாதர் நம்மைப்பார்த்து நாமு ங்களுக்கு ஊட்டும் அமிர்தமாகிற நமது

விலைமதிக்கப்படாத திருவிரத்தத்தையு
ம் நமதுசரீரத்தையுந்தானே யுண்ணுங்
களென்று நம்மை யழைக்கிறதினாலே
மேற்சொல்லப்பட்ட வேதவாக்கியநிறை
வேறுகிறது. எந்த ஆயனாகிலுந்தன்னிரத்
தத்தை யாட்டுக்கிடையாய்க்கொடுத்து வ
ளர்க்கிறதுண்டோ வென்றும், பக்ஷநி
றைந்த தாய்மார்கள் தாங்களே யூட்டக்
கொடாமற் பல்முறை தங்கள்பிள்ளைகளு
க்கு வேறொருவரைக்கொண்டு பால்கொ
டுக்கச்செய்துகொண்டு வருகையில் தா
ய்மார்களைவிட அன்புள்ளசேசுவே யெங்
களாத்துமநேசரான திவ்விய ஆயனே!
தேவரீ ருமது திருவிரத்தத்தைத்தானே
யெங்களுக் கமுதாகக்கொடுத்து எங்களை
வளர்க்கத் திருவுளமானீரொன்றும்-அர்ச்.-
கிறிசொஸ்தொமு அருளப்ப ரொழுதியி
ருக்கிறார்.

என்னாத்துமநேசரான சேசுவே! நா
ன்வேண்டிய ஆயத்தத்தோடிருந்தால் உ
மது திருவிரத்தத்தை யெனக்கு ஊட்டு
கிறதுமல்லாம லுமதுதிருவிருதயத்தை

த்தானே முழுது மெனக்குத்தந்தருளத் திருவுளமாயிருக்கிறதினாலே உலகவின்ப சுகமென்னப்பட்டதெல்லா நான்முழுது ம்வெறுத்துவிடநியாயமாயிருக்கின்றது. ஆகையால் என்னாண்டவரே! நா னுலக வின்பசுகமெல்லாம் முழுதும்வெறுத்து அதுகளையெல்லாந் தேவரீருக்குப் பலி யாக வொப்புக்கொடுக்கிறேன். உம்மை ப்பிரிந்து இன்பசுகங்களையெல்லா மநு பவிக்கிறதைவிட உம்மோடொருமித்து ச் சகலதுன்பதுரிதங்களையெல்லா மநுப விக்கத்துணிந்திருக்கிறேன். சகலபடை ப்புண்ட வஸ்துக்களு முமக்குமாத்திர மே பிரியப்படவருந்தவேண்டியிருக்கிற தினாலே யினிநா னுமக்குமாத்திரமே பி ரியமாகவருந்துவேன். நானும்மைக்கே ட்கிற வும்முடைய ஸ்நேகத்தையு மிஷ்ட ப்பிரசாதத்தையு மெனக்குத்தந்தருளும். எனக்கதுபோதும், எனக்கதுவே சம்பூ ரணமாகும்.

௪-வது.

நம்முடைய வாண்டவராகிய விரட்சக

ரூடைய நன்மைத்தனமும் ஸ்நேகமும் வெளியாயிற்று. அர்ச் - சின். - தித்து - ௩ - அதி - ௪.

தேவன் மனுஷனானதினாலே மனுஷர் பேரிற் சர்வேசுரனுக்குள்ள ஸ்நேகமெவ்வளவென்று வெளியாகிறதென்று - அர்ச். - சின்னப்பர் சொல்லியிருக்கிறார். ஆனலாண்டவர் தேவநற்கருணையை யுண்டுபண்ணினதைப் பார்க்கும்பொழுது நம்முடைய ஆத்துமங்கள்பேரி லவருக்குள்ள ஸ்நேகங் கரைகடந்தஸ்நேகமென்றுகாணப்படுகிறதாமே. நமமுடையமாமிசத்தைப் பொசியுங்கள் நமதிரத்தத்தைப் பானம்பண்ணுங்களென்று சொல்லுகிற து பைத்தியமபோற் காண்கிறதல்லோவென்று - அர்ச். - அகுஸ்தீன் சொல்லியிருக்கிறார். சேசுநாதர்பாடுபடு முதனாள் இராவமுது செய்யுந்தருணத்தில் இதுநமது சரீர மிதை வாங்கியுட்கொள்ளுங்களென்றுசொல்லும்பொழுது நம்மைப்பார்த்து உங்கள்மீதில் நமக்குள்ள ஸ்நேகமின்னதென்று நீங்கள்றியும்படிநமதுமாமிசத்தைத்தானே யுங்கள்போசனமாகச் சா

ப்படுங்களென்று சொல்லுகிறதாக விள
ங்குகிறதல்லோ. சேசுநாதர்தாமேயிதைநி
னையாமலுஞ் செய்யாமலு மிருந்தா வி
தை நினைப்பவர்களா ரிதையபேட்சிப்ப
வர்களார். சேசுநாதர்தமது சரீரத்தைப்
போசனமாகக் கொடுப்போ மென்கிற
தைக்கேட்ட சிலசீஷர்களுக்கந்தவசனம்
மகாகடினவசனமாய்க்கண்டதனு லிப்ப
டிப்பட்ட வசனங்களைக்கேட்பவனுரொன்
றுசொல்லி யவரைவிட்டுப்பிரிந்து போ
னூர்கள். சர்வேசுரனுடைய மட்டற்றவ
ல்லபத்தி னற்புதத்தைக்கண்டு நானதிச
யப்படாமல் அவர் ஸ்நேகத்தின்ற்புதத்
தைக்கண் டதிசயப்படுகிறேன். மெய்யா
கவேயவருடையஸ்நேக-அற்புதமனுஷர்
புத்திக்கடங்காததா யிருக்கிறது. புத்திக்க
டங்காததா யிருந்தாலுஞ் சத்தியசுரூபி
யாயிருக்கிற சர்வேசுரன்றுமே திருவுள
ம்பற்றியிருக்கிறதினுலே சத்தியமாகத்
தானே யிருக்கின்றது.

முன்னுளில் இஸ்ராயேல்சனங்களுக்கு
ச் சர்வேசுரன்செய்துவந்த வெண்ணத்

துலையாதவுபகாரங்களுக்குவதிலா யிவர்தம்மை ஸ்நேகிக்கச்சொல்லிக் கேட்டதுபோல் இந்நாளிலே சேசுகிறீஸ்துநாதர்நமக்குச்செய்துவருகிற மட்டில்லாத ஸ்நேகக்கிருபைக்குவதிலா யவனைநாம் ஸ்நேகிக்கவேணுமென்று கேட்கிறாரல்லாமல் வேறொன்றுங்கேட்கவில்லை.

ஸ்நேகநிறைந்தசேசுவே யும்மை ஸ்நேகிக்கிறவர்களுக்கு நீர் செய்துவருகிற நன்மையையளவிடுபவனார்? நம்மைஸ்நேகிக்கிறவர்களை நாம் ஸ்நேகிக்கிறோமென்று இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனாலேவப்பட்ட சலொமோனென்ற ஞானியைக்கொண்டும் நமதுபக்கமாய்த் திரும்புங்கள் - நாமுமுங்கள்பக்கமாய்த் திரும்புவோமென்று சக்கரீயனென்ற தீர்க்கதரிசியைக்கொண்டும் உலகத்துக்கறிவிக்கத் திருவுளமானதுமல்லாமல்- அர்ச். அருளப்பர்சுவிசேஷத்திற் சொல்லியிருக்கிறதுபோல் நம்மை ஸ்நேகிக்கிறவர்களிடத்தில் நாந்தாமேவந்து வாசம்பண்ணுவோமென்றுந் திருவுளம்பற்றியிருக்

கிறீரல்லோ. ஆண்டவரே! மனுஷிரும்மை ஸ்நேகிக்க வாசைகொள்ளும்படி யின்ன நீர்செய்யவேண்டியதென்ன? என்னுசைக்குரிய அன்பரே! நானும்மை முழுமனதோடு ஸ்நேகிக்கவேணுமென்று தேவரீர்திருவுளமாயிருக்கிறதினு லும்மை முழுமனதோடு ஸ்நேகிக்கிறேன். இன்ன நானும்மை முழுமனதோடு ஸ்நேகியாவிட்டா லும்மை ஸ்நேகிக்கவேண்டிய வகையையெனக்குப்படிப்பித்தருளும். நீர்கற்பிக்கின்றதை யெனக்குக்கொடுத்து உமக்குச்சித்தமானதைக் கற்பித்தருளும்.

௫-வது.

என்னையுமதருகிலிழும். உமதுசுகந்த வாசனையா லும்மைப் பின்பற்றி யோடுவோம். சலொமோன உந்நதகவி. ௧-அதி-௩.

மனுஷிருலகத்தி லிருக்குமளவுஞ் சுபாவமாய்ச் சர்வேசுரனிடத்தில் மேலாகவேறிப்போகக் கூடாதென்கிறதினலே சற்பிரசாதவழியா யவர்தாமே மனுஷரிடத்திலிறங்கத் திருவுளமாயினுர். ஆண்டவரே யுமது கருத்து நிறைவேறும்படி யென

னையுமதருகி லிழுத்தருளும். என்னாசைக்கு இரம்மியங்கொடுக்க உம்மையென்னிடத்திலிழையாமலுமது திருச்சித்தத்துக்கியற்கையானதைமாத்திரமே விரும்பவுஞ் செய்யவு மென்னை யுமதருகிலிழுத்தருளமன்றாடுகிறேன். உமது திருவுளத்துக்கு முழுதுநானுத்திருக்க நியாயமிருக்கிறது. என்சேசுவே! என்னை முழுதுமும்மோ டேகரிக்கப்பண்ணியருளும். உம்மோடு ஏகபந்தனமாகிறதினு லுலகபாசமெல்லா மறுத்து மெய்யானவிருதயசுமாதானத்தினாற்றுகிற வுமது திருச்சித்தத்தோடு என்மனதைமுழுது மைக்கியப்படுத்திச் சகல தர்மபுண்ணியங்களையு மநுசரித்து இகத்திலும்பரத்திலுஞ் சமாதானமா யும்மி லிளைப்பாறச் செய்தருளும்.

கூ-வது.

என்னன்பன்முழுதுமாசைக்குரியவன்.

சலொமோன்-உ. ந்நதகவி-ரு-அதி-யகூ.

சேசுநாதர் தம்மை மெய்யானபத்தராக ஸ்நேகிக்கிற ஆத்துமாக்களுக்குத்

துன்பமுதலிய சோதனையைக்கொடுத்தா லும் ஆறுதலைத்தந்தாலுங் கூடவிருந்தா லுந் தூரவகன்றதாய்க்கண்டாலும் ஸ்நே கத்தைப்பற்றியுந் தம்மை ஸ்நேகிக்கவே ணுமென்கிறதைப்பற்றியும் எப்பொழு துமெல்லாவற்றையுஞ்செய்கிறதினாலேய வரொப்பொழுது மாசைக்குரிய வன்பரா கத்தானேயிருக்கிறார்.

சேசுவே யென்னை யுமக்குச் சித்தமா னபடி நடத்தும். நீரெனக்குத் துன்பது ரிதங்களைக் கட்டளையிட்டாலுஞ் சந்தோ ஷீ வாறுதலைத்தந்தாலும் எல்லாம் ஸ்நே காக்கினிமயமாகிற வுமது திருவிருதயத் தினின்று பிறக்கிறதினாலேயும் எல்லாமெ னக்கு நன்மையாயிருக்குமென்கிறதினா லேயு மெப்பொழுது நானும்மை ஸ்நே கிப்பேன்.

ஆண்டவரே யென்னிருதயமெல்லாத் துக்குமாயத்தமா யிருக்கின்றது. உமது சித்தத்துக்குச் சரிப்பட்டதெல்லாஞ் சந் தோஷமாயேற்றுக்கொள்ள வென்மன து ஆயத்தமாயிருக்கின்றது. எக்காலத்தி

லு நாறுண்டவனைஸ்தோத்தரிப்பேன். என்னைப்படைத்தவாண்டவனே! எனக்குச்சந்தோஷகாலமானாலுந் துக்கக்காலமானாலுமெக்காலத்திலுமும்மை ஸ்துதித்துக்கொண்டேவருவேன். அநேக ஆயிரமுறை தேவரீருக்கு மனநோகப்பண்ணின நானாறுதலையையவுஞ் சந்தோஷிப்படவும் ஆசைவைக்க நியாயமல்ல. எல்லாக்காரியத்திலு மும்மக்குமாத்திரமேசந்தோஷமும் பிரியமுமானாற் போதும். நானென்ன துன்ப துரிதப்பட்டாலு மென்சேசுவே யுமக்குமாத்திரஞ் சந்தோஷமானாலெனக்குஞ் சந்துஷ்டி தானே. என்னாசைக்குரியவன்பரான சேசுவே! நீரென்னருகிலிருந்தாலும் அகலநின்றாலு மெப்பொழுது மென்னாசைக்கினிய வன்பராகத்தானே யிருக்கிறீர். நீரெனக்குக் கஸ்தி துன்பங்களைக் கட்டளையிட்டாலும் ஆறுதல்மனோகரத்தைத்தந்தாலு நானும்மையெப்பொழுதும் ஸ்நேகிப்பேன். எப்பொழுது மும்மக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ்சொல்லிக்கொண்டேவருவேன்.

எ-வது.

செல்வநிறைந்து தன்னுடையவன்பன்மேற் சார்ந்து வருந்தரத்தினின்றேறுகிற இவளார். சலொமோன்உந்நதகவி அ-அதி-ரு.

உலகத்திலிருந்தாலுமுலகத்தை யத்துவானக்காடாகவெண்ணுகிறதும், காணப்பட்டவஸ்துக்கள்மேற் பற்றுதல்வைக்காமற் காணப்படாத தன்மையாகிற சர்வேசுரனுக்காகமாத்திரமே சீவித்திருக்கிறதும் எங்குமெல்லாத்திலுஞ் சர்வேசுரனைத் தானே தரிசிக்குமாப்போலே யவரைமாத்திரமே ஸ்நேகித்து-அவருக்குப் பிரியப்படமாத்திரமே வருந்துகிறதும் உலகத்துக்குமேலாக வெழும்பிச் சர்வேசுரன்மேல்மாத்திரமே நம்பிக்கைவைத்துச் சர்வேசுரனைமாத்திரமே தேடி ஞானமனோகரத்தை யநுபவிக்கிறதும் நிர்மல தேவ ஸ்நேகத்தால் தேவநற்கருணைவழியா யடிக்கடிசேசுநாதரோ டொன்றுபடும் பாக்கியமான ஆத்துமங்கள்டையு நன்மையல்லோ. என்சர்வேசுரா! என் நம்பிக்கையே, என்ஸ்நேகமே, என்பாக்கிய

மே, உலககாரியங்களை யெல்லா முழுது மொழித்து உமக்காகமாத்திரமே சீவி த்திருக்கும் பாக்கியமான ஆத்துமங்க ளோடு நானுமொருவனாக விருக்கச்செய் யும். இனியுலகத்தை நானொருவனுந்தர மாகவெண்ணிப் படைக்கப்பட்ட வஸ்து க்கள்மேற் பற்றுதல்வைக்காம லுலகத்தி ல் நீரும் நானுமாத்திரமே யிருக்குமாப் போ லுமதுமேல்மாத்திர மென்பத்தி நம்பிக்கைமுழுமையும்வைப்பேன்.

அ-வது.

மனுஷனிருதயத் துக்குத்திடனும்அப் பம்.

தாவீதன்-௱௩-ம். சங்கீதம்.

நம்மைப் பொசிக்கிறவ ன்மக்காகச்சீ விப்பானென்று சேசுநாதர் திருவுளம்ப ற்றி யிருக்கிறதினாலே போசனஞ் சரீரசீ வனைக் காப்பாற்றுகிறதுபோலே தேவ நற்கருணை யாத்துமசீவியத்தைக் காப் பாற்றுகிற தென்றும் அவரோடொ ன்றானபின் பவருடைய தோத்திரத்துக் காகமாத்திரஞ் சீவிக்கக்கடவோமென்று

ம் வெளியரங்கமாய்க் காண்பித்ததுபோலாயிற்று.

ஆ! என்சேசுவே யுமதுஸ்நேகமாகிற பொக்கிஷத்தை யென்னிடத்தினின்று பறிக்கவு மென்னை நாசம்பண்ணவு மென்சத்துராதிக ளென்மனதாகிற வாசலைப்பிடித்து எத்தனைமுறை யுட்பிரவேசித்தார்களென்று தேவரீரறிந்திருக்கிறதினால் மிகவும் பலஈனப்பட்டு மெலிந்திருக்குமென்னாத்தும மினியொருபோது மும்மைவிட்டகன்றுபோகாமலும் உம்மையிழந்துபோகாமலு மிருக்கும்படி யுமது பிரகாசத்தையும் வல்லபத்தையுங்கொண்டென்னிருதயத்தைத்திடப்படுத்தியருளும். என்னிரக்ஷகரானகர்த்தாவேயினிநானெப்பொழுதாகிலு முமக் கேற்காத துரோகத்தைச்செய்து உம்மைவிட்டுப்பிரிவேனென்றால் உமதிஷ்டப்பிரசாதத்தினாலும் ஸ்நேகத்தினாலு மிப்பொழுதடியே னும்மோ டேகரித்திருக்கிறேனென்று நினைக்கவிடமிருக்கிறதினா லிப்பொழுதுதானே எனக்குமரணத்தைக் கட்ட

ளையிடும். என்னன்பரானசேசுவே யினியு ம்மைவிட் டொருபோது நான் பிரிந்தி ருக்கமாட்டேன் முன் பலமுறையும்மை விட்டு நான்பிரிந்ததுபோ லின்னமும்பி ரிந்துபோகலாமென்கிறதி லென்னை நானே நம்பவிடமில்லை. எக்காலத்திலும் வேறுபடாமலும் விகாரப்படாமலுமிரு க்கிறகர்த்தாவே! நானு முமதுஸ்நேகத் தில் வேறுபடாமலும் விகாரப்படாமலு மிருக்கச்செய்யும். மரணபரியந்தம் புண் ணியவழியிற் றிடனாகவிருக்கவுதவிசெய்த ருளும். அர்ச்.-மரியாயே! நான்மரணப ரியந்தம் புண்ணியவழியிற் றிடனாகவிருக் கவெனக்காக வும்முடையதிருக்குமாரனை மன்றாடும். இந்தமன்றாட்டைக்கேட்டரு ளுவீரென் றும்மை நம்பியிருக்கிறேன்.

சுல-வது.

என்னாத்துமமிச்சித்த வாண்டவரை நா ன்கண்டதனா லவரைவிட்டுவிடாமற் கட் டியரவணைத்துக்கொள்ளுவேன். சலொமோ ன் - உந்நதகவி - ரு - அதி- ச.

தேவநற்கருணை வழியாகச் சேசுநாத ரோ டொன்றித்திருக்கப் பேறுபெற்ற

ஆத்துமங்களெல்லாம் சேசுநாதனைப் பார்த் திப்படிச்சொல்லுகிறது மல்லாம ற்படைக்கப்பட்டவஸ்துக்களை நோக்கிச் சிஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களே யென்னி ருதயத்திலேநின்று புறப்பட் டென்னை விட்டுத் தூரவகன்றுபோங்கள் - நான்மதி யீனனாயிருந்ததினா லுங்களைநெடுநாள் ஸ் நேகித்திருந்தேன் - ஆனாலிப்பொழுதுங்க ளைவிடமிகவும்திசயமான ஸ்நேகத்துக்கு ப்பாத்திரமானகர்த்தரைக்கண்டதனாலும் என்னிடத்திலென்னன்புக்குரிய சேசுநா தர் குடிகொண்டிருக்கிறதினாலும் இனி நானுங்கள்மேற் பக்ஷம்வைக்கவு முங்க ளையற்பமும் ஸ்நேகிக்கவுங்கூடாது - சே சுநாதரென்னைக் கையேற்றுக்கொள்ளத் திருவுளமானதினா லின்றுமுத லினிநான் முழுதுஞ் சேசுவின்சொந்தப்பொருளா யிருப்பனே யொழிய அவரொன்றோ டு ஐக்கியமா யிருக்கிறதினால் நானுங்க ள்பொருளா யிருக்கவு முங்களைஸ்நேகி க்கவுங்கூடாதே - இதுவரைக்கு முங்களை ச் சிநேகித்துவழுவினதுபோதும் - இப்

பொழுது தேவநற்கருணைவழியா யென்னிருதயத்தோ டொன்றித்திருக்கும் சேசுநாதரொன்னைவிட் டொருநேரமு மகலப்போகவொட்டாமல் ஸ்நேகபாசத்தால்வளாயென்னோடுபந்தனமாகச் சேர்த்திறுகக்கட்டி மரணபரியந்த மவருக்குப் பிரமாணிக்கமாயிருப்பேனென்று கூறவேண்டியிருக்கின்றது.

என்மதுரசேசுவே! நானொருபோதுமும்மைவிட் டகன்றுபோகாதபடி யும்மோடே பந்தனமா யிருக்கச் செய்யும். என் பத்தியுள்ள வாசைப்பெருக்கத்தி லுமது பாதத்தைக் கட்டியரவணைத்துக் கொள்ளத் தடைசெய்யாதேயும். சேசுவேயும்மைஸ்நேகிக்கிறேன். உம்மையேஸ்நேகிக்கிறேன். உம்மை ஸ்நேகிக்கவேண்டியமட்டு மும்மை ஸ்நேகிக்கவிரும்புகிறேன். சேசுவே யும்மைஸ்நேகிக்கிறதும் உமக்குப்பிரியப்பட நடக்கிறதுமாத்திரமே என்பாக்கியமு மிளைப்பாற்றியுமாயிருக்கக்கடவது. உம்மி லிளைப்பாறுமென்னைப் படைக்கப்பட்டவஸ்துக்க ளிலேக்கழிக்காமல் என்னைவிட்டகன்றுபோ

கக்கற்பியும். என்மனஞ் சம்மதியாவிட்டால் உம்மைவிட் டென்னை யகலப்பண்ணவும் உம்மிலிளைப்பாறுமென்னை யலைக்கழிக்கவு மொருவராலுங் கூடாதென்கிறதினால் என்னிருதயம் வேறுபடாமல் ஸ்திரமாயிருக்கச்செய்யும். தேவரீர்வேணுமென்கிறதை நானும்வேணுமென்னும்படி நிர்ப்பாக்கியபாவியான வென்னிருதயத்தைத் தேவரீருடையதிருவிருதயத்தோடொன்றித்திருக்கச்செய்யும். என்னாண்டவரே யுமதுபேறுகளைப்பற்றி நம்பிக்கையோடு நானும்மைக் கேட்கிறமன்றாட்டுக்கனுக்கிரகம் பண்ணியருளும்.

ம-வது.

என்னாண்டவனென்னை நடத்துகிறார். மேய்ச்சலுள்ளவிடத்தி லவனென்னை திறுத்தியிருக்கிறதினால் எனக்கொன்றுங் குறைபடமாட்டாது. தாவீதன்-உஉ-ம். சங்கிதம்-க.

என்னுசைக்குரிய அன்பரானசேசுவே! உமதுதிருச்சரீரத்தை எனக்குப் போசனமாகக்கொடுக்க வுமது ஸ்நேகபந்திக்கென்னை யழைக்கிறதினா லெனக்கென்

னகுறைவரக்கூடும்? தாவீதனென்பவர்-உசாம். சங்கீதத்திற் சொல்லுமாப்போலே தேவரீ ரென்னிரக்ஷணியமும் பிரகாசமுமாயிருக்கிறதினால் நாரருக்குப்பயப்படப்போகிறேன்? நாளென்னைமுழுதுமுமதுகையளிக்கிறேன். என்னை நீர்கையேற்றுக்கொண் டுமக்குச் சித்தமானபடி நடத்தும். ஆண்டவ ரென்னைக் கொன்றாலு நானவர்மேல் நம்பிக்கைவைப்பே னென்று சோபென்பவர் சொன்னபடியே நானும்மைஸ்நேகித் துமது சொந்தப்பொருளாயிருக்கையில் நீ ரென்னையடித்தாலும் ஆக்கினைபண்ணினாலுங் கொன்றிவ்வுலகில் நாசமாக்கினாலு நானுமதுமேல்மாறாத நம்பிக்கையாயிருப்பேன். நான் இலயமாய் வெறுமையாய்ப்போகிறதினாலுமக் கதிகதோத்திரமுண்டாகுமென்று கண்டா லென்னை யிலயமாய் வெறுமையாய்ப்போகப்பண்ண வாசைப்படுகிறேன்.

டுக-வது.

உன்னை யென்கைகளி லெழுதிக்கொண்டேன். உன் மதில்க ளெந்நேரமும்

என்கண்முன்பாக நிற்கின்றது. இசையாகி யார்-௬யகூ-அதி-யகூ.

தன்னைமுழுதுஞ் சர்வேசுரனுக்குக்கை யளித்திருக்கு மாத்துமத்தை யொரு பொழுது மறந்துபோகாதபடி யவர்த மது திருக்கரத்திலெழுதிவைத்தாற்போ லாயிற்று. பெற்றதாய் பிள்ளையைமறந் தாலு நா னுன்னை மறக்கிறதில்லையென் று தீர்க்கதரிசியான இசையாகியாரைக் கொண்டு தாமேசொல்லுவிக்கிறார். அப் படிப்பட்ட ஆத்துமத்திற் சத்துராதிநு ழைந்து சேதப்படுத்தாதபடி யவர்தா மே யெந்நேரமும் அதன்மேற்கண்ணு யிருக்கிறார். தாவீதன் - ரும். சங்கீதத்திற் சொல்லுமாப்போலே யப்படிப்பட்ட ஆத்துமத்துக்குப் பொல்லாப்புவாராதப டிச் சர்வேசுரனுடைய திருவுளமானது அதற்குக் கேடகம்போ லிருக்கிறது. என்னை ஸ்நேகிக்கிறவர்களெல்லாரையும் பார்க்க வதிகமாய் ஸ்நேகிக்கிறவருமா யெல்லாரையும்விட வதிகமா யெனது ந ன்மையைத்தேடுகிறவருமாயிருக்கிறமட்

டற்ற தயைசுரூபியான கர்த்தாவே! என்னை முழுதுமுமது கையளிக்கிறேன். எனக்கென்ன துன்பதுரிதக்குறைவந்தாலும்வரட்டும். நீர்மாத்திரமென்னைக்கை விடாதிருந்தாற் போதும்.

ஆண்டவரே யுமது திருச்சித்தத்துக் கொத்தவண்ண நடக்கவென்றாலான பிரயாசமெல்லாம் படவேண்டியிருக்கிறதினால் நான்செய்யவேண்டிய தேதென் றெனக்குப்படிப்பியும். உமதுசித்தத்தின்படி நடக்க வாயத்தமாயிருக்கிறேன். ஆண்டவரே யுமதுசித்தநிறைவேறக்கடவது. என்சுபாவத்தினாலேதானே நானொரு தர்மபுண்ணியத்தையுஞ்செய்ய வகையறியாததினால் நானுமதுதிருச்சித்தத்தையறியவு முமக்கொத்தவண்ணநடக்கவுமெனக்குதவிசகாயமாயிரும். அநாதிபிதாவேயும்முடையநேசமுள்ள திருக்குமாரனுலகத்திற்சஞ்சரித்தகாலத்தில் என் பிதாவுக்குப்பிரியமானதெல்லா நான்செய்துகொண்டு வருகிறேனென்று சொல்லிக்கொண்டுவந்ததுபோல நானுஞ்சொ

ல்லிக்கொண்டுவர வநுக்கிரகம்பண்ணிய ருளும். என் கர்த்தரே யும்முடைய திருக்கு மாரனுடைய பேறுகளையு மவர் திருத்தா யாருடைய பேறுகளையும்பார்த் தெனக்கி ந்த மன்றாட்டுத்தந்தருளுவீரென்று நம் பியிருக்கிறேன்.

௰உ-வது.

என்மகனே யுன்னிருதயத்தை என்க் குத்தாராய். சலொமோன்-சாதுரியாகமம்-உ௩-அதி-உ௬.

என்னுத்துமமே யுன்னுண்டவருன்னி டத்திலெழுந்தருளி வரும்பொழுது உன் னைவேறென்றுங்கேளாம லுன்னிருதய த்தையு மனதையுமாத்திரங் கேட்கிறார். அவர் தம்மைமுழுதுமுனக்குக்கொடுத்த தினாலே நீயு முன்னைமுழுது மவருக்குக் கொடுக்கவு மெல்லாத்திலு மவர் திருச்சித் தநிறைவேற வாசைப்படவும் நியாயமா யிருக்கிறதல்லோ. ஆண்டவரப்படியநந்த கிருபையோ டுன்னிடத்திற் றிரும்பவரு ம்பொழுது அவர்சித்தத்துக்கு முழுது மொத்துநடக்கப் பிரமாணிக்கமாயிருக்

திருயென்றுகண்டு அவருன்மேற் சந்தோஷிப்படும்படி நடந்துகொள். ஏனெனில் மோயீசன் ஐந்தாமாகமம். முப்பதாம் அதிகாரத்திற் சொல்லுமாப்போல் ஆண்டவருன்னுடைய நன்மைகளைக்கண்டு சந்தோஷிப்படும்படி திரும்பவருவார். ஆகையாலவருக்குப் பிரியப்படுவதற்குச் செய்யவேண்டியதைச்செய்.

சேசுவே! நானுமக்குமாத்திரமே பிரியப்பட வாசைப்படுகிறேன். என்னுசை கெட்டுப்போகாமலிருக்கவும் எனக்குவேண்டிய சத்துவமுண்டாகவும் எனக்கு உமதிஷடப்பிரசாத வுதவியைத்தந்து என்னை யுமது திருச்சித்தத்துக்கொத்தவண்ண நடப்பித்தருளும்.

௰௯-வது.

நம்முடைய தேவதாழ்ச்சித் தோட்டத்துக்கு நாஞ்செய்யவேண்டிய தென்ன செய்யாமற்போனோம். இசையாசியார்- ௫- அதி-௪.

என்னன்புக்குரிய கர்த்தாவே! தேவரீரென்னைநோக்கி உனக்காகநாமின்னுஞ்

செய்யவேண்டிய தென்னசெய்யாமற்
போனோம் நித்தியராயிருக்கிற நாமுன
க்காக மனுஷனானோம். ஆண்டவராயிருந்
து மடிமையானோம். உனக்காகநிலத்தி
னூற்றையிலுதிக்கும் புழுப்போல நிசித
மாட்டுக்கொட்டிலிற் பிறந்தோம். உனக்
காகநிந்தையவமானத்தோடு கழுமரத்தி
ற்றொங்கினோம். உனக்காக வுயிர்விடுகிற
தைவிட வதிகமொன்றுஞ் செய்யக்கூடா
தென்றிருந்தாலுமுன்மேல்வைத்த அணை
கடந்த அன்பினாலேநம்மைமுழுது மு
னக்குப்போசனமாகக் கொடுக்கத் தேவ
நற்கருணையுண்டாக்கினோம். நீ நமதுபே
ரிலே அன்புவைக்க நாமின்னஞ் செய்யத்
தக்கதேதென்றுகேட்கிறீர். என்னுத்தும
மே யநந்தகிருபையா லுன்னுண்டவரா
கியசர்வேசுரன் சொல்லுகிறசத்தமுன்கா
தில்விழவில்லையோ? ஆ! என்னுண்டவரா
கியசர்வேசுரா வுமக்கு நானென்னமறு
மொழிசொல்வேன். உம்முடையமட்டற்
றநன்மைத்தன்மையையு மென்னுடைய
அளவிறந்த நன்றிகெட்டதனத்தையுங்
கண்டு உமக்குமறுமொழிசொல்லவழிகா

ஞமல்வாய்படைத்து நிற்கிறேன். ஆண்டவ
ரேயுமது நன்மைத்தன்மையையுமென்ன
க்கிரமத்தையும் நினைக்கும்பொழுது பிர
மித்து உமதுபாதத்தில் தீர்க்கதண்டமா
கவிழுந்து, சேசுவே! நீரொன்மேல் வைத்த
ருளின அன்பையெண்ணாம லுமக்குத்து
ரோகம்பண்ணின என்மேற் கிருபையா
யிருமென்று மன்றாடுகிறேன். உமக்குத்
துரோகம்பண்ணினவென்னைத் தேவரீர்
தண்டிக்கிறது நியாயமென்றால் என்னை
க்கைவிடாம லுமக்குச் சித்தமானபடி
தண்டித்துப் பழிவாங்கும். இனிநானும
து நன்றிமறந்திருக்க வொட்டாதேயும்.
நீரொன்மேல்வைத்த ஸ்நேகத்தைக்கண்டு
நன்றிபாராட்டி நானுயிராயிருக்குமளவு
முமமை ஸ்நேகிக்க அநுக்கிரகித் தரு
ளுஞ்சுவாமீ. ஆமென்சேசு.

௰சு-வது.

நம்மை யுன்னிருதயத்தின் முத்திரை
யாகப் பதித்துவைத்துக்கொள். சலொமோ
ன் உந்நதகவி-அ-அதி-சு.

என்னுசைக்கினிய அன்பானசேசுவே

யென்னிருதயத்தை நானுமக்கொப்புக் கொடுத்தநிறல் வேறொருவருக்கும் அந் த இருதயத்திலிடங்கொடாமல் அதுஉமக் குமாத்திரமே சொந்தப்பொருளாயிருக் கிறதென்றும் நீர்மாத்திரமே யதிலிராச் சியபாரம் பண்ணுகிறதென்றுஞ் சகலரு ம்பிரசித்தமா யறியும்படிக்கு உம்மை யென்னிருதயத்தின் முத்திரையாகவைக் கவேண்டியிருக்கிறது.

என்னாண்டவரே யென்னிடத்திலெல் லாத்தையுந் தேவரீர்தாமே நடப்பியாவி ட்டா லென்னை நம்பவிடமில்லையே. உம் முடையசித்தத்தின்படியே நடத்தவென் னிருதயத்தை யுமக் கொப்புக்கொடுக்க மாத்திரமே யென்னலாகுமென்கிறதினு லென்னிருதயத்தை யுமக்குப்பாதகாணி க்கையாகவும் பலியாகவும் ஒப்புக்கொடு க்கிறேன். நீரதைக்கையேற்றுக்கொண்டு உமதுசித்தத்தின்படி நடப்பித்துக்கொ ள்ளும். நீரென்னை ஸ்நேகிக்கிறவன்பைப் பற்றி யென்னிருதயத்தை யென்வசத்தி ல் ஒப்பித்துவிடாமல் உமதுவசம்பண்ணி

யருளும். என்னிருதயத்தை என்வசமாய் வைத்திராளுல் நானதைத் திரும்ப வும்மி டத்தினின்று பறித்துக்கொண்டு சிதறிப் போவேனென்கிறதற்குச்சந்தேகமில்லை. நானும்மைம் ஸ்நேகிக்கும்படி யென்னென் ன்னகாரியங்களைச் செய்யக்கூடுமோ அ துகளையெல்லா முமதளவில்லாத தயை யினாற்செய்துகொண்டுவாரும். மட்டற்ற ஸ்நேகத்துக்குப் பாத்திரமான கர்த்தா வே! எப்படியாகிலு நானுமமை ஸ்நேகி க்கப்பண்ணும். நானும்மை ஸ்நேகிக்க மாத்திரமே சீவித்திருக்கவும் உம்மைப்ப ற்றிமாத்திரமே யும்மை ஸ்நேகிக்கவுமா சைப்படுகிறேன். உமது ஸ்நேகதேவத் திரவிய-அநுமானத்தைக்கொண் டென் னிருதயத்திலே பிரவேசிக்க வித்தனைய ற்புதங்களைச் செய்யத்திருவுளமான சர் வேசுரா! இகத்திலும்பரத்திலு மென்னு ண்டவர்மாத்திரமே யென்னிருதயத்துக் குக் கர்த்தாவாயிருக்கிறாரென்றும் அவர் மாத்திரமே யென்பாக்கியமுந் திரவிய சம்பத்துமா யிருக்கிறாரென்றுந் தாவீது

னென்பவரோடுகூட நானுந்தேவரீர்மே லிருந்தபக்ஷத்தோடு சொல்லும்படி என்னிருதயமுழுது மும்மைக்குச் சொந்தமாயிருக்கவும் அது நிரந்தரம் வேறுபடாமலும் விகாரப்படாமலு மும்மோடு ஐக்கியமாயிருக்கவும் புதுமைசெய்தருளும்.

நிர்மலபரிசுத்த மரியாயே ! என்சர்வேசுரனுடையமாதாவே! என்தாயே, நீ ரெனக்காகச் சர்வேசுரனை மன்றாடினால் அவருமது மன்றாட்டுக்குக் காதுகொடுத்து நான்கேட்கும்வரங் கட்டளையிடுவாரென்கிறதினாலே நீரு மெனக்காக மன்றாடிக்கேட்டருளும்.

ம௫-வது.

## தேவஸ்நேகக்காதல்.

ஆண்டவரே ! நீரென்னையிம்மாத்திரம் ஸ்நேகிக்கவும் எனது அன்பை யித்தனையாவலாய்த்தேடவு நானார்.

மட்டில்லாத அன்பே! உம்மை ஸ்நேகிக்கிறேன். என்சர்வேசுரா! நானும்மை ஸ்நேகிக்கின்ற அன்பு அற்பமாயிருக்கிறதினாலும் நானும்மை ஸ்நேகிக்குமிலேசா

ன ஸ்நேகத்துக்கு அன்பென்கிறபெயர் செல்லாதென்கிறதினலும் நானும்மை யின்னம் ஸ்நேகிக்கவில்லையென்று துக்க ப்படுகிறேன்.

பரலோக விராசாவே! என்னிருதயத் துக்குஞ் சுயம்பரகர்த்தரான விராசாவா யிரும்.

ஆண்டவரோ யென்பாவ அவலக்ஷணத் தைக்கண் டென்னைவிட் டகலப்போகாம லென்னைச்சுத்தனுக்கி என்னோடுபந்தன மாகச் சேர்ந்திரும்.

என் சர்வேசுரா! என்னுருயிரோ, என்னன் பே, என்பாக்கியமே, நானும்மை ஸ்நே கியாம லாரைஸ்நேகிப்பேன்.

என்னிரக்ஷகரோ! நானும்மையும் உம் து அன்பையுமாத்திரமே தந்தருளமன் றுடுகிறேன.

எனக்காகநீர் செய்யத்தக்கதெல்லாங் குறையில்லாமற் செய்ததுபோல் நானு மக்காகச் செய்யத்தக்கதெல்லாங் குறை படாமற் செய்தாலல்லோதாவிளை. மட் டற்றநன்மையினாற்றான வும்மைஸ்நேகி

யாதவன் மதியீனரிலு ம்மதியீனனல்லோ.

உம்மிடத்தி லித்தனையாயிர நன்மைகளைப்பெற்றநானோரற்பநேரமுமும்மை விட்டுப்பிரியவொட்டாதேயும்.

இத்தனைகாலநானும்மை ஸ்நேகியாமற்போனேனென்கிறதினால் விதனப்படுகிறேன்.

இன்னமெனக்குள்ள வற்பகாலத்தை யாவது உமக்குமுழுது மொப்புக்கொடுக்கிறேன்.

நானுலகத்தைவிட்டுப் பிரியுமுன்னவது முழுதும் உமக்குச்சொந்தமாயிருக்கச்செய்தருளும்.

நானும்மைவிட்டு அகல வேடும்பொழுது என்னைத்தேடித்திரிந்த நீர் உம்மை நான் தேடித்திரிகிறவித்தருணத்தில் என்னைவிட்டகலப்போவீரோ?

நானும்மையினி யிழக்கக் கூடாதென்றுசொல்லக்கூடுமாவதெப்போது?

என்சத்துவமெல்லாங்கொண்டு மாறுமலெப்போதும்மை ஸ்நேகிப்பேன்? எப்போதும்மை முகமுகமாய்க்கண்டு தரிசிப்பேன்?

மட்டற்றநன்மையே! நானுலகத்திலிரு க்கும்ளவு மும்மையிழந்துபோகத் திரியு மாபத்தி லிருக்கவேண்டிய தென்ன? இனிநானும்மைவிட் டொருபோதும் பிரிந்துபோகாதபடி யும்மோடென்னை ச் சேர்த்திறுகக்கட்டியருளும்.

---

சற்பிரசாத மகிமை

வருணிப்பு

* அதியகோசரதேவபாரமரகசியமாகி ய சற்பிரசாதமே! ஆண்டவர்செய்தசகல அற்புதங்களின்முடியும் தயாபரகாரணக் குறிப்புக்களின்விருதுந்திலதமுமாய்ச் சு கல திவ்வியநன்மைப் பிரசாதநிறைந்த † சஞ்சிதகடாரமுமாயிருக்கிற உமதுமகி மை எந்தவகையாய்வருணிப்பேன்?

முற்காலமன்னவென்கிற ‡ ஓயிவனம் ஆ காசத்திலிருந்து வருஷித்ததினால் மகா ஆச்சரியமாய்க் கொண்டாடப்பட்டதெ ன்றால் இக்காலத்தில் ஆகாசநாதரான நீர்

* மிகவு மனோவாக்குக்கெட்டாத.

† பொக்கிஷம். ‡ போசனம்.

தாமே ஒய்வனமாய்ப்பூலோகத்திலேயிற ங்கினபோதே எத்தனைபெரிய ஆச்சரியம்? இதையெப்படி வருணிப்பேன்?

பரலோகவாசிகள் வேறொய்வனங்கொ ள்ளாமலிருக்க அந்தமனோரூபிகளுடைய நித்திய ஒய்வனம் நீரே. பூலோகத்தைவிட் டுப் போகிற ஆத்துமங்களுக்குவழி உபகர ணம்வேண்டி யிருக்கச்செய்தே சாகிறவர் களுக்குரியவழி* உபகரணமாயிருக்கிறது நீரே. இவ்விதகிருபையை எவ்விதமாய்வா ழ்த்துவேன்?

அதியகோசரதேவ அபிரகசியப்பிரசா நமே! மறைந்ததெய்வீகமு மறைந்தமா னுஷியமு நீர்தாமே. அர்ச்சகரும் அர்ச்சிக்க ப்பட்டபொருளும் நீர்தாமே. பரலோகத் திற் சுகிர்தவாளரோடே வசித்துப் பூலோ கத்திலே அகிருத்தியர்கள் நடுவிலே யிரு க்கிறது நீர்தாமே. இந்தத்தயைமகிமைஎந் தவிதமாய்த் துதிப்பேன்?

அதியகோசரதேவஅபிரகசியமே! கண் ணுக்குஅப்பத்தின்ரூபந்தோற்றநாவுக்கு

* உதவி.

அப்பத்தி னிரசந்தோற்றக்கைக்கு அப்ப த்தின்கனந்தோற்ற அப்பமாகாமல் மா ம்ஸமாயிருக்கிறது எத்தனையோ பெரிதா னவாச்சரியம்!

அதியகோசர தேவ அபிரகசியமே! உ யிரற்றகுணங்களி லுயிருமாய் மாம்ஸமற் றகுணங்களில் மனு அங்கமுமாயிருக்கிறத ன்றியே ஒய்வனமாகக்கொள்ளப்படுகை யில் கடிபட அழியடமாட்டாமற் பழுதி ன்றியிருக்கிறதென்ன அதிசயம்!

அதியகோசர தேவ அபிரகசியமே! எ க்கணக்குப்பேர்களுக்குப்பிய்த்துப்பிரித் துப் பங்கிட்டுக்கொடுக்கிலும் பங்குபிரி வாகாமல்முழுதாகக்கொடுக்கப்படுகிறது என்ன அற்புதம்!

அதியகோசர தேவ அபிரகசியமே! ச ரீரம் நுபவித்து ஆத்துமம் பிழைக்கிறது ம் நல்லோருக்குச்சீவனுந் தீயோர்க்கும ரணமும் பத்திக்குத்தக்கது சீவியமும் அசீவியமும் பலனும் அபலனுமா யிருக் கிறதும் என்ன அற்புதம் !

அதியகோசரதேவஅபிரகசியமே! வா

ணவாசிகளுக்குப் பிரத்தியக்ஷமுகதரிசனை யாய் ஆநந்தம்பூரிப்பித்துப்பூவாசிகளுக் குமறைந்த மேனியாய்த் திருத்தியுண்டா க்கிறது என்ன அதிசயம்!

அதியகோசர தேவ அபிரகசியமே! இ ப்பிரகார ஆச்சரியமகிமைகளுண்டாயிரு க்கிற மனோவாக்குக்கெட்டாத இந்தவிஷ யம் எப்படிஸ்துதித்து வருணிப்பேன்?

ஆனாலிவ்வளவு மகிமையுள்ளசற்பிரசா தம் அடியோர்கள்பெறுகிறபோது அத னாலடைகிறபலன் மகிமை யெவ்வளவோ! நேசவக்கினியானதனாற் சகலபாவதோஷ ங்களெரிந்துபோம். திவ்வியப் பிரகாச மானதனாற் சகலதுர்விசார வந்தகாரந் தெளிந்துபோம், சுகிர்தவலங்காரமானத னாற் சகலதுர்க்குண அவலக்ஷணமறைந்து போம், பிரசாத ஊற்றானதனாற் சகலதர் மகுணம் விளையலாகும், தேவமுயற்சியா னதனாற் பேய்ச்சோதனையில் † ஆரக்ஷை யாம, வினையமாயங்களுக்குப்பரமஅவுஷ தமாம், சோம்பலுக்குச்சுறுசுறுப்பாம், து

† பாதுகாவல்.

ர்ப்பலத்துக்குறுதியாம், பத்திக்குச்சுடராம், நரகத்துக்குப்பூட்டும்பரகதிக்கு ஏணியுமாம். இப்படிச்சர்வபிரகாரமாகத் தேவநற்கருணையாய்கிற ஆருய் மனுஷனுக்குச் சர்வேசுரனுடைய திவ்விய பிரசந்நங்கிடைக்கப்பண்ணு மென்ருண்டவரோ இந்தநன்மையெல்லா மெனக்கூத்தந்து என்ருத்துமஞ்சந்ததம் * ஆட்சிக்கும்படியும்மையே மன்ருடுகிறேன்.

---

## சற்பிரசாதத்துக்கு ஸ்தோத்திரம்.

சகலநன்மைமகிமையுள்ளவுத்தமபரமவிரகசியமான சற்பிரசாதம் சர்வ ஸ்துத்தியங்களால் ஸ்தோத்தரித்து ஸ்துதிக்கப்படக்கடவது. வானத்திலெத்தனைதாரகைக்கணங்களுண்டோ ஆகாசத்திலெத்தனை மேகங்களுண்டோ அந்தரத்திலெத்தனையணுக்களுண்டோ நெருப்பி லெத்தனை பொறிகளுண்டோ கடலிலெத்தனை தண்

* நிலைப்படும்.

ணீர்த் துளிகளுண்டோ கரையிலெத்தனை மணல்மணிகளுண்டோ மரங்களிலெத்தனை இலை பூக் கனிகளுண்டோ சகலலோகவிஸ்தாரத்தி லெத்தனை படைப்புப் பொருட்களுண்டோ அத்தனைஸ்துத்திய வசனங்களாற் சற்பிரசாதத் துக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக. அதேதெனில்அப்பத்திலுந் தேவதாழ்ச்சியிரசத்திலு மறைந்திருக்கிற ஆண்டவர்சகலபொருட்களுக்கு நாயகரானதினாற் சகலபொருட்களின் கணக்கா யிவருக்குப்புகழ்ச்சியுண்டாக நியம்மாமே.

இன்ன மிவருடைய மகிமைவருணிக்கச் சகலமனுஷிருடைய நற்கிரியைகளாலெத்தனைபூசை நமஸ்காரம் பண்ணலாகுமோ சமஸ்தருடைய நாவி லெத்தனை ஸ்தோத்திரஞ்சொல்லலாகுமோ அனைவருடையமனதிலெத்தனை புகழ்ச்சி விபரிக்கலாகுமோ அத்தனைக்கு அப்பிரகாரஸ்துத்தியஞ்சொல்லப்படக்கடவது.

அதேதெனி லிவர் தம்முடையவிலைமதியாதவிரத்தத்தின் விலையா லெங்களை மீட்

டெடுத்து அதனால் நிதமுமெங்களாத்து மங்களை யிரட்சிக்கிறபடியாலே எங்களுடைய மனோவாக்குக்காயங்கள் எந்நேரமு மவரை வாழ்த்தி ஸதுதித்துவணங்கக் கடவது.

ஆறு விம்மாத்திரத்திற் சற்பிரசாதத்தின் புகழ்ச்சிபோதாத்தினாற் பூலோகத்தில் வாசம்பண்ணுகிறசகலமனுஷாத்துமாக்களும்பரலோகத்தில்வசிக்கிறசகலமோக்ஷவாசிகளும் ஆராதிக்ஷ்ட கன்னியரியாயியும் அர்ச். - தமதிறித்துவமுந்தானே சொல்லலான நினைக்கலான சகலஸதுத்திய ஸதோத்திரஞ்சற்பிரசாதத்துக்குமேன்மேலுமுண்டாவதாக. அதேதெனனில் திவ்வியகர்த்தருடைய சரீரமாத்திரமல்ல திருஆத்துமமுந்தெய்வீகமுங்கூட மனிதர்களுக்குக்கொடுக்கப்படுகிறதினாற் சொல்லப்பட்ட ஸதுத்தியவாக்கியங்களினாலே அவருக்கு ஸதோத்திரம்பண்ணி அனவரதகாலமும் புகழ்ந்து பூசித்துத்தொழுது அர்ச்சனைசெய்து ஆராதித்து நமஸகரித்து நேசித்திருக்க மனுமக்களின்மேல்ளவற்றகடனுண்டே.

## சற்பிரசாதத்தின்பலன்டைய ஆராதனை.

மிகவுந்தயாபப் பிரசந்ந சித்தமுள்ள சேசுநாதரே! உம்மாற் சகல தீவினைவிலகி நல்வினை கையேற்கப்படுகிறதினால் என்மனதையாண்டிருக்கிற ஆங்காரங் காமங் குரோதமுதலான துர்க்குணங்களெல்லா நிவாரணம்பண்ணிச் சுத்தமனதோடேயும்மை வந்தித்துவணங்கி உமக்கு எக்காலமும்பணிசெய்து சற்பிரசாதப் பேறுபெற்றுய்யும்படிக்கிருபைபண்ணியருளும்.

ஆமென்சேசு.

---

## தன்னைத்தாறைப்புக்கொடுக்கிற ஆராதனை.

சகல நன்மைச்சுரூபியான சேசுநாதரே! உம்முடைய திருக்கரங்களி லென்னையொப்புக்கொடுக்கிறேன். உமது கிருபைநிறைந்த இருதயத்துக்குள்ளே என்னைமறைத்துவைத்து ஒருபோதும் பிரிந்துபோக

வொட்டாமல் என்சீவியத்துக்கு ஆறுதலுமாய் மரணத்துக்கு வழியுபகரணமுமாய் அவ்வுலோகவாசத்துக்கு மோக்ஷத்தியாகமுமா யிருக்கிறதேவரீர் எப்போதுமென்னை யிரட்சிக்கும்படிக்கு என்னைமுழுது முமக்கொப்புக்கொடுக்கிறேன்.

ஆமென்சேசு.



அர்ச். - சிலுவையைக்கொண் டுலகத்தையிரட்சித்த என்னன்புகுரியசேசுவே யும்மை யாராதித்துத் தோத்திரஞ்செய்கிறேன. தேவரீா நமபிச்சினேகிகிற வடியேனையீடேற்றி யருளுஞ்சுவாமீ.





## வணக்கவிளக்கம்.



மோயீசன்-உ-ம். ஆகமம்-உய-ம். அதிகாரம்-ரு-ம். வசனத்தில் ஆண்டவர் திருவுளம்பற்றினதாவது : நம்மையல்லாதே புறத்தேவர்களுனக்கில்லாதே போவதாக, விக்கிரகங்களையு முருவங்களையு முனக்குச்செய்யாதிருப்பாயாகவென்றார்.

ஆகையாற் சுரூபங்களையு முருவங்களையு முண்டாக்கியதுகளைவணங்குவது வேதத்திலாண்டவரால் விலக்கப்பட்டதென்று பதிதர்சொல்வார்கள். ஆயினும்ப் படியே ஆண்டவர் முழுதுஞ் சுரூபங்களை விலக்கினரென்று நாமுமொத்துக்கொண்டாலும் பழையவேதத்தி லிதுவிலக்கினதொழியச் சேசுநாதர்ஸ்தாபித்த திருச்சபையிலும் விலக்கினதோ? இல்லையே. பழையவேதத்தின்மூன்றுங்கற்பனையாகச் சனிக்கிழமைத்திருநாளென்றும்வேலைசெய்ய ஆண்டவர்விலக்கியிருக்கச்சேசுநாதருடைய திருச்சபையிலிதுவிலக்கினதில்லையென்று நம்மோடுகூடப் புறச்சமயத்தாரும்சனிக்கிழமைத் திருநாளாசரியாமல் ஆதிவாரங்கொண்டாடுவார்கள். இதுவுமன்றி மோயீசனுக்குச் சர்வேசுரன்றுமே தமது

சமூகத்திற் பாதரட்சைகளைக் கழட்டிப்போட்டுவர
த்திருவுளம்பற்றியிருக்க விப்பொழுது சிலர் தங்களுட்
டுவழக்கம்பற்றிப் பாதரட்சைகளோடு தேவாலயத்
திற் செல்லவில்லையோ? இப்படியநந்தமுண்டாம. ப
ழையவேதத்திற் சனிக்கிழமைவேலைசெய்வது பாவ
மாகி, இப்பொழுதுபாவமல்ல. அப்படியே பழையவே
தத்திற் சுரூபவணக்கமபாவமாயிருந்தபோதிலும இப்
பொழுத்துவும பாவமல்ல. வேதத்திலே முன்விலக்கி
ன இவ்விரண்டும்-மாறுபாடாகமறுபடியுமிப்பொழுது
வேறுதேவகட்டளை எங்கு மெழுதியிராமலிருக்கச் ச
னிநாள்விட்டு ஞாயிறுவாரங்கொண்டாடுகிறவர்கள் தி
ருச்சபையோடு சுரூபங்களையும் வணங்காததென்ன?
இதற்கவர்கள் பழையவேதத்தி லாண்டவருலகமுண்
டாக்கின சகாயத்தைநினைக்கும்படி ஞாயிறுதுவக்கி
யாறுநாளாய்வெள்ளிமட்டும வானமுத லெல்லாவற்
றையு முண்டாக்கினபின்பு சனிக்கிழமையவரிளைப்பா
றினதுபோல மனிதருமிளைப்பாறி அன்றுதிருநாளாக
க்கொண்டாட நியாயமென்று பழையவேதத்திற் கற்பி
த்திருந்ததாம் - இப்பொழுது சேசுநாதர் நமமையி
ரட்சித்தசகாயத்தை நினைக்குமபடி அவர் தயையினு
ற் றமதுமகிமையொளிக் கதிர்களைமறைத்துத் திரு அ
வதாரமபண்ணி நமக்காகப்பாடுபட்டுச் சிலுவையில்
றையுண்டு அடக்கப்பட்டமூன்றுநாள் ஞாயிற்றுக்கிழ
மையிற் கல்லறைவிட்டெழுந்தருளினொன்றும இஸ
பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் ஞாயிற்றுக்கிழ
மை திருச்சபையிலெழுந்தருளினொன்றும முன்கற்
பித்திருந்த சனிநாள்விட்டு ஞாயிறுதிருநாளாகக்கொ
ண்டாட நியாயத்தின்படியே திருச்சபை கட்டளையி
ட்டமுறைமையென்பார்கள். இதவர்கள் நமமுடைய
திருச்சபையிற்கற்றுக்கொண்ட நியாயந்தானே. ஆகி
லும-அப்படியேபழையவேதநாளிலே அரூபியாய்நின்
றசர்வேசுரனுஞ் சம்மனசுகளுமல்லாதே உருவமு

ள்ளவரொருவராயினு மப்பொழுது மோக்ஷத்திலில்லாமையால் அந்நாளிற்சுரூபவணக்கம வேதத்தில்விலக்கப்பட்டதாமே. சேசுநாதர் திரு அவதாரஞ்செய்து நம்மையிரட்சித்தபின்பு அரூபியாய்நின்ற சர்வேசுரனுருவமாகிச் சர்வேசுரனுமனுஷனு மொன்றாகிய சேசுநாதரும்வரையீன்ற தேவமாதாவுமெண்ணில்லாதவர்ச்சியசிஷ்டர்களுங் கண்டிப்புள்ளவராகி மோக்ஷத்திலேவாழ்ந்திருக்க அவர்களை நாம நினைக்கவும வேண்டிகொள்ளவும அவர்களைககாட்டின வுருவங்களைச்செய்து முறையோடேவணங்க நியாயத்தின்படித்திருச்சபைகட்டளையிட்டதென்றுசொல்லத்தகுமே. இந்நாளிலே ஞாயிறு திருநாளாகவும உருவங்களைவணங்கவும வேதத்திலெழுதியிராமலுஞ் சேசுநாதரால் ஸதாபிக்கப்பட்ட திருச்சபை கட்டளையிட்டதனாற் சேசுநாதரோதிருச்சபைக்குப் படிப்பித்தமுறையென் றெல்லாரும விசுவசித்தநுசரிக்கக்கடவோம.

ஆண்டவர் திருவுருவெடுத்துப்பிறந்த நாள் அந்தனையுசிதமாக வேதத்தில் எழுதியிராதாயினுமபூர்வந்துவக்கிச், சகல கிறீஸதுவர்களாலு மிந்நாட்பதிதர்களாலுமுதலாய்க் கொண்டாடப்படுகையில் அவமொடுத்ததிருவுருவைத்தானேகாட்டுஞ் சுரூபங்களை அதினும அதிகவுசிதமென்று சுபாவப்படியே ஞானத்தோடு வணங்காமல் வீணிலே யிகழ்வது நியாயவிரோதமென்றவர்களுககுத் தோன்றாதென்ன ! புத்தியுள்ளவர்களிதையுச்சிப்பகலினும விளககமாய்கககண்டுணரார்களோ ?

தேவனல்லாதவனைத் தேவனாகவெண்ணி யவனுருவத்தை வணங்கிறதும உருவங்களுககுச்செய்யும் வணககம்துகளைவிட்டப்பாலே நிற்குமபொருளைச்சேராமல் அவ்வுருவங்களைச்சேருகிறதும இவ்விரண்டும அககியானமொழியச் சேசுநாதர் மெய்யானதேவனானை

யால் அவருருவங்களுக்கு வணக்கம்புரிகிறதும் அவ ருருவங்களைநோக்கிச்செய்தவணக்கம் அவ்வுருவங்க ளிலேநில்லாமல் அவ்வுருவங்க ளுடையாளமாகக்காட் டினநாதனைச்சேருதலினால் ந்தத்திருச்சுரூபங்களுக்கு ப்புரிந்தவணக்கமும் அக்கியானமென்றுசொல்லக்கூ டாது. அப்படியே தேவமாதாவையு மற்றமோக்ஷ வாசிகளையுங் குறித்துவைத்த வுருவங்களை வணங்கிற போதும் அதுகளை யடையாளமாகமாத்திரமே யெண் ணித் தேவாராதனைசெய்யாமல் தேவமாதாவுக்குரிய உத்தமாராதனையும் மற்ற மோக்ஷவாசிகளுக் குரிய வணக்கமுமாத்திரஞ் செய்கின்றமையால் அதிலேமே ற்சொன்ன விருவகையக்கியானமுமில்லை.

ஆயினு முன்சொன்னவேதகற்பனையிலே ஆண்டவ ர் முழுதுஞ் சுரூபங்களை விலக்கினவருமல்லவென் றி ங்கே யொப்பிப்போம். அதெப்படியென்றால் இந் நாட்டி லென்னையலலாமல் மற்ற அரசனைவணங்க வேண்டாமென் றிராசாகற்பித்தமையால தனனையீ ன்றமாதாவையும் படிப்பித்த உபாத்தியையும அற நெறிநிறுத்தினகுருவையு மற்றப்பெரியோரையும வ ணங்கவிலக்கினானென்றால மதிகெட் டொருவன்சொல லுந் தன்மையாகுமல்லவோ. ஆகையாற்சொன்னவே தவுதாரணத்தாற் சர்வேசுரன விலக்கினதாவது: நம மையொழியப்பலதேவரைவணங்கவுமவேண்டாம, பல விக்கிரகங்களையு முருவங்களையுந் தேவர்களாகவைத் துவணங்கவுமவேண்டாமெனறு விலக்கினாரேயலலாம ல முழுது முருவங்களை விலக்கினவரலல, இலலாவிட் டால் ந்தப் புஸ்தகத்திலேதானே - உ௫-ம். - அதிகா ரத்தெழுதப்பட்டபடி ஆண்டவர்தாமே யுருவிலலா தசமமனசுகளைககாட்டின இருவுருவங்களைத் தூயத ங்கத்தாலுண்டாக்கச்சொலலிக கோயிலிலே பூசைப ண்ணுமிடத்திலே வேதமெழுதின இருகலலைவைத்த

பேழையினமேலே வைககச்சொலவிக கட்டளையிடு வானேன? உருவமெலலாம அககியானமாகில்ந்தவ க்கியானத்தைத் தாமே தமககுப் பூசைவணககமபுரி ந்தவிடத்தில வைககச்சொலலுவாரோ? இலலையே. ஆகையால தமமையலலாதே தேவராகவணங்கு முரு வங்களை விலககினதொழியக் கோயிலிலேமுதலாய்ப் பு றத்தேவராகவணங்காமல வைத்த உருவங்களை விலக கினவரலல.

புறச்சமயத்தார் தாமே தமமிராசாவுருவையும இ றந்துபட்டபெரியோருருவங்களையுமுளவாககி யதற்கு ரியவணககத்தோ டேற்றிககொண்டுவருகிறார்களே. இப்படிச் செய்துகொண்டுவருகையிற் சர்வேசுரன மொத்தமாய்ப் பொதுவாய் முழுதுஞ் சுரூபங்களையு முருவங்களையும விலககினவரலலவென்று அவர்களுஞ் சொலலவேண்டியிருககுமே. ஆகையாற் பாவிகளாய் நடந்து நரகிலென்றெனறைககும வேகாநிற்குங் கி லாைககாட்டின வுருவங்களைமுதலா யவர்கள்தாமே செய்வித்துப் பூச்சியத்துடனேவைத்திருகக நாஞ் சே சுநாதனையுந் தேவமாதாவையு மோக்ஷத்திலவாழு மகாத்துமாககளையுங்குறித்துச் சுரூபங்களையுண்டாக் குதலேமாத்திரம ஆண்டவராலவிலககப்பட்ட வக் கியானமென்றுசொலவதென்ன?

ஆண்டவர் தாமே சுரூபங்களைச்செய்யககற்பித் தத ற்குவேண்டியவிஸதாரமானவேதவுதாரணங்களாவன் கோயிலிற் பூசைபண்ணுமிடத்தில வேதமெழுதின இருகல்லைத்தபேழையினமெற் சுரூபங்களைச்செய்து வைககுமபடிச் சர்வேசுரனருமேதிருவுளமபற்றினது. மோயீசன-௨-ம். ஆகமம-௨௰௫ - அதிகாரம-௰௮-மு தலிய. - மோயீசன் - ௪-ம். ஆகமம - ௨௰௧ அதி. - ௮- ௯. - மோயீசன - ௨-ம். ஆகமம ௫௰௭ - அதி. - ௭.

சலொமோன தேவகட்டளையின்படியேகட்டினதே

வாலயத்திலுஞ்சுரூபங்கள்வைக்கப்பட்டது. ௨-ம். நாளாகமம-௩-அதி.-௰.-௧. (௩) அரசராகமம்-௬-அதி.-௨௰௩-௩௰௨-௩௰௫.

சுவாமிகற்பனைப்படிச்சமமனசுகளினசுரூபங்களைச் செய்துவைத்தது.-௧.-நாளாகமம-௨௰௮-அதி. ௰௮-௰௯.

பரிசுத்தசுரூபவணக்கஸ்தாபகத்துக்குச் சம்பந்தமானமகிமைகாண்பிக்கப்பட்டது. அர்ச்.-சின்னப்பர் எபிரேயருக்கெழுதின நிருபம-௰௧-அதி-௨௰௧. மேலும்-௨-ம். சாமுவேலாகமம-௬-அதி.-௰௨-. ௰௩-௰௪-௰௫-௰௬. ௨-ம்.-நாளாகமம-௫-அதி.-௨-முதலிய. தாவீதன்-௯௯-ம்.(௯௮)சங்கீதம்-௫. அர்ச்.-சின். பிலிப்பெஞ்சியாருக்கெழுதின நிருபம-௨-அதி-௰.

உருவங்களைச்செய்து வணங்குமபடித் திருச்சபையிலவழங்கினமுறையின நியாயமோவெனில செய்தவுருவங்களைப் பிரத்தியக்ஷமாகக் கண்டயாவருமஅவ்வுருவங்க ளுடையாளமாகக்காட்டின சேசுநாதருந்தேவமாதாவு மற்றமோக்ஷவாசிகளுமநன்னெறியைக்காட்டிச்செய்ததருமங்களை நினைத்துஒத்தநெறியிற்செலலத்துணிவதற்கு உறுதியாகவழங்கினமுறைமையாகும. உருவங்கள் எழுத்துவாசனையறியாதவர்களும வாசிக்கத்தகு மொருபுஸதகமாமே. ஒருபார்வையிலுல வாசிக்கத்தகுந் தேவநூலாமே. மீளவுஞ் சுரூபங்கள் தளர்ந்தவயதி லூன்றுகோற்போலப் பலமிலலாதநமக குறுதியாய் அறத்திலே தளர்ந்தநடையைத்தாங்குவதாமே. அதுகளே நீந்தும்வர்க்கு வருந் தவிப்பாற்றுகிற தெப்பமபோல நம் அறநெறியிலே நாந் தவித்துநிலலாதபடி யுதவியாய்த் தேற்றுவதாமே.

ஆகையால் பாடுபட்டகர்த்தர் சுரூபத்தைக்கண்டவளவிற் பரலோகத்தையும்பூலோகத்தையுமுளவாக்கின சுவாமி எம்மேலிரங்கி மனிதனாய்ப்பிறந்து எளியவு

ய்த்திரிந்து நம்மாலாற்றுவெம்பாவவினைகளை த்தீர்ப்ப அதுகளைத்தம்மேற் பொட்டுக்கொண்டு நம்மையிரட்சித்துப் பரமகதிமோக்ஷவாசலைத்திறந்து நாமங்கே யென்றென்றைச்சும் வாழும்பொருட்டுத் தாமடிபட்டு நிந்தைப்பட்டு முண்முடிசூடப்பட்டுத் தாமேநெடுஞ்சிலுவையினமேலே பேரிருப்பாணிகளா லறையுண்டு இரத்தமுஞ்சிந்தி யுயிருந்தந்து கொடியமரணத்தைமனம்பொருந்தி யடைந்தாரென றுருபார்வையாகக்கண்டறிந்து நமக்குமனநொந்துருகவும் அவர்மேலிரங்கிவருந்தவும் பாவங்களையொழித்து வெறுப்பவும் திறந்தமோக்ஷவிராச்சியத்திற்செல்லத்துணியவுமுறுதியாமே. அவ்வண்ணமே தேவமாதாவையு மற்ற மோக்ஷவாசிகளையுங்குறித்து அடையாளமாகவைத்த பலசுரூபங்களைக்கண்டவளவிலே கண்வழி யுறுதியுணர்ச்சியாகித் தெளிநினைவெழும்பி அவர்கள்கொண்டபொறுமையினாலே நமதுகோபமாறவும் அவர்கள்காட்டினதாழ்ச்சியாலே நமதாங்காரந் தணியவும அவர்கள்முடித்ததவத்தாலே நமதுகாமமொழியவும் அவர்கள்நடந்த வறத்தினொழுக்கத்தாலே நமதுபாவந்தவிர்ந்துபோகவு முதவியாகுமல்லவொ.

இவ்வண்ணமே திருச்சுரூபங்க ளெந்தெந்தப்பாவனையைக் காட்டிககொண்டிருக்குமோ அந்தந்தப்பாவனை யவரவர்மனதிலே யுறுத்தும். அதற்குத்தக்கபடி நடக்க அரியதுணிவுஞ் சுபாவமாய்வருவித்து அர்ச்-சுரூபங்கள் அறத்துணையாக விளங்கியிருககின்றதைக கண்ணுள்ளயாவருங் கண்டுதெளிவார்கள்.

அமலமான வேதநூலுணர்ந்து அரியஞானக்கண் திறந்து அரூபியானகடவுளைத்தரிசிக்கும் அதிதபோமகிமையுள்ள மகாத்துமாககள் ஞானிகள்முதலாய் ஆண்டவர்மனிதருக்காக எடுத்தமனுவடிவைக் காட்டுந்திருச்சுரூபங்களை முகத்துக்கண்களாற் கண்டவளவி

லே அதிகவுச்சிதப்பிரசந்நமாக அருமைபாராட்டிக்கடவுளைக்குறித்து வந்திப்பார்களொழிய இகழார்களே. ஆனால் அறிவுகண்திறவாத அந்தகர்களும் ஆண்டவரவதரித்ததை மெய்க்கொள்ளாத அவிசுவாசிகளும அவர்மனிதருக்காகப் பாடுபட்ட திருச்சுரூபங்களைக்காண்கினும அருமையறியாது இருவகைக்கண்களுமில்லாதவர்களா யிகழ்வாரகளென்று சொல்லத்தகும்.

இத்தன்மையாயிகழ்பவர் வெட்கிநாணும்படித் திருச்சபையிலே தேவசுரூபங்களால்வழங்கின அநந்த அற்புதங்களையும திருச்சுரூபவணக்கத்துக்கடுத்த பற்பலவிரிவான நியாயங்களையும வேதவிளக்கம-கூ-எ-இவ்விரண்டதிகாரங்களிலும வேதப்புரட்டலைநீககுஞ்சஞ்சீவி-கூ ப். காண்டம. ச-ம், அதிகாரத்திலுங்காண்க.



மனுமககளுககுக காவலாகவுமவர்களுடைய மனருட்டுககளைத் தேவசந்நிதியி லொப்புககொடுககவுந் தமமுடையசமமனசுககளைத்தந்தருளிய கர்த்தாவுக்குத்தோத்திரமுண்டாக.

# சுவாமி பாடுபட்ட
## சுரூபத்தைப்பார்த்துத் தியானிக்குஞ் செபம்.



என்னாசைக்குரிய சேசுமரித்தாரோ! ஒருநாளுமரிக்கக்கூடாதவர்மரித்தாரோ! சகலமனுஷருயிரைக்கடந்த மேலான வுயிருள்ளவ ருயிர்விட்டாரோ! எல்லவர்க்குமுயிரளிப்பவ ருயிர்விட்டாரோ! மனுமக்களுக்காகத் தேவசுதனிறந்தாரோ! ஆண்டவ ரடிமைகளுக்காகவிறந்தாரோ! பாவிகளுக்காகப்பரிசுத்தருயிரிழந்தாரோ! ஒநாய்களுக்காகச் செம்மறிப்புருவைமாய்ந்ததோ!

என்சேசுவே! நீரோ இந்தச்சிலுவையிலறைபட்டிருக்கிறது! எல்லவர்க்குமாவியளிக்குநீரோ ஆவியிழந்து சுவாசமடைபட்டிருக்கிறது! சீவன்பிரிந்துஉடல்விறைத்திருக்கும் உம்மையே ஸ்நேகித்து ஆராதித்துப்போற்றிப்புகழ்ந்து வாழ்த்தி ஸ்துதித்து வணங்கிநமஸ்கரிக்கிறேன்சுவாமீ.




மன்னுயிரைமீட்கத்தன்னுயிரைத்தந்த
சேசுநாதர்.

சம்மனசுகளா லாராதிக்கப்படுந் தேவசிரசே! மனுஷிருக்காகக்கல்லிலும்புல்லிலுஞ்சயனித்ததுமாய்க்காற்றிலு மழையிலு மடிபட்டதுமாய் முண்முடியழுந்தின காயத்தாலொழுகிவடிந்த திருவிரத்தத்திற்றோய்ந்து மூச்சடைந்து உயிர்விட்டுக்கவிழ்ந்திருக்கு மென்சேசுவின் றிருச்சிரசே. இந்தச்சிலுவையிலுன்னைவணங்குகிறேன். கிருபையுடைத்தாணசேசுவே! தேவரீருடையமிக்கதாழ்ச்சியைப்பார்த்துநீர் மனுஷிருக்காகப்பட்ட அவமானத்தையும் டைந்த நிந்தையையுங்குறித்து என்னுங்கார கர்வத்தைப்போக்கித் தாழ்ச்சியுள்ளவனுகப்பண்ணுவீராக.

சம்மனசுகளுக்கா நந்தசந்தோஷங்கொடுக்கிறதுமாய்ச் சூரியனை மங்கடிக்குஞ்சோதிப்பிரகாச சுந்தர வொளிவுள்ளதுமாய் மனுமக்களில் ரூபலாவண்ணிய வலங்காரமுள்ளதுமாயிருக்கிற சேசுவின் றிருமுகமே மனுஷிரசுத்தவுமிழ்நீரா லழுக்கடைந்து அடிகளாற்கன்றிச்சிரசின்காயங்களினின்றோடிவிழு மிரத்தத்தாற் சிவந்து

உயிர்பிரிந்ததனால் வெளுத்திருக்குமென்
சேசுவின் றிருமுகமே ! இந்தச்சிலுவையி
லுன்னைவணங்குகிறேன். கிருபையுடைத்
தானசேசுவே! தேவரீருடையநோக்காடுக
ளைப்பார்த்து நீர்மனுஷருக்காகவேறுபட்
டுவேற்றுருவானதைக்குறித்துப்பாவத்தா
ல் நான்கொண்ட அவலட்சண ரூபத்தை
மாற்றி யிஷ்டப்பிரசாதத்தா லழகுள்ளவ
னாகப்பண்ணுவீராக.

எங்கள்பாவத்துக்காயழுது சிலுவைமு
தலானவுபத்திரவங்களைச் சந்தோஷமாக
த்தரிசித்துக்கிருபாகடாக்ஷத்தோடெங்க
ளைநோக்கி எங்கள்குற்றங்களைப்பார்க்கிற
தைச் சகிக்கமாட்டாமல்மூடியிருக்குமெ
ன் சேசுவின் றிருவிழிகளே யிந்தசிலுவை
யிலுங்களைவணங்குகிறேன். கிருபையுடை
த்தானசேசுவே! தேவரீருடையமிகுதியா
ன துக்கத்தைப்பார்த்து நீரெனக்காகச்சி
ந்தின கண்ணீரின்பலனை நானிழந்துபோ
காதபடி உம்முடையகண்ணீரோ டென்
கண்ணீரு மொருமிக்கச்சேர்க்க எனக்கு
வேண்டியமனஸ்தாபத்தைத் தந்தருளுவீ
ராக.

அமிர்தப்பிரசங்கங்களைச்சொல்லி அரி தானதர்மங்களை யெளிதாகச் செய்யப் போதித்து அனைவருக்குமோக்ஷவழியை ப்படிப்பித்து அருந்தாகத்திற்பிச்சும் பு ளித்ததேவதாழ்ச்சிப்பழவிரசமுஞ் சுவை பார்த்தவென் சேசுவின்றிருநாமவே! இந் தச்சிலுவையி லுன்னைவணங்குகிறேன். கி ருபையுடைத்தானசேசுவே! தேவரீரநுப வித்த தாகத்திநுக்கிரத்தைப்பார்த்து நீர் போதித்தசுகிர்த நெறியில் அடியேனநந் தபத்திசுறுசுறுப்புடனேவழுவாமல் நடக் கவுந் தேவரீருடைய திருநாமமும்போத னையுமாத்திரமே யென்னாவுக்கினிதா யிரு க்கும்படி உலககாரியமெல்லா மெனக்கு க்கசப்பாயிருக்கவுஞ்செய்வீராக.

பரலோகபூலோக பாதாளத்தைத்தாங் கிப் பரலோகத்துக்கும் பூலோகத்துக்கு முறவுகட்டிப் பரகதிவாசலைத்திறந்து பா விகளுக்குத் தஞ்சமாகவிரித்துப் பாரவா ணிகளாற் சிலுவையிலறையுண்ட வென்சே சுவின் றிருக்கரங்களே! இந்தச்சிலுவையி லுங்களை வணங்கிநமஸ்கரிக்கிறேன். கிரு பையுடைத்தான என்னன்புக்குரிய சேசு

வே யும்முடையதிருக்கரங்களின் காயங்க ளைப்பார்த்துஎனக்காகவிரிக்கப்பட்டவும் முடைய கொடுங்கையி லென்னைச்சேர்த் து நாளொருபோதுந் தேவரீரைவிட்டுப் பிரியாதபடி நேச ஆணிகளா லென்னை யு ம்மோடேசேர்த்து அறைவீராக.

கல்லிலு முள்ளிலுங் காட்டிலு மேட்டி லுஞ் சுற்றித்திரிந்து என்னைத்தேடி யலைந் து பாவத்தா லென்காலில்மாட்டினதளை யையறுக்கச் சிலுவையிலறைபட்ட வென் சேசுவின் றிருப்பாதங்களே! இந்தச்சிலு வையி லுங்களை வணங்கி நமஸ்கரிக்கிறே ன். கிருபையுடைத்தான என்னன்புக்குரி யசேசுவே! உம்முடைய திருப்பாதங்க ளின் துவாரங்களைப்பார்த்து இனி நான் தேவரீரைவிட் டகலாதபடி யென்னை யும தருகிற் சேர்த்துக்கொள்வீராக.

திஷ்டரேணீட்டியின் வலிமையினாற் குத் துண்டு காயப்பட்டதைவிட எங்கள்பேரி ல்வைத்த நேசப்பெருக்கத்தா லதிககாய ப்பட்டு இரத்தமெல்லாஞ்சிந்தி ஸ்நேக அக்கினிமயமாய்ப்பற்றியெரியுமென் சே

சுவின் றிரு இருதயமே! இந்தச்சிலுவையி லுன்னைவணங்கி நமஸ்கரிக்கிறேன். கிரு பையுடைத்தான என்னன்புக்குரிய சேசு வே யும்முடைய திருவிருதயத்தின்காய த்தைப்பார்த்துத் தேவரீருடைய ஸ்நேக மென்னிடத்திற் குடிகொண்டிருக்கும்ப டிக்குத் துண்டுதிறந்தவும்முடைய திருவி லாக்காயத்தா லென்னிடத்தி லும்முடை ய திருவிரத்தத்திலேயொருதுளிபொழிய விட்டுஎன்னைப்பரிசுத்தமாக்கும். என்கெ ட்டவிருதயத்துக்குப்பதிலா யும்முடைய தற்காத்த நிர்மலமானவிருதயத்தைத்த ந்தருளும்.

ஆ! என்சேசுவே, ஆசைக்குரியசேசு வே! ஸ்நேகதேவனானசேசுவே! சேசுவே! உம்மை யித்தனைநிஷ்டூரமாயுபாதித்ததார்? கொடியநெஞ்சுள்ள யூதருந் துஷ்டகுண முள்ளசேவகருமோ வும்மை யிப்படி வ தைத்தார்கள்! உம்மைத் தேவனென்றுந் தேவசுதனென்று மனுஷரை மீட்டிரக்ஷி க்கவந்த இரக்ஷகனென்றும்விசுவசியாத அ ந்தக்குருடரல்லவே யும்மைப் பிரதான

மாய்வதைத்தவர்கள், உம்மைத் தேவனெ
ன்றும் இரக்ஷகனென்று மங்கீகரிக்கிற நா
னல்லோ வெட்கமுஞ் சிக்கும் ஈவுமிரக்க
முமில்லாமலென் அதப்பியவார்த்தைக
ளா லுமது திருமுகத்திற் றுப்பினேன்.
நானல்லோ என் பற்பலவக்கிரமமானபா
வங்களா லுமதுசதைகிழியவடித்து முண்
முடியைச்சிரசிற்பதித்தேன். நானல்லோ
வும்மை யாகடியம்பண்ணி யுமது தாகத்
துக்குப் பிச்சைக்கலந்து கொடுத்தேன்.
நானல்லோ வும்முடைய கைகால்களையும்
விலாவையுங் குத்தித்திறந்தேன். பரலோக
மும் பூலோகமுஞ் சாட்சியாயிருக்க நான
ல்லோ வும்மைக்கொன்று கொலைப்படுத்
தினேன். ஐயோ! என்னுடையவரே, நான்
செய்தகொடுமைக் கினியென்செய்வேன்.

நானித்தனை நிஷ்டூரங்களைச்செய்திருந்
துமின்னம்என்மேற்றயைபாராட்டி என்
னுயிரைப்பறியாமல் எனக்குமதிஷ்டப்பி
ரசாதத்தைக்கொடுக்கக்காத்துக்கொண்டி
ருக்கிற என்னல்லசேசுவே! நீர்படுமுபா
திகளைக்கண்டு கருங்கல்லும் பாறையும்வா

ப்விட்டழுகிருப்போற் பிளந்துநிற்கக்கல்லிலுமீரமற்ற வென்னிருதயமொன்றேருகலங்காதுநிற்கின்றது? நீர்படுமுபாதிகளையும் அந்தவுபாதிகளுககுக்காரணமானவுமது ஸ்நேகப்பெருககத்தையுங் கண்டு என்னிருதயந்தணலில்விழுந்தமெழுகுபோலிளகப்பண்ணும். இந்தமட்டும் நானுமககுச்செய்தநிஷ்டூரம்போதும். இனியாகிலுநானுமக்குத் துரோகம்பண்ணுதிருககவெணககுவேண்டிய இஷ்டப்பிரசாதத்தைத்தந்தருளும்.

தயாபரரானசேசுவே! நீரென்னைப்பற்றி என்னுலேதானே யித்தனையுபாதிப்பட்டும் இன்ன மும துமேலிரங்காதிருப்பேனே? ஆண்டவரே! உம்மைமிகவும் ஸ்நேகித்து உமமுடைய திருப்பாடுகளின்மேலிரங்கியிடைவிடாதழுது அங்கலாய்த்தவர்களோடுநானுமொருவனுகச்சேர்ந்தழுதங்கலாய்க்கக்கடவேன். அர்ச்.-மரியாயே! சேசுநாதர்பாடுபடும்பொழுதுஞ்சிலுவையிற்றெங்கிச் சீவன்விடும்பொழுதுஞ்சிவன்பிரிந்ததிவ்விய சரீரமுமது திருமடியில்

வைத்திருக்கும்பொழுதும் நீரநுபவித்த சொல்லிலடங்காத துக்கவியாகுலம் இப்பொழு துமக்கொன்று மவசரமல்லாததி னாலே யந்தத்துக்கவியாகுலமெல்லாமெனக்குத்தந்தருளும். என்மேல்வைத்த விரகதாபத்தா லுயிர்விட்டவரைக்கண்டு நானு மவர்மே விரகதாபத்தா லுயிர்விடக் கடவேனாக.

சேசுவே யென்னுடலைவிட் டின்னமுயிர்பிரியத் தேவரீர் திருவுளமாகாததினால் என் தோஷித்துரோகத்தைக்கண்டு கூச்சநாச்சப்பட்டு மனஸ்தாபமிகுதியா லும துபாதத்தில்விழுந்து இடைவிடாத கண்ணீர்சொரிய வநுக்கிரகம்பண்ணியருளும். ஆண்டவரே! மனஸ்தாபமிகுதியால் அநேக மகாத்துமாக்களிருதயம் பொடிப்பொடியாய் நொறுங்கினாற்போலே என்னிருதயமும் பொடிப்பொடியாகவும் என்கண்களிரண்டு மோயாமற் கண்ணீர் சொரியு மூற்றுக்களாகவும் என கண்ணீ ரிரத்தக்கண்ணீராகவுஞ் செய்தருளும்.

உமமுடையபாடுகளின்மேலுள்ள உரு

க்கத்தாலும் என்பாவங்களுக்காகப்படு ம
னஸ்தாபமிகுதியினாலும் என்னுயிர்பிரியவு
மக்குச்சித்தமில்லாவிட்டாலும்என்பாவங்
களுககுப்பொறுத்தலாவது கட்டளையிட்
டருளுஞ்சுவாமீ.

ஆயிரம்பதினாயிரமுறை நரகத்துககுப்
பாத்திரமான என்பாவங்களைப்பொறுத்த
ருள நியாயமில்லையென்றாலும் உமது ந
ன்மைத்தனத்தைமறந்து உம்மை மறுத
லித்த இராயப்பருககும் உம்மைப் பொ
றுத்தல்கேட்டநல்லகள்ளனுககும் பாவப்
பொறுத்தல்கட்டளையிட்டீரென்கிறதினா
லேநானுமும துதயவைநமபி யென்பாவ
ங்களுக்குப்பொறுத்தல்கேட்கிறேன். தே
வரீர்பாவவிமோசனமாகச்சிந்தினதிருவிர
த்தத்தா லென்பாவமெல்லாம் போக்கிய
ருளும். தேவரீ ரும்மைவதைத்த கொடி
யசத்துருககளுக்காகவும்முடைய திவ்விய
பிதாவைக்கேட்டிரந்துகொண்டதினாலும்
முடையகொலைககாரரிலொருவனாகிறவெ
னககுப் அந்தமன்றாட்டின்பலன் கிடைகக
வேண்டியதல்லோ? என்பாவங்களைப்பொ

றுத்தருளவேணுமென் றும்மை நான்மன்றுடமன்றூட்டுத்தாலே உமதுமன்றூட்டின்பலனல்லாமலென்சத்துவமல்லவென்கிறதினாலே உமதுமன்றூட்டு மொருமிக்கவீண்போகாதபடி நீர்துவக்கினதைநீரே முடித்தருளும்.

உமமுடைய பிதாவானவரிப்பொழுது உம்மைச் சகலபடைப்புண்டவஸ்துக்களுக்கதிபதிகர்த்தாவாகவுஞ்சகலசீவியர்களுக்கு மரித்தவர்களுக்கும் நடுவராகவும்ஸ்தாபித்திருக்கிறதினாலே அப்பொழுது நீரவளைக்கேட்டமன்றூட்டு இப்பொழுது நீர் தாமேகட்டளையிடச் சர்வவல்லவராயிருக்கையால் அப்பொழுது நீராசைப்பட்டுக்கேட்ட வெங்கள்பாவப்பொறுத்தலை யிப்பொழுது நீரேயெங்களுக்குக் கட்டளையிட்டருளும்.

ஆண்டவரே! நீர்விருத்தச்சேதனம்பண்ணிக்கொண்டபொழுதும் பூங்காவனத்திலவஸ்தைப்பட்டபொழுதுங் கற்றூணிற்கட்டியடிபட்டபொழுதுமுண்முடிதரிப்பிக்கப்பட்டபொழுதும் இரத்தத்தோடொ

ட்டியிருந்தவுமது வஸ்திரத்தைநிஷ்டூரரு
ரிந்தபொழுதும் உம்முடையகைகால்களி
லாணியறைந்தபொழுதும் திருவிலாவை
க்குத்தித்திறந்தபொழுதும்ஒழுகிவடிந்த
வுமதுதிருவுதிரத்தைப்பார்த்து என்பாவ
ங்களையும் இன்னமற்றுமுண்டானமனுஷ
ருடைய பாவங்களையும் நானுருக்காகமன்
றாடவேண்டியிருக்குமோ வவர்களுடைய
பாவங்களையும் என்தப்பிதத்தினாற் பாவத்
தைக்கட்டிக்கொண்டவர்களுடையபாவங்
களையும்பொறுத்தருளுஞ்சுவாமீ.

எங்கள் பாவத்தாலெங்களுக்காகச்சிந்
தப்பட்ட திருவிரத்தத்தைக்குறித்து எங்
கள்பேரிற் கிருபையாயிருக்க மன்றாடுகி
றோம். எங்களைப்பழிவாங்கக்கேளாமலெ
ங்களுக்கிரக்கஞ்செய்ய அபயமிடுந்திருவி
ரத்தத்தைக்குறித்து எங்கள்மேலிரக்கமா
யிருக்கமன்றாடுகிறோம். எங்கள்தோஷத்
துரோகங்களை மிகவுங்கடந்தபேறுள்ளதி
ருவிரத்தத்தைக்குறித்து எங்கள்மேற்கரு
ணையாயிருக்கமன்றாடுகிறோம். எங்களுக்
காகமனுப்பேசுந் திருவிரத்தத்தைக்கொ

ண்டுதானே தயையுள்ளசேசுவே! தயையா யிரும் - சுவாமீ தயையாயிருமென் றலறி யழுகிறோம். அந்தத்திருவுதிரத்தி லொரு துளி யெங்களிருதயத்திற் றெளித்தருளினால் எங்கள்பாவதோஷமொல்லா நிர்மூலமாய்ப்போகும்.

ஆண்டவரோ யெங்கள்மன்ருட்டுக்கிரங்கி யெங்கள்பாவங்களைப் பொறுத்தருளினால் இத்தனை துரோகங்களைச்செய்தபின்னும் இன்ன மெங்கள்நன்றிகெட்டதன்மையைப்பாராமல் உமது கிருபையைத் தானேகுறித்துத் தயைபுரிந்தீரொன்று நினைத்து உமதுமே லதிகநனறிபாராட்டி யெங்கள்குற்றங்களுக்காக வதிகமனஸ்தாபப்படுவோம். ஆ! என்னல்லசேசுவே, எங்கள் நன்றிகெட்டதன்மை கரைகாணுந்தாயிருந்தாலும உமது நன்மைத்தன்மை யதிலுங்கரைகாணுத கருணைக்கடலாயிருக்கின்றது.

சேசுவே! என்பாவப்பெருக்கத்தையும் உமது நன்மையின்விசாலத்தையும் நீரநுபவித்த வேதனைநோவுகளி ன்கோரத்

ளையும் உமது அன்பின்பூரிப்பையுங்
காணும்பொழுது என்னிடத்திற்பிறக்கும்
விம்மல் தேம்பல் பெருமூச்சினால் என்
னிருதயம்வெடித்து நாவடைத்துப்போ
கிறது. இனியும்முடைய திருப்பாதத்தைக்
கட்டியணைத்துக்கொண்டு ஆ! சேசுவே, உ
ம்மைச்சினேகிக்கிறேன். ஆ! பாவமே, ஆ!
கொடுமையே, உன்னையருவருக்கிறேன்.
ஆ! அன்புக்குரியகர்த்தாவே, ஆ! நன்மை
யே, ஆ! ஸ்நேகமே, அன்பே, அன்பே
யென்றுசொல்லுவேன். ஆமென்சேசு.



அன்புக்குரியசேசுவே! தேவரீரடியேனை யளவில்
லாநேசத்தாற்றேடி யெனக்காகநிகரில்லாவேதனையை
நுபவித்ததினால் நானும்மைமுடிவில்லாச் சினேகத்
தோடேசேவிப்பேன்சுவாமீ.

# அர்ச். - விறிசித்தம்மாள் சேசுநாதருடைய திருப்பாடுகளைக்குறித்துச்செபித்த செபங்கள்.

## ௧-செபம்.

எனனுடைய விரக்ஷகரான சேசுகிறீஸ்துநாதரே! இகலோகபரலோகமெல்லாம் படைத்தவருடைய ஏகக்குமாரரே! உம்மைநேசிக்கிறவர்களுக்கு நித்தியமதுரமே! சகலசந்தோஷத்துக்கு மாசைக்குமேலானசந்தோஷமே! ஆதிகாலத்திலே அநாதிபிதாவினாற் குறிக்கப்பட்டு வேதாகமத்திற் சொல்லப்பட்டபடியே தேவரீர் மனுஷாவதாரம்பண்ணி மகாவறுமையநுபவித்து மனுஷசென்மத்துக்கடுத்த மெலிவான பலவீனங்களுக்கெல்லா முள்ளாகினீர் விருத்தச்சேதனவேதனையுஞ் சகித்து, வெகுதூரவழியான எசித்தியாத்திரையில் மிகுந்தபசிதாகத்தையும் பொறுத்தருளச்சித்தமானீர். உலகத்திலே தேவரீ



இராசாதிராசனாகிய சேசுவே! தேவரீர் நிஷ்டுரச
சேவகரால் முண்முடிசூட்டவுஞ் செங்கோலிடமாக
மூங்கிலைத்தரிக்கவும் பீற்றலானசிவப்புச்சகலாத்தை
யுடுத்தவும் பரியாசமாக இராசாவேவாழவென்று வ
ணங்கவுந் திருச்சிரசில் மூங்கிற்றடியா லடிக்கவுந் தி
ருக்கன்னத்திலறையவும்பட்டீரே. இதெல்லா மென்
னிரக்ஷணியத்துக்காகப் பொறுத்தீரேசுவாமீ. இந்த
நிந்தையவமானத்துக்குப்பரிகாரமாக அடியேனும்
மையநந்தபத்தியோடேவணங்கி யாராதிக்கிறேன். எ
ன்மரணபரியந்தமும்மைத் தக்கபடி சிநேகித்துச்சே
வித்து நமஸ்கரிக்க வநுக்கிரகஞ்செய்தருளுஞ்சுவாமீ.

ொருபரதேசியைப்போலே சஞ்சரித்து
மனுமக்கட்குமது உண்மையான வேதத்
தையுபதேசித்து உபத்திரவப்படுபவரு
டையநோய்பிணிகளைத்தீர்த்து, சர்வவிஷ
யத்திலும் பிதாவினுடைய திருவுளத்தை
நிறைவேற்ற உம்முடைய சீவியகாலமெ
ல்லாஞ்செலவழித்தீர் தேவரீருடைய திரு
மரணத்துக்குமுன்னஞ் சர்வேசுரனுடை
ய ஸ்நேகப்பெருக்கத்தை மனிதருக்குக்
காட்டும்படி அதரிசனமாயெப்போதும்
அடியார்களோ டிருக்கச்சித்தமானதாற்
பரியத்தினல், தேவரீரைக் கொல்லவேணு
மென்று கொலைபாதகரான யூதர்கூடின
அன்றிராத்திரிதானே எங்களுக்குச்சீவி
யமளிக்கு மாராதிக்கப்பட்ட தேவநற்க
ருணையையுண்டாக்கி யும்மைத்தானே ப
லியாகவொப்புக்கொடுத்தருளினீர். என் சர்
வேசுரா உலகமுடியுமளவுமெங்களைவிட்டு
ப்பிரியாதிருக்கு மும்முடையவன்பின்தே
வத்திரவிய அநுமானமாகியவிந்தவற்புத
மான பரமவிரகசியத்தைத்தேவரீரோ யடி
யோர்களுக் கறிவித்துப் போதித்தருளினீ

ர்.உம்முடையசிஷாக்களுடைய கால்களைக் கழுவியுமது திருவாய்முத்தமுங்கொடுத்து அவர்களுக் கும்முடையதேவதாழ்ச்சியின் மாதிரிகைகாண்பித்து, உம்மை யசன மாகத் தந்தருளினதுமல்லால், அவர்களி லொருவனால் நீர்சதிமார்க்கம்பண்ணப்படு வதையும், மற்றொருவனால் மறுதலிக்கப் படுவதையுங்கடைசியாயும்மைவிட்டியாவ ருமோடிப்போவதையும் எற்கனவேயறி ககையிட்டருளினீரோ. இதெல்லாம் நினைத் தருளுஞ் சுவாமீ.

ஆ! என்சர்வேசுரா, நான்சதிமார்க்கரு ண யூதாசென்பவனைப்போ லாகாமலும் உலோகபாசப்பற்றுதலா லும்மைமறுத லியாமலு மிருக்க வநுசகிரகம்பண்ணிய ருளும். தேவரீருக்கு நான்செய்த துரோ கங்களின்மேல உத்தமமனஸ்தாபப்பட்டு ந ற்கிருத்தியங்களை யநுசரித்துச் சுத்தமாக வுந் தேவநற்கருணையி லுமதுதிருச்சரீர த்தையுட்கொள்ளுகிறதினு லிரக்ஷணியம் டையவும் இந்தத் திவ்விய சற்பிரசாதத் தை அருந்தினபொழுதே யாத்துமசம்

பூரணமாகவுஞ்செய்து நித்திய சீவியத்தி
ன்வித்தானது என்னிருதயத்தி லாழமாய்
வேரூன்றி விளையும்படிககுத் தயைபுரியு
ஞ்சுவாமீ. ஆமென்சேசு.
பர. பிறி.

உம.- செபம்.

சர்வலோகத்தையுஞ் சிஷ்டித்தவருமா
ய்எனனிரக்ஷகருமாயிருககிறசேசுவேஉம
து அளவற்றநன்மைத்தனத்தால் மட்டிட
ககூடாதவராய் உலகத்தைக கையிலேயட
ககிககொண்டிருககிறவரே! தேவரீர்மனித
ருக்காகப் பாடுபடத்தக்ககாலங் கிட்டிவந்
தவளவில் நீ ொருபூங்காவனத்திற்கெழுந்
தருளி யங்கே பூமியிலே தீர்க்கதண்டனாக
விழுந்து உம்முடையபிதாவை மூன்றுமு
றைவேண்டிககொண்டபோது நீ ரநுப
விக்கபோகிற பாடுகளையெல்லா முரூபி
கரித்ததினால் உமது திரு ஆத்துமந் துக்க
சாகரத்தில்மிழ்ந்தி உமதுதிருச்சரீரமுழு
து மிரத்தவேர்வைவேர்த்து நீ ரநுபவி
த்த துக்கவேதனைகளையும் உம்முடையசீ
ஷீாக்களை மும்முறையெழுப்பிச் செபஞ்

செபிக்கத்தேவரீரவர்களுக்குக்கற்பித்தரு
ளின நல்லுணர்ச்சியிலும் அதிகமாய்மே
ற்கொண்ட நித்திரையினுல் ஐம்புலன்களு
மொடுங்கியறிவுசோர்ந்துஒருகணபொ
ழுதாயினும் விழித்திருக்க அவகாசமற்ற
வர்களாகி யவர்களால்ற்ப ஆதரவுமில்லாதி
ருந்ததையும் நினைத்தருளுஞ்சுவாமீ. ஆ!
என்சர்வேசுரா, அடியேனுமது சித்தத்து
க்குமுழுதுமொத்துநடக்கவெனக்குவே
ண்டிய நல்லுணர்ச்சிகளை யெனனிருதய
த்திற் பிறபபித்தருளவும் நானுலகசிந்த
னைகளைவிட்டுத் தனித்திருந்து பிரயோ
சனமாம்படி யும்மைச்செபித்துவேண்டு
தல்செய்வதற் கென்பொறிகள் விகசின
ம்பண்ணும விருககவும் எனதிரக்ஷணியத்
தின் சத்துருக்கள் மேற்கொள்ளாதபடி
யகலவும் உமதூழியத்தி லடியே னெப
பொழுதும் உறங்காதிருக்கவும் உமது தி
வ்விய செபத்தியானத்தின் றிருப்பலனை
யநுக்கிரகஞ் செய்தருளவேணுமென் றும்
மை மன்றுடுகிறேன் சுவாமீ. ஆமென்
சேசு. பர. பிதி.

## ௩ம். - செபம்.

சம்மனசுகளுக் குண்மையான சுவாதந்திரியமுமாய்ச் சகல இன்பநிறைந்த மோக்ஷமுமாயிருக்கிறசேசுவே! அநந்தகிருபையால் தேவரீர் தேடி யிரட்சிக்கவந்த மனுஷர்கையிற் பிடிபட்டுப பொய்ச்சாட்சிகளினாலே குற்றஞ்சாட்டபபட்டீர். நல்ல விளம்பிராயத்திலே மூன்று நீதிக்காரருடைய அநியாயத்தீர்வைக்குள்ளானீர். உம்முடையசத்துராதிகள்மூர்க்கவெறிகொண்ட சிங்கங்கள்போ லும்மைச் சூழ்ந்து உமது திருமுகத்தை மூடிக்குட்டி ஆகடியம்பண்ணி உமது திருக்கன்னத்தி லறைந்து தூஷணித்துத் துப்பினார்கள். உமதுவஸ்திரத்தைக்கழற்றிப்பரிகாசமாகப் பீற்றல் வஸ்திரத்தைத் தரிப்பித்தார்கள். உம்மைத் தூணோடு கட்டி வார்களினாலுங் கசைகளினாலுந் திருத்தசை கிழிய வடித்தார்கள். உமது திருச்சிரசில் முண்முடியணிந்தார்கள். உமது திருத்தோளின்மேற் சிலுவைபாரத்தைச் சுமத்தி நடத்தினார்கள். இதல்லாமல் இன்ன முமமைவருத்தின வெண்ண

முடியாத நிஷ்ரேநிந்தை வாதைப்பெருக் கத்துக் கெல்லா முள்ளாகினபோது நீர நுபவித்த நிகரில்லாத வருத்த வேதனைக ளையுங் கஸ்திநோவுகளையும் நினைத்தருளு ஞ்சுவாமீ. ஆ! என்னாண்டவரோ, தேவரீர் சகித்த தூஷண வார்த்தைகளையு மநுபவி த்த சகலகொடூரேப் பாடுகளையுங் குறித்துக் காணப்பட்ட சத்துருக்கள், காணப்படாத சத்துருக்களிடத்திலேநின் றென்னைக்கா த்து உமதடைக்கலநிழலிலேயமர்த்திநான் நித்திய சீவியத்தின் மகிமைப் பிரதாபத் தை யடையக் கிருபை செய்தருளவேணு மென் றும்மை மன்றாடுகிறேன் சுவாமீ. ஆமென்சேசு. பர. பிறி.

௬ம.-செபம்.

பரலோகவைத்தியரானசேசுவே! தேவ ரீர் சிலுவையிலுயர்த்தப்பட்டபோது உம் முடைய அவயவங்களெல்லாநெகிழ்ந்துநீ ர நுபவித்த அரியநோக்காட்டையும் பட் ட ஆரூட்டத்தையும் அளவிடக்கூடுமோ? உம்முடையதிருப்பாதந்துவக்கித் திருச்சி ரசுபரியந்தங் காயமில்லாதவிடமொன்று

மில்லையே ஆதலா லுமது நோவுக்கிணையா
னநோவு காணக்கூடாதே. இப்படியிருந்
தாலுந்தேவரீரந்தஉபத்திரவ துன்பங்களை
யெல்லாம் பாராட்டாம லும்முடையசத்
துராதிகளுக்காகவும்முடையதிவ்வியபிதா
வைப்பார்த்து என்பிதாவே! இவர்கள்செய்
கிறதெல்லாம்அறியாமற்செய்கிறார்கள். இ
வர்களுடைய குற்றங்களைப் பொறுத்தரு
ளுமென்று வேண்டிக்கொண்டதை நினை
த்தருளுஞ்சுவாமீ! இப்படிப்பட்டகிருபா
சமுத்திரமான உமது கருணைப்பெருக்க
த்தைப்பற்றிநீரநுபவித்தநிர்ப்பந்த வேத
னைகளைப்பார்த்து உம்முடையகடினமா
னபாடுகளையடியேன் நினைவுகூருந் தியா
னத்தினால் என்பாவங்களுக்கெல்லாம் பரி
பூரணப்பொறுத்தலுண்டாகத்தயைசெய்
தருளுஞ்சுவாமீ. ஆமென்சேசு. பா. பிறி.

௫ம.- செபம்.

நித்திய பிரகாசத்தின் தற்பணமாகிய
சேசுவே! தேவரீருடையதிருப்பாடுகளின்
விலைமதியாதபேறுகளால் நல்லோர்களை
யேறத்தெரிந்துகொள்ளப்படுவதையுந்தீ

யோர் தங்கள்க்கிரமமிகுதியாற் சபிக்கப் பட்டுப் பெருந்திரளாய் நரகத்திற்றள்ளப் படுவதையும் உமது தெய்வீகஞானத்தின் தூரதிஷ்டியாற்கண்டிருக்கையிற்சகலவே தனையுநிறைந்த பாதாளத்தில் நம்பிக்கை யற்றவர்களு முழுதுங் கைந்நெகிழப்பட் டவர்களு நிர்ப்பாக்கியருமாகுமந்தப்பா விகளுடைய சேதத்தைக்கண்டிரங்கின வு மது நிகராத காருண்ணியத்தினால் நீரநு பவித்த துக்கவியாகுலத்தைநினைத்தருளு ஞ்சுவாமீ! ஆ! என்னாண்டவரே, உம்மோ டுகூடச் சிலுவையில்றையுண்ட நல்லகள் ளனைத் திருக்கண்ணோக்கி நம்மோடுகூட இன்றே மோக்ஷத்திருப்பாயென்று திரு வுளம்பற்றின அந்த இஷ்டகாருண்ணிய த்தை யென்மரணவேளையி லென்னாத்து மத்தின்மேலுஞ் செலுத்தும்படியும்மை மன்றாடுகிறேன்சுவாமீ. ஆமென்சேசு.

பர. பிறி

௬ம். - செபம்.

மகா அன்புக்குரிய விரட்சகருமீட்டற் றவாராதனைக்குப்பாத்திரமானவிராசாவு மாகியசேசுவே! தேவரீரொரு கள்ளனைப்

போலே யவமானமாய்ச் சிலுவையில்றை யுண்டுசிலுவையோடுயர்த்தப்பட் டும்மு டையஸ்நேகிதர்பந்து சனங்களாலுங்கை விடப்பட்டு நிகரில்லாக்கஸ்திகளை யநுப வித்திருக்கையிலோராறுதலின்றி மிகுந்த துக்கவியாகுலத்தோடு சிலுவையடியில்நி ற்கிற வும்முடைய திவ்வியதாயைநோக்கி ஸதிரீயே! இதோவுன்மகனென்று அருள ப்பனை யும்முடையமாதாவுக்குப் புத்திர னாகக்கையளித்தபொழு துமக்குண்டாயி ருந்ததுக்கமிகுதியை நினைத்தருளுஞ்சுவா மீ! ஆ! என்திவ்விய இரட்சகரே, அத்தர வாயிலே உம்முடைய திருத்தாயா ராத் துமத்திலேயூடுருவின வல்லயத்தைப்பா ர்த்து என்மேலிரங்கி நானுத்துமசரீரத்தி லநுபவிக்கிற துன்பவுபாதிகளிலும் வி சேஷமாய் நான்சாகிறதருணத்திலு மெ னக் காறுதல் வருவிக்க வேணுமென்று உமமைமன்றாடுகிறேன்சுவாமீ. ஆமென் சேசு. பர. பிறி.

எம். - செபம்.

வற்றாதபத்தியின் ஊற்றாயிருக்கிறசே சுவே! தேவரீர்சிலுவைமரத்திற்றொங்கும்

பொழுது மனுஷிருடையவிரக்ஷணியத்தின்மே லுமக்கிருந்தமிகுந்த தயாபதாகத்தினாலே தாகமாயிருக்கிறேனென்று திருவுளம்பற்றினதை நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! என்னிரக்ஷகரே, சரீர இன்பத்திலும் உலோகவிச்சையிலு மெங்களுக்கிருக்கிறவீணாசையொழிந்து சகலதர்மக் கிரியைகளின்மேல் ஞானத்தினாசை யோங்கத்தக்கதாய்க் கிருபைசெய்தருள வேணுமென்றும்மைமன்றாடுகிறேன்சுவாமீ. ஆமென்சேசு.

பர. பிறி.

அ^ம். -செபம்.

இருதயங்களுக்குமதுரமுமாய்ப் புத்திக்கின்பமுமாயிருக்கிற சேசுவே! தேவரீரெங்கள்மேல் வைத்தநிகரில்லாத அன்பினால் பிச்சுக்கலந்தகாடியின்கசப்பை எங்களுக்காகச் சுவைபார்த்தருளினதை நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! என்னாண்டவரேயெங்கள் மரணத்தரவாயிலெங்களாத்துமங்களுக்கு அவுஷ்தமும் ஆறுதலுமாயிருக்கிறவும்முடைய திருச்சரீரத்தையுந் திருவிரத்தத்தையும் யோக்கியமான பிரகாரமாய்

நாங்களுட்கொள்ளத்தக்கதாக வநுக்கிர கம்பண்ணியருளுஞ் சுவாமீ. ஆமென் சேசு. பர. பிறி.

## சூ௯. - செபம்.

இருதயங்களுக்கு ஞானசந்தோஷமு ஞ் சத்துவமும் அரசாட்சியுமாயிருக்கிற சேசுவே! தேவரீருடையமரணத்தின்சொ ல்லிலடங்காத நிர்ப்பந்தக்கொடுமையாலு ம் யூதர்களும்மை நிஷ்டூரமாய்ப்பரிகாச ம்பண்ணித் தூஷித்த தூஷணங்களாலும் உம்முடையதிவ்வியபிதாவைப்பார்த்து எ ன்பிதாவே என்பிதாவே என்னையேன்கை விட்டீரென்று பேரொலியாகக் கூப்பிட் டபொழுது தேவரீரநுபவித்த துக்கப் பெருக்கத்தையும் மரண வுபத்திரவங்க ளையு நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! எனனிர க்ஷகரே! இப்படிப்பட்ட துக்கவுபத்திரங் களைப்பார்த்து என்னையடர்ந்துவருந் து ன்ப துரிதங்களிலேயும் என்மரணவாதை களிலேயு மென்னைக்கைவிடாது காத்தரு ளவேணுமென் றும்மைமன்றுடுகிறேன் சுவாமீ. ஆமென்சேசு. பர. பிறி.

௰ம். - செபம்.

சர்வத்துக்கு மாதியந்தமும் உண்மை யும் வழியுமாயிருக்கிற சேசுவே! தேவரீரு மது உச்சந்தலைதொடங்கி யுள்ளங்காற்பரி யந்தம் பட்டபாடுகளின் கரைகாணாத உ பத்திரவக் கடலில்மூழ்கிப்போயினதை நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! என்னாண்டவ ரே, உம்முடைய காயங்களின்பெருக்கத் தைப்பார்த்து அடியேன்பாவக்கடலிற் க ல்நெஞ்சா யமிழ்ந்திப்போகாதபடி உ ண்மையானவிநேகத்தால் நானும்முடை ய கற்பனைகளையநுசரிக்க வெனக்கநுக் கிரகஞ்செய்தருளுஞ்சுவாமீ. ஆமென் சேசு. பர. பிறி.

௰கம். - செபம்.

அளவறுக்கப்படாத கருணை சமுத்திர மானசேசுவே! தேவரீருடைய திருவயிற் றையும் எலும்புகளையுமூடுருவினகாயங்க ளினிர்ப்பந்தவேதனைகளையெல்லாம்நினை த்தருளுஞ்சுவாமீ. ஆ! என்கர்த்தரே,பாவ ப்பாதாளத்தில்விழுந்துகிடக்கும்நிர்ப்பா க்கியனானவென்னைக்கைதூக்கித் தேவரீ

ருடைய உக்கிரகோபாக்கினிக் கெதிரோ
நிற்கக் கூடாதவனான் வென்னை அந்தக்
கோபாக்கினி தணியுமட்டும் உம்முடைய
திருக்காயங்களி லொளித்துவைத்தருள
வேணுமென் றும்மைமன்றாடுகிறேன் சு
வாமீ. ஆமென்சேசு. பர. பிறி.

ய௨ம். -செபம்.

சத்திரியக்கண்ணுடியுமாய் ஸ்நேகவொ
ருமையின் பந்தனமுமாயிருக்கிற சேசு
வே! தேவரீருடையபாதாதிகேசபரியந்த
ம்பட்டகாயங்களின் மிகுதியையும் அந்த
க்காயங்களிலேலநின்று பெருகியோடின
இரத்தப்பிரவாகத்தாலுமதுமாசற்றதேக
த்திலே தேவரீரநுபவிக்கத் திருவுளமாயி
ன சொல்லிலடங்காத வாதைப்பெருக்கத்
தையும் நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! என்ம
துரவிரக்ஷகரே; இதிலும்திகமாய் நீரெங்க
ளுக்குச் செய்யத்தக்கதென்ன? தேவரீரு
டையதிருவிரத்தத்தா லும்முடைய காய
ங்களியாவையு மென்னிருதயத்தி லெழு
தியருளும். நான் துகளைவாசித்து உம்மு
டைய திவ்வியபாடுகளையுந் திருமரணத்

தையு ம்ட்டற்றவன்னையுமுணர்ந்து நன்றியறிந்து என்மரணபரியந்தஞ் சத்தியத்திலும்புண்ணியத்திலு நிலைகொண்டிருப்பேன்சுவாமீ. ஆமென்சேசு. பர. பிறி.

ய௱ம. - செபம்.

செயசீலருமாய் மகாபராக்கிரம சிங்கமுமாய் ஸதிரஞ்சீவியுமாயிருக்கிற சேசுவே! தேவரீருடையசரீரசத்துவமும் இருதயபலமுமற்றுப்போய்த் திருமுடிசாய்த்து எல்லாநிறைவேறிற்றென்று திருவுளம்பற்றினபொழுது நீரநுபவித்த துக்கப்பிரளயத்தை நினைத்தருளுஞ் சுவாமீ! ஆ! என்னல்லசேசுவே, அந்த ஆருட்டவேதனையைப்பார்த்துஅடியேன்புத்திகலங்கியலமற்றுதவித்து மரண அவஸ்தைப்படும்பொழுது என்மேற்கிருபையாகியன்புகூர்ந் தென்னையிரக்ஷிக்கவேணுமென் றும்மைமன்றுடுகிறேன்சுவாமீ. ஆமென் சேசு. பர. பிறி.

யகும். - செபம்.

நித்தியபிதாவி னேகசுதனுந் தெய்வீக ஒளிவுஞ் சாயலுமாயிருக்கிற சேசுவே!

தேவரீருமமுடைய பிதாவைநோக்கிப்பி தாவே என்னாத்துமத்தை யுமது திருக்கரத்தி லொப்புக்கொடுக்கிறேனென்று தாழ்ச்சியோடு திருவுளம்பற்றிக் கையளித்து எங்களைமீட்கும்பொருட்டா யுமதுதிருவுடல்முழுது மடிகளால்நைந்து அன்பார்ந்த திருவிருதய மனிதருடையபாவங்களைப்பற்றித் துயரத்தினாற்பிளந்து தயைநிறைந்த திருவுள்ளந்திறந்து வியாகுலமுள்ளபெருமொலிச் சத்தமாகக்கூப்பிட்டுத் திருமரணமானதை நினைத்தருளுஞ் சுவாமீ! அர்ச்சியசிஷ்டர்களுக்குஅரசே அளவில்லாத பலன்பொருந்திய இந்தத்திருமரணத்தைப்பார்த்துப்பசாசு உலகு உடலென்னுமிம்மூன்றுசத்துருக்களை யடியேன்செயித்துஉலகத்துக்குச்செத்ததன்மையுமா யுமக்காகமாத்திரமே சீவித்திருக்குந்தன்மையுமாயிருக்க வெனக்குவேண்டியவுதவிபுரிந்து என்னைப்பலப்படுத்தியருளும். கடைசியா யென்னாத்துமமுடலைவிடுநாளி லுமது தேவசமுகத்துக்குவரவும்நீரதைக்கைக்கொள்ளவுஞ் செய்ய

வேணுமென்றுதேவரீரைமன்றாடுகிறேன் சுவாமீ. ஆமென்சேசு. பர. பிறி.

ஙரும். - செபம்.

உண்மையுஞ் செழிப்பும்பொருந்திய தேவதாழ்ச்சிக்கொடியான சேசுவே! தேவதாழ்ச்சிக்குலையானது ஆலையிலகப்பட்டுநெருங்கி இரசம்பொழியுமாப்போலே தேவரீர் தேவதாழ்ச்சியை மேல்ணிந்து சிலுவையென்ற ஆலையி லகப்படச்சித்தமாகி உமதுதிருத்தேகத்தில்நின்று பிரளயமாக விரத்தஞ்சொரிந்ததையும் உமதுதிருவிலாவை யொருசேவகனீட்டியின்வலிமையாற் குத்தித்திறந்தபொழுது உமதுதிருவுடலி லொருதுளிமுதலாய்த் தங்காமலதிலேநின்றிரத்தமுநீரும் வெள்ளமாகப் பெருகியோட வதையெங்களுக்குத் தேவ அமிர்தபானமாகக் கட்டளையிட்டருளினதையும் கடைசியாய்த் தேவரீரொரு மீறைச்செண்டுபோலே சிலுவையிலுயர்த்தப்பட்டபொழுது உமதுதிருத்தசைநோவால்நைந்து திருவிருதயம்வறண்டு திவ்விய அஸ்தியின்மூளை வற்றிப்

போனதையும் நினைத்தருளுஞ்சுவாமீ! ஆ! என்னல்லசேசுவே, எங்களுக்காகநீர் நுபவித்தவிந்தநிகரில்லாதநிர்ப்பந்தப்பாடுகளையுஞ்சிந்தின திருவுதிரப் பிரவாகத்தையும் பார்த்து எனக்குச்சாங்காலமாகி நான்லமந்துதவித்து ஆரூட்டப்படுகின்ற அவஸ்தைவேளையிலே என்னாத்துமத்தைக் கையேற்றுக்கொண்டிரட்சித்தருளும்.

என்மதுரசேசுவே! அன்பினாலுந் தபசினாலு நான் அல்லும்பகலு மழுதுவிடுங் கண்ணீரோ எனக்காகாரமாயிருக்க வென்னிருதயத்தைத் திடப்படுத்தியருளும். என்னிருதய மும்பில் நிலைகொண்டிருக்கவும் எனது வேண்டுத லுமக்குப்பிரியமாயிருக்கவும் எனதுமுடிவு பாக்கியமானமுடிவாயிருக்கவும் நான்மரித்தபின் மோக்ஷவிராச்சியத்தையடைந்து முத்தர்களோடும்மை அனவரதம் வாழ்த்திக்கொண்டிருக்கவுங் கிருபைசெய்தருளுஞ் சுவாமீ. ஆமென்சேசு. பர. பிதி.



# ஏழு தவ சங்கீதம்.

தாவீதனென்கிற இராசாபாடின கீதவாகம்மான நூற்றைம்பதுசங்கீதங்களிலேழுசங்கீதங்களைத்திருச்சபைதெரிந்தெடுத்துத் தவசெபமாக நியமித்ததற் பாவத்தினிமித்தந்துக்கமனஸதாப முயற்சியாகிய வதுகளையுணர்த்து வேண்டிக்கொள்வது பூர்வீகந்துவக்கிநடக்கின்ற நலலமுறைமையாமே. அதுகள்வருமாறு.

## ௬-வது. சூ.- சங்கீதம்.

வியாதிஸதன் வைத்தியனை மன்றாடுகிறதுபோலே பாவத்தினால்மெலிந்து கலங்கின ஆத்துமமானது சர்வேசுரனைப்பிரார்த்தித்து அவருடையசந்நிதியிலேயழுது பிரலாபிக்கிறதைக்குறித்தும் ஆண்டவரந்தப் பிரலாபத்தைக் கேட்பதைக்குறித்தும் பாடியிருக்கின்றது.

சுவாமீ! தேவரீர் கோபமாயிருக்கும்போதென்னைத்தண்டியாதேயும். உமது கோபாக்கினிவேளையிலென்னைக் கடிந்துகொள்ளாதேயும்.— நானேவெகு பலவீனன் என்மேலிரக்கமாயிரும். என்னெலும்புகள் நெக்குவிட்டிருப்பதாலெனக்காரோக்கியங்கொடுத்தருளும்.— என்னாத்துமமோ வெகுவாய்க்கலங்கி யிருக்கிறது. ஆனால்சுவாமீ! நீரெந்தமட்டுமெனக்கு

தவிசெய்யாமலிருப்பீர்? — சுவாமீ! தேவ
ரீரொனதுமுகமாய்த்திரும்பி யென்னாத்து
மத்தையீடேற்றி உமது கிருபையைக்கு
றித் தென்னையிரட்சித்தருளும்.— ஏனெ
ன்றால் மரணத்தன்மையிலும்மை யாரும்
நினைப்பாரில்லை. நரகத்திலும்மைஸ்துதிக்
கிறவனார்?—பிரலாபபட்டுமிகவுமெலிந்
தேன். இராத்திரிதோறு மென்கண்ணீ
ராலென்கட்டிலைக்கழுவி யென்கண்ணினீ
ராலென்படுக்கையை நனைத்துக்கொண்
டுவருகின்றேன்.— கோபாக்கினியா லெ
ன்கண்கலங்கிச்சிவந்தது. என்சகலசத்துரு
க்கள் நடுவில்வெகுநாளா யகப்பட்டுத்த
ளர்ந்தேன். — ஆண்டவ னென்னழுகைக்
குரலைக்கேட் டருளினார். ஆகையால்க்கிர
மங்களைச்செய்கிற நீங்களெல்லாரு மெ
ன்னைவிட்டகன்றுபோங்கள்.— ஆண்டவ
னென்வேண்டுதலைக்கேட் டெனது விண்
ணப்பத்தைக் கையேற்றுக் கொண்டார்.
— என்சத்துருக்க ளெல்லாரும் வெட்கி
மிகவுங் கலங்கக்கடவார்கள். அதிசீக்கிரத்
தில்வெட்கமுமீனமு மூடிப் பின்னிட்டுப்
போகக்கடவார்கள். பிதாவுக்கும்....

## உ-வது. - ௬௰கம.-சங்கீதம்.

நல்லமனத்தோடு பாவத்தைவிட்டுச் சர்வேசுரனைச்சேருவதின்மேலும் ஆண்டவர் நமதிச்சுட்டிலடைக்கலமுமாய் நல்லோர்க்கின்பமுமாய்ப் புல்லோர்க்குத்துன்பவாக்கினையிடுபவருமா யிருக்கிறு ரென்கிறதின்மேலும் பாடியிருக்கின்றது.

எவரொவர்பாவம் பொறுக்கப் பட்டதோ அவர்கள்பாக்கியவான்கள். எவரொவர்பாவ மறைக்கப்பட்டதோ அவர்களும் பாக்கியவான்கள். — ஆண்டவ ரெவனுடையபாவத்தை யவன்மேற்சாட்டாமலிருக்கிருரோ அவன்பாக்கியவான். எவனுடையமனதிற் கபடமில்லையோ அவனும் பாக்கியவான். — நானென்பாவத்தைவெளிப்படுத்தாமல் மௌனமாகி நாளெல்லாங்கூக்குரலிட்டதினு லென்னெலும்புகள் தளர்ந்துபோயிற்று.— ஏனென்றுலுமதுகைப்பார மல்லும்பகலுமென்மேற்சுமந்ததினுல் முள்ளுத்தைத் திறங்கினுற்போலக் கடின துயரப்பட்டு ஆருட்டமாய்ப் புரண்டுகிடந்தேன். — என்பாவத்தையுமக்கு அறிக்கையிட்டேன், என் ஞீதத்தை யுமக்குமறைத்தேனில்லை. — நானெ

னக்குவிரோதமாக என் னக்கிரமத்தை யாண்டவரிடத்திற் சங்கீர்த்தனம் பண்ணு வேனென்றுசொலலவே நீரென் பாவக் கேட்டைப் பரிகரித்தருளினீர் — இதை ப்பற்றித் தர்மாத்துமாக்களெல்லாருந் த க்கசமயம்பார்த் தும்மைமன்றுடுவார்க ள் — இத்தன்மையாய் வெள்ளநீரொப்ப டிபுரண்டுவந்தாலு மவர்கள்மட்டு மேரு து.— என்னைச்சூழ்ந்திருக்கிற துன்பங்க ளில் எனக்கடைக்கலருநீரோ! என்சந்தோ ஷமாகிய கர்த்தாவே யென்னை வளைந்து கொண்டிருக்கிறவர்களிடத்தினின் றென் னைக்காத்தருளும். — நீநடக்கவேண்டிய வழியை யுனக்குக்கற்பித்து உனக்கு உண ர்வைத்தந்து உன்மேல்நமதுபார்வையை நிறுத்துவோம். — ஞானமில்லாத குதி ரை கோவேறுகழுதைகளைப்போ விரா தேயுங்கள் —உமதருகிற்சேராத அந்தமி ருகங்களின் வாயை வாரினாலுங் கடிவாள த்தினாலு மிறுக்கிப் பந்தனம்பண்ணும். — பொல்லாதவர்களுக் கநேக ஆக்கி னைகளுண்டு. ஆனாலாண்டவர்பேரிற் பத்தி

நம்பிக்கையாயிருக்கிறவர்களைத்தேவகிருபைசூழ்ந்திருக்கும். — நீதிமான்களே! ஆண்டவரிடத்தில்கமகிழ்ந்துசந்தோஷிப்படுங்கள். செவ்வியவிருதயத்தோரே! நீங்களெல்லாருமவரிடத்திலுங்கள்மேன்மையைப் பாராட்டுங்கள். பிதாவுக்கும்....

ரு-வது. - ருய௦எம். - சங்கீதம்.

பாவத்தாலாத்துமத்திற் பட்டபுண்களைத்தெளிவிக்கிறதின்மேலும் நல்லோர்துன்பப்படுகையில் ஸநேகிதராலுங் கைவிடப்படுகிறதின்மேலும் தபசுக்குட்பட்ட ஆத்துமமானது சர்வேசுரனுடைய நீதிக்குத்தரிப்பதற்கான வரும்பாடாகவிலௌகிகதுன்பங்களைக்கையேற்றுக்கொண் டநுபவிக்க எப்பொழுது மாயத்தமாயிருக்கிறதின்மேலும பாடியிருக்கின்றது.

சுவாமீ! தேவரீர் கோபமா யிருக்கும்போதென்னைத்தண்டியாதேயும். உமது கோபாக்கினிவேளையிலென்னைக் கடிந்து கொள்ளாதேயும். — ஏனெனில் நீரவிட்ட அம்புகளென்னை யுருவிப்பாய்ந்தது. உமதுகையின்பார மென்மேற் சுமந்தது. — உமதுகோபத்தின்முகத்தே யென துமாமிஸத்திற் சுகமற்றுப் போயிற்று. என்பாவங்களின்முகத்தே யென்னெலும்புகளூறவற்றுக் கலகலத்துப்போயிற்

று.— ஏனென்றால் என்னக்கிரமங்க ளெ
ன்றலைக்குமிஞ்சி யென்னை மூழ்கடித்தும்
வெகுபாரச்சுமையாக வென்னையிருத்தியு
ம்போட்டது.— என்மதியீனத்தினலென்
னுடையகாயங்கள்புழுத்து நாறிப் போ
யிற்று.— நான்மிகவுந்தரித்திரனு யுடல்
கூனிப்போய் நாள்முழுதுந் துக்கத்தால்
முகம்வாடித் திரிகிறேன்.— ஏனெனிலெ
ன்னிடுப்பான தக்கினிப் பிரவேசமாய்ப்
பற்றியெரிகிறது. என்சரீரத்தில் நல்லச
தையெங்குமில்லை.— நான்வெகுவேதனை
க்குமீனத்துக்குமுள்ளானேன். என்னிரு
தயத்தின்கலாய்ப்பினுற் புலம்புகிறேன்.
— என்னுண்டவரே! என்னுசைகளெல்
லா முமக்குத்தெரிந்திருக்கிறது. என்பிர
லாப முமக்கு மறைந்திருக்கவில்லை.— எ
ன்னிருதயங்கலங்கி எனது சத்துவமென்
னைக் கைவிடுகிறது. என்கண்ணொளிவுமங்
கி நீங்கிப்போகிறது.— என்னைச் சேர்ந்
தார் ஸ்நேகிதரும் என்மேலெதிர்த்துநெ
ருங்கி விரோதமாக நின்றார்கள்.— என்ன
ருகிலிருந்தவர்கள்கலப்போனர்கள். என்

னுயிர்பறிக்கவெண்ணினவர்க ளெனக்கு வெகு கொடுமைபண்ணினூர்கள்.— எனக் குப் பொல்லாங்குதேடினவர்க ளென் னேடு வீண்வார்த்தைபேசி நாள்முழுது மென்னை மோசம்போக்கும் விதத்தை யோசித்தார்கள்.— நானேவென்றால் கா துகேளாதவனுய்ச் செவிடனைப் போலு ம் பேசவாய்திறவாத ஊமையைப்போ லுமிருந்தேன்.— நான் கேட்கச்செவியி ல்லாதவனும் மறுத்துச்சொல்ல நாவில் லாதவனுமானேன்.— சுவாமீ யும்மைந ம்பியிருக்கிறேன். என்சர்வேசுராசுவாமீ யென்மன்ருட்டைக்கேட்டருளுவீர்.—எ ன்கால்தடுமாறும்போ தென்மேலிடும்பு பேசினவென்சத்துருக்களின்னமென்னை க்கொண்டுமனமகிழாதபடி யும்மைக்கே ட்டுக்கொண்டேன். — ஆகிலும்நான்த ண்டனைப்பட வாய்த்தமா யிருக்கிறேன். என்சஞ்சல மெந்நேரமு மென்முன்பா கநிற்கிறது.— ஏனெனில் என்னக்கிரமங் களைச் சொல்லிக்காட்டுவேன். என்பாவங் களை நினைத்துச் சிந்தைப்படுவேன்.— ஆ

ஞ வென் சத்துருக்க ளுயிரோடிருந் தெ ன்னிலும் பலமானுர்கள். நியாயமில்லா தென்னைப் பகைக்கிறவர்கள் பலுகிப் போனார்கள். — நான்ன்மையைப்பின்செ ன்றதால் நன்மைக்குவதிற் றின்மைசெய் கிறவர்க ளென்னைத் தூற்றுகிறார்கள். — எ ன் சர்வேசுராசுவாமீ! என்னைக் கைவிடா தேயும், என்னைவிட்டகலாதேயும். — என க்கு இரக்ஷணியமாயிருக்கிற சர்வேசுராசு வாமீ! தீவிரத்தில்வந்தெனக்குதவிசெய்த ருளும்.                பிதாவுக்கும்....

## சு-வது.-௫ம்.-சங்கீதம்.

தாவீதனென்கிறவர் தமதுகண்முன்பாகவெப்பொ ழுதுமிருக்கிற தமமுடையபாவங்களைக்குறித்துச் சர் வேசுரனைநோக்கிப் பிரலாபித்ததும் பாவத்தில்நின் று அதிகசதிகமாய்த் தம்மைப்பரிசுத்தமாக்கித் தம க்குவரப்பிரசாதங்களையும் புதிதான இருதயத்தையு ங் கொடுத்தருளவேணுமென்று சர்வேசுரனை மன ருடினதும் தாழ்ச்சியுமனஸதாபமுமுள்ள இருதய மே சர்வேசுரனுக்குப் பிரியபலியென்கிறதுமாகப் பா டியிருக்கின்றது.

சர்வேசுராசுவாமீ யுமது தயையின்விசா லத்துக்குச்சரியானபடி யென்மேல் விரக் கமாயிரும். — உமதிரக்கப்பெருக்கத்து

க்கொத்தபடி என்னக்கிரமங்களை நிர்மூ
லமாக்கும். — இன்னமதிகமா யென்குற்
றங்களினின் றென்னைக்கழுவி யென்பாவ
ங்களினின் றென்னைவிடுவித்துப் பரிசுத்
தப்படுத்தும். — நானே யெனது அக்கி
ரமங்களை யறிந்திருக்கிறேன். என்பாவ
மெந்நேரமு மென்கண்முன்னே நிற்கி
ன்றது. — உமக்குமாத்திரமே குற்றஞ்
செய்தேன். உம்முடைய சந்நிதிக்குமுன்
னே தீங்குபுரிந்தேன். நீருமதுவாக்குத்த
த்தத்திற் பிரமாணிக்கரா யிருக்கிறீரொன்
றும் உமதுதீர்வையிலே நீதிபரனாயிருக்
கிறீரொன்றும் விளங்கும்படி யென்குற்
றங்களைப் பொறுத்தருளும். — நானே
வென்று லக்கிரமத்திற் சன்மித்தேன்.
என்றாயார்பாவத்தி லென்னைக் கருப்பந்த
ரித்தாள். — நீர் சத்தியத்தைநேசித்து உ
மதுபரம ஞானத்தின்மறைவுள்ள இர
கசியங்களை யெனக்குவிளங்கப் பண்ணி
னீர்: — நீர் ஈசொப்பென்கிறபுல்லினா லெ
ன்மேற்றெளித்தருளுவீர், நானுஞ் சுத்த
மாவேன். நீரென்னைக்கழுவுவீர், வெண்ப

ணிக்கட்டியிலுந் தூய்மையாவேன்.—என்செவிகளுக்கின்பத்தையுஞ் சந்தோஷத்தையுந் தந்தருளுவீர். தளர்ந்துபோனவென்னெலும்புகள் திடன்கொண்டெழும்பியக்களிக்கும்.— என்பாவங்களைப்பாராமலுமது முகத்தைத் திருப்பிக்கொண்டு என்னக்கிரமங்களையெல்லாம்போக்கியருளும்.— சர்வேசுராவென்னிடத்திற்சுத்தமானவிருதயத்தையுண்டாக்கி என்னுள்ளத்தில்நீதிமுறைமையுள்ள புத்தியைப்புதுப்பித்தருளும். —உமதுசந்நிதியினின்றென்னைத்தள்ளாதேயும். உம்முடைய இஸ்பிரீத்துசாந்துவை யென்னிடத்தினின்று மறுபடிவாங்கிக்கொள்ளாதேயும். —உமது இரக்ஷணியத்தி னாநந்தத்தைமறுபடியெனக்குத்தந்தருளும்,உமதுமேலானஞானத்தாலென்னையுறுதிப்படுத்தும்.—அநீதருக்குமதுமார்க்கத்தைப்போதிப்பேன், துஷ்டருமும்மிடத்திற் றிரும்புவார்கள்.—சர்வேசுரா! என்னிரட்சகரான சர்வேசுரா!இரத்தப்பழிகளினின் றென்னை மீட்டுவிடுதலாக்கியருளும். அப்போ

தென்னுவானது உமதுநீதியைப் புகழ்ந் தேற்றும். — ஆண்டவரோ யென்னிதழ்க ளைத் திறந்தருளும். என்வா யும்முடைய தோத்திரங்களைக்கூறும்.— ஆண்டவரோயு மக்குப் பலிவேண்டியிருந்தால் மெய்யா கவேபலிகொடுப்பேன். ஆனுற் சர்வாங்க தகனப்பலிகளுமக்குப் பிரியமாயிருக்கிற தில்லை. — துக்கப்படுகிறவுள்ளமேயாண் டவருக்குப்பிரியமானபலி. மனஸ்தாபத் திலுலேநொறுங்கித் தாழ்ச்சியுள்ளவிரு தயத்தைப் பிறக்கணிக்க மாட்டீரேசுவா மீ. — ஆண்டவரோ யுமது நன்மைத்தன் மையில் சியோனென்றபறுவதத்தின்மே ற் கிருபையாயிரும். செருசலேமென்கி றபட்டணத்தின் மதில்க ளெடுக்கப்படத் தயைசெய்தருளும்.—அப்பொழுது நீதி யின்பலியும்சர்வாங்கதகனப்பலியுங்காணி க்கைகளுமுமக்கேற்கையாகும், அப்பொ ழுதேயுமதுபீடத்தின்மேல்நவசுகாரியப லிகளைக்கொடுப்பார்கள். பிதாவுக். . . .

## ௫-வது.-௱௨ம். சங்கீதம்.

இந்தச்சங்கீதம் திர்ககதரிசியாகிய தாவீதனென்கி றவனைப்போலே அவரவர் தங்கள் தங்கள் பாவத்தின்

மேல்மனஸ்தாபப்பட்டுப் பாவத்திருச்சினையாகிய துன்பங்களிற் சர்வேசுரனைமன்றாடுவதற்கு மகாவுதவியுமாய்த் திருச்சபைக்கு மகாவுச்சிதமான செபமுமாய்ப்பாடியிருக்கின்றது:

ஆண்டவரே! என்மன்றாட்டைக்கேட்டருளும். என்னபயசத்தமுமது சந்நிதிமட்டும்வரக்கடவது. — எனக்குமது திருமுகத்தைத் திருப்பிக்கொள்ளாதேயும். நான்றுன்பப்படு மெந்தெந்தநாளிலு மென்வேண்டுதலுக்குக் காதுசாய்த்துக்கொடுத்தருளும். — நானெந்தெந்தநாளிலும்மைமன்றாடினாலுமென்மன்றாட்டைத் தீவிரமாய்க்கேட்டருளும். — ஏனெனில் எனனுடைய நாட்கள் புகைபோல்மறைந்துபோயிற்று, என்னெலும்புகள் அடுப்பின்விறகைப்போலேவறண்டுபோயிற்று — என்னாகாரத்தைப் பொசிக்கமறந்துவிட்டதனாலென்னிருதயங்காய்ந்து வெய்யிலிலடிபட்ட புல்லைப்போலுலர்ந்தேன். — என்பிரலாபப் பெருமூச்சின் பேரொலியாலெனது தோலோ டென்னஸ்திகளொட்டிப்போயிற்று. — வனாந்தரத்திற்றனித்திருக்கும் * பெலிக்கான்போலவு

ந் தனிவனத்திற்றங்கின ஆந்தைபோலவு மானேன். — கண்ணுறக்கமற்றேன், தனிப்பட்டுக் கூரைமேற்குந்தின குருவிபோலானேன். — என்சத்துருக்களென்னை நாள்முழுதுந் தூஷணம்பண்ணுகிறார்கள், என்னைப்புகழ்ந்தவர்க ளெனக்கெதிராய்ச் சபதங்கூறுகிறார்கள். — அதேதெனன்றால் நான்சாப்பாடாகச் சாம்பலையருந்தித் தண்ணீரோடென்கண்ணீரைப் பானம்பண்ணினேன். — உமது சினத்தையுங் கோபாக்கினியையும்பற்றி யிவ்விதஞ்செய்தேன், ஏனென்றால் நீரென்னையுயர்த்திப் பின்புகீழேவீழவடித்து நருக்கினீர்:— எனதுடைய நாட்கள் நிழலைப்போல்சாய்ந்துபோயிற்று. நானோ புல்லுப்போலுலர்ந்தேன் — ஆனாலாண்டவரே! நீர் சதாகாலங்களுமிருக்கினறவர், உமது திருநாமத்தின் ஸ்மரணமோவெனில் அநவாதகாலமு நிலைத்துநிற்கும். சீயோனென்றமாநகருக்குக் கிருபைபுரியுங்காலம்வந்து நேரிட்டமையால் தேவரீரொழுந்தருளியதன்மேலிரக்கஞ்செய்தருளுவீர். — அதேதெ

ன்றுலும்முடைய அடியாரந்தநகரத்திற்ற
கர்ந்தகல்லுக்களின்மேற்பிரிதியாகியதன்
மண்ணின்மேலுமிரக்கமாயினுர்கள். — ஆ
ண்டவரே! சமஸ்தசனங்களுமும துதிருநா
மத்துக்குஞ்சகலமண்டலேசுரருமும தும
ர்ச்சியமகிமைக்கும்ஞ்சுவார்கள். — அதே
னெனில் சியோனென்றநகரத்தை யாண்
டவர்கட்டுவித்துத் தமதுமகிமைப்பிரதா
பத்திற் காணப்படுவார். — அவர் தாழ்ச்சி
யுள்ளவர்களுடைய வேண்டுதலுக்குத்திரு
ம்பிச்செவிதந்ததல்லாமல் அவர்களுடை
யமனருட்டைப்பிறக்கணித்ததில்லை. — இ
னிவருஞ்சந்ததிக் கிதுக வெழுதப்பட்டி
ருக்கட்டும், இனிமேலுண்டாகுஞ்சனம்ஆ
ண்டவனைஸ்துதிக்கும். — ஏனெனறுல் ஆ
ண்டவர் தமது அர்ச்சியசிஷ்டஸ்தலத்தி னு
ந்நதத்தி லிருந்துதிருக்கண் ணேக்கினுர்.
— விலங்கிற்கிடக்கிறவர்களுடைய பிரலா
பத்தைக்கேட்கவுங் கொலையுண்டுபோனவ
ர்களுடையபிள்ளைகளைக் கட்டவிழ்த்துவிடு
விக்கவும் — இப்படி விடுதலானவர்கள் ச
னங்களு மிராசாக்களும் ஆண் டவருக்குத்
திருப்பணிபுரியக் கூடும்பொழுது — இ

யோனபட்டணத்திலாண்டவருடையதிரு நாமத்தைக்கொண்டாடிச் செருசலேநக ரிலவருடைய திருப்புகழைப்பாராட்டத் தக்கதாகவும் பரலோகத்தினின்று பூலோ கத்தைப்பார்த்தருளினார். — அடியான்ற ன் சத்துவத்தினமத்தியிலவருக்குச்சொன் ன து என்னுயுசினுடையசொற்பத்தையெ னக்குக்காட்டியருளும். — என்னுயுசு நடு விலென்னையழைத்துக்கொள்ளாதேயும். உம்முடையவருஷங்கள் தலைமுறைதலைமு றையாகநிற்கிறது. —சுவாமீ! தேவரீர்தா மே ஆதியிலே பூமண்டலத்துக் கஸ்திவா ரமிட்டீர். வானமண்டலங்க ளுமதுகைத் தொழிலாமே.—இதுகள் சிதைந்துபோ ம், நீரோ நிரந்தரமிருக்கிறவராமே. — உடுத்த உடைபோலிவையெல்லாம்பழசா யிப்போம். ஆடைமாற்றுகிறதுபோலத் தேவரீரதுகளை மாற்றுவீர், அதுகளுமா றுபட்டுப்போம்.— நீரோவெனிலெக்கா லமு மொரேசீராயிருக்கிறவர். உம்மு டைய வருஷங்கமொழிவதில்லை. — உம் முடைய அடியார்களினபிள்ளைகளுமோ

டுவாசஞ்செய்வார்கள். அவர்களுடைய சந்ததியுமென்றென்று நன்னெறியில்நடத்தப்படுவதாமே. பிதாவுக்கும்....

சா-வது. - ாஉகூ. சங்கீதம்.

பாவப்பொறுத்தலடையச் சர்வேசுரனை மன்றாடவேண்டிய வருக்கத்தின்மாதிரிகையாகப் பாடியிருக்கின்றது.

சுவாமீ! பாதாளத்தினின்றும்மைநோக்கிக்கூப்பிடுகிறேன், சுவாமீ யெனசத்தத்தைக்கேட்டருளும்.— எனதுவிண்ணப்பத்தினபேரொலியை யுமதுசெவிதந்து கேட்டருளும்.— ஆண்டவரே! நீரொங்கள்பாவங்களைப்பாராட்டுவீராகில் உமக்குமுனபாக நிருவாகம்பண்ணுகிறவனார்—ஆனல் தேவரீரிடத்திற் றயாளமான மனனிப்பிருக்கிறபடியாலும் உமது வேதமுறைமையைப்பற்றியுஞ் சுவாமீ யும்மைநம்பிக் காத்திருக்கிறேன.—எனனுத்துமம் ஆண்டவருடைய திருவசனத்தினயே ஞானறிக்காத்திருக்கிறது, எனனுத்துமம் ஆண்டவரிடத்தி னம்பிக்கைவைத்திருக்கிறது.—உதயசாமகாவல் நேரந்துவக்கி யிரவுபரியந்தம் இசராயேல்சனம்

ஆண்டவனை நம்பிக் காத்திருக்கக்கடவது.—ஏனெனறால் சுவாமி தயையுள்ளவர் அவரிடத்தில் இரட்சணிய மேமாாளமாயிருக்கின்றது.—அவரே இஸ்ராயேல்சனத்தை யதின சகலபாவங்களினின றிரட்சித்தருளுவார். பிதாவுக்கும்....

ஏ-வது.-ாசஉ௪. சங்கீதம்.

தீர்க்கதரிசியாகிய தாவீதனென்கிறவர் தாம்படுகிற வுபத்திரவங்களிற் றேவகிருபையையிரந்து கேட்டுச் சர்வேசுரன் றமது நீதியினுக்கிரத்துக்கொத்தவண்ண நடப்பியாமல் தயையோடுநடப்பித்தருளவேணுமென்று சர்வேசுரனைமனறாடிப் பாடியிருக்கின்றார்.

சுவாமீ யென்வேண்டுதலைக் கேட்டருளும். உமதுசத்தியத்தின்படி யென்விண்ணப்பத்துக்குக்காதுகொடுத்தருளும்.—உமதுநீதியின்படி யென்மன்றாட்டையேற்றுக்கொள்ளும்.குற்றம்பாராட்டியுமமுடைய அடியானைத் தீர்வையிடப் பிரவேசியாதேயும். ஏனெனில் சீவனுள்ளவரிலெவனுமுமக்குமுன்பாகப்பரிசுத்தனாகத்தோன்றமாட்டான்.— என்சத்துராதி யென்னாத்துமத்தை யுபத்திரவப்படுத்தி யென்னுயிரைவதைத்துப் பூமியிற்சிறு

யைபடுத்தினான். — முற்காலத்தில் மாண்டுபோனவர்களைப்போலென் சத்துரு வென்னை யிருட்டிற் குடிகொண்டிருக்கச்செய்தான். என்னைக் குறித்து என் புத்தி அலமந்து துக்கத்தமிழ்ந்தி என்னிருதயங்கலங்கிப்போயிற்று. — நான் பூர்வகாலங்களை நினைத்து உமது செயலெல்லாம்யோசித்தெண்ணினேன், உம்முடைய திருக்கரங்களின் செய்கைகளின்மேற் றியானம்பண்ணினேன். — உம்மைநோக்கி யென்கைகளைவிரித்தேனே. நீரில்லா நிலம்போலெனதாத்துமம்வறண்டும்மைத்தாவுகிறது. — ஆண்டவரேயெனதாவி சோர்ந்துபோகின்றது. என்வேண்டுதலைத் தீவிரமாய்க் கேட்டருளும். — உமது திருவதனத்தைத் திருப்பிக்கொள்ளாதேயும் திருப்பிக்கொள்வீராகிற் குழியிலிறங்கிப்போகிறவர்களுக்குச் சமானமாவேனே. — நானும்மை நம்பியிருக்கினறமையால் அதிகாலமே நானுமது தயைமொழியைக் கேட்கச்செய்தருளும். — எனதாத்துமமும்மைநோக்கியெழுந்தபடியால் நான்

டக்கவேண்டியவழியை யெனக்குப்படி ப்பித்தருளும். — நானும்மைத்தஞ்சமெ னறோடிவந்ததினு லெனசத்துருக்களிட த்தினின றெனனைத்தற்காத்தருளும். தேவரீ ரென்றேவனுகையில் நானுமதுசித்த த்தினபடியே செல்லக்கற்பித்தருளும்.— உம்முடைய நல்ல இஸ்பிரீத்தானவரென னை நனமார்க்கத்திலேநடப்பிப்பாராக. சு வாமீயுமதுதிருநாமத்தின கீர்த்தியைக்கு றித் துமதுநீதிக்கொத்தபடியெனனைச்சீ விக்கச் செய்வீராக.— உபத்திரவத்திலே நின றெனனுத்துமத்தை விடுதலாக்கியு மதுதயவினுலெனசத்துருக்களைச் சங்கரி த்துப்போடுவீராக. — நானும்முடைய அடியானுதலா லெனனுத்துமத்தை யுபா திக்கிறவர்களெல்லாரையு நிர்மூலம்பண் ணியருளும்.     பிதாவுக்கும். . . .

சுவாமீ யெங்கள்பாவங்களையு மெங்க ளையீனறவர்களுடைய பாவங்களையும் ஸ மரணம்பண்ணுமேதயும். எங்கள்பாவங்க ளுக்காகப் பழிவாங்கத்திருவுள மாகாதே யும்.



# தேவமாதா வாராதனையும் மோக்ஷ வாசிகள் வணக்கமுந்தெளிவிக்கிற விளக்கம்.



வானோர்க்கரசியா யெவ்வுலகனைத்தும்விளங்கினகுருங்கதிர்வீசுந்தயையுள்ளபரமதேவதாயையும்ஆண்டவருக்குகந்தவர்களா யநந்தபரமாநந்தமோக்ஷ பேரின்பத்தை யடைந்துவாழாநிற்குஞ் சகலவர்ச்சியசிஷடர்களையும் வணங்கிநமக்காக வாண்டவரைவேண்டிக்கொள்ள மனறுடுவதைப்பதிதரார்காதென்பார்கள். ஆகிலு மவர்களைமறுப்பதெளிதாம. இதிலே தெளிவாய் நடக்கும்படிக்குத் திருச்சபை தேவமாதாவுக்குச்செய்யு மாராதனையையு மோக்ஷவாசிகளுக்குப்புரியும் வணக்கமு மேதென்று விளக்கக்கடவோம்.

ஆகையால் மனிதரையிரட்சிக்கும்படிக்குச் சர்வேசுரன்றுமே மனுஷாவதாரம்பண்ணக் கனனிமுத்திரைகெடாமற் றமக்குத்தாயாக-அர்ச்.-மரியாயைத் தெரிந்துகொண்டாரென்றுந் தேவதாயென்கிற பரமபட்டத்தையு மவளிடத்தில்விளங்கிய வுந்நதமான புண்ணியங்களையும்பற்றி யெவ்வுலகிற்கு மிராக்கினியாகஸதாபித்தாரென்றும்றிந்து திருச்சபை சர்வேசுரனுக்குப்பின்பு சகலமோக்ஷவாசிகளுக்குஞ் சம்மனசுகளுக்கு மேலாகவுயர்ந்தவளென் றெண்ணித் தேவாராதனைநீக்கி யுத்தமாராதனையாலே பரிசுத்தகன்னியுமாய்த் தேவமாதாவுமாய் நிகரொன்றின்றி விளங்கினபரமநாயகியான அர்ச்-மரியாயியை வணங்கவும் அந்த அமலோற்பவியை இருண்டவக்கியானத்திலொளிவும் பகைத்தபசாசினமேல்வெற்றியும் அடைந்த துன்பத்திலாதரவுமவந்தநோய்க்காரோகியமும அழுவார்க்காறுதலும மெலிந்தார்க்குறுதியும் கல்லா

ர்ச்சுணர்ச்சியும எல்லார்க்குங் கிருபைதயாபமுள் ளதாயுமாகவெண்ணி மன்றுடவும; தேவமாதாவாரா தனையின்முறைமையாமே. நோயுள்ளகண் ஒளிமிகு தியைப் பொறுக்கமாட்டாததுபோல இவ்வுத்தமவ கையாராதனையாகாதென்றும நாமெல்லோருமயோ ர்க்களமாகிய பூவுலகிற் பசாசோடு யுத்தஞ்செய்து கொண்டுவருகையில் மேற்படையென்னு மோக்ஷவா சிகள் நமக்குதவியாகநின்று லெளிதாய்ச்செயங்கொ ண்டு கரையேறுவோமென் றந்தவுதவி நமக்கில்லாத படி மோக்ஷவாசிகளைவணங்குவ தக்கியானமென்று ஞ்சொல்லிப் பரமபரையாய்த் திருச்சபையிற்சந்தே கமொன்றின்றி வழங்கின்முறைமையின் தகுதியைச் சிலர்மறுதலித்து நியாயத்தையுணராம ல்வர்களில் லாதவர்த்தமாகப்புரட்டின சிலவேதவுதாரணங்களை ஆயுதமாகக்கொண்டு அவ்வணக்கமாகாதென் றெப் பிக்கவருவார்கள்.

## ௩-வது. தேவமாதாவாராதனை ஸ்தாபித்துப்பதிதரைமறுக்கு நியாயங்களாவன.

ஆறாற் பதிதர்களெறிந்தவாயுதங்களைக் கொண்ட வர்களைத்தானே வென்றதன்மையா யந்தவேதவசன ங்களையேகொண்டும் அதுகளுக்கேற்றபலவேதவாக்கியங் களைக்கொண்டுந் தேவமாதாவினாராதனையுமற்றமோ க்ஷவாசிகளது வணக்கமும் விளங்கவொப்பிப்போம. அப்பொழுது சூரியனைக்கண்ட இருள் நீங்கிப்போவ துபோல உங்களைத்தொடர்ந்த சந்தேகங்களாகிய அந்தகாரங்களொழிந்து சாதாரணமான சுகிர்தவே தமுறைமைவழுவாத வுண்மையாகியவொளி விளங்க க்காண்பீர்கள். அதெத்தன்மையோவெனில்,

அர்ச்.- லூக்காஸ் எழுதினசுவிசேஷம் - ௧ - அதி. ௨.௭.-வசனத்துவக்கில் நமமுடையகர்த்தரானசேசுநா

தர் விரிவாயருளிச்செய்த வுத்தமவுணர்ச்சிக்ளைமகிழ்ந்துகேட்டொருத்தி மனதிற்பூரித்தவின்பமுள்ளடக்கமாட்டாமற் பேரொலியாககக்கூப்பிட்டுச் சுவாமியை நோககி யுமமைச்சுமந்தவுதரமு நீரமுதுண்டகொங்கைகளுமபாககியமபெற்றதுகளாமேயெனறாள். அதற்குச் சேசுநாதரிதிலுஞ் சர்வேசுரன திருவசனங்களைககேட்டொத்துநடந்தவர்களேபாககியமபெற்றவர்களெனறார். ஆகையாற்றமமைப்பெற்றதாயைப் புகழ்ந்தவார்த்தையை மறுத்துச்சேசுநாதர் தேவமாதாவினாதனையாகாதெனறு சொனனாற்போலாயிற்றெனபார்கள். ஆனாற்றமமைப்பெற்றதாயைப் புகழ்ந்தவார்த்தையை மறுத்தாரெனகிறதற் கிவ்வளவேசமிடமில்லை. ஏனெனில்திலேயு மிதுதாவிளையெனறபோதுமுன்சொன்னதைமறுத்தவகைேயோ? அல்ல. அதையொத்துககொண் டாண்டிலும பின்சொனனத்திகமெனபதர்த்தமாகும. சந்திரனொளியினுஞ் சூரியனொளிபெரிதெனறு விதனாற்சந்திரனுககொளியில்லையெனபதாமோ? இலலையே. ஆகையால நமமைச்சுமந்தவுதரமு நாமபாலுண்டகொங்கையும புகழப்படுவதுநியாயந்தானே. ஆகிலுந் தேவவாககியங்களைககேட்டுவழுவாமல் நடந்தவரைப்புகழவது அதிலேயு நல்லதெனறு சேசுநாதர் திருவுளமபற்றினாற்போலாயிற்று. மீளவும சேசுநாதர் தமமை யீனறதாயைப்பார்ககத் தேவவசனங்களைககேட்டு நனனெறிவழுவாத மற்றவர்களை யுயர்த்தினாரெனறு நினைககவுமவேண்டாம். இதுவெளியாகுமபடிக கோருவமைசொல்லிககாட்டுவோம. ஆயுதமினறி நினறவொருவன தனபகைவர் தனனை வெட்டவருவதைககண்டவளவில்ருகேநினற கோட்டையினுழைய வோடிப்போகாமல ஐயோ பகைவர்கையில்கப்படாமற் பறவைகளாகாயத்திற் பறககுமவிசையைப்பார்த்து அதுகளைப்பா

டிக

ககியமுள்ளதுகளெனறான. அதனைககேட்டு மதிவல்
லோனொருவன விசையோடாகாயத்திறபறககும பற
வையிலும நீயோடிககோட்டையிலுழைந் துனனு
யிரைககாத்தால் நீயேபாககியமுள்ளவனெனறான. எ
னறாலும பறவைபறககுமவிசையினு மிவனோடுமோ
ட்டத்தையுயர்த்தினனெனனலாமோ? இலலையே. அவ
னசொனனதற் காத்தமேதெனில் பறவைபறககும
விசை யதிகந்தானே யாகிலு மதினு லுனககாவதென
ன? நீபறககககூடாமையால் அதிலுமுனககுககாலோ
ட்டமேநல்லதெனபதாமே. அவ்வண்ணமே சேசுநா
தர் முனசொனனதற்கர்த்தமேதெனில நம்மைப்பெ
ற்றதா யடைந்தபாககிய நிகரொனறில்லாததுதா
னே. ஆகிலும வானமேல்வாழுஞ் சமமனசுகளுககுமு
தலா யெட்டாதபாககியமாகையில் நீயதைப்புகழந்
தாசைப்படுவதெனன? பசாசுசெய்யுமபகையில்கப்
படாதபடிககுத் தேவதிருவாககியங்களைக கேட்கவு
ம்தினபடியே நடககவும வேண்டியிருககையில் முன
சொனனதிலேயு மிதுவேயுனககுவேண்டிய பாககிய
மெனபதே சேசுநாதர் முனறிருவுளமபற்றினதற்கர்
த்தமாகும.

இதுவுமனறி யத்திருவசனத்தைககொண்டு சேசு
நாதரவர்ககுஞ் சொனனவுணர்ச்சியாவது: ஆண்ட
வர் கட்டளையிட்ட நியாயத்தைககேளாமலு மவர்கா
ட்டினநெறியில் நடவாமலுந் தம்மைப்பெற்றபரிசுத்
தகனனியாகிய தேவமாதாவைவணங்கினாலு மதனா
ற்பலனொனறில்லையெனறுகாட்டினார். இதுவெளியா
குமபடிககு அர்ச்.-லூக்காஸ் எழுதினசுவிசேஷத்தி
ற் றனே-௨௩ - அதி. ௨௮-ம. வசனத்திற் சேசுநாதர்
எனககிரங்கியழவேண்டா முங்களையு முங்கள்மககளை
யுமபார்த்து நொந்தழககடவீர்களெனறார். ஆகை
யாற் சேசுநாதர் நம்மையிரட்சிககுமபடி யளவிறந்த

தயைபொருந்திப் பாடுபட்டகஸதிநோவுகளைத் தியானித்து மனமிரங்கிககண்ணீரைவிட்டழுவதாகாதோ? மதிகெட்டவனாயினு மாகாதென்று சொல்லமாட்டான். ஆகையா லதற்கர்த்தமேதெனில் ஒருவன்றான் செய்த பாவங்களை நினைத்து மனஸதாபப்படாமலும் துகளைவெறுத்துநொந் தழாமலும் பாவத்துக்காகப் பாடுபட்டகர்த்தர்மேலிரங்கியழுதாற்பலனில்லாதவிரககயாமென்பதர்த்தமாகும். அவ்வண்ணமே முன்சொன்னவுதாரணத்திலும் ஆண்டவர்சொன்ன புத்திகளைக்கேளாதவனுங் கேட்டுநடவாதவனு மவருடையதிருத்தாயைப் பாக்கியமுள்ளவளென்று புகழ்ந்ததனாற் பலனொன்றில்லை யென்பதர்த்தமாமே.

மீளவுங் கானாவென்னுமூரி லொருகலியாணத்தில் நடுவிருந்திலே முந்திரிகைப்பழத்தி னிரசமில்லாததையறிந்த தயாபரியாகிய-அர்ச்.-தேவமாதா தந்திருக்குமாரனைநோக்கியிரசமில்லையென்றாள். அதற்குச் சேசுநாதர் ஸதிரீயேயுமக்குமெனக்குங்காரியமென்ன நமமுடையகாலமின்னம் வந்ததில்லையென்றார். என்றாலுமவர்மனதையறிந்தமாதா ஏவல்செய்தோரைப் பார்த்துஇவர்சொலலுமபடிசெய்கவென்றாள். சேசுநாதரு மங்கேயிருந்த வாறுசாடிகளினிறையத் தண்ணீரையூற்றச்சொன்னபடி யூற்றினபின்பு அதிலேயெடுத்துவார்த்துக்குடித்தவிடத்திலுத்தமஇரசமாகக்கண் டதிசயப்பட்டார்களென்று - அர்ச் -அருளப்பர் உ - அதிகாரத்தி லெழுதிவைத்தார். ஆகையாற் சேசுநாத ருமககுமெனக்குங் காரியமென்னவென்று மாதாவுக்குச்சொன்னபொழுது மாதாவையெண்ணாமல் மாதா நமக்காகமன்றாட நாட்வேண்டிக்கொள்ளத்தேவையில்லையென்றாற்போ லாயிற்றென்று பதிதர்சொல்வார்கள். ஆனாற் சேசுநாதர்செய்த புதுமை யதுக்குப் பிரத்தியுத்தரமாமே. அதெப்படியெனிற் சேசு

நாதர் தாம் புதுமைசெய்யுங்கால மின்னம்வரவில்லை யென்றுசொல்லியிருந்தபோதிலுந்தம்முடையதிருமாதாவின் மன்றாட்டைத்தள்ளமாட்டாம லவள்கேட்டவற்புதத்தை யுடனேசெய்தருளினார். புதுமையானது சுபாவமுறையைக் கடந்தசெய்கையாகையால் அதனைமுடிக்க வளவிறந்த பலம் வேண்டியதொழிய வதனைச்செய்யத்துணிவதற்கு மிகுந்ததயையேவேண்டியிருக்கிறது. ஆகையிற் சொன்னகலியாணத்திற் சம்பவித்தபுதுமைசெய்யச் சேசுநாதருக்களவிறந்த வலலமையிருந்தாலு மின்னந் தமதுகாலம்வரவிலலை யென்றதனா லதனைச் செய்யத்துணிவதற்குக் குறித்த தமதுதயையினேர மில்லாதிருந்ததாம். இலலாதாயினுந் தேவமாதா தயை முந்தினதினா லவள்தயையைக்கொண்டுதுணிந்து தமதுபலங்கொண்டுபுதுமையைமுடித்தார். மீளவு மிதற்குமுந்தி அர்ச்.-எலிசபேத்தம்மாள்வீட்டிலே சேசுநாதர் தேவமாதாவைக் கொண்டு புதுமைசெய்ததுமல்லாமல் அதனைப்பற்றி இஸபிரித்துசாந்துவினாலேவப்பட்ட அர்ச்.-எலிசபேத்தம்மாள்கமகிழந்துனன தலைதுதிவாழத்துதலைத்தம்முடைய திருத்தாயாருககேசெலுத்தும்படி செய்தருளினார். மீளவும்-அர்ச்.-அருளப்பனொழுதினபடியந்தக் கலியாணத்திற்புரிந்த வம்முந்தின புதுமையைத்தேவமாதாவையுத்தேசித்துத்திருக்குமாரன்முடித்தமுறைமையினாலே நம்மைப்படிப்பித்ததாவது: உயிருடலிரண்டும்பிழைக்கவேண்டினயாவையுந் தப்பாதடைவதற் காசையுடையீராகில் என்னைக்கன்னிகெடாம லீன்றதேவதாயையண்டி யவளைவேண்டக்கடவீர்களாக. அவளுங்கள் வேண்டுதலைக் கேட்டிரங்கினளாகி லவளிரக்கத்தைமறுக்கமாட்டாமல் நானும புதுமைவேண்டினுட் புதுமையேசெய் துங்களை யிரட்சிப்பேனென்றதாயிற்றென்று சலஞ்சாதியாமற் சொன்னதை

யாராய்ந்த யாவர்க்குந்தோன்றுமென்பதற் கையமி
ல்லை. மீளவு மத்தரவாயிலே சேசுநாதர் தாயேயென
னாமல் ஸதிரீயேஉமக்குமெனக்குங்காரியமென்னவென்
றதிலே வேறொருதிவ்வியசூழ்ச்சியுண்டென் றறியக்கட
வீர்கள். அதேதெனிற் கண்ணுக்குத்தோன்றின மனு
ஷத்துவமன்றித் தமக்குத்தேவத்துவமுண்டென் றெ
ல்லாரு மநுசரிக்கவேண்டியிருக்கையிற் புதிதாய்க்கூ
ட்டினசிஷாச்சருக் கதனையொப்பிக்கச் சேசுநாதர்
நீயெனக்குத் தாயாகித்தந்த மனுஷ சுபாவத்தைக்
கொண் டிப்புதுமைசெய்யக்கூடாமையால் நீயிதிலே
யெனக்குத்தாயல்லவென்றாற்போலத் தாயேயென்னா
மல் ஸதிரீயேயென்றார். பின்புமனுஷசுபாவத்தைத் த
மக்குத்தந்ததேவதாய்மேற் றாம்வைத்தபக்ஷத்தைக்
காட்ட அவள்வார்த்தையைமறுக்கமாட்டாமற் சொ
ன்னபடித்தேவசுபாவத்தைக்கொண் டப்புதுமையை
ச்செய்தார். உமக்குமெனக்குங்காரியமென்னவென்ற
ருளிச்செய்ததற் கர்த்தமேதெனில் பிறர்செய்யுங்க
லியாணத்தி விரசமில்லாதிருந்தாலு மதெனக்குங்கா
ரியமல்ல. உமக்குங்காரியமல்லவென்று காண்பித்தா
ர். காண்பித்தாலு மவர்களைப்பற்றி நமக் கதிலேகா
ரியமில்லாதாயினும நீர்மன்றாடினதனாற்புதுமைசெ
ய்வேனென்றாற்போலச்செய்தார். ஆகையாலிந்தவர்
த்தமானத்தை நன்றாய்ப்பார்க்கில், சேசுநாதர்புறச்
சமயத்தார்சொன்னபடித் தேவமாதாவார்த்தையை
த்தள்ளவுமில்லை தேவதாயாருக்காராதனை விலக்கவு
மில்லை. தேவதாயுடையவேண்டுதலை யுடனேகேட்டுச்
செய்தபுதுமையாற் றேவதாயையண்டி நாமெல்லா
ருமன்றாடிவணங்கவேண்டுமென்று டிப்பித்தாரென்
பது நிச்சயமாமே.

## உ-வது.

## மோக்ஷவாசிகளின் வணக்கத்தைஸ்தாபித்துப் பதிதரை மறுக்கிற நியாயங்களாவன.

ரு-வது. மோயீசன்-ரு-ஆகமம்-௬-அதி ௰௩-ம்.வசனத்திலெழுதினதாவது: உனகர்த்தாவாகிய சர்வேசுரனை வணங்கி யவரொருவருக்கே யூழியஞ்செய்வாயாகவெனருர். ஆகையால் ஆண்டவரையொழிய மற்றமோக்ஷவாசிகளை வணங்கிவேண்டுவது ஆண்டவருக்குச்சங்கைகேடாகுமெனறு புறச்சமயத்தார் பிதற்றுவார்கள். ஆனல் - சர்வேசுரனுக்கல்லாதே மற்றொருவருக் கெவ்வகை வணக்கமு மூழியமுஞ்செய்யலாகாதெனறு நினைத்தார்களோ? பிதாமாதாமுதலிய பெரியோரைவணங்கக் கற்பிக்கும் நாலாங்கற்பனையையும்-ஆச்.-சினனப்பர் திமோத்தே யெனபவருக்கெழுதிய முதல்-நிரு. ௬-அதி. ௧. உ-வசனங்களையுமறந்தார்களோ? பினனும் ஆச்.-சினனப்பர் கொலோசெஞ்சியருக்கு-௩-அதி. உ - ௩- வசனங்களிலு மினனம்பலவிடத்திலுங் கற்பித்தபிரகாரம் உயிரோடிருக்கிறவர்களை வேண்டுமபடியனருடுவது ஆண்டவருக்குச்சங்கைகேடாகாமல்வேதத்தில்வழங்கின முறைமையாவானேன? முனசொனன வேதவாக்கியத்திலே சர்வேசுரனையொழிய மற்றவரைத் தேவராக வணங்கவுஞ்சேவிக்கவும் வேண்டாமெனபதாமே. நாமோவெனில் நமக்காகச் சுவாமியை வேண்டிக்கொள்ளும்படித் தேவமாதாவையு மற்றமோக்ஷவாசிகளையும் வணங்கிமனருடும்பொழுது அவர்களைத்தேவராக வெண்ணவுமில்லைச் சர்வேசுரனைப்போலே மன்றுடவுமில்லை.

உ-வது. ஆச். - சினனப்பர் திமோத்தே முதல - திரு-உ-அதி. ரு - வசனத்தில் - சேசுநாதரொருவரோ ஆண்டவருக்குமனிதருக்கு நடுவேநிற்பவரொனறார். ஆகையால்-அவரையல்லாதே மற்ற மோக்ஷவாசிகளை வேண்டுவது அவருதவிபற்றுதெனறாற்போலச் சேசுநாதருக்குக் குறையாகுமெனபார்கள். ஆகிலும் ஆச். சினனபபர் நடுநிற்பவரொனறவுடனே யதறகு நியாயத்தைக்காட்டி அவரே சகலபேரீடேற்றத்துக்காகத் தம்மையொப்புக்கொடுத்தவரொனறார். ஆகையாலொழுங்குபடத்தமிழ்வசனமாக மனிதர்யாவரையு மிரட்சிக்குமபடிக்குச் சேசுகிறீஸதொருவரோ தாந்தமமைப் பலியாகத் தந்ததினு லவரொருவரோ யாண்டவரோடே மனிதருறவாகுமபடிக்கு நடுவேநிற்பவரொனறர்த்தமாகும். அப்படிமோக்ஷவாசிகள் நடுநினறிரட்சித்தவர்களெனறு சொல்லவுங்கருதவுங்கூடாது. ஆகிலுஞ் சேசுநாதர்பாடுபட்டபலனைப் பெறுமபடிக்கு மோக்ஷவாசிகளும பூவுலகில்வாழுமகாத்துமாக்களு நமககாகவேண்டிக்கொள்ள நாமனறுடினால் சேசுநாதருக்குப்புகழ்ச்சியாகுமொழியககுறையாகுமெனறு நல்லறிவுடையோர் நினைக்கவுமாட்டார்கள். சர்வேசுரனுக்குமனிதருக்கு மத்தியஸதரானவர் சேசுநாதரொருவரோயெனறெழுதிய ஆச். - சினனப்பர் தாமேதமமுடை "சீஷாக்களினமனறுட்டுதவியைத் தமக்காகவே கேட்டுக்கொள்ளவிலலையா?

ரு-வது. ஆச்.-சினனப்பர் எபிரோயருக்கெழுதின திருபத்தில்-சா-ம். அதி. யரு - வசனத்தில நாமவேண்டிக்கொள்ளுமபொழுது ஆண்டவர்சந்நிதியிலே முழுநமபிக்கையோடே சேரக்கடவோமெனறு ராகையில் ஆண்டவரையொழிய மோக்ஷவாசிகளைப் புறச்சவிகையாகத் தேடிவேண்டுவது ஆண்டவர்மே லவநமபிக்கையாகி யாகாதவணக்கமாமெனபார்கள். ஆனு

ல் யோபாகமத்து-௪௨- அதி - ௮ - வசனத்தில்-ஆண்டவர் தாமே யோபெனபவர்ஸநேகிதருக்குத் திருவுளமபறறினதாவது: நம்மூழியனுகிய யோபெனபவன்வண்ணடைக்குப்போய்ப்பூசைசெய்யுங்கள், நம்மூழியனுகிய யோபெனபவ னுங்களுககாக நமமை வேண்டிக்கொள்ளவவனமுகத்தைதப்பார்த்துநீங்கள்மதிகேடாகச்செய்தகுற்றத்தைப்பொறுப்போமெனறுர். இதுவுமனறியித்தொகைப்பட்டவாச்கியங்களுமவர்த்தமானங்களுமவேதப்புஸதகங்களிலெங்கு மட்டினறிக்காணப்படுமே. ஆகையால் நமக்காகப் பிறரைவேண்டிக்கொள்ளச்சொல்வது பதிதர்சொனனபடி அளவிறந்ததயையுள்ள நாதர்மேல்வ நமபிக்கைகாட்டினதாகில் ஆண்டவர் தாமே பிறருக்காகச் சிலமக்காத்துமாக்களை வேண்டிக்கொள்ளச்சொல்லுவானேன ? பிறருககாகச்செய்தவேண்டுதலைத் தாமேகேட்பானேன ? ஒவ்வொருவ ரொவ்வொருவருக்காக வேண்டிக்கொள்ளுமபடிககுத் தேவவாககியத்திற கறபிககப்பட்டிருப்பானேன்.

௬-வது. மோக்ஷவாசிகள் நமககுவந்த இடையூறுகளையறியவுமில்லை நாமவர்களுக்குச் செய்தவேண்டுதலைக கேட்கவுமிலலையென்று பதிதர்சாதிப்பாகள். அரசர்மூனறுமாகமத்து-௮-அதி- ௩௯-வசனத்திற சகலமனிதருணாவினை யாணடவரொருவரே யறிந்தாரொனறதாகையில் மோக்ஷவாசிகளு மறிவாரகளெனறல வேதத்தொவ்வாத வக்கியானமெனபாகள். ஆகிலு மனிதருணர்வினை யியறகையாலறிந்தவர் சர்வேசுரனொருவர்தாமே. அவர் தாந்தந்தகாட்சியாற செயறகையறிவிஞேடே மோட்சவாசிகளும எமமுணாவினையறிந்திருககிறாகளெனறுற குறைவெனன ? அப்படித்தானலலோ தீர்ககதரிசிகளெலலாரும வருவதையும் அகனறதையு மற்றவர் மனதிலொளித்ததையும வெளியாகச் சொனஞாகள். பூவுலகிலாணடவர்

தம் மனபருக இவ்வகைககாட்சியைத் தந்தது நிச்சயமாககொள்ள மோக்ஷத்திலுத்தமவிதமாய்த் தமமோடொனறுபடவாழும ஸ்நேகிதருககுக கொடுககமாட்டாரோ? மோக்ஷத்திறசெனறு பேரினபதரிசனத்தையடைந்தயாவருஞ் சர்வேசுரனைக குறையொனறினறி யெககாலமுமபிரத்தியக்ஷமாய்க கணடுவாழாநிற்பார்கள். தெளிந்தகணணாடியைப் பார்த்தவனதிலே தனமுகத்தைதக காணபதொழிய வககணணாடியடுத்தயாவையுங் காணபான. அவ்வணணமே அளவிறந்ததெளிவுள்ள ஞானககணணாடியாகிய தேவசுபாவத்தைதமறைவினறிப் பிரத்தியக்ஷமாய் மோக்ஷவாசிகளெல்லாருங் கணடவளவில ஆணடவர்சுபாவமா யறிந்தயாவையு மவர்களு மதிலே காணபார்களெனறு சொலலத்தகுஞ்சத்தியமாமே. ஆச். - அருளப்பர் காட்சியாகமம-௫-அதி. ௮-வசனத்தில இருபத்துநாலு கிழவராகிய வககாலத்துள்ள மோக்ஷவாசிகளுமறறச்சமமனசுகளும் ஆணடவர்சமுகத்துவிழுந்து பொறபாத்திரத்திற தூம்புகைகாட்டின பாவனையாயப் பூவுலகிலிருந்தநலலோர் செய்தவேணடுதலைககாட்டி மனறுடினதாக வெழுதியிருககிறதாமே. அனறியுமிதறகடுத்தவே தவுதாரணங்கள்த்தாட்சியாமே.

மோக்ஷவாசிகள் தங்கள் வேணடுதலினாலே நமககு தவிபுரிகிறாகள். ஆச். - லூககாஸ - ௰௬ - அதி. ௯ - முதல - கொரிந்தியர். ௰௩ - அதி. ௮ - அர்ச். - அருளப்பர் காட்சியாகமம-௫ - அதி. ௮ - நமககுமோக்ஷவாசிகளோடு சமபந்தமிருககிறது, எபிரேயர். ௰௨ - அதி. ௨௨ - ௨௩ - மனுககுலங்களினமேல மோக்ஷவாசிகளுக கதிகாரமுணடு. அர்ச். - அருளப்பர்காட்சி -௨- அதி. ௨௬- -௨௭ ௫-அதி. ௰ - மோக்ஷவாசிகள். சமமனசுகளுககுச் சமாதானமா யிருககிறார்கள் அர்ச். -மத்தேயுஸ-௨௨ - அதி. ௩௰ - அர்ச். - லூககாஸ-௨௰-அதி.

௩௬-மோக்ஷவாசிகள் நமக்குள் நடக்கின்றதை யறிகி றார்கள். அர்ச்.-லூக்காஸ- ௰௫-அதி. ௰ முதல கொரி ந்தியர்- ௰௩-அதி. ௰௨. அர்ச்.-அருளப்பர் முதல-திரு பம ௩-அதி. ௨. விரிவுக்கஞ்சாவிடி விப்படிநூறுநூறு யுதாரணத்தரலாம்.

தேவவிஷய பத்திமுதலான சுகுணாதிசயங்களாற சி றந்துவிளங்கித் திரிபுவனசிஷ்டிதிதிசங்காரமெனனுமு த்தொழிலுடைக்கடவுளைத் தேர்ந்து கனாகாணுதவி சாலம்பொருந்திய கர்த்தாவினது நனமைக் கடலின மூழ்கிக்களித்துப் பூரித்தவினபமபெருகியதனாற கட வுளைப்புகழ்ந்து மதுரமான கவிமாரிபொழிந்து ஸது திபாடப்பட்ட நாவலர்கள்முதலாய் ஞானாதிநறகு ணங்கள் செறிந்த தங்கள் ஸதுதியேபோதுமெனறெ ணணுமல வானமே பூமியே சூரியனே சந்திரனே ஆ ணடவனை ஸதுதியுங்களெனறு ஞானமற்றதுகளுமா ய்க் கடவுளையறிய ஏணியுமாயிருக்கிற சகல சராசர ங்களையும்பறறிப் பிறிதுனை யலங்காரத்தாற கடவு ளைஸதுதிக்கும்பொழுது நாடிநாடியிருக்கிற பேரின ப தரிசனத்தை நமக்குமுனனடைந்து சதாகாலஞ் சுவாமியை ஸதுதிக்கின்ற முத்தர்களான பரலோக வாசிகளைக்கொணடுஞ் சர்வேசுரனைஸதுதித்து வே ணடுகிறதினாற குறையெனன ? இதனாலவர்களைக் கட வுளெனறேமோ ? சாமாசிகளைக்கொணடு அரசனை வேண்டுந் தனமைதானும்லவோ ! புறச்சமயத்தார் தங்கள்வேணடுதலுக்கு மேலில்லையெனறேசகலமோ க்ஷவாசிகளைப்பிறக்கணிக்கிறுகர்ள். அவர்கள்சறறுமி தை யுறறுணராததெனனோ ? மீளவுமிந்த விஷயத்தி லே யறியவேணடின மிகுதியான நியாயங்களை வேதவி ளக்கம் - ௩-ச - ௫ - அதிகாரங்களிலும் -ச-எ-௬-பே தகமறுத்தலினும வேதப்புரட்டலைநீக்குஞ்சஞ்சீவி - ௩-ம், காணடம் - ௨-௩-௰. அதிகாரங்களிலுங்காணக.





வியாகுல நிறைந்த தாயே! உம்முடைய திருக்குமார
ன்பட்ட நிர்ப்பந்தப்பாடுகளே ஏழுவாளாயுமது திருவி
ருதயத்தை யூடுருவ நிகரில்லாத துக்க துயரத்தோடுவி
ம்மித் திரளான கண்ணீர்விட்டழுதிரோ! இதைக்கண்டு
அடியேன் மனமிளகிக் கர்த்தர்பாடுகளுக்கும உமது
வியாகுலத்துக்குங் காரணமாகிய என்பாவங்களின்
மேல் மெய்யான மனஸ்தாபப்பட்டழுது பொறுத்த
லையு மீடேற்றத்தையு மடையும்படிக்கு எனக்காக
வேண்டிக்கொள்ளும.

# வியாகுலமாதாவின்
## செபம்.



கன்னியுந்தாயுமான பரிசுத்த மரியாயே! நித்தியபிதாவினேககுதனுமுமமுடையமெய்யானகுமாரனுமான சேசுகிறீஸ்துநாதர் மனுஷி ரிரக்ஷணியத்துக்காக மனுஷாவதாரமெடுத்து மனுஷரில்நேகரா லறியப்படாமலுஞ் சிலராற் பிறக்கணிக்கவு மிகழவும்பட்டு மாட்டுக்கொட்டிலிலே மிருகயந்திரத்திற்பிறந்து வைக்கோலின்மீதிற்படுத்துக் காற்றும்பனியும்வீசப் போர்த்துக்கொள்ள வஸ்திரமில்லாமல் விறைத்தழுகிறதையும் பாவத்தைப்போக்கவந்தவர் பாவியின்வேஷங்கொண்டுவிருத்தச்சேதனத்தி லிரத்தஞ்சிந்துகிறதையும் நீர்நோக்கினபொழுதும் அவருடைய விரக்ஷணியப்பலனையநேகமாயிரம்பேரடையாம லவனைக் கொடுமையாயுபாதிப்பார்களென்று சிமோனென்ற

மகாத்துமாவானவர் சொல்லக் கேட்ட பொழுதும் பரலோகவிராசாவான வ்வ வைக்கொல்ல நினைத்தபாதகனான ஏரோதெஸென்கிறவரசனுக்கஞ்சிப் பரதேசத்தி லெடுத்துக்கொண்டு போம்பொழுதும் பன்னிரண்டுவயதுள்ள அவரைக்காணமை ல் மூன்றுநாள் தேடி யலைந்தபொழுதும் தேவநீதிக்குப் பரிகாரமாகத் தாம்படப் போகிறபாடுகளை யுமக்கறிவித்தபொழு துந் தோஷித்துரோகத்துக்கஞ்சாதகொ டியநெஞ்சுள்ளசேவக ரவரைச் சொல்வி லடங்காத வுபத்திரவப்படுத்திச் சிலுவை யில்லறைகிறபொழுதும் சிலுவைவிட்டிற க்கின திருச்சரீரத்தை யுமதுமடியில்வை த்திருந்தபொழுதும் அந்தத்திருச்சரீர த்தைக் கல்லறையிலடக்கி நீர் தனித்திரு ந்தபொழுதும் இப்படிப்பலபலசமயங்க ளிலுமுமதிருதயத்தை யூடுருவிப்பாய்ந்த வெண்ணிலடங்காத வியாகுலங்களிலேழு வியாகுலத்தைத் தியானித்து உம்மோடு ருகியழுது அடியேனுமது வியாகுலத்தி ன்பங்கடையும்படிக்கு வேண்டிக்கொள்

ள வேணுமென் றும்மைமிகவுமிரந்து ம
ன் றாடிக்கொள்ளுகிறேன்.

௺ - வியாகுலம்.

வியாகுலத்துக் காலயமான பரிசுத்த மரியாயே! உம்மால் மிகவும் ஸ்நேகிக்கப் பட்ட வுமமுடையதிருக்குமாரன் தம்மைத் தாமேபலியாக வொப்புக்கொடுத்துலகத் தைமீட்டிரட்சிக்கக் குறிக்கப்பட்ட கால மடுத்துவருகையிலும்மைவிடைகேட்டனு ப்புவித்துக்கொள்ளும்பொழுது உம்மை ப்பார்த்துத் தயாபநிறைந்ததாயே! நாம் பாடுபடத்தக்ககாலங்கிட்டிவந்தது நமமு டையசிஷீர்களிலொருவனான யூதாசென்ப வன் நம்மைக் காட்டிக்கொடுக்கக் கைக்கூ விபேசிக்கொண்டான், பாரயோனடிமை த்தனத்திநின் றுமீட்டிரட்சித்துச் செல்வ நாட்டிற்சேர்த்து அற்புதமாயாதரித்துக் கொண்டுவந்தநமதுசொந்தச் சனமுமெ ண்ணில்லாதவற்புதங்களால் நம்மிடத்தி லாரோக்கியமுதலிய வுபகாரங்களைப்பெ ற்றபிரசைகளு நாஞ்செய்தநன்றி யெல் லாமறந்து நம்மைப்பகைத்து நமதுயி

ளைப்பறிக்கவொருமிக்கிறூர்கள், நம்மை
க்கட்டியிறுக்கக் கயிறுஞ் சங்கிலியு மூட்
டியடித் தநியாயம்பண்ண முட்பிரம்பு
சாட்டை முதலானகொடிய வெத்தனங்
களு நமதுசிரசிலழுத்தி யாகடியம்ப
ண்ண மூண்முடியுங் கையிற்கொடுக்கக்கு
றுங்கோலு முடலிலணியப் பீற்றற்சகலாத்
து முயிளைப்பறிக்கச்சிலுவையும் ஆணியு
மூலகத்திற் கொரேமாயிருக்கிறதெல்லா
மு நம்மைவாதைப்படுத்த வவர்களுடைய
குரூரத்துக்குக்கருவிகளாகும், நிஷ்ரேமா
ய் நம்மைக்கொலைசெய்ய விப்போதுதா
னேவாயத்தம்பண்ணுகிறூர்கள், அவர்கள்
செய்யுங் கொடுமையால் நமதுசரீரத்தி
லுள்ள விரத்தமெல்லாஞ்சிந்தி மாம்ஸ
மெல்லாந்தெறித்துவிழுந்து எலும்புக
ளெல்லாந்தெக்குவிட்டு வேறுபட்டு வேற்
றுருவாயுமமுடையபிள்ளையென்கிறவடை
யாளங்காணக்கூடாதிருக்கும், உயிருமிரு
தயமுமொன்றுயிருந்த நாமிருவருமொ
ருவனைவிட் டொருவர்பிரியவும் நாம் வா
தைப்படவும் நீர்மனமுருகவும் நாம்படு

ம்பாடுகளையெல்லா நீர்மனதில நுபவிக்க
வும் உமதுவியாகுலத்தைக்கண்டு நாமன
நொந்துருகவும் நாமரிக்கவும் நீருயிரோ
டிருந்தும் வியாகுலமென்கிறவாளா லூ
டுருவப்படவுந் தேவதிருவுளமாகையால்
நம்முடையபிதாவின்சித்தத்தின்படியாக
ட்டுமென்றுதைரியமாயிந்தநிர்ப்பந்தமெ
ல்லாந் தேவதோத்திரத்துக்காகவு மனித
ரீடேற்றத்துக்காகவு மநுபவிப்பீராகவெ
ன்றுசெல்வி யும்முடைய திருக்குமாரனு
ம்மையனுபவித்துக் கொள்ளும்பொழு
து உமதுசரீரமுழுதுந் துக்கமிகுதியா
லக்கினிமயமாய்ப்பற்றி யுமதிருதயஞ்செ
க்கிவிட்ட வெள்ளுப்போல நொறுங்கிப்
பெருமூச்செறிந்து வாய்பேசமாட்டா
மல்நுபவித்த வியாகுலத்தைக்குறித்தும்
முடையதிருக்குமாரனுடைய பாடுகளுக்
குமுமதுவியாகுலத்துக்குங் காரணமான
ஸ்நேகப்பெருக்கத்தையு மென்பாவ அநி
யாயத்தையு மடியேன்கண்டு மனஸ்தாப
மிகுதியா லிரவும்பகலு மிடைவிடா தழு
துகொண்டுவரவும் ஸ்நேகமிகுதியா லுயி

ர்விடவு மெனக்காக வும்முடைய திருக்கு மாரனைவேண்டிக்கொள்ளவேணுமென்று ம்மை மிகவு மன்றாடுகிறேன். ஆமென் சேசு. பர. பிறி திறி.

## ௨ம். - வியாகுலம்.

வியாகுலத்தால்டிபட்டுநொறுங்கினப ரிசுத்தமரியாயே! உம்முடைய நேசமுள் ள திருக்குமாரன்மீதிற் குற்றமில்லையென் றுகண்டாலும் பகைக்காரரான யூதர்களுக் குப்பிரியப்படும்படிப் பிலாத்தனென்கிற துரை மாசில்லாதசேசுவைக்கட்டியடிக்க க்கற்பித்ததினாலே கள்ளர்முதலான நீசரை யடிக்கிறஸ்தலத்தி லவரைக்கொண்டுபோ யவரணிந்திருந்த வஸ்திரத்தைக்கழற்றி நி ர்வஸ்திரமாக்கி யவர்திருக்கைகால்களைத் தூணோடு சேர்த்திறுகக்கட்டிக் கைக்கூலி வாங்கினவாலரும் பலவான்களுமானமுப் பதுசேவகர் முட்பிரம்பு கசைசாட் டை சங்கிலிமுதலான மிருகங்களையடிக் குமெத்தனங்களினாற் றங்கள் சத்துவமெ ல்லாங்கொண் டடிக்கிறதினால் மாசில்லா தசேசுவின் றிருச்சரீரமெல்லாம் பொடி

ப்பொடியாய்த் தெறித்துவிழுந்து திரு
விரத்த மாறும்போலொழுகி வடிகிறதையு
ந் திருவெலும்புகள் வெட்டவெளியாய்க்
காண்கிறதையுங்கண்டு அவர்பட்டவடிக
ளெல்லா முமை திருதயத்திற்பட்டதனு வி
ருதயம்பொடிப்பொடியாய் நொறுங்கி
ப் பிரலாபமிகுதியால் மூர்ச்சையடைந்
து முகம்வெளுத்துத்தலாயில் விழுந்து ச
ற்றுநேரஞ்சென் றெழுந்தபின்பரலோக
விராசாவைப்பார்க்கு மிடத்திவ்வர்பட்டஐ
யாயிரத்துச் சில்வானவடியா லவர் சர்வா
ங்கமும் பிளந் தேககாயமாயிருக்கிறதை
யும் மேன்மேலு மாம்ஸந் தெறித்துவிழு
ந்ததினு லெலும்புதெரிகிறதையும் இரத்
தச்சோரியாலடித்த வெத்தனமுஞ் சேவக
ர்முகமுநனைந்து திரநிலத்திலுறைந்திருக்
கிறதையும் சகல படைப்புண்டவஸ்துக்க
ளுக்கு மாறுதல்தந்தருளுகிறவராறுதலற்
று மூச்சடங்கி மயங்கிக்கற்றானெடுசாய்
ந்திருக்கிறதையும் அவரைக்கட்டவிழ்த்து
விட்டவுடனே யிரத்தஞ்சிந்தின பலவீன
மிகுதியாற் கால்பொறுத்து நிற்கமாட்டா

மற் சிந்தப்பட்டவிரத்தத்திற் குப்புறவி
ழுந்து அத்தனையாயிரஞ்சபைநடுவில் வ
ஸ்திரமில்லாமலிருக்குங் கூச்சத்தாற் றம
துசரீரத்திற்பதிந்த வையாயிரத்துச்சில்
வான காயங்களின் விதனத்தைப்பாராம
ற் கையூன்றிநகர்ந்து தமதுவஸ்திரமிருக்
கிறவிடமட்டும்போய் வஸ்திரத்தையெடு
த்துத்தரித்துக்கொள்ளப் படுகிறபிரயாச
த்தையுந் தரித்தவஸ்திரமிரத்தத்தோடொ
ட்டி யேக விரத்தக்கறையானதையுங் க
ண்டு நீரநுபவித்த வியாகுலப்பெருக்கத்
தைக்குறித்துஸ்நேகத்தாலுருகியிளகாதக
ன்னெஞ்சானவென்னிருதய மனஸ்தாப
மிகுதியாற் றவிடுபொடியாகவும் உம்மு
டைய திருக்குமார னிஷ்டேரமாயடிபடக்
காரணமானவென்சிற்றின்ப சுகங்களைவெ
றுத்துச் சரீரத்தையொறுத்துத் தபசுசெ
ய்யவும் எனக்கநுக்கிரகம் பண்ணியருளவு
ம்முடைய திருக்குமாரனைவேண்டிக்கொ
ள்ளவேணுமென்றும்மை மிகவு மன்றாடுகி
றேன். ஆமென்சேசு. பர. பிரி. திரி.

ஈம்.-வியாகுலம்.

வியாகுலவாளாற்குத்துண்டதாயே! உம்முடையதிருக்குமாரனைச் சிலுவையில் றைந்துகொல்லப் பிலாத்தனென்பவனவனையூதர்களுக்குக் கையளித்தவுடனே செம்மறிப்புருவைமின்மேலோ நாய்கள்விழுகிறுப்போலவர்மேல்விழுந்து அவரைப்பிடித்திழுத்துமுற்றவெளியிற் கொண்டுவந்து சர்வாங்ககாயத்தால் வேறுபட்டுவேற்றுருவாய்நிற்கிற வவரைச் சகலருமின்னுமொன்றுகண்டுபிடித் தவமானப்படுத்தும் படியாய்ப் பரியாசத்துக்கவர்மேற் போட்டிருந்த சிவப்புச்சகலாத்தை யெடுத்துக்கொண் டவரெப்பொழுதுமணிந்திருந்த வஸ்திரத்தைத்தரிப்பித்துச் சிரசிலமுத்தியமுண்முடியை யடித்துப்பலப்படுத்திமூவைந்தடிநீளமாய் மூட்டின சிலுவையைத் திருத்தோளிற்சுமத்திச் செருசலேமென்கிறபட்டணத்துத் தெருவீதியொழுங்காகத் தீர்வைப்பட்டைய மறைந்து அடர்பந்தியாகவே கபாலமலைக்குநடத்திக்கொண்டு போகிறபொழுது சிலு

வையின்சுமை தோளிலழுந்திச் சதைதலைந்து எலும்பிற்பொறுத்துச்சகலலோகத்தையுந் தாங்கிறவ ரென்பாவச்சுமையைத் தாங்கமாட்டாமற் றத்தளித்துக்கால்நடுங்கிப் பூமிமேற் கவிழ்ந்துவிழுந் தெழுந்திருக்கமாட்டாமற் சோபித்திருக்கிறவவரைக் கொடியநெஞ்சுள்ள யூதர்கைகொடுத்துத்தூக்காமற் றங்கள் அசுத்தக்கால்களாலுதைத்து ஈட்டிக்கணைகளால் நெம்பித் தூஷணித்தடித்திழுத்துக் கொண்டுபோகிறதை நீர்கேட்டு அவர்சீவன்விடுமுன் னவரைக்காணவேணுமென்கிற வாசையா லவருக் கெதிராய்ப்போனவிடத்தி விருகள்ளர்நடுவிற் சிலுவையின்பாரத்தாற் கூனிக்குறுவித் தத்தளித்துவிழுந்திருக்கிறதையும் தலையிலழுத்தியமுள்ளுக்கள் நெற்றியிலுருவிப் புறப்பட்டதினு லொழுகிவடியுமிரத்தத்தாற் றிருவர்ணவடிவுமாறித் திருமுகம்வீங்கித்திருத்தாடிமாரோடொட்டித் திருவிழிகள் திறக்கமாட்டாமல் மனுஷிலக்ஷணமற்றுப் போனதையும் பின்னும்வருகிறகொடிய நிர்ப்பந்தவேதனைக

ளேயுங்கண்டு நீரழுதகண்ணீர்மழைத்தாரை போற்பெருகியோட வும்முடையவிருதயம நுபவித்த துயரத்தையும் உமதுவியாகுலத்தைக்கண்ட வும்முடையதிருக்குமாரன்பட்டவிதனத்தையுங்குறித்துநான்தேவகற்பனைகளையெல்லா நுணுக்கமாயநுசரிக்கவும் நானென்கிற சுயவாஞ்சையையடக்கித் தாழ்ச்சியென்கிற புண்ணியத்தை யநுசரிக்கவும் என் சிலுவையாகிற துன்பதுரிதங்களை நல்லமனதுடனேசுமக்கவும் எனக்கநுக்கிரகம் பண்ணியருள உம்முடைய திருக்குமாரனை வேண்டிக்கொள்ளவேணுமென் றும்மைமிகவுமன்றாடுகிறேன். ஆமென்சேசு. பர. பிறி. திறி.

## ௬ம. - வியாகுலம்.

வியாகுலத்தாற்சிலுவையிலறையப்பட்டதாயே! சர்வவல்லவரானவும்முடையதிருக்குமாரன் பூங்காவனத்திற் பட்ட வேதனையால் வேர்த்த விரத்தவெயர்வையாகவவருதிர மிகுதியா யொழுகிவடிந்ததினுலும் நிஷ்டூரேர்கையிற் பிடிபட்டநேரமுதலா யொழிவில்லாமலுபாதிமே லுபா

தி யநுபவித்ததினாலுங் கற்றூணிற்பட் டவடியா லிரத்தமேராளமாய்ச் சிந்திச் சர்வாங்கமுங் காயமானதினாலும் பலவீ னப்பட்டசரீரத்திற் பாரச்சிலுவையைச் சுமத்தினதினா லெலும்புகளெல்லா நெக் குவிட்டு உடல்கூனிக் கால்யர்ந்து நிற்கிற வ்வனை யிரக்கமற்றசேவகர் பட்டணத்து க்குப்புறத்திப்படுத்திக்கபாலமலைக்குத்தீ விரித்திழுத்துக்கொண்டு போகிறதையும் அந்தமலைமேட்டிற் சேர்ந்தவுடனேசிலு வையையிறக்கித் தரையில்வளர்த்தித்தோ லையுரிப்பதுபோலக் காயத்தோடொ ட்டியிருக்கும் வஸ்திரத்தையுரிந்து பர லோகபூலோக பாதாளத்துக்கதிபதி கர்த் தரானவரை நிர்வஸ்திரமாய்ச் சிலுவையி ற்படுக்கவைத்துக் கைகால்களை நீட்டிப் பாரவாணிகளாற்சிலுவையோடு சேர்த்த றைந்தபின் னாணிகளின்முனைமடக்கச் சி லுவையோடவரைக் கவிழ்த்துச் சிலுவை மேலேறிமிதித்துப் பதினாலடிக்கப்பாற் சிலுவையைநாட்ட வெட்டியிருந்த குழி மட்டுங் குப்புறவிழுத்துச் சிலுவையைக்

குழியிற்றள்ளி நாட்டின அதிர்த்தியாற் றி
ருச்சரீரமுழுதுந்திர்ந்று மூடப்பட்டகா
யங்களெல்லாந் திறக்கப்பட்டு இரத்தம்
வெள்ளாறு யோடுகிறதையும் பரலோக
த்துக்கும்பூலோகத்துக்கு முறவுகட்டவ
ந்தவ ரந்தரத்தி லாணிகளிலே தொங்கியி
ருக்கிறதையும் சற்றிளைப்பாறச் சரீரத்தி
ன்பாரத்தைக் கைகால்களிற் றூங்கவேணு
மானாற் கைகால்களினிரத்தத்தாரையு நர
ம்புமறுத் தூடுருவியிருக்குங்காயங்கள் கி
ழிந்து வேதனையதிகரிக்கிறதையும் திருத்
தலையைச்சிலுவையோடு சாய்க்கவேணு
மானால் தலையில்முழுத்திய முள்ளுக்களுருவி
ப்பாய்கிறதையும் இப்படியே யற்பவா
றுதலுமற்று உச்சியுருமத்தி லொருசாம
மட்டு மரணவவஸ்தைப்படுகிறதையும் நீ
ர்பார்க்கும்பொழுது நீரநுபவித்த மனோ
வாக்குக்கெட்டாத வியாகுலத்தைக்குறித்
து நேசவாணிகளால் நானும்மைப்போ
லே உம்முடைய திருக்குமாரனோடு சிலு
வையிலறைபடவும் அவரெனக்காக வநு
பவித்தவேதனைகளின்பங்கு நானடையும்

படி யென்னை நானேயொறுத்து எல்லா த்திலு மென்னிரக்ஷகரைக்கண்டுபாவித்து நடக்கவும் எனக்காகவும்முடைய திருக்கு மாரனை வேண்டிக்கொள்ள வேணுமென் றும்மைமிகவுமன்றாடுகிறேன். ஆமென் சேசு.

பர. பிறி. திறி.

## ரும். -வியாகுலம்.

வேதசாட்சிகளுக் கிராக்கினியான தே வதாயே! நித்தியபிதாவின் வலதுபாரிசத் தில் வீற்றிருக்குந் தேவசுதனாகிய உம்மு டையதிருக்குமாரன் பாவிகள்மேல்வை த்த பக்ஷத்தாற் பாவியின்வேஷங்கொண் டு சபிக்கப்பட்டவரைப்போ லிரண்டுக ள்ளர்நடுவிலே சிலுவையிற் றொங்கியிருக் கையி லநுபவிக்கும்வேதனைமிகுதியா லு டலயர்ந்து கண்விழிகள்புரண்டு நிமைக் குள்ளடங்கி நிலைக்குத்திட் டிருக்கிறதை யும் வாய்திறந்து நாக்கிரத்தவருணமா ய்க்காண்கிறதையும் இரண்டலகுங்கிட்டி யிரண்டுகன்னமுமொட்டிக் கன்றிக்கறுத் திருக்கிறதையும் நாசிநமுவித் திருத்தா டி நெஞ்சிற்படிந்திருக்கிறதையும் திரு

வயிறெக்கி யுள்ளெளுலும்போ டொட்டியி ருக்கிறதையும் தேவபிதாவா லாறுதலற் றுச் சம்மனைகள் மனுஷிருதவிசகாயமில் லாமலொருசாம்மட்டு மரணவவஸ்தைப் படுகிறதையும் உமக்குத்தம்முடைய சிஷ ன்ருளட்பனைக்காண்பித்து இதோ உம்மு டையமகனென்று தேவனுக்குவதில்மனு ஷிஆேயும் ஆண்டவருக்கு வதில்டிமையை யு நித்தியபிதாவினேககதனுக்கு வதில் செபதேயுகுமாரனேயும் உமக்குப்பிள்ளை யாகக் கையளிக்கிறதையும் மனுஷிரக்ஷ ணியத்தின்மே லவருக்குள்ளதாகத் துக்கு ப் பிச்சும் புளித்தமுந்திரிகைப்பழ விரச முங் கொடுக்கிறதையுஞ்சரீரப்பலமுமிரு தயசத்துவமுமற்றுக் கஆேத்துத் தலேசாய் த் தெல்லா முடிந்ததென்று சொல்லுகிற தையும் கடைசியாய்த் தம்முடையபிதா வைப்பார்த்துப் பேரொலியாய்க் கூப்பி ட்டு என்னுத்துமத்தை யுமதுகையிலொ ப்புக்கொடுக்கிறேனென்றுசொல்லித் த லேகவிழ்ந்து கண்பஞ்சிட்டு வாய்திறந்து உம்துயிருக்குயிரான ஏககுத னுயிர்விடுகிற

தையுங் காணும்பொழுது உமது சரீரந்த ணலிலிட்ட மெழுகுபோலுருகிச் சீவன் ற்றபிரேதம்போல்நின்றதாயே! நீரநுப வித்த வியாகுலப்பெருக்கத்தைப் பார்த் து நானுலகத்துக்குச் செத்தவனைப்போ லிருக்கவும் எனக்காகவுயிர்தந்த வென்னு டையசேசுவின் ஸ்நேகத்தாற் சீவிக்கவும ரிக்கவுங் கிருபைசெய்ய உம்முடைய திருக் குமாரனைவேண்டிக்கொள்ளவேணுமென் றும்மைமிகவுமன்றாடுகிறேன். ஆமென் சேசு. பர. பிறி. திறி.

## கூம். - வியாகுலம்.

வியாகுலமிகுதியால் நிர்ச்சீவனாய்நின் றதாயே! சகலருக்குமுயிரளிப்பவருயிரி ழந்ததையும் அடிமைகளுக்காக ஆண்ட வர்மரித்ததையும் பாவிகளுக்காகப் பரிசு த்தர் கொலையுண்டதையும் ஓநாய்களுக் காகச் செம்மறிப்புருவை மாண்டதையு ஞ் சகலபடைப்புண்டவஸ்துக்களு ம்தற் காக வாய்விட்டழுமேனையாய் வானமிரு ண்டு பூமிநடுங்கி மலைகள்பிளந்து கல்லற ைறகள்திறந்து எங்குந் துக்கப்பயங்கரங் காணுமிடத்திற் கல்லினுங் கொடியநெ

ஞ்சுள்ள பாவிகளிருதயமாத்திரங் கலங்கி
யுருகாமலிருக்கிறதையும் உயிரற்றதிருச்
சரீரத்தின்விலாவி லொருவ னீட்டியின்வ
லிமையாற் குத்தித்திறக்கப் பாவிகள்த
ஞ்சமான அவரிருதயந்திறந்து அற்புதவி
தமாய்த் திருவிரத்தமுந் தண்ணீரும்புற
ப்பட் டொருதுளிமுதலா யவருடலில்லை
தங்காம லொழுகிவடிகிறதையும் பார்க்கு
ம்பொழுது உமதிருதயத்தை யுருவிப்பா
ய்ந்த வியாகுலவாட்களைக்குறித்து எனக்
காகத்திறக்கப்பட்ட உம்முடையதிருக்கு
மார னிருதயத்தி லெந்நாளு நான் குடி
கொண்டிருக்கவுந் திறக்கப்பட்ட விலாக்
காயத்தா லிந்தயனவரோடே ஐக்கிய
மாகி யவரிருதயமென்னிடத்திலு மென்
னிருதயம்வரிடத்திலும் வாசம்பண்ணவு
ம் எனதுதுர்ப்பலத்தால்வருகிறபாவக்க
றைகளை யவர்திருவிலாக்காயத்தில் நின்
றொழுகிவடிந்த விரத்தத்தாற் கழுவித்து
டைத்துச்சுத்திகரிக்கவும்எனக்காகவும்மு
டைய திருக்குமாரனைவேண்டிக்கொள்ள
வேணுமென் றும்மை மிகவுமன்றாடுகிறே
ன். ஆமென்சேசு. பர. பிதி. திதி.

## எஎ. - வியாகுலம்.

வியாகுலப்பெருக்கத்தாற் றுக்கசாகரத்திலமிழ்ந்தியிருந்தபரிசுத்ததேவதாயே! உம்மால் மிகவும் ஸ்நேகிக்கப்பட்டவும் முடைய திருக்குமாரனைச் சிலுவையினின்றிறக்கி யுமதுமடியில் வளர்த்தினபொழுது நித்தியபிதாவுக்குப் பிரியமுஞ் சம்மனசுகளுக் காநந்த சந்தோஷமு மோக்ஷவாசிகளுக்குப் பாக்கியமும் பாவிகளுக்குப்பேரின்பவாசையும் வருத்திவிக்குமரூபலாவண்ணியவலங்காரமானவும்முடைய திருக்குமாரன்றிருமுகங்கொட்டக்காரர்சுத்தவுமிழ்நீரா லழுக்கடைந்து அடிகளாற்கன்றி யிரத்தத்தாற்கறுத்து வேஷமாறிவேற்றுருவாகி மனுஷலக்ஷண மற்றிருக்கிறதையும் உயிர்விட்டு உடல்வெளுத்து உறுப்புக்கள் நமுவிக் குளுந்திருக்கிறதையுந் திருச்சரீரமெங்குஞ்சிந்தி யாடினவிரத்தங் காய்ந்து கறுத்திருக்கிறதையுங்கண்டு உமதங்கமெல்லா மக்கினிமயமாய்ப் பற்றியெரிந்து நீரமுதகண்ணீரா லந்தத்திருச்சரீரத்தைக் குளிப்பாட்டி யநுபவித்த வியாகுலதுயரத்தையும் உம்மோடியி

ருமிருதயமுமொன்றாயிருந்த வும்முடை ய திருக்குமாரனுடைய சரீரத்தை யுமது கையினின்றெடுத்துச் சீஷர்க்கள் கல்லறை யிலடக்கினதிறனலே நீர்தனிமையாயிருந்த தூதகண்ணீரையும் விட்டபெருமூச்சையு ம விம்மல்தேம்பலையுங்குறித்து இனிநா னொருகாலும் பாவத்தா லும்முடையதிரு க்குமாரனை மறுபடி சிலுவையிலறைந்து கொலைப்படுத்தாயலிருக்கவும் என்னிரு தய மவனாவதைக்குங் கொடியசிலுவை யாயிராம லவருக்குப்பிரியபீடமா யிருக்க வுமெனக்காகப்பலியான சேசுவின் ஸ்நேக கத்துக்கு நானும்பலியாகவும் உம்முடை ய திருக்குமாரனாகியவவரை வேண்டிக்கொ ள்ள வேணுமென் றும்மை மிகவு மன்றாடு கிறேன். ஆமென்சேசு. பர. பிறி. திறி.

மூ. சேசுகிறீஸ்து கொடுப்போமென்று திருவுளம்பற்றின நன்மைகளை நாங்க ள் பெறுகிறதற்குப் பாத்திரவான்க ளாகத்தக்கதாக.

து. வேதசாட்சிகளுக்கிராக்கினியானதே வதாயே யெங்களுக்காக வேண்டிக் கொள்ளும்.

கடைசிவேண்டுதல. *

பிரார்த்திக்கக் கடவோம்

மட்டில்லாத தயைசுரூபியாயிருக்கிற நித்தியசர்வேசுரா! உமக்கு மிகவும் பிரியமுள்ள திருக்குமாரன்பட்ட மனோவாக்குக்கெட்டாத கொடியவேதனைகளுக்கும் அவருடையவேதனையைக்கண்டு அவர் திருத்தாயார் நுபவித்த சொல்லிலடங்காத வியாகுலத்துக்கும் எங்கள்பாவங் காரணமாகையால் அடியோர்கள் பாவத்தின் கோரத்தைக்கண் டஞ்சி நடுங்கிமனஸ்தாபப்படவும், இனியொருநாளும் பாவத்தைச்செய்யாதிருக்க உறுதியான பிரதிக்கினைபண்ணி, முன் செய்தபாவங்களுக்குத் தபசுபண்ணவும், எங்கள்மேலுமக்குள்ள மட்டில்லாதசினேகத்தைக்கண்டு எங்களாலானமட்டு மும்மை யிவ்வுலகத்தில் பழுதறச்சினேகித்தபின் நித்தியத்திலிடைவிடாமற் சினேகித்துவரவும், உமதுசினேகஞ் சகலமனிதரிருதயத்திலும்,பற்றி

---

* இதையடிககடியந்திரூந்திச்செபம் பூசைமுதலிய சமயங்களில் விசேஷமாய்ச்சொலவதுத்தமம்.

யெரியவும், அக்கியானங்குறையவும், சத்தியவேதம்பரம்பவும், சத்தியவிராசாக்கள் தங்களுக்குள்ளே சமாதானமாயிருக்கவும், பதிதர் துர்மதங்களொழியவும், திருச்சபைவிட்டுப் பிரிந்தவர்கள் திரும்ப வதிற்பிரவேசிக்கவும், அர்ச்சியசிஷ்டபாப்பு நினைத்த தர்மகாரியங்கள் செயமாகவும், பஞ்சம்படைநோய் பெருவாரிக்காய்ச்சல் நீங்கவும், உத்தரிப்பு ஸ்தலத்தில் வேதனைப்படுகிற ஆத்துமங்கள்வதிகுறையவும், நாளாருக்காகவேண்டிக்கொள்ள வேணுமென்று தேவரீர் திருவுளமாயிருக்கிறீரோ அவர்களெல்லாருமுமது தயவினிடத்தில் விசேஷநன்மையைக் கைக்கொள்ளவும், உம்முடையதிருக்குமாரனெங்களுக்காகச் சிந்தினவிலைமதியாத திருவிரத்தத்தையும், அவர் திருத்தாயார் பட்ட சொல்லிலடங்காத வியாகுலத்தையுஞ் சிலுவையின்பேறடைந்த அர்ச்சியசிஷ்டர்களுடைய வேண்டுதலையுங்குறித்து, அடியோர்கள்கேட்கிற மன்றாட்டுக்கிரங்கிக் கிருபைசெய்தருளவேணுமென்று தேவ

நீணையிரந்து மன்றாடிக்கொள்ளுகிறோம். ஆமென்சேசு.

சர்வேசுரனுடைய அர்ச்.மாதாவே...

மற்றதும்.............. ௭௰௫-ம்.பக்கங்காண்க.

இடைவிடாமல் ஸ்துதிக்கப்பட யோக்கியமுமாய் மிகுந்தமதுரமுள்ள பூசிதமுமாயிருக்கிற பரமதிவ்விய நற்கருணைக்கே அநவரதகாலமு முடியாதவாராதனையும் ஸ்துதியுந் தோத்திரமுமுண்டாகக்கடவது. சென்மப்பாவமில்லாமற்செனிமித்து, எப்போதும் பரிசுத்தகன்னியாஸ்திரீயுமாய் நம்முடைய வாண்டவளுமாய்க் கொண்டாடப்பட்டவளுமா யிருக்கிற அர்ச்.-தேவமாதாவினுடைய அமலோற்பவத்துக்குத் தோத்திரமுண்டாகக்கடவது. தேவப்பிரசாதத்தின்தாயே! இரக்கத்துக்குமாதாவே! அர்ச்.-மரியாயே! எங்கள் மாற்றானுடைய சோதனையிலேயு மரணநேரத்திலேயு மும்முடைய திருக்குமாரனைவேண்டி, எங்களைக்காக்கவும் ஆளவுங் கைக்கொண்டுநடத்தவும்வேணுமென் றுமது திருப்பாதமுத்திசெய் தும்மைமன்றாடுகிறோம். ஆமென்சேசு.

# வியாகுலமாதாவைக் குறித்துப்பாடல்.



இதைப்பத்தியுடனே செபிக்கிறவர்களுக்கு ஞரு நாட்பலனுண்டு:

வியாகுலநிறைந்த தேவமாதா தம்முடையதிவ்வியகுமாரன்றையுண்டுதொங்கிறசிலுவையடியிலே துக்கசாகரத்தில்மிழ்ந்தினவளா யழுகையோடேநிற்கின்றாள்.

வியாகுலமென்கிறவா ளிவளுடைய ஆத்துமத்தை யூடுருவ வாக்குக்கெட்டாத துக்கப்பட்டுப் பெருமூச்சுவிட்டு விம்மியேங்குகின்றாள்.

தம்முடைய எக திவ்வியசுதன மரிக்கவிரக்கநிறைந்தபரிசுத்தமாதா சொல்லிலடங்காத கஸ்தியையுந் துயரத்தையு மடைகிறாள்.

ஆராதனைக்குரிய தம்முடைய திவ்வியகுமாரன்படுகிற கொடூரநிர்ப்பந்தங்களைக் காண்கிறதினுற் பிரலாபித்தழுதுநொந்து நடுநடுங்குகிறாள்.

கிறீஸ்துநாதரி னன்புக்குரியதாயா ரி த்தனைவியாகுல கஸ்திநிர்ப்பந்தத் துயர த்திலமிழ்ந்தி யிருக்கிறதைக்காண்கையில் ழாதிருப்பவரார்?

தம்முடைய திவ்வியசுதனோடே துன் பப்பட்டுப் பரதபிக்கிற வுருக்கமுள்ள மாதாவை யெவனாகிலு மனமிளகித்துக்கி யாமற் பார்ககக்கூடுமோ?

தமதுசனத்தினுடைய பாவங்களினிமி த்தந் தம்முடைய மாசற்ற அன்புக்குரிய சேசு எண்ணில்லாவடிகளால் நொறுங்கி க் கொடியவாதைகளை யநுபவிக்கிறதை ப்பார்த் துருகின்றாள்.

தம்முடையநேசகுமாரன் மரண அவ ஸ்தையாய்த்தவித்து எவராலுங் கைவிட ப்பட்டு அவமானநிர்ப்பந்தத்தில் உயிர்வி டுகிறதையுநோக்கிப் பரதபிக்கிறாள்.

தாயசினேகத்தி னூறணியாகியமாதா வே! நானுமோடு கண்ணீர்விட் டழும்ப டியாக உமதுவியாகுலத்தின் கடினத்தை அடியேன் அநுபவித்துணரக் கிருபை செய்தருளும்.

உமக்குநேசகுமாரனுஞ் சர்வத்துக்கு ந் தேவனுமாகிய சேசுகிறீஸ்துநாதருக் கு நான்பிரியப்படத்தக்கதாக என்னிருத யம்வரைப்பற்றித் தேவசினேகத்தினகக் னியா லெரியச்செய்யும்.

பரிசுத்தமாதாவே! அடியேனுக்காகம ன்ருடிச் சிலுவையில்லறையுண்ட நாதரின் திருக்காயங்களை யென்னிருதயத்தி லுறு தியாய்ப்பதிப்பித்தருளும்.

என்னையிரட்சிப்பதற்காகக் கிருபையா ல்எண்ணில்லாக்காயமும்வமானமும் நிர்ப் பந்தமும்பட்ட உம்முடைய நேசகுமார ன்கஸ்திப்பீடைகளுக் கென்னைப்பங்காளி யாகச்செய்யும்.

அவர்சிலுவையில் நுபவித்த நோக்காடு களைப்பற்றி உம்முடனே உண்மையான உருக்கத்திலுவிளகி என்னுயி ரிருக்குந்த னையும் அழுது மனஸ்தாபப்படச்செய்த ருளடம்.

சிலுவையின்டியில் நிலைநின்று உம்மு டனேபரதபித்தழ மிகவும்விரும்பிக் கே ட்கிறேன்.

கன்னியாஸ்திரீகளுக்குள்ளே யுத்தம கன்னிகையே! என்மன்றாட்டுக்கிரங்கி உம் மோடமுழுதுவியாகுலப்படும் வரத்தை எனக்குக்கட்டளையும்.

அடியேன் கிறீஸ்துநாதருடைய பாடுகளுக்குப் பங்காளியாகி அவருடையமரணத்தின்சாயலைத் தரித்து அவருடைய திருக்காயங்களையும் அவமான மரணத்தையும் என்றும் நினைக்கத் தயைபுரியும்.

உம்முடைய நேசகுமாரன் சிநேகத்தைப்பற்றி அவருடையகாயங்களாற் காயம்பட்டு அவருடைய பீடை நிர்ப்பந்தமாகிய பாத்திரத்திற் பானம் பண்ணிச் சிலுவையின்கனியால் பூரிப்பையடையப் பண்ணும்.

பரிசுத்த கன்னிகையே! அடியேன் தேவசிநேகத்தி னக்கினியிலேயெரிந்து சுடராகித் தீர்வைநாளி லும்மாலாதரிக்கப்பட்டு ஈடேற்றத்தை யடைவேனாக.

அடியேனுக்குச் சேசுகிறீஸ்துநாதருடைய திருச்சிலுவை யடைக்கலமாகவும்

அவருடையமரண மிரட்சிப்பாகவுமவரு டைய இஷ்டப்பிரசாத முறுதியாகவு மிருக்கக்கடவது.

தயாபநிறைந்ததாயே! என்னுடலைவிட்டுப்பிரியும்வேளையில் என்னாத்துமத்துக்குப் பரகதியான ஆநந்தபாக்கியமை கிடைக்கும்படியாகக் கிருபைசெய்தருளும். ஆமென் சேசு.

மு.— நாங்கள் சேசுகிறீஸ்துவின் வாக்குத்தத்தங்களுக்குப் பாத்திரவான்களாகத்தக்கதாக.

து. — மிகவும் வியாகுலமுள்ள கன்னிகையே யெங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

பிரார்த்திக்கக்கடவோம்.

எங்கள் தேவனும் இரட்சகருமாகிய சேசுவே! சிமியோனென்கிற பரிசுத்தமூத்தோன் தீர்க்கதரிசனமாய் வசனித்தபடியே தேவரீர்பாடுபட்டநேரத்திலும் முடைய நேசமுள்ளமாதாவும் பரிசுத்த கன்னியுமாகிய அர்ச். - மரியம்மாளின் திரு ஆத்துமம் வியாகுலமென்கிற வாளி

௰௨

னால் உளடுருவப்பட்டதை நினைத்தருளுஞ் சுவாமீ! தேவரீர் ரத்திருத்தாயாரின் வியாகுலத்தையும் பீடையையும் பத்திவணக்கத்துடன் கொண்டாடுகிற அடியோர்களெல்லாரும் அவளுடைய பரமபேறுகளினாலும் உமது திருச்சிலுவையின் பாதையில் சுமுத்திரையாய் நிலைபெற்ற சமஸ்த அர்ச்சியசிஷ்டர்களின் மன்றாட்டுக்களினாலுந் தேவரீருடைய அவமானப்பாடு மரணத்தினா லுண்டாகிய பாக்கியமான பலன்களையடையவும் சதாகாலமுந் தேவரீரைத் தரிசித்துக்களிகூர்ந்திருக்கவும் எங்களுக்குப் பிரசந்நராய்த் தயைசெய்தருளும். ஆமென் சேசு.



# அடைக்கல மாலை.

## வீரமாமுனிவர்பாடல்.

### வெண்பா. - காப்பு.

உடைக்கலமாயீன்றிப்பா லுற்றலகைவெல்லும்
படைக்கலமாமெவ்வரமும்பற்றி - யடைக்கலமா
வன்னையேயுன்றாட் கடைக்கலமா மாலையைக்கொண்
டென்னையேகாத்தலியல - - - - - - - - - - - பு.

### உலா.



மூவுலகுமேத்து முழுமுதலோனருட்பணிந்து
தேவுலகுமேற்றுந்திருக்கன்னி-பூவுலகு [க.
மேற்றித்துயர்க்கிவளே யென்சாவடைக்கலங்கொண்
டாற்றிவழுவாத்திருவப்பத்-தேற்றி [உ.
யடைக்கலஞ்செய்பாதா வடிமேலணியு
மடைக்கலமாமாலையறைவா-மடைக்கலமா [ங.
வெவ்வுலகுந்தோற்றுவித்தேயெவ்வுலகுமாளிறையோ
னிவ்வுலகுந்தாங்கி யினிதளிப்ப-வவ்வுலகு [ச.
நீங்கிநமைத்தேடுதற்கு நீணிலத்துத்தான்மனுவாத்
தாங்கிநமைவாழ்விக்கத்தான்வருந்தி-யேங்கினாய்த்
துன்பமிகவன்புமிகத் துஞ்சிநமையளிப்ப [ரு.
வின்பமிகுமாலயமே யீங்கவற்காய் - முன்பிணையாச்
சீராலுந்தாயாய்த்திருக்கன்னிமாறிலளாய்ச் [சு.
சோராதடைக்கலமாஞ்சூல்வயிற்றாள் - பாராரு [எ.
மின்றுவொழித்தளிப்ப வெந்தையிளம்பிறைபோ
லுன்றுவிடர்கொண் டுதித்தனகா - றன்று [அ.
லுலகெல்லாமூவிரலாலுய்த்தேந்தியாரு
மிலகெல்லாநாதனைத்தானேந்தி - யலகெல்லா [கூ.

மில்லாவரத்தோங்கி யோங்கவற்கேயென்மொழியாற்
புல்லாவடைக்கலமாம் பூங்கரத்தாள்-செல்லாரும் [௰.
விட்புலத்துவாழினமு மெய்யகத்துவாழினமு
மட்புலத்துப்பலவுயிராய் வாழினமு - நட்புளத்து
நாடுமுணவெல்லா நல்குமிறையவற்கே [௰௧.
யீடுபெறத்தான்மிர்த மீந்தனளாய் - நீடுடைத்தம்
மெவ்வுயிர்க்குமாதரவாய்நிலையாமாருயிரா [௰௨.
மவ்வுயிர்க்குங்கொங்கையடைக்கலத்தாள் - செவ்வுயி
ஞானமிகவன்புமிக நன்மைப்புரந்தளிப்பத் [ர்க்கு [௰௩.
தானமிகவோயாத்தயவுமிக - மானமிகச் [௰௪.
சீர்த்ததவஞ்சீர்பொறைநூற் சீலமெல்லாமுள்ளடக்கி
நீர்த்தவடைக்கலஞ்செய்நெஞ்சத்தாள்-கூர்த்தகதிர்
தூமயமுடியாகச்சூழிலங்குமீனினத்துப் [௰௫,
பொம்மி யடைக்கலஞ் செய் பொற் சிரத்தாள்-
பம்மிவளர் [௰௬.
வெற்பி லெழுஞ் சுடர்செய் வேந்தனைப் பட்டா
டையெனப்
பொற்பிலடைக்கலமாய்ப்பூணுடலாள் - முற்பிறையு.
முற்றியுலகெங்கு முழுதெறிப்பத்தான்றனைப் [௰௭.
பற்றியடைக்கலங்கொள்பாதத்தா-ளுற்றிவனைச் [௰௮.
சூழவார்க்கிணையிவடாட் சூடித்தொழு வானமேல்
வாழ்வார்க்கடைக்கலமாமவனரசா-டாழ்வார்கருத்,
தஞ்சவடைக்கலமே தாரணியாள்வார்க்காண்மை
விஞ்சவடைக்கலஞ்செய்மேனமையினு-ளஞ்சி [௨௰.
வழுவார்க்கிவணிலையேமாறுத்துயர்கொண்
டழுவார்க்கிவள்களிசெய்யனபே- மழுவாரி [௨௧.
சேர்ந்தார்க் கிவள்களையே சேர்நோய்க ளிவண
மருந்தே
சோர்ந்தார்க்கிவளோர்துணைத்திதியே - கூர்ந்தாற்று
வில்லார்க்கிவடிருவேயெல்லார்க்கிவடிறமே [௨௨,
கல்லார்க்கிவளோர்கலைகடலே-யெல்லார்க்கு [௨௩.
நனனையேயா ரவெநண்பே நயக்கதியே

யனையேபொய்யா வடைக்கலமே-பினையே [உச.
யித்தனையுந்துனபமறவினபமிகவுனனடியே [உரு.
யத்தனையுமோமபி யடைக்கலமாய் - மொய்த்தணியா
வைத்தமுடியத்தனையும்வைததமணியததனையும்
வைத்தமலரததனையும்வைததொடை-யததனையும்
வைத்தகவியததனையும்வைத்தபுகழ்ததனையும்[உசு.
வைத்தபதமத்தனையும்வைத்தபொரு-ள்த்தனையும்.
வைத்தசிரம்த்தனையும்வைத்தகரமத்தனையும் [உஎ.
வைத்தவிழியத்தனையும்வைத்தமந-மத்தனையும் உஅ
வைத்தவறமத்தனையும் வைத்தவரமத்தனையும்
வைத்த நலமததனையும் வைததிருக்க - மொய்த-
திமைக்கும் [உகூ.
வானிருக்கமண்ணிருக்கவாய்ந்தவை நின்றனிருக்க
யானிருக்கவாங்கிடமொனறில்லையோ-பானிருக்க [ஙய.
வேறிருளுமில்லையுதவி நினருளிருககச்
சேரிருளுமில்லைச்செயிரில்லைப் - போரில்லை [ஙக.
யேவிலலைக்கொலையுமிகவில்லைவாதில்லை [ஙஉ.
நோவிலலைததாழவில்லைநொந்துயிர்கொல்-சாவில்லை.
யினமையிலைபஞ்சமிலையீநமிலை தஞ்சமிலை
தினமையிலைவஞ்சமிலைச்சீற்றமிலை-பனமையிலை [ஙங.
கேடில்லைக்கோதில்லைக் கேள்டிசேர்ந்தார்க்கெனக்கு
மீடிலலைவாங்கிடமொனறில்லையே-பாடில்லா [ஙச.
ஞானக்கலையுண்டானன றுண்டாமபேறுண்டா
மானவொளிவுண்டாமவாழ்வுண்டாந்-தேனுண்டாங்.
பேரினபமுண்டாம்பெலமுண்டாநோகுமுயிர் [ஙரு.
தேரினபமுண்டாந்திணிக்கதிவீட்-டாரினப [ஙசு.
மாங்குண்டெனறுனருள்டைககலமாய்வந்தேனே
யீங்குண்டெனக்கிடமொனறில்லையோ-வோங்கிமிக
வுண்டுண்டெனக்குமிடமுண்டுண்டடைககலமே[ஙஎ.
யுண்டுண்டெனக்கு நிலையுள்ளுவப்ப-வுண்டென [ஙஅ.
றடிசேர்ந்தேன்கண்டேன்ணிந்தேனபணிந்தேன
மிடிதீர்ந்தேனபேரினபவெள்ள-முடியாக் [ஙகூ

குளிதந்தனறுதிதந்தனகுளிர்ந்தனமலர்ந்தா [௪௰.
டுளிதந்தனசுவைதந்தனசுகிதந்தன-களிதந்தன
காண்டற்கரியனவுங்கண்டேனேகண்டனபின
நீண்டற்கினியனவுந்தீண்டினனே-யீண்டி [௪௧.
மதியுமுடுவும்வளையுமடிக
டுதியுமலர்செய்தொடையு - மதித
ரடியிலணியவளவில்வளைய
முடியிலிலகமணிகள் - படிய [௪௩.
விழுவரணுகிவியல்வர்நகையி
றெழுவரிணையிறெழுவர் - குழவி [௪௪.
நிலவியணுகியுகளியுதவி
கலவியிரவிகதிரி - னிலவி [௪௫.
யிரிவரணிவரிமிர்வர்பணிவர்
புரிவர்புணர்வர்புகழ்வர் - பிரியர் [௪௬.
தியோகிவிநோதியிருதவிலாபி
தியாகிமெய்ஞ்ஞாநிதியாதி - யியாகி [௪௭
படாதநிலாவிபகாத்தயாபி
விடாதபுராணவிநுவி - கெடாத [௪௮.
நிசாதிதவாதநிவாணிதொகாத
விசாலியெனுவல்விடாம - வுசாவி [௪௯.
யெழுந்துவிளங்கியியைந்துமுழங்கி
விழுந்துவணங்கிவிரும்பி - யழுந்து [௫௰.
பதங்கள்பணிந்துபதங்களவின்று
சுதங்கள்வியந்துசுதங்க - ளதிர்ந்து [௫௧.
சயங்கள்குயின்றுசகங்கள்குவிந்து
வயங்கள்புகழ்ந்துமநங்க - ளயந்துல [௫௨.
வாரியசோபனமாயிரமாயிரம்
வேரியமாலைகள்வீசினர் - வாரினர் [௫௩.
நாமமுமாயிரநாணமுமாயிரம்
வாமமுமாயிரம்வாரினர் - தூமமு [௫௪.
வாடினரூதினராவினரோதினர்
பாடினர்பாசினர்பாவினர் - கூடினர் [௫௫.

விஞ்சியவெஞ்சில விஞ்சையிலெஞ்சென
வஞ்சியநெஞ்சின ரஞ்சலி - யஞ்சிட [ருக
வொதனெதனடபற்றுட னுற்றனவற்றன
மிததனை யிததலை யிட்டிடவே - யததனையுங் [ருஎ.
கண்டேனுவந்தேன களிகூர்ந்தடைக்கலமே
கொண்டே னுயிர் கொண்டேன கோதொழித -
தே - னுண்டான [ருஅ.
வினனவுபகார மெனனெஞ்சறிந்திறைஞ்ச
வுனனமகிழ்ந்தடியே னுமையுமாய்ச் - சொனன [ருகூ
வடைக்கலமாமாலை யடைக்கலமாமாதா
வடைக்கலமாய் வைத்தவணி.

முற்றிற்று.

---

# தெவமாதாவின் து
# தோத்திரம்.

நீயொருதாயொருதாதையுநீயுயிர் நீயெவையாகிலுநீ
நீய்கனி வார்கடல் நீயொளி யார்சுடர் நீய்ருளார் முகில் நீ
நீயிறையோனெழுமாசன நீநெறிவேதம்வழாநெறிநீ -
நீய்முகிளாத நறுமலர் நீநிறைநூனிகராவுருநீ.

ஏரணியேயிதயத்திலிருந்தெனையாளுடையானவனே
சீரணியேமதிவெண்குடையேதிருமாரிவிடுப்புயலே -
ஆரணியேகருணாகரியேயுயிர்யாவும்ளித்தமுதார் -
வாரணியேதனி நாயகியேநனிவாழிவாழியே.

வாழியநந்தயாபரனுகருரி வாய்ந்தருடாயவளே -
வாழ்விசும்பிடைவாழுயரும்பரினவாமவிராக்கினிய -
வாழிமுகிண்டிலபூவனைகனனிய மாதனையாள்ரசே -
வாழியமுந்தருளேமறையேயறனேநனிவாழியே.

---

## சகல அர்ச்சியசிஷ்டர்களின் பிரார்த்தனை.



சுவாமீ கிருபையாயிரும்.

கிறீஸ்துவே கிருபையாயிரும்.

சுவாமீ கிருபையாயிரும்.

கிறீஸ்துவே யெங்கள் பிரார்த்தனையைக் கேட்டருளும்.

கிறீஸ்துவே யெங்கள் பிரார்த்தனையை நன்றாகக் கேட்டருளும்.

பரமண்டலங்களிலே யிருக்கிற பிதாவாகிய சர்வேசுரா.

உலகத்தை மீட்டிரட்சித்த சுதனாகிய சர்வேசுரா.

இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரா.

அர்ச்சியசிஷ்ட தமதிறித்துவமாயிருக்கிற ஏகசர்வேசுரா.

எங்களைக் கிருபைபண்ணி ரட்சியும் ஸ்வாமீ.

அர்ச்.-மரியாயே.

சர்வேசுரனுடைய அர்ச்.-மாதாவே.

கன்னியாஸ்திரீகளுக்குள்ளே யுத்தம அர்ச.-கன்னிகையே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

அர்ச்.-மிக்கயேலே.

அர்ச்.-கபிரியேலே

அர்ச்.-இரபயேலே.

* தூதரும் அதிதூதருமா யிருக்கிற சகலசம்மனசுகளே.

* நவ்விலாச சபையாயிருக்கிற சகல சம்மனசுகளே.

அர்ச்.-ஸ்நாபக அருளப்பரே.

அர்ச்.-சூசையப்பரே.

* பிரதானபிதாக்களுந் தீர்க்கதரிசிகளுமாகிய சகல அர்ச்.-ர்களே.

அர்ச்.-இராயப்பரே.

அர்ச்.-சின்னப்பரே.

அர்ச்.-பெலவந்திரே.

அர்ச்.-யாகப்பரே.

அர்ச்.-அருளப்பரே.

அர்ச்.-தோமையாரே.

அர்ச்.-சின்னயாகப்பரே.

அர்ச்.-பிலிப்புவே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

---

* இவ்வடையாளமுள்ள முன்னிலைப் பன்மைக்கு எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள் என்றுசொல்லவும்.

அர்ச்.-பற்தலோமையே.
அர்ச்.மத்தேயுவே.
அர்ச்.-சிமோனே.
அர்ச்.-ததேயுவே.
அர்ச்.-மத்தியாசே.
அர்ச்.-பற்ணபாவே.
அர்ச்.-லூக்காவே.
அர்ச்:-மாற்குவே.
* அப்போஸ்தலருஞ் சுவிசேஷகருமாகிய சகல அர்ச்.-ர்களே.
* எங்களாண்டவருடைய சீஷர்களாகிய சகல அர்ச்.-ர்களே.
* மாசில்லாத சகல அர்ச்சியசிஷ்டகுழந்தைகளே.
அர்ச்.-முடியப்பரே.
அர்ச்.-செபஸ்தியப்பரே.
அர்ச்.-வின்சேந்தியுவே.
* வபியானுஞ் செபாஸ்தியானுமென்கிற அர்ச்.-ர்களே.
* அருளப்பருஞ் சின்னப்பருமென்கிற அர்ச்.-ர்களே.
* கொஸ்மாவுந் தமியானுமென்கிற அர்ச்.-ர்களே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்.

* சேர்வாசியும் புரோத்தாசியு மெ
ன்கிற அர்ச்.-ர்களே.
* வேதசாட்சிகளான சகல அர்ச்.-ர்க
ளே.
அர்ச்-சில்வேஸ்திரியுவே.
அர்ச்.-கிறகோரியுவே.
அர்ச்.-அமிர்தநாதரே.
அர்ச்.-அகுஸ்தீனுவே.
அர்ச்.-இயேரோனிமுவே.
அர்ச்.-மற்தீனுவே.
அர்ச்.-நிக்கொலாவே.
* மேற்றிராணிகளும் ஸ்துதியர்களு
மாகிய சகல அர்ச்.-ர்களே.
* வேதவித்தியாபாரகரான சகல
அர்ச்.-ர்களே.
அர்ச்.-அந்தோனியாரே.
அர்ச்-ஆசீர்வாதப்பரே.
அர்ச்.-பெற்நர்துவே.
அர்ச்.-சாமிநாதரே.
அர்ச்-பிராஞ்சீஸ்குவே.
* குருக்களும் ஆசாரியருமாகிய சக
ல அர்ச்.-ர்களே.

எங்களுக்காகவேண்டிக்கொள்ளும்.

* சந்நியாசிகளுந்தபோதனருமாகிய சகல அர்ச்.-ர்களே.

அர்ச்.-மரியமக்தலேனே.

அர்ச்.-ஆகத்தம்மாளே.

அர்ச்.-பிரகாசியம்மாளே.

அர்ச்.-அகினேசியே.

அர்ச்.-செசிலியே.

அர்ச்.-இத்தேரியம்மாளே.

அர்ச்.-கத்திரினே.

அர்ச்.-அனஸ்தாசியே.

* கன்னியாஸ்திரீகளும் விதவைஸ்திரீகளுமாகிய சகல அர்ச்.-ர்களே.

* ஆண்டவருடைய திருவடியார்களான ஸ்திரீபூமான்களாகிய சகல அர்ச்.-ர்களே.—எங்களுக்காகமன்றாடிக்கொள்ளுங்கள்.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்.

தயாபரராயிருந்து,—எங்கள்பாவங்களைப்பொறுத்தருளுஞ்சுவாமீ.

தயாபரராயிருந்து,—எங்கள்பிரார்த்தனையைக் கேட்டருளுஞ்சுவாமீ.

சகலபொல்லாப்புக்களிலே நின்று,

சகலபாவங்களிலேநின்று,

எங்களை ரக்ஷித்தருளுஞ் சுவாமீ.

உமதுகோபத்திலே நின்று,

பூமியதிர்ச்சியாகிய அகோராக்கினையிலேநின்று,

அசுப்பில்வருகிற துர்மரணத்திலே நின்று,

பசாசினுடைய சகலதந்திரங்களிலே நின்று,

கோபம் பகை முதலான சகல துர்க்குணங்களிலே நின்று,

மோக அக்கினியிலே நின்று,

இடி பெருங்காற்றிலே நின்று,

நித்தியமரணத்திலே நின்று,

தேவரீருடைய திருமனுஷாவதாரத்தின் பரமரகசியத்தைப்பார்த்து,

தேவரீருடைய ஆகமனத்தைப்பார்த்து,

தேவரீருடையபிறப்பைப்பார்த்து,

தேவரீருடைய திவ்வியபாலத்துவத்தைப்பார்த்து,

தேவரீருடைய ஸ்நானத்தையு முபவாசத்தையும் பார்த்து,

தேவரீருடைய சிலுவையையும்பாடுகளையும்பார்த்து,

எங்களை இரட்சித்தருளும்.

தேவரீருடைய மரணத்தையும் அடக்கத்தையும் பார்த்து,

தேவரீருடைய திவ்விய உத்தாநத்தைப்பார்த்து,

தேவரீருடையதிவ்விய ஆச்சரியமான ஆரோகணத்தைப்பார்த்து,

தேற்றரவுபண்ணுகிறவராகிய இஸ்பிரீத்து சாந்துவின் ஆகமனத்தைப்பார்த்து,

நடுத்தீர்க்கிற நாளிலே,

பாவிகளாயிருக்கிற நாங்கள் தேவரீரைமன்றாடுகிறோம். - எங்கள்மன்றாட்டைக்கேட்டருளுஞ்சுவாமீ.

எங்கள்பாவங்களைப் போக்கியருளவேணுமெனறுதேவரீரைமன்றாடுகிறோம்.

எங்களுக்குத் தயைபண்ணியிரட்சித்தருளவேணுமென்றுதேவரீரைமன்றாடுகிறோம்.

நாங்கள்மெய்யான தவம்புரிய உதவிசெய்யவேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

எங்களையிரட்சித்தருளுஞ்சுவாமீ. | எங்கள்மன்றாட்டைக்கேட்டருளுஞ்சுவாமீ.

தேவரீருமது அர்ச். - சபையையாள
வும் பாதுகாத்தருளவும் வேணுமென்
று தேவரீரைமன்றாடுகிறோம்.

அர்ச். - பாப்புமுதலான அதிசிரேஷ்
ட ஆசாரியரையும் ஆகமசபைகளிலு
ட்பட்ட சகல குருக்களையுஞ்சந்நியாசி
களையுஞ் சத்தியவேத முறைமைகளில்
தற்காத்தருள வேணுமென்று தேவரீ
ரைமன்றாடுகிறோம்.

உமது அர்ச். - சபையின்சத்துருக்க
ளைக் கீழ்ப்படுத்தவேணுமென்று தே
வரீரை மன்றாடுகிறோம்.

சத்தியவேத இராசாக்களுக்கும்பிர
புக்களுக்குஞ்சமாதானத்தையுஞ்சரியா
னவொருமையையுந் தந்தருளவேணு
மென்று தேவரீரைமன்றாடுகிறோம்.

சமஸ்தமான கிறீஸ்துவர்களுக்குஞ்
சமாதானத்தையுமொருமைப்பந்தன
த்தையுங் கட்டளையிட்டருளவேணுமெ
ன்று தேவரீரை மன்றாடுகிறோம்.

தேவரீருடைய திருப்பணியிலே ய
டியோரைத் திடப்படுத்திக் காப்பாற்

எங்கள்மன்றாட்டைக்கேட்டருளுஞ்சுவாமீ.

சாயிஉ. சகல அர்ச்சியசிஷ்டர்களின்

றவேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

எங்கள்மனது பரலோகவாசையைப்பற்றி யுயரவேணுமென்று தேவரீரைமன்றாடுகிறோம்.

எங்களுடையவுபகாரிகளுக்கு நித்திய நன்மையைப் பலனாகக்கட்டளையிட்டருள வேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

எங்களாத்துமங்களையுமெங்களுடைய சகோதரர் பந்துக்கள் உபகாரிகளுடைய ஆத்துமங்களையு நித்திய நரகாக்கினையிலே நின் றிரட்சித்தருள வேணுமென்று தேவரீரைமன்றாடுகிறோம்.

பூமியிலே நல்ல பயிர்விளைவின் பலன்தந்து காப்பாற்ற வேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

மரணத்தையடைந்த சமஸ்தவிசுவாசிகளுக்கும் நித்திய இளைப்பாற்றியைக் கட்டளையிட்டருள வேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

எங்கள் வேண்டுதலை நன்றாகக்கேட்

எங்கள் மன்றாட்டைக் கேட்டருளும் சுவாமி.

டருளவேணுமென்று தேவரீரை மன்றாடுகிறோம்.

சர்வேசுரனுடைய சுதனே யும்மை மன்றாடுகிறோம்.

உலகத்தினுடையபாவங்களைப்போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப் புருவையே! — எங்கள்பாவங்களைப்போக்கியருளுஞ் சுவாமீ. உலகத்.-மற்றதும்.

ஏழ்கஞ்...

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வவல்லபரான நித்தியசர்வேசுரா சீவியர்கள்மேலு மரித்தோர்கள் மேலுஞ் செங்கோன்மை செலுத்தி, விசுவாசத்தாலு நற்கிரியைகளாலு முமது பக்ஷமாவார்களென்று தேவரீர்முன்தெரிந்த சமஸ்தருக்குந் தயையுள்ளவராயிருக்கிறீர். நாங்களாராருக்காகச் செபித்துமன்றாடுகிறோமோ அவர்களெல்லாரும் சரீரசம்பந்தத்தோடு இவ்வுலகிலிருக்கின்றவர்களாயினுஞ் சரீரத்தைவிட்டு மறுவுலகிற் சென்றவர்களாயினுஞ் சகல அர்ச். -ர்களுடைய வேண்டுதலாலு முமது நன்மைப் பெருக்கத்தின் கிருபாகடாக்ஷத்தாலும், பாவப்

பொறுத்தலை அடையத்தக்கதாகத் தேவ ரீரைப் பிரார்த்திக்கிறோம். தேவரீரோடு ம் இஸ்பிரீத்துசாந்துவோடும் ஏகசர்வேசு ரனாயிருந்து, சதாகாலஞ்சீவியருமா யிரா ச்சியபரிபாலகருமாயிருக்கிற, உம்முடை யதிருச்சுதனாகிய சேசுகிறீஸ்துவினுடைய திருமுகத்தைப்பார்த்து, இந்த மன்றாட் டைத் தந்தருளுஞ்சுவாமீ. ஆமென்சேசு.

பர.

---

## அர்ச்.-ஞானப்பிரகாசருடைய ஞானமாதிரிகை.

அர்ச்.-ஞானப்பிரகாச ரிளம்பிராயமுதல் மரணப ரியந்த மாச்சரியமானதேவசினேகம் பத்தி தாழ்ச்சி கற்புமுதலிய புண்ணியங்களினு லலங்கரிக்கப்பட்டு விளங்கினதினு லிவ்வுலகில் மனுரூபத்தை யெடுத்த வோர்சம்மனசானவராகத் தோன்றினுரென்னத்தகு ம். அவரிருவருஷமளவு மிராசகுமாரனுக்கு வளர் தோழனுயிருந்து அவனேடேநித்தமு மிராக்கினியை வணங்கப்போனலு மொருநாளாகிலும்வள்முகத்தை நோக்கிப் பார்த்தவருமலல தஞ் சொந்தப்பந்துக் களான துரைசானிகளின் முகக்குறிப்பாவது பார்த் தறிந்தவருமல்ல. இவ்வளவாகத் தம்முடைய பார் வைமுதலிய பொறிகளை யடக்கிச் சநநியாசமு ம் ருந்தவமுஞ்செய்து மோக்ஷப்பேரின்ப மகிமைக்குப் பிராப்தியானுர். அவரிளமையில் தாமர்த்தமுணராம ற் சில தகாதவார்த்தைகளைச் சொன்ன அறபகுற்ற த்தை யறியாமற் செய்திருந்தாலும் அதற்காகமட்



பரிசுத்தகற்புக்கு உத்தமமாதிரிகையான அர்ச்.
ஞானப்பிரகாசரே! பாடுபட்ட திவ்வியகர்த்தர்பேரில்
வைத்த அநந்தசிநேகத்தாலு மாறுதவிரதத்தாலு
ம் அருந்தவத்தாலுந் தாழ்ச்சிமுதலியபுண்ணியங்க
ளாலும் பரலோகவிராச்சியத்தி லளவிறந்தசோதி
மகிமைப்பாக்கியத்தை யடைந்தீரோ அடியோர்களும
முடைய சுகிர்தமாதிரிகையை யநுசரித்து உம்மோ
டுமோக்ஷாநந்தப்பேரின்பத்துக்குப் பங்காளிகளாகு
ம்பொருட்டு எங்களுக்காகவேண்டிக்கொள்ளும்.

டில்லாத மனஸதாபப்பட்டார். அந்தமனஸதாபச் சுறுக்கெவ்வளவென்றால் அவர்முதல்விசை பொதுப் பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறவேளையிலே வேர்வை யினாலே சரீரமுழுதுநனைந்து ஈரித்துககஸதிப்பட்டு க் கண்ணீர்விட்டழுது பிரலாபித்துக் குருவின்டியி லேவிழுந்து மெய்ம்மறந்துபோய் அன்றையத்தினம் பாவசங்கீர்த்தனம் பண்ணக்கூடாமற்போனார். அன் றுமுதல் மரணமட்டும் அவ்வற்பகுற்றத்தை நினைத் தபோதெல்லாங் கண்வழியாக ஈராறுபோலே கண் ணீர்பெருகி யோடிற்று.

☞ இவ்வற்பகுற்றத்துக்காக விவரிப்படிப்பயந் து சர்வேசுரனுக் கென்னவகை சொல்வேனென்று நடுநடுங்கினாரென்று கண்டபோதே எண்ணிலடங்கா த பாவங்களைக்கட்டிக்கொண்ட பாவியாகிய நானது களுக்கெல்லா மெவ்வளவாகிலுந் தக்கமனஸதாபப் படாமலிருக்கிறதென்ன வநீதம! கன்னெஞ்சிளகிக் கரைந்து கண்ணீராறாய்ப்பெருகமாட்டாதோ? அல்ல து சர்வேசுரனுக்கேற்காத குற்றங்களைச்செய்திருந் தாலு மெனக்குமோசம்வராதென்று மதிகெட்டு நி னைக்கிறேனே? இந்த அர்ச்சியசிஷடவருலகதந்திரங் களுக் குள்ளாகாவண்ண மித்தனைதவஞ்செய்து தம் மைம்பொறிகளையடக்கிக காவற்செய்திருக்கப் பாவி யாகியநான் தவமுமெச்சரிக்கையுங் காவலுமின்றி ந டந்தா லெப்படியீடேறுவேன்.

## செபம்.

அர்ச்.-ஞானப்பிரகாசரே! நீர்பிரதாபி த்திருக்கிற மோக்ஷத்தைநோக்கி நானு ம்மைவாழ்த்தியேற்ற ஆண்டவனாயிரந் து வரந்தந்தருளும். நீர் செய்தபுண்ணி

ய கிருத்தியங்களுக்கு நீதிப்படியே நித்திய மகிமைப்பிரதாபத்தை யுமக்குக்கட்டளையிட்ட அர்ச்.-தமதிறித்துவத்துக்குச் சதாகாலத்துக்கும் ஸ்துதியுந்தோத்திரமுமுண்டாகக்கடவது. இத்தனையொட்டோலகப் பிரதாபத்துடனே மேலான பேரின்பவீட்டிலே வீற்றிருந்துவாழுகிற நீர் ஞானகாரியங்களிலே மூடனாயிருக்கிறவடியேனை யுமதுகடைக்கண்ணால் நோக்கியருளவேணுமென் றும்மைமன்றாடுகிறேன். இப்பொழுது நீருலகத்திலுள்ள மனுஷருடைய ஆத்துமசரீரத்துக்குவேண்டிய சகலசகாயமும்பண்ணப் பேறுபெற்றவராகக்கொள்ள அடியேனும்மைப் பத்தியுடன் மன்றாடுகிற தென்னவெனில் உமதுதயவான மன்றாட்டினாலென்னாயுசுபரியந்த மும்மைக் கண்டுபாவித்துநடக்கச் சர்வேசுரனுடைய வநுக்கிரகமெனக்குக் கிடைக்கும்படி செய்தருளவேண்டுமென் றும்மைப் பிரார்த்தித்துக்கொள்ளுகிறேன். இதுவே யெனக்குப்போதும். இந்தஉலோகத்திலும்மைக்கண்

டுபாவித்து நடப்பேனுகிற் சந்தேகமின்றிக் காலாகாலத்துக்கு மும்மோடுகூட மோக்ஷத்திலே வாழ்ந்திருப்பேன். இந்தப்பாக்கிய மெனக்குக்கிடைக்கக் கடவதாக. ஆமென்சேசு.

---

## சத்திய வேதத்தி லக்கியானிகள் திரும்புதற்காக வேண்டுதல்.

திவ்வியகர்த்தராகிய சேசுநாதர் தமதுவிலைமதியாத திருவிரத்தத்தினல் மீட்டிரட்சித்த ஆத்துமாக்களைக் கரையேற்றுதற்குச்சொல்லுநற்புத்திசெய்யுஞ் செபங்காண்பிக்கு நல்லமாதிரிகையிவைமுதலான நற்கிருத்தியஞானதர்மஞ் சர்வேசுரனுக்குவிசேஷப்பிரியமுள்ள தர்மங்களில் மிகவுமுக்கியமென்பதே சத்தியம். உங்களிலொருவன் சத்தியநெறியினின்று தவறுகையில் மற்றொருவன்வனைத் திருப்பினல் தன்மார்க்கத்தினின்று பாவியாளவனைத் திரும்பச்செய்தவன் அவனுத்துமத்தை மரணத்தினின் றிரட்சித்துப் பாவததிரட்சியை மூடுவானென்றறியக் கடவனென்று வேதத்திற்சொலவியிருக்கின்றமையால் தன்பாவங்களைப்பரிகரித்துப் பொறுத்தலைப்பெறவும்பேரின்பமகிமையை யடையவும் அர்கியானிகள்முதலிய புறச்சமயத்தாரை வேதத்திற் றிருப்புகிறதே யுத்தமவழியாமே. வேதவிசுவாசம் பரம்புதற்காக உண்டாகிய தர்மசபையி லுட்பட்டு அக்கியானிகள் மனந்திருப்புதற்பொருட்டாக நித்தமும ஒருபரமண்டலமந்திரமும் ஒருபிறியதத்தமந்திரமுமன்றி அர்ச். - சா

வேரியாரே யெங்களுக்காக வேண்டிக்கொள்ளுமென் றுஞ் செபிக்கிறவர்களுக்கு அர்ச்.-பாப்பானவரநேக பலன்களைக் கட்டளையிட்டருளினர்.

## அர்ச் - சவேரியார்

## அக்கியானிகள் மனந்திரும்புதற்காக உண்டாக்கின மந்திரம்.

அநாதியுமாய்ச் சர்வத்தையும்படைத் தவருமாயிருக்கிற சர்வேசுரா அக்கியானி களுடைய ஆத்துமங்களும்மாற் சிஷ்ட்டிக்கவுந் தேவரீருடைய விலக்ஷணசாயலாக வேற்படுத்தவும்பட்டிருக்கிறதை நினைத் தருளுஞ்சுவாமீ. இதோ தேவரீருடைய தோத்திரத்துக்கு விரோதமாய் நரகநிறைய அவர்கள்தின்பயங்கரமான பாதாளத்திலே திரளாய்விழுந்து சேதமாய்ப் போகிருர்களே. ஆ! சுவாமீ. உமக்குஎக்குமாரனுகிய சேசுநாதரவர்களை யிரட்சிக்கத்தக்கதாகத் தம்முடையவிலைமதியாத் திரு விரத்தத்தைச்சிந்தி யெண்ணப்படாத கஸ்திநோவுகளை யநுபவித்து மகாக ?-னமானமரணத்தையடைந்ததை நினைத்தருளும். ஆண்டவரே யவர்கள்தங்க ளக்கிரமங்களிலே மூர்க்கராய்ச் சகலருடை



இந்துதேசங்களின் அப்போஸ்தலரான அர்ச்.-சவேரியாரே! அஞ்ஞானவிருளை நீக்கித் தவறின ஆத்துமாக்களை நன்னெறியிற்றிருப்பி யீடேற்றுதற்குப் படாதபிரயாசமெல்லாம்பட்டீரே. அதிலேயே தேவதோத்திரத்துக்காக வுமதுசீவனைச் செலவழித்துப் பாழான அந்நியதீவிலே பரதேசியாய்ப் பாக்கியமானமரணத்தையடைந்து முத்திப்பேறுபெற்றீரே வேதவிசுவாசத்திலெங்கள் தகப்பனீரே. எங்களுக்காகமன்றாடி யெங்களீடேற்றத்துக் குதவிசெய்தருளும்.

ய திவ்விய விரட்சகராகிய வும்முடையதி ருக்குமாரனை நிந்திக்க வொட்டாமற் ச கல அர்ச்சியசிஷ்டர்களின் மன்றாட்டுக் களினாலும் உம்முடைய திருக்குமாரன் பிரிய பத்தினியாகிய பரிசுத்த திருச்ச பையின் வேண்டுதலினாலுந் தேவரீர்சித் தமிரங்கி யவர்களுடைய பாவ அக்கிரமங் களையுங் கீழ்ப்படியாமையையும் பாராம ல் அவர்கள்மேற் கிருபைவைத்து அவர்க ளிப்போதாகிலு முழுமனதுடனே திரு ம்பித் தேவரீரால்னுப்பப்பட்டவரு மெ ங்களாண்டவருமாகிய சேசுகிறீஸ்துநாத ரைவணங்கச் செய்தருளும். எங்களைமீட் டிரட்சித்த அந்தத்திவ்விய கர்த்தருக்கு ந் தேவரீருக்கு முடிவில்லா வநவரதகா லமுந் தோத்திரமுண்டாகக்கடவது.

ஆமென்சேசு.

சேசுகிறீஸ்துநாதருடைய திருவாக்கு த்தத்தங்களை நாங்கள்பேறுபெற் றநுப விக்கத்தக்கதாக - அர்ச்.-சவேரியாரே யெ ங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.

௬௱௨௰. கற்பையடைவதற்கு

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுரா சுவாமீ முத்திப் பேறு பெற்ற சவேரியாருடைய ஞானபோதகத்திலேயு மவர்பண்ணின அற்புதங்களிலேயுஞ் சிந்துதேசத்திலுள்ள சனங்களைத் தேவரீருடைய திருச்சபையிலே யழைத்துட்படுத்தச்சித்தமானீரோ, அவருடையபூச்சியமான புண்ணிய பலன்களைத் துதித்துவணங்குகிற நாங்கள் அவருடைய சுகிர்த மாதிரிகைகளை யநுசரிக்க அநுக்கிரகஞ்செய்தருளும். இந்தமன்றாட்டுக்களையெல்லாஞ் சேசுநாதருடையதிருமுகத்தைப்பார்த்துத் தந்தருளும்.

ஆமென்சேசு.

ஆத்துமசரீரப் பரிசுத்தத்தனமாகிய
கற்பையடைவதற்கு
வேண்டுதல்.

பரிசுத்த இருதயத்தோர் பாக்கியவான்கள், ஏனெனிற் சர்வேசுரனைத் தரிசிப்பார்களென்று சேசுநாதர் திருவுளம்பற்றினார். கற்பென்கிறபுண்ணியஞ் சர்வேசுரனுக்கு மிகவுமபிரியமுள்ள சுகந்தவாசனைப்பூவென்று வேதவாக்கியத்திற் கண்டறியலாமே. மாசில்லாத

கன்னிமையால் அர்ச்.- கன்னிமரியம்மாள் தேவமாதாவென்னிறபட்டத்துக்கும் அநந்தமகிமைக்குமுயர்த்தப்பட்டாள். அர்ச்.-ஸ்நாபக அருளப்பர் அர்ச்.- சூசையப்பர் அர்ச்.-அருளப்பனென்கிற அப்போஸ்தலர்முதலியவர்களைத் திவ்வியகர்த்தருக்கு விசேஷப் பிரியப்படுத்தினதுமாறுவிரத்தந்தானல்லோ? பரிசுத்தங் கெடாதகற்புடையோர் மோக்ஷவிராச்சியத்தில் விசேஷப்பேரின்பமகிமைபெறுவார்களென்று சத்தியவேத போதனையாமே. ஆகையால் நித்தியபேரின்பத்தைநாடி யோர்க்ஷணத்திலழியுஞ் சிற்றின்பத்தையிகழ்ந்து சாந்தனையுங் கற்புவிரதங்காக்கிறவர்கள் மிக்க மகாக்கியவான்கள். ஆறுவில்லறத்துக்கு நியமிக்கப்பட்டிருந்தாலுங் கலியாணமுள்ளவரில்லாதவராயினு மவரவர் தங்களுடைய வந்தஸ்துக்குத்தக்கதுபோலே யெல்லாருந் தங்களாத்துமத்தையுஞ் சரீரத்தையும் பாவமாசின்றிப் பரிசுத்தமாய்க்காப்பாற்றக்கடவார்கள். நினைவிலாகிலு மோரற்பநிமிஷமுதலா யெந்தக்குற்றமு மேற்றுக்கொள்ளக் கூடாது. கற்புக்குவிரோதமானசகல பாவங்களுஞ்சர்வேசுரனுக்கு மிகவு மருவருப்புள்ளதன்றியு மித்துக ளிவ்வுலகத்தில் தேவ இஷ்டப்பிரசாதமாகிய ஆத்தும சீவியம புத்தி ஞானம் சரீரசுத்தி சௌக்கியம பேர்கீர்த்தி யாஸ்தி சுகம வீட்டுச்சமாதானமுதலியபாக்கியமெல்லாவற்றையுமழித்துப் பொறுக்காதவெட்கமுங்கடினகஸ்தி துயர் சஞ்சலமுந் திராதநோயமுதலிய கேடாக்கினைகளு நிர்ப்பாக்கியச்சாவு மறுவுலகத்திலெண்ணிலடங்காத நித்தியநரகவேதனைகளுங் கிடைக்கிறதற்குக்காரணமாமே. வேதத்திலே விவரிக்கப்பட்டபடியேசர்வலோகத்தையும்மழித்தின சலப்பிரளயமும வானத்தினின்று பெய்தவக்கினியால் ஐந்துபட்டணங்களுக்குவந்த சங்காரமும் சடிதியுமாய் நிர்

ட்பாக்கியமுமாய்த் தேவநீதிக்கோபத்தினால் நகர் சா வடிக்கப்பட்டதும் அநேகக்குடும்பங்களையுஞ் சனங் களையுஞ் சிதைத்தபஞ்சம்படை நோய்களு மிவைமு தலிய கொடூரவாக்கினைகளு மந்தலருவருப்புள்ள பா வங்களாற்பலித்த கெட்டகனிகளல்லவோ? இத்தனை நிர்ப்பாக்கியமான பாவத்துக்கெம்மாத்திரம் பயப்ப டவேண்டும் அதினபேர்முதலாய்த திருச்சபையிலு ச்சரிக்கலாகாதென்று அர்ச்.சின்னப்பரெழுதினார். இதெல்லாமிப்படியிருக்கையிற் சர்வேசுரனுக்குப்பி ரியப்பட எந்நாளும்பரிசுத்தமாய் நடப்பாயாக. நி னைவில்முதலா யொருபாவத்துக்கு மிடங்கொடாமல பாவத்துக்குவாசலாகிய செவி கண்முதலிய பொறிக ளையடக்கிக் கெட்டஸ்நேகம்பண்ணாமலுந் துர்மார்க் கரோடே வாக்குங்கொடாமலுஞ் சகலதந்திரங்களை யும் பாவச்சமயங்களையுமிகவும்வெறுத்து ஸ்திரமனத் துடனே விலக்கக்கடவாய். விசுவாசமுள்ளவர்கள் க ற்பையிழக்கிறதைவிடப் பிராணனையிழப்பது தாவி னையென்றிருப்பர். யாதோர் கெட்டநினைவுமுதலிய சோதனைவந்தாற் சர்வேசுரனுன்னைப் பார்க்கிறாரெ ன்றுடனே நினைத்துச் சுவாமீ யென்னை யிரட்சியுமெ ன்று மன்றுடிவந்தசோதனையைச் சீக்கிரத்துடனே வெறுத்துத் தள்ளிப்போடக்கடவாய். மேலுந் தூய பரிசுத்த கற்பையடையவுங் காப்பாற்றவுந் தேவ அ நுக்கிரகமுனக்கு மிகவும்வசரமா யிருக்கின்றமையா ல்டிக்கடி யதையாசையோடேகேட்டுத தேவமாதா வடைக்கலத்திலேயும் உனக்காவலானசம்மனசுவி ஞ் தரவிலேயு முன்னையொப்பிப்பாயாக.

சர்வவல்லவரு மெல்லாத்தையும் பார்க் கிறவருமாகிய சர்வேசுரா என்றுத் துமத் தை யுமது திவ்விய லக்ஷணசாயலாக வு

ண்டாக்கினீரோ. அதைநான் அசுத்தப்படு
த்தாதபடிக் கெனக்கநுக்கிரகஞ் செய்த
ருளும். உமதுதேவாலயத்தை யாதாமொ
ருவன் அசுசிப்படுத்தினால் அவனைச்சிதை
ப்போமென்று திருவுளம்பற்றினீரோ சு
வாமீ. உமதுவேதமொழியின்படியே எ
ன்சரீரமே யுமது தேவாலயமாயிற்று. இ
திலே தமதிஷ்டப்பிரசாதத்தினால் தேவ
ரீருடைய இஸ்பிரீத்துசாந்துவானவர்வாச
ம்பண்ணச் சித்தமாயிருக்கிறதுமன்றி ய
ேநகரூறை உம்முடைய திருக்குமாரனா
கிய சேசுநாதருந் தேவநற்கருணைவழியா
க வெழுந்தருளிவந்து இதனை யர்ச்சித்த
ருளினார். ஆகையால் பரிசுத்தமுள்ளகர்த்
தாவே! உமக்குச்சொந்தமாகிய வித்தே
வாலயத்தில் தேவரீர் மிகுந்த அருவருப்பு
டனேவெறுக்கிற பாவஅக்கிரமங்களை வ
ரவொட்டாதேயும். கற்புக்குவிரோதமா
ன வோரற்பமாகும் என்னுத்துமத்திலா
வது சரீரத்திலாவது உண்டாகாதபடிக்கி
ருபைசெய்தருளும். என்றிவ்வியவிரட்ச
கரானசேசுவே யிந்தவிலைமதியாத புண்

ணியம்நுசரிக்க வுமது விசேஷமான வ
நுக்கிரகம் வேண்டியிருக்கிறதினுல் கற்
பைவிரும்புகிறவருங் கன்னியாஸ்திரீகளு
க்கும் விரத்தர்களுக்கு நிறைந்ததயவுள்
ள விராசாவுமாகிய தேவரீர்பாதத்தி லிந்
தத்தூய்மையான புண்ணியத்தைக் கேட்
கவருகிறேன். உம்முடைய வரப்பிரசாத
த்திஞலெத்தனையோபேர்க ளிவ்வுலகத்
தில் சம்மனசுகளைப்போலே பரிசுத்தமா
ய்நடந்தார்கள். அவர்களுமென்னைப்போ
லே பலவீனர்களாகத்தானே யிருந்தார்க
ள். ஆகையா லென்பலவீனத்தால் நான்
தைரியமற்றுப்போக நியாயமில்லை. ம
னத்திடங்கொடுக்கிறவராகியகர்த்தாவே!
தேவரீ ரவர்களை யுறுதிப்படுத்திஞப்போ
லேயென்னையுந் தூயநெறியிலுறுதிப்படு
த்தியருளும். அவர்களாலானதுபோலேயு
ம்மைக்கொண்டென் ஞலுமெல்லா நலமு
மாகக்கூடும். உமது தோத்திரத்துக்குமெ
ன்னிரட்சணியத்துக்கும் விரோதியாகிய
சத்துருதன்சோதனையால் என்னைமயக்கு
வித்துச்செயிக்காதபடிக்கு அடியேன் இ

டைவிடாமல் சுறுசுறுப்போடேவேண்டி க்கொள்ளவும் என்மேலேகாவற்காத்துஎ ச்சரிக்கையோடுநடக்கவுந் தயைபுரியும். நான் என்புத்திநினைவைத் திட்டமாயொ ழுங்குபடுத்தி யென்பொறிகளைந்தினையு மெந்நேரமுமடக்கிப் பாவச்சமயங்களை யெல்லாந் தைரியமாகவிலக்கியென்னைய சுத்தப்படுத்தலாவதெல்லாவற்றையுமகா அருவருப்புடனையரோசித்துஓர்ப்பகுற் றத்தின் சாயலுக்குமுதலாய்ஞ்சிநுணுக்க மானபத்தியுடன்சுமுத்திரையாய்நடந்து மிகப்பூச்சியமும் மழுங்குதற்கெளிதுமா கிய விந்தப்புண்ணியத்தைப்பழுதில்லாம ற்காப்பாற்றவநுக்கிரகஞ்செய்தருளும்.

மகாபரிசுத்தமுள்ளமாதாவே யெனக் கடைக்கலமாயிரும். அடியேனுக்காகவும் மூடையதிருக்குமாரனைமன்றாடி யெனக் குப்பரிசுத்தமானவிருதயத்தைக்கொடுப் பித்தருளும. எனக்குக்காவலானசம்மன சானவர்சோதனையிலென்னைக்கைவிடா மற்காத்தருளும். ஆமென்சேசு.

## நன்றியறிந்தஸ்தோத்திரம்.

சர்வேசுரனிடத்திற்பெற்ற நன்மைகளுக்குத்தக்க நன்றியறிந்த தோத்திரஞ்செலுத்துவது நிதக்கடமையும்வேறேவரங்களைப்பெறுவதற்குத்தமவழியுமா யிருக்கின றமையா லிடையறுக்கிருபையோடு சர்வேசுரனை நம்மிடத்திற் பொழிகிற நன்குகளைக்குறித் தடிக்கடி பவரைத்தோத்திரிப்போமாக.

## அமிர்தநாதரும் அகுஸ்தீனுமென்கிற அர்ச்சியசிஷ்டர்களுண்டாக்கின தோத்திரப்பாடல்

கர்த்தரானசர்வேசுராசுவாமீ யடியோர்கள்தேவரீரைத்தேவனென்றும் ஆண்டவனென்றும் பாராட்டித் துதிக்கிறோம்.—தேவரீர்நாதி பிதாவென்றுபூலோகமெல்லாம்வணங்கித்தொழுகின்றது.—தேவரீரைச் சகலசம்மனசுகளும்பரமண்டலங்களுஞ் சகலசத்துவகர் ஞானாதிக்கர்பத்திசுவாலகர்முதலானோரும் ஓயாதொனியாய்ப்புகழ்ந்து பரிசுத்தர்பரிசுத்தர்பரிசுத்தர்தளத்துக்குக்கர்த்தராகிய சர்வேசுரனென்றுகொண்டாடுகிறார்கள்.—பரலோகபூலோகமெங்குமுமது மகிமைப்பிரதாபம் விளங்கிநிறைந்திருக்கின்றது. — தேவரீரைச்சுகதிபெற்ற அப்போஸ்தலருடைய

பிதாபக்கூட்டமும் ஸ்துதிக்குரிய தீர்க்க தரிசிகளுடைய திரளும் வெண் தூய்மையயணிந்த வேதசாட்சியர் தளமும் புகழ்கின்றது. —பூமண்டலமெங்கும் அர்ச்- திருச்சபையானது அளவில்லாத மகிமைப்பிரதாபமுடைத்தான பிதாவாகிய தேவரீரையுமும்முடைய பூச்சியமான ஏக திருச்சுதனையுந் தேற்றுகிறவராகிய இஸ்பிரீத்துசாந்துவையும்ஸ்துதித்துக்கொண்டாடிவருகின்றது. — கிறீஸ்துவே பரஞ்சோதி மகிமையுடைத்தான விராசாவானவர் நீரே.— தேவரீரே பிதாவின் நித்தியசுதன். — தேவரீர் மனுஷனை மீட்டிரட்சிக்கக் கன்னியாஸ்திரீயுதரத்திற்சஞ்சரிக்குமருவருப்பைப்பாராமல் மனுஷாவதாரம்பண்ணினீர். — தேவரீர் மரணத்தின் தாற்றுக்கோலை முறித்துச் செயித்து விசுவாசிகட்கு மோக்ஷவிராசசியத்தைத்திறந்தீர்.— தேவரீர் பிதாவாகிய சர்வேசுரனுடைய ஆநந்தமகிமைப்பிரதாபத்தோடு அவருடைய வலதுபாரிசத்திலுட்கார்ந்திருக்கிறீர்.— நடுத்தீர்க்கவருபவர் தேவரீர்தாமேயென்று விசுவசிக்கிறோம். — ஆதலால் தேவரீர் நும்முடைய விலைமதி

யாத்திருவுதிரத்தால்மீட்டுக்கொண்ட தே வரீருடையவடியோர்களுக்குக்கிருபையுத வியண்ணியருள வும்மையே மன்றுடுகி றோம்.— நித்தியமோக்ஷாநந்தமகிமையி லடியோர்களுந்தேவரீருடைய அர்ச்சியசி ஷ்டர்களோடே சேர்ந்திருக்கத்தயைபுரியு ம். — ஆண்டவரேயும்முடையபிரியசனத் தையிரட்சித்துக்கொள்ளும். உமதுசுதந்த ரமான திருச்சபையை யாசீர்வதித்தருளு ம்.—உம்முடையவர்களை யரசாண்டென் றென்றைக்குமவர்களையுயர்த்தி யருளும். —நாங்கள் நுதினமு மும்மையே துதிக்கி றோம். ஊழியுள்ளகாலமென்றுமென்றெ ன்றைக்குமுமது திருநாமத்தையேபுகழுகி றோம்.— ஆண்டவரே யின்றுநாங்கள்பாவ மின்றியே நடக்கத் தேவரீரெங்களைக்காத் தருளும்.— எங்கள்பேரிற்றயையாயிருஞ் சுவாமீ, எங்பேரிற்றயையாயிரும் — ஆண் டவரே நாங்களுமதுபேரில்நம்பிக்கைவை த்திருக்கிறபடியேயுமதுகிருபையுமெங்க ள்பேரிலிருப்பதாக. — ஆண்டவரே யும மைநம்பியிருக்கிறேன்,ஒருகாலும்பசெய வெட்கப்படமாட்டேன். ஆமென்சேசு.

## பிரார்த்திக்கக்கடவோம்.

கரைகாணாததயைச்சமுத்திரமும்வற்றாத
நன்மையூற்றுமாகியசர்வேசுரா! தேவரீ
ரடியோர்களுக்குத் தந்தருளிய நலமுப
காரங்களைப் பற்றி யுமக்கு நன்றியறிந்த
தோத்திரஞ்செலுத்துகிறோம. வேண்டி
க் கொள்ளுகிறவர்கள் கேட்கிற மன்றாட்
டைத்தயை புரிந்தளிக்கிறவராகியதேவரீ
ரடியோர்களைக் கைவிடாமற் பேரின்ப
மோக்ஷசம்பாவனைக்குப் பாத்திரவான்க
ளாக்கிநித்தியகாலத்துக்காசீர்வதித்தருளு
ஞ்சுவாமீ. ஆமென்சேசு.

---

## கர்ப்பணிகளுந்தாய்தகப்பன்மாரு ம நுசரிக்கத்தகுமொழுக்கம்.

கர்ப்பணிகள் தங்கள்கர்ப்பத்துக்குப்பொல்லாங்குவ
ராதபடிக்குத் தகாதவுணவுமுதலியவைகளை விலக்கி
வேண்டிய வெச்சரிக்கையாயிருப்பதுமன்றித் தங்க
ளுக்குந் தங்களுதரத்தில்தரிக்கிற பிள்ளைக்கும் வி
சேஷதேவகிருபை வேண்டியிருப்பதால்டிக்கடிமிகு
ந்தபத்திநம்பிக்கையுடனே தங்கள் சௌக்கியத்துக்
காகவுந் தங்களுதரக்கனிக்காகவுஞ்சர்வேசுரனை மன
றாடுவது முறை. தேவதாயாராதரவையு மற்ற அர்ச்
சியசிஷ்டர்கள் மன்றாட்டினுதவியையுங்கேட்டு வே
ண்டிக்கொள்வதும் நன்மையாமே. தங்கள்பேறுகா
லத்துக்கநுகூலத்தையுமல்லாமல் தங்கள்பிள்ளைக்கு

நல்ல ஞானநற்குணமுதலிய வரங்களையும் விசேஷமாய் ஞானஸ்நானம்பெறுவிக்குந் தேவ அநுக்கிரகத்தையுங் கர்த்தர் கட்டளையிட்டருளவேணுமென்று கேட்டுக்கொள்வதுமன்றிப்பேறுகாலமாவதற்குமுன்னலை பாவசங்கீர்த்தனம்பண்ணித் தேவநற்கருணையைவாங்கவுங்கடவார்கள். அர்ச்சியசிஷ்டர்களின் சரித்திரங்களில் விளங்குகிறபடியே முற்காலத்தில்நேக புண்ணியவதிகள் தங்கள்பிள்ளைகள் பிறக்கிறதற்குமுன்னும்பிறந்தக்ஷணத்திலு மவர்களைச் சர்வேசுரனுக்குக் காணிக்கையாகவொப்புக்கொடுத்து அவர்களுக்காகப் பத்தியுடனவேண்டிக்கொண்டதினாலே யந்தப்பிள்ளைகள் விசேஷதேவகிருபைபெற்று அதிசயமான பத்திமுதலியவரங்களினால விளங்கிப் பெரிய அர்ச்சியசிஷ்டர்களாய்ப் போனார்கள். பிள்ளைபிறக்கையில் தறக்கவஸ்தைக்கண்டால ஞானஸ்நானங்கொடுக்கிறவகையையறிந்த வெவரானாலும்உடனே ஞானஸ்நானங்கொடுத்து அந்தச்செய்தியைக்குருக்களுக்காவதுஉபதேசிகளுக்காவது அறிவிக்கவேணும் அர்ச். ஞானப்பிரகாசர் தாய்க்கருப்பத்தினின்று வெளிப்படுகையில்வர்க் கவஸ்தைதோன்றினதினாலே முழுதும்பிரசவிக்கிறதற்குமுன்னவருக்குஞானஸ்நானங்கொடுத்தார்கள். அப்படிப்பட்டகடினசமயத்தில்வவண்ணமேசெய்வது கடமையாமே. ஞானஸ்நானமில்லாமல ஒருபிள்ளையைச்சாகவிடுகிறது மகாகனமானபாவமுமா யிருக்துமமோக்ஷமடையாமறபோவதற்குக்காரணமுமா யிருக்கிறதினால்ப்படிப்பட்டதற்றதுக்குள்ளானவாகளுக்குச்சர்வேசுரனகடினதீர்வையிடுவாரென்கிறதற்குச்சந்தேகமில்லை. ஒருபிள்ளைசரியாய்ப்பிறந்து சுகமாயிருந்தாலுந்தாமதமின்றியெட்டுநாளைக்குள்ளாக ஞானஸ்நானங் கொடுப்பிக்கவேண்டும். பினனும் பிள்ளைவளர்ந்து வாய்திரும்பத்துவக்கையில முதலவார்த்தையாகச் சேசுமரியேசூசையெ

னகிறவினியதிருநாமங்களை யுச்சரிககவு முதறபலவி ழுதறகுமுனனமே விளுவறிநதவுடன மநதிரங்கறறு ககொண்டு அநுதினமும் கொஞ்சமாவது செபிககவு ம் ஏழுபிராயமாகவே குறிப்பிடத்தையும படித்துக கொண்டு வேதமுறையையெலலாமநுசரிககவுந தக கவொழுங்குடனே தாய்தகப்பன்மார்கள் தனைத் தே வபத்தியாக நடப்பிககககடவார்கள்.

## பிள்ளைபெற அம்பாயப்படுகிறவர் களுக்காக வேண்டுதல்

நீதியுந் தயையுமுள்ள சர்வேசுரா ஆதித்தாயாகிய எவையுமதுகற்பனைமீறிச்செய்தபாவத்துக்காக அவளு மவளாற்பனுகிய சகலஸ்திரீசனங்களும் அம்பாயத்தோடேபிள்ளைபெறத்தீர்வையிடடீரேசுவாமீ. அந்தத்தீர்வைபவித்ற இந்தஸ்திரீயுமிவள் வயிற்றிலேயுமனுகருணையாலுற்பவித்தபிள்ளையுமகாவருத்தத்லெதய நுபவிக்கிறதினுலேகருணைசமுத்திரமான பிதாவே! தேவரீர்தயாபகடாக்ஷத்தால் இவளை நோக்கியும்முடையதிருக்குமாரனுடைய பரிசுத்தமாதாஒருவருத்தமுமில்லாமல்ற்புதமாய்ப்பிறவிநோக்க வர்ங்கொடுக்கத் திருவுள்மான துமபால அந்தஅமலோற்பவியான கன்னிமரியாயியுடையபேறுபேறுகளினுலேயும்வேண்டுதலினுலேயும் இந்தஸ்திரீ

யின்மேலிரக்கம்வைத்து இவள் படுகிறகடி
னவாதையை நீக்கியிரட்சித்தருளுஞ் சுவா
மி. அப்படியேசுகமாய்ப்பிள்ளைபெற்று
ம்மைஸ்துதிக்கக் கோயிலுக்குச்செல்லவு
ம்பெற்றபிள்ளையைஞானஸ்நானத்திலுல்
தேவரீருக்கேபிள்ளையாகச்செய்து அதை
யுமதுதிருப்பணி விடைக்குவளர்க்கவுங்கி
ருபைபண்ணியருளும். ஆமென்சேசு.பர.



# நன்றாய் நினை

## அல்லது

## மாதத்தநுதினத்தியானம்.

### பாயிரம்.

ஒருவனுந் தன்மனதி லியோசியாத்தினாற் பூமியெ
ல்லாம் பாழாகவே பாழாயிற்றென்று எரேமியாவெ
ன்கிற தீர்க்கதரிசியானவர் வசனித்தார். வேதசத்திய
ங்களின்மேல் நினைவுவைத்துத் தியானிக்காததினாலே
தேவபயபத்தியையிழந்து பாவத்திலமிழ்ந்தி நரக
பாதாளத்தில் விழுகிறவர்களித்தனைபேரென்றுகணக்
கில்லை. ஆகையால் தியானஞ்செய்வது மிகவும்வசர
மென்னத்தகுமே. அதுசந்நியாசிகளாலுந் தபோத
னர்களாலுமாத்திர மாகலாமென்றெண்ணுவது தப்
பிதம். ஏனெனி லுன்வீட்டி லுட்கார்ந்திருக்கையிலு
ம் வழியில்நடக்கையிலு நித்திரைவேளையிலும் எழுகி
றபொழுதிலு நமதுகட்டளைகளைத் தியானிப்பாயாக
வென்று பரமகர்த்தரெல்லாருக்கும் பொதுவாகக்கற்
பித்தார். வர்த்தகன் தன் வியாபாரத்தின்மேலும் உழ
வன்வெள்ளாண்மையின்மேலுந்தந்தத்தொழிலாளி
கள் தந்தந்தொழிலின்மேலும அடிக்கடி நினைவுவை
த்து வருகிறபலனென்ன நஷ்டமென்னவென்றும் அ
நுகூலமாவதற் கென்னென்ன செய்யவுந் தேடவும
விலகவு மநுசரிக்கவும் வேண்டியதென்றும் யோசித்
து நடத்துவார்களல்லவோ? அப்படியே உன்னீடே
ற்றத்துக்காகத் தக்கயோசனையெல்லாஞ்செய்துந
டக்கவேண்டாமோ? இப்படிப்பட்டயோசனையைப்

பிர

பண்ணித் தன்னாவியன்றமட்டுந் தன்னிடத்தில்தேவ பத்திமுதலிய புண்ணியப்பற்றுதலைக்கிளப்பித் தனக்கு வேண்டிய தேவ அநுக்கிரகத்தைக்கேட்பதே தியானமென்னப்படும். ஆகையால் இலௌகீககாரியங்களுக்காக யோசனைசெய்யப் புத்தியுநேரமுமிருக்க வுன்னாத்துமவிரட்சணியத்துக்குமாத்திர மிதெல்லாயில்லையென்னும லாசையுட னித்தியானங்களைவாசித்துத் தக்ககவனத்துடனே நன்றாய்நினை. பரகதியின் பேரின்ப ஆநந்தத்தையடைவதற்குத் தியானமகாவுதவியாயிருக்கிறதினால் நாள்தோறும் ஒருநாழிகை யிரண்டுநாழிகையாவது தியானிக்கப் பிரயாசப்படுவாயாக. மூத்தமுந்தத் தியானத்துக்கேற்ற நேரத்தையுமிடத்தையுந் தெரிந்துகொண்டு பராக்குக்கிடங்கொடாமல் பிரபஞ்சத்துக்கும் இலௌகீகவிசாரங்களுக்கும் ஆசாபாசங்களுக்கும் உன்னிருதயத்தின் வாசலையடைத்துக் காப்பாயாக.

உ-வது. - சர்வேசுரனுடைய சந்நிதியிலிருக்கிறயென்று மிகுந்தவிசுவாசத்தோடேநினைத்து அவர்சமுகத்திற் சாஷ்டாங்கமாகவிழுந்து துக்கமனஸ்தாபத்தோடே முன்செய்தபாவங்களுக்குப் பொறுத்தலைக்கேட்டுத் தகுகவிதமாய்த் தியானஞ்செய்வதற்கு இஸ்பிரீத்துசாந்துவி னநுக்கிரகத்தை யாவலுடனிரந்து மன்றுடுவாயாக.

ந-வது. - அந்தந்தநாளைக்குக் குறித்திருக்கிறதியானத்தைப் படபடப்பில்லாமல மிகுந்தகவனத்தோடே வாசித்து அதிலடங்கிய சத்தியங்களையுணர வேண்டியநேர மதுகளையோசித்துக்கொள். உன்மனமிளகப்பண்ணும விஷயங்களிலே விசேஷமாயூன்றித் தேவபயபத்தி நம்பிக்கை நன்றியறிதல் பாவவெறுப்பு மனஸ்தாபம் புண்ணியத்தினாசைமுதலிய மனப்பற்றுதலைக்கிளப்பிச் சர்வேசுரனைஸ்துதித்துனக்குவே

ண்டியவரப்பிரசாதங்களைக் கேட்பாயாக. உன்னிலு ள்ள யாவத்துர்க்குணங்களைக்கண்டறிந் துன்னடக் கையைத்திருத்தவு நீ சார்ந்திருக்கிற குற்றங்களைவி சேஷமாய் விலகவு முறுதியாகப்பிரதிக்கினையண்ணி யதையுத்தியாவித்தசத்தியங்களையுமத்தினத்திலேதா னே வேளைக்குவேளை ஞாபகப்படுத்தி நேரிடுஞ்சமய ங்களில் அந்தப்பிரதிக்கினை நிறைவேற்றுவாயாக.

## ௨௯-நாள்.

## மனிதர்கதி.

௧. நீ பரிச்சேதமில்லாதிருக்கையி லுன் னையுண்டாக்கினவர் சர்வத்துக்கும் ஆதி காரணமாகிற பரமகர்த்தரல்லோ. எப் படியெனி ல்வரோ ஆதியில்லா நித்தியநே சத்தால் உன்னைச்சிநேகித்து உன்னாத்து மத்தையு முடலையு முன்னிலுள்ள சகலச த்திநிதத்துவங்களையுஞ் சிஷ்டித்தருளினா ர். ஆகையால் நீயுமுன்னிலுள்ள சகலநன் மையுஞ் சர்வேசுரனுக்குச் சொந்தப்பொ ருளாமே. அப்படியிருக்கையி லெந்தெ ந்தவுடைமையும் உடையவனைச் சேரவே ண்டியதால் நீ சர்வேசுரனுக்குக் கீழ்ப்ப டிந்து மெய்யான சிநேகத்தா லவரிடத்

ிற் சேரவேண்டாமோ? பாவத்தினல்வ ளாவிட்டகன்று நீசப்பசாசுக்குன்னையடி மையாக வொப்புக்கொடுக்கிறதெப்படி ப்பட்ட அநியாயமுள்ள துரோகம்! இ னுவளாக்கு மெத்தனையோவிசை யவரு க்கிப்படிப்பட்ட துரோகஞ்செய்து கீழ் ப்படியாமல்வர்கட்டளைமீறி நடந்தாய்? ஆனாலுனக்கதினற் கேடுவாராதென்கிற வ பத்தநினைவினல் மோசம்போகாமல் ந ன்றாய்க்கவனிக்கவேண்டியதாவது: நீவே ண்டும் வேண்டாமென்றாலுங் கடைசியி ற்சர்வேசுரனுக்குக் கீழ்ப்படிவதுதப்பா து. அதெப்படியென்றால் ஒன்றிவ்வளா வணங்கி நேசத்தால்வரோடேகோபித் து அவருக்குப்பிரியமுள்ள பிள்ளையாயி வருடைய பேரின்பவிராச்சியத்தை ய டையவேண்டும். ஒன்றி ல்வளா நிந்தித்த துரோகத்தால் அவருடைய கோபாக்கி னிக்குள்ளாகி அவருடைய நீதிக்கடிமை யா பென்றென்றைக்கும் நரகத்திலுபா திப்படப்போகிருய். இவ்விரண்டிலொன் றுனக்குவேண்டியதைத்தெரிந்துகொள்.

உ. கர்த்தரொதினிமித்தமுன்னையுண்டா க்கி யிவ்வுலோகத்திலேவைத்துக் காப்பா ற்றிக்கொண்டுவருகிருர்? நீயிவ்வுலகிலவரை யறிந்து நேசித்துத் தொழுதுசேவிக்கவு ம்றுவுலகிலென்றென்றைக்கு மவரைத்த ரிசித்து அவரிடத்தில் மட்டில்லாத பேரி ன்பபாக்கியத்தை யநுபவிக்கவு மல்லா தேவேறல்ல. ஆதலா லவரே யுன்கிரியை யெல்லாவற்றுக்கு மொடுக்கமுங் கதியு மென்றறிந்து அவரைப்பற்றி யுன்கிரியை யெல்லாஞ் செய்யக்கடவாய். நீதேடவே ண்டிய நித்தியபாக்கியம் அவரே. அப்ப டியிருக்க அவரைமறந்து கதிதப்பின வனுய்ப் படைப்புண்டவஸ்துக்களினு லு னக்குப்பாக்கியத்தை நாடுவானேன்? சர் வேசுரன்மாத்திரமே யுன்னுசைகளையெ ல்லாம் பூரிக்கத்தக்கவரல்லாதே மற்றதெ ல்லா முனக்குத்திர்ப்தியை வருவிக்கமா ட்டாது. ஆகாயத்திலெறியப்பட்டகல் த னக்குரிமையாகிய பூமியிலேசேருமட்டு ம் நில்லாமல் திரும்பிவிழுகின்றது. நதி களின்சலம் தனக்குரிமையாகிய கடலிற்

சேருமளவும் நில்லாதோடுகின்றது. நீயா காயத்தை நாடியெழும்புகின்றது. அப்படியிருக்க நீ மாத்திரமுனக்குக் கதியுமுரிமையுமாகிய பரமகர்த்தரை நேசத்தால்நாடித்தேடாதிருப்பானேன்? பாக்கியத்தின்மேலுனக்குள்ள தாகந்தீர வுயிர்தருந்தண்ணீரூற்றாகிய கடவுளைப் பிறக்கணித்துத் துர்க்கந்தச்சேறாகிய இவ்வுலகிகப்பொருட்களை யிச்சித்துத்தேடியலைவதேது?

௩. சர்வேசுர னிவ்வுலகத்திலுள்ள வஸ்துக்களையெல்லா முனக்காகச்சிஷ்டித்து நீயவரைச்சேவிப்பதற் குதவியாகத்தந்தருளினரொழிய மற்றப்படியல்ல. ஆகையாலெல்லாத்திலுமெல்லாத்தைப்பார்க்கிலுஞ் சர்வேசுரனைப்பிரதானமாய்ச் சிநேகித்துச் சேவித்து நீ சுதந்தரிக்கிற பொருளெல்லாம் செய்கிறதொழிலெல்லா மநுபவிக்கிறசுகமெல்லா மவருடைய பயபத்தியோடே சுதந்தரித்துச் செய்தநுபவித்து அவருடையதோத்திரத்துக்குச் செலுத்தக்கடவாயல்லவோ. நீயோவென்றாற்

சர்வேசுரனைவிடப் பிரபஞ்சசுகசெல்வப்
பொருட்களைவிரும்பி அதுகளையே யுன
க்குக்கதியாகவைத்து அதுகளைக்கொண்
டு சர்வேசுரனுக்குத் துரோகஞ்செய்கிற
தேது! இராசாவளித்த வாஸ்திகளைக்கொ
ண்டு அவருக்கேவிரோதமாய்ச் சதிமான
நடத்தி அவரிடத்திற்பெற்ற கத்தியைக
கொண்டேயவனைக்குத்தத்துணிகிற சேவ
கனெல்லாத்தையுமிழந்து கடோரவாக்கி
னைக்கும் சாவுக்குமாளாய்ப் போகிறது
போலே சர்வேசுரனுக்குத்துரோகஞ்செ
ய்கிற மனிதன் சந்திரசூரிய நட்சத்திரங்
களின் வெளிச்சத்தையு முலகவாசத்தை
யும் பூமியில்விளையுங் கனிமுதலியவுணவு
களையும் சம்மனசுகளி னுதவியையும் ப
டைப்புண்டமற்றச் சகலவஸ்துக்களி னநு
பவத்தையுந் தன்சீவனையுமிழந்து நாச
மாய்ப்போகிறதுக்குப் பாத்திரவானாகி
றான். ஆ!பாவீ, சர்வேசுரனுக்கேற்காத் து
ரோகியானபின்பு நீ சீவிக்கிறதே தேவ
பொறுமையி னற்புதமல்லாதே வேறல்
ல. இன்னமவருக்கு நன்றிகெட்டவனாய்த்
துர்மார்க்கத்தில் நிலைத்திருக்கலாமோ?

ஆண்டவருனக்கு வெளிச்சங்கொடுக்கச் சிஷ்டித்த சூரியனிருளை வீசினால் அன்னமாக நியமித்த தானியம் விஷமானால் தாகத்துக்குண்டாக்கின தண்ணீர் நெருப்பானால் அதுகளையென்னென்று சொல்வாய்? சர்வேசுரனுக்கூழியஞ் செய்யவுண்டாக்கப்பட்ட வஸ்துவாகிய நீ யவனை நினைக்கப் புத்தியும் நேசிக்க மனமுந் துதிக்க வாக்குஞ் சேவிக்கப் பலமுதலியவையும் பெற்றுக்கொண்டிருக்கையில் அவனை நினையாமலுஞ் சிநேகியாமலுந் துதியாமலும் சேவிக்காமலுமிருக்கிறதென்ன? உலகத்திலிதைவிட வக்கிரமமுண்டோ! ஆனால் மூட்டுப் பிசகினவெலும்பு தன்னிடமாகச் சேருமட்டுக்கு நொந்து வருந்துகிறதுபோலே நீயுனக்குரிமையாகிய சர்வேசுரனோடு மெய்யான பத்திநேசத்தாலொருமிக்குமளவும் வருந்தியலைந் துண்மையான பாக்கியத்தை யநுபவிக்கமாட்டாய். வேதபாரகரொருவரெழுதினபடி சர்வேசுரனுக்காக வுண்டாக்கப்பட்ட விருதயம் அவரிடத்தில் இளைப்பாறுமட்டுக்கு மதற்கிளைப்பாற்றியில்லை. கடலின் சலந் தாகத்தையாற்றாமல் அதிகப்படுத்தி வருத்துகிறதுபோலே இலௌகீகத்தினுடைய அநித்திய செல்வத்தினநுபவமு மனிதருக்கு வருத்தத்தையுமிளைப்பையும் வருவிக்குமொழிய மற்றப்படியல்ல. ஆ! சகல நன்மைச் சுரூபியாகிய கர்த்தர் நமக்குரிமையுங் கதியுமாயிருக்கிறது நமக்கெத்தனையோ பெருமை யெத்தனையோ பாக்கியம்! இதை யோசித்து அர்ச்சியசிஷ்ட பொனவெந்தூர் முதலிய மகாத்துமாக்கள் பிரமித்து ஆநந்தசந்தோஷத்தோடு களிகூர்ந்து சர்வேசுரனைச் சிநேகித்து ஸ்துதித்துச் சேவித்ததுபோலே நீயு நேசத்துடனே ஸ்துதித்து என்தேவனே, என்கர்த்தாவே, என்கதியே, என்பாக்கியமே! என்னிலுள்ளதெல்லாந் தேவரீருண்டாக்கினீரே யெல்லாந் தேவரீருக்கொப்புக்கொடுக்கிறேன். அடியேனிவ்வுலகத்தி

விடைவிடாமல தேவரீரைநேசித்துத் தேவரீருடைய பேரின்பதரிசனத்துககுப பாத்திரவானுகத்தககதாக வனுககிரகஞ்செய்தருளுமென் றடிககடிவேண்டிக கொண்டுமிருநத-த்தி சுறுசுறுபபுடனே மரணபரிய நதமவரைச் சேவிபபாயாக.

---

## உம். - நாள்.

---

### ஈடேற்றத்தி னவசரம்.

க. ஆத்துமவீடேற்றத்தைப்போலே யுலோகத்திற்பெரிதான காரியமில்லை அரசரிராச்சியங்களைப் பிடிக்கிறதுங் கோட்டை யரமனை மாளிகைகளைக் கட்டுகிறதுஞ் சண்டைசமாதானங் கலியாணம்பேசிமுடிக்கிறது மிவைமுதலான விராச்சியபாரநடத்தைகளும் மண்ணுலகில் முக்கியமாவெண்ணப்பட்டாலு மீடேற்றக்காரியத்தின்முன்பாக விழலுஞ் சிறுபிள்ளைகள் மண்ணினுற் குடிசைகோட்டைகளைக் கட்டி யழிக்கிறவிளையாட்டுக்குச் சமானமுமாமே. இப்பிரபஞ்சப்பொருட்களெல்லாம் மண்ணுமழிவுள்ளதுமா யிருக்கையால் அதுகளு மதுகளுக்குச் சம்பந்தமா

ன சகலமு மற்பமென்னத்தகும். ஈடேற்ற மோவென்றால் நித்தியப்பிரதாப மகிமை பேரின்பமுள்ள மோக்ஷவிராச்சியத்தைப் பெறுதலுஞ் சர்வத்துக்குங்கர்த்தாவாகிய சர்வேசுரனோடே பிரியாதபந்தனமாக வொன்றித்தலுமாகையால் நிகராதமாட்சிமையுள்ளதாமே. ஒருநிமிஷத்துக்கு நித்தியமும் பூமிக்குப் பரலோகமும் அழிவுள்ளவஸ்துக்களுக்கு அழிவில்லா நன்மைச்சுரூபியாகிய கடவுளுமெவ்வளவுமேன்மையோ அவ்வளவிவ்வுலக்காரியங்க ளெல்லாத்துக்கும் ஈடேற்றக்காரியமே மேன்மையென்பது நிச்சயம். இதிலேயே மனிதனுடைய நன்மைபுண்ணிய சாங்கோபாங்க பாக்கியமெல்லாமடங்கி யிருக்கின்றது. இதிப்படியிருக்க மற்றதெல்லாங் கவனித்துச் சகலத்துக்கும் பிரதானமாகிய வுன்னுத்தும வீடேற்றத்தை விசாரியாமற்போகிறது எப்படிப்பட்டமதிகேடுங் குருட்டாட்டமும் பைத்தியமுமாயிராது!

௨. ஈடேற்றமானது யாவற்றுக்கு மே

ன்மையான காரியமாகையி லதற்குத்தக் க பிரயாசப்படவேண்டியதல்லாம லசட்டையாயிருக்கலாகாது. பரதேசத்திலு மடிமைத்தனத்திலுநின்று தன்சென்ம தேசமாகிய பெரியதோ ரிராச்சியத்துக் கு இராசாவாகவும் முடிசூடவுமழைக்க ப்பட்ட வெளியனொருவன் தானதற்குப் போய்ச்சேராத்தாமதஞ்செய்வானாகில்மு டியு மிராச்சியபாரமு மிழந்துபோவதுமன்றித் தன்சத்துருக்களால் தனக்குத் தோர்வையுஞ் சாவுந் தப்பாதென்கிறதை யறிந்தாலும் வழியிற் சிறுபிள்ளைகளோடு வீண்விளையாட்டிலே நேரம்போக்கினால் அவனையென்னென்றுசொல்வாய்? நீயே பரலோகவிராச்சியத்துக் கழைக்கப் பட்டவன் அதைச்சுதந்தரித்துக் கொள்ளத்தேடாததேன்? உன்னாத்துமப்பிராணனைப்பறிக்கப் பார்த்துக்கொண்டிருக்கிற ஞானசத்துருக்களைச் செயிக்கப் பிரயாசப்படாமல் வலிய அவர்கள் தந்திரத்துக்குங் கேட்டுக்கு முள்ளாகிறதென்ன? கர்த்தருனக்காக நியமித்திருக்கிறமோக்ஷப்பே

ரின்பத்தையுமகிமைக்கிரீடத்தையுங்கவனி யாமல் உலோகப்பிரபஞ்சவிழலான அற் பவிளையாட்டுக்களிலுஞ்சீவியகாலத்தைப் போக்கிறதென்ன? உன்னீடேற்றந்தப்பி னு லுன்கேட்டுக்குப் பரிகாரமில்லையெ ன்றறியாயோ? நித்திய பாக்கியத்துக்கு வழிலாய நித்திய நிர்ப்பாக்கிய வேதனைகி டைக்குமென்று யோசிக்கிறதில்லையோ? இதைவிட வுலோகத்திலுனக்குக் கவனி க்கத்தக்க பெரிதானகாரியமேது? பசா சுன்னாத்துமத்தைக்கெடுக்க வெந்நேரமு மலுவலாயிருக்க நீயுன்னீடேற்றத்துக்கா க வோரற்பபிரயாசமும் படாம ல்சட் டையாயிருக்கிறது நியாயமோ? உன்னிர க்ஷணியத்துக்காகப் பரமகர்த்தர்தாமேப ட்டபிரயாச மெம்மாத்திரமென்று நினை த்துப்பார். அதற்காகவே மனுஷனாய்ப் பிறந்து படாதகஸதியவமானமெல்லாம் பட்டுச் சிலுவையிலேமரித்ததன்றியு மி ன்னம்நாதினமுந் திவ்வியபூசையில் தம் மைப்பலியாகச் செலுத்திக்கொண்டுவரு கிறார். அப்படியிருக்க வுனக்குச்சொந்த

காரியமாகிய வுன்னீடேற்றத்துக்காக நீ யொன்றுஞ்செய்யாதிருக்கலாமோ? மோசம்போகாதே. அர்ச். - அகுஸ்தீனென்கிறவர் திருவுளம்பற்றினபடியே யுன்பிரயாசமின்றி யுன்னையுண்டாக்கினகர்த்தர் உன்பிரயாசமின்றி யுன்னை யிரட்சிக்கமாட்டார். இதைநன்றாய்நினை.

ரு. ஈனமும் அழிவுமுள்ள சரீரத்தைப்போலிராமல் தேவசாயலாகி யழியாத்தன்மையுள்ள வுன்னாத்துமம் அளவிறந்தமேன்மைபொருந்தினதாகிலும் அதின்மட்டி லெவ்வளவோ அசட்டைத்தனமாயிருக்கிறாயென்றுபார். சரீரத்துக்கு அற்பநோவாகிலும் வந்தால் நல்ல வைத்தியனையுந் தக்கமருந்தையுந்தேடிப் பரிகாரஞ்செய்கிறாய். அதற்கன்னமாடை யாபரணஞ் சம்பாதிக்க இரவும்பகலுந்தண்டிக்கிறாய். உன்வீடு தோட்டம் வயல்களையும் நீ வளர்க்கிறநீசமிருகங்களையுங் குறையின்றிவிசாரிக்கிறாய். ஒருமண்கட்டிக்கும் நிந்தையான ஒருவார்த்தைக்கும் பெரிய வியாச்சியமாடுகிறாய். ஆனால் -ஞானவியா

தியாகிய பாவங்களைப்பரிகரித்து ஆத்து மத்தைக்குணமாக்கவு மதின்சீவியத்துக் காக வேண்டிய திவ்விய போசனத்தைப் பெற்றுக்கொள்ளவும் மங்காவொளிபொ ருந்தின விரத்தினங்களாகிய சுகிர்தபுண் ணியங்களா லதையலங்கரிக்கவு நீயொ ருபிரயாசமும் படவில்லை. பசாசு அதிலு ள்ள நன்மையெல்லாம்பறித்து அதைத் தனக்கடிமையாக்கி அதற்கு மோக்ஷசுத ந்தரத்தைப் போக்கடித்து அதைநரக பாதாளத்துக்கிழுத்துக்கொண்டாலு மதி ன்மேலுனக் கற்பகவலையுமில்லை. ஐயோ! பாவீ, உன்னாத்துமத்தை யிப்படி அ நியாயமாய் மோசப்படுத்தலாமோ? நீச மிருகத்துக்காவது நீ பகைக்கு மெதிரா ளியி னாத்துமத்துக்காவது வஞ்சனைசெ ய்யவிரும்புவாயாகி லிதைவிடவதிகஞ்செ ய்யக்கூடுமோ? ஆனால் உன் னாத்துமங் கெட்டா லாருக்குக்கேடு? ஈடேறினா லா ருக்குநன்மை? உனக்குத்தானேயென்று இன்னங்கண்டுபிடிக்கவில்லையா? இதைந ன்றாயோசித்தால் உன் னாத்துமவீடேற்

றத்துக்கு வேண்டிய வேதசத்தியங்களைக் கற்றுக்கொள்ளவும் வேதகட்டளைகளை யநுசரிக்கவும் பின்வாங்குவாயோ? குருக்கள்முதலிய பெரியோர்க ளுன் நன்மைக்காக வுனக்குச்சொல்லுகிற புத்திமதிகளையுங்கேளாமற் பிறக்கணித்துத் தேவகற்பனையையுமீறி யின்னமுன்னாத்துமத்தைக் கெடுத்துச் சேதப்படுத்தக்கூடுமோ?

ஒரிராசா பன்னிரண்டாம் ஆசீர்வாதப்பரென்கிற அர்ச். பாப்பானவரிடத்தில் அநியாயமான வொருத்தரவைக்கேட்டதற்கு அவ ரதுகூடாதென்பதற்குவகணித்தமறுமொழியாவது: இரண்டாத்தும நமக்குண்டானா லுமக்காக ஒன்றை யபாயப்படுத்த நாஞ்சம்மதிக்கலாமாக்கும். ஆனால் ஒன்றுமாத்திரமே நமக்கிருக்கையாலந்தெந்த விலௌகீகப் பொருளைப்பற்றியு மதைச்சேதப்படுத்தமாட்டோமென்றார். அர்ச். சவேரியார் கல்விசாஸ்திரங்களைப் படிப்பிக்கிறதி லுலக கீர்த்திபெருமையை யநுசரித்துக்கொண்டு வருகையில் அர்ச். இஞ்ஞாசியா ரவரை நோக்கி மனிதனானவன் உலகமெல்லாந்தன்வசப்படுத்தினாலுந்தன்னாத்துமத்தைச் சேதப்படுத்தினாலவனுக்குப்பிரயோசனமேதென்று சேசுநாதர் திருவுளம்பற்றின வாக்கியத்தை அடிக்கடியுரைத்துவருவார். இந்தவாக்கியம் ஒரு அம்புபோல் அவருடையமனதி லுறுதியாய்த்தைத்ததினாலே யுலோகத்தைமுழுதும் வெறுத்துத்தேவதோத்திரத்துக்கு மனிதரீடேற்றத்துக்கும் தமதுசீவனைச்செலவழித்துப் பெரிய அர்ச்சியசிஷ்டரானார். நீயோவெனில் அந்தத்தேவவாக்கியத்துக்கு முழுதும்விரோதமாய்நடந்து ஓரற்பசந்தோஷ மற்பபிரயோ

சனமுதலிய விழலானமுகாந்தரத்தைப்பற்றித் தே
வகட்டளைமீறி யுன்னாத்துமத்தைச் சேதப்படுத்துகி
றதெப்படிப்பட்டமதிகேடு? ஒரே ஒரு காரியமாத
திரம் அவசரமென்று கர்த்தர்திருவுளம்பற்றினார். அ
ந்தவொரேயவசரமான காரியமென்னவென்றால் உன்
னாத்தும வீடேற்றமென்றறிக. ஈடேறிப் பேரின்பவி
ராச்சியத்தில் வாழ்கிறதற்கெல்லாரு மாசைப்படுகிறா
ர்களென்பதுள்ளதுதான். ஆசைப்பட்டாலு மதற்
கநேகரோரற்பமுயற்சியுஞ் செய்யாமலும் புண்ணி
யசம்பாவனை சேர்க்காமலு முலகத்தாசாபாசங்களை
யநுசரித்துவருகிறார்கள். ஆனாற்குடியானவன் நல்லவெ
ள்ளாண்மை தனக்குவிளையவேணுமென் றபேட்சித்
தாலு முழாமலும் விதைக்காமலு மிருந்தால் விளையு
மோ? ஆஸ்திசம்பாதிக்க வர்த்தகனுவலாயிருந்தாலு
ம் வியாபாரநடத்தாமற் சும்மாயிருந்தால்வருமோ?
அப்படியே யீடேறவாசைப்படுகிறேனென்றாலு மத
ற்குப்பிரயாசப்பட்டுப் புண்ணியஞ்செய்யாதவுனக்
கு மோக்ஷசம்பாவனை கிடைப்பதெப்படி? ஆகை
யால் நீ செய்யுந்தந்தக்கருமத்துக்குமுன் இதுவெ
ன்னீடேற்றத்துக்குத் தகுமோ தகாதோவென்றுயோ
சித்து அதற்குத்தகுதியான நற்கிருத்தியத்தைமாத்
திர மேற்றுக்கொண்டு உன்கிரியையெல்லா மோக்ஷ
த்துக்குப் பாத்திரமானபுண்ணியமா யிருக்கும்படி
யாக அதுகளைத் தேவதோத்திரமாகச்செய்து எல்
லாத்திலும் பத்திசுமுத்திரையாக நடக்கக்கடவாய்.
இவ்வண்ணமே அந்தவொரே அவசரமான காரி
யத்தை யுன் சீவியகாலமெல்லாந் தக்கவனத்தோ
டேவிசாரித்து மற்றதெல்லாம் விழலெனப்பிறக்கணி
த்துப் பசாசுமுதலிய சத்துருக்களாலுன்னீடேற்ற
த்துக்குவரும் விக்கினமெல்லாந் தைரியத்தோடேவி
லக்கிப் பேரின்பபாக்கியத்தைத்தேடிப் பெறுவா
யாக.

௯ம். - நாள்.

## உலோகத்தை வெறுத்தல்.

௧. உலோகமானது பசாசையுஞ் சரீரத்தையுஞ்சேர்ந் துன்னைச் சதிமானமாய்ப் பகைத்து நித்தியகேட்டுக் குள்ளாக்கத் தேடுஞ் சத்துருவாமே. அதெப்படியெனில் மாயவின்பசுகங்களினாலும் பொய்யானசலாக்கியப் பெருமையினாலு மழிவுள்ளவைசுவரிய திரவியங்களினாலுமுன்னை மயக்குவித்துச்சகல துர்மார்க்கங்களிலுமிழுத்துச் சர்வேசுரனுக் கேற்காததுரோகியாகச்செய்து பாவவிஷத்தா லுன்னாத்துமத்தைக்கொன்று உன்னைநரகத்திலே தள்ளப்பார்க்கின்றது. அப்படியிருக்க நீ யதைநம்பி யதின் துர்ப்போதனைகளை யநுசரித்து நித்தியகேட்டுக்குள்ளாகத் திரிகிறதென்ன? உன்பகையாளி கொடியநஞ்சைத் தித்திப்பானபதார்த்தத்திலே கலந் துனக்குப் பொசிக்கக்கொடுத்தா ல் தையறிந்த நீ யினிமையைப்பற்றியந்தவிஷத்தையு முட்கொள்ளுவாயோ? அதில்

லையே. ஆனாலுன்பேரில் வைராக்கியமுள்ள சத்துருவாகிய வுலோகத்தைநம்பி யதின் கெட்டசுகசெல்வமுதலிய வின்பங்களை யிச்சித்துக்கொள்வானேன்? அவைகள் மதியீனர்களுக் கினிப்பாய்த்தோன்றினாலு முதிர்ந்தநஞ்சாயிருக்கிறதொழிய மற்றப்படியல்ல. எல்லாஞானிகளிலு ஞானியாயிருந்த சலொமோனென்கிறவர் சுகசெல்வங்களினால் மயங்கிக்கெட்டு அவைகளையெல்லா மநுபவித்தபின் சலித்துவெறுத்து அவைகள் விழலிலும் விழலென்று நிச்சயித் துரைத்தார். எத்தனையோபே ருலகதுராசாபாசங்களை யநுசரித்ததினா லிவ்வுலகிலாத்துமமு மதியும் வெட்கமுங் கீர்த்தியும் பாக்கியமுங்கெட்டபின் புநித்தியநரகாக்கினைக்குள்ளானார்கள்.

௨. உலோகத்தைவிரும்பிச்சேவிப்பதினால் வரும்பலனென்ன? உலோகமானது தன்னைப்பின்சென்று அநுசரிப்பவர்க்கு நிறைந்தசந்தோஷமு மிக்கபாக்கியமுமுண்டாமென்று பொய்நம்பிக்கை தந்தாலும் எத்தனையோபேரை முழு

மோசம்போக்கின்றது. எத்தனையோபே
ர் தங்கள்சீவியகாலமெல்லா முலோகத்தி
ன்மேலாசைவைத்து வியர்த்தமா யிதின்
சுகங்களைத்தேடிப் பலன்றற பிரயாசப்ப
ட்டுச் சலித்தார்கள். சிலருக் கொருவகை
செல்வங்கிடைத்தாலும் அது நிலையில்லா
த்துந் திருத்தியைவருவியாதது மாகையி
ல்துக்குப் பாக்கியமென்கிற பேர் தகு
மோ? அதில்லையே. உலோகத்தின் வெகு
மானம் திரவியம் இன்பசுகசெல்வ சந்
தோஷமெல்லாம் அழிவல்லவோ? அதெல்
லாமொருநாளைக்குள் மலர்ந்துவாடும்பூ,
ஒருநிமிஷத்தில் நீர்மேற்கிளம்பியழியுங்
குமிழி, ஒருக்ஷணம் பிரகாசித் தொழியுமி
ன்னல், மனிதனையேய்க்குங் கனா, பிடி
படாதுமறையும் புகையல்லாது வேறொ
ன்றுமல்ல. பெற்சியாருடைய விராசா
வும் பேர்போனவனுமாகிய முதற்கொ
ஸ்ரோயேஸென்கிறவன் சிலகாலஞ் சிங்
காசனத்தில் வாழ்ந்தபின்பு சண்டையிற்
றோர்வைப்பட்டுச் சஞ்சலத்தாலே செத்
தான். இரண்டாங்கொஸ்ரோயேஸ் சிலவ

ருஷிகாலஞ் செயசீலனுயாங்காரத்துடன் இராச்சியபாரம்பண்ணினபின் தானுந் தோர்வைப்பட்டுத் தன்சொந்தமகனுற் றன்பொக்கிஷசாலையிற் சிறையாகவடைக்கப்பட்டுப் பொன்வெள்ளியல்லா தோராகாரமுமில்லாமல் மிகுந்த திரவியங்களுக்குள்ளே பட்டினியாய்க்கிடந்து கடோரபசிவாதையாலேசெத்தான். உலகபோய்ந்நன்மைகளை அநுபவிக்கையிலே தானே யெத்தனையோ கஸ்திநோவு சஞ்சலங்கூடக் கலந்திருக்கிறது! சிங்காசனத்தில் ரசனும்தன்மாளிகையில் ஐசுவரியவானும் சிற்றின்பத்திற் காமாதுரனு மெத்தனையோகவலை கிலேசதுன்பதுரித மநுபவிக்கிறூர்கள். இதையறிந்தநீ யின்னமூலகமாய்கையைநம்பி யநுசரிப்பதென்ன? ஒன்றுக்குமுதவாத மின்மினிப்பூச்சியைப் பின்றொடர்ந்தோடித் தவிப்பானேன்? முள்ளுக்களை மூடுகிறமலர்களைப் பறித்துக் காயப்படுவானேன்! உலோகத்தின் கெட்டசுகசெல்வங்களே மாய்கை, அவைகளின்பலனேபாவம், அவைகளின்முடிவே நர்கமொழியவேறல்ல.

௫. ஒருவன் ஈரொசமான்களைச் சேவிக்க லாகாதென்பது கர்த்தர்திருவுளம்பற்றின வாக்கியமாமே. ஆதலா லிவருக்கு முலகத்துக்கு மூழியம்பண்ணக்கூடாது. அர்ச். சின்னப்பரென்கிற அப்போஸ்தலர் நான் மனிதர்க் கின்னம்பிரியனாயிருப்பேனாகிற் கிறீஸ்துநாதருக் கூழியனாயிரேனென்றார். அர்ச. யாகப்பரோவெனில் உலோகத்தோடு சிநேகமாதல் சர்வேசுரனைப்பகைத்தலாம், இகலோகத்துக்குச் சிநேகிதனாகவிரும்புகிறவன் சர்வேசுரனுக்குப்பகைவனாகிறானென்றெழுதினார். உலகபோதனையுங் கற்பனைகளும். நடத்தைகளும் ஆங்காரம் கர்வம் உலோபங் காமம் பகை முதலிய ஆசாபாசங்களையேவி வளர்ப்பிக்கிறதினால் சேசுநாதர்கற்பித்த சுகிர்தவொழுக்கத்துக்கு முழுதும்விரோதமாயிருக்கின்றது. இப்படியிருக்க உலோகத்தையிச்சித் தநுசரிக்கிறவனைக் கிறீஸ்துவனென்றெண்ணுவதெப்படி? நீ ஞானஸ்நானம்பெறுகையி லுலோகத்தி னாரவாரங்களாகிய பசாசினாரவாரங்களை விட்டுவிட்

டேனென்று பிரமாணிக்கங் கொடுத்தநி
ஞலே யுலோகத்தின்மாயப் பொய்ந்நன்
மைகளைமறுத்துக்காலால்மிதித்தாற்போ
லாயிற்று. அதற்குப்பிறகு பூச்சியமாயது
களைத் தலைமேல்வைத்துப் பிரியத்துட
னே யநுசரிக்கக்கூடுமோ? ஒருமனிதனு
க்குக் கொடுத்தவார்த்தை தப்பலாகாதெ
ன்று எல்லாருஞ் சொல்வார்களல்லோ. அ
ப்படியிருக்கப் பரலோகமும் பூலோகமு
ஞ் சாட்சியாகச் சர்வத்துக்குமதிபதியிரா
சாவாகிய கர்த்தாவுக்குத்தந்த பிரமாணி
க்கத்தைமீறி யவருடைய பகையாளியி
ன் பாரிசமாகிற தெப்படிப்பட்டவஞ்
சனையுந் தேவத்துரோகமுமா யிருக்கும்.
இதினாற் சர்வேசுரனுடைய பிள்ளையென்
கிறபட்டத்தையும் பரகதியினித்தியபேரி
ன்பத்தையுமிழக்கிறாய். அற்பநேரத்திலழி
யு மிலௌகீக செல்வத்தைப்பற்றி யுலோ
கத்துக்கும் பசாசுக்குமடிமையாகி நரக
த்துக்காளாய்ப்போகிறாய். இதெப்படிப்
பட்டகேடு? இதை நன்றாய்நினை.

இந்தப்பரமநியாயங்களையெல்லாம் அநேகபிரபுக்
களும இராசாக்களும் சக்கரவர்த்திகளுமுதலா யுண

ர்த்து இலௌகிகத்தைமுழுதும் வெறுத்துச்சந்நியா சம்பண்ணி அருந்தவத்தைமுடித்து நித்தியபேரின்ப முடியையடைந்தார்கள். பிரபுமகனான அர்ச்.-பெத்நார்தென்கிறவ ருலோகவாழ்வெல்லா மாய்கையும் பொய்யும் விழலுங் கேடுமென்றறிந்து தம்முடைய சகோதரரோடும் வேற்நேகதுரைமககளோடுஞ் சகலத்தையுந்துறந்து வனாந்தரத்திற் சந்நியாசம்பண்ணப்போவதற்குத் தமமாளிகையைவிட்டுப் புறப்படுகையில் தம்முடையகடைசி யிளந்தம்பியைககண்டு, தம்பீ சுகமாயிரு எங்களாஸதி காணியாட்சியெல்லா முனககேயிருககுமென்றார். அதறகு அச்சிறுவன் நீங்கள்பரலோகத்தை யுங்கள்பங்காகவைத்துககொண்டெனககுப்பூமியைமாத்திரம் விடுகிறீர்களே. இது சரியானபகுத்தலல்லவென் றுரைத்தான். பின்னர்த் தானு மூலகத்தைவெறுத்து அவர்களோடேசந்நியாசம்பண்ணி யநேகருக்கு நல்லமாதிரிகையானான். நீ யதற்குவிரோதமா யுலோகதுராசைகளை யநுசரித்துக் கெட்டுப்போகிறதென்ன? சகலத்தையுந்துறந்து சந்நியாசம்பண்ணக்கடமை யில்லாதாயினும ஈடேற்றத்தையடைய வேதத்திற் கற்பிக்கப்பட்டபடியே சகலபாவத்தையும் பாவத்துக்கேதுவான தெல்லாத்தையும்விட்டு விலகவேண்டாமோ? ஆகையாற் பூமியிலுள்ளவைகளையல்ல மேலானவைகளையே யபேட்சியுங்களென்று மிவ்வுலோகத்தை யநுபவிக்கிறவர்களநுபவியாதவர்களைப்போ லாகக்கடவார்களென்றும் உலகத்தின் றுருபங்கடந்துபோகின்றதென்றும் அர்ச்.-சின்னப்பரெழுதின தேவவாக்கியங்களையும்மிவுள்ளபொருளோ டொட்டிக்கொண்டிருக்கிறவ னத்தோடழிவானென்று அர்ச்.-அகுஸதினென்கிற வேதபாரக ருரைத்தவசனத்தையும் நன்றாயோசித்து அழிவில்லாதபேரின்ப பாக்கியத்தைத்தேடிச் சம்பாதிப்பாயாக.

சூம். - நாள்.

பாவக்கொடுமை.

க. பாவமான து சர்வேசுரனுக்குவிரோ தமான நிந்தையவமானமு நன்றிகெட் டதுரோகமு மாகையால் அளவிறந்த தோஷமுள்ளதாமே. அதெப்படியெனி ல் நிந்திக்கப்பட்டவ ருயர்விலுலும் நிந் தித்தவ னீசத்தாலுஞ் செய்கையிழிவினு லு மிவைமுதலியவற்றாலு மவமானத்தி ன் கனம்பெருகுமென்பது வேதபாரகர் மொழியாமே. நீசனொருவன் மகிமைக்கி ரீடத்தோடே சிங்காசனத்தி லெழுந்தரு ளிய தன்னிராசாவின்மேல் சகதிவாரிப் போட்டாலெப்படிப்பட்ட துரோகமா யிராது? இதைவிட வுலகவிராசாக்க ளெ ல்லாரிலு மளவில்லாமேன்மைப் பிரதாப மகிமைபொருந்திய பரமகர்த்தருக்குச் செய்கிறவ்வமான மெவ்வளவோ அதிக்க னமாமே. அவருடையமகத்துவ மட்டில் லாதாகையி லவருக்குநிந்தையான பாவ மு மட்டில்லாத்தீதென்னத்தகும். ஆ! பர

வீ, சர்வேசுரனுடைய மகிமைப்பிரதாப த்தையும் உன்னீசத்தனத்தையு மறியா யோ? அவர்நித்தியபரஞ்சோதிக்கடவுளெ ன்றும் சகலநன்மைச்சுரூபியென்றும் ச ர்வநீதிவல்லபமுதலிய பரம விலக்ஷணங்க ளையுடையவரென்றும் சர்வத்தையுமுண் டாக்கின கர்த்தரென்று நினையாயோ! ச ம்மனசுகள்முதலாய் நடுக்கமுள்ள பத்தி வணக்கத்தோடவரைத் தொழுகிறார்கள். சர்வலோகங்களுமவர்கட்டளையின்படி நட க்கும். நீயோவெனி லூத்தையிலுதித்துப் பூமியில்நகருகிற அழிவுள்ளபுழுவல்லோ. அப்படியிருந்தும் பரஞ்சோதிக்கடவுளு க்கு விரோதமாகவெதிர்த்துநிற்கத் துணி கிறாய். சர்வகுறையுநிறைந்த வற்பனாகிய நீயே சர்வலோகங்களையு மொருவிரலாற் றாங்கிநடத்துகிற பரமகர்த்தனை நிந்தித் து அவர்கட்டளையைமிதிக்கிறாய். கீழ்ப்ப டியாததினா லவருக்குச் சத்துருவாகிப் பொருந்தாதபாவங்களைச் செய்கையிலு ன்னால்கூடியமட்டு மழியாதநித்தியதேவ னை அழித்து நிர்மூலமாக்கப்பார்க்கிறாய். இதெப்படிப்பட்ட கொடிய துணிவு?

௨. நீ யித்தனை நிஷ்டூரத்தை நினைக்கச் சர்வேசுர னுனக் கென்னத்தைச் செய்தார்? உன்னைத் தமது சயதயவினுலுண்டாக்கினர். அளவில்லாக்கிருபையோ டிரட்சித்தார். இடைவிடாப் பராமரிக்கையோடே காப்பாற்றுகிறார். இற்றைவரைக்கு முனக்கெண்ணிறந்த நன்மையுபகாரஞ் செய்துகொண்டுவருகிறரொழிய மற்றப்படியல்ல. நீயோவெனி லின்னமித்தனைதயையோ டவருன்னுயிரைக் காப்பாற்றுகிறநேரத்திலேயே யவரைநிந்தித் தவமானப்படுத்துகிருய். அதுவு மெதைக் கொண்டெனில் நற்கிருத்தியங்களுக்காக அவருனக்குத் தந்தருளிய புத்தி மன நினைவு கண்காது வாய்முதலிய சத்திதத்துவப் புலன்களைக்கொண்டேயவருக்குத் துரோகஞ்செய்கிருய். உலோகத்திலிப்படிப்பட்ட நன்றிகெட்ட தனமுண்டோ? மேலு மெதைப்பற்றி யெங்கேயித்தனை துரோகஅக்கிரமத்தைநடத்தத் துணிகிறு யென்ருல் முப்பதுவெள்ளிக்காசுக்காகத் தன் திவ்வியகுருவைவிற்ற யூதாஸென்

பவனைப் பார்க்கிலும் பராபரனென்கிற கொலைபாதகனுக்குப் பரிந்து சேசுநாதரைக்கொல்லக் கூலியபூதரைப்பார்க்கிலு நன்றிகெட்ட துரோகியா யொருநிமிஷத்திலழியு மற்பசுகசந்தோஷப் பிரயோசனத்தைப்பற்றித் திவ்விய கர்த்தரையிகழ்ந்துவிட்டுப் பசாசின்பாரிசமாகிறாய். தேவநீதிக்கஞ்சாம லுன்பாவக் கொடுமையைச் சகிக்காதவரா யொருக்ஷணத்தி லுன்னைநாசமாக்கவும் நித்தியநரகாக்கினியி லமிழ்த்தவும் வல்லபங்கொண்டிருக்கிற கர்த்தர்சமுகத்திலேதானே அவர்காணவே துரோகநினைத்துச் செய்யத்துணிகிறாய். இதைவிடத் துஷ்டத்தனமெவதியுண்டோ?

௩. பாவமானது சேசுநாதருடையபாடுகளுக்கு மரணத்துக்குங் காரணமாகையா லதின்கொடுமையைய றியப் பாடுபட்டசுரூபத்தைப்பார். இப்படிச்சிலுவையின்மேல் நிகரில்லாத வவமானநிர்ப்பந்தத்தோடுமரித்தவரார்? அநாதிபிதாவினேகுமாரனல்லோ. எதிரேலேயோவெனி

ல் நீயு மற்றமனிதர்களுஞ் செய்தபாவங்க ளினுற் றுமேயித்தனே நிர்ப்பந்தங்களுக் குள்ளானர். அவர் மாசில்லாதவருமாய்த் தம்முடையதேவபிதாவுக்கு அநந்தபிரி யநேசருமாயிருந்தாலும் தாம் தயவினு ற் சுமந்துகொண்டமனிதர்களுடைய பா வங்களே தேவநீதி அவரையிப்படிப்பட்ட துக்கசாகரத்திலும் எண்ணிறந்தநிர்ப்பந் தவேதனேயிலுமழித்த நியாயகாரணமா யிற்று. ஆனல் மோக்ஷத்தின் ஆநந்தமு மாய்த் தேவபிதாவின் பிரியமுமாய்ச் சர் வலோகத்துக்கும் ஆண்டவருமாயிருக்கி ற பரிசுத்ததேவசுதனே மனிதர்பாவ மித் தனே வாதைப்படுத்தினபோதே அதின் கொடுமையுந் தோஷமு மிம்மாத்திரமெ ன்று அளவறுக்கக்கூடுமோ? கூடாதாயி னும் அவருடையபாடுகளுக்குக் காரண மாகியபாவத்தை நீ மறுபடி அஞ்சாமற் செய்கிறதேது? அப்படிச்செய்வது வேத த்திற்சொல்லப்பட்டபடியே திவ்வியகர் த்தரை மறுபடி சிலுவையிலறைகிறுப் போலாயிற்று. ஐயோ! பாவீ யுன்னன்புக்

சூரியகர்த்த ருனக்காகத்தமதுபிராணனை
த் தந்தபின்பு நீயுன்பாவக்கொடுமையி
னல் இரக்கமில்லாமல் மீளவு மவருடைய
காயங்களை நோகப்பண்ணி அவரைவாதி
க்கலாமோ? நீ கருதுகிறகெட்டநினைவெ
ல்லாம் வருடையதிருச்சிரசில் தைக்கிற
கொடியமுள்ளுக்களுமாய்ப் பேசுகிறவு
தாசின வார்த்தைகளெல்லாம் அவருடை
யதிருமுகத்தில் துப்புகிற அசுத்தவுமி
ழ்நீருமாய் உன் கெட்டசுகபோகமெல்
லா மவருடையசர்வாங்கத்தையுங் காயப்
படுத்துகிற வடிகளுமாய் உன் துர்க்கிரி
யைகளுந் துர்நடத்தைகளும் அவருடைய
திருக்கைகால்களைத் துளைக்கிறபெரும் ஆ
ணிகளுமா யுன்னிருதயத்தி லுலாவுகிற
துராசை அவர்திருவிலாவைத்திறந்து தி
ருவிருதயத்தி லூடுருவுகிறகொடிய வீட்
டியுமாயிருக்கிறதென் றறியவில்லையோ?
அறிந்து மந்தப்பாவங்களுக்குத் துணிகிற
தெப்படிப்பட்ட நிஷ்டூரம்.

பாவமானது மட்டில்லாததோஷமுள்ளதாகையா
ல்,திருல்மனுஷர்களுண்டாகுந் தின்மைகளுக்குக்கணக்
கில்லை. பாவந்தானேமனிதனைக் கெடுத்துச் சாவுமுத

லிய சகல நிர்ப்பாக்கியத்துக்குங் காரணமாயிற்று. சா
வானபாவத்தின்விஷம் ஆத்துமத்துக்குள் பாய்ந்தவு
டனே அதிஜீவியராகியதேவ இஷ்டப் பிரசாதத்தைப்
போக்கடிப்பதினாற் சகல இன்மைகளிலுங் கொடிய
இன்மையாகியஞானச்சாவுபலிக்கும். மேலு நீமுன்ன
டைந்திருந்த பலன்களாகிய புண்ணியசம்பாவனை
யெல்லாத்தையுஞ் சர்வேசுரனுடைய பட்சத்தையும்
அவருடைய பிள்ளையென்கிற பெருமைப்பட்டத்தை
யுந் தேவமாதாவின் தயவையும் அர்ச்சியசிஷ்டர்களி
னாதரவையும் மோட்சத்தின்சுதந்தரத்தையு மற்று
ஞ் சகலநன்மைகளையு மிழக்கிறாய். பசாசுக்கடிமை
யாகிறாய் தேவகோபத்துக்கும் நித்தியசாபத்துக்குமி
வ்வுலோகத்திலு மறுலோகத்திலுஞ் சர்வ ஆக்கினைக
ளுக்கு மாளாய்ப்போகிறாய். ஐயோ! நெறிகேடா, உ
ன் தாய்தகப்பன்செத்தா லுன்னாஸ்திநஷ்டமானால் நீ
கள்ளர்கையில்கப்பட்டுச் சிறைப்பட்டால் எத்தனை
யோதுக்கப்பட்டுக கண்ணீர்விடுவாய். சகலதாய்தகப்
பன்மார்களிலும் அன்புள்ளதகப்பனாராகிய சர்வேசு
ரனையு மவருடையசகலநன்மையையுமிழந்து நித்தி
யகேடு நிர்ப்பாக்கியவேதனைகளுககு ஆளாய்ப்போன
தின்மேலேமாத்திரம் அழுகிறதுக்குக் கண்ணீரில்லை
யோ! மற்றக்கேடுகளின்மேல் கண்ணீர்விடுகிறதை
விட ஆத்துமக்கேட்டின்மேல் இரத்தக்கண்ணீர்விட
வேண்டாமோ? மறறகேடுகளெல்லாம் கண்ணீரி
னாற்றீராமல் ஆத்துமக்கேடுமாத்திரம் மெய்யானமன
ஸ்தாபத்தின்கண்ணீரால் பரிகாரமாகுமென்கிறதினா
ல் உன் பாவத்துரோகங்களுக்காகத்திரளாயழுது அது
களின்தோஷக்கறையைக்கழுவுவாயாக. நீயுன்சர்வே
சுரனாகியகர்த்தாவைவிட்டு நீங்கினதே தீங்குங்கைப்பு
மென்று கண்டறிவாயாகவென்கிறதுமிப்போது நீங்க
ள்படுகிறவெட்கமல்லாதே யுங்கள்பாவங்களாலுங்களு

கருவத்தி பலனென்னவென்கிறதுமாகிய வேதவாக்கியங்களை நன்றாய்த் தியானிப்பாயாக. இப்படிப்பாவமானது சர்வ அக்கிரமநிறைந்ததோஷமும் சகலகேடு கிர்ப்பார்க்கியவேதனைகளுக்குக் காரணமுமாயிருக்கையால் அதுவே சகலதின்மைகளிலுந்தின்மை சகலவிஷங்களிலும் விஷமாமென்பது குன்றாதசத்தியம். ஆதலால் விஷசர்ப்பம் புலி கரடி முதலியதுஷ்டமிருகங்களுக்கும் கொடூரச்சாவுகளும் மற்ற வெந்தெந்தப்பொல்லாப்புகளும் பயப்படுகிறதைவிடப் பாவத்துக்குமிகவுமதிகமாய்ப்பயப்படவேண்டும். ஆனால் ஈக்கடி தேள்கொட்டுகைமுதலிய அற்பதின்மைகளுக்கும் பயப்படுகிறாய். பாவத்துக்கும் நரகத்துக்குமாத்திரம் பயப்படவில்லை. இதைவிடவுலோகத்திலே பைத்தியமுண்டோ? எக்காலத்திலுமெய்யான கிறீஸ்துவர்கள் ஒரு பாவத்தைச்செய்கிறதைவிட எந்தக்கடினசாவுக்காவதுள்ளாகிறதே பாக்கியமென்றிருந்தார்கள். இராக்கினியோராற் கொடூரமானதெல்லாஞ்சொல்லித் தமக்குப்பயமுறுத்தினவர்களுக்கு அர்ச்.-யோவான் கிறிசொஸ்தோமென்கிற வேதபாரகர் நாம்பாவத்துக்கன்றி வேறொன்றுக்குமஞ்சோமென்றார். பிராஞ்சிராச்சியத்துக்கரசனான எட்டாம் லுயிஸென்கிறவர் வியாதியாய்க்கிடக்கையில் வைத்தியர் கற்புக்குவிரோதமான வோரவிழ்தத்தைக்கற்பித்தார்கள். அதற்கவர்சாவானபாவத்தா லென்னுயிரைக் காப்பாற்றுகிறதைவிடச் சாகிறதேயெனக்குச் சந்தோஷமென்றுரைத்தார். அர்ச். ஆகத்தம்மாளென்கிற கன்னியாஸ்திரீ வாஸ்திய்யுமுயர்ந்தகுலமும் அழகியவடிவுமுள்ளவளாயிருந்தமையால் அவள்பிறந்ததேசத்தை ஆண்டிருந்த அக்கியானியானபிரபு அந்த அம்மாள்மேல் துராசைகொண்டான். தன்காமவெறியையடக்கமாட்டாமல் நெடுநாள் நயமானவசனங்களினாலும் பய

முறுத்தலினாலும் மற்றச்சகலவித தந்திரங்களினாலும் அவளைக்கெடுக்கப் பார்த்திருந்தாலும் அவள் கன்னிமையைக் கைவிடாள் என்றதைப்பற்றி அவள்கிறீஸ்துவளென்று பிடிக்கச்சொல்விக் கொடியசிறைச்சாலையிலேயடைத்தான். பின்னும்வன்கட்டளையாற் கொடியசேவகரவளைக்குரூரமாய்த் தேகமெங்கு நெருப்பினாலேசுட்டுக் கத்தியினாலேமார்பையறுத் திவைமுதலிய நிஷ்டூர ஆக்கினையெல்லா நடத்தினாலும் பரிசுத்தகன்னி ஒன்றுக்கும் பயப்படாமல் கன்னிமைக்காகவும் வேதத்துக்காகவுஞ்சந்தோஷமாய்ப் பிராணனைத்தந்து மோக்ஷத்தையடைந்தாள். இவ்விதமி ளம்பிராயமு மிருதுவானசரீரமுமுள்ள எண்ணிறந்தஸ்திரீகள்முதலாய்ப் பாவத்துக்குள்ளாகாமல் தங்களாத்தும்பரிசுத்தத்தனத்தைக்காக்கத்தைரியத்துடனே தலையைத்தந்தார்கள். அப்படியிருக்க நீ வெட்கமுந் தேவபத்திபயமுமிழந்து ஒரற்பசோதனையைச் செயிக்காதவனாய் நித்தியங்கட்டிக்கு முடியாதவேதனைக்குள்ளாகிறதேது?

---

## ௵ம். - நாள்.



## சாவின் விவரம்.

க. சாவிலும் நிச்சயமானதொன்றுமில்லை. பாவத்தினிமித்த மனிதரெல்லாருஞ் சாவுக்குத் தீர்வையிடப்பட்டார்கள். தலைமுறை தலைமுறையாய் முன்னோர்களெல்லாருங் காலம்பண்ணி யங்கங்கேயடக்கஞ்

பட்டதினால் பூலோகமெல்லாம் பெரிய தோர்கல்லறையென்னத்தகும். நீமிதிக்கிறபூமி முன்புமரித்தவர்களுடைய சடலமழிந்த சாம்பலுந்தூளியுமல்லோ? நீயநுபவிக்கிற காணியாட்சி மனை உடைமை யுற்பத்தி அவர்களிடத்தினின்று சாவானதுபறித் துனக்குக்கொடுத்த பொருளல்லோ? சிலகாலத்துக்குள்ளே யதுகளையுன்னிடத்தினின்றும்பறித்து மற்றவர்களுக்களித்துவிடும். நீயறிந்தவர்களும் உன்சொந்தத்தோழர்சிநேகிதர் உறவின்முறையாரு மாய்ந்தார்களே. நீயுஞ்சாவாயென்று ஏன்யோசியாதிருக்கிறாய்? நாளுக்குநாள் க்ஷணத்துக்குக்ஷணம் கல்லறையையண்டிச்சேருகிறாயே. நீசீவித்தநாளெல்லாம் உன்னாயுசிற்குறைந்துபோச்சுது. இன்னமீதியாயிருக்கிற ஆயுசுஞ் சீக்கிரங்கடந்துபோம். இவ்வுலகில் நீயபேட்சித்துப் பிரயாசத்தோடே சம்பாதிக்கிறதெல்லாம் சாவுக்குக்கொள்ளையாகவேயுனக்கென்னபிரயோசனமாகும். உன்சுகசெல்வமெல்லாம் பாழாம். நீ யொருக்காசுமுதலாய்

மறுலோகத்திற்குக் கொண்டுபோகாமல் ஞ்சாறுமுழத் துண்டத்தோ டொருநெருக்கமானகுழியி லடக்கமாகி மனிதரால் மிதிபட்டுக் கொஞ்சத்துக்குள்ளே மறக்கப்படுவாய். நீ போஷிக்கிறசரீரம் புழுக்களுக்கிரையாகவே சிலநாளைக்குள்ளே மக்கித் தூளியாம். அப்போதிவ்வுலகமு மதின்சகலகாரியமு முனக் கென்னசம்பந்தமாயிருக்கும்? பிரபஞ்சகாரிய மிப்படியிருக்க இவ்வுலகத்தின்மே லாசைவைக்கிறதேது? இதெல்லாநன்றாய்நினை.

௨. சாவுநிச்சயமானாலும் சாகிறநாளிலவேளையுந் தெரியவில்லை. நீசாகிறது எந்தவருஷமோ எந்தமாதமோ எந்தநாளோ பத்திருபதுவருஷத்துக்குப் பிறகோ அல்லது இன்றைக்கோ இந்நேரத்திலேயோ வுனக்குப்பரிச்சேதந் தெரியாது. நீசாகும்வகையையுமறியாய். வியாதியினாலேயோ விஷசெந்துக்களினாலேயோ வேறேகாரணத்தினாலேயோ சடுதியிலேயோ நெடுமவஸ்தைப் பட்டபின்யோ வழியிலேயோ வீட்டிலேயோ மா

கெடுபோவாய்! சாகிறதாவாயிற்புத்திநினை
வு தெளிந்திருக்குமோ மயங்கிமாருட்ட
ாமோ! பாவசங்கீர்த்தனந் தேவநற்கரு
ணை அவஸ்தைப்பூசுதல்முதலிய தேவவுத
விகள் கிடைக்குமோ கிடைக்காதோ இ
திதெல்லாமுனக்குத் தெரியாது. மனிதரெ
ப்போதும் பாவத்துக்குத் துர்ச்சாவுக்கு
த் தேவநீதிக்கும்அஞ்சி யிடைவிடாமல் ந
ல்லமரணத்துக் காயத்தஞ்செய்து நன்
னெறிவழுவாதாசரித் திடேணும்படிக்கு
கர்த்தரவரவர்சாகுநாளை யவரவர்க்கும
றைத்துச் சாவின்பயங்கர மியாவர்க்கு
மெந்நேரமு மெதிரிலேநிற்கும்படிக்கு
ச் சித்தமானார். ஆகையால் சேசுநாதர்தி
ருவுளம்பற்றின வாக்கியமாவது: சாவு ஓ
ர் திருடனைப்போலே நினையாதசமயத்
திலேவரும், ஆதலா லெப்போதுஞ்செவி
த்து விழித்துக்காத்திருங்களென்றார். மர
ந் சாய்ந்தபக்கத்தில் வெட்டுண்டுவிழும்.
அப்படியே நீ வாழ்நாளிற் சாய்ந்தபக்க
த்திலே விழுவாயென்னத்தகும். பாவி
சாய்நடந்து நரகபக்கமாய்ச் சாய்ந்த

யோ பாவியாய்ச்செத் ததிலேயமிழ்ந்தி
நிர்ப்பாக்கியனுவாய். புண்ணியத்தைச்
செய்துபரகதிபக்கமாய்ச் சாய்ந்தாயோ
மரண மதின்கரையிலே யுன்னைச் சேர்ப்
பிக்கவே பாக்கியவானுவாய். ஆகையால்
நல்லமரணத்தையும் நித்தியபேரின்ப ஆ
நந்தத்தையு மடையவேணுமாகில் பாவ
த்தைவிட்டு நன்னெறியே யநுசரித்துப்
புண்ணியசம்பத்தனுகக் கடவாய்.

௩. ஒரே ஒருவிசைமாத்திரம்சாகிறோம்.
நல்லமரணமானுல்நித்தியமோக்ஷபாக்கி
யத்துக்குத் துவக்கமாம். துர்ச்சாவாகில்
அவியாததரகததீயில் விழுகிறதுதப்பா
து நல்லமரணத்தினுற்பவிக்குநன்மையா
னது அளவுமுடிவுமில்லாததினுல் மரண
மேநல்லோர்களுக்கு மிகவுமின்பமும்து
ரமும்மாயிருக்கும். அர்ச். - ஐயேரோனிமு
லென்கிறவர் மரிக்குநேரத்திற் களிகூர்ந்
து ஓ! மரணமேயித்தனையின்பமாயிருப்
பாயென்று நானினைக்கமாட்டாதிருந்தே
னேயென் றதிசயித்துச் சொன்னுர். து
ர்ச்சாவுமட்டிம்பரிகாரமுமில்லாத மேகடுன்

ளதினால் தீயோர்களுக்கு மிகவுங் கடோர
மும் பயங்கரமுமாயிருக்கும். தன்சீவிய
காலத்தைத் தேவதூஷணங்களிலும் வே
தப்பகையிலு மற்றத் துர்மார்க்கங்களிலு
ம்போக்கின வொல்தேரொன்கிறவன் சாகி
ற வேளையில் தன்கெட்ட சினைகிதர்வஞ்
சனையால் தனக்குக்குருவும் பாவப்பரிகா
ரமுங் கிடைக்காத்தினாலும் சர்வேசுரனுமெ
னிதருந் தன்னைக் கைவிட்டார்களே நித்தி
ய நரகமே தனக்குக்கதியென்னு ம்வநம
பிக்கையாலுங் கோபவெறி கொண்டவனா
ய்ப் பயங்கர நடுக்கமும் வலிப்புமுற்று அ
கோரவிளைச்சவிட்டுக் கூவிப்புரண்டு தன்
னைத்தானே கடித்துத் தன்மலத்தையுந்
தின் றவலமாய்ச்செத்தான். இப்படிப்ப
ட்ட கடின துயரவாதையோ டெண்ணிற
ந்தபாவிகளுஞ் செத்தார்கள். நீ மண்ணா
சை பொன்னாசை பெண்ணாசை யுள்ளவ
னாகிற் சாகும்வேளையில் உலோகத்தின்மா
ய்கைமறைய விலெல்லகேசுகமெல்லா மு
ன்னைவிட்டு நீங்கிப்போகப் பிரபஞ்சமெ
ல்லா முனக்குப்பாழாகவே அதெல்லா

மென்னென்று நினைப்பாய்? இப்போது
தானே மரண முனைக்குச்சொல்லும்புத்தி
யோசனையைக்கேள். உன்னை மோசம்
போக்கமாட்டாது. உலகச்சிறப்புத்திரவி
யஞ்சுகசெல்வமெல்லாம்விழல்ழிவுபாழெ
ன்றுனக்குநிச்சயிக்கும். சாகிறதருணத்தி
லுனக்கப்படியே தெளிவாகத்தோன்று
ம் அப்படியிருக்கஇப்போதுகளைப்பெ
ரிதாயெண்ணியேன்மோசம்போகிறாய்?

மரணநேரத்தி லுன்பாவங்களுனக்கு எத்தனையோ
பாரமான சுமையாயிருக்கும். அப்போதுனக்குப்புண்
ணியமேயில்லையென்றும்-அல்லதுஆங்காரத்தாற்கெட்
டுப்போயிற்றென்றுமெம்மாத்திரமங்கலாய்ப்பாய்? அ
ப்படிப்பட்ட துயரத்துக்குங் கேட்டுக்கு மிடமில்லா
தபடிக்கு அடிக்கடிமரணத்தைநினைத் ததற்காயத்த
ஞ்செய்யக்கடவாய். சாவினினைவுஉலோகதுராசைவி
டாதபாவிகளுக்குமாத்திரமகசப்பும்பயங்கரமுமாய்த்
தோன்றினலும், நல்லோர்க்குப்பிரியமு நன்மையுமா
மே.அதெப்படியெனிற்சாவைதியானிக்கிறதினால்ந
ல்லுணர்ச்சியும பாவவெறுப்பும்பேரின்பத்தினசைய
மேட்டற்றமுமுண்டாகின்றது.ஒருஸ்திரீயானவள்தன்
அழகுசௌந்தரியத்தைப்பற்றி யாங்காரித்துத் தன்
சாபாசஙகளுக் கடிமையாயிருந்தாள். அவள் படத்தி
லே தன்னை யெழுதவேணுமென்று ஒருசித்திரக்கார
னைக் கேட்டதற் கவன்சம்மதித்து அவள்சிரசுதுவ
க்கி மார்புவரைக்கு மெத்தநேத்தியா யெழுதிக்கொண்
டுவந்தான். அவள்மிக்க சந்தோஷப்பட்டுப் பாதம்வ

ாக்குங் குறையறவெழுதவேண்டுமென்றாள். அச்சித்தி
க்கார னவளுக்கு நற்புத்திவருவிக்க உடல்புழுத்தும
ன்னுனபின் மீதியாய்நிற்கும் வெறுமெலும்புகளைமா
திர மந்தப்படத்துக்குத் தொடர்ச்சியாக வெழுதிக்
கொண்டுவந்தான். அதைக்கண்டமாத்திரத்தில் ஸதி
யானவள் சினந்து, நானிப்படிப்பட்ட அவலக்ஷண
ருபமுள்ளவளோவென்றாள். அதற்குச்சித்திரக்காரன்
பொறுமம்மாள், மேற்படமிப்போதுமக்குள்ள உருப
வண்ணியத்தையுங் கீழ்ப்படமுமக்காகப்போகிற
ந்தஸதையுங்காட்டுகிறதென்றான். இந்தவார்த்தை
ால்வள் புத்திதெளிந்து இலௌகீகத்தைவெறுத்து
சுகிர்தநெறியையநுசரித்தாள். பிராஞ்சீஸ்கு பொ
ஜியாவென்கிறபிரபு தான்சேவித்த இராக்கினியின்
கியமுகஞ் சாவினால் மிகவு மவலக்ஷணமாகி யுடல்
ழுக்களுக் கிரையாய்த் துர்க்கந்தம்வீசுகிறதைக்கண்
லோகத்தைத் துறந்து சந்நியாசம்பண்ணி யருந்த
த்தைமுடித்துப் பெரிய அர்ச்சியசிஷ்டரானார். நீ
மப்படியே புழுக்களுக்கிரையாவாயென் றுணர்ந்
ா லுலோகத்தைவெறுக்காமலு நற்கதிதேடாமலு
ிருக்கக்கூடுமோ! மரணவேளையிலேதேதை யுன்வா
நாளிலே செய்திருக்கவுஞ் செய்யாதிருக்கவும் விரு
புவாயோ அதையெல்லா மிப்போதுதானே செய்ய
ம் விலக்கவுங்கடவாய். நீயந்தந்தக்கிரியையைத் து
க்கையில் தினைமுடித்தவுடனே சாகவேண்டுமாகில்
தச் செய்யத்தகுமோ தகாதோவென்று யோசித்
துத் திருத்துவாயாக. சாவுக்கு மெனக்கு மோரடிமா
திரந் தூரமென்கிற தேவவாக்கியத்தைத் தியானித்
து நாளையென்றெண்ணாமல் இன்றுமுதல்நுதினமு ம
ணத்துக்கு ஆயத்தஞ்செய்வாயாக. கிறீஸ்துவன் ம
நாளை நமதான.

௬௰ம்.-நாள்.



## தனித்தீர்வையின் பயங்கரம்.

௧. சாவுக்குப்பின் தீர்வையென்பதுதே வவாக்கியமாமே. அந்தத்தீர்வையின் பய ங்கரத்தை யறியவேண்டுமாகில் முந்தமு ந்த உனக்குத்தீர்வை யிடுபவராரென்று வி சாரித்துப்பார். உலககர்த்தாக்களு மிரா சாக்களுமல்ல, உன்பாவத்தால் துரோக த்தை யவமானப்பட்ட பரலோக பூ லோகவிராசாவாகிய பரமகர்த்தர்தாமே யுனக்குத்தீர்வையிடுவார். அவர்சர்வபரிசுத் தத்தனமுதலிய சகலநன்மைச் சுரூபியா கையா லளவறுக்கப்படாத தின்மைநிறை ந்த வுன்பாவங்களை யளவில்லா வருவருப் புடனே வெறுக்கிறுர். அவர் சர்வநீதிபர ராதலாற் பாவத்துக்குத்தக்க ஆக்கினையி டாமல் விடமாட்டார். அவர் சர்வஞானமு ள்ளவரா யுன்பாவங்களையெல்லாங்கண்டி ருக்கையா லவருக் கதுகளை மறைக்கவும் சாக்குப்போக்குச் சொல்லவுங்கூடாது.

மீளவும் அவர்சர்வவியாபியுஞ் சர்வவல்லவ
ருமாகையா லவருடையகோபாக்கினிக்கு
த் தப்பித்துக்கொள்ளவழியில்லை. அவர்ச
ர்வத்துக்கும் ஆண்டவரானிற ஏகதேவனு
மாய் மாறாதவருமாயிருக்கையால் வேறெ
நீதிக்கர்த்தருண்டென்று போகவு மவரி
ட்டதீர்வையை யுடைக்கவு மிடமில்லை.
பாவீ யிப்படிப்பட்ட நீதிக்கர்த்தருக்கு
மவரிடுங்கடினதீர்வைக்கும் பயப்படாம
லின்ன மவருக்குத் துரோகஞ் செய்யலா
மோ? வாலசந்நியாசியானவொருவன் மு
ன்கொண்டிருந்த பத்தி குறைந்ததற்குப்
பின் வியாதியாய்விழுந்து மூர்ச்சைப்ப
ட்டான். அப்போது தான்தேவதீர்வைக்க
ழைக்கப்பட்டதாகவுந் தன்தாயானவள்வ
ந்து தன்னைக்கண்டித்து மகனே! நித்திய
கேட்டுக் குள்ளாவதற்கோ சந்நியாசியா
னாய், நானீடேறுதற் காசைப்படுகிறே
னென் றடிக்கடி நீ சொல்லிக்கொண்டிரு
ந்தவார்த்தை யென்னமாய்ப் போச்சுதெ
ன்றதற்குத் தான் மறுமொழிசொல்லக்கூ
டாமல் மிகவும்வெட்கினதாகவுங்கண் ட

ஞ்சிவிழித்து என்றாய்சொன்ன கண்டிதத்
தால்வந்தவெட்கத்தைச்சகிக்காத நான்சே
சுநாதருடைய கோபாக்கினிமுகத்திலெப்
படிநிற்பேனென் றிடைவிடாமல் மனஸ்
தாபக்கண்ணீர்விட்டுக் கடின தவஞ்செய்
தான். பாவீ ! நீயே பரமகர்த்தரினீதித்தீ
ர்வையிலெப்படிநிற்கப்போகிறாய்? இதை
நன்றாய்நினை.

உ. இந்தத்தீர்வை யெம்மாத்திரங்கடின
மென் றறியவேணுமாகில் எதின்மேற்றீர்
வையிடப்படுவாயென் றுயோசித்துப்பா
ர்.புத்திவிவரமறிந்தநாள்முதற்கொண்டு நீ
நினைத்தநினைவெல்லாம் பேசினபேச்செ
ல்லாம்செய்தகிரியையெல்லாம்செய்யாம
ல்விட்டகடமையெல்லாம் பரிசோதிக்கப்
படும்.ஆண்டவனொருவீண்வார்த்தையானு
லுங்கணக்குக்கேளாமல் விடப்போகிறதி
ல்லை. அவருனக்குச்செய்தநன்மை யுபகா
ரங்களுந்தந்தருளியவரப்பிரசாதங்களு நீ
யசட்டையாற்பெறாமல்விட்டதேவ அநு
க்கிரகங்களுமன் றிப்பெற்றதேவத்திரவிய
அநுமானங்களுங் கண்டபூசைகளுங்கேட்

டபிரசங்கங்களும் தட்டிப்போட்ட நல்லபுத்திகளு மந்த நுணுநுணுக்கமான தீர்வையில் விசாரிக்கப்படும். நீயத்தனை நன்மைகளையெல்லாம்பெற்று நன்றிகெட்ட துரோகஞ்செய்திருக்கையா லுனக்குக்கடினமாய்த் தீர்வையிட அதுகளேபலத்த அஸ்திவாரமாகும். அடிக்கடி பெய்தமழையால் நனைந்திருந்தும் நல்லகனிதராமல் முட்செடிகளையுமுட்பூண்டுகளையு முளைப்பிக்கிறநிலங் கெட்டதுஞ் சாபத்துக்குக்கிட்டினதுமா யிருக்கிறதென்று ம் தகனமே அதற்குமுடிவாகுமென்றும் நன்றிகெட்டபாவிகளைக்குறித்து வேதத்திற்சொல்லியிருக்கின்றது. எசமான் தன் வசத்திலேவைத்த வாஸ்திகளை யழித்துப்போட்டுக் கணக்கு ஒப்பிக்கக்கூடாத ஆழியன் நீதியாக்கினைக்குள்ளாகையில் தேவ்வரப்பிரசாதங்கள்முதலிய ஞான நன்மைகளை வியர்த்தமாய்ப்போக்கடித்த நீயெத்தனையோ கடினதீர்வைக்கு ஆளாய்ப்போகிறாய்.

௩ சர்வேசுரன் நீதிகளையுந் தீர்வையிடுவாரொன்று வேதத்திலெழுதியிருக்கிறதா

மே. புண்ணியவான்கள்முதலாய்க் குற்ற மில்லாதவர்களாக விளங்குவது வருத்தம். ஆனால் சூரியனிலும் பழுதுதோன்றினால் அசுத்தநிறைந்தபூமி யெப்படிநிர்மலமாக்ககூடும்? ஆண்டவர் நீசெய்தபுண்ணியங் களையும் பரிசோதிக்கையில் அதுகளிலே ஆங்காரமுதலிய துர்க்குணப்பழுதுகள்வி ளங்கினால் அதுகளை யேற்றுக்கொள்ளக்கூடு மோ? ஆனாற் புண்ணியமென்னப்பட்ட கிரியைகள்தானே தீர்வைக்கேற்ற பழுது ள்ளதாகில் பேயாராதனை யக்கியானச்சு டங்குசகுனசாஸ்திரம் பொய்யாணைசண் டை பகை வற்மம் தப்பியங் கொலை விப சாரம் காமநடத்தை களவு பொய்ச்சாட் சி போசனப்பிரியங் குடிமுதலியவக்கிர மப் பாவத்துரோகங்களெப்படிப்பட்ட கடினதீர்வைக்கேதுவாம்? யூதாஸென்கிற குருத்துரோகிதான்செய்தபாவத்தின்கன த்தைகண்டுபிடித்தவுடனே தன்னைத்தா னேசகிக்கமாட்டாமல்நான்றுகொண்டா ன். பரமகர்த்தரொண்ணிலடங்காத உன்பா வங்களின் வலக்ஷணத்தை யுனக்குத்தெளி

விக்கும்போது உனக்கெப்படிப்பட்டக
ோடாரவருத்தமாயிருக்கும். அப்போது நீ
பதுகளை யுனக்கேமறைக்க விடமில்லை. ஏ
ன்னனி லுன்மனச்சாட்சிதானே உனக்கு
விரோதமாக வெழும்பி யதுகளைக்காட்டு
ம். நீயுன்வாழ்நாளில் துணிவுடனேசெய்
து அசட்டையினால்மறந்திருந்த பாவமெ
ல்லாம் விஷமுள்ளபாம்புகளைப்போலே
யுனக்கெதிராகநிற்கும். உன்னாத்துமத்தி
லுள்ள பாவவசுத்தமெல்லாங்கண்டு திகில்
டைந்துவெட்கி நீதானேயுன்னைச சகிக்க
மாட்டாதிருக்கையில் ஆருடையவாதரவை
த்தேடப்போகிறாய்! உலோகமெல்லாமு
னக்கு இலவசமுமுதவமாட்டாமல் தூ
ரமாய்ப்போய்நிற்கும். தயையின்தாயா
கிய அர்ச்.-தேவமாதாவுஞ் சகல அர்ச்சிய
சிஷ்டர்களுமுன்காவலான சம்மனசுமுன்
னைத்தேவத்துரோகியென்று வெறுத்துக்
கைவிடுவார்கள். உன்னைப்பாவத்திலிழுத்த
பசாசுன்னை நரகத்துக்குக்கொண்டுபோ
கவுத்தரவுகேட்கநிற்கும். எங்கேபார்த்தா
லும் பயங்கரமல்லாமல் லோராதாரவுங்கி

## டையாத்திருலெம்மாத்திரமோ அங்கலாய்க்கப்போகிறாய் !

பல்த்தசாரென்கிறவிராசாஒருபெரியவிருந்தில் தன்பொய்த்தேவர்களைப் புகழ்ந்து மெய்யானசர்வேசுரனுக்கு நிந்தையாக எருசலேந் தேவாலயத்துப்பாத்திரங்களிற் றன்வைப்பாட்டிகள் முதலியவர்களோடே குடித்துக்கொண்டிருக்கையிற் சுவரிலொருகை தோன்றி மூன்றுவார்த்தையை யெழுதிற்று. அதைக்கண்டு இராசாமுகமாறி மனங்கலங்கி யுடல் நடுநடுங்கி யந்தவெழுத்தைவாசித் தர்த்தஞ்சொல்லக் கலைஞரையுங் குறிசொல்வாரையுமழைப்பித்தான். ஆனால் அந்தவெழுத்தை வாசிக்கிறதற்குமுதலா யவர்களாற் கூடாதேபோயிற்று. அப்போது தானியலென்கிறதீர்க்கதரிசி யதிலே சர்வேசுரனிட்ட தீர்வையைவிளக்கி (மானே) சர்வேசுர னுன்னிராச்சியபாரத்தைக்கணித்து முடிவாக்கினார், (தெசல) தராசிலநிறுக்கவுங் குறையக்காணவும்பட்டாய், (பாரேஸ்) உன்னிராச்சியம்பங்கிட்டு மேதியாருக்கும பேர்சியாருக்குங் கொடுக்கப்பட்டதென்று எழுத்தையும் வாசித்து அர்த்தத்தையுஞ்சொன்னார். இந்தத்தீர்வையின்படியே அன்றிராத்திரிதானே யிராசா மாற்றான்கையி லகப்பட்டுக் கொலையுண்டான். நீயுந் தேவநீதியின் தராசில நிறுக்கப்பட்டுக் கடினதீர்வைக்குள்ளாகப் போகையில் அதின்மேல் நினைவுவைக்காததென்ன ? ஒருபணிவிடைக்காரன் றன்னிராசாவிடத்தில தயவு ஆஸதி யுத்தியோகம் வெகுமானமுதலிய நன்மையெல்லாம்பெற்றபின்பு நன்றிகெட்டவனா யவருக்குத் துரோகஞ்செய்ததின்மே லிராசா அவனைப் பிடிக்கவு மவனுக்குக்கமரம் பிரயத்தனஞ்செய்யவுங் கட்டளையிட்டுக்கோபாக்கினியோ டவனுக்குத் தீர்வையிட நிற்கையில் அ

ந்தக்குற்றவாளியெத்தனையோவெட்கத்தோடு நடுந
டுக்கத்தோடும் நிற்பான். தன்றுரோகத்தைவெறுத்
துச் சாஷ்டாங்கமாகவிழுந்து அழுகையோடுந் துக்
கத்தோடும இராசாவின்பொறுத்தலைக் கேட்பானல்
லாமல் விளையாட்டுநினைவைப் பரிச்சேத நினையான
ல்லெ! நீயோவென்று விராசாதிராசாவாயிருக்கின்
றகர்த்தருக்கெத்தனையோ துரோகஞ்செய்தாய். நர
கமுன்பாவத்துக்குமுஸதிப்பாயிற்று. கர்த்தர்கோபா
க்கினியோடே யுனக்குத்தீர்வையிடப்போகிறுர். இன்
னமுனக்குப் பயமில்லாமல் விளையாடித்திரிகிறதென்
ன? உன்பாவங்களைவெறுத்து உன்கண்ணீரினுல்கழு
விச் சர்வேசுரனுடைய கிருபைபெறத்தேடாததென்
ன? இதுகிருபையின் காலமல்லையா விப்பொழுதே த
க்கதவமுயற்சிகளால் பொறுத்தலையடையலாமே. தீ
ர்வைநாளிலேயோவெனில் அகோரநீதியல்லாமற் ற
யையென்பதேதகிடையாதென்றறியாயோ? இதையோ
சித்துத் தபோதனர்களு மற்றப்புண்ணியாத்துமாக்
களுந் தங்கள்சீவியகாலமெல்லாம கடினதவத்தைச்
செய்திருந்துந் தஙகளுக்கின்ன மியாதோர் குறையி
ருக்குமோவென்று தேவதீர்வைக்குப்பயந்து நடுநடு
ஙகிறுர்கள். ரிஷியானவ ரொருவரொருகாட்சியிற் றே
வதீர்வையின் கடினத்தைப்பார்த்துத் தானவசித்தசி
ற்றறையின்வாசலைக் கலலாறகட்டியடைத்து மரண
பரியந்தம் பன்னிரண்டுவருஷகாலமாய்க் கொஞ்சம்
ப்பழுந் தண்ணீருமாத்திரமபொசித்து இடைவிடாம
லொரேநிலையாய்த் தான்கண்டகாக்ஷியைத்தியானித்
தழுதுகொண்டுவந்தார். அவர்மரிக்கிறவேளையில்தம
மண்டையில்வந்தவர்களைநோக்கிமனிதர்தேவதீர்வை
யின் கடினத்தையறிந்தா லொருகாலும் பாவஞ்செ
ய்யார்களென்றுர். பாவச்சேறறிலேயமிழ்ந்தினநீயோ
வெனில் அஞ்சாமலுந் தவஞ்செய்யாமலு மிருக்கிற

து மதியோ? சுயஞ்சீவியகடவுளின் நீதிக்கையி லகப் படுகிறது பயஙகரமுள்ளதென்கிற தேவவாக்கியத் தையறியாயோ? அப்போதுகடினசாபத்துக்குள்ளா காதபடிக்கு இப்போதேயடிக்கடிதேவநீதியைநினை த்து நீயே யுனக்குத் தீர்வையிட்டுச் சரியானதவத் தா லுன்பாவஙகளைபரிகாரஞ்செய்வாயாக.

---

எ௰.-நாள்:

---

## பொதுத்தீர்வையின்கோரம்.

௧. சர்வத்துக்கும்திபதிகர்த்த ருலகத்தி ன்பாவங்களுக் கணையாக விதித்தனுப்பும் புசல் பஞ்சம் படை பெருவாரிக்காய்ச்ச ல்முதலிய பயங்கரவாக்கினைகளாற் பாவி கள் நன்னெறியிற் றிரும்பாததைப்பற்றி க் கடைசியா யுலோகத்துக்குப் பொது ச்சங்காரங்கட்டளையிடுவார். அப்போது சூரியன்மங்கிப்போகச் சந்திர னிரத்தம் போல்சிவக்க நட்சத்திரங்கள் பிரகாசமி ன்றி விழுகிறதாகத்தோன்றப் பூமியதிர அக்கினியெங்கும்பிரண்டு பூவுலகிலுள்ள தெல்லாஞ் சுட்டெரிக்க உலோகமெல்லா

ம்பாழாம். ஆனாலும் விளைத்தநெல்லழி
ந்துமுளைக்கிறது போலே மண்ணாயழி
ந்த மனிதர்சரீர மறுபடியு முயிர்கொ
ண்டெழுந்துவரும். அதெப்படியெனி
லோர்சம்மனசானவர் இடிமுழக்கத்தைப்
போலும்எக்காளச்சத்தத்தோடுமரித்தோ
ரேயுயிர்த்துத் தீர்வைக்கு வாருங்களென்
றுகூறவே தூளியாய்க்கிடந்த மனுமக்க
ளெல்லோருந் தேவவல்லபத்தா லொரு
க்ஷணத்துக்குள் தங்கள்கல்லறைகளினின்
றுயிர்ப்பார்கள். ஆனா லெல்லாரும் ஆத்து
மசரீரத்தோடேயெழுந் தினிச்சாகாதவர்
களாயினும் நல்லோர்களுக்குந் தீயோர்க
ளுக்குமுள்ள மிகுந்த வித்தியாசத்தைக்
கவனித்துப்பார். அதாவது: நல்லோர்சரீ
ரஞ்சூரியனிலுமிகவும்பிரகாசிக்கத்தீயோ
ர்சரீரம் பொறுக்கப்படாத துர்க்கந்தம்வீ
சி யசுத்தமு மருவருப்புமானவலட்சண
த்தைக்கொண்டிருக்கும். அழுக்குள்ள வ
ஸ்திரத்தோடே ஒருசபையில் நிற்கநாணு
கிறவனே யந்நாளி லுன்னிருதயத்திலே
முதலாய்ப் பிரசித்தமாய்விளங்கு முன்ன

க்கிரம்ப்பாவ அழுக்கோடும் அசுத்தமும்
வலக்ஷணமுமுள்ள வுருபத்தோடுஞ் சர்வ
வுலகத்தின் முகத்திலே யெப்படிமிழிக்
கப்போகிறாய்?

உ. தேவதூதரொல்லாமனிதர்களையுஞ்
சேசுநாதசுவாமி சிலுவையிலறையுண்ட
மலைக்கெதிராக விசாலமான வோரிடத்தி
ற் கூட்டினபின்பு நடுத்தீர்க்கிறவராகிய
அந்தத்திவ்வியகர்த்தர் சம்மனசுக ளிரா
ணுவமாகச்சூழச் சிலுவை யவர்முன்பாக
விளங்கத் தெய்வீகமகிமையோடும் வல்ல
பத்தோடு மேகங்கள்மேல் எழுந்தருளிவ
ருவார். அப்போது தேவதூதர்கள் நல்
லோர்களை அவருடைய வலதுபாரிசத்தில்
மகிமையோடே நிறுத்திப் பாவிகளை ய
வமானத்தோடே யிடதுபாரிசத்திலேத
ள்ளிப்போடுவார்கள். நீயோவெனி லெந்
தப்பக்கத்தி லிருப்பாயென்று விசாரித்
துக்கொள். பின்னும் பரமகர்த்தர் அவனவ
வன்செய்த பாவபுண்ணியங்களையெல்லா
ஞ் சகலருமறிய வெளிப்படுத்தித் தீர்வை
யிடவே நீ யவருடையநீதிச்சிங்காசனத்து

க்குமுன் ெனந்தமுகத்தோடே நிற்கப்போகிறாய்? நீயிரவி ன்ந்தகாரத்தி லொளிந்துசெய்தபாவத் துரோகங்களும் உன்மனதுக்குள் வெட்கத்தோடே மறைத்த கெட்டநினைவு துராசைகளு மொருவருமறியப் படாதென் றிருந்த உன்னக்கிரமநடக்கையெல்லாமுஞ் சர்வ லோகமுமறியச் சகலருக்கும் வெளிப்படும்போதுனக்குவரும் வெட்கந் திகி லவமானம் துக்கத் துயர மிவ்வளவென்று சொல்லவுங் கருதவுங்கூடுமோ? அத் நாளிலித்தனையவமானப்படாதபடிக்கு இப்போதுதானே உன் பாவங்களைவெறுத்துவிட்டு அதுகளை நல்லபாவசங்கீர்த்தனத்தினால் விமோசனம்பண்ணுவதே யுனக்கவசரமு நன்மையுமாயிருக்கிறதல்லோ?

ரு. கர்த்தர் தீர்வையிட்டு நல்லோர்களுக்கு வசனிக்கு மாசீர்வாதவாக்கிய மெம்மாத்திரமின்பமென்றுபார். நம்முடைய பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே உலோகத்திருதிமுத லுங்களுக்கு எற்படுத்

தப்பட்ட விராச்சியத்தைச் சுதந்தரித்து க்கொள்ளவாருங்களென்பார். இதைக்கேட்கையில் நல்லோர்கள் தங்கள்தவத்துக்கு நித்தியபேரின்பமும் தாந் தேவவூழியத்திற்பட்ட விலேசான பிரயாசத்துக்குப் பரலோகவிராச்சியமும் பலனுகக்கிடைத்ததென்று எத்தனையோ ஆநந்தசந்தோஷித்தோடு களிகூருவார்கள்! ஆனல் பாவிகள் தங்களுக்குவந்த அவமான வெட்கத்துயரத்தையுந் தங்கள்பாவங்களின் ருவருப்புள்ள பார்வையையும் சகிக்ககூடாமல் மலைகளுங் குன்றுகளுந் தங்கள் மேல்விழுந்து தங்களை நசுக்கவேண்டுமென்றுநாணிப்பிரலாபித்துநிற்கையில் நீதிக்கர்த்தர்கோபாக்கினிக்கண்கொண்டு அவர்களைநோக்கிச் சபிக்கப்பட்டவர்களே! பசாசுக்கும் அதினூழியர்களுக்கும் ஏற்படுத்தப்பட்டநித்திய நெருப்பிலவிழப்போங்களென்று விதிப்பார். கர்த்தர் அளவற்றகிருபையோடுபாடுபடவும்பாவநிவாரணப் பலியாகவுந்தம்மையொப்புக் கொடுத்த நாளில் தம்மைப்பிடிக்கவந்ததிரளான ச

தீதுராதிகளை ஒருவார்த்தையால்மல்லாக் காய் விழத்தள்ளினுலோ. தீர்வைநாளில்வரி டு மிந்தச்சாபத்தினுலோவெனிற் பாவிக ளெல்லாரும்இடிவிழும்வேகத்துக்கொப் பாய் நரகபாதாளத்திலேவிழுந்து தீச்சா கரத்தில்மிழ்ந்தி நித்தியவேதனைகளுக்கு ள்ளாவார்கள். பாவீ! இதுவேபாவத்துக் குக்கிடைக்கும்பலன்.இதைநன்றாய்நினை.

மகாபேர்போன அர்ச். இயேரோணிமுஸென்கிற வேதபாரகர் வனாந்தரத்திலிருந்து தவஞ்செய்துவ ருகையிற் பொதுத்தீர்வைக்கு மரித்தோரைக்கூப்பி டு மெக்காளச்சத்தத்தைத்தான்கேட்கிறதாகத் தியா னத்திலேயோசித்து நடுநடுங்கி இரத்தம்வடியுந்தனை யும கருங்கல்லினுல் தடபாரிபிலிடித்துக்கொள்வார். அர்ச்சியசிஷடர்களே யப்படிநடுங்கி நடந்திருக்கையி ல்பாவியாகிய நீயந்தப்பயங்கரத்தீர்வைக்கஞ்சாமலு ம் ாரா த்தஞ்செய்யாமலும போகிறதேது!கடவுளி ன்கோபாக்கினி முகத்தில் நிற்கத்தக்கவ ராரொன்னும் வேதவாக்கியமனதிற்பதியக்க னிக்கவேண்டாமோ? இந்நேரத்திற்றனே நீபொதுத்நீர்வைக்குத் தேவநீ திசிங்காசனத்தின்முன்பாக நிற்கிறயென்றுயோசி த்துக்கொள். உன்னடக்கையெல்லாஞ் சகலமனிதர றிய வெட்டவெளியர்கையா லுனக்கெந்தெந்தப் பார் வ விசேஷமாய் வெட்கத்தைவருவிக்கு மென்றுபா ர். இவவுலகத்திலேதானே யுன்பாவமெல்லாம்பத்து ப்பேருக்குத் தெரியப்பட்டா லவர்கள்முகத்தில் நீ விழிக்கக்கூடுமோ? அநேகர்தங்கள் துர்நடக்கையா ல் வந்தவெட்கத்தைப் பொறுக்கமாட்டாமல் வலிய

ச்செத்தார்கள், அநேகர்பரதேசத்துக்கோடித்திரிந்தார்கள். நீயோவென்றுனுன்பாவ்அக்கிரமஙகளையெல்லா மிப்போதுதானே தக்கமனஸ்தாப தவமுதலியநல்லொழுக்கத்தினாலே நிவாரணம்பண்ணுவிட்டாற நீர்வைநாளி ல்துகளாலுனக்குவரும் வெட்கத்தையும் மானபஙகத்தையும் பொறுக்கக்கூடுமோ? ஒருகாலுஞ்சாகாமலுந் தன்னைமறைக்கக்கூடாமலு மூழியுள்ளகாலமதை யநுபவிப்பதெவ்வளவோ துயரமுள்ள வாக்கினையாமே! அதறகுள்ளாகாவண்ணந் தாமதமின்றிப் பாவமெல்லாமொழித்துத் தவத்தின் கண்ணீரா ல்துகளைக்கழுவிச் சுத்தஞ்செய்யக்கடவாய்.

---

அம்.-நாள்.

---

## நரகவேதனைகளின் கொடூரம்.

க. நெருப்பினு ம்திகக்கொடிதானவேதனை யுலகத்தில் யாதொன்றுமில்லை. ஆயினுமெரிகிறநெருப்புக்கும் படத்திலெழுதியவதின்சாயலுக்குமெவ்வளவுவித்தியாசமுண்டோ அவ்வளவு நரகாக்கினியினுக்கிரத்துக்கும் இப்பிரபஞ்ச அக்கினியினுக்கிரத்துக்கும்வித்தியாசமுண்டென்று வேதபாரகர்நிச்சயித்தார்கள். மேலுமிவ்வுலகிலேதீயைக்காப்பாற்ற வதற் கிலாகொடுக்

கவேணும் அதுகுறைந்தாற்றீயுங்குறையு
ம் அதுதப்பினாற்றீயுமவியும். அன்றியுமிப்
பிரபஞ்சத்தினெருப்புச்சரீரத்தைச்சுடும
ல்லாமலாத்துமத்தைச்சுடாது. நரகநெரு
ப்போவெனில் நித்தியமுந்தேவநீதியின்க
ருவியுமாயிருப்பதாலொருபோதுங்குறை
யாமலு ம்வியாமலுஞ்சரீரத்தோடேகூட
ஆத்துமத்தையும் வாதிக்கும். அந்தநித்தி
ய அக்கினிக்கிரையொன்றுந்தேவையில்லா
தாயினும் சாவான பாவ ம்தற்கிரையாகி
அதுக்கு விசேஷமான வுக்கிரங்கொடுக்கு
ம். நரகபாதாளத்தி ல்மிழ்ந்தினபாவிகளு
டையசாவான பாவங்களெத்தனையோ அ
துகளிலடங்கின கனம்க்கிரமதோஷ மெ
வ்வளவோ அத்தனைக்குமவ்வளவுக்கும் நர
கத்தீயின்கோர ம்வர்களுக்குப்பெருகும்.
ஆ' பாவீ, நீசெய்கிறபாவமெல்லாமுன்னை நி
த்தியமா யுபாதிக்குங் கொடியவக்கினியா
தமென்று யோசிக்கிறதில்லையோ? உனக்
குப்பொருளாசைமிகுதியாயிருந்தபோதி
லுநீயொருநாள்ளவாகிலும்கோர நெரு
ப்பின்மேற்கிடந்து வேகச் சம்மதிக்கும்

பொருட்டுஉன்வீடுநிறையப்பொன்வெள்ளிக்காசுனக்குக்கொடுத்தாலுமதற்குடன்பட்டுசசம்மதிப்பாயோ! அதில்லையென்பாயே. ஆனாலோர்சொற்பவிலாபமொருக்ஷணத்திலொழிகிற கெட்டசுகமுதலியவற்பமுகாந்தரத்துக்கு நித்தியமாய்வேகுறர்காக்கினியிலே மனதுபொருந்தி விழப்போகிற தெப்படிப்பட்டவெறி.

உ. சாவான்பாவமானது சகலதின்மைகளிலுந்தின்மையுஞ் சகல விஷங்களிலும் விஷமுஞ் சகலதோஷங்களிலுந் தோஷமுமாகிச் சர்வ அக்கிரமமு நிறைந்தாயிருக்கையால் நரகத்தில்தற்குப் பழியாகவெல்லாத்துன்ப துரிதவாதை யுபத்திரவவேதனைகளு மொருமித்துக்கூடும். பஞ்சேந்திரியங்களாற் செய்த பாவங்களுக்குத்தக்கது நரகத்தில் ஐம்பொறிகளுக்குப் வெவ்வேறு ஆக்கினைகளுண்டு. கண்களுக்குண்டாகு முபத்திரவமெதெனிற் பாவிகளையுபாதிக்கிற வக்கினிக்குப் பிரகாசமில்லாமையால் மகாபயங்கரமான விருளிலும் பொறுக்கப்படாத புகையிலு மகப்ப

ட்டிருக்கிறார்கள் ஆகிலும் வேளைக்கு வேளை சில தீப்பொறிகளிருளிலெழும்பிறாற்போலே யந்தப்பயங்கரமான விருண்டசிறைச்சாலையிற் கொஞ்சம்வெளிச்சமுண்டாகவேகொடியபுலிகளைவிட அதிககொடூரப்பசாசுகள் வெருவிடுமவலக்ஷணவுருவங்களோடுந்திஷ்டூர ஆயுதங்களோடுந் தங்கள் மேற்பாயந் தூதங்களைச்சகலவிதமான வாக்கினைப் படுத்துகிறதாகக் காண்கிறார்கள். அந்தக்கொடூரச் சிறைக்கூடத்திற் றுன்பவேதனைப்படுகிறவர்களுடையவழுகைப்பிரலாபமும்வநம்பிக்கையின்வெறியாற்பற்கடிப்புந் தூஷணைச் சாபங்களுந் துஷ்டப்பசாசுகளின் வெருவுக்குரிய கூக்குரலுமோயாமற் செவிகளைட்புலந் துரிக்கிறதுபோலே பீடிக்கும். கெந்தகத்தினாற்ற மக்கினியிற்றீய்கிற அசுத்தத் தேகங்களின்றுர்க்கந்த முதலிய சகிக்கப்படாத அசங்கிய வாசனைகளெல்லாம் நாசிகளுக்கு வேதனையாமே. தீயில்வேகிறபாவிகளுக்கு ஒருநீர்த்துளி யொருபருக்கை முதலாய்க்கிடையாத்தினால் தீராதஅகோரப்பசிதாகத்

தையநுபவிக்கிறார்கள். அவர்கள் சர்வாங்க மூழ்க்கினியில்வேகிற தல்லாமலு மகோர மாயெரியுஞ்சூளையிற் செங்கல் நெருங்கி யழுந்தி யிருக்கிறதுபோலநரகத்தீயிற்பா விகள்செறிந்துதிரும்பவு மூச்சுவாங்கவும் வகாசங்கொடாத நெருக்கத்தினாற்சொல் லவிடங்காதநோக்காடுகளையநுபவிக்கிறார் கள். அன்றியும்நிஷ்டூரேட்பசாசுகளால்டியு முதையுபட்டு மற்றுமுண்டான சகலவேத னைகளுக்குமுட்பட்டிருக்கிறார்கள். பாவீயி த்தனைகடினவேதனைகளைபெப்படிப்பொ றுக்கப்போகிறாய்? அதுகளைத்தாளவுன்னா லே கூடாதென்றிருக்க அதுகளிலுன்னை அமிழ்த்திவிடு முன்னக்கிரமப்பாவங்களை வெறுத்துவிடாதிருக்கிறதென்ன?

௩. முந்திச்சொல்லியவேதனைகள் பெரி தாயினும் சர்வேசுரனை யிழந்ததினால் நர கவாசிகள்நுபவிக்குந்துக்கமு நோக்காடு ம் வேதனையு மதைவிட அதிகவகோரமா யிருக்கு மென்பது நிச்சயம். அதெப்படி யெனிற் சர்வேசுரன் சர்வநன்மைச் சுரூ பியென்று மவர்தாமே தங்களுக்குரிய ஏ

க்கதியென்று மவரிடத்திற் றங்களுக்குச்
சகலபாக்கியமு நியமித்திருந்ததென்று
ந் தாங்களேயறிந்தவ நேகரவரிடத்திலெ
ன்றென்றைக்கு யாநந்தசந்தோஷப் பே
ரின்பத்தைச்சுகித்திருக்கத் தங்கள்சுயகுற்
றத்தினா லவையுமெல்லாப்பாக்கியத்தை
யுமிழந்து தாநித்திய ஆக்கினைகளை யநுப
விக்கவேண்டுமென்று மெந்நேரமு முண
ர்வதினா லந்தத்துயரமுள்ள சிந்தனையே
நரகத்தீயிலு மவர்கள்மனத்தைச்சுட்டுபா
திக்கும். இவ்வுலகிற் பாவிகள் சர்வேசுர
னுடைய நன்மைத்தனத்தின் மிகுதியை
க் கண்டுபிடியாததினா லவையிழந்தசேத
மவர்களுக்குப் பெரிதாய்த் தோன்றாது.
நரகத்திலோவென்றா லவைக்காணாதிருந்
தாலு மவருடையநன்மைத்தனமுந்திவ்வி
யலக்ஷணங்களி னலங்காரமு மளவில்லாத
தென்று மட்டில்லாவாநந்தத்துக்கூறணி
யாயிருக்குதென்றுந் தெளிந்து அப்படி
ப்பட்டவளவில்லா நன்மையை யிழந்ததி
ல் மட்டில்லாத்துயரத்திலமிழ்ந்திச் சொ
ல்லிலடங்காத கொடியதுக்கவேதனையை

யநுபவிப்பார்கள். சர்வேசுரனிடத்திலுள்ள நித்தியபேரின்பபாக்கியத்தின் பேரில் மிகுதியாகிய நிராதவாசையவர்களி லெந்நேரமு மெழும்பிப் பலவந்தமாய் அவர்களைமேலேயிழுக்க விவர்களுடையபாவங்க ளிவர்களைக் கீழ்நரகத்திலேயமுத்தி நிறுத்த அவர்களிருதயம்பிளந்து அவர்களுள்ளமெப்பொழுதுங்கிழிபட்டாற்போலேயாகும். அப்படிப் பூரியாதவாசைகளினாலு மாறுததுக்கத்தினாலுந் தங்கள்கேட்டின்மேல் கோர கோபவெறியினாலுமென்றென்றைக்குநிகரில்லாநிர்ப்பந்தங்களையநுபவிப்பார்கள். நமக்குநித்தியபாக்கியம் நியமித்திருக்கையில் நமதுதுர்மார்க்கத்தினாலே யதைப்போக்கடித்திந்தவகையினியிலேயென்றென்றைக்கு முபாதிப்பட விழுந்தோமேயென்கிற நினைவானது ஓர்கடியசர்ப்ப மவர்களுள்ளிலேபாய்ந்து அவர்களீரலைத் தின்பதுபோலவும் ஓர்கொடிய புழுவிவர்க ளிருதயத்தையரிப்பதுபோலவும் அவர்களை மிகவுந்துயராவாதைப்படுத்தும். ஆதலாற் றங்களை

யே சகிக்காமல் தங்களையே சினந்து தூ
ஷித்துச் சபித்துக்கடித்துக்கிழித்துப் பி
ரலாபிப்பார்கள். பாவீ! இதைநன்றாய்நி
னை, உன்பாவத்தைநீவிடாதேபோனால்
துவே யுனக்குக் கிடைக்கப்போகிற கதி.
அதற்கெப்படி யஞ்சாதிருக்கிறாய்?

வனவாசியான பர்த்தினியனென்கிறவொருமுனி த
ந்திரமாய்வந்தவொருகெட்ட ஸ்திரீயாற றனக்குப்
பாவச்சோதனையு மனக்கலக்கமு மாகிறதைக்கண்டு
தன்காலகளைப் பெருநெருப்பிலே நீட்டிப்போட்டா
ர். காலபாதிவெந்தபின் ஆச்சரியத்துடன்பார்த்திரு
ந்த அந்த ஸ்திரீக்குரைத்ததாவது: ஐயோ! இந்த
விலேசான தீயைப்பொறுக்கிறது கடினமாச்சே பா
வத்தால்வரு நரகாக்கினையெப்படிப்பொறுக்கக்கூடு
மென்றார். இதைக்கேட்டு அந்தஸ்திரீமனமிளகி நன்
னெறியிலதிரு பித்தவப்பெண்ணாகியருந்தபசைமுடி
த்தாள். ஒருசத்தியவாளருரு பசாசையோட்டுகையில்
நரகத்தில வேதனையென்னவென்று அதைக்கேட்ட
தறகுப் பசாசு அவியாநெருப்பும் மாறாச்சாடமு நம்
ை. ப்படைத்ம் தாரையிழந்த காணாத்தனால நித்திய
அவந. பிக்கையின் வெறியு முண்டென்றதுமன்றி ய
வரோடே மறுபடி யுறவாகக்கூடுமாகி லொருக்ஷண
ம்வனைத்தரிசிக்கப் பதினாயிரவருஷ வேதனையைச் ச
ந்தோஷமா யநுபவிப்பேனென்றுங கிருபையிந்து
ப்கடக வெந்நேரமு மவர்பார்த்திற் கிடப்பேனென்
றுஞ் சொல்லிறறு பாவீ! நீ நரகத்துக்குள்ளாகாதப
டிக்கிப்போது தானே தவத்தாற்றேவகிருபையைத் த
டிப்பெறவேண்டாமோ! அதிலேவிழுந்தபின் ஒருகா
லும் ரடசிப்புக்கிடையாது. வேதபாரகர் கற்பித்திருக்

இறபடியே நீனேவிருல்டிக்கடிபாதாளங்களிவிறங்கிந
ரகத்துக்குட்பிரவேசித்துப் பாவிகள்திலேபடுகிறநிர
ப்பந்தஙகளே யுற்றுப்பார். அவர்களெதிருல்திலேவிழு
ந்தார்களென்றுகேட்கில ஆஙகார கோப காமமுதல
யபாவத்துர்க்குணஙகளிருலே தான் அந்தநிர்ப்பாக்கி
யவேதனேயுள்ளஇச்சிறைக்கூடத்திறகுள்ளானுர்களெ
ன்றறிக. நீயர்தப்ப வஙகளேவிடாயாகில் அவர்களுக்
குவந்த வாக்கினே யுனக்குந் தப்பாதென்று நன்று
யோசித்துக்கொள. அண்டைவீட்டிலே பறறியெரிகி
ற நெருப்பைப்பார்த்து இன்னம பயமுமெச்சரிக்கை
யு மில்லாமற திரிகிறதேது? அர்ச்.-தெரேசம்மாள
தா னுலோகத்தின் றுராசைகளே யநுசரித்திருந்தா
தனக்கு நரகத்தில் நியமிக்கப்பட்டிருந்த வாக்கினை
ளே யொருகாட்சியிலேகண் டநுபவித்ததுகளே அச்
த்துக்கூரியவிதமாய் விவரித்துத் தானிவவுலோகத்தி
லே வியாதியின்கடோரஙகளேயெல்லா மநுபவித்திரு
தாலு மதுகளில் நரகாக்கினேகளுக் கொப்பானதெ
ன்றுஙகாணேனென்றெழுதி மரணபரியந்த மதுகளு
குப்பயந்து கடினதவஞ்செய்தாள. நீயு மப்படிச்செ
ய்து அர்ச்.-அகுஸதீன் வேண்டினதுபோலே சுவாமீ
இவ்வுலகிலென்னேச்சுடு ,வெட்டும,இரக்கமின்றித்
ண்டியும் , நித்தியத்திலிரக்கத்தோ டேறறுக்கொண்
டால் அதுவேபோதுமென் றிப்போதுதானே தவ
தாலும பொறுமைமுதலிய வறத்தாலுந் தேவநீதி
குததரிப்பாயாக.



## நரகாக்கினையி னித்தியம்.

க. மட்டில்லா நீதியுள்ளகர்த்தர்மோக்ஷ த்திலே நித்தியபேரின்ப வாநந்தபாக்கி யத்தை நல்லோர்க்குத் தந்தருளுகிறது போலே நரகத்தில் நித்தியநிர்ப்பந்தவே தனையைத்தீயோர்க்குக்கட்டளையிடுகிறார். ஏனெனிற் பாவமானது சாவிற்குப்பின் தீராத அளவில்லாததோஷமுள்ளதேவத் துரோகமாகையா லதற்குத்தீராத வளவி ல்லாதவாக்கினைகிடைக்கிறதேநீதி. நரகத் தி லேத்தனைய கோர வாக்கினைகளிருந்தா லு மதுகள்நித்தியமல்லா திருப்பதாகில் நரகமே நரகமாகவுமிராது, பாவத்திலு ள்ளதோஷித்துக் கொத்த வாக்கினையாக வுமிராது. ஆனாலந்தவேதனைகள் நித்திய மாயிருக்கிறதினா லொருகாலு முடியாதி ருப்பதுமன்றி யவைகளின் கோரமாயிர மடங் கதிகரித்தாற் போலாயிற்று. இவ் வுலகத்தி லெப்படிப்பட்ட துன்ப கஸ்தி நிர்ப்பந்தம்வந்தாலு மதுகளுக்குமுடிவு

வருமென்கிற நம்பிக்கையினால் மிகவுமா
றுதலுண்டாம். அப்படிப்பட்ட நம்பிக்
கை சகலநோக்காடுகளையும் ஆற்றுகிறச
ஞ்சீவியான வ்விழதமாமே. சிறையிற்கிட
க்கிறவன் விடுதலாகிறநாளுக்குங் கடின
வியாதியி னோக்காடுகளை யநுபவிக்கிறவ
னாரோக்கியத்துக்குந் தரித்திரன்செல்வத்
துக்கும் நயபிக்கையோடே காத்திருக்கி
றமட்டு மவர்களுடைய கஸ்தியெல்லா
மவர்களுக் கிலேசு. அப்படியே யநேக
கோடிவருஷத்துக்குப் பிறகாகிலுந் தங்
களாக்கினை முடியுமென்று நாகவாசிகளு
க்குச் சற்றுவது நம்பிக்கையுண்டாகி ல
வர்களுடைய வாக்கினை பொறுமையோ
டநுபவிக்கத்தக்கதாம். ஆனால் நம்பிக்
கையெல்லா மவர்களுக் கற்றுப்போயிற்
று. இனியவர்களுக் கிரட்சணியமுமில்லை
நம்பிக்கையுமில்லை, ஆறுதலுமில்லை. தங்க
ளாக்கினைபொறுக்ககூடாமல் தப்பித்து
க்கொண்டு போம்வழிதேடிப்பார்த்தால்
வழியுமில்லை, வருங்காலத்தில்முடிவுநாடி
ப்பார்த்தால்முடிவுமில்லை, சாவையழை

ரால் சாவுமில்லை. நித்தியகாலமுஞ்சாகா மல்வேகவேண்டியதையோ, நித்தியகால முநரகாக்கினையெல்லாமநுபவிக்கவேண் டியதையோவென்றுபிரலாபித்தலறி அங் கலாய்க்கிறார்கள். தங்கள்வேதனைக்ள் முடி யாதென்கிறசிந்தனையே ஒரு தீமலைபோ லே யவர்கள் தலைமேலூன்றியெல்லாவேத னைகளிலுங்கடினமாகியவர்களைக்கொடிய துக்கசாகரத்திலமிழ்த்திவாதிக்கும். பாவீ யொருக்ஷணத்திலொழியுங் கெட்டசுகசந் தோஷித்தைப்பற்றி யித்தனையகோர நித்திய ஆக்கினையுள்ள பாதாளத்திலே யே ன்முழுகப்போகிறாய்?

உ. உன்னால் கூடுமாகில் நித்தியகால மளவிட்டு எவ்வளவாமென்று யோசித்து மதித்துக்கொள். ஆனால்தற் களவுமில்லை முடிவுமில்லை. ஆகாசத்திலேபறக்கிற அ ணுக்க ளெத்தனையுண்டோ, மரங்களிலு ஞ் செடிகளிலு மெத்தனை யிலை காய்கனி களுண்டோ, சகலசமுத்திரங்களிலு நதி களிலும் ஏரிகளிலு மெத்தனை தண்ணீர்த் துளிகளுண்டோ, கடற்கரையி லெத்த

ளை மணல்களுண்டோ, அத்தனைகோடா கோடிவருஷங்களையுந்தொகுத்துக் கூட் டின்தொகையைப் பின்னுங் கோடாகோ டியிலட்சம்விசைபெருக்கித்தொகுத்தும றுபடியுமித்தொகையைக் கூடியமட்டும் மிகுவித்தாலு மித்தனை வருஷகாலமெல் லா நரகவாசிகள் கொடியதீயில்வெந்தபி ன்பு இன்ன நரகவேதனை துவக்கிறதாயி ருக்கும். மீளவுங்கேள், நரகத்திலமிழ்ந்தி ன ஒருபாவி ஆயிரம்வருஷத்துக்கொரோ யொரு கண்ணீர்விட்டால் பரலோகத்துக் கும் பூலோகத்துக்கு நடுவிலுள்ள விசால நிறைய வேண்டியகண்ணீ ருண்டாகிறது க் கெத்தனையோ கோடாகோடிவருஷம் போகவேண்டும்! இத்தனைவருஷங்கள் கட ந்துபோனாலும் பின்னுமிலட்சந்தர ம்ப் படிப்பட்ட வளவிறந்தகால நடந்தும்போ னாலு மின்ன நரகத்தின் துவக்கமாயிருப் பதல்லாமல் அதற்குமுடிவொருகாலுங் கி டையாது. இதெப்படிப்பட்ட பயங்கர மானசத்தியம்! அகோரகாய்ச்சலாய்க்கிட க்கிறவன் உடலெல்லாங்காய் நாக்குவறள ச் சர்வாங்கமுநோக நூறுவிசைபுரண்டட

ரண்டு ஓரிரவளவு ஒருயுகமென் றிருப்பா னல்லோ. அப்படியிருக்க எண்ணிலுஞ் சொல்லிலு மடங்காத கோடாகோடிவருஷகால நரகத்தில்கோர அக்கினியிலேவெந்து சர்வவேதனைகளையு மநுபவித்துவந் தாலு மொருமுடிவாகுமென்கிறதற்கோரற்ப நம்பிக்கையின் உதயமுதலாய்த்தோன்ருமல் முடியாதகாலமாய் நித்தியமாயெப்போது மென்றென்றைக்கும்வியாதகட்டையாய்ச் சாகாமல்வெந் துபாதிப்பட வேண்டியதென்கிறதிஞல் நரகவாசிகளுக்கிருக்குந் துயரங் களஸ்தி நிர்ப்பந்த மளவறுக்கக்கூடுமோ? நீயிதெல்லாம் யோசியாமற் புகையைப்போ லழிந்துபோகிற பிரபஞ்ச சுகசெல்வங்களினுல் என்மயங்கிப்போகிருய்? நரகத்திலேவிழுந்து இதையெல்லாம் உன்னிர்ப்ப க்கியத்திஞலே யறிந்தபின்புமாத்திரம் விசுவசித்தஞ்சுவாயோ? அப்போது பிரயோசனமில்லாத துயரமனஸ்தாபத்தோடேநித்தியமாய் வேகாதபடிக்கு இப்போதுதானே தேவநீதிக்கஞ்சிப் பலனுள்ளமனஸ்தாபத்தால் நன்னெறியிற் சேருவாயாக

ரு. மண்ணுலகில் மனிதனெத்தனை துன்பதுரிதங்களி லகப்பட்டாலும் எப்பட்டப்பட்ட அகோரவியாதி நோக்காடுகளை யநுபவித்தாலு மவனுக் குதவி யாறுதலெல்லாமற்றுப் போகிறதில்லை. சிலவேளை நோவு துயரந் தானாய்த் தணிகிறதுண்டு. சிலவேளை நித்திரையினாலாவது சோர்வு மூர்ச்சையினாலாவது நோவுதுன்பந் தெரியாமற்போகிறதுண்டு. வியாதியின் கொடுமையில் மெதுவானமெத்தை தலைக்காணி நல்லமருந்து தகுதியான அன்னபானம் பிரியசினேகிதரி னினியசொல் அன்புள்ள பெற்றோர் துணை சுற்றத்தார்பணிவிடை முதலிய முகாந்தரத்தால் இலகுவும் ஆறுதலுங்கிடைக்கிறதுண்டு. இதெல்லாமிருந்தபோதிலுங் கடினதுன்பதுரிதவியாதியைப் பொறுக்கிறதரிதென்பார்கள். நரகத்திலோவெனில் ஓராறுதலுமில்லை, ஒருதவிசகாயமுமில்லை. நிர்ப்பந்தங்களின்கோரம் ஒருநிமிஷமாகிலுந் தணியாமலுங் குறையாமலு மிடைவிடாமலும் எப்போது நிகரில்லாவுக்கிரத்தோடுபாதிக்கும். சகல வேதனைகளு நிறைந்த

அந்தநிர்ப்பாக்கியச்சிறைக்கூடத்திலொ
ருகாலு நித்திரை மூர்ச்சைமுதலாய் வர
வறியாது உலகத்தில்கெட்டசுகசெல்வங்
களிற் பிரியதோழரும் அன்புள்ளவருமா
யிருந்தசுற்றத்தா ருறவின்முறையார் சி
னேகிதர் நரகத்தில்மூர்க்கப்பகைவராகியொ
ருவரொருவரை வற்மித்து நிந்தித்துத்தூ
ஷணித்துச்சபித்து உன்னாற்கெட்டேனே
யுன்னா லித்தத் தீச்சாகரத்தில் விழுந்தே
னே யுன்னால் நித்திய சாபத்துக் குள்ளா
னேனேயென் றலறி வெறியுள்ள புலிக
ளொன்றொன்றைக் கடித்துப் பிடித்துக்
கிழித்தாற்போல தங்களைக்கொடிய சி
னவெறியோ டொருவ ரொருவரை யுபா
திப்பார்கள். பாவீ யுலகத்தின்கெட்டசி
னேகங்களின் முடிவிதுவே! இதைநன்றா
ய் நினை.

நெடுநாள் நரகாக்கினியிலே வேகிறபாவிகளி லொ
ருவன் அதினித்திய ஆக்கினையினின்று நீங்கலாகவும்
பேரின்பத்தையடையவுந் தக்கதனைச் செய்யும்
பொருட் டிவ்வுலகத்தி லுயிர்த்துமறுபடிவரத் தேவ
கிருபையா லுத்தாரம்பெறுவானாகில் ஒருசந்தியுப
வாசமநுசரிப்பதுஞ் சரீரத்தை யொறுப்பதும ஐம்
பொறிகளையடக்குவதுந் தனதுர்க்குணங்களைத் திருத்

துவதும் பாவச்சோதனைகளைச்செயிப்பதுமுதலிய தவக்கிரியையெல்லாமவனுக்குக்கடினமாய்த் தோன்றுமோ? பாவத்துக்காக்கினையாகவும் பரிகாரமாகவுமிவ்வுலகத்திற்சம்பவிக்கிறதுன்பதுரித நோவுகளைப்பொறுக்கிறதுவருத்தமென்றெண்ணுவானோ? அதில்லையே. மறுபடி நரகத்திலேவிழாதபடிக் கெத்தனையோ பயமு மெச்சரிக்கையுமுள்ளவனாய் நடப்பான். நித்தியகேட்டுக்கேதுவாகிய மாயச்சுகங்களையெல்லாம்வெறுத்துத்தனதுகண்ணீரால் தனதுபாவங்களைக்கழுவுகிறதிலும் தவத்தைச்செய்கிறதிலுஞ்சர்வேசுரனைச்சிநேகித்துச்சேவிக்கிறதிலுமினைப்படுவானல்லவா? இதெல்லாயநுசரிக்கக்கடமையுள்ளவன் நீயே. ஏனெனில் நீயே நரகத்தினின்று மீட்கப்பட்டவனென் றெண்ணத்தகும. எத்தனையோவிசை நரகத்துக்குப்பாத்திரவானானாய்? உன் பாவங்களிலேயுனக்குக்கடியதீயைமூட்டினதென்கிறதற்குச் சந்தேகமில்லை. நீயதிலேவிழாதிருக்கிறது தேவகிருபையல்லாதே வேறல்ல. உன்னைவிட நல்லோர்களென்னத்தக்கபாவிகள் நேக ரிந்நேரத்திலேதானே நரகத்தில்வேகிறார்களென்கிற துறுதி. இதெல்லா மிப்படியிருக்க வுனக்குப்பயமில்லாதேபோகிறதென்ன? தவஞ்செய்யாமலும் பாவம்விடாமலுந் துணிந்திருக்கிறதென்ன ? மோசம்போகிறாய். உன் தலைமேல் சாவும் உன்கால்கீழ் நரகமுமிருக்க இன்னங்கெட்டசந்தோஷங்களைக் கொண்டாடலாமோ ? பிரியமுள்ளவனே! நித்தியகேட்டுக்குள்ளாகாதபடிக் கெச்சரிக்கைவேண்டாமோ? ஞானக்கண்மூடி நரகபாதாளத்தில்விழத்திரிகிறதுமதியோ ? அப்படிப்பட்டகுருட்டாட்டம்வேண்டாம். ஆதலா லுங்களுக்குள்ளே யார்கடியநெருப்பிலு நித்தியசுவாலைகளிலுஞ் சஞ்சரிக்கக்கூடுமென்கிற தேவவாக்கியத்தையும் பாவத்திலின்பமொருக்ஷணம் அதினுக்கினை நித்தியமென்கிறவேதபா

ரகர்சொல்லையு நன்றாய்த்தியானித்துப் பாவமயக்கந் தெளிந்து தவத்தாலுஞ் சுகிர்தநடக்கையினாலு நித்தியகோபாக்கினிக்குத் தப்பிததுக்கொள்வாயாக.

---

ய௪ம்.-நாள்.

---

## மோக்ஷப் பேரின்பம்.

க. மோட்சமானது பராபரகர்த்தர் தம்முடைய அளவில்லாக்கிருபை வல்லபமகிமைவிளங்கவுந் தமக்கூழியஞ்செய்து பிரியமானவர்களுக்குப் பூரணசம்பாவனையாகவு நியமித்த நித்திய சுகசெல்வஸ்தலமுமாய்த்திவ்வியஇரட்சகர் நமக்காகத்தமது விலைமதியாத்திருவிரத்தத்தாற் கொண்ட பேரின்ப விராச்சியமுமா யிருக்கிறதினால் அதிலுள்ள மகிமை ஆநந்தபாக்கியங்களுக்கு மதிப்புமில்லை அளவுமில்லை. சர்வேசுரனுடைய அன்புள்ள தயையின் பெருக்க மவருடைய சகலசெய்கைகளுக்கும் அதிகமென்று வேதத்தில்நிச்சயிக்கப்பட்டிருக்கையால் தீயோர்நரகத்திலநு

பலிக்கும்நிர்ப்பந்தவேதனைகளின் மிகுதி
க்கு நல்லோர் மோக்ஷத்திற்சுகிக்குமபே
ரின்பபாக்கியத்தின் பெருக்கமிகவும்தன
மாமென்பதுமறுதி. சர்வேசுரன் நம்மை
நேசிக்கிறவர்களுக்கு ஏற்படுத்திவைத்த
துகளை மனிதர்கண்கண்டதுமில்லை, செவி
கேட்டதுமில்லை, இருதய முணர்ந்ததுமி
ல்லையென்று வேதவாக்கிய நிச்சயிக்கிற
தாமே. ஆதலா லிராசாக்களின்ரமனைகளி
ல்முதலாய்ப் பார்க்கிறவிநோதச்சிறப்புச்
சோதிமகிமைப் பிரதாபமெல்லாங் கே
ட்கிற வின்பவாத்திய விராகசங்கீதமெல்
லாய் சுகிக்கிற சுகசெல்வ சந்தோஷமெல்
லா மோட்சப்பேரின்பப் பெருக்கத்துக்
கொப்பாயிராது. மனிதர் தங்கள் நினைவி
னுலானமட்டுஞ்சகலவித நன்மை மகிமை
யின் பாக்கியங்களையோசித்துப்பாராட்
டி எவ்வளவோவாமாட்சியாக வுணர்ந்தாலு
மதைவிடப் பரகதியினநந்தம எண்ணில்
லாமடங்கதிகமாமே. மோக்ஷத்தினலங்கா
ரத்துக்குக்குறிப்புச்சாயலாக முழுதுந்த
ங்கத்தாலும் நவரத்தினங்களாலுங் கட்டி

ப ஓர்சிங்காரப்பட்டணமுதலிய வற்புதக்
காட்சிகளை அர்ச்-அருளப்பனென்கிற அ
ப்போஸ்தலர்கண் டதிசயமா யெழுதினார்.
கடவுளின் நகரமோ யுன்னைக்குறித்துச் சொ
ல்லப்பட்டதுக ளெத்தனையோ மாட்சி
மையாயிருக்கிறதென்று தாவீதிராசாவெ
ன்கிற தீர்க்கதரிசியும் பிரமித்து வசனித்
தார். இத்தனைமகிமைப் பாக்கியமுள்ளஸ்
தலத்திலே வீற்றிருக்க வாசையில்லாதவ
னுண்டோ?

௨. மோக்ஷத்திலே அர்ச்சியசிஷ்டர்க
ளெல்லாவிராசாக்களைவிட மேன்மையா
ன மகிமைக்கிரீடங்களைத்தரித்து அலங்கி
ருத பிரதாபத்தோடே விளங்கிச் சூரிய
னைவிட மங்காவொளிகொண்டு பிரகாசிக்
கிறார்கள். மேலும் தாவீதரசன் தேவசங்
கீதமாய்ப் பாடினதுபோலே சர்வேசுர
னுடைய பரமவீட்டின் சம்பூரணத்தாற்
பூரிக்கப்பட்டு அவருடையசெல்வநதிவெ
ள்ளத்தில் தாகத்திர்ப்தியாகிறதினால் அ
ளவில்லாவின்பத்தைச் சுகித்துக்கொண்
டிருக்கிறார்கள். அவரவர்புண்ணியங்களுக்

குத்தக்கது அவரவர்க்குவிசேஷமகிமைப் பாக்கியமிருந்தாலு மொருவர்க்குங் காய் மகாரமுமில்லை, குறையுமில்லை. எல்லாரு டையவாஞ்சையளவுக்கு மிஞ்சினபேரின்ப முள்ளதினு லவர்களுக்குப் பூரணதிர்ப்தி யாயிருக்கிறதன்றியும் நதிக ளநேகங்கூ டினமாத்திரத்தில் வெள்ளம் பெருகுமா ப்போலேமோக்ஷவாசிகளெல்லாருஞ்சே ர்ந்த அந்நியோந்நிய பரிசுத்தநேசத் தால் அவரவருடையபாக்கியமும் பேரின் பசந்தோஷமு மதிகரித்து அளவின்றிப் பெருகுகின்றது. அதெப்படியென்று லவ் வரவர் தம்மைச் சிநேகிக்கிறதுபோலே மற்றெல்லாரையு முண்மையான வுத்தம வன்போடே சிநேகித்து அவர்களோடுவ கபந்தனமாயிருக்கிறதினுல் தமதுசுயபா க்கியத்தாலகமகிழ்வதுபோலே மற்றெல் லாருடைய மகிமைபேரின்ப ஆநந்தத் தாலுஞ் சந்தோஷித்து அவர்களுடைய பாக்கியத்தையுஞ்சுகித்து அநந்தகளிப் போடு பூரித்திருக்கிறுர்கள். தங்கள்தற்புத ச்சுகிர்தங்களாகிய விரத்தினங்களாலலங்க

ரிக்கப்பட்டு இத்தனை கனமகிமைபெற்
ற சகல அர்ச்சியசிஷ்டர்களோடே அந்
நியோந்நிய பட்சத்திறு லொரோயாத்
துமமு மொரோமனமுமாய்ச் சஞ்சரிக்கி
றது மவர்களோடேகூட நித்தியமா யினி
பசங்கீதங்களாற் சர்வேசுரனை ஸ்துதிக்கிற
து மெவ்வளவோசந்தோஷமாமே பின்
னும் ஒன்பதுவிலாச்சபைச்சம்மனசுகளை
விசேஷிக்கும் அதிசயமான இலட்சணங்
களைத் தரிசிக்கிறதிறு மவர்கள்சர்வேசு
ரனை ஸ்துதிக்கு மின்பமான விராக்கீதங்க
ளைக்கேட்கிறதிறு முண்டாகுங் களிப்பு
மகிழ்ச்சியு மிவ்வளவென்றுசொல்லக்கூடு
மோ? மீளவு மியாவர்க்குந் தயாபட்ச
ம்நிறைந்ததாயாகிய தேவமாதா பாதத்தி
லேசேர்ந்து மோக்ஷத்தின்லங்காரமாகிய
இந்தப்பரமவிராக்கினியின் ஆத்துமத்தி
லிலங்கிய அற்புதமானசுகிர்த குணகுணங்
களையும் இவள் திருமுகத்தின்வடிவுரூபலா
வண்ணியத்தையும்பார்த்து அமிர்தவசனங்
களையுங்கேட் டெத்தனையோ ஆநந்தத்
தைய நுபவிக்கிறார்கள்! மேலும் வேதத்தி

லெழுதினவாறே பரலோக விராச்சியத்தைவிளக்குஞ்சூரியனாகியசேசுநாதருடைய மனுஷீகத்தில்விளங்கு மளவறுக்கப்படாத சோதிப்பிரதாபமகிமையைத் தரிசித்து அவருடையவாநந்தத்திற்குப் பங்காளிகளாகிறதினு லெவ்வளவோ பேரின்பபாக்கிய மவர்களைப்பூரிக்கின்றது!

௩ பரகதியிற் கண்ணுக்கழகிய விநோதமெல்லாஞ் செவிக்கின்பமுள்ள சங்கீதமெல்லாம் மூக்குக்கு மேவியசுகந்தபரிமளமெல்லாம் வாக்குக்கினிய நற்சுவையெல்லா மெய்க்குச்சுகமான பரிசுத்தசெல்வமெல்லாங் கிடைக்கிறதினாலு மனமுதலிய வுள்ளிந்திரியங்கள் மகிழ்ச்சியினாற் பூரிக்கப்பட்டிருக்கிறதினாலுஞ் சந்தோஷபாக்கிய மெவ்வளவாகப் பெருகினாலுந் தெய்வீகத்தின் பிரத்தியட்சதரிசனையாலுண்டாகும் பேரின்ப ஆநந்தப்பெருக்கமே யெல்லாத்திலு மளவற்ற மேன்மையு மிகுதியுமாமே. அர்ச்சியசிஷ்டர்கள் மோக்ஷத்திலே சர்வேசுரனை முகமுகமாய்த் தரிசிக்கிறதுமல்லாமல் தேவசினே

கத்தின் பிரியாப்பந்தனத்தினா லென்றென்றைக்கு மவரோடேயேகமாகி அவரிடத்திலடங்கிய நன்மைச்சுகபாக்கியங்களை யநுபவிக்கிறார்கள். இப்படியவர் ஐக்கியத்திற்சுகிக்குமாநந்தசந்தோஷ மெண்ணிலுஞ்சொல்லிலுமடங்குந்தன்மையல்ல. அளவற்ற சகல நன்மைப்பாக்கிய சுரூபியாகிய சர்வேசுரனே டேகோபித்திருக்கையாலவருடைய பாக்கியத்தைத்தானே யநுபவித்துக்களிகூருகிறார்கள். மச்சங்கள் சமுத்திரத்தில்வாழ்ந்து சலத்தால் பூரிக்கப்பட்டிருக்கிறதைவிடப்பேரின்ப நன்மைக்கடலாகிய கடவுளிடத்தில்வாழ்ந்து தங்களிலடங்காதவாநந்தத்திலமிழ்த்திப் பேரின்பத்தால் பூரிக்கப்பட்டிருக்கிறார்கள். பின்னும் பரகதியி லநந்தபாக்கியம் அளவில்லாததுமன்றி மட்டுமுடிவுமில்லாமல் நித்தியமுமாயிருக்கும். எத்தனைகோடாகோடிவருஷம்போனாலும் மோக்ஷத்தின்சோதிமகிமையுமங்காது, அதின் பேரின்பசெல்வமுங்குறையாது, அதினித்தியநிலைமையுமுடியாது. மேலுமந்தப்பேரின்பபா

க்கியத்தைதுழியுள்ளகால மநுபவித்தாலு
ஞ் சலிப்புண்டாகாது. எனெனிற் சர்வேசு
ர னளவில்லா நன்மைச் சுரூபியுமா யநந்
தபாக்கியஞ்சொரிகிற வற்றாதவூற்றுமா
யிருக்கையால் மோக்ஷவாசிக ளெத்தனை
கோடாகோடிவருஷ மவரிடத்திற் றங்க
ளாசைப் பெருக்கத்துக்கள்வாகப் பாக்கி
யத்தையநுபவித்தாலு மவரிலுள்ளசுகந
ன்மையெல்லா முழுதும்வர்களா லநுபவி
க்கப்படாம லவர்களுக்கெந்நேரமும் பு
துநன்மைதோன்றிப் புதுமகிழ்ச்சியையு
ண்டாக்கும்.

சர்வேசுரன் அபிராமென்கிற பிதாப்பிதாவானவரு
க்குத் தரிசனையாகி யவரை நன்னெறியிலுறுதிப்படுத்
த நாமேயுனக்குமிசவுபெரிதான சம்பாவனையாயி
ருப்போமென்றார். இப்படிச்சர்வேசுரன் தமமைச்சே
விப்பவர்களுக்குச்சம்பாவனையாகத் தமமையும் தம்மி
டத்திலடங்கிய பாக்கியங்களெல்லாத்தையும் தந்தரு
ளக்கிருபையன்புநிறைந்தசித்தமுள்ளவராயிருக்கையி
ல் நீயவரைச்சினேகித்துச் சேவிக்கிறதுக்கு அசட்டை
யாயிருக்கிறதென்ன ! பிரியமுள்ளவனே ! மோக்ஷத்தி
லுள்ள வளவில்லாச்சுகபாக்கியத்தை ஆசையில்லாம
ல் நினைக்கக்கூடுமோ ? பாக்கியவானாகவேண்டுமென்
றாசைப்படுகிறாயே. அதற்குநிகரானபாக்கியமெங்கே
யினிதரிவ்வுலோகத்தில் ஒரற்பவுத்தியோகம் சம்பள
ம்கூலிக்காக இரவும்பகலும் எவ்வளவோ தண்டித்துட்

ிரயாசப்படுகிறார்கள். ஒருபணத்துக்குமுதலாய்ச் டாதகஷ்டமெல்லாம் படுகிறார்கள். ஒரிராசாகொடுக்கும் கொஞ்சவெகுமானத்தைபற்றி யுத்தஞ்செய்து பிராணனையிழக்கப்போகிறார்கள். தன்னிராச்சியத்திற் பங்களிப்பேனென்றால் அதற்காக எதைத்தான்செய்யாதிருப்பார்கள். சர்வேசுரனேவென்றால் ஊழியுள்ளகாலத்துக்கு ஒருபேரின்பவிராச்சியத்தையும் கிமைக்கிரீடத்தையுந் தந்தருளச்சித்தமாயிருந்தாலு நீ யதுகளை அபேட்சியாமலுந் தேடாமலுமிருக்கிறதென்ன? ஆ! இத்தனைமட்டித்தனமுங் கேடுமுள்ளவசட்டைத்தனத்துக் கிடங்கொடாமல் அடிக்கடி ஆசையோடே பரலோகத்தை அண்ணாந்துபார்த்துப் பேரின்பகதியே! சர்வநன்மையுநிறைந்த நாடே, எனக்குக்குறித்திருக்கிற மெய்யானபாக்கியமே யுன்னையெப்போ தநுபவிப்பேனென் றவலோடினைத்து அதினிடத்திலேயே யுன்னிருதயத்தை ஸ்திரமாகநிறுத்துவாயாக. சேசுநாதர்கற்பித்தபடியேதர்மத்தால் திலேயுனக்கு ஞான ஆஸ்தியைச் சேர்க்கக்கடவாய். பரலோகத்தை யண்ணாந்துபார்க்கிறபோது பூலோக மெனக்கெத்தனையோ அருவருப்புள்ள ஆத்தையாய்த் தோன்றுகின்றதென் றொரு வேதபாரகர்பிரமித்துரைத்தார். நீயோவெனில் புத்திமயங்கி யசுத்தமும் ழியுமுள்ளபொய்த்நன்மைகளைத்தேடி ஏகமெய்யானபாக்கியமாகிய பரகதியை யபேட்சியாதிருப்பது நியாயமோ? அர்ச்.-பெற்நர் துவசனித்தாப்போலே மோக்ஷத்தையடைவதற்குப் படவேண்டிய பிரயாசத்துக் கஞ்சுவாயாகில் அதற்குநியமித்தசம்பாவனையுன் தைரியத்தை யெழுப்பக்கடவது. மோக்ஷப்பேரின்பத்தி னாசையினாலேதானே வேதசாட்சிக ளெந்தநிர்ப்பந்தத்துக்கு மரணத்துக்குமஞ்சாமல் சந்தோஷத்தூடனே வேதத்துக்காகப்பிராணனைத் தந்தார்கள்.

கொஞ்சவருஷத்துக்குமுன் சீனவிராச்சியத்தில் வே
தகலாபஞ்செய்யு மக்கியாணிகள் ஒருகிறீஸ்துவனைப்
பிடித்துக்கட்டிப் பலவிதத்திலும்பயமுறுத்திக் கடை
சியாய்க்கத்தியையெடுத்து நீவேதத்தைமறுத்துவிட
யாகில்இப்போதுதானேவெட்டுகிறோமென்றார்கள். அ
தறகவர்மலர்ந்தமுகத்தோடு இப்போதுமோக்ஷவாச
லில்நிற்கிறேனே. இன்னமோரடிபோனால்திலுட்பிர
வேசிப்பேனே இப்படியிருக்க நான் பின்வாங்கக்கூடு
மோவென்று தைரியத்துடனே தலைதந்துமகிமைக்கி
டத்தையடைந்தார். எந்தப பரதேசியானாலும் தன்
சொந்தத்தேசத்திற்சேர்ந்து வாழவும் தனக்குப்பிரிய
முள்ளதன்பெறறோரின்முறையார் சினேகிதரைக்க
ண்டுதழுவிக்கொள்ளவு மாசைப்பட் டவ்விடம்போக
த் தேடுவானல்லோ? நீயோவெனிற சகலதுன்பதுரித
நிர்ப்பாக்கியநிறைந்த பரதேசமாகிய வில்வுலகத்தி
ன்மே லிச்சைப்பட்டுச்சகலசுபசெல்வ பேரின்ப ஆந
ந்தமுள்ள உன்சொந்தத்தேசமாகிய பரலோகத்தை
மறந்துதிரிகிறதென்ன? மோக்ஷத்திலுன்பேரி ல்ளவ
றற தயை பக்ஷமுள்ளபிதாவாகியசர்வேசுரனுஞ் சக
ல்தாய்மார்களிலு மன்புள்ளதாயாகிய தேவமாதாவுந்
தூயநேசநிறைந்த சகோதரருஞ் சினேகிதருமாகிய
சகல மோக்ஷவாசிகளு முன்னையநந்தநட்பு மகிழ்ச்
சியுடனே யணைத்துக்கொள்ளவிரும்புகிறார்கள். நீயோ
வெனிலுனக்குமட்டில்லாபெருமையாகியவவர்கள்ப
க்ஷத்தையிகழ்ந்து நீசபபாவிகளுடைய வெட்கத்துக்
குரியநேசத்தைபபிரியத்துடனேதேடி யநுசரித்துக்
கெடுகிறதென்ன? நரகம்மோக்ஷ மிவ்விரண்டிலுனக்கு
வேண்டியதெதுவென் றுன்னைக்கேட்டால் மோக்ஷ
மேயெனக்குவேண்டுமெனபாயே. என்றாலு மதற்குத்
தகாதவழியநடந்தா ல்திலே சேரக்கூடுமோ வென்
ன? இதெல்லா மிப்படியாகையில் மெய்யானவாசைச்

யோடே மோக்ஷத்தை நாடி நீசெய்வதெல்லாம்தைக்குறித்துத் தேவதோத்திரத்துக்காகச்செய்து பரிசுத்தநடக்கையால் அர்ச்சியசிஷ்டர்களோடே நித்தியமாய் வாழ்வதற்குப் பாத்திரவானாகக்கடவாய்.



## ௰௧ம்.-நாள்.

## விசுவாசத்தினொழுக்கம்.

௧. கர்த்தருலகவெளிச்சமாகச் சூரியனைஸ்தாபித்ததுபோலே ஈடேற்ற நெறியைவிளக்கும் ஞானப்பிரகாசமாகத் தமதுதிவ்வியவேதத்தை யேற்படுத்தியருளினர். ஏனெனில் பரமண்டலம்பூமிக்குமேல் மிகவுமுயர்ந்ததானதுமதைவிடத்தெய்வீகமுந் தெய்வத்துக்கடுத்ததெல்லாமு மனிதருடைய மனோவாக்குக் கெட்டாத உந்நதமேன்மையாமே. ஆகையாற் சர்வேசுரன் தாமே தம்மையுந் தமதுதிருவுளத்தையு மனிதருக்குத் தெரிவியாதிருந்தால் மனிதர். தங்கள் சொந்தயோசனையா லவரைத்தக்கபடி யறிந்து தொழவும் வணங்கிச்சேவிக்கவுமாட்டார்கள். தே

வவாக்கிய மறியாத கலைஞர்முதலாய்த் தெய்வத்தைக்குறித் தில்லாதவபத்தமெ ல்லாம்போதித்துத் தாங்களு மக்கியான த்தி ன்ந்தகாரத்தில்விழ்ந்தி யநேகரையு ஞ் சகலதுர்மார்க்கங்களுக்கு நித்தியகே ட்டுக்குமுள்ளாக்கினது யாவர்க்கும்பிரசி த்தமாமல்லோ? சாதாரணத்திருச்சபை நமக்குக்கற்பிக்கிற போதனையோவெனிற் சர்வேசுரனுடைய வேதவாக்கியத்தி னா ன்றினதாகையிற் சுகிர்தசத்தியமு மீடேற் றத்தின் தப்பாதநெறியுமாமே. இந்தச் சத்தியபோதனையைத் திருச்சபை சேசு நாதருடைய திவ்வியதிருவாயினின்று கே ட்டு அதை யவர்கற்பித்தபடியே யெவர்க் குமொருகண்டசீரா யுலகமெல்லாஞ்சாட் சியாகப் போதித்துக்கொண்டுவருகின்ற து. மேலுஞ் சகலபதிதர்களின்பத்தங்களை யுமறுத்துநீக்கி யெத்தேசங்களிலும்பா ம்பி யெப்போது மொரேநிலையாகி யெ ல்லாப்புண்ணியங்களாலும் விளங்குகின் றது. அதுசத்தியநெறியைவிட்டுத் தவறு தபடிக்குத் திவ்விய இரட்சகர் தப்பாத

வாக்குத்தத்தம் தந்தருளினபடியே உல
கமுடிவுமட்டுக்கு மெந்நாளும்தற்குப்பி
ரியாத்துணையாகிய அவராலு மிஸ்பிரீத்
து சாந்துவானவராலும் படிப்பித்து ந
டத்தப்பட்டிருக்கின்றது. இதெல்லாமிப்
படியிருக்கையால் அதுவே நமது விசுவா
சத்துக் குறுதியான தேவ அஸ்திவாரமா
மே. சாதாரணத் திருச்சபையோடேகூட
ச் சத்தியசுரூபியாகிற சர்வேசுரன் நமக்கு
வழிகாட்டியாயிருக்க அவரைப்பின்செல்
லுகையில் நாம் நெறிதப்பித் தவறக்கூடு
மோ? அவரையு மவர்ஸ்தாபித்து நடத்து
கிறதிருச்சபையையு முறுதியாக விசுவசி
யாதேபோனு லுலகில் நம்பத்தக்கது வே
றொன்றுண்டோ? ஆதலால் தன்புத்திஞா
னத்தை வேதவிசுவாசத்துக்குக் கீழ்ப்படு
த்தல் மிகவும் நியாயமு மேட்டற்றத்துக்கு
முழுது மவசரமுமாயிருக்கிறதல்லோ?

உ. சர்வேசுரனுல்றிவிக்கவும் எண்ணிற
ந்தவேதசாட்சிகளி னிரத்தத்திலுல் நிச்ச
யிக்கவு மெண்ணிலடங்காத அற்புதங்களா
ல் யெய்ப்பிக்கவும் அநேகமுறை பசாசு

களாலேமுதலா யுண்மையென்றேத்துக்
கொள்ளவும்பட்ட இவ்வேதசத்தியங்களி
ன்மேற்பசந்தேகமும்படுவது மகாமதி
கேடும் பைத்தியமுமென்னத்தகுமே. ஆ
கிலு மிவ்வேதபோதனையைச் சத்தியமெ
ன்று விசுவசித்தாலு மதற்குவிரோதமா
ய்நடக்கிறது மிகவும்திக பைத்தியமாம
ல்லோ? எனெனிற் புத்திஞானத்தை யநு
சரித்தால் தானுறுதியாய்றிந்த தேவகட்
டளையைப் பயமின்றி யெப்படிமீறக்கூ
டும்? மனதுபொருந்தி மோக்ஷமிழந்துந
ரகத்தில்விழப்போகிறதுமதியோ? பசா
சுகள்விசுவசித்து நடுநடுங்குகின்றதென்கி
றதுவேதவாக்கியமாமே. நீயோவிசுவசித்
தாலுஞ் சர்வேசுரனைச்சினேகித்துச்சேவி
யாததுமன்றி யவருக்குப் பயப்படவுமி
ல்லையே. அப்படிப் பாவத்தில்மிழ்ந்தியோ
ரக்கியானியைப்போலேநடந்தா லுன்வி
சுவாசமுன்னை யிரட்சிக்கக்கூடுமோ? பே
லும். ஆத்துமத்தில் விசுவாசங் கெடுகிற
ற்குப் பாவமேகாரணம். அதெப்படியெ
னிற் சந்திரமேடினகள் சூரியனுடையபி

ரகத்தைச் சரியாய்க்காணமாட்டாதது
போலே பாவவசுத்தநிறைந்த ஆத்துமம்
வேதசத்தியங்களைத் தெளிவாயுணரமாட்
டாது. ஆகையாலப்போ ததிலே பாவம
பக்கத்திற்பசாசானது வேதத்தின்மே
ற் சகலவீண்சந்தேகங்களைப் பிறப்பிப்ப
தெளிது. மீளவுங் கள்ளிப்பால் பச்சைக்
கர்ப்பூரம் கண்ணிற்றறித்தா லதைக்கெடுத்
துக் குருடாக்குவதுபோலே பாவப்பழ
க்கமானது ஆத்துமத்தின்கண்ணாகிய விசு
வாசத்தை முழுதுங்கெடுத்து ஞானக்கு
நடாக்குவதுமல்லாமல் நரகத்திலும்விழ
த்தள்ளும். ஆகையா லுன்விசுவாசங்கெ
டாதபடி நன்னெறிதவறாது பரிசுத்தமா
ய் நடக்கக்கடவாய்.

௩. உன்விசுவாசமே யுனக்குத்தீர்வை
ட அஸ்திவாரமாகும். கர்த்தருன்விசுவா
த்துக்கும் நடக்கைக்கு முள்ளவித்தியா
த்தைப்பார்த்து அதின்மே லுன்னை நி
யாயங்கேட்க நீயென்னபிரத்தியுத்தரமு
ாக்கக்கூடும்? உன்மனச்சாட்சியேயுனக்
குவிரோதமாய்நிற்க என்னநியாயஞ்சொ

ல்லப்போகிறாய் ? அந்தப்பயங்கர நாளிந்
க்கடினதீர்வைக் குள்ளாகாதபடிக்கிப்போ
துதானே யுன்விசுவாசத்துக் கொத்தபடி
யுன்னடத்தையைச் செம்மைப்படுத்தக் க
டவாய். விசுவாசமே யுன்கிரியையாவற்று
க்கு நியாயப்பிரமாணமா யிருக்கக்கடவ
து. உன்தீயசுபாவத்துக் கிஷ்டமில்லாதா
யினும் வேதங்கற்பிக்கிறதெல்லா மநுசரி
த்துக் கர்த்தர்விலக்கினதெல்லா முழுதும்
விலகிவிடுவாயாக. மேலுமிதுவரைக்கு மு
ன்விசுவாசத்திற்கு எம்மாத்திரமோ வி
ரோதமாய் நடந்தாயென் றுபாரித்து அ
தின்மேல் மனஸ்தாபப்பட்டுப் பரிகார
ஞ்செய்யவேண்டும். இனியநீதந்தச்சமய
த்திலே வேதகற்பனையையு முலகம்போதக
த்தையு மெதிராகவைத்துச் சீர்தூக்கிப்
பார். தன்கெட்டவிச்சைகளின்படியே ந
டக்கிறதுந் தவத்தைநீக்கி எவ்வித இலௌ
கீகசுகங்களையு மநுபவிக்கிறதும் பாக்கி
யமென் றுலகங்கற்பிக்க நித்தியகேட்டுக்
குவழி அதுதானென்று சேசுநாதர் நிச்ச
யிக்கிறார். தேவதீர்வைநாளிலே தெளிவந்

தவுலோகத்தின்வார்த்தையோபரமகர்த்த ரின்வாக்கியமோ எது உனக்கு உண்மை யாகத்தோன்றுமென்று விசாரித்து உன் னீடேற்றத்துக்குரியவழியே ஸ்திரமாய் நடப்பாயாக.

பிராஞ்சிராச்சியத்தி னிராசாவாசிய அர்ச்.-ஞானப்பிரகாசியார் தம்மரசின்முடியைவிட விசுவாசத்தை முக்கியமாயெண்ணினதினு லநேகம்விசை தமது நாமத்தோடே தம்மிராசாங்கத்தின் பெருமைப்பேரைக் கூட்டாமல் தாம் ஞானஸ்நானம் பெற்றவூரின்பேரைக்கூட்டுவார். பூர்வத்திலு மிக்காலத்திலுந்திரளானகிறீஸ்துவர்க ளுலகத்தி னைசுவரியமுதலிய சகலபொருட்களிலும் விலையேறப்பெற்ற விரத்தினமாகிய தங்கள் விசுவாசத்தைக்கைவிடாதபடிக்குத் தங்களாஸ்திமுதலியவற்றையும் பிராணனையுஞ் சந்தோஷமாயிழந்து பேரின்பபாக்கியத்தை யடைந்தார்கள். அவர்களைப் போலச் சத்தியத்தி லசையாதநிலையா யிருப்பாயாக. வேதத்திலுள்ள கண்டுபிடிக்கக்கூடாத தேவவிரகசியங்களா லுன்விசுவாச முறுதியாகவேண்டுமொழியத் தத்தளிக்கப்படாது. ஏனெனில் பெரியோர்முடிக்கிற வரியவேலைகளைபிள்ளைகள்கண்டுபிடிக்கவும் அறிஞருணர்ந்த சாஸ்திரநூற்களைக்கல்லாருணரவுஞ் சமுத்திரத்தினிறைந்தசலஞ் சிறியதோர்கலத்தி லடங்கவுங் கூடாதிருக்கச்சர்வேசுரனுடைய வளவில்லாஞானமும் பரமதேவ விரகசியங்களு மற்பமனிதர் மனுவாக்குக்கெட்டா திருப்பதிசயமோ? ஒருநெல்விளைந்து நூறுநெல்லாய்ப்பலுகவு மொருகொட்டைமுளைத்துப் பெரியமரமாய்வளரவும் கண்ணாலேகாண்கினும் தெப்படியாகின்றதென் றுணராயே. அப்படியிருக்க

த்தெய்வத்தின்பரமவுணர்ச்சிகளை யெப்படியுணர்வா
ய்? சர்வேசுரனின்னின்னசத்தியத்தைத்திருவுளம்ப
ற்றினானென்று தவறாத திருச்சபையின் தாட்சியால்
றிந்திருக்கிறதே நமக்குப்போதும். தத்தளியாமல் அ
தையேவிசுவசிக்கக்கடவோம். மேலுஞ் சத்தியவேத
ந் தெரியாதவக்கியானிகளு மதைவிட்டுத் தவறினப
திதர்களு மீடேற்றநெறியிற்றிரும்பும்பொருட்டு அடி
க்கடிபரமகர்த்தனைமன்றாடி அவருன்னைத் தமது சத்
தியதிருச்சபையிற்சேர்த்தருளியதமைக்கு நன்றியறி
ந்ததோத்திரஞ் செய்வாயாக. அப்போஸ்தலர்களவ
ரை வேண்டினபடியே சுவாமியெங்கள்விசுவாசத்தை
அதிகரிக்கப்பண்ணியருளுமென்று மன்றாடி உன்விசு
வாசத்துக்கத்தாட்சியாக விசுவாசமந்திரத்தைப்ப
த்திவணக்கத்தோடே செபித்துக்கொள். அதன்றியு
ம் நற்கிரியையில்லாதவிசுவாசஞ் செத்தபிணமாமே
யென்கிற தேவவாக்கியத்தை நன்றாயோசித்து உன்வி
சுவாசமானது தேவசிநேகத்தைக்கொண்டு நற்கனி
தருமபடிக்கு வேதசுகிர்தவொழுக்கத்தைச் சுமுத்தி
னாயாக வநுசரிப்பாயாக.

---

## ௰௨ம்.-நாள்.

---

### கடவுளின் சர்வவியாபகம்.

௧. சர்வேசுரன் சர்வவியாபியென்பது
குன்றாத்வேதசத்தியமாமே. இதைப்பற்
றி இராசதீர்க்கதரிசியாகிய தாவீதென்கி

றவர் சர்வேசுரனைநோக்கிப் பரமசங்கீத
ங்களிற் பாடினதாவது: கர்த்தாவேயுமது
சமுகத்திலேநின்று யெங்கே யோடிப்
போவேன். நான் பரலோகத்திலேறினா
லுமங்கேதேவரீரிருக்கிறீர், பாதாளத்திலி
றங்கினாலுமங்கேயும்வீற்றிருக்கிறீர், விடி
யற்காலத்திற் சிறகுகளையெடுத்துச் சமு
த்திரத்தின் கடைசியெல்லையிற் சஞ்சரிக்
கப்போனாலும் அங்கேயுந்தேவரீர்தாமே
யென்னை நடத்தி யுமது வலதுகையென்
னைப்பிடித்துத் தாங்குமென்றுபாடினார்.
சர்வேசுரன் பரலோகத்திலும் பூலோகத்
திலும்நிறைந்து எங்கும் வியாபித்திருக்
கையில் அவர்நம்மிடத்திலும் நாம்வரிட
த்திலு மெப்பொழுதுமிருக்கிறது நிச்ச
யம். மச்ச மெங்கெங்கே நீந்திப்போனா
லுஞ் சலத்திற்றங்கி அதினாற் பிழைத்துக்
கொண்டிருக்கிறதுபோலேயும் பட்சிக
ளெங்கேபறந்தாலும் ஆகாயத்திலடங்கிய
தினா லுயிர்வாழ்ந் திருக்கிறதும்போலேயு
ம் நாமெல்லாருஞ் சர்வேசுரனிடத்திலட
ங்கி யவராற்சீவியமுதலிய நன்மையெல்

லாமநுபவிக்கிறோம். நமதாத்துமம் நம்முடையசரீரத்தினிறைந்து வீற்றிருக்கிறதைவிடச் சர்வேசுரன் மெய்யாகவே நம்மிடத்தினிறைந்து வீற்றிருக்கிறு ரென்னத்தகும். இப்படியெந்நேரமுமவரிலடங்கி அவர்சந்நிதியிலேயிருக்கையில் எத்தனையோபயபத்தி வணக்கத்துடனே நடக்கக்கடவோம். இதுவரைக்கும் இப்படிநடந்தாயோவென்றுபார்.

உ. சோதிசர்வேசுரனெங்கும்வியாபித்திருக்கையால் மறைவின்றியே யெல்லாத்தையுந்தாமேகண்டறிகிருர். நீசெய்கிறதெல்லாம்பேசுகிறதெல்லாம் அவருக்குவெட்டவெளியா யிருக்கிறதுமன்றி யுன்னிருதயத்தினந்தகாரத்திலே யொளிந்திருக்கிற நினைவாசை யோசனைகருத்துக்களை முதலாய்ப் பிரசித்தமாகக்காண்கிருர். அவருடையசர்வஞானமாகியநோக்கஞ்சூரியன் கதிரினுந்தெளிவாகி யெல்லாத்தையுமூடுருவிப்பாய்ந்திருக்கையி லதற்குநம்மைமறைக்க இரவிருள் மதிள்வீடுதிரைமுதலியயாதொன்றுமுதவாது. இதிப்படியிரு

கக, எந்நேரமுமுன்னைப் பார்க்கிறசர்வே சுரனுடைய சமுகத்திலஞ்சாமல் அவருக் கருவருப்பான பாவங்களைச்செய்ய வெப் படித்துணிவாய் ? சண்டாளர்முதலாய் நீ திக்கர்த்தாக்கள்முன்பாகத் திகிலடைந்து கருதினதிருட்டுக் கொலைமுதலிய பாதக ங்களைமுடியாமல் விட்டொளிவார்கள். நீ பெரியோர்முகத்தில் ஓ ரக்கிரமமும் ஒர் நாசாரமுஞ் செய்வதற்கஞ்சி மரியாதை யோடே நிற்பாயல்லோ ? இரண்டொரு நீசர்முன்பாகவும் எந்தப்பாவத்துரோகத் தையுஞ் செய்யவஞ்சுவாயே. அப்படியிரு க்கச் சர்வத்துக்கும்திபதியிராசாவுமா யு ன்னை யெந்தக்ஷணத்திலுஞ் சாகடிக்கவல் லவருமாய்ப் பாவிகளை நிர்வையிட்டு நர கதிற்றள்ளுகிறவருமா யிருக்கிறசர்வேசு ரன்சமுகத்திலே மாதிர மெப்படி யஞ் சாதிருக்கிறாய்!சர்வலோகத்துக்குமுன்பா கக் குற்றவாளியா யவமானப்படுகிறதை விடத் தேவசமுகத்தின்முன்பாகப் பாவி யாயிருக்கிறது அதிகவெட்கத்துக்குரியத

ல்லோ? ஆதலால்நீயவருடையசந்நிதியிலெ
ந்த வற்பகுற்றததையாவது செய்யதும்
நினைக்கலுமாகாது அவருன்னுள்ளததை
முதலாய்க்காணசசர்வஞானமும் உன்னைத்
தீர்வையிடச் சர்வநீதியும் உன்னைததண்டிக்
கச் சர்வவல்லபமுமுள்ளவராகையி லவர்ச
முகததிலேலதானே யவர்சட்டளைமீறி நீதிக்
கோபததைபெழுப்புவது உனக்கெவ்வள
வோதின்மையாமென்றுநன்றாய்நினை.

௩. சர்வேசுரனெங்கும் வியாபித்திருக்கி
றாரென்கிற நினைவானது உததமதேவபய
ததாற் பாவத்துர்க்குணங்களை யடக்கிறது
போலே பததியின்சுறுசுறுப்பை யெழுப்
பவு மற்றச்சகலபுண்ணியங்களை விளைவித
துக் காக்கவுந் தகுதியாம். போர்ச்சேவ
கர் சததுருக்களைவெல்ல இராச்சமுகதுதி
ல்வீரம்பெருகும், பத்தாமுன்னிலையிற் பு
ததினி காமாதுரர் தந்திரங்களைவிலக்கக்க
ற்பிற்றிடனுண்டாம், தகப்பனார்முன்பாக
மக்கள்தப்பின்றிக் கட்டளையின்படி நடக்
கக்கீழ்ப்படிதலும் குருசந்நிதியில் சீஷர்
நல்லொழுக்கமநுசரிக்கவுறுதியும், எசமா

ன்பார்க்கையில் ஊழியர்பணிவிடைசெய்யச் சுறுசுறுப்புமதிகரிக்குமல்லோ? அவ்வண்ணமே சர்வேசுர னம்மைப் பார்க்கிறாரென்கிறசிந்தனை சுகிர்தநெறியில் நம்மையுறுதிப்படுத்தும். அதினால்நமதாசத்துருவாகிய பசாசின்தந்திரங்களைச் செயிக்கத் தைரியமிகும். நமது தாதருமபததாவான கர்த்தருக்குத் துரோகஞ்செய்யாமல் துர்மார்க்கர்சோதனைகளை வெறுத்தொதுக்க வெச்சரிக்கையுண்டாம். அன்புள்ள பிதாவும் பரமகுருவுமாகிய அவருக்குப் பிரியமக்களுமாய் நற்சீஷருமாய்க் கட்டளையின்படியே ஒழுங்குடன் நடக்கப் பக்ஷிரவணம்பெருகும். சர்வத்துக்குமாண்டவராகிய அவரைச்சுமுத்திரையாய்ச்சேவித்து ஸ்துதிக்கப் பத்திவணக்கமும்வளருமல்லோ? சர்வேசுரனுன்னிடத்திலு நீயவரிடத்திலு மெப்போது மிருக்கின்றமையால் நீசெய்கிறபுண்ணியமெல்லாந் தமது மேல்வைக்கிறபத்தியன்பெல்லாம் தம்மூழியத்தில்படுகிற பிரயாசமெல்லாம் தம்மைப்பற்றிப்பொறுமையோடநுபவிக்கி

றகஸ்தி துன்பமெல்லா மவர்பிரியதது டமேனபார்த்து அதுகளுக்கெல்லாந் தக்க சம்பாவனே நியமித்துக்கொண்டிருக்கிறு ர். இராசாக்கள் தங்களைச் சேவிக்கிறபோ ர்ச்சேவகருககும் பணிவிடைககாரருககு ந் தககசம்பாவனேகொடுகக வாசைப்பட் டாலு மவர்களெல்லாருடைய வீரததையு ம் பிரமாணிககததையும் பார்ககாமையி னுலு மெல்லாருககுந்தகுந்தபலனேத த ரவ்வகாசமில்லாமையாலும் அநேகருக குவேண்டிய பலன்கிடையாமற் போகிற துண்டு. சர்வேசுரனேவெனிற் முமேசர்வ ததையும் பார்ககிறவருமாய்ச்சகலநன்மை ச்சுரூபியுமாய்ச்சர்வவல்லவருமாயிருககை யா லவரைப்பற்றி நீ செய்கிறபுண்ணியங் களிலொன்றுகிலும் பலனில்லாமற் போ காது. இப்படியிருககையில் நீ யெவ்வள வோ நம்பிககைச் சுறுசுறுப்புச் சிநேகத தோடேயவரைச் சேவிக்ககக்கடவாய்.

சகலவிசுவாசிகளுக்கு மாதிரிகையான அபிரகாம் என்கிற பிதாப்பிதாவானவருக்குச் சர்வேசுரன் தரிச னையாகி நீ நயதுசமுகத்தில்நடந்து உத்தமனுயிருப் பாயாகவென்று திருவுளம்பற்றினுர். இவ்வுண்மையே

தேவசந்நிதியி னினைப்புப புண்ணியசாங்கோபாங்க த்துக்குச் சுருக்கமானவழியாகையால் நீயுமத்த கு கத்தக்கதாகக்கர்த்தர்கற்பித்தபடியே யெந்நேரமு மவர்சமுகத்திலே நடப்பாயாக. வேண்டும்வேண்டா மென்றுனு நினைவில்லாதபோதினு மனிதரெப்போது ஞ் சர்வேசுரன்சமுகத்திலிருக்கிறது மவர்தேவசுபா வத்தி னளவில்லாததன்மையா லெல்லாரிடத்திலும் வீ ற்றிருக்கிறதுஞ் சத்தியந்தானே. ஆகிலும் வேதத்தில் விவரித்திருக்கிறபடியே கிருபையாலும் சினேகத்தா லும் அவருடையமனம் நல்லோர்களோடே விசேஷப ந்தனமாக ஏகோபித்து நீதிக்கோபத்தாலும் பாவ த்தின்பேரில் வெறுப்பினாலும் பாவிகளுக்கன்னிருக் கின்றதென்னத்தகும். ஆகையா லவர் விசேஷவன்பி னாலுன்னிடத்தில் வாசம்பண்ணத்தக்கதாக வடிக்க டி நினைவினாலு மாறுதநேசத்தாலு மவரிறங்கி யொ ன்றித்திருக்கக்கடவாய். அவரோடொன்றித்திருப்ப து எத்தனையோவின்பமும ஆறுதலுமாயிருக்கும். அ வருன்னிடத்திலிருக்க நீ எதுக்குப்பயப்படக்கூடும்? ஆனாலவர் துர்க்கந்தப்பாவவழுக்கடைந்தவிருதயத்தி ற் பிரியப்பட்டு வாசம்பண்ணவும விருப்பத்தோடே பாவிகளைப பார்க்கவுமாட்டாரல்லோ? அப்படியிருக் கச் சகதிமூடினமுகத்தோடுமனிதர்பார்வையிலமிழக் கமாட்டாதபாவிக ளவர்திருச்சமுகத்திற் பாவநிறை ந்த ஆத்துமத்தோடே வெட்கமின்றி யெப்படித்தி ரிகிறார்கள். பிரியமுள்ளவனே நீ யொருகாலு மப்படிச் செய்யாமல் தேவசமுகத்திலே யுன்னாத்துமத்திலோ ரசுத்தமுமிருக்கவொட்டாம லதையடிக்கடி பரிசோ தித்துச்சுத்திகரிப்பாயாக. தேவசந்நிதியினினைப்புப பதியின்சுவாலையை வளர்த்துக்காப்பாறது மெண் ணெய்யும் பாவத்தைநீக்கு மவிழ்தமுமாகையா லது உன்மனத்தில் ஸ்திரமாய்த்தரிக்கவேண்டும. விசேஷ

மாயப்பாவச்சோதனைவருகிறசமயத்திற்சர்வேசுரனு
ன்னைப்பார்க்கிறாரென்று நினைத்தவுடனே தந்திரமெ
ல்லாம்வெறுத்துத்தள்ளக்கடவாய். அப்படியே சுசன்
னம்மாளென்கிற கற்புடையாள் தேவசந்நிதியி னி
னைப்பினால் பயங்கரமான தந்திரத்தைச்செயித்தாள்.
மேலானவதிகாரமுள்ள விரண்டுகிழவரொருமித்து அ
வளுக்குப்பயமுறுத்தி நீயெங்களாசைக்குள்ளாகாவி
ட்டாற்பொய்ச்சாக்ஷியாலுன்னை யவதூறுங்கொலையு
ம்படுத்துவோமென்றார்கள். அதற்கவள் அஞ்சாமல்,
சர்வேசுரனுடையசமுகத்திலே பாவஞ்செய்கிறதை
விட வுங்களபழிக்குள்ளாகிறது தாவிலையென்றாள். ஆ
கையாலற்புதமானவிதமாய்ச் சர்வேசுரனவளைப்பொ
ல்லாப்பில்லாமற் காப்பாற்றி யந்தத்துஷ்டர்நினைத்
துவாக்கினையை யவர்கள்தலைமேலேதானே விழச்செ
ய்தார். அர்ச்.-அகுஸ்தீன்வசனித்தபடியே நீயாதொ
ருபாவஞ்செய்யத் துர்மனதாகிற் சர்வேசுரனுன்னை
ப்பார்க்காதவிடந்தேடிக்கொள். ஆனாலப்படிப்பட்ட
விடமெங்குமில்லையே. வேதமொழியின்படி சர்வேசுர
னுடைய பார்வைக்குச்சகலமும் வெட்டவெளியும் பி
ரசித்தமுமாமே. ஆதலா லிதை யொருகாலுமறவாம
ற் பரிசுத்தமாய்நடத்து அவருடையபிரத்தியக்ஷத
ரிசனத்துக்குப் பாத்திரவானாகக்கடவாய்.

---

௰௩ம்.-நாள்.

---

தவத்தினவசரம்:

௧. நீங்கள் தவஞ்செய்யாவிட்டா லெ
ல்லோருஞ் சிதைந்து போவீர்களென்
று சேசுநாதர்யாவர்க்கும்பொதுமொழி

யாதது திருவுளம்பற்றினார். ஆகையால் தவம் யாவர்ககு மவசரமாமே. அதற்கிரண்டுமுகாந்தரமுண்டு: முந்தமுந்த அவனவன் செய்தபாவங்கள்பரிகாரமில்லாதிருககக்கூடாது. ஆதலால்ஒன்றிலதுகளை தவத்தின் கண்ணீர்களாற் கழுவவேண்டும், ஒன்றில் அதுகளுககுரிய நிதநிய நரகாககினைககுள்ளாவது தபபாது. நீயே யுன்பாவங்களைப பரிகரிககாதேபோனால் தேவநீதியும்நினைத தண்டியாமல் விடபபோகிறதில்லை. அநுதினமும்பாவிகளிற்சிலர்நரகத்தீச்சாகரததிலமிழ்ந்திப்பாகிறார்கள். நீயும் பாவததிலேநிலைததால் தேவகோபநதினிடி யுன்தலைமேல்விழுகிற தெந்நேரமோ வுனககுததெரியாது. இதிபபடியிருககையிலுடைந்தகபபலொட்ட முழுகிபபோகாதபடிககுக் கிடைககும்பலகையைப பிடிதது அததோடேநீந்திக கரையிற்சேருவதுபோலே பாவததாலுடைந்த கபபலாகிய ஆததும சரீரததோட்டேழ்ரகபாதாளததிலமிழ்ந்திபபோகாதபடிககுப் பாவியினிட்டேற்றததுககாக மீதியாய்

நிற்கிற எகப்பலகையாகிய தவ்ததைப்பி
டித்துக் கரையேறவேண்டாமோ? இரண்
டாமுகாந்தரமேதெனில் மனிதனிடத்தி
ல் வேரூன்றின பாவத் துர்க்குணங்களா
மே. பாழான நிலத்தில் நற்பயிர்விளைவிக்க
க நெடுநாள் பிரயாசத்துடனே யுழுது
முள்ளுப்பிடுங்கித் தண்ணீரிறைத்து நல்
வித்தவிதைத்து நற்பயிருடன்விளையுங் க
ளைபறித்து வேலியிட்டுக் காவற்பண்ண
வேண்டியதல்லோ? அதைப்போலப் பா
வத்தால்பாழான நிலமாகிய மனிதனிடத்
தில் நற்பயிராகிய புண்ணியம்விளைய அவ
னவன் தன்னுத்தும சரீரத்தைத் தவத்தால்
திருத்திமுள்ளுக்களான துர்க்குணங்களைப்
பிடுங்கி, மனஸ்தாபத்தின் கண்ணீரிறைத்
து நல்விதையாகிய வேதசத்தியங்களைமன
தில்விதைத்துப் புண்ணியவிளைவுக்கு விக்
கினமானதெல்லாம்விலக்கி, நல்லொடுக்க
மாகிய வேலியால்அடைத்து, பத்திரம்பண்
ணவேண்டும். முள்ளுக்களும்சர்ப்பமுதலி
யவிஷ ஜெந்துக்களுநிறைந்த பாழானபூ
மியைப்போலே சகல துர்க்குணங்களும்

பாவமே தோஷங்களுநிறைந்த தவமில்லா ஆ
த்துமம் அக்கினிக்கல்லாமல் வேறேயெ
துக்குந்தகுதியாயிராது. ஆனு லக்கினியி
லேவேகிறதைவிட எப்படிப்பட்ட கடி
ன தவமாகிலு நன்மையுமின்பமுமா யிரு
க்குமல்லோ? இதைநன்றாய்நினை.

௨. தக்க தவக்கனிகளைத் தாருங்களென்
பது வேதவாக்கியமாமே. வியாதிக்குத்த
க்கது பரிகாரஞ்செய்யவேண்டுமே. கடி
னவியாதி யிலேசான மருந்தினுற் றீராது.
அப்படியே நிறைந்தபாவங்களுக்கு அற்
பதவசுபோதாமையால்வேதத்தி லநேகா
நேகம்விசை பாவிகளுக்குக்கடின தவங்கற்
பிக்கப்பட்டிருக்கின்றது.உங்கள்முழுவிரு
தயத்தோடும் ஒருசந்தி அழுகைப்பிரலா
பத்தோடு நம்மிடத்திற்றிரும்பி வாருங்க
ளென்றுயோவேலென்கிறதீர்க்கதரிசியா
ற் கர்த்தர்திருவுளம்பற்றினுர். ஆகையா ல்
டிக்கடி யுன்பாவங்கள்மேல் மனஸ்தாப
ப்பட்டழுது, ஒருசந்திமுதலிய தவக்கிரி
யைகளா லுன்பாவங்களைப் பரிகரித்துத்
தேவநீதிக்குத்தரிக்கக்கடவாய். இதெல்லா

ங் கசப்பென் றெண்ணுதே. உன்னுடலில் வியாதியுண்டானுல் இன்பமானவுணவு சுகபோகமெல்லாம்விலக்கிக் கசப்புவருத்தமொன்றும்பாராமல் வைத்தியர்சொன்ன அவிழுதத்தின்று பத்தியம்பிடித்து அடைத்தவீட்டிலொடுக்கமாயிருக்கிறுயல்லோ? உன்னுத்துமவியாதிகளைத் தீர்க்கவும் நித்தியசாவுக்குத் தப்பித்துச் சத்தமானசீவியத்தை யடையவும்வேண்டிய பரிகாரத்தவமாத்திரங் கசப்பென் றெண்ணலாமோ? மேலு மிரக்கதயாபரிறைந்தருளவைத்தியராகிய சேசுநாதர் நமக்குத்தவத்தின்மேலுள்ள வெறுப்புநீங்கி யாசையுண்டாகும்பொருட்டுத் தாமேகடினதவஞ்செய்து நம்முடையபாவங்கள்மேல்இரத்தக்கண்ணீர்விட்டழுதார். பாவீ! அதற்குப்பின்புன் பாவங்களால்துக்கப்பட்டழுதுதவஞ்செய்யாதிருக்கக்கூடுமோ? பிள்ளை தான்வேண்டாமென் று வெறுக்கிறமருந்தைத் தனக்குமுந்திப் பிரியமுள்ளதாய் பக்ஷித்தால் தின்கிறதைக்கண்டமாத்திரத்தி லதைத்தானேசந்தோஷமா யுட்கொள்ளுகிறதில்லையா?

௬. புறத்துத் தவக்கிரியைகள்மாத்திரம் போதாமல் உள்ளத்திற்றானே பாவவெறுப்பு மெய்யான துக்கமனஸ்தாபமும் ஆத்தும ஆசாபாசத் துர்க்குணங்களினடக்கமும் பிரதானமாய்வேண்டியது. இதுகளில்லாவிடில் தவக்கிரியைகள் பொய்யானவேஷமொழிய மற்றப்படியல்ல. உங்களவஸ்திரங்களையல்ல வுங்களிருதயங்களையே கிழியுங்களென்று கர்த்தர்திருவுளம்பற்றினார். அதேதெனிற் பூர்வீகத்தில்வழங்கினதுபோலே துக்கக்குறிப்பாகத் தங்கள் வஸ்திரங்களைக்கிழிப்பதுதவிர மனம் பாவத்தால்நொந்து, துக்கத்தாற்பிளந்தாற்போல் மனஸ்தாபப்படுகிறதே காரியமென்றர்த்தமாம். ஆகையால் மெய்யானதவஞ்செய்ய முந்தமுந்த உண்டானவமெல்லாம் வெறுத்துவிட்டு நல்லபாவசங்கீர்த்தனத்தாலும் கண்ணீராலுமதுகளைக்கழுவவேண்டும். ஆகிலும். பாவசங்கீர்த்தனஞ் செய்தமாத்திரத்தி லுன்தவக்கடன் தீர்ந்ததென்றெண்ணாதே. ஏனெனில் வேண்டியநல்லாயத்த மெல்லாவற்றோ

டும்பாவசங்கீர்த்தனஞ்செய்தாயென்பது எப்போது முழுநிச்சயமில்லாதபடியால் பாவப்பொறுத்தல் கிடைத்தது நிச்சயமாய்த் தெரியமாட்டாது. தான் தேவகோபத்துக்கோ அல்லது பட்சத்துக்கோ பாத்திரவானாயிருப்பது மனிதனுக்குத் தெரியாதென்று வேதத்திலெழுதியிருக்கின்றது. ஆகையாற் றவஞ்செய்வதெப்போதுமவசரம். மேலும் பாவப்பொறுத்தல் கிடைத்ததென்று நிச்சயமானாலுந் தன்னாலியன்றமட்டுந் தேவநீதிக் குத்தரிக்கவும் தன்கெட்டசுபாவத்தை யடக்கவுந் தான்தர்மஞ் சுத்தபோசன மொருசந்தி யாத்துமசரீரவொறுத்தல்முதலிய தவமின்னமுமகத்தியகடனாயிருக்கும்.

கர்த்தாவுக்கு மிகவும் பிரியமுள்ள தாவீதரசன்தானிழைத்த தப்பிச்செய்தபாவந் தேவகிருபையாற் பொறுக்கப்பட்டதென்று ஒருதீர்க்கதரிசியின் திருமொழியால நிச்சயமாயிருந்துஞ் சாந்தனையும் அதற்காகக் கடினதவஞ்செய்து இரவெல்லாந் தமதுபடுக்கையைத் தமமுடையகண்ணீராலே நனைப்பார். நீயோவெனிற் சிறுவந்துவக்கிச் செய்தபாவத்துரோகமெல்லா மெத்தனையென்றுபார். அதுகளையெண்ணவுன்னாலேகூடுமோ ? அதுகளாலுன்பேரி லெவ்வளவோதவக்கடன் சுமந்திருக்கின்றது. இதெல்லாந்தீர

இதுவரைக்கு நீசெய்ததபசென்ன! பரிகாரமென்ன!
ஒன்றுங்காணேமே. வேதமானது அநேகாநேகவி
டத்தில் தவத்தைக்கற்பிக்கிறபடியே பூர்வகிறீஸ்துவர்
கள் கடினதவத்தை யநுசரித்துவந்தார்களே. பூர்
வீகத்தி லியாதொருத்தன் ஒருவிசையாகிலுந் திருட்
டுத் தேவதூஷணம் விபசாரமுதலிய கனமானபாத
கங்களில்விழுந்ததாக வருசுப்பட்டிருந்தால் அவன
நேகவருஷம் பிரசித்தமான தவசுசெய்யக்கட்டளையி
டப்படுவான். கிழமைதோறு மநேகநாள் கடினவொ
ருசந்திபிடிப்பதுமல்லாமல் முந்தமுந்தச் சிலகாலம்
கோணியைமாத்திரம் ஆடையாகத்தரித்துத் தலைமே
ல் சாம்பலைநிறைத்துக்கொண்டு கோயிலுட்பிரவேசி
க்கக்கூடாமல் அதின்வாசலி லழுகையோடேநின்று
விசுவாசிகளின்மன்றாட்டைத் தனக்காகக்கேட்டிரப்
பான். ௨-வது. மறுபடியுஞ்சிலகாலம்பூசையிலும்பிரா
ர்த்தனைகளிலு மிருக்கக்கூடாமற்பிரசங்கங்களைக்கே
ட்பதற்குமாத்திரங் கோயிலுட்பிரவேசிக்க வுத்தரவு
பெறுவான். ௩-வது. பிரார்த்தனைகளிலும பூசைத்து
வக்கத்திலுஞ் சாஷ்டாங்கமாய்க்கிடந்து பூசைகால்
வாசியாகிறபோது கோயிற்புறம்பாக்கப் படுவான்.
௪-வது. பூசையிலும் பிரார்த்தனைகளிலு நின்றுகொ
ண்டிருப்பான். இப்படிக்கிரமமா யந்தந்தப்பாவத்து
க்குக் கட்டளையிட்டிருந்தபடியே யஞ் சேழு பத்து
பதினைந்துவருஷங் கடினதவமுடித்தபின்பு பொறுத்
தலையடைந்து தேவநற்கருணைவாங்க வுத்தரவுபெறு
வான். பாவீ! பூர்வத்திலொருபாவத்துக்கித்தனைநெ
டிது மரிதுமான தபசுகட்டளையிடப்பட்டிருக்க இந்
நாளில் அநேகக்கனமான துரோகங்களைச்செய்தவ
ன் கடினதபசுசெய்யாமற் போகிறதுநியாயமோ?
அர்ச்சியசிஷ்டர்கள்முதலாய் மோக்ஷத்தையடைய
அருந்தவக்கிருத்தியங்களிற றங்கள் சீவியகாலத்தைச்

செலவழித்தார்கள். நீயோவெனில் தவயின்மினன்று நீ தகாச்சுகவின்பங்களை நாடிக்கொண் டிருக்கையிலே ப்படிகளையேறக்கூடும்? மோசம்போகாதே. பாவி யானவ னீடேறுகிற தறகுத்தவமேயழியல்லாமல் வே றில்லை. நிநீவெனகிற வீரசதாணிப்பட்டணத்துச்ச னங்கள் பெரும்பாவிகளா யிருந்ததினுற கர்த்தர்யோ னுவென்கிறதீர்க்கதரிசியையனுப்பி யவர்கள்பேரில் வருகிற தமதுகோபாக்கினையி ன்நிவிப்பாக நாறபது நாளைக்குப்பின் நிநீவுசங்காரமாமென்று கூறக்கட்டு ளையிட்டார். இதைக்கேட் டிராசாமுதலியவெல்லாரு ம்பயந்து மனந்திருமபிக் கடினதவத்தா லிரட்சிக்கப் பட்டார்கள். அவர்கள்திரும்பாராகில் அவர்களுக்குச் சர்வசங்காரந்தப்பாதே. நீயுந்தவஞ்செய்யாவிட்டா ற் கொஞ்சத்துக்குள்ளாகத் தேவகோபாக்கினை யுன் மேல்வருவது நிச்சயம். ஆனுவின்னம்தறகு நாறபது நாள்செல்லுமென்று ஆரால்நிதானிக்கக்கூடும்? ஆ கையால் தவஞ்செய்யோமாகில் தேவநீதிக் கையில் கப்படுவோமென்கிற தேவவாக்கியத்தை நன்றுயோ சித்துத் தக்கதவசினுற் றேவகிருபைக்குப்பாத்திரமா க்கக்கடவாய்.

---

## ௰௯ம்.-நாள்.

---

## மனந்திரும்பாத் தாமதத்தினுள்ளகேடு.

க. உலக நியசுகமாயத்தால் மயங்கின வநேகர் நினைக்கிறதப்படியாவது: தம துநற்காலமெல்லாந் தமதாசைக்களவாக

த் சிற்றின்பத்தைச் சுகிக்கிறதிலே செல
வழித்துச் சாவதற்குமுன் புண்ணியநெறி
யிற்சேர்ந்து கரையேறலாமென்று கரு
துவார்கள். ஆதலால் சகலபாவத்துர்நடக்
கைகளுக்குத் துணிந்து மனந்திரும்பா
தேபோகிறார்கள். ஆனாலிப்படியோசிக்கி
றவனே யிதைவிட அநியாயமும் அக்கிர
மமு மோசமுமுள்ள யோசனையேயில்லை
யென்றுபார். அதெப்படியெனிற் சர்வே
சுரன் தமக்கேற்காததுரோகஞ்செய்கிறத
ற்கோ வுன்னையுண்டாக்கிக் காப்பாற்றிக்
கொண்டுவருகிறார். அதில்லையே பாவஞ்
செய்யச் சர்வேசுரனொருவர்க்கும் நேரத்
தைக் கொடுக்கவில்லையென்று வேதத்தி
லெழுதியிருக்கின்றது. உன்னுயிர்க்கால
மெல்லாம் அவரைச்சிநேகித்துவணங்கிச்
சேவிப்பதேஉன்மேலுள்ளவகத்தியமான
கடனல்லவோ? அதிலேயொருநிமிஷமாவ
து பாவத்திலேசெலவழிக்கிறது பெருமநி
யாயமாமே. பின்னு நித்தியபேரின்பபா
க்கியம்பெற மனுஷனுயிர்க்காலங் கொ
ஞ்சமாயிருக்க விதிலேபாவத்துக்கு மீதியு

ண்டென் றெப்படி நினைக்கக்கூடும்? மே
லு முன்வாழ்நாளைப் பாவத்திற்செலவழி
த்துக் கடைசிக்காலத்தில்மாத்திரஞ் சர்
வேசுரனைத்தேடித் தொழுவேனென்பது
அவருக் கெவ்வளவோ நிந்தை யவமான
மென்று யோசித்துக்கொள்: ஒருவன்தே
ங்காயி[illegible]ளெல்லாந்தின்று வெறுமோ
டுமாத்திரமுனக்குத்தந்தா லுனக்குப்பிரி
யப்படுமோ? ஓரிராசாவிடத்தி லுயர்ந்த
வொருத்தியோகம்பெற விரும்புகிறவன்
இராசத்துரோகிகளுக்கு விருந்திட்டு மி
ஞ்சினவெச்சில்களை யவருக்குச் சந்திப்
பாகக்கொண்டுவந்தா லிராசாமனம் வெ
றுக்காமற் சகிக்கக்கூடுமோ? உலோகத்தி
ற்காணாத விந்தவவமான துரோகத்தை நீ
யோரிராசாவுக்கல்ல சர்வத்துக்குமதிபதி
கர்த்தாவுக்கே செய்யத்துணிகிறாய். அ
தெப்படியெனி லவருக்குப்பகையாளிக
ளான வுலோகபசாசு சரீரத்தினிச்சைக்கு
த்திருத்தியாக வுன்வாழ்நாட்களைப் பாவ
த்திற்செலவழித்து அதுகளின் எச்சில்க
ளான உதவாத கடைசிக்காலத்தைமாத்தி

ரஞ் சர்வேசுரனுக் கொப்புக்கொடுப்பே னென்கிறுயே. இது அவருக்கு எவ்வள வோபொருந்தாத அரோசிகமாயிருக்கு ம். எந்தக்காலத்திலு முழுமனதோடே திரும்புகிறபாவியைக் கர்த்தரிரட்சிப்பா ரென்பது சத்தியமானுலும் வேண்டுமெ ன்று தன்வாழ்நாளைப் பாவத்திற் செலவ ழித்துக் கடைசியில் தேவநீதிக்குத் தப்பி த்துக்கொள்ளத் திரும்புவேனென்கிறவ ன் தானேமோசத்துக்குள்ளாகிச் சர்வே சுரனுற்கைவிடப்பட்டுப் பாவத்தோடே செத்து நரகத்திலே விழுவனென்னத்த கும்.

உ. சுகிர்தநெறியில் திரும்பாத்தாம தத்தால் நெடுநாள் பாவத்திற்பழகினவ ன் கரையேறுவது மிகவு மருமையாமே. கோணுகிற விளமரத்தை நிமிர்த்தலெளி து, கோணலோடே முதிர்ந்தபின் ஒடித் தாலு நிமிராது. அப்படியே பாவத்துர்க் குணம் பழக்கத்தால்முதிர்ந்து கெட்டசு பாவமானபின் அதைமாற்றுவது மிகவும ருமை. முளைக்கிற ஆலங்கன்றைப்பிடுங்கலு

ணக்குவருத்தமாகி லதுமரமாய்வளர்ந்து பெருகிவிரிந்து பலத்த வேரூன்றினபின் மிக்கபிரயாசத்தோடு வெட்டினாலொழி யப் பிடுங்கித் தள்ளவுங்கூடுமோ? அவ்வண்ணமே பாவம்வளர்ந்து ஆத்தும த்திற்பெரும்வேரூன்றிப் பலத்தபின்பு அ தைமிக்கவருத்தத்தோடே நீக்கலாமொ ழிய மற்றப்படியல்ல. பிறக்கிற குஷ்ட ரோகம் ஆரம்பத்திற்பரிகரிக்கப்படுமொ ழியஅதுசரீவாங்கத்திலும் பரவி முதிர்ந்த தா லுடல்நாறிப் புழுத்தழிகிறபிணமான பின்பு மனிதரால்திரமாட்டாது. அப்படி யே பாவப்பழக்கத்தா லாத்துமங்கெட் டழிந்து நற்குணமெல்லாமிழந்து சகல துர்க்கந்த வக்கிரமத்திலமிழ்ந்தினபின்பு தேவச்செயலற்புதமில்லாம லொருகாலு ங் குணப்படாது. வீரக்குறைவினால் தன் மாற்றானைச் செயிக்காம லவனுக்குச்சிறை யாகிக் கைகால்விலங்குண்டு மெலிந்தவ ன் அதுகளையுடைத்து மாற்றானையெப்ப டிச்செயிப்பான். அவ்விதமாய்மனத்திட ந்தப்பி யுலகமும் பசாசு சரீரமென்கிற மூ

ன்றுசத்துருக்களைவெல்லாம ல்துகளுக் க
டிமையாகிப் பாவப்பழக்கங்களென்கிற
கொடியவிலங்குகளி ல்கப்பட்டபின்பு உ
ன்னை நீ யெப்படிமீட்டுக்கொள்வாய்?

ரு. பாவப்பழக்கத்தால்வருகிற கேடுக
ளித்தனையென்று கணக்கில்லை. பாவியா
னவன் புத்திகெட்டுக் குருடாகித் தான்வி
ழப்போகிற நரகபாதாளத்தையுந் தனக்
குவரப்போகிற சர்வகேடு வேதனைகளையு
ங் காணமாட்டான். ஆத்துமச் செவியுங்
கெட்டு வேதசத்தியங்களையுஞ் சுகிர்தபு
த்திமதிகளையுங் கேட்டுணரான். மனமுங்
கெடடுச் சுகிர்தநன்மையெல்லாங் கசப்
பென்றுவெறுத்துத் தின்மைமாத்திர மி
னிமையென்றபேட்சிப்பான். இருதயமு
ங்கன்னெஞ்சாகி யொன்றுக்கு மிளகாதி
ருப்பான். பாவத்துக்குப்பலமிருப்பதொ
ழியப் பாவதந்திரம் விலகவுஞ் சுகிர்தத்
தைச்செய்யவுந் திராணியற்றுப்போனாற்
போலே யவனுக்குத்தோன்றும். இப்படி
யுன்சுபாவமெல்லாம் பாவத்தாற்கெட்டபி
ன்பு அதைத் திருத்திக் குணமாக்குவதெ

ளிஃதா! இது தேவகிருபையின் அற்புத
மானபலத்தாலல்லாதே யுன்சொந்தப்ப
லத்தாலொருகாலுமாகமாட்டாது. ஆனா
லிப்போது சர்வேசுரனுன் பாவங்களைவிட
ச்சொல்லிப் புண்ணியநெறிக் குன்னைய
ழைத்து உன்னாத்துமத்தைக் குணமாக்கி
யிரட்சிக்கச்சித்தமாயிருக்கையில் நீயவரு
டையதயவைப் பிறக்கணித்து இப்போ
து நான் பாவத்தைவிடமாட்டேன், இன்
னம்நாள்போகவேணுமென்று பாவத்தி
லேநிலைத்து மேன்மேலு மவருக்குத் து
ரோகஞ்செய்தாற் சர்வேசுரன்மறுபடி யு
னக்கிப்படிப்பட்ட வதிசயமான கிருபை
செய்வாரென்று நம்பக்கூடுமோ? இவ்வி
தமாகத் தேவகிருபையைத் தட்டிப்போ
ட்டவர்களுக்குச் சேசுநாதர் வசனித்ததா
வது: நானகலுகிறேன், இனியென்னைத்
தேடுவீர்கள், ஆகிலு முங்கள்பாவங்களிற்
சாவீர்களென்றார். மாரிகாலத்திலுழுது ப
யிரிடாவிட்டால கோடைக்காலத்திற் பட்
டினியாய்ச் சாகவேண்டியிருக்குமல்லோ?
அப்படியே யெத்தனையோபேர் தக்ககால

த்தில் தேவகிருபையி னநுக்கிரகத்தைக் கைக்கொள்ளாததினா லென்றென்றைக்கு மதையிழந்தார்கள். உன்னைப்போலே அவர்களுந் தப்பிதமாயோசித்து நாம் நரகத்திலேவிழமாட்டோம், சாவதற்குமுன் திரும்புவோமென் றிருக்கையில் மேன்மேலுங்கெட்டுத் தேவகோபாக்கினையா லெல்லாமாய்ச்செத்து நித்தியநரகாக்கினைக்குள்ளானார்கள். நீயு மதற்குள்ளாகாவண்ணம் நன்றாய் நினை.

நடுச்சமுத்திரத்திலோடுகிற கப்பல் நெடுநாள் தண்ணீரூறி நிறையக்கண்டாலு முழுகிப்போகிறவேளையிற் றண்ணீரிறைத்து நீர்வழியடைத்துக் கரைபிடிப்போமென்கிற அசட்டைத்தனமமோசமுங்கேடுமா யிருப்பதுபோலே மரணவேளையில்மனந்திரும்பி நல்லாயத்தஞ்செய்து மோக்ஷத்தையடைவேனென்று சாவுபரியந்தம் பாவத்தைவிடவுந் தவசுமுதலிய நல்லொழுக்கத்தை யநுசரிக்கவுந் தாமசஞ்செய்வதே பைத்தியமுமோசமுமாமே. ஏனெனில் மரணவேளை யெப்போதென் றொருவர்க்குந்தெரியாது. உனக்குவாழநாளின்னமிருக்குமோவில்லையோ அறியமாட்டாய். எத்தனையோபேர் நல்லபிராயத்தில் மரிக்கிறார்கள். எண்ணிக்கையில்லாதபெயர் அவலமாய்ச் சடிதியிலுஞ்சாகிறதுண்டு இவர்கள் ஆயத்தமின்றிச் சாகிறதும்போலே நீயுஞ்செத்தா லுனக்கெத்தனையோ மோசம்! ஆனால் சாவு வியாதியால்வந்தாலு மீட்டேற்றமின்னமகா ஆபத்திலேகிடக்கும். அதெப்படியெனில் நோயி

ஞ ல்நேகர்புத்திமயங்கிப் பேச்சு நினைவுமில்லாமற் பாவசங்கீர்த்தனந் தேவநற்கருணைமுதலிய நன்மையு தவியைப்பெறுமல் அவலமாய்ச்சாகிறார்க ளல்லோ? உனக்கப்படிவராதென்கிறநிச்சயமென்ன? மேலுங்க டைசி அவஸ்தைபரியந்தம் நினைவுதெளிந்தாலுஞ் ச ர்வாங்கமும்நோக வியாதி யகோரத்தின்மேலும் அ விழ்தப்பரிகாரத்தின்மேலும் தான்பிரிகிற மக்கள் சு ற்றத்தார் ஆஸ்தி பொருள் முதலியவைகளின்மேலுஞ் சிந்தனையோட நல்லபாவசங்கீர்த்தனமுதலிய தக்க ஆயத்தஞ்செய்வதற்கு வேண்டியகருத்தும் மனத்தி டனு மெப்படியுண்டாம். சுகமாயிருக்கிறபோதே ஒ ருநாழிகைநேரமாவது பராக்கின்றிச் செபமுடித்த லரிது. ஒருதலைநோவுவந்தாலொருசிந்தனையுமில்லா மற்கிடக்கிறாய். சிலவொருதுர்க்குணஞ்செயித்து நிர் மூலமாக்க அநேகவருஷம்பிடிக்கும். அப்படியிருக்க நீ வியாதியால்மனத்திடனற்று நினைவுகுறைந்து வாய் குளறிப் பலமொன்றின்றிக் கிடக்கிறபோது உன்பா வமெல்லாம்வெறுத்துக் கெட்டசுபாவத்தைமாற்றி ந ற்குணமடைந்து மண்ணாசை பெண்ணாசை பொன்னா சயெல்லாமொழித்துச் சர்வேசுரனைமுழுமனதோ டே சிநேகித்து முழுதும்வேறேமனுஷனாகத் திரும் புவது ஒருநிமிஷத்தில்முடியுமோ? அப்பொழுது பா வசங்கீர்த்தனம் தேவநற்கருணை அவஸ்தைப்பூசுதல் பெற்றாலும் நல்லாயததமில்லாமற்போனால் பலிக் கக்கூடுமோ? அவஸ்தையிற் படுகிறமனஸ்தாபமும் வி டுகிறகண்ணீரும் செய்கிறபிரதிக்கினையு மிக்கநம்பிக் கைகொடாதென்று வேதசாஸ்திரிகள் நிச்சயித்தார் கள். அவஸ்தையிற் பிரசித்தமாய்ச் சர்வேசுரனுக்கு நாறுவார்த்தைதப்பாடு கொடுத்துப் பாவத்தைவிட் டோமென்று சத்தியம்பண்ணி ஆரோக்கியமானவுட னேபழையபடி துர்மார்க்கமாய்நடந்தவர்கள் தற்கத்

தாட்சியா யிருக்கிறார்கள். அந்தியோக்குஸ்என்கிற இராசா தன்வாழ்நாளெல்லாஞ்சர்வேசுரனுக்குச்சொல் விலடங்காத சகல குரூரத்துரோகங்களைச்செய்தபின் மரண அவஸ்தைதையாகி மிகுந்த அழுகையோடே கர்த்தாவிடத்தில் பொறுத்தலைக்கேட்டான். ஆனால் பொறுத்தலையடையாமல் அவலமாய்ச்செத்தானென்று வேதத்திலெழுதியிருக்கின்றது. ஏனெனில் தேவ சினேகமின்றிப் பயத்தையும் நோய்வேதனையையும் பற்றிமாத்திரம் அழுதானொழிய மற்றப்படியல்ல. இதெல்லாமிப்படியிருக்கையில் மரணவேளையில் மனந்திரும்பிக்கரையேறுவேனென்று நீயெப்படி நம்பிக்கையோடே சொல்லக்கூடும்? உன்வாழ்நாளி லெப்படி நடந்தாயோ அப்படியேசாவாய். தெற்கேபோகிறவன் வடக்கிலேசேரான். பாவவழியிற்றிரிகிறவன் பரகதியையடையான். ஆகையால் வேதத்திற்சொல்லியிருக்கிறபடியே சர்வேசுரனிடத்தில் திரும்புகிறதற்குத்தாமதம்பண்ணுதே. நாளுக்குநாள்பின்னையென்றிராதே. இன்றுதானே சர்வேசுரன்மேலுன்பட்சமெல்லாம் வைத்து மரணபரியந்தந் தவறாமல் புண்ணியவழியையநுசரிப்பாயாக.



## ௰௫ம். - நாள்.

## முகதாட்சிணியத்திலுள்ள கேடு.

௧. உலகத்தின் பெரியவிராசாக்களைச் சேவிப்பதுமவர்களோடே சம்பந்தமா

யிருப்பது மவர்கள்விருதைத்தரிப்பது ம
காபெருமையென்றெல்லாரு மெண்ணு
வார்களல்லவா? இதைவிட இராசாதிரா
சாவாயிருக்கிற சர்வேசுரனைச் சேவிப்ப
து மவருக்குப்பிள்ளையாயிருப்பது மவரு
டைய வேதவடையாளங்களைத் தரிப்ப
துங் கிறீஸ்துவனுக்கெத்தனையோ வதிக
பெருமையாயிருக்கும். ஆனாலிதையோ
சியாமல் மனிதர்முகப்பிரீதியைப்பற்றிப்
பரமகர்த்தர்மட்டிலு மவருடைய திவ்வி
யவேதத்தின்மட்டிலுங் கூச்சப்படடாற்
போலே வேதத்துக்கு விரோதமாய்நடப்
பது மிகவுநெறிகெட்ட வக்கிரமமுஞ் ச
ர்வேசுரனுக்குப் பொருந்தாத வவமான
முமாமே. பாவ அக்கிரமமுதலிய தின்
மையின்மேல் வெட்கப்பட வேண்டிய
தொழியப் பரிசுத்தசுகிர்த சத்தியத்தின்
மேல் வெட்கப்படலாகாதே. ஆனாலும்பா
விக ளக்கிரமத்திலே தங்கள் பெருமை
யைப்பாராட்டுகிறார்கள். அக்கியானிகள்
பொய்த்தேவர்களின் வெட்கத்துக்குரிய
அவலக்ஷணப் பாவவடையாளங்களை முக்

கியமாய்த் தங்கள் நெற்றிமுதலிய வவய வங்களின்மேலதரிக்கிருர்கள். நீயோவெ னில் மனிதர் முகதாடசிணியத்தைப்பற் றி மெய்க்கடவுளின் சுகிர்தவேதவடையா ளங்களைத் தரிக்கவு மவரைப்பதியுடன் சேவிக்கவும அவருடைய சத்தியவேதக் கட்டளைகளை யநுசரிக்கவுங்கூச்சப்படலா மோ? இதைவிடவக்கிரமமுண்டோ? இ ப்படியே அற்பராகிய மனிதருக்குப் பி ரியப்படப் பரலோகபூலோக இராசாவு க்கு எற்காதவனாப்போகிறதும் அவர்க ளுடையமுகத்தை முறிக்கமாட்டாமல் க ர்த்தாவின் திருமுகத்தைமுறித்து அவரு க்குத்துரோகஞ்செய்கிறது மெப்படிப் பட்ட மதிகேடு மநியாயமுமாயிருக்கின் றது.

உ. ஆனால் நீ நல்லநிறிஸ்துவனாய்நட ந்து செபதபமுதலிய சத்தியவேதசுகிர் தமுறைகளையநுசரித்தாற்சிலருன்னைப்ப ழித்து நிந்தித்து அவமானப்படுத்துவார் களென்று பயப்படுகிருயோ? அதுவு நி யாயமலல. குருடர்கண்பார்வையுள்ளவர்க

ளைப்பழித்தால் குருடராகவேணுமோ? கூடாதே. தீயோர் நல்லோர்களை நிந்தித்துப் புண்ணியத்தைப்பகைக்கிறதிலோவெனி லவர்களுக்கஞ்சிப் புண்ணியத்தைவிட்டு அவர்களோடு நித்தியமாய்கெட்டுப்போவதற்கு நியாயமுண்டோ? மீளவுஞ் சேசுநாதசுவாமி நம்மையிரட்சிக்கவலியவநுபவித்த நிந்தை கஸ்தி யவமானம் இவ்வளவென்று சொல்லமுடியாதே. அப்படியிருக்க அவரைப்பற்றி நமக்கு என்னென்ன நிந்தையவமானம்வந்தாலும் அதற்கஞ்சிப் பின்வாங்கலாமோ? அவரைப்பற்றியு மவரைப்போலும் நிந்தையவமானப்படுவது நமக்கு மகா பெருமையல்லோ? முற்காலங்களிலுமன்றி இந்நாட்களிலுஞ் சீனமுதலிய விராச்சியங்களில் அஞ்ஞானிகள் நடத்தும் வேதகலாபம் நிந்தை கொடூரநிர்ப்பந்தங்களுக்கும் சாவுக்குமுதலாயஞ்சாமல் திரளானகிறீஸ்துவர்கள் சத்தியவேதத்துக்காகச் சந்தோஷித்துடனே பிராணனைத்தந்தார்களே. நீயோவெனி லொரு நிந்தையான வார்த்

தைக்குப்பயந்து வேதத்தைமீறுவ தெப்படிப்பட்ட கோழைத்தனம்!

௩. மனிதர் முகப்பிரீதியாற் பலிக்குநன்மைதானேது? அவர்கள்நிந்தையால் வருந்தின்மைதானென்ன? ஒன்றுமில்லை. அல்லது மிகவுமற்பமும் அநித்தியமுமாமே. அப்படியிருக்க வவர்களைப்பற்றி உனக் குயிருஞ்சாவும் நித்திய ஆக்கினையும் அல்லதுமட்டற்ற ஆநந்தபாக்கியமுங் கட்டளையிடவல்லவராகிய கர்த்தருக்குத் துரோகம்பண்ணுவதுமதியோ! மீளவுந் துர்மார்க்கர் நல்லோருடைய பத்திவிசுவாசத்தை நிந்தித்துப்பேசினாலு மதினாலிவர்கள்கலங்காமல் நன்னெறியி லுறுதியாய் நிலைக்கிறதைக்கண்டால் பிறகு இவர்களை மதித்துப் புகழுவதும் நிலைகொள்ளாதவர்களை யிகழுவதும் இவ்வுலகத்திலேயேவழக்கம். அன்றியும் புண்ணியத்துக்குவந்த நிந்தையவமானம் நடுத்தீர்க்கிறநாளிற் பரிகாரமாகி நிந்தித்தவர்கள்மேல் திரும்பிவிழ முகப்பிரீதியைத் தேடினவர்களுக்களவற்ற விகழ்ச்சிகிடைக்கும். அதெப்ப

டியெனில் பரமகர்த்தராகிய சேசுநாதர் மனிதர்முன்பாகத் தம்மைக்குறித்துக் கூச்சப்பட்டவனெவனே அவன் மட்டில் தாமே தமது மகிமைப்பிரதாபத்தோடே யெழுந்தருளிவரும்போது தம்முடைய தேவபிதாவுக்கு முன்பாக அவனைக்குறித்துக் கூச்சமாயிருப்பதாகத் திருவுளம்பற்றினர். இந்தவாக்கியம் மனிதர்முகதாட்சிணியத்தைப்பற்றி வேதத்துக்குக்குறைவாய்நடக்கிறவர்களுக் கெவ்வளவோபயங்கரமா யிருக்கின்றது. நீ மனிதர்முகப்பிரீதியாலாவது பயத்தாலாவது திவ்வியகர்த்தரைக்குறித்து வெட்கப்பட்டாற்போல்வருடைய சுகிர்தவேதத்தை யநுசரிக்காமற்போனல் அவர்தீர்வையிட வரும்போதுதம்முடைய தேவபிதாவுக்குமுன்பாக உன்மட்டில் வெட்கப்பட்டாற்போலே யுன்னைத்தமக்குச் சீஷனாக ஏற்றுக்கொள்ளாமலு மோக்ஷத்திற்பிரவேசிக்கவிடாமலும் பிறக்கணித்து நரகபாதாளத்திலே தள்ளுவார். இதைவிடப் பெரிய கேடுண்டோ! இப்படியொன்றுக்கு முத

வாத மனிதர்முகப்பிரீதியைப்பற்றிச் சர்வேசுரனுடைய பக்ஷத்தையு நித்தியமோட்சபாக்கியத்தையுமிழந்து சகல ஆக்கினைக்குமுள்ளாகப்போகிற ஜனங்களெவ்வளவோ நிர்ப்பாக்கியமாமே!

நன்னெறியையநுசரிக்கையில் மனிதருடைய நிந்தைக்குப் பயப்படத்தகாததுபோலே யவர்களுடையபுகழைவிரும்பித்தேடலுமாகாது. மனிதர்முகப்பிரீதிக்குச் செய்யப்பட்டபுண்ணியமே புண்ணியமாயுமிராது. மோக்ஷத்துக்கேற்ற பலனுமபெறாது. சர்வேசுரன் தமமைப்பற்றிச் சுத்தகருத்தோடு செய்யப்படுஞ் சுகிர்தத்தையேற்றுக்கொள்வாரொழிய மற்றதெல்லாமேற்றுக்கொள்ளார். விலையேறப்பெற்ற சுகந்தபரிமளத்தைமூடாமல் திறந்துவிட்டால அதினின்பமானவாசனை சிதைந்தழிவதுபோலவுங் காற்றில்வைத்தவிளக்கவிவதுபோலவு மனிதர்முகப்பிரீதிக்கும் ஸ்துதிக்குமசெய்தபுண்ணியந் தன்பலனிழக்கும். இதைக்குறித்துச் சேசுநாதசுவாமி திருவுளமபற்றினதாவது: நீங்கள்மனிதராற்காணப்படும்பொருட்டுங்கள்சுகிர்தத்தை யவர்களுக்குமுனபாகச் செய்யாதபடிக் கெச்சரிக்கையாயிருங்கள். இல்லாவிட்டால் பரமண்டலங்களிலேயிருக்கிற வுங்கள்பிதாவினிடத்திற் பலனைப்பெறமாட்டீர்கள். ஆகையால் நீ தர்மஞ்செய்கையில மனிதராற காணப்படுவதறகுத தேவாலயங்களிலும வீதிகளிலுங் கள்ளஞானிகள் செய்வதுபோலே யுனக்குமுன்பாகத் தாரை யூதுவியாதே. மெய்யாகவே யுங்களுக்குச்சொல்லுகிறேன், அவர்கள் தங்கள் பலனையடைந்தாயிற்று. நீயோவெனி லுன் தர்மம் இரகசியமாயிருக்கும்படிக்குத் தர்மஞ்செய்கை

யி லுன் வலதுகைசெய்கிறதை யுன்னிடதுகை யறி
யாதிருப்பதாக, அப்போதிரகசியத்திலுங் காண்கிற
வுன்பிதா வுனக்குப்பிரதிபலனை யளிப்பாரென்று திரு
வுளம்பற்றினர். இப்படியே செபமுதலிய சகலபுண்
ணியங்களையு மனிதர்முகப்பிரீதியைவிரும்பாமற் சர்
வேசுரனைப்பற்றிமாத்திரஞ் செய்யவேணுமென்று க
ற்பித்தருளினர். அவதரித்த அந்தத்திவ்வியகர்த்தர்
சர்வ ஆராதனைஸ்துதிகளுக்கு முரியவராயிருந்தாலு
ந் தம்முடையதேவபிதாவுக்குத்தோத்திரமுண்டாக
மாத்திரம்நாடி நான் எனக்குமகிமைவரத் தேடுகிற
தில்லையென்றார். அப்படியிருக்க நீயுனக்குஸ்துதிமே
ன்மையைத்தேடுவதென்ன? புகழ்ச்சியை ஒருதிருடனை
ப்போலே யுள்ளத்திலேபுகுந்து ஞானத்திரவியமெ
ன்கிறபுண்ணியமெல்லாம்பறிந்துக்கொள்ளும். ஆகை
யாற் பிரயாணத்திற்கொண்டுபோகிற வாஸ்தியாபர
ணங்கள் கள்ளர்கையில்கப்படாதபடிக்கு மறைத்து
ப் பத்திரமாய்க் கொண்டுபோகிறதுபோலே யுன் தர்
மபுண்ணியங்களைத் தாழ்ச்சியால்மறைத்துக் காப்பா
ற்றக்கடவாய். எசெக்கியாஸென்கிறவிராசா தன்திர
வியங்களையெல்லா மந்நியவரசன் ஸ்தானாபதிகளுக்
குக்காண்பித்ததின்மேல் அதுக ளவ்வரசன் சேனைக
ளுக்குக் கொள்ளையாமென்று இசாயாஸென்கிற தீர்க்
கதரிசியானவர் தேவகட்டளையால்றிவித்தார். இப்
படி யுன் தர்மங்களை நீபாராட்டினால் அதுகள்சத்து
ருவுக்குக்கொள்ளையாமென்றறிக. ஆதலா லுலகப்புக
ழ்ச்சியையாவது நிந்தைப்பயத்தால் தேவகடமைக
ளை யநுசரியாத கோழைத்தனமாவது உன்னிடத்தி
லுண்டோ வில்லையோவென்று பரிசோதித்து உண்
டானால்ந்தத்துர்க்குணத்தைநிர்மூலமாக்கப் பிரயாசு
ப்படக்கடவாய். அர்ச்.-கின்னப்பனென்கிற அப்போ
ஸ்தலர் சுவிசேஷத்தின்மட்டில் கூச்சப்படமாட்டே

ன், நம்முடையகர்த்தராகிய சேசுகிறீஸ்துவின் சிலு வையொன்றிலேயொழிய வேறேயெதிலு மென்பெரு மையைப் பாராட்டமாட்டேனென்றதுபோலே நீயு ஞ் சத்தியவேதத்தைப்பற்றி யொருகாலுங் கூச்சப்ப டாம லுலோகப்பெருமையையும் ஸ்துதியையும் பிற க்கணித்துச் சிலுவையேயுளக்குப் பெருமையென்றெ ண்ணக்கடவாய். உயர்ந்தபிரபுவங்கிஷத்தாராயிருந் த அர்ச்.-இஞ்ஞாசியார் இராசாவின்ரமனையிலு மிரா ணுவங்களிலுமிகுந்தஞானம்வீரமுதலியசாமர்த்தியங் களால் விளங்கினபின்பு எல்லாத்தையுந்துறந்து கடி ன தவஞ்செய்து நிந்தையிற்பொறுமை தாழ்ச்சியென் கிற புண்ணியங்களையடைவதற்குப் பிச்சைக்காரன் வேஷமெடுத்து வீதிவீதியா யிரந்துவருவார். நீசரும் பயல்களும் அவரைப்பழித்து நிந்தித்து மிகவும்வமா னப்படுத்தினாலு மிதெல்லாமின்பமென் றதிசயமான பொறுமையோடே யநுபவிப்பார். இப்படிப்பட்ட தாழ்ச்சியா லதிசயமான அர்ச்சியசிஷ்டதனத்தைய டைந்தார். இந்தச்சுகிர்தமாதிரிகையினால் மனிதர்மு கப்பிரீதியைமிதிக்கக்கற்றுக்கொள்வாயாக. வரிமேவ து காலத்திலும்அர்ச்சியசிஷ்டர்களுமிப்படியேதங்கள் சு கிர்தமாதிரிகையினாற் கற்பித்தார்கள்.அதெப்படியெ னில் தானியலு ம்வருடையமுத்தோழரு மிராசகோ த்திரத்திற் பிறந்தவராயினுஞ் சண்டையிற்சிறைப ட்டு அச்சியானியான அந்நியவிராசா வரமனையில் வளர்க்கப்படுகையி லவன்மேசையில் வைக்கப்பட்ட மாமிசப்பதார்த்தங்க ளவர்கள்பொசிப்புக்குக் கொ டுக்கப்படும். ஆனால்துகள் தங்கள்வேதத்துக்கொவ் வாத்தினால் மனிதர்முகப்பிரீதியைச் சட்டைபண் ணமலு ம்வர்கள்கோபத்துக் கஞ்சாமலும் அதுகள்த ங்களுக்குத் தேவையில்லையென்று வெறுமரக்கறியை க்கேட்டுக்கொண்டு பொசிப்பார்கள். பின்னுமந்தமூ

த்தோழரு மிராசா ஸதாபித் தாராதிக்கக்கட்டளையி ட்ட விக்கிரகத்தைக்குமபிடமாட்டோரொன் றஞ்சா மற்சொன்னதினற கொடியதீச்சூளையில் தள்ளப்பட் டார்கள். தானியலு மஞ்சாம லிராசாபயங்கரவாச்ஞி ளையால் விலக்கினபோதிலு மெய்யானசர்வேசுரனை வேண்டிக்கொண்டுவந்தபடியாற்பசித்த துஷடச்சிங் கங்கள் நிறைந்தகுழியில்தள்ளிவிடப்பட்டார். ஆனவி வருமவர்களுமடிருதமையாகப் பொல்லாப்பின்றி யிர ட்சிக்கப்பட்டார்கள் இதெல்லாமிந்தநீ மனிதர்மு கப்பிரீதயைப்பற்றி வேதத்தைமீறக்கூடுமோ! எல் லாத்திலு மனிதர்க்கல்ல சர்வேசுரனுக்கே பிரியப்ப டவிருமபி யவராவிரட்சணியத்தையு நித்திய ஆநந்த மகிமையையும் பெற்றுக்கொள்வாயாக.

---

## ௰௯ம்.- நாள்.

---

## தன்னைநம்பாமையினவசரம்.

௧ உலகத்தில் வழிப்போக்கனுனமனி தன் சறுக்கலுள்ளநிலத்திலே நடக்கிறத லாமலு மெந்நேரமுமபற்பல தந்திரச் சோதனைகளிலுமகட்பட்டிருக்கிறான். நி த்தியகேடடுக்குள்ளாகாதபடிக்கு எப்ப க்கத்திலுந் தன்னைச்சூழ்ந்திருக்கும் பல த்தஞானச்சத்துருக்களோ மடந்நேரமு

ம் போராடவு மெப்பொழுது மெச்சரிக்கையாயிருக்கவும் வேண்டும். அர்ச். இராயப்பரொழுகினபடியே கர்ச்சிக்கிற சிங்கத்தைப்போலே மனுக்குலத்துக்கு எதிராளியாகிய பசாசானது எவனையாவது விழுங்கத்தேடிச் சுற்றிக்கொண்டுவருகின்றது. இத்தனையாபத்திலே யகப்பட்ட மனிதன் தன்னைக் காத்திரட்சிக்கத் தன்சொந்தப்பலனை நம்பக்கூடுமோ? கூடாதென்பது நிச்சயம். பாவத்தாலவனுடைய சுபாவங்கெட்டநாள்முதற்கொண்டு நன்மைக்கு மிகவுந் துர்ப்பலனாயிருக்கிறான். ஓர்நல்லநினைவாவது தானாய் நினைக்கமாட்டான். இதை அர்ச். சின்னப்பர்தாமே நிச்சயித்து எதையாவது நினைப்பதற்கு நாங்களெங்களால் திராணியுள்ளவர்களல்ல, எங்கள் திராணி சர்வேசுரனாலுண்டாகின்றதென்றார். இத்தனை பலவீனமுள்ள மனிதனைச்சர்வகேட்டிலும் விழத்தள்ளுகிறதுக்கு ஒருவார்த்தையாவது கண்ணோக்கமாவது பெருமூச்சாவது போதும். எத்தனையோவிசை ஓரற்பசோதனையானது சுகிர்தநெறியில் ஸ்திரமான உத்தம புண்ணிய

வான்களாக வெண்ணப்பட்டவர்களைமுத லாய்ப் பாவச்சேற்றிலே விழத்தள்ளிற்று. அர்ச்சியசிஷ்டரைப்போலேவிளங்கினவர் களும் ஒருநிமிஷத்திற்கெட்டுப்பாதாளத் தில்விழுந்தார்கள். ஆதலால்தானுறுதியா ய் நிற்கிறதாக வெண்ணுகிறவன்விழாதப டிக்குப்பார்க்கக்கடவானென்று அர்ச்.-சி ன்னப்பரெழுதினர். இதை நன்றாய்நினை.

உ. புறத்திலேமனிதனுக்குஎத்தனைபல த்தசத்திமானச் சத்துருக் களிருந்தாலும் அவனைதனக்கு அதிகவஞ்சனையுள்ள சத் துருவென்னத்தகும். அதெப்படியெனி ல் பாவத்தாற்கெட்டுப்போன மனுஷசு பாவமெல்லாத்தின்மையிலுஞ் சாய்ந்திரு க்கின்றது. பித்தத்தால் சுவை கெட்ட பிணியாளி யினிமையானபதார்த்தங்கள் க சந்ததென்று வெறுத்துவிரோதமான ப ண்டங்களைப் பிரியமாய்த்தின்னுவதுபோ லே துர்ச்சனனை மனிதனுக்கு நன்மை கைத்துத் தின்மையெல்லாந் தித்திக்கும். ஆதலால் தின்மையை வலியவிரும்பிநாடி மோசம்போகிறான். மீளவும் புறத்துச்ச

த்துருக்களோடேசினேகமானவுட்குடிக
ளின்வஞ்சனையால் மிகவுமுயரமும்பலமு
மான கோட்டைகள்முதலாய்ச் சத்துருக்க
கள்கையிலகப்பட்டுப்பாழாயிற்றல்லோ?
அப்படியே எத்தனையோவிசைமனிதனு
டைய மனமான்து புறத்துச்சத்துருக்க
களோடே சதிமார்க்கமாய்ச்சேர்ந்து அவ
னாத்துமமென்கிற கோட்டையின் வாச
லாகிய கண் செவி மூக்குவாய்மெய்யெ
ன்னும் ஐம்பொறிகளால்வர்களுக்கு உட்
பிரவேசங்கொடுத்து அவனைமோசம்போ
க்கின்றது? நம்முடைய ஆசாபாசங்கள்
தானே நம்மை நம்முடைய சத்துருக்க
ளின் அடிமைத்தனத்தில் நிறுத்தும் வில
ங்குகளாமே. இப்படி நீயேயுனக்குவஞ்ச
னையுள்ள சத்துருவாயிருக்க உன்னையெப்
படி நம்புவாய்? சிலர் நெடுநாள்பசாசுக்
ளையும்வேதத்தைப்பற்றி நிஷ்டூரதிர்ப்பந்
தப்படுத்திவாதித்த இராசாக்களையுஞ்செயி
த்து வேதசாட்சிகளாக நிலைகொண்டபி
ன்புதங்களிற்கிளைத்த பாவச்சோதனையாற்
சேதமானார்கள். தபோதனர்களிலு மநே

கர்வனுந்தரத்தில் தங்கள் சுயதுர்ப்பலத்தி னாலும்ஆசாபாசங்களினாலுநிர்ப்பாககியக் கேட்டுகருள்ளானார்கள். இப்படியநேகம் விசை மனிதன்புறச்சோதனையில்லாமல் த ன்சுயதுர்க்குணங்களுககுத்தோர்வையாகி ச் சிதைந்துபோகிறான்.

௩. பாவத்தால்மனிதனுடையமனமய ங்கின துமல்லாமல் புத்தியென்கிற கண் தெளிவுங்கெட்டுப்போயிற்று. பூமியினின் று எழும்புகிற விருண்ட மந்தாரங்களுங் கார்மேகங்களும் நமதுபார்வைகருச் சூ ரியவொளியைக குறைத்து மறைககிறது போலே ஆத்துமத்திற்கிளம்பும் பாவம யககததால்ஞானஅந்தகாரமுண்டாகிப்பு த்தித்தெளிவையிருட்டுகின்றது. மேலுஞ் சூரியன்முதலிய சுடரிலங்காதபோது ம னிதன் அந்தகாரததில்மிழ்ந்தி யொன்று ங் கண்டுதெளியாததுபோலே இஸ்பிரீத துசாந்துவின் திவ்வியபிரகாசமிழந்த ஆ ததுமம் ஞான அந்தகாரததிலும் காரிரு ளிலும்மிழ்ந்திக குருட்டா -டமாயிருககது ம். அதினால்அநேகம்விசை மனிதன்பாவத

தின்தோஷத்தையுங் கனத்தையுங்கண்டு
பிடியாம விருளில் நடக்கிறவனைப்போ
விடறிச் சகல அக்கிரமமென்கிறபள்ளத்தி
லேவிழுவான். அநேகமுறை பாவமயக்க
மென்கிற அந்தகாரத்தினால் நன்மைதி
ன்மையாகவுந் தின்மை நன்மையாகவும்
பாவிகளுக்குத்தோன்றும். மீளவும் மே
ன்மேலுந்திகெடுவதாலநேகர் பாவத்தா
ல் தங்களுக்குவருகிற வடகீர்த்தி ஆத்தும
க்கேடு மோக்ஷவிழப்பு நித்திய நரக ஆக்
கினைக்குமுதலாயஞ்சாமல் திரிவார்கள். ஏ
னெனிற் பாவமென்கிறதிரை புத்தியென்
கிற. அவர்கள் கண்ணைமூடினபின்பு தங்க
ளைக்கிட்டி நேரிடுகிறபொல்லாப்புக்களை
யுங் காணுதிருக்கிறார்கள இப்படிப்பட்ட
மயக்கத்தினாலுங்குருட்டாட்டத்தினாலும
ல்லோ திரளானசனங்களுண்மையையு ம்
பத்தத்தையந் தெளியாமையாற் சிலர்ஞ்
ஞானிகளாய்ப்பொய்த்தேவர்களையாராதி
த்துஞ் சிலர்பதிதராய்ச்சத்தியவேதநெறி
யைவிட்டு மனிதராலுண்டான பற்பலவி
பரீத அர்மதங்களிற்சிதறியு நித்தியசேத

த்துகளுளளாகிறார்கள். ஞானச்சுடராகவி
ளங்கின தேர்த்துல்லியன் முதலியசாஸ்தி
ரிகளமுதலாயாங்கார தநினாலு மற்றதுர்
கருணங்களினாலுங்கெட்டு அபததநிறைந்
த துர்மதங்களில் வழுவிப்போனார்கள. அ
ப்படியிருககததன்சொந்தப்புததி ஞான
ததையும் ஸ்திரததையும் யார் நம்பக்கூ
டும் !

பழுதில்லா நற்சுபாவத்தோ டுண்டாக்கப்பட்ட
ஆதாமென்கிற ஆதிமனிதன் பெண்சாதியின்போதனை
யால்மயங்கித் தேவகட்டளையைமீறி மனுக்குலத்தை
ச் சர்வகேட்டுக்குள்ளாக்கினான். தேவபயபத்திநிறைந்
ததாவீதென்கிறவிராசா ஒருஸ்திரீயைநோக்கின பார்
வையால்வழுவிக் கனமானதுரோகபாவத்திலே விழு
ந்தார். சகலமனிதர்களிலும் மேலான ஞானத்தைப்
பெற்றுச் சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமாயிருந்த ச
லோமோனென்கிறவன் நெறிகெட்டு நெடுநாள்வெட்
கத்துக்குரிய துர்மார்க்கங்களி லுழன்றதேயல்லாமல்
மனந்திரும்பிக் கரையேறினானோ வில்லையோவென்றி
ன்னமு மிக்கசந்தேகமுண்டே. அப்போஸ்தலரில் த
லைவராகிய அர்ச்.-இராயப்பர்தாமும் ஆண்டவருடை
யசீஷனென்று ஒருழியக்காரிசொன்னதால் தத்தளித்
து ஒரேயிராத்திரியில் மும்முறையந் தத்திவ்வியகர்த்த
ரைமறுதலித்தார். இப்படிப்பலத்தமரங்களாகநின்ற
வர்கள் தாமே அற்பசோதனையென்கிறகாற்றினால் தள்
ளுண்டு விழுந்திருக்கமெலிந்தபுல்லாகிய நீ யுன்சொந்த
ப்பலத்தைநமபுவதெப்படி ? ஆனாற் பலத்தசத்துருக்க
ள்திரளாயெதிர்த்துவந்தால் அவர்களைவெல்லத் திரா

ணியில்லாதவன் றன்னையாதரிக்கத்தக்கவர்களைச் சீ
க்கிரமன்றாடி யுதவிக்கழைப்பானல்லோ. நீ செய்ய
வேண்டியத்துதான். உன்பலவீனத்தைக் கண்டுபிடி
த் துன்னைச்சுற்றப்பக்கத்திலுஞ்சூழ்ந்திருக்கிறஞானச்ச
த்துருக்களையு முனக்கேகெபிரதான சத்துராதியாகியவு
ன்னையு முன்றுசாபாசங்களையும்வெல்ல வுன்பிராணி
போதாததினுற் சர்வேசுரன்றமதளவற்ற தயவினாலு
ஞ் சர்வவல்லபத்தினாலு முனக்குதவிசெய் துன்னைக்
காப்பாற்றியிரட்சிக்கவேணுமென்றுந் தேவமாதா சு
ம்மனசுகள் அர்ச்சியசிஷ்டர்களு முன்னையாதரிக்க
வேணுமென்றும் அடிக்கடிமன்றாடுவாயாக. தப்பாம
ற்பத்திநிலைமையோடேமன்றாடுகிறவர்களுக் கெல்லாச்
சோதனையிலுஞ் செயமுண்டாகும். சத்துருக்களால்
பின்தொடரப்பட்ட இஸ்றயெலித்தார் அபயமிட்டல
றிச் சர்வேசுரனைமன்றாடினார்கள். உடனே பரமகர்த்
தர் செங்கடலைத்திறந்து அவர்களுக்கதின்நடுவுக்கு
ள்வழியுண்டாக்கியிரட்சித்தார். தங்கள்பலத்தைநம்பி
யவர்களைத்துரத்தின சத்துருக்களோவென்றலந்த அ
லைகளில்நாசமானார்கள். அப்படித் தங்கள்சொந்தப்ப
லத்தைநம்புகிறவர்களுக்குக்கேடாகும். ஆனால்சர்வே
சுரனைமன்றாடுவதும்போதாதே. அவர்விலகக்கட்டளை
யிட்ட சகலபாவச்சமயங்களையுந் தப்பாமல்விலகவும்
வேண்டும். பாவத்துக்குச்சம்மதியேனென் றெத்தனை
பிரதிக்கினைசெய்தாலும வேதவாக்கியம் நிச்சயிக்கிற
துபோலே மோசமுள்ள சமயத்தைவிரும்பித் திரிகி
றவனதிலேசேதமாவான். அப்படிப்பட்டவனைச் சர்
வேசுரன்கைவிடுகிறார். இஸறயெலித்தார் சத்துருக்க
ளைவிலகி வனாந்தரத்தில்நிற்கக் கர்த்தர்கட்டளையிட்டி
ருக்கையில் தங்கள்பலத்தையும் வீரத்தையும்நம்பிய
வர்களை யெதிர்த்தமையால் தோர்வையானார்கள். அ
ப்படியே நீ விலகவேண்டிய பாவச்சமயங்களில் வில

காமல் திரிந்தால்மோசம்போவாய். ஆகையாலுன்னை யு முன்பிரதிக்கினை பலம ஞானத்தையுநம்பாம லெந் தப்பாவதந்திரத்திலு மகப்படாதபடிக் கெப்பொழு து மெச்சரிக்கையாயிருக்கக்கடவாய். யாதொரு தந்தி ரம்வந்தால் உடனேசர்வேசுரனைநோக்கி யவருடைய யநுக்கிரகத்தையுந் தேவமாதா சம்மனசுகள்அர்ச் சியசிஷ்டர்களுடைய மன்றுட்டினுதவியையுங் கேட் டுப் பரமதேவ அநுக்கிரக வுதவியைக்கொண்டு தைரி யத்தோடே போராடுவாயாக. அப்படியே உலகம்ப சாசுசரீரமென்கிற மூனறுசத்துருக்களையும் வென்ற வர்களுக்குப் பரலோகத்தில்நியமித்திருக்கிற பேரின் பமகிமைக்கிரீடத்துக்குப் பாத்திரவானுகக்கடவாய்.

---

## ௰௮ம்.- நாள்.

---

### தேவநம்பிக்கையினு றுதி.

க. மோக்ஷப்பேரின்பத்தை யடைவதற்குவேண்டிய பேறுள்ள புண்ணியத்தைச் செய்யவுஞானச் சத்துருக்களைச்செயித் துச்சகலபாவத்துர்க்குணங்களையடகித்தின்மையெல்லாம் விலகவுநம்முடையசொந்தப்பலம்போதாமையால்நாமேநம்மைநம்பககூடாதாயினுஞ் சுகிர்த நெறியில் தைரியமுந் திடமுமற்றுப் பின்வாங்கிப்

போகிறதற்குநியாயமில்லை.ஏனெனில்தே
வகிருபையில்நமக்குச் சகலவுதவியுமாதர
வும் பலமுமுண்டு. அர்ச்.-சின்னப்பர்திரு
வுளம்பற்றினபடியே என்னைப் பலப்படு
த்துகிறவரைக்கொண்டு சகலமுமென்னு
லாகக்கூடுமென்று அவன்வனுறுதியான
நம்பிக்கையோடே சொல்லத்தகும். அ
தேனெனிற் சர்வத்துக்கும் வல்லவராகிய
கர்த்தருதவியைக்கொண்டு நம்மாற் கூ
டாத புண்ணியமுமில்லை, செயிக்கப்படா
த சத்துருவுமில்லை. மேலுங் குன்றாதபிர
மாணிக்கமுள்ளவராகிய சர்வேசுரன்தம்
மைநம்பிக்கேட்கிறவர்களுக்கு வேண்டிய
அநுக்கிரக வுதவி சகாயமெல்லாஞ்செய்
பவார்த்தைப்பாடுதந்தருளினூர். ஆகையா
லவரிடத்தில்மட்டற்ற நம்பிக்கையை வை
த்து நன்மையி னுறுதியாகக்கடவோம்.
ஏனெனில் அவர் தம்மை நம்புகிறவர்களை
யொருகாலுங் கைவிடப் போகிறதில்லை
யென்று தேவவாக்கியங்களில்நேகாநே
கம்விசை நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.
பரலோகமும் பூலோகமுஞ் சிதைந்து

போனாலு மவருடையவார்த்தைதப்பாதெ
ருகாலுந்தப்பாது. அவர்தம்மைநம்பின
வர்களை விசேஷகிருபையோ டெந்நேர
மும் அரவணைட்பதுமன்றி அவர்களைககா
ப்பாற்றியிரட்சிகக அநேகம்விசை அதி
சயமான அர்புதங்களையுஞ் செய்தருளி
னர். அப்படியே யநேக ஆயத்துக்களி
கப்பட்ட தாவீதென்கிற இராசா ஒருகா
லுந் தேவநம்பிககையிற் றத்தளியாமல்நி
லைகொண்டு சர்வேசுரனு லெல்லாத்துன்ப
துரிதத்தின்மைகளினின் றதிசயமாய்மீட்
கவும் நன்மைகளாற் பூரிககவும்பட்டார்.
ஆதலாற் கர்த்தர்பேரிலுள்ள நம்பிககையி
னுறுதியைப்பாராட்டி அவரிலூன்றினவ
ர்களுககு ஒருகாலு மோசம்வந்ததுமில்
லை இனியொருபோதும் வரப்போகிற
துமில்லையென்கிறதாய் இனியதேவ சங்கீ
தங்களிலேபாடினர்.

௨. பாலகர் தங்கள் தாய்மார்கள்னை
நம்பி ஒருவிசாரமும்படாமல் அவர்கள்ம
டியிலே அமரிக்கையோடும் பக்ஷத்தோ
டுஞ் சாய்ந்துகொள்வார்கள்ல்லவோ? இ

தைவிடச் சர்வேசுரனுடையபிள்ளைகளாகிய நாம்வரிடத்திற் பக்ஷமுள்ளநம்பிக்கையோடே சார்ந்திருக்கிறதேநியாயம். ஏனெனில்பத்தியுள்ளவர்களுக்குச்சர்வேசுரன்புள்ளபிதாவுமிரக்கப் பக்ஷநிறைந்தமாதாவுமாயிருக்கிறார். தாயானவள் தான்பெற்றகுழந்தையின்மே லெவ்வளவன்புகூர்ந்திருந்தாலுஞ் சர்வேசுரன் நமதுபேரில்வைக்கிறபக்ஷம் அதைப்பார்க்கிலுமதிகமாமே. இதைப்பற்றிக்கர்த்தர்திருவுளம்பற்றினதாவது: ஸ்திரீயானவள் தன்னுதரத்தின் கனியாகிய பிள்ளைக்கிரங்காமல் மறக்கக்கூடுமோ? ஆனால்வள்மறந்தாலுமுங்களை நாம் மறக்கமாட்டோமென்று தமதுபிரியசனத்துக்குத் திருவுளம்பற்றினார். தாயானவள் தன்பிள்ளைக்குப் பாலூட்டுவதல்லாமல் தன்னிரத்தமூட்டுகிறதும் தற்காகத் தன்பிராணனைக் கொடுக்கிறதுமுண்டோ? கர்த்தரோவென்றால் நீகரில்லாப்பக்ஷத்தாலொருதரம் நமக்காகத்தமதுபிராணனைத்தந்ததுமன்றிய நுதினமு நமக்காகத்தம்மைப் பலியாகச்செலுத்தித்த

ம்முடையதிருச்சரீரத்தையு மிரத்தத்தை
யுநமக்குத்திவ்வியபோசனமாகக் கொடு
த்துத் தம்மைமுழுதும் நமக்குத்தந்தரு
ளுகிறார். பின்னுந் தன்பிள்ளைக்குத்தக்க ந
ன்மையா யிருப்பதெல்லாந்தாய்க்குத்தெ
ரியவுமில்லை, தெரிந்தாலு மநேகமுறை
தரக்கூடவுமில்லை. சர்வேசுரனோவென்று
ல்நமக்குவேண்டிய நன்மைகளையெல்லா
ந்தமதுஅட்டில்லாத ஞானத்திலறிந்து
அதுகளை நமக்குத் தந்தருளச்சர்வவல்லப
மு மளவற்றபக்ஷமுமுள்ளவரா யிருக்கிறு
ர். ஆதலால் நாமவர்மே லெவ்வளவோந
ம்பிக்கையாயிருக்கக்கடவோம்.

௩. வியாதிஸ்தன் வைத்தியனைநம்பித்
தன்சீவனை யவனிடத்தொப்பிக்கிறான். வ
ழிப்போக்கன் வழிகாட்டியைநம்பிப் பி
ன்செல்லுகிறான். கடல்யாத்திரைசெய்கி
றவன் மாலுமியையும் கப்பலையும்நம்பிச்
சமுத்திரங்களைக்கடக்கிறான். நீயே மனு
ஷர்களைநம்பியெத்தனையோவியாபாரங்க
ளை நடத்துகிறாய்! சர்வநம்பிக்கைக்குரிய
பரமகடவுளைமாத்திரம் நம்பாமற்போ

வதென்ன? அவர் எறும்பு பூச்சிமுதலிய அற்பசீவசெந்துக்களையும் அநந்ததயை சவரட்சணையோடு பராமரித்துக்காப்பாற்றி நடத்துகிறூர். தமதுசாயலாகத் தம்மால்நேசித்துப்படைக்கவுந் தம்முடைய திருக்குமார னிரத்தத்தா லிரட்சிக்கவும்பட்ட ஆத்துமாக்களை யவர் விசாரிக்காமல் கைவிடக்கூடுமோ? தம்மையறியாத அக்கியாணிகளுக்குந் தம்மைத்தூஷணித்து நிந்திக்கிறபாவிகளுக்கும் அநேகநன்மையுபகாரங்களைச்செய்துவருகிறூர். அப்படியிருக்கத் தம்மைச்சிநேகித்து வணங்கிச் சேவிக்கிறவர்களை அதைவிட அதிக மேலானதயவோடு நடத்தாதிருப்பாரென்றெண்ணக்கூடுமோ? இவர்களைத் தம்முடைய கண்மணியைப்போலே விசாரிக்கிறூரென்று வேதத்தி லெழுதப்பட்டதாமே. ஆகையால் மட்டற்றநம்பிக்கையோடுன்னையு முனனைச்சேர்ந்ததெல்லாத்தையுஞ் சர்வேசுரனுக் கொப்புக்கொடுப்பாயாக. உன்னைவிட அவருனக்குவேண்டிய நன்மையெல்லாந்திட்டமாயறிந் துநடத்

**தத்தக்கவரல்லோ?மேலுமவனவனுடைய நம்பிக்கைக்குத்தக்கது அவனவனுக்கு நன்மைசெய்வது தேவகிருபையின்முறை.**

ஆனுற் சர்வேசுரன் பாவிகளுக்கு அஞ்ஞியானிகளுக்கும் செய்யுஞ் சிலநன்மையை யுனக்குஞ்செய்யாததினுல் தேவநம்பிக்கையில் தத்தளிக்கவேண்டாம். ஓரெசமான் தான்வளர்க்கிற மிருகங்களுக்குக்குறையற்றதீனிபோடுவான். தன்கூலியாட்களுக் கநுதினங் கூலிகொடுப்பான். தன்மகனுக்கோவென்றுற் கூலிகொடாமலவன் துரிச்சைகளையடக்கித்தப்புக்களுக்காகத்தண்டிப்பானல்லவோ? அதினுல் தன்தகப்பன் தன்னைவிட அந்தமிருகங்களையுங் கூலியாட்களையுந் தயவாய்நடப்பிக்கிறுனென்று மகன்முறையிடுகிறதற்குந் தகப்பனுடைய வன்பைநம்பாமற் போகிறதற்கு நியாயமுண்டோ? அதில்லையே. மகன்றுனே தகப்பனுடைய வாஸ்தியெல்லாத்துக்கும் சுதந்தரக்காரனுகையா லவனுக்கநுதினங் கூலிகொடாமற் புத்திகற்பிக்கத்தண்டிக்கிறது நியாயமுந்தயவுமாமொழியமற்றப்படியல்லவென்றெல்லோருமொத்துச்சொல்வார்கள். அப்படியே சிலவிசை சர்வேசுரன்மிருகங்களைப்போலே நடக்கிறபாவிகளுக்குந் தம்மைவணங்காதவஞ்ஞியானிகளுக்கும் இலெளகீகசுகத்தைக்கொடுத்துத்தம்முடையபிள்ளையாகியவுனக்குத் துன்பவாக்கினையைக்கட்டளையிட்டாலும் நீயவர்மேல்முறையிடவு நம்பிக்கையில் தத்தளிக்கவு நியாயமில்லை. ஏனெனிலுன்னைத்தம்முடைய பேரின்பவிராச்சியத்தின் சுதந்தரத்துக்குப் பாத்திரவானுக்கவப்படியுன்னை நடப்பிக்கிறுரொழிய மற்றப்படியல்ல. பாவிகளு மஞ்ஞியானிகளுமோவென்றுல் தங்களக்கிரம நடக்கையைப்பற்றியு மவிசுவாசத்தைப்பற்றியு நித்திய நரகத்துக்கு நியமிக்கப்பட்டிருக்கிறபடியினுலே சிலவிசை அவர்க

ள்செய்தவற்பபுண்ணியங்களுக் காண்டவ ரிப்போது தானே கூலிதீர்த்துக்கொடுக்கிறார், இதுவே தேவநீதி யினுத்தம்முறை. மேலுஞ் சிலவிசையவருன்னுசைக்க ளவாகவுனக்குநன்மைசெய்யாவிட்டால் அவர்மேலுள் ளவுன் நம்பிக்கையின்குறைவுமற்றப்பாவங்களுமதற்கு த்தடையென்னத்தகும். ஆகையால் அப்படிப்பட்டசம யங்களிலுள் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு அது களுக்குப்பரிகாரஞ்செய்யவேண்டுமொழியச் சர்வேசு ரன்மேலே முறையிடநியாயமேயில்லை. அவர் தமக்கு ப் பிரியமாகநடந்து ஆபத்தில்நம்பிக்கையோடே த ம்மைவேண்டிக்கொள்ளுகிறவர்களை யெத்தனையோத யவோடே காப்பாற்றுகிறாரென்றுபார். அர்ச். கிளா ரம்மாள் மற்ற அநேக கன்னியாஸதிரீகளோடேகூ டே அருந்தவஞ்செய்துகொண்டிருக்கையி ல்வர்களிரு ந்தமடத்தைக் கொடிய அஞ்ஞானச்சோனகச்சேனை கள்ஒருநாள்சூழ்ந்து அதைச்சங்கரிக்கப்பிரயத்தனம் பண்ணினார்கள். அவர்கள்சுற்றுமதில்கள்மே லேறுகிற தருணத்தில்வியாதியாயிருந்த அந்தப்பரிசுத்தகன்னி தன்னைமடத்தின்வாசலிலே சத்துருக்களுக்கெதிராக வேதூக்கிக்கொண்டுபோகவும் அவ்விடத்தேதேவநற் கருணை ஸதாபிக்கவுஞ்சொல்லி அதின்முன்பாகச்சாஷ் டாங்கமாகவிழுந்து என்தேவனே தேவரீருமது திரு ச்சினேகத்திலே சேர்த்துவளர்த்த விந்தவும்முடைய அடியார்களை யிந்த அக்கியானச்சோனகருக்குச்சிறை யாகவிடுவீரோ? ஆ! சுவாமீ யும்மைநம்பின ஆத்துமா க்களைத் துஷ்டமிருகங்கள்கையிலொப்பியாதேயுமென் றுவேண்டினாள். இதற்குப் பிரத்தியுத்தரமாக வுங்க ளை யெப்போது மாதரிப்பேனென்கிறதா யினியதோ ர்சத்தங்கேட்கப்பட்டது. உடனே சத்துருக்களெ ல்லாருந் திகிலடைந்து கலங்கிமயங்கி மதில்களினின் று கீழேவிழுந்துமிகுர்த துரிதத்தோடுஞ் சேதத்தோ

டு மோடிப்போனார்கள். எத்தனையோவிசை கர்த்தப ப்படியே தம்மைநம்பினவர்களை யற்புதமாய்க்காப் பாற்றி யிரட்சித்தார்! அர்ச்.- அகுஸதீன்வசனித்தப டியே சர்வேசுரனுடையமடியிற் குதித் துன்னையொ ப்பிப்பாயாக, நீ விழும்படி யவர்தம்முடைய கரங்க ளைநெகழவிடமாட்டார். எந்தெந்தக்காரியத்திலுமெ ந்தெந்தச் சமயத்திலுந் தேவகிருபையி ல்மரிக்கை யோடேன்றுவாயாக. அப்படியே தேவகிருபையையும் சேசுநாதருடைய புண்ணியபலன்களையுந் தக்கதிட னுடன் நமபுகிறுயோவில்லையோவென்றறியவுன்னிருத் யத்தைச்சோதித்தாராய்ந்துகொள். யோபென்கிறம காத்துமாவானவர் தன்னுஸ்தி மக்களாரோக்கியமுத வியசகலத்தையுமிழத்து துன்பச்சாகரத்தி ல்மிழ்ந் தினபோதிலுந் தத்தளியாமற் கர்த்தரொன்னைக்கொ ன்றுலு மவரையேநம்புவேனென்பார். அப்படிப்பட் டவுறுதியான நம்பிக்கையாலும் பொறுமையாலுந்தே வகிருபைக்குப்பாத்திரவானுகி மறுபடிசகலநன்மை களையுமபெற்றுக்கொண்டார். அவருடையசுகிர்தமாதி ரிகையைக்கண்டுபாவித்தால் நீயுந் தேவகிருபை பெ றுவாயென்கிறதற்குச்சந்தேகமில்லை.

---

## ௰அம். நாள்.

### தேவ அநுக்கிரகத்துக்குப் பிரமாணிக்கமாயிருக்கவேண்டிய அவசரம்.

க. தேவகிருபையால் மனிதர்புத்தியிற் பிறக்கிற சுகிர்தநினைவு மனதிலுண்டாகிற

நல்லாசை யிவைமுதலிய வீடேற்றத்துக்குரிய வுதவிசகாயங்கள் தேவ அநுக்கிரகமென்றுந் தேவவரப்பிரசாதமென்றுஞ் சொல்லப்படும். மண்ணுலகிலுண்டாகிய நவமணியிரத்தினமுதலிய சகலதிரவியங்களையும் விலைமதித்தாலுந் தேவவரப்பிரசாதம் விலைமதியாத்தாமே. ஏனெனில் தேவஅநுக்கிரகங்களில்ஒன்றாகிலும்நமது சொந்தப் புண்ணியபேறுகளினாலுண்டாகமாட்டாமற் சகலமுஞ்சேசுநாதசுவாமியுடைய விலைமதியாத திருவிரத்தத்தின்பலனாலாமே அந்தத்திவ்விய இரட்சகர் அநுகளை நமக்காகப் பெற்றுக்கொள்ளும்பொருட்டுக் கிரயமாகத் தமது திருவிரத்தத்தைச்சிந்திச் சிலுவைமரத்தி லுயிர்விடுகிற சமயத்திலே பெருமூச்செறிந்து அநுகளைத்தம்முடையதேவபிதாவிடத்தில் கேட்டுக்கொண்டார் ஆதலால்தேவகிருபைதந்தருளுகிற நல்ல நினைவாசை சுகிர்த எவுதல்முதலிய தேவ அநுக்கிரகத்தை அசட்டைபண்ணித் தவிர்ப்பது சேசுநாதசுவாமியுடைய திருவிரத்தத்தைக் காலாலேமி

தித்து அவருடைய திருமரணத்தின் பல
னைத் தனக்குவியர்த்தமாக்குவதுபோலா
குமே. இது திவ்விய இரட்சகருக் கெவ்வ
ளவோபொருந்தாத துரோகமாயிருக்கு
ம். மீளவுந் தேவவரப்பிரசாதம் மோக்ஷ
த்தைப்பெறுதற்கேற்ற வுதவியாயிருக்கி
றதினாலு மிகவும் விலையேறப்பெற்றதா
மே. அதைப்போக்கடிப்பது மட்டில்லா
த நஷ்டமு மதிகேடுமாமே. ஒரிராச்சிய
த்தையடையவு மகிமைக்கிரீடஞ் செய்து
சோடிக்கவுந் தக்க விலையேறப்பெற்ற வி
ரத்தினமாணிக்கங்களை அசட்டைத்தனமா
யிச் சிதறவடிப்பவன் பைத்தியனென்று
நிந்திக்கப்படுவானல்லவோ? இதைவிடவா
சைக்குரியதாகிய பேரின்பமோக்ஷவிரா
ச்சியத்தையடையவும் நீ சூடவேண்டிய
அநந்தமகிமைபொருந்தினமுடியையல
ங்கரிக்கவுந் தக்கமாணிக்கங்களாகிய தேவ
வரப்பிரசாதங்களையு ம்துகளா லுண்டா
கும் புண்ணியபேறுகளையும் நீ சட்டை
பண்ணமல் போககடிககிறபோதே உன்
னையென்னென்று சொல்லவேண்டியிருக
கும். இதைநன்றாய்நினை.

உ. தேவவரப்பிரசாதத்தாற் பலிக்கத் தகும்புண்ணியசம்பாவனையு நீ பெற்றுக் கொண்ட வரப்பிரசாதங்களு மெத்தனை யென்றுபார். பிரமாணிக்கத்துட ன்றநுசரிக்கப்படு மொருவரப்பிரசாதமானது நம்மையர்ச்சித்து மற்றநேகவரப்பிரசாதங்களுஞ்சகல்நன்மைகளும்வருவதற்கு வழிப்பாடாகும். அதைப் போக்கடித்தாலோ வெனில் மற்றதெல்லாமுஞ் சேதமாவதற்குக்காரணமாகலாமே. அநேகர் ஒருசுகிர்தசிந்தனை ஒருதேவ ஏவுதல்முதலிய தேவ அநுக்கிரகத்தைமுழுப்பிரமாணிக்கமாய் நுசரித்ததினாலே அர்ச்சியசிஷ்டர்களானார்கள். ஒருவரப்பிரசாதத்தா லிவர்களித்தனைபுண்ணியசம்பாவனை யடைந்தார்களே. நீயோவென்று லெண்ணிலடங்காதவரப்பிரசாதங்களைப்பெற்றிருந்தும் இன்னமுன்பாவங்களிலேகிடக்கிறதென்ன? எத்தனையோவிசை சர்வேசுர னுன்மனதில் நல்லசிந்தனைகளையுஞ் சுகிர்த ஆசைகளையும் பிறப்பித் துன்னைப்புண்ணிய வழிக்குத் தமதுசினேகத்துக்கு மழைத்தருளினார்! ஏ

த்தனையோவிசை யுன்பாவங்களின் துர்க்கந்த அவலட்சணத்தை யுனக்குக்காட்டி யதுகளா லுனக்குவருகிற நரகவேதனை முதலிய ஆக்கினையெல்லா முன்னுள்ளத்தில்வெளிப்படுத்தி யுனக்குப்பயமுறுத்தினார்! எத்தனையோவிசை யுன்னீச்சுகங்களில் துன்பச்சஞ்சலமென்கிற கசப்பைக்கலந்து பிரபஞ்சசுகமெல்லா மழிவென்றும் பேரின்பபாக்கியமே நீதேடவேண்டியகதியென்று முனக்குத்தெளிவித்தார்! நீ கேட்டவேதப்பிரசங்கங்களு முணர்ந்தநல்ல புத்திமதிகளும் வாசித்த நல்லபுஸ்தகங்களுங் கண்ட நல்ல மாதிரிகைகளும் பெற்றுக்கொண்ட தேவத்திரவிய அநுமானங்களும் அடைந்த மற்ற வரப்பிரசாதங்களெல்லாமு மித்தனையென்றுகணக்குண்டோ? இத்தனை நன்மைகளையெல்லாம்பெற்றநீ சர்வேசுரனுக்கென்னபிரதிபலனைத்தந்தாய்? இந்தவரப்பிரசாதங்கள் அநேகரை அர்ச்சித்து அர்ச்சியசிஷ்டர்களாகப்பண்ணலாமே. அதுகளைக்கொண்டு நீ யின்னஞ் சரியானகிறீஸ்துவனுயிராத்தென்ன?

௫. நீ பெற்றுக்கொண்டவரப்பிரசாதங்
களை யுனக்குத்தீர்வையிடுவதற்கு அஸ்தி
வாரமாகும். எவனுக்குமிகுதியாய்க் கொ
டுக்கப்பட்டதோ அவனிடத்தில் மிகுதியு
ங்கேட்கப்படுமென்பது வேதவாக்கியமா
மே. அப்படியிருக்க இத்தனைவரப்பிரசா
தங்களையெல்லாம்பெற்று ஒருபலனையுங்
கொடுக்காத நீ கர்த்தருக்கெப்படிகணக்கு
ச்சொல்லப்போகிறாய்? அடிக்கடிமழையி
ல் நனைந்திருந்தும் முட்செடிமுளைகிற
பூமி சாபத்துக்குந் தகனத்துக்குங் கிட்டி
னதென்று வேதத்திற்சொல்லியிருக்கத்தே
வ அருள்மழையாகிய வரப்பிரசாதங்கள
டிக்கடி யுன்மேல்பொழிந்திருந்தாலு மு
ட்செடிகளாகியபாவங்களை முளைப்பிக்கிற
நீ யெப்படிப்பட்ட ஆக்கினைக்கு ஆளா
ய்ப்போகிறாய்! மேலும் நீபெற்றுக்கொ
ண்ட வரப்பிரசாதங்களின்மேல்மாத்திர
மல்ல சர்வேசுரனுனக்குக்கொடுக்க விருக்
கையில் நீ யுன்குற்றத்தால் மறித்ததுகளி
ன்மேலுந் தீர்வையிடப்படுவாய். சூரியன்
பிரகாசிக்கவுங்கண்களை மூடித் தவறிப்ப

ள்ளத்தில்விழுந்தகுருட்டாட்டமும் பாய்கிறதண்ணீரைமறித்துக் காய்ச்சலாலுங்கழனியைப்பாழாக்கின சேதமுமுன்குற்றந்தானல்லோ? அப்படியேயுனக்கு நியமித்திருந்த வரப்பிரசாதங்களைத்தட்டி மறித்ததும் அதினாலுன்னாத்துமத்துக்கு மிகுந்தநஷ்டம்வருவித்ததும் உன்மேல்குற்றமாகவே கடினதீர்வைக்குள்ளாகத் திரிகிறாய்.

கரையேறுதற்குன் சொந்தப்பலம்போதாமையால் அதற்காகத் தேவ அநுக்கிரகமுனக்கு முழுதும்வசரமாயிருக்கின்றது. ஈடேற்றத்துக்கு அதுவேபிரதானமான வெத்தனமாயிருக்கையால் அதை நீ கைவிட்டர் வீடேற்றமுனக்குக் கூடாமையாகுமே.அப்படியிருக்கத் தேவவரப்பிரசாதத்தைத் தட்டிமறித்துப் போக்கடிக்கிறநஷ்டத்துக்கு நிகரானநஷ்டம் பூலோகத்திலில்லை. ஆதலால் இன்றுசர்வேசுரனுடைய சத்தத்தைக் கேட்பீர்களேயாகி லுங்களிருதயத்தைக்கடினப்படுத்தாதேயுங்களென்று வேதத்திலெழுதப்பட்டபடியே சர்வேசுர னுன்னிருதயத்தில் சுகிர்தவாசைமுதலிய ஏவுதலைத்தோற்றுவித்தால் கன்னெஞ்சாய்தைத்தள்ளாமல் சந்தோஷத்துடனே யேற்றுக்கொண்டநுசரிக்கவேண்டும். மீளவு முன்னீடேற்றத்துக்காகத் தேவவரப்பிரசாதமித்தனையவசரமாயிருக்கின்றமையா லடிக்கடிமிகுந்தபத்தியாவலுடன் சர்வேசுரனிடத்தி லதையிரந்து கேட்கக்கடவாய். ஆனல்-அர்ச்.-பெற்நர்தென்கிறவர் வசனித்தபடியேந

ன்றியறியாமைதேவவரப்பிரசாதமாகியதீர்ப்பாய்ச்சு
லைமதிக்குமென்கிறதினாலப்படிப்பட்டதுர்க்குணத்து
க் கிடங்கொடாமற் சர்வேசுரனுனக்குத் தந்தருளிவரு
கிற வரப்பிரசாதங்களைப்பற்றி யடிக்கடி யவருக்கு ந
ன்றியறிந்த தோத்திரங்களைச் செலுத்துவாயாக. அ
ன்றியும் அநேகமுறை அவருடைய வரப்பிரசாதத்தி
னேவுதலுக்கு நீ பிரமாணிக்கந்தப்பி மீறிநடந்ததற்
கு மனஸ்தாபத்தோடே பொறுத்தலைக் கேட்கக்கட
வாய். இனி யொருகாலு மவருடைய திரு ஏவுதல்க
ளையு மநுக்கிரகத்தையுந் தட்டிப்போடுகிறதில்லையெ
ன் றுறுதியானபிரதிக்கினைசெய்வாயாக. ஏனெனி லெ
நேகமுறை தேவவரப்பிரசாதத்தைத் தட்டிப்போ
டுகிறவர்களைச் சர்வேசுரன்கைவிடுகிறார் அவதரித்த
கர்த்த ரொருநாள் எருசலேமாநகருக் கெழுந்தருளி
வருகையி லதைக்கண்டழுதார். ஏனெனி லந்தப்பட்
டணத்தார் பூர்வத்திலுமந்நாளிலுந் தேவகிருபையா
ல் தங்கள்சனத்துக்குச்செய்யப்பட்ட வெண்ணில்லா
நன்மை யுபகாரவற்புதங்களையுமறந்து தாமவர்களை
யிரட்சிக்கவந்த தயவையும்பாராமல்தேவவரப்பிரசா
தங்களையுங்கைக்கொள்ளாமல் தமக்குந் தம்முடைய
தேவபிதாவுக்குஞ் சகலவித்துரோகமுஞ் செய்துகொ
ண்டிருக்கிறதைப்பற்றியவர்களுக்குவருந் துரிதவாக்கி
னையையறிந்து அதுகளைவிவரித்து அவ்வண்ணமேமன
மிரங்கினார். ஆனாலவர்கள் திரும்பாதபடியினாலே யவ
ரறிவித்தபடியே யவர்களுடையபட்டணமுஞ் சங்கார
மாகி யவர்களுஞ் சர்வேசுரனாற் கைவிடப்பட்டு இந்
நாள்வரைக்கு முலகத்தினெத்திசையிலுஞ் சிதறடிக்
கப்பட்டிருக்கிறதைக் கண்ணாற்கண்டறிகிறோம். இ
தினால் தேவவரப்பிரசாதங்களைத் தட்டிவிடுகிறவர்க
ளுக்கு வருகிற மிகுதியான கேட்டைத்திஷ்டாந்தமா
யுணரலாமே. பின்னுந் தேவவரப்பிரசாதத்தை எவ்

வளவுபிரமாணிக்கத்துடனே யநுசரிக்கவேண்டுமென்றும் அநுசரிக்கிறவர்களுக்கெத்தனை ஞானப்பிரயோசனங்கிடைக்கிறதென்றும் அர்ச். - சின்னப்பர்முதலிய அர்ச்சியசிஷ்டர்களின் மாதிரிகையிலறிந்துகொள். அவர் முன்பு யூதர்வேதத்தில் மூர்க்கராய்க் கிறீஸ்துவர்களை மிகவுமவிரோதித்துக் கலாபஞ்செய்து வாதைப்படுத்திக் கிறீஸ்துவேதத்தை நிர்மூலமாக்க வேற்பட்டிருந்தார். அப்படியேவிசுவாசிகளைப்பிடிப்பதற்கொருநாள்பிரயாணப்பட்டுப்போகையில்வழியிலே சேசுநாதசுவாமி மிகுந்தபிரகாசத்தால் தமதுபிரசந்நத்தைக்காட்டித் தமதுவல்லபத்திலவரைத் தரையில்விழத்தள்ளி நீ நம்மைவிரோதித்துக் கலாபஞ்செய்வானேனென்றார். உடனே யந்தக்காட்சியிலுமுள்ளத்தி லிறங்கின தேவ அநுக்கிரகத்திலும் அர்ச்-சின்னப்பர்மனந்திருமபித்தமமைத் தேவசித்தத்துக்குமுழுது மொப்புக்கொடுத்தார். பின்னுமெல்லாத்திலுந் தேவ ஏவுதலையநுசரித்துப் பெரிய அப்போஸ்தலரா யுலகமெங்குங் கிறீஸ்துவேதத்தைப் பிரசங்கித்துப் பரவச்செய்து அதற்கத்தாட்சியாகத் தமமுடைய பிராணனையுந் தந்தார். பிரதானசிரேஷ்ட முனிவரான அர்ச்.-அந்தோனியார் ஒருநாள் கோயிலிலுட்பிரவேசிக்கையில் நீ புண்ணியசாங்கோபாங்கத்தை யடையவேண்டுமாகி லுனக்குள்ளதெல்லாம் விற்றுத் தரித்திரர்களுக்குக் கொடுவென்கிற தேவவாக்கியத்தைக்கேட்டு இது தமக்கே சொல்லப்பட்டதென்று தமதுமனதிலுணர்த்திய தேவ ஏவுதலுக்கிணங்கிச் சகலமுந்துறந்து வனாந்தரத்தி லிருந்தவஞ்செய்யப்போய்ச் சகலமுனிவர் தபோதனர்களுக்கு மாதிரிகையானார். மிகவுங் கீர்த்திபெற்ற அர்ச்.-அகுஸ்தினென்கிறவ ரின்னம் ஞானஸ்நானமில்லாமல் அநேகபாவத்தந்திரங்களிலகப்பட்டிருக்கையிற்புண்ணியதே

திக்குத்தம்மையழைத்ததெய்வீகச்சத்தத்துக்குந்தேவ அநுக்கிரகத்துக்குங் குறையற்றமனத்துடனே கீழ்ப்படிந்ததினால் முழுதுந்திருமபிஞானதீட்சையையும் பின்னு மேற்றிராணிப்பட்டத்தையும்பெற்று வேதசாஸ்திரத்தாலும் பரிசுத்தத்தனத்தாலுந் திருச்சபையெங்கும் ஞானச்சுடராகவிளங்கிப் பெரிய அர்ச்சியசிஷ்டரானார். அந்த அர்ச்சியசிஷ்டர்களைப்போலே கர்த்தருக்குப்பிரியமாகி யிவ்வுலகத்தில் தேவகிருபையையு மோக்ஷத்தி லந்தப்பேரின்ப மகிமைப்பாக்கியத்தையும்பெறத்தக்கதாக அவர்களுடைய சுகிர்தமாகிரிகையின்படியே தேவ அநுக்கிரகத்தினேவுதலைப் பிரமாணிக்கமா யநுசரிப்பாயாக.

---

## ௰௯ம்.-நாள்.



### வீண்காலக்ஷேபத்திலுள்ள கேடு.

௧. காலமானது இவ்வுலகீகச்சகலபொருட்களிலும்விலையேறப்பெற்றதென்னத்தகும். அதெப்படியென்னிற் சர்வேசுரனாதிமனிதனுக்குத் தமது கட்டளையைக்கொடுத்தபோது நீயிதைமீறுநாளிற் சாகவேசாவாயென்று திருவுளம்பற்றினார். ஆகையால் மனுஷன்தேவகட்டளையைமீறின நாளிலேயே சாகப்பாத்திரவானானா

ன். திவ்விய இரட்சகர் மனுக்குலத்தின் பாவ
ங்களைப்போக்கத் தமதுபிராணனைத் தா
வேற்பட்டதைப்பற்றி மாத்திரந்தேவகிரு
பையால் மனிதருயிர்காப்பாற்றப்பட்டி
ருக்கிறதொழிய மற்றப்படியல்ல. ஆ!
பிரியமுள்ளவனே, நீ பிழைக்கிற வந்தந்த
நிமிஷத்தையுஞ் சேசுநாதர் தமது விலைம
தியாதவிரத்தத்தா லுனக்காகப்பெற்றுக்
கொண்டிருக்க வுன்சீவியகாலத்தில் ஒரு
க்ஷணமாவது பாவத்திலே செலவழிக்கலா
மோ! உன்னிரட்சகரன் பிறனுங்க்ஷணமர
ணத்திறனு முனக்குக்கிடைக்கிற நேரத்
தைக்கொண்டு அவருக்குத் துரோகஞ்செ
ய்வது நியாயமோ? அப்படிப்பட்ட நன்
றிகெட்டதனத்தா லந்தக்ஷணத்திலேதா
னே யுயிரிழக்கவுஞ் சகல ஆக்கினைக்குள்
ளாகவும் பாத்திரவானாகிறாயல்லோ! மீள
வும் பாவத்தால் நீ சாவுக்காளாயிருக்கையி
லுனக் கின்னஞ்சீவியகால மேதினிமித்த
ந்தந்தருளப்பட்டதெனில் உன்பாவங்க
ளுக்குப் பரிகாரம்பண்ணவுஞ் சர்வேசுர
னைச்சேவித்துக் கரையேறவுமொழிய வே

றல்ல. உனக்குமனதுண்டானால் அந்தந்த க்ஷணமே பரலோகவிராச்சியத்துக்குப் பாத்திரமாகி மேன்மேலும்நந்தமகிமைப் பேரின்பசம்பாவனையைப் பெறலாமே. எத்தனை நிமிஷங்களை வீணிலேபோக்கிறாயோ அத்தனை நித்திய பேரின்பசுக செல்வங்களையும்போக்கடிக்கிறாய். இதெல்லாமிப்படியிருக்கக் காலமானது எத்தனையோ விலையேறப்பெற்றது! அதைவீணிலேபோக்கிறது எவ்வளவோ நஷ்டமுங் கேடுமாயிருக்கும்.

௨. உன்வசமாகிறநேரம்எவ்வளவுகொஞ்சமென்றுபார். சமுத்திரத்துக்கு முன்பாக வொருநீர்த்துளி மெத்தவுங்கொஞ்சமாகத் தோன்றுமாப்போலே நித்தியத்துக்குமுன்பாகமனிதன்சீவியகாலமெல்லா மோரற்பநிமிஷமாகத் தோன்றும். நீசீவித்துக்கடந்த பத்திருபதுமுப்பதுவருஷகால மிப்போ துனக்கொரு க்ஷணமுங் கனவுமாகத் தோன்றுகிறதல்லோ? மேலும் முற்காலம் உன்வசத்தில்நிற்காமல் முழுதும்போச்சுது. வருங்காலம் இன்

னுமுன்வசத்திலில்லையே? சர்வேசுரனதை க்கொடுத்தாலுண்டு, கொடாவிட்டாலில் லை? அதிலேயொருக்ஷணமாவது னக்குத் தந்தருளப்படுமோ படாதோ வுனக்குப் பரிச்சேதந்தெரியாது அப்படியிருக்க வருங்காலத்தின்மே லென்னநம்பிக்கை வைக்கப்போகிறாய்? நாளைக்குவருகிறமா தம் வருகிறவருஷம் பாவத்தைவிட்டு நல் லவனாவேன், தர்மபுண்ணியஞ்செய்வேன், பாவசங்கீர்த்தனத்தாலாத்துமத்தைச் சுத் திகரித்துக் கரையேறும்வழியேநடப்பே னென்றெப்படித்திட்டமிட்டுச் சொல்வா யீ? அடுத்தநிமிஷம் பிழைப்பதேநிச்சய மில்லை. முற்காலத்துக்கும் பிற்காலத்துக் குநடுவாகிய விந்தநுட்பமான க்ஷணமா த்திரமே யுன்வசமல்லாதேவேறல்ல. அது வுமெத்தனையோ சீக்கிரங் கடந்துபோகி றது! பக்ஷியெத்தனைவேகமாய்ப்பறந்தா லு மின்னலெத்தனைவிரைவாய்த் தோன்றி யொழிந்தாலுங் காலமின்னமதிக சீக்கிர மாகக்கடந்துபோகின்றது, அதைநிலைநி றுத்த வெவராலுங்கூடாது. நித்தியநரக

க்துக்குத் தப்பித்துக்கொள்ளவுஞ் சுத்த
மானமோக்ஷத்தையடையவும் இத்தனைய
ற்பமாகிய இந்நேரமாத்திரமே யுன்வ
சமாயிருக்க இன்னமதை வீணிலேபோக்
கடிக்கலாமோ? இதைப்போக்கடித்தாலு
ன்னீடேற்றமெவ்வளவோ ஆபத்திலேயி
டக்கும். தரித்திர கஸ்தி துன்பத்தையொ
ழிக்கவுந் திரவியங்களைச் சம்பாதிக்கவுஞ்
சுகசெல்வபாக்கியத்தையடைந் தநுபவி
க்கவும் அற்பசமயமாவது கிடைக்கிற
போது அதையெத்தனையோ ஆசையோ
டே கைக்கொள்ளுகிறாய்? முடிவில்லாப்
பேரின்ப மோக்ஷவிராச்சியத்தை யடை
யத்தக்கநேரங் கொஞ்சமாத்திரமிருக்க
அதைச் சற்றாகிலு மதியாமற் போக்கடிக்
கிறதுமதியோநன்மையோவென்று நன்
றாய்நினை.

ரு. கடந்துபோனநேர மொருகாலு
ந்திரும்பாது. போக்கடிக்கிறநாளெல்லா
ம் நித்தியசேதமாமே. மரணவேளையிலு
லகமாய்கை தெளிந்து உன்சீவியகால
மொருகனாப்போலேகடந்துபோயிற்றெ

ன்றும் அதை வீணிலேபோக்கிறையெ
றும் பார்க்கும்போது உன்னுத்துமத்து
குவந்தசேதத்தின்மே லெவ்வளவோ வ
யாகுலப்படுவாய். உன்னிரட்சணியத்து
காக வொருமணிநேரமாவது கிடைக்
ம்படியபேட்சிப்பாய். ஆனால் அதுகிடை
க்கக்கூடுமோ! முன்பு நீ போக்கடித்தநா
ட்களி லொருக்ஷணமாவது திரும்பும்ப
டிக்கு லோகத்திலுள்ள திரவியங்களையெ
ல்லாந்தந்தாலுந்திரும்பிவராது. இப்போ
து நீவீணிலேபோக்கிறநேரம் நரகத்தி
லுள்ள யாதொருத்தனுக்குக் கிடைக்க
கூடுமாகில் எத்தனையோ ஆவலோடதை
கைக்கொள்ளுவான்! ஒருநிமிஷமாவது வ
ணிலேபோக்கடிப்பானோ? தன்பாவங்க
ளுக்காக வுத்தரித்துக் கரையேறும்படி
கெத்தனையோசுறுசுறுப்புடனே யதைத்
தவமுதலிய புண்ணியக்கிரியைகளிற்செ
வழிப்பான்! ஆனாற் றங்கள் சீவியகால
தை வீணிலேபோக்கினபடியால் நரகவா
சிகளுக் கினித்தவத்துக்கு நேரமகப்பட
து. நீயு முன்கையிலுள்ள கொஞ்சநேர

ைதப்போக்கடித்துப் பாவவழியிலேநட
ந்தா லிவர்களோடே நித்தியமாயொருபி
ரயோசனமுமின்றி யிந்தச் சேதத்தின்
மேலே மிகுதியானபிரலாபக் கஸ்தி அய
ரப்பட்டு என்றென்றைக்கும் சகலவேத
னையு மநுபவிப்பாய். அப்படியிருக்க வு
ன்சீவியகாலத்தி லொருநிமிஷமும் வீணு
ப்போக்காதபடிக் கெவ்வளவோ கவனி
க்கக்கடவாய்!

போக்கடித்தகாலம் பரிச்சேதந்திரும்பாதபடியா
ல் வேறேபிரகாரமா யதைக்கூடினமாத்திரம் பரிகா
ரஞ்செய்யவேண்டும். அதெப்படியெனி லுழவனொரு
பருவஷஞ் சோம்பலினாற் பயிரிடாதநஷ்டத்தை மறுவ
ருஷ மதிகபிரயாசப்பட்டு விளைவிப்பதினாற் பரிகாரஞ்
செய்யத்தேடுவான். பிரயாணஞ்செய்கிறவன் பகலில்
தூங்குகிறதிலும் விளையாடுகிறதிலும் வீண்வேடிக்கைபா
ர்க்கிறதிலும் நேரம்போக்கினதினு லிராக்காலத்துக்
குமுந்தி யூரிலேசேராம லிராவிலே தான் பயங்கரமு
ள்ளகாட்டி லகப்படுவதைக்கண்டாற் கிலேசமனஸ்
தாபப்படுவதுமன்றி அதிகதீவிரமாய் நடப்பதாற்
போக்கடித்தநேரத்தைப் பரிகரித்துச்சேரப்பிரயா
சமும் படுவானல்லவோ! அப்படியே நீயும்புண்ணியநெ
றியி லதிகபத்தி சுறுசுறுப்புடனே நடந்து முன்புபோ
க்கடித்த காலத்தைப்பரிகரித்துக் கரையேறக்கடவா
ய். அதிகதாமதஞ்செய்தால் நித்தியவிருளில் நிர்ப்பா
ந்தியனாயகப்பட்டுவருந்துவாயென்று நன்றாய்நினை. வீ
ண்காலக்ஷேபத்தினாலுலகத்தில்விளைகிறதகாப்பேச்சு

சண்டை பகை துர்நடத்தைமுதலிய வக்கிரமங்களு
க்குக்கணக்கில்லை. இதெல்லாங்கவனியாமல் நீயேயெத்
தனையோகாலம் வீணிலேசெலவழிக்கிறாய்? சீவியகால
மிகவும் விலையேறப்பெற்றதுமாய்ச் சுருக்கமுமாய்த்
திரும்பாததுமாயிருந்தாலு முன்னீடேற்றத்துக்கர்க
வநேகவவசரக்கடமைக ளுன்மேற் சுமந்திருந்தாலு
முன்னாயுசுமுடியாதென்றாற்போலேயும் நீசெய்யவே
ண்டியதொன்றுமில்லாததுபோலேயும் வீண்விளையா
ட்டுக்காரியங்களிலே யுன்னேரம்போக்கித் திரிகிறாய
ல்லோ! ஆ! மிகவும்பிரியமுள்ளவனே யிதினால் வரப்
போகிறகேடுகளுக்கஞ்சவேண்டாமோ? திராஜானென்
கிற இராயன் தானொருநாள் தர்மநன்மையொன்று
ஞ்செய்யாததைப்பற்றி அந்திவேளையிலழுது ஐயோ
எனதுதினத்தைப்போக்கடித்தேனென்றான். நீயுன்சீ
வியகாலத்தில் வீணாய்ப்போக்கின்ற நாட்களித்தனையெ
ன்று ஆராலேயெண்ணக்கூடும்? இத்தனைபெரிதானந
ஷ்டத்தின்பேரிலழுவதற்குன்கண்ணில்வரத்தக்ககண்
ணீரெல்லாம்போதுமோ? பின்னும் அந்தந்தநாளிலெ
ன்னென்ன இலௌகீகநன்மைசம்பாதித்தநுபவித்தா
லும புண்ணியசம்பாவனையடையாதேபோனால் அது
நஷ்டமான தினமென்றெண்ணக்கடவாய். ஏனெனில்
பிரபஞ்சமெல்லாம் அநித்தியமும்ழிவுள்ளதும விழலு
மாயிருக்கிறதினால்தின்பொருட்களும் சம்பத்துக்களு
நடத்தைகளும வீணாகாரியமொழிய மற்றப்படியல்
ல. ஆதலா லுன்கிரியையெல்லாஞ் சர்வேசுரனைப்பற்
றியும உன்னீடேற்றத்தைப்பற்றியுஞ் செய்வதேகட
மை. எந்நேரத்திலாவது ஒருவனுன்னைக்கண்டு நீயெ
ன்னசெய்கிறாயென்றுகேட்டால் தேவதோத்திரத்து
க்காகவும் என்னாத்துமவீடேற்றத்துக்காகவும் அலு
வலாயிருக்கிறேனென்னத்தக்கவிதமாக நடக்கவேண்
டும். இதற்காகச்செய்யாததெல்லாம் வியர்த்தம். உ

ன்னுத்தியோகவேலை முதலியகடமைகளைப் பற்றிச் ச
்வேசுரனைச்சேவிப்பதற்கும் ஞானக்கிருத்தியங்களைய
நுசரிப்பதற்குமநேரமில்லையென்றெண்ணாதே. நித்தி
ரைக்குமபொசிப்புக்கும் விளையாட்டுக்கு மிவைமுதலி
ய வெல்லாத்துக்கு முனக்குநேரமுண்டே. சர்வத்
துக்குமபிரதானமாகிய தேவவூழியத்துக்கும் ஆத்து
மவீடேற்றத்துக்குமாத்திரமோ நேரமில்லையென்பா
ய்? மேலு முன்னுத்தியோகவேலைமுதலிய கடமைக
ளைச் சர்வேசுரனைக்குறித்துப் பத்தியுள்ளவுத்தமவித
மாகச்செய்து நடத்தினு ல்வருக்கூழியஞ்செய்தா
ற்போலே யுன்னாத்துமத்துக்குப் பிரயோசனமாமே.
நீளவும் பாவத்துக்காகக் கர்த்தரொருவருக்கும் நே
ரங்கொடுக்கவில்லையென்கிற தேவவாக்கியத்தை மன
திலுறுதியாய்வைத்துத் தின்மையிலும்வீணிலும் நேர
ம்போக்காதவனுக்கு எல்லாக்கடமைக்கும் நேரமு
ண்டென்றறிந்துகொள். அர்ச்.-விகோரியென்கிறவர்
தாமோரற்பநேரமும் போக்கடிப்பதில்லையென்று ச
ர்வேசுரனுக்கு வார்த்தைப்பாடுகொடுத்து அதைக்
கருத்திரையாய்ச் செலுத்தினதினால் அவர்தமதுசீவி
யகாலத்தி லெழுதினவேதசாஸ்திரப் புஸ்தகங்களுஞ்
செய்த்தர்மநன்மைகளு முடித்த அருட்வேலைகளும்
அற்புதமாகத் தோன்றுகின்றன். நீயும வீணிலேநேர
த்தைப்போக்காவிட்டால் நிறைந்தபுண்ணிய சம்பா
வனையையும் பேரின்பபாக்கியத்தையு மடைந்து பர
லோகத்தில் நித்தியமாகவாழ்வாய்.



## உயம்.-நாள்.

### தேவத்திரவிய அநுமானங்களைப் பெறுதலின் விவரம்.

தேவத்திரவிய அநுமானங்க ளுலக இ
ரட்சகராகிற சேசுநாதருடைய க்கிரக
ரூதகருணைத்தடாகத்திலின்று அவருடை
யபுண்ணியபலன்களாகிற திவ்வியசலமுந்
திருவிரத்தமு நமதாத்துமத்திற் பாய்கிற
வாய்க்கால்களாகவே யிருக்கின்றமையால்
நமக் கெவ்வளவோ பத்தி யாசைக்குரிய
நன்மையாமே! ஆனால் நீ யதுகளி லுனக்
கு வேண்டியதுகளைப் பெற்றொழிய
வுனக் கதுகள் பிரயோசனமா யிரா து த
டாகத்தினின்று தன்கழனியிற் குளுந்த
ண்ணீரைப் பாயவிடாதவன் தைவறளவும்
பாழாகவுஞ் செய்வதுபோலே வேண்டி
யசமயங்களில் தேவத்திரவிய அநுமான
ங்களைப்பெறாதவன் தன்னாத்துமத்தை ய
ளவற்றசேதத்துக்குட்படுத்துகிறனென்
பது நிச்சயம். எழுதேவத்திரவிய அநு
மானங்களிற் பச்சாத்தாபத்தாலுந் தே

வநற்கருணையாலும் வரலாகியவரப்பிரசாதங்கள் விசேஷமாயடிக்கடி யுணக்கவசரமென்னத்தகும். அதேதெனனில் ஞானஸ்நானத்தால் ஞானப்பிறப்பையடைந்தபின் அநேகமுறை யுன்னுத்துமம் பாவவிஷத்தால் ஞானநோயுற்றுநித்தியசாவுக்குள்ளாக வுலகத்திற்பலதந்திரச்சோதனைகளிலகப்பட்டிருக்கின்றது. ஆதலால் அந்தக்கொடிய விஷத்தையு மாத்துமவியாதிகளையும் நித்தியசாவையும் நீக்கும் பரமஅவிழ்தமாகிய பச்சாத்தாப மிகவும் அவசரமல்லோ! பின்னுஞ் சத்தமானசீவியத்தையடையுமட்டுக்கு ஞானவுயிரைக்காப்பாற்றி நன்னெறியில் ஸ்திரமாய் நடக்கப்பலங்கொடுக்குந் தெய்வீகவுணவுவேண்டுமே. ஆதலால்தேவநற்கருணையி லன்புக்குரியகர்த்த ருன்னுத்துமத்துக்குப் பரமசஞ்சீவியாகிற தம்முடைய திருச்சரீரத்தையுந் திருவிரத்தத்தையுந் திவ்வியபோசனமாகத்தந்தருளினுர். இதெல்லாமிப்படியிருக்கத்தன்கையிலுள்ள நல்லவிழ்தத்தைத்தள்ளி அவலமாய்ச்சாகு நோவாளி

யைப்போலேயுஞ் சுகந்தபதார்த்தம் நிறைந்தவிருந்தையிகழ்ந்து அதுக்கண்டையில் வேணுமென்று பட்டினியாய் மாறுமதிகெட்டவனைப்போலேயும் இராசா தருகிறதிரவியங்களைப் பிறக்கணிக்குந்தரித்திரனைப்போலேயும் நீயுன் ஞாத்துமவியாதிகள்முதலிய ஞான ஆபத்துக்களிலேதேவத்திரவிய அநுமானங்களி லுனக்குள்ள பரம அவிழ்தத்தையு நித்தியவுயிர்தருஞ் சஞ்சீவியையும் அளவில்லாத மற்றச்சகல நன்மைகளையுங் கைக்கொள்ளாமல் வேண்டுமென்று நித்தியசாவுக்குள்ளாகத்திரிவானேன் ?

௨. வேண்டியசமயத்தில் தேவத்திரவிய அநுமானங்களைப் பெறாத அசட்டையானது பாவமுங் கேடுமா யிருக்கிறது போலே தக்க ஆயத்த மின்றிப் பாவத்தோட துகளைப்பெறுவது மிகவுங்கேடுள்ளதேவத்துரோகமாயிருக்கும். அதுசேசுநாதருடைய திருவிரத்தத்தைக் காலால் மிதித்து அவருடையபுண்ணியபலன்களைத்தனக்குவியர்த்தமாக்கித்தன்னீடேற்றந்

கூடாமையாகப் பண்ணுகிறுப் போலாகு மே. தேவநற்கருணையிற் சேசுநாதருடைய திருச்சரீரத்தையுந் திருவிரத்தத்தையும் அபாத்திரமாயுட்கொள்ளுகிறவன் தன் சாபத்தை யுட்கொள்ளுகிறு னென்று அர்ச்.-சின்னப்பர் திருவுளம்பற்றினர். இது எத்தனையோ பயங்கரமானவசனம்! இதையறிந்து பாவத்தோடே தேவநற்கருணை யுட்கொள்ளத் துணிபவனார்? செத்துப்புழுத்து நாறுகிற பிணத்தோடே யுன்னைக்கட்டிவைத்தால்தனை நீசகிக்கக்கூடுமோ? இதைவிடத் துர்க்கந்தப்பாவவசுத்தநிறைந்து பசாசின் வசமாகிய ஆத்துமத்திலே பரிசுத்ததிவ்வியகர்த்தனையுட்கொண்டு பசாசின்கால்கீழ் வைப்பது அவருக்கெவ்வளவோ அதிக பொருந்தாத்துரோகமாயிருக்கும். பாவிகளைச்சபித்து நரகத்தீயில் விழுந்தத் தள்ளுகிறவ ரவர்தாமல்லோ? அப்படியிருக்க உன்னாத்துமத்தைநீசுத்தம்பண்ணாமலுன்பாவங்களையருவருப்புடனேபார்த்திருக்கிற பரமகர்த்தனையெப்படியண்டத்துணிவாய்? ஆரோக்கியமு

ள்ளவர்களுடைய வுயிரைக்காப்பாற்றுகிற ஆகாரத்தைக் கடினவியாதி தோஷிமுள்ள வன்றின்றுற் சாவுபலிக்கிறதல்லோ? அப் படியே பாவதோஷத்தோடே திவ்வியந ன்மையை வாங்கிறவர்களுக்கு நித்தியசா வுமுதலிய சகலபயங்கரமான வாக்கினைக ளுஞ்சித்திக்கும். இதைநன்றாய்நினை.

௩. நல்லாயத்தத்தோடேதேவத்திரவி யஅநுமானங்களைப் பெறுகிறவர்களுக்கு வருகிற நன்மைகளளவறுக்கப் படாதா மே. அதெப்படியெனில் நீநல்லபாவசங் கீர்த்தனஞ் செய்தாற் பாவப் பொறுத்த லோடே தேவ இஷ்டப்பிரசாதம் சர்வே சுரனோடு மறுபடியுறவு அவருடைய தயவு பக்ஷம் ஆத்துமசந்தோஷம் ஞானஆறுத ல்மோக்ஷசுதந்தரமுதலிய நன்மைகளுனை க்குண்டாம். தக்கஆயத்தத்தோடு தேவ நற்கருணை வாங்குவாயாகில் சேசுநாதசு வாமிதாமே யளவற்றவன்போ டெழுந்த ருளிவந்துன்னிடத்தில்வாசம்பண்ணுவார். இப்படிச் சகலநன்மைச்சுரூபியாகியகர்த் தருன்னிடத்திலெழுந்தருளி வருவதனைக்

கெத்தனையோ பெருமையும் பாக்கியமு
மாமே. அவர் சகலவரப்பிரசாதங்களி னூ
றணியாகையி லப்பொழு தவரிடத்தில் நீ
பெறலாகியநன்மைகளுக்கு எண்ணிக்கை
யளவுபிரமாணமுண்டோ! அவருன் ஞான
ச்சத்துருக்களை யெல்லாஞ்செயிக்க வுதவி
செய்வார். ஞானசீவியத்தை யுன்னுத்தும
த்தி லுறுதிப்படுத்தி யாசாபாசமுதலிய
டாவத்துர்க்குணங்களையடக்கப்பலத்தைக்
கொடுப்பார். தேவநற்கருணையால் தாழ்ச்
சிபொறுமைகற்புதேவசினேகமுதலியச
கலபுண்ணியங்களும் உன்னிடத்தில் விளை
யலாகும். கர்த்தருடைய திருச்சரீரமுந்
திருவிரத்தமுமுனக்குச்சஞ்சீவியாகி யுன
க்குச்சத்தமான சீவியமு மகிமையுள்ளவு
த்தாநமும்பவிப்பதற்கான அக்ஷரமாமே.

ஆனல்வன்வ னயத்தத்துக்குத்தக்கது அவனவனி
டத்தில்ந்த நன்மைகளெல்லாம்பலிக்கும். உன்கழனி
யில் தண்ணீர்பாய்கிறதுக்கு வழியெவ்வளவுண்டோவ
வ்வளவும்பாயும். ஊறணியிலேவிடுகிறபாத்திர மெவ்
வளவுண்டோ வவ்வளவுதண்ணீருங்கொள்ளும். அப்
படியேநீதேவத்திரவிய அநுமானங்களைப்பெறுகிறது
க்கெவ்வளவுஉத்தமமான ஆயத்தஞ்செய்வாயோஎவ்
வளவிசாலமாயுன்னிருதயத்தைக் கர்த்தருக்குத்திற
த்[illegible]வாயோ அவ்வளவுக்குமுன்னிடத்திலே தமமுடை

யவரப்பிரசாதமுதலிய நன்மைகளைப்பொழிந்தருளுவா
ர். தேவநற்கருணையை யுட்கொண்டதினால் வேதசாட்
சிகளசையாதவிசுவாசதைரியத்தையடைந்துசகல த
ந்திரச்சோதனை நிர்ப்பந்தவேதனைகளையுஞ் செயித்
தார்கள். தமதுதிருவிரத்தத்தால் தங்களைப்பூரித்ததி
வ்வியகர்த்தருடைய வேதத்துக்காகச் சந்தோஷத்
துடனே தங்களிரத்தத்தைச்சிந்தியவருடைய பேரி
ன்பதரிசனத்தையடைந்தார்கள். கணக்கில்லாதவிசு
வாசிகளுந் தேவநற்கருணையினால் மேன்மேலும்புண்
ணியத்திலேவளர்ந்து அர்ச்சியசிஷ்டர்களானார்கள்.
நீயோவென்று லநேகவிசை பாவசங்கிர்த்தனஞ்செய்
து தேவநற்கருணைவாங்கியிருந்து மின்ன மநேகபாவ
த்துர்க்குணங்களி லுட்பட்டிருக்கிறதென்ன? அதினா
லுன்னாயத்தத்தி லநேககுறைவுகளுண்டென்று விளங்
கிறதல்லவோ? ஆதலா லதுகளைப் பரிசோதித்தறிந்து
திருத்தக்கடவாய். பின்னுமநேகநாளன்னமபொசியா
தவனுக்குச்சத்துவமிராதாகையால்வன்பலத்தசத்து
ருக்களோடே போரார்டிச்செயங்கொள்ளுவது மகாவ
ருமையாமல்லவோ. அப்படியேவருஷத்திலே யொருவி
சைமாத்திரந் தேவநற்கருணைவாங்கிறவன் தன்ஞான
ச்சத்துருக்களையெல்லாஞ் செயித்துப் புண்ணியநெறி
யில்தவறுமல்நிலைநிற்பதரிது. நாமநுதினமும்பசாசோ
டேபோராடவேண்டியிருப்பதால்திவ்வியகர்த்தர்நம
க்கன்றன்றுள்ள திவ்வியபோசனமாகத் தேவநற்கரு
ணையை நியமித்தருளினார். அநுதினமுந்தேவநற்கரு
ணையைவாங்குவது பூர்வகாலத்தில் திருச்சபையின் மு
றைமையாயிருந்தது. நிர்ப்பாக்கியமுள்ள விக்காலத்
திற் சிலரதை வருஷத்திலொருவிசையாவது வாங்கா
மற்போகிறது எப்படிப்பட்ட விசுவாசக்கேடு? நித்
தியசீவியத்தையடைய மிகவும்விரும்புகிற தேவபத்தி
யுள்ளவர்க ளெப்படிப்பட்ட வசட்டைத்தனத்துக்கிட
ங்கொடாமல்வருஷத்துக்கொருவிசைமாத்திரமும்வா

கிறதுபோதாதென்றிருப்பார்கள். தாகமுற்ற மானு
ாது ஆவலுடனே தெண்ணீரூற்றை நாடுவதுபோலே
யிர்தரு நீரூறணியாகியதேவநற்கருணையை யடிக்க
மிகுந்தவாசையோ டபேட்சித்து வாங்கவாயத்த
ஞ்செய்வார்கள். அநேகர் வாரத்துக்கொருவிசை தே
நற்கருணைவாங்கி அதற்குமூன்று நாள் நன்றியறிந்த
தோத்திரஞ் செய்கிறதிலும் வேறேமூன்று நாள் மறுப
வாங்க வாயத்தஞ்செய்கிறதிலுஞ் செலவழிப்பார்க
ர்.ஆனலிதைப்பார்க்கிலும்டிக்கடி நன்மைவாங்குவது
மிகவுமுத்தமமாயிருந்தாலுஞ் சும்மாவழக்கத்தினால்
வாங்கலாகாது. அநந்தபத்திவிசுவாச வணக்கத்துட
னே வாங்கத்தக்கதாகச் சர்வத்துக்குந்திபதிகர்த்தா
வானவர் தாமேயுன்னிடத்திலெழுந்தருளிவருகிறாரென்
று நன்றாய்நினைக்கக்கடவாய். ஓரிராசா வுன்மேற்கிரு
பைவைத்து உன்வீட்டுக்குவரச்சித்தமானால் அதைச்சு
த்தம்பண்ணவு முன்னலியன்றமட்டு மலங்கரிக்கவுந்
தக்ககாணிக்கைச்செலுத்தவும் வேண்டிய வணக்க
மெல்லாஞ்செய் துனக்குத்தேவையாகிய வரங்களைக்
கேட்கவு மிகவுங்கவனிப்பாயல்லோ! இதைவிடத்தே
வநற்கருணைவழியாக வுன்னிடத்திலெழுந்தருளுகிறப
ரலோக பூலோகவிராசா வருவதற்குன்னாத்துமத்தை
யின்னமதிகபூச்சியமா யாயத்தப் படுத்தவேண்டா
மா? அவருன்னிடத்தில்வருகையில் பாவவசுத்த மு
ன்னிடத்திலிருந்தால் நீ யவருக்குப் பிரியப்படக்கூடு
மா ? ஆதலால் தேவநற்கருணையைவாங்குசற்குமுன்
உன்னாத்துமத்தை மெத்தவுஞ் சுத்திகரிப்பாயாக. வி
சேஷமாயுன்பாவங்களைப் பாவசங்கீர்த்தனத்தில் சரி
யாய்வெளிப்படுத்தாமல் அல்லது அதுகளின்பேரில்
வேண்டியமனஸ்தாபப்படாமல் அல்லது அதுகளைவெ
றுத் தென்றென்றைக்குமவிட்டிருக்க வுறுதியான பி
ரதிக்கினைசெய்யாமல் தேவநற்கருணைவாங்கத் துணி

யாதே. லொத்தேரென்கிறவிராசா வொருவைப்பா
ட்டியை வைத்துக்கொண்டதினால் அர்ச்.-பாப்பான
வராலே திருச்சபைக்குப் புறம்பாக்கப்பட்டான். அந்
தச்சாபத்துக்கு நீங்கலாகத்தக்கதாக அவன் உரோ
மாபுரிக்குப்போய் வைப்பாட்டியைவிட்டுவிட்டேனெ
ன்றுபொய்யானசத்தியம்பண்ணி யதற்குநம்பிக்கை
யாக அர்ச்.-பாப்பானவர்கையால் தேவநற்கருணையு
ட்கொண்டான். அவனோடேவந்தபிரபுக்களி லநேக
ரவன்பாவத்துக்குதவியாகத் தாங்களுந் தேவநற்கரு
ணை யுட்கொண்டார்கள். சிலரப்படிப்பட்ட துரோக
த்துக்கஞ்சிப்பின்வாங்கினார்கள். இவர்கள்மாத்திரமுயி
ர்தப்பிப்பிழைக்க விராசாவுமற்றப்பிரபுக்களெல்லோ
ருந் திரும்பிப்போகையில் பயங்கரமான நோயினால்
வலமாய்ச்செத்தார்கள். யூதாஸென்கிறவ னுலோப
த்தனம் வஞ்சனையென்கிறபாவங்களோடே தேவநற்
கருணையுட்கொண்டதினா லுடனேபசாசுபிடிக்கப்பட்
டுத் தன்திவ்வியகுருவை யூதருக்குவிற்றுக் காட்டிக்
கொடுத்து அன்றுதானே தன்குரூரத் துரோகத்தின்
வெட்கத்தைச்சகிக்கமாட்டாமல் அவலமாய்ச்செத்
து நரகபாதாளத்திலே விழுந்தான். இவ்வண்ணமே
பாவத்தோடே நன்மைவாங்கினவர்களுக்கு இவ்வு
லோகத்திலேதானே கிடைத்த அச்சத்துக்குரிய வா
க்கினைகளித்தனையென்றுகணக்கில்லை. இப்படியிருக்
க வதற்கஞ்சாதிருக்கக்கூடுமோ? நீபாவசங்கீர்த்த
னம்பண்ணவு நன்மைவாங்கவும்போகிறபோது இது
வேகடைசிப்பாவசங்கீர்த்தனமு நன்மையுமென்றெண்
ணியதற்குமுன் உன்னாலியன்றமட்டுமுத்தம ஆயத்தஞ்
செய்வாயாக. அன்றியுந் தேவநற்கருணைவாங்கினபி
ன்பு அதின்பலனையிழக்காதபடிக்குமிகுந்தபத்தியெ
ச்சரிக்கையோடு சுமுத்திரையாய் நடக்கக்கடவாய்
பரமகர்த்தரநந்தகிருபையன்போடே தம்மைமுழு

கு முனைக்குத்தந்தருளினபின்பு அவருக்குநன்றிகெட்
—துரோகியாயவனைவிலக்கிவிட் டுன்றுத்துமத்திற்
பாவத்துக்கும் பசாசுக்குமிடங்கொடுக்கக்கூடுமோ?

---

உமகம்.-நாள்.

---

திவ்வியபூசையின்மாட்சிமை.

க. சத்தியகிறீஸ்துவேதத்தில் வழங்கு
ந்திவ்வியபூசையானது எக்காலத்திலாகி
லுஞ்செலுத்தப்பட்டசகலபலிகளையும்வி
— அளவில்லாமாட்சிமையு மேன்மையு
முள்ளதாமே. அதெப்படியெனில் உ
லோகத்திலுதிமுத வியல்வேதத்திற் பிதா
ப்பிதாக்களால் நடந்தேறிவந்த பலிகளு
ம பின்னர் வரிவேதத்தில் தேவகட்டளை
யினாலேதானே ஸ்தாபிக்கப்பட்ட பலிக
ளு மிந்தப்பரமபலியை யடையாளமாக
க்குறித்ததொழிய மற்றப்படியல்ல. அந்
தச்சகலபலிகளிலும் பூமியின்கனிகளு மி
ருகங்களி னிரத்தமுமாத்திரஞ் செலுத்த
ப்பட்டமையால் அதுகள் தேவமகிமைக்கே
ற்றதாயிருக்கவுமில்லை, மனிதர் பாவதோ

ஷிங்களை விமோசனம்பண்ணக்கூடவுமில்லை. ஆதலா லவதரித்தகர்த்தருள் வேதமாகிய தமதுதிவ்வியவேதத்தில் தெய்வீகத்துக்கியோக்கியமான பூசையாகவு மனிதரிரட்சணியமாகவுந் தாமேறித்தபலியாகச்சித்தமானார். அதெப்படியென்றால்தாம்பாடுபட்டு மரிப்பதற்கு முந்தினநாளில் வேதவாக்கியத்துக் கொத்தவண்ணம் மெல்கிசெதேக்கென்கிற குருப்பிரசாதியின் முறைமைப்படியே குருவாய் அப்பத்தையு மிரசத்தையும் பலியாகவொப்புக்கொடுத்து, அதுகளைத்தம்முடைய திருச்சரீர விரத்தமாகமாற்றித் தம்முடைய சிஷாக்களுக்குத்தந்து, இதுவுங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என்சரீரம், இதுவுங்களுக்காகச் சிந்தப்படு மென்னிரத்தமென்று திருவுளம்பற்றினார். மீளவுந் தாம்செய்தவண்ணம் உலகமுடிவுபரியந்தந் தமதுதிருச்சபையில் முறையாய்நடக்கவேணுமென்றுங் கட்டளையிட்டார். ஆதலால் திவ்வியபூசையி லவருடைய திருவாக்கியத்தின் வல்லபத்தினுல்

எல்லாவற்புதத்திலும் பெரும்ற்புதமாக அப்பமும் இரசமும் மவருடையதிருச்சரீரமாகவுந் திருவிரத்தமாகவு மாறவே பரலோகந்திறந்தாற்போலே அந்தத்திவ்வியகர்த்தர் மோக்ஷவிராச்சியத்திலே நின்று எழுந்தருளிவந்து தயவன்பினால் தமது மகிமையின் சோதிக்கதிர்களை மறைத்து நமக்காகப்பலியாகிறார். இப்படிச்சர்வத்துக்கு மதிபதிகர்த்தர் பலியாகிற திவ்வியபூசையின்மாட்சிமையை யளவறுக்கக்கூடுமோ?

உ. திவ்வியபூசை மிகவுமுருக்கமானபலியாம். அதெப்படியென்றால் மனிதரைப் பிரட்சிக்கச் சிலுவைமரத்தில் சேசுநாதர் செலுத்தினபலியு மிதுவுமொன்றுதான். இதிலேயு மதிலேயு மவருடைய திருச்சரீரமுந் திருவிரத்தமுந்தானே பலியாகிற வஸ்துவாமே. இதையு மதையுஞ்செலுத்துகிறபரமகுருவுஞ் சேசுநாதர்தாமே. இதுக்கு மதுக்குமுள்ளவித்தியாச மேதெனில் சிலுவைப்பலி சேசுநாதசுவாமி தாமே பிரசித்தமாகவொப்புக்கொடுத்தார்.

பூசையிலோவென்று லவர்கண்ணுக்கெட்டாதவராய்க் குருக்களின்கைங்கரியத்தைக்கொண்டு தம்மையொப்புக்கொடுக்கிறார். பின்னுஞ்சிலுவைப்பலியிற்சேசுநாதருடைய திருவிரத்தந் திருச்சரீரத்தினின்று சிந்திப்பிரிய அவர்பாடுபட்டுமரித்ததினால்துவிரத்தஞ்சிந்தினபலியென்னப்படும். பூசையிலோவென்றால் கர்த்தர்பாடுபட்டு மரிக்காமலு மவருடைய திருவிரத்தஞ்சிந்திப்பிரியாமலு மிருக்கிறதினா லிதுவிரத்தஞ்சிந்தாப்பலியென்னப்படும். ஆகிலும்பூசையிலுஞ் சேசுநாதருடைய திருமரணச்சாயலு மவர்திருவிரத்தஞ்சரீரத்தினின்றுபிரிந்தவண்ணமுற்தோன்றுகின்றது. அதெப்படியென்றால் சேசுநாதர் தேவநற்கருணையி லுயிராயிருந்தாலு முயிரில்லாவஸ்துக்களாகிய அப்பத்தின்குணங்களுக்குள்ளேயு மிரசத்தின்குணங்களுக்குள்ளேயு மறைந்திருக்கிறதுந்தவிர அவருடையசரீரமாகவு மிரத்தமாகவும் வெவ்வேறுமந்திரத்தால் தேவவசீகரமான அப்பத்தின்வகையு மிரசத்தின் வகையும்

வெவ்வேறாயிருக்கிறதினாலே சேசுநாதர் சரீரமு மிரத்தமும் பிரிந்திருந்ததாகக்காண்பித்து அவருடையமரணத்தைக் காட்டுகின்றது. ஆகையால் நீ பூசைகாணும் போதெல்லாஞ் சேசுநாதருன்னைப்பற்றி யடைந்த கடினமரணத்தை நினைத்துப் பத்திசினேகத்தாலும பாவத்தின்பேரில் மனஸ்தாபத்தினாலு மனமிளகக்கடவாய்.

௫. திவ்வியபூசையால் பலிக்குநன்மைகளுக்கு மட்டுமெண்ணிக்கையுமில்லை. முந்தமுந்த வதனாற் சர்வேசுரனுக்கேற்ற ஆராதனைவணக்கமுண்டாகும். அவரளவில்லாத மகத்துவமுள்ளவராகையா லவருடையமகிமைக்கொத்த வணக்கஞ்செய்வது மட்டுள்ளமனிதராற் கூடாது. தேவனுமனுஷனுமொன்றாகிய சேசுநாதரோவென்றால் திவ்வியபூசையில் தம்மை யநந்தவிதமாகத்தாழ்த்தித் தம்முடையபிதாவுக்குத் தம்மைப்பலியாகவொப்புக்கொடுக்கையால்தேவமகிமைக்கொத்த அளவில்லாஅர்ச்சனைவணக்கமுண்டாமே. ௨வது தேவகிருபைமனிதர்க்குத் தந்தருளியவெ

ண்ணில்லா நன்மைகளுக்குத்தக்கது அள
வில்லா நன்றியறிந்த தோத்திரமுமாகு
ம். மனுமக்களின் தோத்திரஸ்துதியெல்
லாம் சர்வேசுர னவர்களுக்குச்செய்துவ
ருகிற நன்றிகளுக்குப் போதாமையால்
திவ்வியகர்த்தரிந்தத் தெய்வீகபூசைத்தோ
த்திரப்பலியாகவேற்படுத்தியதைஸ்தாபிக்
கிறபோதே தம்முடையபரமதிவ்வியபிதா
வைத்துதித்தார். ௩-வது. பூசைப்பலியா
ல்மனிதர்பாவங்களுக்குச் சரியானவுத்தரி
ப்பும் பரிகாரமுமுண்டாம். பாவமானது
தெய்வீகத்துக்கு நிந்தையாகையால் சர்
வாக்கினைக்குமுரிய வளவில்லாத்தோஷ
மென்னத்தகும். அதைவிமோசனமாக்க
மனிதரெல்லாருந் தங்களைப்பலியாகச்செ
லுத்தினாலும் போதாதே. ஆதலா லிதின்
பரிகாரத்துக்குத் திவ்வியகர்த்தர் தம்மை
நித்தபலியாகவு மொப்புக்கொடுத்தார்
அவர் விலைமதியாத் திவ்வியவிரத்தமாத்தி
ரமே மனிதர்பாவங்களைப்போக்கவு மிது
களினுக்கினையை நீக்கவும் வல்லமையுள்ள
து. அதுவநுதினமு முலகத்திலொப்புக்

கொடுக்கப்பட்டுத் தேவநீதிக்கோபாக்கி
னியைத்தணிக்காவிட்டால் பாவநிறைந்த
விவ்வுலகம்வெகுகாலத்துக்குமுன்னமேசங
ங்கரிக்கப்பட்டிருக்குமென்று வேதபார
கர்நிச்சயித்தார்கள். ஆதலால் நாமுயிரோ
டிருக்கிறதே அதின்பலனென்னத்தகும்.
ச-வது. இத்திவ்வியபூசையால் மனிதர்க்
குச்சகலநன்றிவரங்களும்பலிக்கிறதாமே.
அறுதினமு மனிதராத்துமத்துக்குஞ் சரீ
ரத்துக்கும பற்பலநன்மை யவசரமானு
லும் அதுகளைப்பெறுவதற்கு மனுமக்களி
ன்புண்ணியபேறுகள் போதா தன்றியும்
அவர்களுடையபாவங்க ளதற்குவிக்கின
முமாமே. ஆனால்திவ்வியபூசையில் தேவ
சுதன் மத்தியஸ்தராகித் தம்மையே பலி
யாகச்செலுத்தி மனிதர்க்காக மனுப்பே
சுகையி ல்வரால் வரலாகாத நன்மையில்லை.
திவ்வியபூசையாற் சீவியர்களுக்குத் தேவ
கிருபை, ஈடேறுகிறதுக்குதவி, பாவத்
தைநீக்கிப் பொறுத்தலையடைவதற்கு அ
நுக்கிரகம், உண்மையான புண்ணியசற்கு
ணங்கள், நன்மையிலுறுதி, துன்பத்திலா

முதல் சரீராரோக்கியமுதலான சகலநன்மைகளும் பலிக்கும். மரித்தோர்க்குவதியிலிளைப்பாற்றியும் வேதனையின் முடிவும் பேரின்பவாநந்தமுங் கிடைக்கும்.

இப்படிச்சர்வேசுரனுக் கேற்கவாராதனை தோத்திரமுமன்றிச் சம்மனசுகளுக்கும் அர்ச்சியசிஷ்டர்களுக்கு மாநந்தசந்தோஷமுந் திருச்சபையெல்லாத்துக்குமுறுதியானநிலையும் பரலோகத்துக்கும் பூலோகத்துக்கு முறவும் உனக்கு மற்றவர்க்குஞ் சகலநன்மையும்வருவிப்பதற்குரிய திவ்வியபூசையை அடிக்கடிகாண வுன்னிடத்தி லெவ்வளவோபத்தியுள்ளவாசைபிறக்கக்கடவது. இராசா கொலுவில் வீற்றிருந்தால்விண்ணப்பஞ்செய்ய வெத்தனையோபேரோடிவருவார்கள்! திவ்வியபூசையிற் பரலோகபூலோகவிராசாவுனக்குக் கிருபைசெய்யப் பரமண்டலங்களிலே நின்று எழுந்தருளுகிறாரே. சினேகாக்கினியா லுனக்காகப்பலியாகிறாரே. அவரை நமஸ்கரிக்கவும் விண்ணப்பஞ்செய் துனக்குவேண்டியநன்மையைக் கேட்கவு மாவலுடனவர்சந்நிதிக்குப்போகாதிருக்கலாமோ! மீளவு மவர் அநுதினமு முனக்காகப் பலியாகையில் நீ ஞாயிற்றுக்கிழமைமுதலிய கடன்றிருநாட்களுமல்லாமல் மற்றத்தினமும் பத்தியோடேபூசைகாணப் பிரயாசப்படுவாயாக. ஆனாற் பூசைநேரத்தில் நீ யநுசரிக்கவேண்டிய வொடுக்கபயபத்திவணக்க மெம்மாத்திரமென்று யோசித்துக்கொள். வேதபாரக ரநேகர் நிச்சயித்தபடி திவ்வியபூசைநடக்கிற பீடத்தண்டையிற் சம்மனசுகள்முதலா யாச்சரியத்தோடு பிரமித்துத் தேவத்துவத்தைநோக்கிய அச்சத்தால் நடுநடுங்கிப் பலியாகிற தம்முடைய கர்த்தரை அநந்த

பத்தியோடாராதிக்கிறார்கள். அப்படியிருக்கப் பிரி
யமுள்ளகிறீஸ்துவனே யுனக்காகவே யிவ்வளவு கிரு
பையோடு தம்மைப்பலியாகவொப்புக்கொடுக்கிற வா
ண்டவரை நீயெத்தனையோ நன்றியறிந்தபத்திநேசத்
துடனேயாராதிக்கக்கடவாய். பிராஞ்சுதேசத்தி னி
ராசாவான அர்ச்.-பிரகாசர் பூசைகாணுகையில் சே
சுநாதசுவாமியைக் கண்ணாலேகண்டாற்போலேமகா
பத்திவணக்கத்துடனே யவரை நமஸ்கரித்து மன்று
வார். அர்ச்.- ஒதொனென்கிற அதிமேற்றிராணியா
ர் தமதண்டையிலுள்ள சிலர் சேசுநாதருடையதிருச்
சரீரமுமிரத்தமுமெய்யாகவே தேவநற்கருணையில் வீ
ற்றிருப்பதின்பேரிற் சந்தேகப்படுகிறதையறிந்து அ
வர்களுடைய ஐயத்தைத்தீர்த்துஇந்தப்பரமவிரகசிய
த்தினுண்மையைத்தெளிவிக்கும்படிக்குச்சர்த்தரைம
ன்றாடிப் பூசையைப்பண்ணப்போனார். அதிலேயவர்
தேவநற்கருணையைப்பிட்கையில் திவ்விய அப்பத்தினி
ன்று இரத்தஞ்சிந்திப் பூசைப்பாத்திரத்தில்விழ அங்
கிருந்தவெல்லாருங்கண்டார்கள். அப்போதெல்லோரு
மிகுந்த விசுவாசப்பத்தியோடே திவ்வியகர்த்தரையா
ராதித்து இந்தவற்புதமான புதுமையைக்குறித்து அ
வருக்குநன்றியறிந்ததோத்திரஞ்செலுத்தினார்கள். பூ
சைபண்ணுகையிலுங் காணுகையிலும் அர்ச்.- சவேரி
யார்முதலிய அர்ச்சியசிஷ்டர்களிடத்தில்திகரித்தபத்
தியிகுதியினாற்சிலமுறையவர்களுடையசரீரமும் பூமியி
லேதங்காம லாகாசத்திலெழும்பிநிற்கும். நீயோவெ
ன்றாலெத்தனையோவிசைபூசைகாண்கிறபோது பத்தி
விசுவாசமில்லாதவனாய் வீண்விசாரமுதலிய பராக்குக்
களுக்கிடங்கொடுக்கிறாய்! சேசுநாதர்சிலுவைமரத்தில்
தம்மைப்பலியாகவொப்புக்கொடுக்கையிலும் யூதர்ம
னமிளகாமல்மேன்மேலுமவரைநிந்தித்துப்பரியாசம்
பண்ணினது மகாகொடுமையல்லோ. ஆனால் அந்தத்

திவ்வியகர்த்தரின்னமு முனக்காகவநந்த கிருபையோ டேபலியாகிறபூசைநேரத்தில் நீயங்கங்கேபார்த்துச் சிரித்துப்பேசிமரியாதையில்லாதிருப்பது அதற்குச்ச மானமாமே. மேலுஞ் சேசுநாதர் மெய்யானதெய்வ மென்றுயூதர்நம்பியிருந்தா ல்வருக்கப்படிப்பட்டகு ரூரவவமானஞ்செய்யவுஞ் சிலுவையி ல்வரையறையவு மாட்டார்கள். நீயோவெனி ல்வரோயுன்தேவனுங்கர்த் தாவும் இரட்சகருமென்று விசுவசித்கையி வின்னமும் வருக்கவமானத்துரோகஞ்செய்தால்யூதரைவிடக்கொ டியபாவியாய்ப்போகிறுயல்லவோ? இனியொருகாலும்ப் படிச்செய்யாமற் பூசையைத்தக்கபத்தியோடேகாண த்தக்கதாக அந்நேரத்திற்கல்வாரிமலைமேலேசேசுநா தர் தம்மைப் பலியாகச்செலுத்துகிறதைக் காண்கிற தாகயோசித்து அவரநுபவித்தகொரேரக்கஸ்திநிர்ப்பந் தங்களைத்தியானிப்பாயாக. ஆ ! பிரியமுள்ளவனே, தி வ்வியகர்த்தர் உனக்காகச் சிலுவைமரத்தில் தமது தி ருவிரத்தஞ்சிந்தி நிகரில்லாநிந்தையவமான நிர்ப்பந் தங்களோடு மரிக்கிறதை நீ கண்ணாலேகண்டிருந்தால் மனமுருகாதிருக்கக்கூடுமோ? இதோஅந்தத்திருவிர த்தமேயின்னமுந்திவ்வியபூசையிலுனக்காகவொப்புக் கொடுக்கப்படுகிறது. முன்னாள் காயத்தால்நொறுக்க ப்பட்ட அவர்திருச்சரீரமுமின்னமுனக்குமுன்பாகப்ப லியாகின்றது.சிலுவைப்பலியின்பலன்உனக்குச்கிடை க்கும்படிக்குச் சேசுநாதரதைத்தொடர்ந்து செலு த்திக்கொண்டுவருகிறார். இதெல்லாங்காண்கிற நீ யி ன்னமனமிளகாதென்ன ? உன்பாவங்களை நிவர்த்தி பண்ணக் கர்த்தரித்தனையன்போடே தம்மைப்பலியா கச்செலுத்தக்கொள்ள நீயதுகளைவெறுத்துவிடாதி ருக்கக்கூடுமோ? உனக்காகக் கர்த்தர்பட்டபாடுகளி ன்மேலிரங்கி யவர்சிந்தின திருவிரத்தத்தோடே யுன் கண்ணீரையாவது ஒப்புக்கொடுக்கவேண்டாமோ? நீ

ளவும் பூசையின்பலனை யடையத்தக்கதாகப் பூசைப
ண்ணுகிற குருவானவர்கருத்தோடே யுன்கருத்தையு
மொன்றாகக்கூட்டிச் சர்வேசுரனையாராதித்து நன்
றியறிந்த தோத்திரஞ்செய்து உன்பாவங்களின்பொ
றுத்தலையிரந் துனக்குமுன் ஞறவின்முறையார்முதலி
யவெல்லாருக்கும் வேண்டியநன்மைகளைக்கேட்டு ம
ரித்தோர்களுக்காக மன்றுடுவதும் முறை. அன்றியுந்
திவ்வியபலியோ டுன்னையுஞ் சர்வேசுரனுக் கொப்புக்
கொடுத்து அவரைத்தக்கபடிசினேகித்துச்சேவிக்கவு
ம் புண்ணியநெறியில் தவறுமல்நடந்து கரையேறவும்
அநுக்கிரகங் கேட்பாயாக.

---

உயஉம்.-நாள்.

---

## தர்மத்தின் விளக்கம்.

க. தர்மஞ் செய்வது அவகாசமுள்ள
வெல்லார்மேலுமுள்ள கடன். அதெப்ப
டியென்றால் மனிதரெல்லாருமொரோதா
ய்தகப்பனுடைய சந்ததியாராகையாலு
ம் ஒரோகாணியாட்சியாகியபரகதிக்குநிய
மிக்கப்பட்டமையாலு மெல்லாருஞ் ச
கோதரராமே. ஆனு லியாதொருவன் த
ன்சகோதரன் பட்டினியாய்க்கிடந் தவ
திப்படுகிறதைக்கண்டாலு முதவிசெய்

யாவிட்டா லிவனை யென்னென்றுசொல்வாய்? நீயிரப்போர்க்கிரங்காவிட்டா லது வே யுனக்குஞ்சொல்லத்தகுமே. ஏனெனி லிவர்க ளுனக்குச் சகோதரரல்லவோ. அவர்க ள் நுதினமு ம்வதிப்பட் டுன்னைக் கெஞ்சி யுதவிகேட்கிறதைப் பார்த்திருந்து மிரக்கமில்லாமற்போகலாமோ ! உன் செல்வநாளி லிரப்போர்க் குதவிசெய்யாத தெவ்வள வநியாயமென்றுபார். உன் வசமானபொரு ளுன்று லுண்டாக்கப்பட்டதோ? அல்லவே. சர்வேசுர ளுலுண்டாகியவருக்குச்சொந்தப்பொருளாமே. அதை யுனக் கிரவலாகக்கொடுத்தாரொழிய மற்றப்படியல்ல . ஆனு லேதுக்காக வதை யுன்வசத்திலேவைத்தார் ? நீயுன னிச்சையின்படி யதைச்சலாக்கியமுதலிய வீணுடம்பரங்களி லழித்துப்போடவோ ! அவருக்குத்துரோகமான துர்நடத்தைகளிற் செலவழிக்கவோ? அல்லவெ. நீயுமுன்குடும்பமும் வேண்டியதை யநுபவித்து மீதியாயிருக்கிறதைக்கொண்டு தரித்திரர்களுக் குதவிசெய்யும்பொருட்டுத் த

ந்தருளிறுவொழிய மற்றப்படியல்ல. தரி த்திரருக்குத் தர்மஞ்செய்யக் கண்டிப்பா னகட்டளையிட்டு அவர்கள்மேலிரக்கத்தை யுந் தயவையும்வைக்கும்படி கற்பித்தார் அப்படியிருக்க அவர்கள் துயரத்தின்மே ல் மனமிளகாமற் பரமகர்த்தர் தரித்திரர் களுக்கு நியமித் துன்வசத்திலேவைத்த பொருளை நீயநியாயமாய்வைத்துக்கொ ண்டு செலவழித்தால் அவர்களுக்குத்தகப் பனுகிய கர்த்த ரிந்தக் கொடியவநியாய த்தின்பேரில் கணக்குக்கேளாமல்விடார். இதின்மேல் தீர்வையிடுநாளி லவருக் கெ ன்னநியாயஞ்சொல்லப்போகிறாய்? பட் டினியாயிருக்கிறவனுக் குன்னங்கொடா விட்டாயோ அவனைக் கொன்றுயென்று அர்ச்.-அகுஸ்தீன்வசனித்தார். இதைநன் றாய்நினை.

௬. இரப்போர்க்குச்செய்யப்பட்ட வு பகாரமும் அபகாரமுஞ் சேசுநாதருக்கு ச்செய்யப்பட்டதாமே. அதெப்படியெ னில் இரட்சகர் நம்மை மீட்டுக்கொள் ளக்கிரயமாகத் தமது திருவிரத்தத்தையு

ம் பிராணனையுந்தந்தமையால் நம்மிடத் திற்பிரதிநன்றியைக்கேட்க மிகவும் நியாயமுள்ளவரல்லோ? ஆனால் தம்மால்தமக் கொன்றுந் தேவையில்லாததினால் தமக் குவதிலா யிரப்போரையனுப்பி யவர்களு க்குச் செய்யப்படுவதெல்லாந் தமக்குச் செய்ததாக வெண்ணிக்கொள்ளச் சித்த மானார். இப்படியிருக்கையால் தரித்திரர் மே லுன்னிடத்தி லெவ்வளவோவிரக்கமு ந் தயவும்பிறக்கக்கடவது. சேசுநாதரிவ் வுலகத்திற் சஞ்சரிக்கிறபோது அன்னவஸ் திரமில்லாம லிவதிப்படுகிறதைக் கண்டி ருப்பாயாகி லுன்மனமிளகி யெத்தனை யோ பத்திசுறுசுறுப்புடனே யவருக்குத விசெய்திருப்பாய். இதோ அவரிந்தவிர ப்போன்வேஷத்தில் மறைந் துன்னிடத் திலுதவிகேட்கவருகிறாரென்னத்தகுமே. நீயரோசிக்கிற தரித்திரருடைய வசுத்த வேஷத்தையு மனிதர்முகத்தையும் பாரா மல் திவ்வியகர்த்தர்முகத்தைப் பார்ப்பா யாக.தரித்திரர்மூலமாக நீயவருக்குச்செய் யுமுபகாரங்களையும் அபகாரங்களையு மவ

ர்பொருத்தீர்வையில் விவரித்துப் பிரதிப லனையளிப்பார். இரப்போர்களுக்கு நன் மைசெய்தவர்களை யாசீர்வதித்து நாம்ப சித்திருக்கையி லன்னத்தையுந் தாகமுற் றிருக்கையில் பானத்தையும் பரதேசியா யிருக்கையிலிடத்தையும்ஆடையில்லாதிரு க்கையில் ஆடையையுந்தந்தீர்களே. வியா தியிலுஞ் சிறையினு நம்மைச் சந்தித்தீர்க ளே. ஆகையா லெம்பிதாவினு லாசீர்வதிக் கப்பட்டவர்களே! உலகாதிமுதல் உங்களு க்கு ஏற்படுத்தப்பட்ட விராச்சியத்தைச் சுதந்தரிக்கவாருங்களென்பார். பின்னு மி ரப்போர்க்குத் தர்மஞ்செய்யாதவர்களை நோக்கி நாம்பசிதாகம் இல்லில்லாமை நி ருவாணம் வியாதி சிறையாயிருக்கக் கண் டிருந்து மோருதவியுஞ்செய்யாமல் விட் டீர்களே.ஆதலால்சபிக்கப்பட்டவர்களே! பிசாசுக்கு மதின் தூதர்களுக்கும் ஏற்படு த்தப்பட்ட நித்திய அக்கினியில் விழப் போங்களென்பார். அப்படியேவேதத்தி லெழுதியிருக்கின்றது. உனக்குக் கிடைக் குங்கதி யந்த ஆசீர்வாதமோ அல்லது இ

ந்தச்சாபமோ அதை நீயிரப்போரைநட
த்தும்வகையா லறிந்துகொள்.

௩. தர்மத்தால் வருகிறபலன் தப்பாத
துமிகுதியுமாமே. தம்மைப்பற்றிக் கொ
டுக்கப்பட்ட வொருகலையந்தண்ணீருக்கு
முதலாயிப் பலனில்லாமற் போகாதென்
று சேசுநாதர்நிச்சயித்தார். தர்மத்துக்குக்
கொடுக்கிறவன்கர்த்தரிடத்தில் வட்டிக்கு
க்கொடுக்கிறானென்பதும் வேதவாக்கிய
மாமே. அவ ரொருகாலு மோசம்போக்
கவுமாட்டார். பலனோடேதிரும்பக் கொ
டுக்காமல் விடவுமாட்டார். ஆதலால் நீதர்
மஞ்செய்வதா லுன்ஞஸ்திகுறையுமென்
றுபயப்படவிடமில்லை சூது குடி விபசா
ரமநேகசமுசாரங்களைத் தரித்திரத்துக்கு
ள்ளாக்கி யழித்துப்போட்டது. தர்மமோ
வெனில் செல்வபாக்கியத்தை மிகுவித்து
ஸ்திரப்படுத்துகிறதொழியமற்றப்படிய
ல்ல. குடியானவன் சம்பாதிக்கவிதைக்கி
றான். எவ்வளவுவிதைக்கிறானோ வவ்வளவு
ம பிரயோசனமடைகிறான். தர்மத்தின்
முறையதுவே. கொஞ்சமாகவிதைக்கிற

வன் கொஞ்சமாகவறுப்பான். பரிபூரண
மாகவிதைக்கிறவன் பரிபூரணமாகவேயறு
றுப்பானென்று அர்ச்.-சின்னப்பர் தர்ம
த்தைக்குறித்தெழுதினர். மேலும் கொடு
ங்கள், உங்களுக்குங்கொடுக்கப்படும்; அ
முக்கிக்குலுக்கிச் சொரிகிறநல்லளவை யு
ங்கள்மடியிலேபோடுவார்கள்; நீங்கள் எந்
தவளவாக அளப்பீர்களோ வவ்வளவாக
வே யுங்களுக்குமளக்கப்படுமென்று கர்த்
தர்தாமே திருவுளம்பற்றினர். இப்படியி
ருக்க இவ்வுலகத்திலு மறுலோகத்திலுஞ்
சர்வேசுரனுடைய மிகுதியான கிருபை
யையு மெய்ப்பாக்கியத்தையு மடைவதற்
குத் தர்மமேவழியாம்.

பின்னுந் தர்மமானது பாவத்துக்குத்தரிப்பும்பரிகா
ரமுமாகும். தண்ணீர்நெருப்பையவிக்கிறதுபோலேத
ர்மம் பாவத்தைத்தடுக்குமென்றுவேதத்திற்சொல்லி
யிருக்கின்றது. உங்களுக்குமீதியாயிருக்கிறதைத் தர்
மமாகத்தாருங்கள்; அப்போதுங்களிற்சகலமும்பரிசு
த்தமாமென்று கர்த்தர்திருவுளம்பற்றினர். தர்மஞ்ச
கலபாவத்தினின்றும் நித்தியமரணத்தினின்று மீட்
டுக்கொண்டு ஆத்துமத்தைப் பாதாளவிருளி லமிழ்ந்
தவிடாதென்று தோபியாவென்கிறவர் தேவவாக்கிய
மாகத் தம்முடையமகனுக்குவசனித்தார். அர்ச்.-கிறி
சொஸ்தோம்அருளப்பரென்கிறவேதபாரகரோவெனி

விரப்போர்மன்றாட்டி னுதவியில்லாம லீடேறமாட்டா ர்கள். அவர்கள்தேவதீர்வையி லுங்களுக்காகப்பரிந்து பேசினா லுங்களுக்கீடேற்றமே நிச்சயம். ஆனாலவர்க ளுங்களுக் கெதிராளிகளாய் நின்றால உங்களுக்குநித் தியாக்கினைத்தீர்வை தப்பாதெனவெழுதினார். ஆ தலாற் சேசுநாதரேவிளம்படியே நித்தியவீடுகளிலுன் னை யேற்றுக்கொள்ளுஞ் சினேகிதரைத் தர்மத்தாற் சம்பாதிப்பாயாக. ஆனாலிதுவரைக்கும் பிச்சைக்கா ரர்மட்டிலெப்படி நடந்தாயோ, அவர்களுக்குனாலி யன்றமட்டும் உதவிசெய்தாயோ, இரக்கமில்லாதிரு ந்தாயோவென்று யோசித்துக்கொள். அவர்களெவ்வ ளவு தரித்திரமாயிருந்தாலுஞ் சர்வேசுரனா லுண்டா க்கப்பட்டு அவருடைய விலக்ஷணசாயலுள்ளவர்க ளுமாய்ச் சேசுநாதருடைய திருவிரத்தத்தா லிரட்சி க்கப்பட்டவர்களுமாயிருக்கிறார்களல்லவோ? அவர்களு ன்னைப்பார்க்கிலு மவருக்குப் பிரியமாய்நடந்து அவ ருக்குநேசப்பிள்ளைகளா யிருக்கிறார்களாக்கும். அவ ரைப்பற்றியாவது அவர்களுக்குத் தயவுசெய்யவேண் டாமோ? இவ்வியகர்த்தரவர்களுக்காகத் தமதுதிருவி ரத்தத்தையுந்தந்திருக்க நீயோரற்பவுதவியுஞ்செய் யாதிருக்கலாமோ! தர்மஞ்செய்ய வெனக்கவகாச மில்லையென்னாதே. கொடுப்பதற்கவகாசமானதுஉதா ரமனமுள்ளவனுக்கெப்போதுமுண்டு, உலோபிக்கொ ருபோதுமில்லையென்று - அர்ச்.-சிங்கராயரெழுதினார். மீளவுந் தர்மஞ்செய்ய வுலகசலாக்கியமுதலிய ஆசா பாசங்களை யநுசரிக்கிறவனுக் கொருபோதுமீதியிரா து. அப்படிப்பட்டவனை ஐசுவரியத்திலுந் தரித்திர னென்னத்தகும். தன்துராசையடக்கி வீண்செலவு செய்யாதவனுக்கோவெனி லெப்போதுமீதியுண்டு. பி ன்னும உன்னவகாசத்துக்குத்தக்கது பிச்சைதரக்க டவாய். பணம ரூபாய் கொடுக்கத்தக்கவர்கள்கொஞ் சக்காசைமாத்திரங் கொடுத்தாற்போதுமோ? தோ

பியாலெஸன்கிற மகாத்துமாவானவர் தம்மகனைநோக்கி யுனக்குமிகுதியுண்டானாலேராளமாய்க்கொடு, கொஞ்சமுண்டானால் கொஞ்சமுஞ் சந்தோஷமாய்க்கொடுக்கப் பிரயாசப்படுவாயாக; அதினால் தரித்திரகாலத்துக்கு நல்லபலனைச் சம்பாதித்துச் சேர்க்கிறயென்றார். தரித்திரர்களுக்குத் தன்னாலியன்றமட்டு நன்மைசெய்தவனுக்குச் சிலவிசை துன்ப நிர்ப்பாக்கியநேரிட்டாலும ஆதாரமில்லாமலும்போகான், அவதியும்படான். அவன் மற்றவர்களுக்குச் செய்துவந்த தயவுஅவனுக்குக்கிடைக்கும், கர்த்தரவனுக்குவிசேஷவுதவியாயிருப்பார் அதைப்பற்றித் தரித்திரனுக்குக்கொடுக்கிறவன் வறுமைக்குள்ளாகான், தரித்திரனைச்சட்டைபண்ணாதவனோவென்றால் வறுமைப்படுவானென்று தேவவாக்கியத்திலுறுதியாய் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையாலிப்போது நீசெல்வமுள்ளவனானாலு மெப்போதுமப்படியே யிருக்குமென்றெண்ணாதே. தரித்திரர்களுக்குதவிசெய்யாவிட்டால் நீயுமொருநாள் தேவநீதிக்கோபத்தால் தரித்திரத்துக்குள்ளாகியுதவியில்லாமலவதிப்படுவாயென்று நினைப்பாயாக. ஆனால் தர்மஞ் சர்வேசுரனுக்குப்பிரியப்படத்தக்கதாகக் கஸ்திப்படாமற சந்தோஷமாய்க் கொடுக்கவேண்டும். சந்தோஷமாய்க்கொடுக்கிறவன் சர்வேசுரனுக்குப்பிரியனென்று அர்ச். சின்னப்பரெழுதினார். அன்றியு மனிதரிடத்திறகீர்த்திதோத்திரம்பெறுவதற்கல்ல, சர்வேசுரனைப்பற்றிமாத்திரமே தர்மஞ்செய்வதுமுறை. மனிதர் முகப்பிரீதியைப்பற்றிச் செய்யப்படுகிறதர்மத்துக்கப் பலனற்றுப்போம். ஆகையால் தர்மஞ்செய்கையி லுன்வலதுகைசெய்கிறதை யுன்னிடதுகை யறியவேண்டாமென்று சேசுநாதர்கற்பித்தார். பின்னுமஉன்சொந்தப்பொருளைக்கொண்டே தர்மஞ்செய்யக்கடவாய். பிறருடைமையுடையவனைச்

சேரவேண்டும். அவனைச்சேரக்கூடாமையாற பிச்
சைக்காரருக்குக் கொடுக்கவேண்டியிருந்தாலும அ
துவுத தரிபபொழியமெய்யான தர்மமல்ல. மேலுமபே
கமுறை யிவ்வுலகததிலே தானே தர்மததுக்குபபலன்
கிடைததாலு மாஸதிமுதலிய இலெளகிகபபலனை ம
டைவதறகல்ல, சர்வேசுரனுக்குப பிரியபபட்டு மோ
க்ஷவிராச்சியததைச் சமபாதிபபதறகுப பிரதான
மாய்த தர்மஞ்செய்யக்கடவாய். இதைபபறறிச் சே
சுநாதர் திருவுளமபறறினதாவது: பூமியில் நீங்களு
களுக்குப பொக்கிஷங்களைக் கூட்டிவைக்கவேண்ட
ம, இவ்விடததில் துருவும் பூச்சியு மதுசளைக்கெடுக்
ம, திருடருங்கன்னமிட்டுததிருடுவார்கள். பரலோக
திலேயுங்களுக்குப பொக்கிஷஙகளைச்சேர்ததுவையு
கள், அங்கேதுருவுமபூச்சியு மதுகளைக் கெடுக்கிறது
ல்லை, திருடர்கன்னமிட்டுத திருடுகிறதுமில்லையெ
றுர். அபபடியேமோக்ஷததிற்றங்களாஸதிகளைச்சே
க்கக்கணக்கில்லாத அர்ச்சியசிஷ்டர்சள் தங்கள்க
ணியாட்சிபொருளெல்லாமவிறறுத தர்மமாகக்கொ
ததுத தாங்களேயிஷ்டமாய்த தரிததிர ராஞர்கள்
அர்ச்.-பவுலீனென்கிற மேற்றிராணியா ரபபடியே
மமுடைய ஆஸதியெல்லாந்தந்தபின்பு சிறைபபட்
வொருவனை மீட்டுக்கொள்ளத தமமைததாமேசிறை
யாக வொப்புக்கொடுததார். விசுவாசமென்கிறகல
ளுல்தரிததிரரிடததிற்சேசுநாதரைநோக்கிறவர்கள்
ருக்காக வெதைததான்செய்யாதிருபபார்கள். அர்ச்
கிறகோரியென்கிற பாபபானவர் சேசுநாதரைபப
றித தரிததிரரெல்லாருக்குந் தர்மஞ்செய்துவருவா
அவருடையதர்மத்துக்குப பலனுகவொருநாள் சே
நாதசுவாமிதாமே பரதேசிவேஷமா யவரிடததில்
ந்துதஙகினுர். ஆதலாலவரெல்லாருக்குந் தர்மஙசெ
டுஙகள். ஏனெனில் தர்மமில்லாம லுஙகளாலனுப்ப

பட்டவன் சேசுநாதராயிருப்பாருக்குமென்று திரு
வுளமபற்றினர். அல்லாமலு மவதிப்படுகிற வொருவ
னையாவதுஉதவியில்லாமற் றள்ளிவிடாதபடிக்கு அவ
சரப்படாதவிருப்பதுபேருக்குக்கொடுத்தாலு நஷ்ட
மில்லை. தர்மமே மட்டில்லாதஞானவின்பத்தை ஆத
துமததிலுண்டாக்கும. தர்மம பிறர்சினேகத்துக்குந்
தேவசினேகததுக்கு மததாட்சியுமுறுதியுமாகும. ஆ
றல் தரித்திரருடைய துன்பததைபபார்தது இரங்கா
தவன் தன்னைபபோலே புறத்தியாரைச் சினேகிக்கிரு
னென்றெப்படி நினைக்கக்கூடும? பிறர்சினேகமில்லா
தவனேவென்றுற் சர்வேசுரனைச் சினேகிக்கிறதுமில்
ல, மோக்ஷததையடையப்போகிறதுமில்லை. இதைநு
ருய்திநினை.

௨௰௩ம். நாள்.

## துர்மாதிரிகையிலுள்ளகேடு.

௧. துர்மாதிரிகை ஞானக்கொலைபாதக
மென்னப்படும். ஏனெனில் விஷமான
து சரீரத்தி னுயிரைககொல்லுமாப்போ
ல துர்மாதிரிகை புறத்தியாரைமயககிப்
பாவத்திலிழுத்து அவர்களுடைய ஆத்து
மத்தைககெடுத்துக கொல்லும். மீளவுந்
தேவசாயலான ஆத்துமமானது மண்ணு
டைய சரீரத்தைப்பார்ககிலுமெவ்வளவுமே

ன்மையோ அவ்வளவு ம்தைககொல்லுகி
ற துர்மாதிரிகையாகிய பாவமான துகொ
லைபாதகத்திலும் மிககொரேமென்னத்த
கும். இதைநன்றாயோசித்தால் எவனாவ
து துர்மாதிரிகையாய் நடக்கக்கூடுமோ ?
புறத்தியாரைத் தன்னைப்போலே சினேகி
க்கவேணுமென்று சர்வேசுரன் கட்டளையி
ட்டதினால் அவனவன் தான்கரையேறுத
ற்கு அகத்தியமாய் ஆசையும் பிரயாசமு
ம் படவேண்டியிருக்கிறதுபோலே புற
த்தியாரீடேற்றத்துக்கு மாசையுட னுத
வியாயிருக்க வேணுமென்று கற்பித்தாப்
போலாயிற்று. சர்வேசுர னவனவனுக்கு
த்தன்தன்புறத்தியாரைக்குறித்துக் கட்ட
ளைகொடுத்தானென்கிற தேவவாக்கிய மி
ந்தக்கடமையைவிசேஷமான பிரகாரமா
க எவுகின்றது. அதற்குவிரோதமாய்த்து
ர்மாதிரிகையைக் காண்பிக்கிறவன் சத்து
ருவாய்ப் புறத்தியாரீடேற்றத்துககுவிக்
கினமாகி யவர்களை நரகத்திலிழுத்துக்கொ
ள்ளுகிறானே. இதைவிடக்கொடியவஞ்ச
னைத்துரோகமுண்டோ ?

உ. துர்மாதிரிகையானது சத்தியவே
த்தின் விருத்திநன்மைக்குவிக்கினமாயி
நக்கிறதினலுமிக்கதோஷமுள்ளதாமே.
சுநாதர் தமக்குச்சீஷராக்களாகிறவெல்
ாருக்குங்கற்பித்ததாவது: நீங்களுலகத்
துக்கொளியாயிருக்கிறீர்கள். மனிதருங்க
ர் நற்கிரியைகளைக்கண்டு பரமண்டலங்க
ளிலேயிருக்கிற வுங்கள்பிதாவைத் துதிக்
கும்படிக் கவர்கள்முன்பாக வுங்களொளி
பிரகாசிக்கக்கடவதென்றுகட்டளையிட்டா
ர். எக்காலத்திலு மெத்தேசங்களிலுங்கார
ண சற்குருக்களு நல்லகிறீஸ்துவர்களுங்கா
ண்பித்த சுகிர்தமாதிரிகையானது அக்கி
யானிகளுக்குச் சத்தியத்தைத்தெளிவித்
து அவர்களைக்கிறீஸ்துவேதததிற்றிருப்ப
விசேஷவெததனமாயிற்று. அப்படிகிறீ
ஸ்துவர்களெல்லாரு மிந்நாட்டிலுந் தக்க
பததியோடு புண்ணியநெறியில் நடப்
பார்களேயாகில்கொஞ்சததுககுள்ளேய
ககியானவிருளெல்லா நீங்கிச் சததியவே
தமெங்கும்பரம்புமென்பது நிச்சயம்.
ஆனல் அககியானிகள்முதலிய புறச்சமய

ததார் கிறீஸ்துவர்களிடத்தில் துர்மாகிரி கையையுஞ் சத்தியவேதத்துக்கு விரோத மான நடத்தைகளையுங் கண்டால் துவேச த்திய நெறியி லவர்கள் திரும்புதற்கு விக்கி னமாகி யவர்களைத்தங்கள் துர்மதங்களி லு றுதிப்படுத்தும். இப்படியே அக்கியானி கள் நடுவிற் சத்தியவேதத்துக்குச் சரியா ய் நடவாத கிறீஸ்துவன் தன் துர்மாகிரிகை யினுற் சனங்களினீடேற்றத்துக்கு விக்கி னமுமாய்ச் சத்தியவேதத்துக் கீனமுமா ய்த்திருச்சபைக்கவமானமுமாய்ச் சர்வே சுரன்பேரில் தூஷணநிந்தைசொல்லுதற் குக்காரணமுமாயிருக்கிறதினு லவருக்கெ வ்வளவோவாஏற்காதவனுய்ப்போகிருன். சர் வேசுரன் அப்படிப்பட்டவர்களைக் கண் டித்து, உங்களைப்பற்றி நமது நாமஞ்ச னங்களுக்குள்ளே தூஷிணிக்கப்படடிரு க்கின்றதென்று முறைப்பாடாகத் திருவு ளம்பற்றினுர். ஆதலாவிப்படிப்பட்ட பா வத்துரோகத்துக்கு மிகவும் பயங்கரத்தே வபழிவருமென்பதற்குச் சந்தேகமில்லை. தாவீதென்கிறவிராசா தான்செய்தபாவத்

துக்காக மனஸ்தாபப்பட்டுக் கேட்டபடி யே கர்த்தர்பொறுத்தலைத்தந்தபோதிலு மந்தப்பாவம் வேதவிரோதிகள் தம்மை த்தூஷிக்கக்காரணமானதின லாக்கினையி ல்லாதிருக்கலாகாதென்று சிலவாக்கினையி ட்டார். சர்வேசுரன் தமக்குப்பிரியமாயிரு ந்த இப்படிப்பட்டதீர்க்கதரிசியை ஒரு பாவத்தைப்பற்றித் தண்டித்திருக்க அக் கியானிகளுக்குத் துர்மாதிரிகையாய் நட க்கிறபாவிகளுக்கெத்தனையோவாக்கினை யிடப்போகிறார். இதைநன்றாய்நினை.

௩. துர்மாதிரிகைகாண்பிக்கிறவனுக்கு வருகிறகேடு மாக்கினையுமிகுதியாம். சே சுநாதரிதைக்குறித்துத் திருவுளம்பற்றி னபயங்கரமானவசனமாவது: நமதுபே ரில்விசுவாசமாயிருக்கிறவிந்தச்சிறியாரி லொருவனுக்குத் துர்மாதிரிகையாயிருப் பவனெவனே வவன்கழுத்தில் ஒரு எந்தி ரக்கல்லைக்கட்டி யவனைச்சமுத்திரபாதா ளத்திலமிழ்த்தினலவனுக்குத்தாவிளை. து ர்மாதிரிகையின லுலகத்துக்கையோ கே டாம்! துர்மாதிரிகை வருவதகத்தியம். ஆ

இலுந் துர்மாதிரிகையெவனாலேவருமோ
அந்தமனிதனுக்கே யையோ கேடாமெ
ன்றார். நீபுறத்தியாருக்குத் துர்மாதிரிகை
யாகினுன்னாலெத்தனைபாவங்கள்வருமோ
வத்தனைக்குங் குற்றவாளியாய்க் கடினதீர்
வைகளும் வேதனைகளுக்கு முள்ளாவாய்.
சேசுநாதர்தம்முடைய திருவிரத்தத்தினு
லேயிரட்சித்தஆத்துமாக்களை நீகெடுத்து
நரகத்திலேவிழச்செய்தா லுனக்கவரிடத்
திலெப்படிகிருபைகிடைக்கக்கூடும்? ஆத்
துமத்துககாத்துமத்தைக்குற்றவாளியுத்த
ரிப்பானென்று வேதத்திற்சொல்லியிருக்
கிறபடியே நீயுன் துர்மாதிரிகையால்யா
தொருவனை நரகத்திலேவிழச்செய்தா லு
ன்னாத்துமமே யதுக் குத்தரவாதமாகும்.
அந்தப்பாவத்துக்குத் தபசுபண்ணி யுன்
னாலானமட்டும் உன் துர்மாதிரிகையையு
மிதினால்வந்ததின்மைகளையும் பரிகாரஞ்
செய்யாவிட்டால் நீயும் நரகபாதாளத்தி
ல்விழவேண்டியிருக்கும். அப்போதுன் து
ர்மாதிரிகையால் நரகாக்கினிக்குள்ளான
வர்க ளுன்னைப்பழிவாங்கப் பசாசுகளோ

டைகூடி நித்தியமாயுன்னை வற்மித்துச்சு
பித்துத்தூஷித்துத்தங்களாலியன்றமட்டு
டிடித்துதைத்துச் சகலவிதத்திலும்வாதி
பபார்கள். மீளவு முன்னாலெத்தனைபேர்
நரகத்திலேவிழுந்திருப்பார்களோ வத்த
னைக்குநரகத்தி லுன்வேதனைபெருகி யதி
னை நரக முனக்குக் கிடைத்தாற்போலா
தும். இதைநன்றாய்நினை

மனுஷன் சுபாவமாய் மற்றவர்களுடைய நடக்கை
யைக்கண்டுபாவிக்கிறான். மேலும பாவததுக்குச்சார்
பாயிருக்கிறதினால் நல்லமாதிரிகையை யநுசரிக்கிற
தைவிடத் துர்மாதிரிகையையநுசரிப்பான். ஆதலா
ல் தன் துர்நடக்கையினால்தின்மையைக்கற்பிததவன்
தினால்வருகிற சகலபாவங்களுக்குங் காரணமாகிறான்.
ஆனால் துர்மாதிரிகையினாலே யதுகிறதின்மைகளுக்கு
கணக்குமுடிவுமுண்டோ! அதினாலே விசேஷமா
ய்எண்ணிலடங்காதபேர்கள் கெட்டுநரகததிலேவிழு
கிறார்கள். நரகத்தைததிறந்து அதிலேவாதைபபடுகி
றவர்களுடையபுலமபுதல்களையு முறைபபாடுகளையுங்
கேட்கக்கூடுமாகி லின்னானின்னாலே யிந்தநிர்ப்பா
க்கியத்துக் குள்ளானேன், இன்னானின்னான் துர்மாதிரி
கையினாலேகெட்டேனென்றுகொஞ்சப்பேர்தவிர மற்
றெல்லாருஞ்சொல்லுகிறதாகத் தெரியவரும். ஆ! பிரி
யமுள்ளவனே, சேசுநாதர் தமது பிராணனைவிடநேசி
த்த ஆத்துமாக்களை நீயுங்கெடுத்து நரகத்திலேவிழத்
தள்ளலாமோ? பரமகர்த்தரிப்படிப்பட்ட யாதகத்தி
ன்பேரில் நியாயங்கேட்கும்போது நீயென்னசொல்ல
க்கூடும்? அவராவது அந்த ஆத்துமாக்களாவ துனக்

குச்செய்திருந்த தின்மையென்ன? அதுகளைக்கெடுக்கவேண்டுமென்றிராமல் சந்தோஷவிளையாட்டுக்குச் சொன்னசிற்றின்பப்பேச்சுக்களுஞ் செய்தபரியாசமுமதுகளுக்கு விஷமானதென்பாயோ? அதுதான்மகாதின்மையென்றறிக. பரியாசத்துக்காகிலும் ஓராத்துமத்தைக்கெடுத்துக்கொல்லலாமோ? சர்ப்பஞ் சீறியுந்து கடித்தாலு முகர்ந்துவிளையாடினாற்போலே கடித்தாலு மதின்விஷங்கொடியதுஞ்சாவுக்கேதுவானதுமாமல்லோ. மேலு மெதிர்த்துவருகிற பகையாளியைவென்றும் விலகியுந் தன்னைக்காப்பதெளிது. ஆனால் நேசத்தைக்காட்டி விளையாடினாற்போலக் கத்தியாற்குத்தியுருவும் வஞ்சகனுக்குத்தப்பித்துக்கொள்வதரிது. ஆதலால் தகாதநேசதினாலே வருகிறபாவமானபேச்சுப பரியாசமுதலிய துர்மாதிரிகைகள் பிரசித்தபகையைவிடக் கெட்டமோசமுள்ளதாமே. வாலிபனொருவன்வேண்டியசகலசுகிர்தசற்குணங்களினாலலங்கரிக்கப்பட்டிருந்தான். ஆனால்வாலர்களுக்கெச்சரிக்கையில்லாத்துபோல அவனு மெச்சரிக்கைத்தப்பியொருதுஷ்டனோடே சினேகம்பண்ணினான். இவன்வனுடைய இளமையான இருதயத்திலெல்லாத்துராசாபாசங்க ளெனகிறவக்கினியைமூட்டிச் சகலதுர்மார்க்கங்களிலு மவனையிழுததுக்கொண்டான். அந்தநிர்பபாக்கியவாலிபனுடைய சினேகிதரிதைக்கண்டு துயரபபட்டு எததனைபுததிமதிசொன்னாலு மவனகேட்டவனல்ல. அபபோது தேவகோப மவன்மேல்சாரவே ஓரிராத்திரி திடீரென் றுவிழித்துத் திகில்டைந்து பயங்கரமான சத்தத்தோ டலறிக்கூவினான். அவனையமர்த்தவுமாறுதல்வருவிக்கவு மநேகர்பிரயாசப்பட்டுச்சர்வேசுரனிடத்தில் திரும்பிக் கிருபைகேட்கச்சொல்லியும் வியர்த்தமாச்சுது. அவன்மூகைக்குரியவொலியோடே ஐயோவென்னைப் பாவத்தி விழுத்தவனுக்கு

கேடுவருக. என்னைவிழுங்க நரகம்வாய்திறக்கிறதை
காண்கிறேனென்று பயங்கரமான அவநம்பிக்கை
யாடே செத்தான். துர்மாதிரிகையித்தனைகேடுள்ள
ாயிருக்கையி லதற்கெவ்வளவோ அஞ்சவேண்டும்.
நற்றமில்லாதகாரியமாவது புறத்தியாரிடறி யாதோ
பாவத்தில் விழுவதற்குக்காரணமானு லதைவிலகும்
டி அர்ச்.-சின்னப்பர் மிகவுமேவிப்புறத்தியார்க்கிட
லுண்டாக்கும்பொசிப்பைத் தாமெனறென்றைக்கு
பொசிப்பதில்லையென்றதாக நிச்சயித்தார். மீளவு
எல்லாருந் தங்கள் புறத்தியாருக்கு நன்மாதிரிகை
ாண்பிக்கக்கடமையுள்ளவர்களானுலும்ந்தக்கடமை
ாய்தகப்பன்மார்க ளெசமான்கள்முதலியபெரியோ
கள்மேலே விசேஷமாய்நிற்கும். தாய்தகப்பன்மா
ா! நீங்க ளுங்கள்பிள்ளைகளுக்குத் துர்மாதிரிகையா
ிருப்பீர்களேயாகி லவர்களையொருகாலும்பெறுதிருந்
ாலேதாவிளை. அவர்களை நித்தியநரகத்திலே விழச்
சய்வதற்கோபெற்றீர்கள். அப்படியே நீங்கள்வர்க
நக்குச்சத்துருக்களாகலாமோ? தங்களுக்குப்பேரி
ாபாக்கியத்தைப்போக்கடித்துத் தங்களைநரகத்தி
விழப்பண்ணினீர்களென்று நித்தியமா யவர்கள் மு
றையிடும்போது நீங்களென்னபிரதியுத்தரஞ்சொல்
க்கூடும்? இப்போது நீங்கள்வர்களுக்கென்னென்
ாபுத்திசொன்னுலு முங்கள் நடத்தை யவர்களுக்குத்
துர்மாதிரிகையானுல் உங்கள்புத்தியைக்கேளாம லுங்
ள்நடத்தையேயநுசரிப்பார்கள். தகப்பனெப்படி
யா மகனப்படித்தானென்பதுபழமொழியாம். ஆதி
னி தனுடையதலைச்சன் கெட்டவனுனன். அவனு
டையசந்ததியெல்லாமுங்கெட்டதாயிற்று. உங்களா
லுங்கள்பிள்ளைகள்கெட்டால் உங்களால்வர்களும் அவ
களால் நீங்களும் நரகத்தில்விழுந்து மிகவும்வாதை
படுவீர்கள். அப்படிச்சம்பவிக்காதபடிக்குச் செய

ஞ்செய்கிறதிலும் பூசைகாண்கிறதிலும் பாவசங்கீர்த்
தனம்பண்ணி நன்மைவாங்கிறதிலு மிவைமுதலானச
கலகடமைகளிலு மவர்களுக்கு நல்லமாதிரிகையைக்
காண்பித்து உங்கள் நடத்தையில்வர்களுக்குத்துர்மா
திரிகையானபழுது ஓரற்பமுமிராதபடிக் கெச்சரிக்
கையாயிருக்கக்கடவீர்கள். பின்னும் அவனவன் தா
ன்செய்தபாவங்களைப் பரிகாரஞ்செய்வதே கடன்.
ஆகையால் இதைவாசிக்கிற பிரியசகோதரனே, இது
வரைக்குமுன் துர்மாதிரிகையினால் நீவருவித்தபாவமு
தலிய தின்மைகளைப்பரிகரித்துத் தக்கபனஸ்தாபத்
தாற் சர்வேசுரனிடத்திற் பொறுத்தலைப்பெறப் பிர
யாசப்படக்கடவாய் ஆதலாலெத்தனைபேருக்குத் து
ர்மாதிரிகைகாண்பித்தாயென்று யோசித்துக்கொள்.
சிற்றின்பப்பாட்டுக்களினாலுமவேதத்துக்குங்கற்புக்கு
ம்விரோதமானபேச்சுக்களினாலு மாவளாதிமுதலிய து
ர்ப்பாஷைகளினாலும் இலீலைப்பரியாசஞ் சிரிப்புத்தந்
திரமுதலிய எந்தெந்தத்துர்நடத்தையினாலுமுன்னா
லெத்தனைபேருக்குப் பாவமவந்ததென்றுபார்த்துவி
தனப்பட்டுஉன் துர்மாதிரிகையினாலியாதொருவன்கெ
ட்டின்னந்தப்பிதமாய்நடந்தால்வன்சுகிர்தவழியில்
மறுபடிசேரும்படிவருந்துவாயாக. மேலுமெத்தனை
பேருன்னால் நரகத்தில்விழுந்திருப்பார்களோ வேறத்
தனைபேரையுமுன்செபத்தினாலுமவார்த்தைகளினாலு
ஞ்சுகிர்தமாதிரிகைகளினாலும் புண்ணியநெறியில்திரு
ப்பியீடேற்றப்பிரயாசப்படக்கடவாய். இனியொருகா
லுமெவ்விதத்திலாவதுதுர்மாதிரிகைகாண்பியாமலுப
ற்றவர்களுடைய துர்மாதிரிகையைக் கண்டுபாவியாம
லுநல்லோர்களுடைய சுகிர்தநடபடிகளைப் பின்சென்
று நீயும்புறத்தியாருக்குநல்லமாதிரிகையாயிருப்பாயா
க. நல்லமாதிரிகை யுறுதியானசுகிர்தப்பிரசங்கமாயி
ருக்கிறதன்றியுமோக்ஷத்தில்தற்குவிசேஷப்பலனு மு

ண்டு. உன்சுகிர்தமாதிரிகையினு லெத்தனைபுண்ணிய
வினையுமோ உன்னைப்பின்சென்றெத்தனைபேர்களை
யெறுவார்களோ அத்தனைக்கும் மிகுதியானமோக்ஷ
மபாவனையடைந்து நித்தியபேரின்பத்தை யநுபவி
ப்பாய்.

---

## உயசும். நாள்.

## கஸ்திமுதலியவெல்லாத்திலும் தேவசித்தத்துக்கமைதலின் அவசரம்.

க. தேவசித்தத்துக்குக்கீழ்ப்படிவதும
னுஷனுக்கு முழுதும்கத்தியமானகடமை
பு மிக்கநன்மையும் புண்ணியமுமாமே:
அதெப்படியெனிற்சர்வேசுரன் நம்மையு
ஞ்சகலத்தையு முண்டாக்கிச் சர்வத்துக்கு
ங்கர்த்தராயிருக்கையா லெல்லாத்திலுநா
ம்வருக்குக்கீழ்ப்படிவது கடனல்லோ?
சர்வலோகமு மவருடைய கட்டளைக்கடங்
கி யவர்சித்தத்தின்படியேநடக்கின்றதே.
அற்பனுகியமனிதன்மாத்திர மவர்சித்தத்
துக்கமையாததென்ன? மீளவு மவர்சர்வ

நீதிஞானமுடையவராகையால் நமக்குக் கட்டளையிடுவதெல்லா நீதியுநியாயமுமா யிருக்கிறதொழியமற்றப்படியல்ல. அவர் நமக்கன்புள்ள தகப்பனுமாகையால்நாம வருக்கேற்கநடப்போமேயாகி லவருடை யசித்தத்தினால்நமக்குவருவதெல்லா நமக் குநன்மையொழியத் தின்மையாயிராது. மேலுந் தகப்பன் பிள்ளையைத்தண்டித் தாலு மவன் நன்மைக்காக அன்பினால்த ண்டிப்பதுபோலே சர்வேசுரன் தமக்கு ப்பிள்ளைகளாயிருப்பவர்களுக்குச் செய்யு ந்தண்டனையும் அன்பினலவர்கள்நன்மை யாக இடுவாரொன்கிறதினலதுவுமுபகார மாமே. பின்னுந் தேவசித்தஞ் சகலநன் மைக்கும் பிரமாணமாகையா லதற்குக்கீ ழ்ப்படிவதே யெல்லாப்புண்ணியத்துக்கு நேரானவழியாம். முழுதுந் தேவதிருவு ளத்துக்கேற்கநடக்கிறதிலேபுண்ணியசா ங்கோபாங்க மடங்கியிருக்கின்றது. ஆத லாலதையெல்லாத்திலுஞ் சுமுத்திரையா யநுசரிக்கிறவன் தப்பாமல் அர்ச்சியசிஷ் டனுவான். ஆனல் தேவசித்தத்துக்குவி

ோதமாயென்னென்ன நற்கிருத்தியஞ்
செய்தாலும் புண்ணியமுமாயிராது, பல
றுமடையாது. அதற்குத் திருஷ்டாந்தம்
வேண்டுமாகில் மிகுந்தகடன்பட்டவன் அ
துகளைத்தீர்க்காமல் மிகுதியாய்த் தர்மஞ்
செய்தாலுந் தர்மமாகாமல் அநீதமாயிரு
ப்பதல்லோ ? ஆதலா லவனவன் தன்தன்
ந்தஸ்தில் சர்வேசுரனுடையசித்தந் தன
க்குக்கற்பிக்கிறதெதுவோ வதுவேபிரதா
மாய்த்தப்பாமல் நுசரிக்கக்கடவான்.

௨. துன்பவியாதிகளி லடங்கிய நன்
மைகள்மிகுதியாம். சரீரவியாதியைத்தீர்
த்துச் சாவைநீக்கும்விழ்தங் கசப்பானலும்
ல்லதென்பார்கள்ல்லோ ? இதைவிட ஆ
த்துமவியாதியாகியபாவத்துககவிழ்தமா
நித்தியசாவைநீககிப் பேரின்பபாககி
த்தைப்பெறுவிககத்தகுந் துன்பவியா
திகளை நன்மையென்றெண்ணவேண்டிய
தல்லோ ? அதுகளா லககிரமமு நிர்ப்பா
கியமு நிறைந்த இவ்வுலகத்தின்மேல்
வெறுப்புத் தேவபத்தியயம் பாவத்து
வேசம் தேவத்துரோகத்தின்மேல் துக்க

மனஸ்தாப மெல்லாரோடுஞ் சமாதானம் பொறுமைமுதலியபுண்ணியங்களெல்லாம் விளையும். அதுகளை நன்றாய்ப்பொறுப்பதால் முன்செய்தபாவமும் பரிகாரமாகும். பாவமானது இவ்வுலகத்திலாகிலுமறுலோகத்திலாகிலுந்தண்டிக்கப்படவேணும். ஆனா லுத்தரிக்கிறஸ்தலத்திலாவது அக்கினியில்வேகிறதைவிட இவ்வுலகிலெந்தக்கஸ்தி துன்பவியாதிகளையும் நபவிப்பதுபாககியமென்னததகும்.ஏனெனில் அதிலே யொருநாளளவாகிலும் வெந்துகிடககிறதைவிட இவ்வுலகத்திலுள்ள சகலகஸ்திநோவுகொடூரங்களையும் பொறுப்பதிலேசென்றுவேதபாரகர்கள் நிச்சயித்தார்கள். உன்னாற்கூடுமாகில் நீபிறந்தநாள்முதல் செய்தகுற்றமெல்லாமெண்ணிப்பார். அநேகமுறை நரகத்துககேபாத்திரவானாயல்லோ? நீ செய்ததற்கொத்த பாவங்களினாலநேகர்நரகத்துககுள்ளானார்களென்பதற்குச்சந்தேகமில்லை. அவர்கள்திலேபடுகிறநித்தியவேதனைகளை யோசித்தால் நீபடுகிறகஸ்தியின்ம்பரி லெப்ப

டிமுறையிடக்கூடும்? நீ நரகத்திலாவது உ
த்தரிக்கிறஸ்தலத்திலாவது விழாதபடிக்கு
ச்சர்வேசுரனிவ்வுலகத்தி லுன்னைத்தண்டி
க்கிறது கிருபையல்லோ? உனக்குவேண்
டிய பரம அவிழ்தமுட்கொள்ளாமலெப்
படிச்சுத்தமான சீவியத்தையடைவாய்?உ
லையிற்பொன்வெள்ளி சுத்தமாகிறப்போ
லே மனுஷன் துன்பவியாதிகளென்கிறவு
லையிற்சுத்தமாகிப் பரலோகமகிமைப்பா
க்கியத்துக்குப் பாத்திரவா னுகவேண்டு
மே. இதைநன்றாய் நினை.

௩. சேசுநாதசுவாமி நமக்காகவநுபவி
த்தகஸ்திநிர்ப்பந்தங்களினினைவினால் நம்
முடைய துன்பகஸ்தியாதிகளில் நமக்கு
ப்பொறுமையுண்டாம். அதெப்படியெ
னில்மாசில்லாதகர்த்தர் பாவிகளையிரட்சிக்க
க்ச் சொல்லிலடங்காத கொடூரக்கஸ்திவே
தனைகளையெல்லாம் நுபவித்திருக்கையிற்
பாவிக ளவருடையதிருவிரத்தத்தின் பல
னையடைவதற்குஅவரோடேகூடக்கொஞ்
சமாவது கஸ்திப்படுவதுநியாயமல்லோ?
பின்னு நீயென்னென்ன கஸ்திதுன்பப்

பட்டாலுந்திவ்வியகர்த்தா நுபவித்த கொ ரேவாதைகளுககு நிகராமோ? பரிச்சே தமாகாதே. உன்கஸ்தியவருடைய நிர்ப் பந்தங்களுககுமுன்பாகச் சமுத்திரத்துக குமுன் ஞெருதுளிதண்ணீர்போலாமொ ழியமற்றப்படியல்ல. அவருடையதிரு ஆ த்துமந்துககசாகரத்தி லமிழ்ந்த அவர்ப ட்டதுக்கமிகுதியா லவருடையதிருச்சரீர மெல்லா மிரத்தவேர்வையாய்வேர்த்தது. அவர்பாதந்துவககிச் சிரசுபரியந்தம் சர் வாங்கத்திலு நிஷ்டூரமாயடிபட்டு எக்கா யமானூர். முண்முடியாற் சொல்லிலடங் காத வாதையும்பட்டு எல்லாராலுங்கைவி டவுந் திரளானசனங்களாலவமானமாய்த் தூஷிணிககவு நிந்திககவும்பட்டார். மூன் ருணிகளால் சிலுவைமரத்திற்றெருங்கிமரி த்தாரோ. இதற்குநிகரான நிர்ப்பந்தமுண் டோ? இதெல்லாம்வர்முறையிடவாய்திற வாம லுனக்காகப் பொறுமையோடநுப வித்திருகக நீ யுன்கஸ்தி துன்பங்களிலெப் படிமுறையிடககூடும்?

சேசுநாதர்தமதுமகிமையிராச்சியத்திற்பிரவேசிப் பதற்குபபாடுபட அவசரமாயிருந்ததென்று வேதத திற்சொல்லியிருக்கின்றது. அபபடியிருக்க நீகஸதியப

ாமலெப்படிக்கரையேறுவாய்? மோக்ஷத்தையடை
வதற்குச் சேசுநாதருடைய திருச்சாயலுக்கொத்த
வராயிருக்கவேண்டுமென்பது வேதகட்டளையாமே.
அந்தத்திவ்விய தரு பொறுமைதைரியத்துடனே பா
ரமானசிலுவைசுமந்திருக்கத் தேவசித்தமுனக்குக்க
ட்டளையிடுகிற சிலுவையை நீபொறுமையோடே சும
க்காம லவருடையசாயலாகக்கூடுமோ? அவர்தான்ந
மக்குத்தலை, அவருக்குநாமுறுப்புக்களாகவேண்டும்.
ஆனால் தலைமுண்முடிசூட்டப்பட்டிருக்க உறுப்புக்க
ள் மலர்களையணிந்து சுகத்தையநுபவிக்கலாமோ? அ
வருன்னைப்பற்றியன்பினாலளவில்லாதகஸ்திகளைப்பொ
றுத்ததுபோலே யவரைப்பற்றி யன்பினாலுன்கஸ்திக
ளைப்பொறுப்பாயாகி லவருக்குப்பிரியப்படுவாய். அ
துகளைச்சகிக்க அவருனக்குத்துணையு முதவியுமாயிரு
ப்பார். தமதுபுண்ணியபலன்களை யுனக்களித்துத்த
மதுபேரின்பவிராச்சியத்துக் குன்னைப்பங்காளியாக
ச் செய்தருளுவார். இதெல்லா நன்றாயோசித்தா லுன்
கஸ்தி யுனக்கெவ்வளவோ வின்பமாகும். இலௌகீக
செல்வசுகத்தால் மனிதர்கள்கெட்டுப்போனார்கள். க
ஸ்திதுன்பத்தா லுத்தரித்துமறுபடிசுத்தமாகி யீடே
றவேண்டும். ஆதலால் மோக்ஷத்துக்கேறும்வழி மு
ள்ளு முறடும் நிறைந்ததென்னப்பட்டிருக்கின்றது.
சேசுநாதர்தாமே யதிலேமுன்னடக்கத்திருவுளமானா
ர். நீயவர்காண்பித்த திருப்பாதையில் நடவாதிருக்க
க்கூடுமோ? அதிலுள்ள முள்ளுக்களுக்கஞ்சிப் பின்வா
ங்கினாயோ நித்தியநரகவேதனைக் கொடூரங்களுக்குள்
ளாவாய். அந்தத்திருப்பாதையில் பத்தி பொறுமை
தைரியத்துடனே நடந்தாயோ நீபடு மற்பகஸ்திகளி
ன்பலனாக நித்தியபேரின்பபாக்கியமேகிடைக்கும். மு
ள்ளில்லா உரோசாப்புஷ்ப மூலகத்திற் கிடைப்பதரு
மை, அந்தமுள்ளுக்கஞ்சாமல் சற்றுநேரத்தில்வாடு

ம்புஷ்பத்தைப் பறித்துக்கொள்வார்களே. முடிவில்
லாப்பாக்கியநிறைந்த மோக்ஷவிராச்சியத்தை ய
டைவதற்குமாத்திரம் அவ்வளவு துணியாததென்ன?
ஆனால் கஸ்திதுன்பம்நுபவியாதபடிக்கு எங்கேபோ
வாய்? எத்தேசத்திலு மெவ்விடத்திலுமெக்குலத்திலு
மெவ்வந்தஸதிலுங் கஸதிதுயரங்களுண்டு. செங்கோ
லைக்கைக்கொண்ட இராசாக்களுக்குந் திரவியநிறை
ந்த செல்வர்களுக்குங் குறைவின்றிச் சஞ்சலங்களு
ண்டே. சர்வேசுரனுதிமனிதனுடைய பாவத்துக்குச்
சாபமாகப் பூமியுனக்குமுள்ளுமுறடுகளை விளைக்குமெ
ன்றுவசனித்தநாள்முதலெப்பக்கத்திலுமனுஷனுக்கு
க்கஸ்திதுன்பங்களென்கிறமுள்ளுக்கள் பலுகினது. ஒ
ன்றைவிலைகப்பின்வாங்கினால் வேறொன்றி லகப்படுவா
ய். சர்வேசுரனுன்பாவத்துக்காக்கினையாகவும்பரிகார
மாகவு மிரட்சிப்பாகவு முனக்குக்கட்டளையிட்ட கஸ்
திகளைப்பொறுமையோடேயநுபவிப்பதேகாரியம். அ
வர்மேல் சலித்துமுறையிடுவதினா லுன் கஸ்திதீருமோ?
அதினால்பரிச்சேதந்தீராதே. அவரைத்தூஷித்துநிந்
தித்தா லிரட்டிப்பான வாக்கினைவர வெத்தனமாயிரு
ப்பதொழிய மற்றப்படியல்ல். ஆதலால் பொறுமை
தப்பி யுன்னையுண்டாக்கின கர்த்தர்மேலு முனக்கடு
த்த மனிதர்மேலும் பொறுமை கோபங்கொள்வதினா
லுன்கஸ்திதுன்பதுயர மதிகரிக்கச்செய்வதுமன்றி யு
னக்குவரவிருந்தபலனையு மிழப்பாய். அப்படிச்செய்
யாம லுனக்கென்னென்ன கஸ்தி துன்ப வியாதிவந்தா
லு மது தேவசித்தத்தினால் வருகின்றமையா லதுவே
யுனக்கு நன்மைப்பாக்கியமென்று நன்றாயோசித்துச்
சற்றாகிலு முறையிடாமற் பொறுமையுடனேயுஞ் சந்
தோஷத்துடனேயு மதையநுபவிக்கக்கடவாய். வேத
வித்தியாபாரகர் நிச்சயித்தபடியேபொறுமையால்க
ஸ்திதுன்பங்கள்குறைந்துமாறிநன்மையாகும். பொறு
மையெல்லாச்சஞ்சலத்தையும்ஆற்றும். எல்லாத்துன்

பங்களுக்கு ம்விழ் தமதுவே. பொறுமைதைரியத்தோ
டே தன்சிலுவையைச்சுமந்தா லதின்பாரந்தோன்று
து. சலிப்புக்கோப சஞ்சலத்துக்கிடங்கொடுத்தாலோ
வெனி லற்பசிலுவையையுந் தாங்கமாட்டாமல் அதி
ன்கீழே வருத்தத்தோடே கிடக்கவேண்டியிருக்கும்.
பொறுமை சஞ்சலச்சலிப்பினு லோரற்ப துன்பமுத
லாய்ப் புத்திக்குப்பெரிதாய்த்தோன்றித் தலைமேலொ
ருமலைபோலத் தங்கிவருத்தும். மீளவுஞ் செபமான
துகஸ்திதுன்பத்திலாறுதலும்தேவ அநுக்கிரகத்தைப்
பெறுவதற்குவழியுமாமே. இதற்குச் சேசுநாதருனக்கு
க் காண்பித்ததிவ்வியமாதிரிகையைப்பார். பூங்காவனத்
தில்வர்பலியாவதற்காயத்தஞ்செய்கையில் மனிதரக்
கிரமப்பாவங்களையுந் தாமநுபவிக்கப்போகிறநிந்தை
யவமான நிர்ப்பந்தங்களையு நன்றிகெட்ட திரளான
பாவிகள் நரகத்தில்விழுவதையும்பார்த்துச் சலித்து
த் தயங்கித் துக்கசாகரத்தில்மிழ்ந்தி மரணஅவஸ்தை
ப்பட்டார். அப்போது தம்முடைய தேவபிதாவைநோ
க்கிப் பிதாவே கூடுமாகி விந்தப்பாத்திர மென்னைவி
ட்டு நீங்கக்கடவதென்றார். ஆகிலு மென்மனதின்படி
யல்ல உம்முடைய சித்தத்தின்படியே யாகட்டுமென்
று மும்முறைசெபித்தார். ஆதலால் அவருக்கு ஆறுத
ல்சொல்ல வொருசம்மனசானவர் பரலோகத்தினின்
றெழுந்தருளினார். இப்படியே யுன்துன்பக்கஸ்தி வி
யாதிகளில் சர்வேசுரனைப்பத்தியோடேமன்றாடி யது
கள் நீங்கும்படிக்கேட்பதற் குத்தாரமுண்டு. ஆகிலு நீ
தேவசித்தத்தின்படியே யாகட்டுமென்று முழுமனது
டனே சொல்லவுங்கடவாய். அப்படியேபத்தியோடே
கர்த்தரை நம்பி வேண்டிக்கொள்ளுவாயாகில் உனக்
காறுதல்கொடாமல் விடமாட்டார். ஆனாலுனக்குக்க
டின கஸ்திநோக்காடுகளையனுப்பிச் சிலகாலமுன்னை
த் கைவிட்டாற்போலிருந்தாலும் அதினால் தத்தளியா

மல் தேவநம்பிக்கையிலுஞ் செபத்திலு நிலைமையாயி
ருக்கவேண்டும். ஏனெனிற் சர்வேசுரன் தமக்குப் பிரி
யமாயிருக்கிறவர்களின் புண்ணியசம்பாவனை யதிகரிக்
கும்படிக்கு அவர்களைச் சிலவிசை பலவிதமாகச் சோ
திப்பார். அவ்வண்ணமேமகாப்புண்ணியாத்துமாவாயி
ருந்த தோபியாவென்கிறவருக்கு மிக்கதுன்பமாகியவி
ருகண்குருட்டைக் கட்டளையிட்டார். ஆனாலவர்மகா
பொறுமையோடநேககால மதைப்பொறுத்ததைப்
பற்றித்தேவகிருபையால் இரபாயேலென்கிற சம்மன
சானவர் மனுவுருவா யிவரிடத்தில்வந்து அநேகநன்
மைகளோடே பார்வையு மறுபடிகொடுத்து நீசர்வே
சுரனுக்குப் பிரியப்பட்டதினாற் சோதனையாற் பரிட்
சைப்படவேண்டியிருந்ததென்று திருவுளம்பற்றினா
ர். இன்னம்வேறொரு திருஷ்டாந்தம்பார். யோபெ
ன்கிறமகாத்துமாவானவ ரொரோநாளில் தம்முடைய
மந்தை, அடிமை, மக்கள், ஆஸ்திசெல்வமெல்லாமிழ
ந்தபின் சர்வாங்கமும்புண்ணாகிக் கொடூரவறுமைநோ
க்காடுநிர்ப்பந்தங்களை யநுபவிப்பார். அவருடையபெ
ண்சாதியுஞ் சிநேகிதர்களும் பின்னுமவருக்குச் சஞ்ச
லத்துக்குரிய வசனங்களைச்சொல்லுவார்கள். அவரோ
வெனில் ஆண்டவர் தந்தார், ஆண்டவரெடுத்துக்கொ
ண்டார், ஆண்டவருக்குச்சித்தமானபடி யாச்சுது, ஆ
ண்டவருடைய திருநாமத்துக்குத் தோத்திரமாகக்க
டவதென்று மாறுதபொறுமையோடே சொல்வார். க
டைசியாய்ச் சர்வேசுரன் அவருடையநோக்காடுதுன்
பமெல்லாந்தீர்த்து முன்னு விருந்ததைப்பார்க்கிலும்
அதிக சுகசெல்வபாக்கியத்தைத் தந்தருளினார். அப்ப
டியே யுன்கஸ்திகளிலே நீ முறையிடாமலுஞ் சர்வேசு
ரனுக்கேற்காத துரோகஞ்செய்யாமலு மாறுதபொ
றுமையாயிருந்தா லுனக்கு மிகுதியான பலன்கிடைக்
குமென்பதற்குச் சந்தேகமில்லை. அந்தப்பலனைக்கா

த்த ருனக்கிவ்வுலகத்திற் கொடாவிட்டாலு மிதினுல் நீ தத்தளிக்கவும்வேண்டாம். மோக்ஷத்திலுன்சம்பாவனை யதிகமுமட்டில்லாத்துமாயிருக்குமென்கிறதினுலே யிதுவே யுனக்குநலமென்றெண்ணக்கடவாய். வேதசாட்சிக ளிவ்வுலகத்தில் தங்கள்நோக்காடு துன்பங்களுக்குப் பலனைத்தேடாமல் மோக்ஷத்தையடைவதற்காகச சந்தோஷத்துடனேயெத்தனையோ நிர்ப்பந்தங்களுக் குள்ளானர்கள். அர்ச்.-தெரோசம்மாள் கஸ்திநோக்காடுகளைவிரும்பிக் கஸ்திப்பட அல்லது சாகக்கடவேனுக வென்பாள். இதெல்லாமிப்படியிருக்க அர்ச்.-சின்னப்பரெழுதினபடியே அதிசீக்கிரமொழிவதுமா யற்பமுமாயிருக்கிற இவ்வுலகத்தின்கஸ்திகளாற் கனமானவுச்சித நித்தியமகிமை பவிக்குமென்பதினுலே நீ யதுகளைச் சந்தோஷத்துடனே யநுபவித்துப் பேரின்பபாக்கியத்துக்குப் பாத்திரவானுகக்கடவாய்.



உரும்.-நாள்.

## தேவசிநேகக் கடமை.

௧. தேவசிநேகஞ்சகலபுண்ணியங்களுக்கும் அர்சுஞ் சகலகடமைகளுக்கும் பிரதானமுமாமே. மனிதர்சர்வேசுரனைச் சிநேகிப்பதற்குச் சர்வநியாயமு முண்டு. முந்தமுந்த அவர் சகலநன்மைச் சுரூபியாயிருக்கையால் நமதிருதய மவசியமா

யிவரைநாடிச் சினேகிக்கக் கடவது. ஏ
னெனில் நன்மையாயிருக்கிறதெல்லாஞ்
சகலருக்கும்பிரியம். அப்படியிருக்க அள
வற்றநன்மை நமக்கெவ்வளவோபிரியமா
கவேணும். சர்வேசுரனுடைய நன்மைத்
தனத்துக்களவில்லை. அவருடைய திவ்விய
இலட்சணங்கள் மனுஷருக்கெட்டாத
மாட்சிமையுள்ளதுகளாமே. வானங்களி
லொளிர்கிற சோதிக்கிரமச்சிறப்பும் பூ
லோகத்திலுண்டாகிய திரவிய அலங்கார
மும்புண்ணியாத்துமாக்களிலுள்ள சுகிர்த
நற்குணங்களுஞ்சம்மனசுகளிலேதுலங்கு
ம்கிமைவல்லப பிரகாசமும் படைப்புண்
டமற்றச்சகலவஸ்துக்களில்விளங்கும்வடி
விலட்சணமெல்லாமுங் கடவுளாகிய கரு
ணைச்சமுத்திரத்தினின்று புறப்பட்டசில
துளிகளாயிருக்கிறதல்லாதே யவருக்குநி
கராயிராது. அவருக்குமுன்பாக வுலகத்தி
லுள்ள பிரகாசமகிமை யலங்காரவடிவெ
ல்லாமங்கி யவலட்சணமாகத்தானேதோ
ன்றும். அவருடைய நன்மைத்தனத்தை
யுந் திவ்விய இலட்சணங்களையுமறைவின்

திக்கண்டறிகிறவர்கள் அநந்தநேசத்தோ டவனைச்சிநேகித்துப் புகழுகிறார்கள். மீளவும் அவர் சகலருக்கு நன்மைசெய்யவிரும்புகிறார் தம்முடையபகையாளிகளைமுதலாய் ஆச்சரியமான தயவோடேபொறுத்து நடத்துகிறார். அன்பினால்தம்மிடத்தில்சேருகிற யாவர்க்கும் அளவில்லாநன்மைப்பாக்கியமகிமையைத் தந்தருளுகிறார். அவரோ நமக்கு மெய்யான நித்தியபாக்கியத்தை வருவிக்கத்தக்கவரல்லாதே வேறில்லை. அவனையறிவந்த மெய்ஞ்ஞானம், அவனைச்சிநேகிப்பதே யகமகிழ்ச்சி, அவனைத்தரிசிப்பதே யாநந்தம், அவரோ டொன்றித்திருப்பதே நித்தியபேரின்பபாக்கியமாமே. இப்படியிருக்க நீ நேசிக்கத்தகாததெல்லாம்நேசித்து அவனைமாத்திரஞ் சிநேகியாமற் போகிறதென்ன?

௨. தேவசிநேகமானது நன்றியறிதலின் கடமையென்னத்தகும். அதெப்படியெனில்சர்வேசுரன் நித்தியமாயாதியும் திகருமில்லாத அன்போடுன்னைச் சிநே

கித்துத் தமதுசாயலாகவேயுண்டாக்கினு
ர். பின்னு நீயுற்பவித்ததினமுதல்வருனக
குச்செய்தருளிய நன்மை யுபகாரமெல்
லா மெண்ணிப்பார். ஆனல் க்ஷணத்துக
குக்ஷண ம்வருன்னுத்துமத்துககுஞ் சரீர
த்துககுஞ் செய்த நன்றியெல்லாத்தையு
மெண்ணவுன்னுலேகூடுமோ? அன்புள்ள
தாயானவள் தன்பாலனைநேசித்துச் சவ
ரட்சணைசெய்கிறதைவிடச் சர்வேசுரன் எ
ந்நேரமு ம்நந்தநேசத்தோடுன்னைக கா
ப்பாற்றிககொண்டுவருகிருர். அநேகமு
றை நீயவருககுச்செய்த துரோகங்களை
ப்பார்த்திருந்து மிதுவரைககு மிகுந்தகி
ருபையோடே பொறுத்தார். உன்னையிர
ட்சிககப் பிதாவாகிய சர்வேசுரன் தமகக
ச் சரிசமானமான பிரியகுமாரனை யிரட்
சகராகவனுப்பி மரணத்துக கொப்புக
கொடுத்தார். உன்னேசத்தி னிமித்தம்வ
ரிதைவிட என்ன அதிகமாய்ச் செய்யக
கூடும்? ஆகையா லித்தனை நன்மை யுப
காரங்களைப்பற்றி யவரை யெவ்வளவோ
பக்ஷத்தோடே சிநேகிக்கக்கடவாய்! யா

தொருவன் ஒருமனிதனிடத்தில் அநேக நன்மையுபகாரங்களையும்பெற்று அவனா ல்மிகுந்த தயவுள்ளநேசத்தோடு நடத்த ப்பட்டுமிருக்க அதெல்லாமறந்து நன் மைக்குத் தின்மைசெய்தால் அவன் நன்றி கெட்டவனென்றுந் துர்ச்சனனென்றுஞ் சொல்லப்படுவானல்லோ. ஒருமகன் றன் னைச் சகலநன்மையால் பூரித்தநேசமுள் ள தன் தகப்பனைச் சிநேகியாமற்போனா ல் கொடியகன்னெஞ்சனென் றெவராலு நிந்திக்கப்படுவானன்றோ? துஷ்டமிருக ங்கள்முதலாய்த் தங்களுக்குநன்மைசெய் கிறவர்களுக்குச் சாந்தகுணமாய்ப் பக்ஷ த்தைக்காட்டும். சர்வேசுரனுக்குமாத்திர நன்றிகெட்டவனாய்ப் பிரதிபட்சமில் லாமல் துரோகஞ்செய்வது நீதியோ? அ வருடையதயவுள்ளநேசம் மட்டில்லாத துமா யவருடைய வுபகாரங்களெண்ணிக் கையில்லாததுமா யிருக்கிறதினாலேயா அதுகளைமதியாமலு மவரைச் சட்டைப ண்ணாமலும் போகிறாய்?

௩. சர்வேசுரனைச்சிநேகிக்க வுறுதியா

ன தேவகட்டளையுண்டு. மனிதனுடைய நே
சஞ் சர்வேசுரனுக் கில்லவேலசந்தவையும்
பிரயோசனமுமா யிராதபோதிலுந் தே
வசிநேகமானது நீதியொழுக்கமும் மனித
ர் பாக்கியத்துக் கஸ்திவாரமுமா யிருக்கி
றபடியினால் சர்வேசுரன் தம்மைச்சி
நேகிக்கவேணுமென்கிற வுறுதியானகட்
டளையை மனிதர்களுக்குத் தந்தருளினார்.
இந்தக்கட்டளை சகல தேவகற்பனைகளுக்
கு முதலும் பிரதானமுமென்று சேசுநா
தசுவாமி திருவுளம்பற்றினார். இதிலேமற்
றத் தேவகட்டளைகளெல்லா மடங்கியிருக்
கின்றது. மெய்யான தேவசிநேகமுள்ள
வர்களுக்குப் பரகதிதப்பாது. ஆனால் தே
வசிநேகமில்லாமல் மற்றப்புண்ணியங்க
ளெல்லா மோக்ஷத்தையடைவதற்குப் ப
லங்கொள்ளாது அதைப்பற்றி அர்ச்.-சி
ன்னப்பரென்கிற அப்போஸ்தலர்தாம் ம
னிதர்பாஷைகளையுஞ் சம்மனசுகளின்பா
ஷைகளையும் பேசினாலுந் தீர்க்கதரிசனவ
ரமுஞ் சகல தேவவிரகசியங்களையறியும்
ஞானமு மலைகளைப்பேர்க்கத்தக்கவிசுவா

சமுங்கொண்டிருந்தாலுந்தம்மாஸ்தியெல்லாந் தரித்திரர்பொசிப்புககாகப் பங்களித்தாலுந் தமதுசரீரம் வேகவொப்புக்கொடுத்தாலுந் தேவசினேக மில்லாவிட்டால் இதெல்லாந்தமககொரு பிரயோசனமுமாயிராதென்றார். ஆனால்மெய்யான தேவசினேகமுள்ளவனிடத்திலே மற்றப்புண்ணியமெல்லாம் வளர்ந்துபலிககும். தேவசினேகத்தாற் சகலநன்மையும் பலுகும். யாதொருவன் நம்மைச் சினேகித்தால் நமதுவாககியத்தை யநுசரிப்பான். நம்முடைய பிதா வ்வனைச் சினேகிப்பதன்றியு மவனிடத்தில்வந்து வாசம்பண்ணுவோமென்று சேசுநாதர் திருவுளம்பற்றினார். இப்படிச் சர்வேசுரனைச் சினேகிப்பதினாலே யவருககெவ்வளவோ பிரியமாகியெத்தனையோ நன்மை யவரிடத்திற்பெறலாம். இதைநன்றாய்நினை.

சர்வேசுரன் தமமைச்சினேகிக்கவேணுமென் றிவ்வளவுறுதியான கட்டளைதந்து தம்மைநேசிக்கிறவர்களுக்கு இம்மாத்திரந் தயவுசெய்கிறபோதே யவரைச்சினேகியா திருக்கக்கூடுமோ? ஓரிராசா சகலநற்குணங்களை யுமுடையவராய்த் தம்முடையபிரசைகள் சகலரையுந் தயவோடேநேசித்துச் சவரட்சணை

செய்து சகலரையுஞ் சுகபாக்கிய நன்மைகளால் பூரி க்கிருரென்று மவரையறிந்தயாவரு மதிசயமான இஷ் டவணக்கத்துட னவரிடத்தில் அன்புகூருகிருர்களெ ன்றுங் கேள்விப்பட்டா லெல்லாரு மவர்மேற்பிரியம் வைத்து அவரைக்காணவு மவருக்கிஷ்டராகவும் விரு ம்புவார்களல்லவோ? இப்படிப்பட்ட விராசாவைவிட ச் சர்வேசுரன் எவ்வளவோ அதிகவன்புக்குரியவராயி ருக்கிருர். அவர் சகல நன்மைச்சுரூபியுமா யநந்தபட் சமுடையவருமாய் நமக்குச் சகல நன்மைசெய்கிற வருமாயிருக்கையி லவரைச்சினேகிக்க வொருவிசேஷ கட்டளை வேண்டியதா யிராம லுத்தரவுண்டானாற் போதுமே. ஆயினுஞ்சர்வேசுரன் தம்மைச்சினேகிப்ப வர்களுக்கு அளவில்லாமோக்ஷாநந்தத்தையுஞ்சினே கியாதவர்களுக்கு நித்திய நரகாக்கினையையு நியமித் துத் தம்மைச்சினேகிக்க வுறுதியானகட்டளையிட்டா ர். அவரைச்சினேகிக்கிறதிலுள்ள இனிமைக்குமின்பத் துக்கும் பெருமைக்கு மகிமைக்குநிகரானதுலகத்தில் ஒன்றுமில்லையே. இதெல்லாமியோசித்து அர்ச்.-வில்ல நோவநோமையாரென்கிறவர் சுவாமியைநோக்கிக்கர் த்தாவேயுமமாற்படைப்புண்டும்மையறியத்தக்கவனு ம்மைச்சினேகியாதிருக்கக்கூடுமோ! நான்தேவரீரை ச்சினேகிக்கவேண்டாமெனறு விலக்கப்பட்டாலு மு ம்மைச்சினேகியாதிருப்பது கூடாமையும் பொறுக்க ப்படாதவாக்கினையுமாய்த் தோன்றுமேயென்றெழுதி ஞர். அவரைப்போலேவேதபாரகரிலுஞ் சாஸ்திரிகளி லும்நேகர்சர்வேசுரனைச்சினேகியாதமனிதருடையகு ருட்டாட்டத்தையு நன்றிகெட்டதனத்தையும்பார் த்து மிகவும்பிரமித் ததிசயப்பட்டார்கள். ஆனாற் சர் வேசுரனைச் சினேகிக்கிறேனென்றுசொல்லுவாயாக்கு ம். அப்படித் தாங்கள் சர்வேசுரனைச் சினேகிக்கிறதா கச்சொல்லுகிறவர்க ளநேகராயினு மெய்யாகவேயவ

ர்மே லன்புகூருகிறவர்கள்மெத்தவுங்கொஞ்சம்பேர். நீங்கள் நம்மைச்சிநேகித்தால் நம்முடையகற்பனைகளைக்கைக்கொள்ளுங்களென்றுதிவ்வியகர்த்தர்திருவுளம்பற்றினார். ஆதலால்நீசர்வேசுரனைமெய்யாகவே சிநேகிக்கிறாயோ வில்லையோவென்று அறியவேணுமாகி லவருடைய கற்பனைகளையெல்லாஞ் சரியாயநுசரிக்கிறாயோ வில்லையோவென்று பரிசோதித்து விசாரித்துக்கொள். ஒருமகன் தன்தகப்பனாரை யுண்மையாய்ச்சிநேகிப்பானேயாகி லவருக்குப்பிரியப்படவுஞ் சந்தோஷம்வருவிக்கவும்விரும்பி யெல்லாத்திலு மவருடைய சித்தத்தின்படியே நடப்பான். அவருக்கேற்காததொன்றுஞ்செய்யான். அவருடையபகையாளிகளவரைநிந்தித்துத்தூஷணிக்கிறதைப்பார்த்தா லவர்களோடொருகாலுஞ்சேராமல் தன்தகப்பனாருக்குவந்தவவமானத்தைப்பற்றி மிகவுமனநொந்துதுக்கிப்பான். தன்தகப்பனாருக்கு மேன்மைதோத்திரமுண்டாகவிரும்புவான். ஆதலால் நீ சர்வேசுரனைச்சிநேகிப்பாயாகி லவர்மட்டி லப்படியே நடக்கவேண்டாமோ? எல்லாத்திலு மவருடைய சித்தத்தையநுசரித்தெந்நேரமு மவருக்குப்பிரியப்பட நாடி யிலவலேசமு மவருக்கேற்காததைச் செய்வதற் கஞ்சக்கடவாயல்லோ? பாவிகளவரைநிந்தித்துத் துரோகஞ்செய்கிறதைப்பார்க்கையில் மனநொந்து அவரெல்லாராலுமாராதிக்கவுந் துதிக்கவுநேசிக்கவும்படவேணுமென்றுவிரும்பி யதற்காகப்பிரயாசப்படவும் வேண்டியதல்லோ? சிநேகமுள்ளவன் தான்நேசிக்கிறவனைமறவான். அவனைக்குறித்துப்பேசவு மவனைச்சந்திக்கவு மவனோடுசஞ்சரிக்கவு மாசைப்படுவான். தேவசிநேகத்தின் குறிப்புமதுவே. மெய்யாகவே சர்வேசுரனைச் சிநேகிக்கிறவன் அடிக்கடி யவரை நினைக்கவும் அவரைக்குறித்துப் பேசவுஞ்செபத்தினு லவரைச்சந்

இத்துமன்றுடவும்வரோடைக்கியமாகவுநித்தியமாயவ ரைத்தரிசிக்கவு மபேட்சிப்பான். நீ யிப்படிச்செய் யாதிருந்தாற் சர்வேசுரனைச்சிநேகிக்கிறேனென் றெ ப்படிச்சொல்லக்கூடும்? இதற்குவிரோதமா யெத்த னையோவிசை யவருக்குப்பொருந்தாத்துரோகஞ்செ ய்தாய்? ஆனால் தேவசிநேகமுன்னிடத்திற் பற்றியெ ரியாததற்குக்காரணமேதென்றால் தகாதநேசம்பொ ருளாசைமுதலிய கெட்ட ஆசாபாசமுன்னிருதயத்தி ல்ரசாளுகிறதேகாரணம். இதை யகத்தியமாய் விலக் கக்கடவாய். ஒருவனும் ஈரெசமான்களுக் கூழியஞ் செய்யக்கூடாதென்று சேசுநாதர் நிச்சயித்தபடி யே யுன்னிருதயத்தையிருபங்காக்கிச் சர்வேசுரனுக் குப்பாதியும் படைப்புண்டவஸ்துக்களுக்குப்பாதியுஞ் செலுத்தக்கூடாது. சர்வேசுரன் தம்மைச்சிநேகிக்க வேண்டியபிரகாரத்தை நிதானித்து உனக்குக்கர்த் தாவானசர்வேசுரனை யுன்முழுவிருதயத்தோடும் உ ன்முழு ஆத்துமத்தோடும் உன்முழுமனதோடும் உ ன்முழுப்பலத்தோடுஞ் சிநேகிப்பாயாகவென்று கட் டளையிட்டார். ஆதலாலுன்னிருதயத்திலுள்ள பற்று தல் நேசபட்சமெல்லா மவரிடத்திற் சேரக்கடவது. உன்னாத்துமத்தை முழுது மவருக்கொப்புக்கொடுத் து அவரைப்பற்றிச்சீவிக்கவு மவருடையதோத்திரத் துக் கெந்நேரமு முழைக்கவு மவருடையசிநேகத்தி லுன் சீவனைச்செலவழிக்கவுங் கடவாய். உன்மனமுழு து மவருடையதிருவுளத்தோடொன்றாகி யெல்லாத்தி லு மவருடையசித்தத்தையநுசரிக்கவும்வேண்டியது. உன் சர்வசத்துவபலத்தோடே யவரைச்சேவித்து நீ செய்கிறதெல்லாம் பேசுகிறதெல்லாம் நினைக்கிறதெல் லாம் நடக்கிற நடக்கையெல்லா மவருக்குப்பிரியப்ப டும்படி யெப்பொழுதும்பிரயாசப்படக்கடவாய். சர் வேசுரனையெவ்வளவுசிநேகிக்கவேணுமென்றால் அவ

வின்றியேசிநேகிக்கவேண்டியதென்று வேதவித்தியா
பாரகரொருவர்வசனித்தார். இப்படியே எப்பொழு
தும் எல்லாத்தையும்பார்க்கச் சர்வேசுரனைச்சிநேகி
ப்பதே வேதகட்டளையுமீடேற்றத்துக்கவசரமுநிறை
ந்த நியாயமுமாமே. அவரைச்சிநேகிக்கிற அவ்வள
வுவேறேயெதையாகிலுஞ் சிநேகித்தால் அது அவரு
க்குச்சரிசமானமானதெய்வமுஞ் சர்வநன்மைச் சுரூ
பமுமென்றாற்போலே பொருந்தாததேவத்துரோக
மாமே. மேலு மவர்தந்தருளின உத்தரவின்படியே
சிநேகிக்கத்தக்க பிதா மாதா பத்தா மனையாட்டிபி
ள்ளைமுதலியவெல்லாரையு மவரைப்பற்றி நேசிக்கலா
மேயல்லாம லவருடையசிநேகத்துக்குச சக்களமை
யாக எந்நேசமுமேற்றுக்கொள்ளலாகாது. வேண்டி
ய தேவசிநேக மூன்றாத்துமத்திலே வேகமாய்ப்பற்றி
யெரிந்தால் வேதகட்டளையெல்லா மொருவருத்தமி
ன்றிமிகவுமின்பத்தோட்நுசரிப்பாய். சிறகுகொண்டி
ருந்தாற்போலே புண்ணியநெறியிற் பறந்தோடியெ
ல்லாவிக்கினங்களையுந் தாண்டிப்போவாய். தேவசி
நேகமில்லாத ஆத்துமமோவென்றால் வேதக்கடமை
யெல்லாம்வருத்தமென்று நன்னெறிவிலகி நித்தியகே
ட்டுக்குள்ளாகும. ஆதலால்தேவசிநேகமில் லாமைக்
குநிகரான நிர்ப்பாக்கியமேயில்லை. இதைக்கண்டுபிடி
த்து அர்ச்.-அகுஸ்தீன் தாம்ஞானஸ்நானம்பெறுவதற்
குமுன்சர்வேசுரனைசசிநேகியாமற் போக்கினகாலத்
தைப்பற்றி மிகவு மனஸ்தாபப்பட்டு அவரைநோக்கி
ஆ! பூர்வமுநவமுமாகிய அழகே! உன்னைசசிநேகியாம
லெவ்வளவோதாமதத்துக்குள்ளானேனே! என்தேவ
னே! எப்போதும்பற்றியெரிகிறது மொருபோது ம
வியாத்துமாகிய அன்பே, உண்மையான சிநேகமே,
நானுன்றாற்பற்றியெரியச் செய்வாயாகவென்று வே
ண்டிக்கொள்வார். அப்படியேநீயுமிதுவரைக்குஞ்சு

ர்வேசுரனைத் தக்கபடி சிநேகியாததற்குமிகவுமனஸ்தாபப்பட்டு இன்றுமுதலுண்மையானதேவசிநேகத்தால்வருக்குசந்தவனாகி நித்தியமாய்வனைசிநேகித்துத் தரிசித்து வாழ்ந்திருக்கப் பாத்திரவானாகக்கடவாய்,

---

உசுஎ. -நாள்.

---

## சேசுநாதர்சிநேகவிளக்கம்.

க. நன்றியுபகாரத்துக்குத்தக்கநன்றியறிதலும் பரிசுத்தநேசத்துக்குப் பிரதிநேசமுஞ்செலுத்துவதுநீதிமுறையல்லவோ? அப்படியிருக்கச் சேசுநாதர்பேரில்நந்தநன்றியறிந்த நேசங்கொண்டிருக்கிறதேயெல்லார்மேலு ம்சுத்தியமானகடனு மல்லாமல்வருகிறகொப்ப நம்முடையபட்சத்துக்குநன்றியறிதலுக்குமுரியவரிவ்வுலகத்திலொருவருமில்லை. அதெப்படியெனில்வர்நம்மைநிகரில்லாதபட்சத்தோடே நேசித்து நமக்கெண்ணிலடங்காத நன்மையுபகாரங்களைமுன்னேசெய்ததுமன்றியின்னமநுதினமுஞ்செய்து கொண்டுவருகிறார். நாஞ்சீவிக்கிற க்ஷணமெல்லாம் பெறுகிற

இஷ்டப்பிரசாதமெல்லா ம் நுபவிககிறந ன்மையெல்லா மவருடைய திருவிரத்தத்தி ன்பலனும் மட்டற்றகிருபையின் வரமு மாமே. நாம் நித்தியமாகக்கெட்டு நரகா க்கினைக காட்களாயிருககையில் நமதுபே ரில் மனமிரங்கி நம்மையிரட்சிககப் பர லோகத்தினின் றிறங்கிமனுஷாவதாரஞ்செ ய்தருளினர்.நாம்வருககுமிகவுமேற்காத து ரோகிகளாயிருககையில் தாமேநம்மைத் தேடி நம்முடையபாவங்களைப்போககித் தம்முடையதேவபிதாவுககு நமககு மறு படி யுறவாக்கமத்தியஸ்தரானர். நம்மை ப்பற்றி யிவ்வுலகத்தி லெளியவனைப்பிற ந்துபரதேசியாய்த்திரிந்து முப்பத்துமூ ன்றுவருஷகாலஞ் சொல்லிலடங்காதவருத் தங்களுககுட்பட்டார்.பின்னு நம்மையிரட் சிககஅவருடைடயதிருவிரத்தத்தி லொருது ளியேபோதுமாயிருககையில் நமதுபேரி ல். தமககுள்ள வளவில்லாப்பட்சத்தைககா ண்பிக்கக் கடைசித்துளிபரியந்தந் தம்மு டையதிருவிரத்தமெல்லாஞ்சிந்திப் படா தஅவமானப்பாடெல்லாம்பட்டுக்கொடூ

மரணத்துககுள்ளானார். அவர் நிச்சயித்தது போலே தன் சிநேகிதருககாகத் தன்பிராணனைத் தருகிறதைவிட வதிகமான நேசமில்லையல்லவோ? இத்தனைமேலானவன்புள்ள கர்த்தனாயே சிநேகியாதேபோனால் வேறேயாரைத்தான் சிநேகிககத்தகும்?

உ. தனனால் நேசிககபபட்டவர்களோடே சஞ்சரிககவிரும்புவது சுத்தநேசத்தினியல்பாமே. சேசுநாதர் நமதுபேரில்ளவில்லாநேசத்தை வைத்திருக்கையால் நம்மிடததிற் சஞ்சரிககமிகவும்விரும்பியதற்காக நிகரில்லாவதிசயமான வற்புதஞ் செய்தருளினார். அதெதெனில் அவர்தேவநற்கருணையுண்டாககி யதிலே யெந்நேரமு மனிதரோடே வாசம்பண்ணத் திருவுளமானார். இதுவு மவரனபுககுப்போதாமல் பூரணநேசமுள்ளவர்களாயிருமனமு மொன்றுவதைவிட அவரும்நாமு மதிகபந்தனமாகத்தக்கதாகத் தேவநற்கருணைவழியாக நம்மிடததிலெழுந்தருளி நம்மோடொன்றாகி யெபபோதுமொருமைப்பட்டிருக்கக் கிருபைசெய்தருளி

றார். அற்பவஸ்துவாய்த்தோன்றுமப்ப
த்தின்குணங்களுக்குள்ளேயு மிரசத்தின்
குணங்களுக்குள்ளேயு மறைந்திருக்கிற
து சர்வலோகத்துக்கு மதிபதியிராசாவு
மா யளவற்றமகிமைப் பரஞ்சோதியுமா
யிருக்கிறதமக்கு அயோக்கியமென்றெ
ண்ணாமலுந் தேவநற்கருணையில் அவிசுவா
சிகள் பதிதர் பொல்லாதகிறீஸ்துவர்கள்
முதலிய பாவிகளாலே தமக்கு வருகிற
கொடூரநிந்தையவமானத் துரோகங்களுக்
குப் பின்வாங்காமலுந் தமதுமட்டில்லா
தநேசத்தின் பற்றுதலைமாத்திரம் பாரா
ட்டி யித்த அற்புதத்தைநிறைவேற்றிக்கொ
ண்டுவருகிறார். இதினா லாண்டவ ருனை
யெம்மாத்திரம் நசித்திருக்கிறாரென்று க
ண்டுபிடிக்கமாட்டாயோ? அவருன்னோ
டேயு முன்னிடத்திலேயுஞ் சஞ்சரிக்கவி
வ்வளவு நேசத்தோடே விரும்புகையில்
நீ யவரோடொன்றித்திருக்க வாசைப்ப
டா திருப்பதென்ன? உனக்காகப்பரமக
ர்த்தர் தேவநற்கருணையில் வாசமாயிருக்
கிறாரென்றறிந்தாலு மவரைச்சந்திக்கவு

ம் அந்நியோந்நியநேசத்துடனே செப
த்திலவரோடே பேசவுந் தேவநற்கருணை
யி லவரைவாங்கி யவரபேட்சிக்கிறபடி
யே யவரோடேயொன்றாகவும் நீயசட்
டையாயிருந்தாலவரைச்சினேகிக்கிறாயெ
ன் றெப்படிச்சொல்லக்கூடும்.

௩. தனக்குள்ள நன்மைசெல்வபாக்கிய
த்துக்குத் தன்சினேகிதர்களைப் பங்காளி
களாக்குவது நிறைந்தநேசத்தி னடையா
ளமாமே. இதையுஞ் சேசுநாதர் அதிசய
மான வுதாரத்தோடே செய்தருளுகிறார்.
எப்படியெனில் தம்முடையமட்டில்லாப்
புண்ணியபலன்களையுந் திருவிரத்தத்தின
பேறுகளையுந்தேவவரப்பிரசாதங்களையும
னிதர்பேரி லேராளமாய்ப்பொழிய எழு
பரமவாய்க்காலாகவேழுதேவத்திரவிய அ
நுமானங்களை யேற்படுத்தி யாவர்க்குந
ன்மையாகத் திறப்பாக்கிவிட்டருளினார்.
தம்முடைய வன்புள்ளதிருமாதாவை நம
க்குத்தாயாராகத் தந்தருளினார். தேவந
ற்கருணையில் தம்மைத்தாமே நமதாத்து
மத்தின் திவ்வியபோசனமாக அளவற்ற

கிருபையன்போடே தருகிருர். தமதன்புக்குப்பிரமாணிக்கமா யிருப்பவர்களைத் தம்முடையபேரின்ப விராச்சியத்துக்கும் அதின்மகிமைக்கும் அளவில்லாவாநந்தபாக்கியத்துக்கும் பங்காளிகளாக்கத் தப்பாதவார்த்தைப்பாடு கொடுத்தார். உலகம் பசாசு சரீரமென்கிற மூன்றுசத்துருக்களையும் வெல்லக்கற்பித்துச் செயங்கொண்டவனைத் தம்மோடு தமதுசிங்காதனத்திலுட்கார்ந்திருக்கப்பண்ணுவோமென்று திருவுளம்பற்றினர். இதெல்லாமிப்படியிருக்க ஆண்டவருன்னைப்பற்றி யின்னமென்னவதிகமாய்ச் செய்யக்கூடும்? அவரன்புக்கு நிகரான வன்புண்டோ? இப்படி யவருன்னையளவறநேசித்து உனக்காகச் சகலமுஞ்செய்திருக்க நீ யவருக்குப் பிரதியன்பு காணிக்கைச் செலுத்தாதிருக்கலாமோ? ஆனு லெல்லாநன்மையு மவருக்குண்டே, அவரன்புக்கென்னகாணிக்கைச் செலுத்தக்கூடுமென்பாயாக்கும். சகலமு மவருக்குச்சொந்தமாயினு முன்னிருதயத்தை யாவலோடே கேட்கிருர். அ

க்தை நீயே யிஷ்டமாய் வருக்கொப்புக்கொ டுக்கவேணுமென்று விரும்புகிருர். அவரு க்கு மற்றென்னத்தைக் காணிக்கையாகக் கொடுத்தாலு முன்னிருதயத்தையுங்கூட வொப்புக்கொடாவிட்டா லவருக்குப்பிரி யமாயிராது. ஆனால் அவருன்பேரிலளவி ல்லாநேசத்தால் தம்மையுந்தந்து உனக் குச் சகலநன்மையுஞ் செய்துகொண்டுவ ருகையி லவர்கேட்கிற உன்னிருதயத்தை முழுதும்வருக்குச்சொந்தமாகக்கொடா விட்டால் நியாயமோ? மேலு முன்னிரு தயத்தை நன்மையாற்பூரிக்கக் கேட்கிறு ரொழிய மற்றப்படியல்ல.

அவதரித்தபரமகர்த்தருமாய்ப் பரஞ்சோதி மகி மையுள்ள தேவனுமாய்ச் சர்வத்துக்கு மதிபதியிரா சாவுமாயிருக்கிற சேசுநாதரைச சிநேகிக்கிறதும் அ வரால் சிநேகிக்கப்படுகிறது முனக் கெத்தனையோ பெருமையாயிருக்கும். இராசாக்களின் சிநேக மு லோகத்தில் மிகவும் பெருமையென்றெண்ணி யநேக ரவர்களுக்குப் பிரியப்படச் சகலவழியுந்தேடி யிரவு ம்பகலு மவர்கள்சந்நிதியில் நிலைநின்று அவர்களுக் கிஷ்டமானதெல்லாஞ்செய்வார்கள். ஆனு லெத்தனை பிரயாசப்பட்டாலும் இராசாக்களின்சிநேகமெல்லா ருக்குங் கிடைக்கிறதுமில்லை, எப்போதும ஸ்திரமாயி ருக்கிறதுமில்லை. கனகாஞ்சுத கருணைச்சமுத்திரமாகி ய சேசுநாதர்சிநேகமோவெனில் அதையபேட்சித்

ளுத் தேடுகிறவர்களெல்லாருக்குங் கிடைக்கும். அந்
தத் திவ்வியகர்த்தர் நம்மைமுந்திச்சினேகிக்கிறதுமல்
லாமல் தம்மை நேசிக்கிறவர்களை விசேஷமானநேச
த்தோடரவணைக்கிறார். அவர் நமதுள்ளத்திலிருக்கிற
தெல்லாத்தையும்பார்க்கிற தமது பரமஞானத்தால்
நம்மிடத்திலே தமது பேரிலுண்மையானபரிசுத்ததே
வசினேகத்தையுந் தமக்குப் பிரியப்படுவதற் காசை
யையுங் கண்டமாத்திரத்தில் நம்மைத் தம்முடையபி
ரியசினேகிதராகவேற்றுக்கொண்டு அளவற்றகிருபை
யோடே நடத்துகிறார். பின்னு மவர் நித்தியநிலைச்சு
ரூபியாயிருப்பதால் தாம் நல்லோர்பேரில்வைத்த நே
சத்திலு மாறுதலஸ்திரமுள்ளவராயிருக்கிறார். ஆதலால்
உனக்கு மவருக்குமுள்ள சினேகம் உன்னால்முறிந்தால்
முறியுமொழிய அவராலொருபோதுமாறாது. மீளவும்
படைப்புண்டவஸ்துக்களி னேச மநேகம்விசை பற்
பலபாவத்துர்க்குணங்களுக்கு மக்கிரம நடத்தைகளு
க்குமேதுவாகி யிவ்வுலகத்திலு மறுவுலகத்திலுஞ் சக
லதின்மைகேடு நிர்ப்பாக்கியத்துக்குங் காரணமாமே.
சேசுநாதருடையசினேகமோவெனி லப்படியல்ல. அ
வர்சர்வநன்மைச் சுரூபியாகிய கடவுளாயிருக்கையா
ல் அவருடைய சினேகஞ் சகல சற்குணங்களுக்கும்
சுகிர்தங்களுக்கும் அளவற்ற நன்மைப்பாக்கியத்துக்
குங் காரணமாமே. ஆதலால் துர்மார்க்கர்நேசம ஆ
த்துமத்தைக்கெடுத்து நெஞ்சத்தை யகோரமாய்ச்
சுட்டுவாதிக்குங்கொடியதீயென்றுந்தேவசினேகம் ஆ
த்துமத்தைச் சுத்திகரித்து ஆநந்தமகிழ்ச்சியால்பூரிக்
கும பரிசுத்தசுடரொன்றுஞ் சொல்லத்தகும். தேவசி
னேகத்திலுண்டாகு மின்பமானவாநந்த மிவ்வளவெ
ன்று சொல்லக்கூடாது. உலகசுகசெல்வசந்தோஷ
மெல்லா மதற்கு நிகராயிராது. இவ்வுலகத்திலேதா
னே ஆச்சியசிஷ்டர்களி லநேகர் தேவசினேகத்தி

னினிமையாற் பலமுறை மெய்மறந்து பரவசமாகி ய
ளவிறந்த பேரின்பவாநந்தத்தை யநுபவித்தார்கள்.
அர்ச்.-சவேரியார்தேவசிநேகத்தின்மிகுதியானஞான
சந்தோஷப் பெருக்கத்தைமனுஷசுபாவத்தின்பலவீ
னத்தைப்பற்றிப்பொறுக்கமாட்டாமற்கர்த்தரைநோ
க்கிச்சுவாமீபோதும்போதுமென்றுரைப்பார்.தேவப
த்திநிறைந்தவொருமுனிவர்மிகுந்தபட்சத்தோடேச
ர்வேசுரனைநோக்கிச் சுவாமீ யுமதூழியத்தில்பாரமா
ன சிலுவை துயர் தவ முதலிய கடினங்கள்மாத்திர
முண்டென்றிருந்தேனே. இதோநிறைந்தவகமகிழ்ச்
சியையு மிகவுமினிமையான வாறுதலையு மநுபவிக்கி
றேன். என்னை நல்லகாதஞ்செய்தீரோயென் றதிசயித்
துச்சொல்லுவார். தேவசிநேகத்தி லுன்னுலைக்கள
வாக அப்படிப்பட்ட ஆறுத லின்பத்தை யநுபவியா
யாகில் நீ திவ்வியகர்த்தரைப் பூரணநேசத்தோ டின்
னம் நேசிக்கவில்லையென்றறிக, அல்லது, கிருபைநி
றைந்தகர்த்த ருன்புண்ணியபலன்க ளதிகரிக்கும்படி
க்கு உன்நன்மைக்காகத் தமதுசிநேகத்தி னினிமை
யைப் பொழியாம லதைவருங்காலத்துக்கு நிறுத்தியு
ன்னைத் தமமுடைய திருப்பாடுகளின்கடினத்துக்குப்
பங்காளியாக்கிறானென்றெண்ணவேணும. ஆயினு நீ ய
வருடைய வூழியத்தி லுறுதிநிலைமையாலு லவருடைய
சிநேகத்தினின்பத்தைச் சுகியாமற்போவதில்லையெ
ன்பதே நிச்சயம். இப்படிச்சேசுநாதரைச் சிநேகிக்
கிறதற் கித்தனைபலத்தநியாயங்களும்வருடையசிநே
கத்தி லித்தனையினிமையுமிருக்கையி லவரைச் சிநேகி
யாமலிருக்கிறதே யெவ்வளவோகுருட்டாட்டமுங்கே
டு நன்றிகெட்டதனமுங் கன்னெஞ்சகதனமுமென்
றெண்ணத்தகும். நீ கள்ளர்கையி லகப்பட் டவதி
ப்படுஞ் சமயத்தி லொருவ னுன்மேலிரக்கம்வைத்து
அவர்களோடேபோராடி யுன்னைமீட்கும்பொருட்டுச்

சாகத்திரிந்திருந்தால் நீயவனைநேசிக்காதிருக்கக்கூ
டுமோ? அந்த நன்றியைமறந்து அப்படிப்பட்ட வு
பகாரியை விரோதித்தும் பகைத்துக்கொல்லபபார்த்
தா லுன்னை யெபபடிபபட்ட கொடியநெஞ்சனென்
றுசொல்லவேண்டியிருக்கும். திவ்வியகர்த்த ருனக்கு
அதைவிடவதிகவன்புள்ளதயவுசெய்துன்னையிரட்சிக்
கத் தமதுபிராணனையுந்தந்து தம்மையநுதினபபலி
யாகவுந் திவ்வியபோசன மாகவுங்கொடுத்துச் சகல
நன்றியுஞ்செய்திருக்க நீயவரைச்சிநேகியாம ல்வரு
க்குத் துரோகஞ்செய்வ தெபபடிபபட்ட கொடுமை,
எபபடிபபட்டநன்றிகெட்டதனம? சேசுநாதனைச்
சிநேகியாமையி லித்தனைநன்றிகெட்டதன மடங்கியி
ருக்கிறதைப்பற்றி அர்ச்.-சின்னபபர் அபபடிபபட்ட
பாவத்துர்க்குணத்தை யருவருத்து யாதாமொருவன்
நமமுடைய கர்த்தாவான சேசுநாதனைச் சிநேகியா
மற்போனு லவனுக்குச் சாபமென் றெழுதினார். தா
மோவெனில் திவ்விய இரட்சகரிடத்தி லநந்த அன்பு
கூர்ந்து அந்தத் தேவசிநேகத்தின் மிகுதியால் திரு
வுளம்பற்றினதாவது: கிறீஸ்துவானவருடைய சிநேக
த்தினின்று நம்மைப்பிரிப்பதார்? உபத்திரவமோ, இ
க்கட்டோ,பசியோ,நிருவாணமோ, ஆபத்தோ,கலாப
மோ, வாளோ? ஆனால் நம்மைச்சிநேகித்தவரைப்பற்
றி யிதெல்லாஞ்செயிக்கிறோம். மரணமானாலுஞ் சீவி
யமானாலுந் தூதரானாலும்அதிகாரங்களானாலுஞ் சத்
துவங்களானாலு நிகழ்காரியங்களானாலும் வருங்காரிய
ங்களானாலுமபலமானாலும்உயர்ச்சியானாலும் ஆழமா
னாலும் மற்றெந்தெந்தச் சிருஷ்டியானாலு நம்முடை
யகர்த்தரானசேசுகிறீஸதுவினிடத்திற்கூர்ந்த தேவ
சிநேகத்தினின்று நம்மைப் பிரிக்கமாட்டாதென்று
நிச்சயங்கொண்டிருக்கிறேனென்று திருவுளம்பற்றி
னார். நீயு மிப்படிப்பட்ட வுறுதியான நேசத்தோடே

கர்த்தாவைச்சிநேகிக்கவேண்டும். உனக்கென்னென்ன கஸ்தி துன்ப துரித தரித்திரவிக்கட்டு வந்தாலுந் தேவசிநேகத்தி லுறுதியாயிருக்கக்கடவாய். செல்வமுள்ளவர்களிடத்தில் ஆஸ்தியுள்ளதனையும் சிநேகத்தைப்பாராட்டித் தரித்திரநேரிட்டமாத்திரத்தில் சிநேகமாறிக் கைவிடுகிறவர்க ளுலகத்தி லநேகருண்டு. ஆனால் அவர்கள் பொய்ச்சிநேகிதரொன்னப்படுகிறார்களே. அப்படியிருக்கச் சேசுநாதரைச் சுகசெல்வத்தைப்பற்றிச்சிநேகித்துத் துன்பத்தில்வரைவிட்டுப்பிரிகிறவனை யென்னென்றுசொல்லத்தகும்? நீயப்படிச்செய்யாமல் அவருடைய அன்புர்குரிய தெய்வீகவிலட்சணங்களைப்பற்றிமாத்திரமே யவரைமாறுமற்சிநேகிக்கக்கடவாய். ஆனால் அந்தவுத்தமதேவசிநேகம் விலையேறப்பெற்ற தேவவரமாகையா லதைமிகுந்த ஆவலுடனே சர்வேசுரனிடத்தி லிரந்துகொள்ளவேண்டும். மேலும் அசுத்தமான சகதிநிறைந்தவிடத்தில் அக்கினி பற்றி யெரியக்கூடாததுபோலே பாவவசுத்தநிறைந்த ஆத்துமத்தில் தேவசிநேகமென்கிற திவ்வியஅக்கினி பற்றியெரியமாட்டாது. ஆதலால் நீ தேவசிநேகமென்கிற வரத்தைப்பெறுவதற்குப் பாத்திரவானுகத்தக்கதாக வுன்னுத்துமத்தைச் சுத்திகரித்து எப்போதும் பரிசுத்தமாய் நடப்பாயாக.

---

## உஎம். - நாள்.

---

## சேசுநாதரைக்கண்டுபாவித்தவின் வசரம்.

க. பிரியமுள்ளவனே! நீ கிறீஸ்துவனென்கிறமகிமைப்பெயரைத் தரித் திருக்கை

பால் சேசுகிறீஸ்துநாதரைக் கண்டுபாவி
க்க வுன்பேரில் அகத்தியமான கடனுண்
டே. அதெப்படியெனில் கிறீஸ்துவனெ
ன்றால் சேசுகிறீஸ்துவுக்குச் சீஷனாகி யவ
ரைப்பின்சென்று அவருடையதிவ்வியமா
கிரிகையையநுசரிக்கக் கடமையைச்சும
ந்துகொண்டவனென் றர்த்தமாமே. அ
வ்வண்ணமே கிறீஸ்துவனானவன் சேசுநா
தருடைய சுகிர்தபோதனைகளையும் பரிசு
த்தமாகிரிகைகளையு மநுசரிப்பதினால் த
ன்னிடத்தி லந்தத்திவ்விய கர்த்தாவி னில
ட்சணச்சாயலை யாவர்க்கும்விளங்கத் தரி
க்கக்கடவான். அவனுடைய பரிசுத்தநடக்
கையைக் காண்பதினால் சேசுநாதரைக் க
ண்டாற்போலே யவர்போதித்த திவ்விய
உபதேசத்தையும் நடந்த வுத்தமபிரகார
த்தையும் யாவரு மறிந்துகொள்ளவேண்
டும். அதைப்பற்றி அர்ச். சின்னப்பர் கி
றீஸ்துவினிடத்தி லெத்தனைபேர் ஞானஸ்
நானம் பெற்றீர்களோ வத்தனைபேருங்கி
றீஸ்துவை ஆடையாகவணிந்து கொண்டீ
ர்களென்று திருவுளம்பற்றினார். அப்படி

யிருக்க நீயவருடைய புண்ணியங்களைய நு
சரிக்காமற்போனால் கிறீஸ்துவனென்கிற
பேர் கொண்டிருப்பதே அநியாயம். உன்
ஞானஸ்நானமுதலா யுன்னையீடேற்றமா
ட்டாது. உன்னடத்தை திவ்வியகர்த்தரு
டைய சுகிர்தநடத்தைக்கொவ்வாமற்போ
னால் நீயவருடைய திருநாமத்தைத் தரி
ப்பதேயவருக்கு மிகவுமவமானம். ஏனெ
னில் உன் துர்நடத்தையைப்பற்றிப் புறச்
சமயத்தாரிலநேக ரவரையு மவருடைய
திவ்வியவேதத்தையு மவமதித்து நிந்திப்
பார்கள். அதற்கு நீ காரணமாவதினால் கர்
த்தருக்கெவ்வளவோ ஏற்காதபாவியாயிரு
ப்பாயென்று நன்றாய்நினை.

௨. சேசுநாதரைக் கண்டுபாவிக்க அ
நேகம்விசை வேதத்திற் கற்பிக்கப்பட்டி
ருக்கின்றது. நாஞ்செய்ததுபோலே நீங்
களுஞ் செய்யும்படிக் குங்களுக்குமாதிரி
கை காண்பித்தோமென்று சேசுநாதர் தி
ருவுளம்பற்றினார். அவர் தமக்குச் சிஷர்க்க
ளாகவிரும்பினவர்களைநோக்கித்தம்மைப்
பின்செல்லப் பலமுறைகற்பித்தார். அர்ச்.-

சின்னப்பர் சேசுநாதனைக்குறித்து நீங்கள் மிகவும் பிரியமான பிள்ளைகளைப்போலே சர்வேசுரனைக் கண்டுபாவியுங்களென்றெழுதினார். பிதாவாகியசர்வேசுரன் தாமே யிதைக் கற்பிக்கத்தக்கதாகத் தபோரென்கிறமலையில் சேசுநாதர்தெய்வீக மகிமைபொருந்தின பிரகாசத்தோடே மறுஉருபமாய்த்தோன்றினபோது இவர்நமக்கு மிகவும்பிரியமானகுமாரன் இவருக்குச் செவிகொடுங்களென்று திருவுளம்பற்றினார். எந்த வித்தைத்தொழில்களிலாவது மாதிரியில்லாம லொருகாரியத்தைத்திருத்தமாகச் செய்வதரிது. மாதிரியுண்டானாலதைக்கண்டுபாவிப்பதெளிதாம். புண்ணியத்தின் மட்டிலும் இவ்வண்ணமேயிருக்கும். ஆகையால்சேசுநாதர் தம்முடையதிருவாக்கினாற் புண்ணியங்களைக் கற்பிப்பதற்குமுந்தி யதுகளைத் தாமேசெய்துகொண்டுவரத் திருவுளமானார். ஆதலாற் போதிப்பதற்குமுன் முப்பதுவருஷகால மிவ்வுலகத்திற் சஞ்சரித்துத் தமதுத்தமபரிசுத்தமாதிரிகையினால் சகலபுண்ணியங்க

ளையும் படிப்பித்தருளினார். தேவகுமார னித்தனைவருஷகால மளவற்றதயைபிரயா சத்தோடே காண்பித்தருளிய திவ்வியமா திரிகையை யநுசரிக்காதேபோனா லவரு டைய திருவுளம்பொறுக்கக்கூடுமோ?

௩. ஈடேறவேணுமாகில் சேசுநாதனை க்கண்டுபாவிப்பதே முழுதும்வசரம். ஏ னெனில் சர்வேசுரன் தம்மால் முன்தெரி ந்துகொள்ளப்பட்டவர்கள் தம்முடையதி ருக்குமாரன் சாயலுக் கொத்தவர்களாக வேணுமென்று நியமித்ததாக வேதத்தி லெழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் நீயீ டேறத்தக்கதாக விந்ததிவ்விய இரட்ச கர்சாயலுக் கொத்தவனாகக்கடவாய். அவ ருடையதிருச்சாயலுக் கொவ்வாதவன் ந ரகத்துக்குரியவ னென்னத்தகுமே. தீர் வைநாளில் சேசுநாதருக்கெதிராக நிறுத் தப்பட்டு அவருடைய திருமாதிரிகைக் கொப்பநடந்தாயோ அவருக்குமுனக்கு ம் பொருத்தமுண்டோ வில்லையோவென் றுபரிசோதிக்கப்படுவாய். அப்போது அ வருடைய குறையற்ற தாழ்ச்சி சிரவணம்

பொறுமை யொடுக்கம் தவம் கற்பு பரிசுத்தத்தனம் இரக்கம் தயை யுதாரமுதலிய புண்ணிய சற்குணங்களுக்கு விரோதமாயுன்னிடத்தி லாங்காரம் கீழ்ப்படியாமை கோபம்பகை அடங்காமை காமங் குரூரங் கொடுமை யுலோபமுதலிய பாவத்துர்க்குணங்களிருந்தால் அதுகள் உனக்கெவ்வளவோ வெட்கத்துக்குரியதாம். அப்படியுன்னடக்கை யவருடைய திவ்வியமாதிரிகைக் கொவ்வாதாகில் நீகடினதீர்வைச்சாபத்துக்கும் நித்திய ஆக்கினைக்கு முள்ளாவதேதப்பாது. ஆதலாற் சுத்ததெளிவுள்ள கண்ணாடியி லெதிர்நின்று பார்ப்பதினால் தன்முகத்திலுள்ள வழுக்கெல்லாங் கண்டு துடைக்குமாப்போலே மாசற்றபரிசுத்தத்தனத்தின் ஞானக்கண்ணாடியாகிய சேசுநாதருடைய திவ்வியமாதிரிகையைச் சீவியமுள்ளமட்டும் மடிக்கடி யுற்றுப்பார்த்து உன்னிடத்திலுள்ள பாவத்துர்க்குணங்களையெல்லாங் கண்டுபிடித்துத் தாமதமின்றி யதுகளைச்சீராகத் திருத்தக்கடவாய்.

ஆதிமனிதன் தெய்வத்துக்குச் சரிசமானமாகவேணுமென்றகங்காரித்ததினாலே சிதைந்துபோனான். ஆயினுங் கிருபைநிறைந்ததேவகுமாரன் அவதரித்துமனுமக்கள்தம்மிடத்திற் கண்டனுசரிப்பதற்குரிய சுகிர்தகுணங்களையும் பரிசுத்தநடக்கைகளையுங் காண்பித்து, அவர்களுக்குத்திவ்வியமாதிரிகையாயிருக்கத் திருவுளமானதன்றியுந் தம்மைக்கண்டுபாவிக்கச்சகலரையு ம்நந்தபட்சத்தோடு மழைக்கிறார். ஆராதனைக்குரியதேவனாகிய இந்தப்பரமகர்த்தாவைக்கண்டுபாவிப்பது நமக்கெத்தனையோமகிமையும் பெருமையுமாமே. சனுக்களிராசாவின்டைபடிகளை யநுசரிப்பதே தங்களுக்குக்கனமென் றெத்தபாவனையாக நடப்பார்கள். மக்கள் தங்கள் தகப்பன்சாயலாயிருப்பதிலே பிரியப்படுவார்கள். கற்கும்பிள்ளைகள் தங்கள் உபாத்திமாரைப்போலாகப் பிரயாசப்படுவார்கள். பூர்வத்திலொருசாஸதிரிபேர்விளங்கியிருந்ததைப்பற்றி அவனிடத்திற்படித்தவர்க ளவனுடையநடைபடிகளையெல்லா மநுசரிக்கிறதில் தங்கள் மேன்மைபாராட்டி யவனிடத்திலிருந்தசிலகுறைகளைமுதலாய்க் கண்டுபாவித்தார்கள். அழிவுள்ளவிவ்வுலகத்தி னாசாரமுறைமைகளை யெத்தனையோ கவனத்தோடேபார்த்தநுசரிக்கிறார்கள். இதெல்லாமிப்படியிருக்கச் சகலருக்கும் இராசாதிராசனுமா யன்புக்குரியதகப்பனுருமாய்ப் பரமகுருவுபாத்தியாருமாய் நித்தியதெய்வீகவிலட்சணம்பொருந்தின வுத்தமமாதிரிகையுமாயிருக்கிற சேசுநாதரைக் கண்டுபாவியாம விருப்பதென்ன? அவருடையசுகிர்த சாயலுகொத்தவராயிருப்பதிலுள்ளமேன்மைக்கு நிகரானமகிமைபெருமையுலகத்திலுண்டோ? அந்தத்திவ்வியகர்த்தருடையநடைபடிகளெல்லா மோரற்பபழுதுமற வுத்தமசுகிர்தமுமாய்ப் பரிசுத்தத்தனத்தொழுக்கமுமா யீடேற்ற

த்தினேகநெறியுமாயிருக்கையால் எத்தனேயோபத்தி யாசையோ டவரைப்பின்செல்லக்கடவோம். போர்க் களத்தில் இராசாதாமே முந்திப்போராடப்போனு ல்போர்ச்சேவகரெல்லாரும் போட்டியாகத்தலைகொ டுக்கப்பின்சென்றேடுவார்களே. அப்படியிருக்க நி த்தியமகிமைப்பிரகாசப்பேரின்பத்தை யடைவதற்கு ரிய சுகிர்தவழியில் நமக்குமுந்தி நடந்ததிவ்விய இரா சாவைப்பின்செல்லுதற் கிடையலாமோ ? அவருடை யதிவ்வியமாதிரிகையை யநுசரிக்கிறதிலே யோரற்ப பிரயாசத்துக்கஞ்சிப் பின்வாங்கலாமோ? அவரைக் கண்டுபாவிக்கிறதி விவ்வுலகத்திலே தானேபுண்ணியா த்துமாக்களுக்கு மிகவு ஞானசந்தோஷமுண்டே. சி லவிசையாதோர்வருத்தம்நேரிட்டால் திவ்வியநாதர் தாமேதுணையாயிருக்கிறதுமல்லாம லுதவியாறுதலா யிருக்கவுந் திருவுளமானுர். மேலும் அவருடையசுகி ர்த அடிகளைச்சுமுத்திரையாயநுசரித்தால் வருத்தந் தோன்றுமல் தானுய்நீங்கிப்போம். அர்ச்.- வெஞ்சே ஸ்லாஸ் என்கிற இராசாவழக்கமாய் நடுச்சாமத்தில் அகோரகுளிர்காலத்திலேமுதலாய்க் கோயில்களில்ப ரமகர்த்தாவைச்சந்திக்கப்போவார். குளிர்மிகுதியா ல் தண்ணீருங்கல்லைப்போற்கெட்டியாய்நிற்க, உறை பனி திரளாய்ப்பெய்து தரையைமூடி வழிவிடாமல் எப்பக்கத்திலும் அடர்ந்திருந்தபோதிலும் பத்திநி றைந்த அந்தவிராசா அதுவிக்கினமென்றெண்ணும ல் சேசுநாதர்நமக்காகப் பட்டபிரயாசங்களை நினைத் து உறைபனியிற்காலாழமாய்ப்பதியத் தைரியமாய் ப்போவார். ஒரிராத்திரி யவர்பிறகேவருமூழிய ன்அந்த ப்பனியில் நடக்கிறவருத்தத்தினுலு மிக்ககுளிரினுலு ங்கால்நரம்புகள்சுருங்கி வலித்திழுக்கத் தவித்துவிழு ந்தான். உடனே தயையுள்ளவிராசா அவனைக்கைதூ க்கியெழுப்பி : நீயென்பாதத்தின்டிமே லுன்கால்வை

த்து அப்படியேதவருமலென்பிறகேவந்தா லெளி
தாய் நடப்பாயென்றுசொல்லியருளினர். பணிவிடை
க்கார னப்படியேநடந்ததினுல் வருத்தமின்றி யிரா
சாவைப்பின்சென்றன். அவ்வண்ணமே சேசுநாத
ரைச்சுமுத்திரையாய்ப்பின்சென்றல் வருத்தமெல்லவர்
நீங்கும். அவருடைய திவ்வியமாதிரிகையைப்பார்ப்ப
தினுல்தானே யநந்ததைரியமுமுண்டாம். நிந்தை யவ
மானதூஷணங்களைப் பொறுக்கிறதும் தன்பகையா
ளிகளைச்சிநேகிக்கிறதுந் தாழ்ச்சியோடேபணிகிறது
ந் தவஞ்செய்கிறதுங் கஸ்திநோவுமுதலிய சிலுவை
யைச்சுமந்துகொள்ளுகிறது மற்றப்புண்ணியமுயற்சி
களுஞ் சிலவிசைகெட்டசுபாவத்தின் துர்ப்பலத்தினு
லே யுனக்குக்கடினமாய்த்தோன்றும், சலிப்பும்வரும்,
தவறத்தந்திரமுமுண்டாம். அப்போதுடனேசேசுநா
தர்காண்பித்ததிவ்வியமாதிரிகையைப்பார். அவர்சர்வ
த்துக்கும்பரமகர்த்தராயினுமஒரடிமைக்கிணையாகத்
தமமைத்தாமேதாழ்த்தியிவ்வுலகத்திலளவற்றதாழ்ச்
சியோடேசஞ்சரித்தார். சர்வலோகங்களுமவருக்குச்
சொந்தமாயினும பூலோகத்தில் தரித்திரத்திற்பிறந்
துமரணபரியந்தம் வறுமையிக்கட்டை யநுபவித்தா
ர். அவர்மோக்ஷத்திருநந்தமாயினு மிவ்வுலகத்திற்சு
கசெல்வமின்றிவருத்தத் தொழிலிலுங் கடினதவத்தி
லுந் தமதுசீவியகாலத்தைச்செலவழித்தார். தம்மு
டைய பகையாளிகளைநாசம்பண்ணத் தமதுகையில்
சர்வநீதிவல்லபமிருந்தபோதிலுந் தம்முடையசத்து
ராதிகள்செய்தசொல்லிலடங்காத கோரநிர்ப்பந்த
ங்களையு மவமானங்களையு மளவற்றபொறுமையோட
நுபவித்ததுமன்றி அவர்களுக்காகத் தம்முடையதே
வபிதாவைமன்றாடிப் பொறுத்தலையுங்கேட்டார். இப்
படி யவர்சகல்புண்ணியங்களின்மாதிரிகையைக்காண்
பித்துத் தமதுபரிசுத்தநடக்கையாலீடேற்றதினவ

ழியைத்திறந்திருக்க அவனைப்பின்சென்று கண்டுபாவிப்பது வருத்தமென்று சொல்லக்கூடுமோ? மேலும் வருத்தமுண்டாகி லவனைமன்றாடிக்கொள். அப்போதுன்னைக்கைக்கொண்டு நடத்தினாற்போலே விசேஷவுதவிசெய்வார். ஆதலால் நந்தபத்திசுறுசுறுப்புடனே திவ்வியகர்த்தனைப்பின்சென்று எல்லாத்திலுங்கண்டுபாவிப்பாயாக. எப்படியெனில் ஒருசித்திரக்காரன் ஒருபடத்தைப்பார்த்து வேறேபடத்தையெழுதவேணுமாகி லடிக்கடியதைநோக்கி யதினுருபவடிவெல்லாமொப்பவெழுதுவான். அப்படியே நீயுன்னாத்துமத்திலு நடக்கையிலு மகத்தியமாய்த்தரிக்கவேண்டிய திவ்வியகர்த்தரின் சுகிர்தச்சாயலுன்னிடத்திலுண்டாகும்படிக்கு அடிக்கடியவருடைய சுகிர்த நற்குணங்களையும் பரிசுத்த நடைபடிகளையும் ஞானக்கண்ணாலே நோக்கிக் கண்டுபாவிக்கக்கடவாய். அந்தந்தச்சமயத்திலே சேசுநாதரெப்படி நடந்திருப்பாரோவென்றியோசித்து நீயுமப்படியே நடப்பாயாக. அவ்வண்ணமே அர்ச்.-இஞ்ஞாசியார்தாமே செய்துகொண்டுவந்ததுமன்றி மற்றவர்களுஞ்செய்யக்கற்பித்தார். அவரடிக்கடிசேசுநாதசுவாமியுடைய திருச்சரித்திரத்தைவாசித்து வழக்கமாயவருடைய புண்ணியங்களைத்தியானித்து, எப்பொழுதுஞ் சுமுத்தினையாயதுகளையநுசரிக்கப் பிரயாசப்படுவார். அதினாலதிசயமான அர்ச்சியசிஷ்டதனத்தையடைந்தார். நீயு மந்தத்திவ்வியமாதிரிகையைக் கண்டுபாவிக்கவெந்நேரமும் பிரயாசப்படவேண்டும். அர்ச்சியசிஷ்டர்களநுசரித்தவொழுக்கமும் நித்தியபேரின்பத்துக்கேக வழியுமதுவே. இதைநன்றாய்நினை.



## உஅம்.- நாள்.

### பிறர்சினேகக்கடமை.

க. பிறனைச்சினேகிப்பதே மனுஷசுபாவக்கடனு நன்மையுமென்னத்தகும். அதெப்படியெனிற் பரமகர்த்தர் சகலமனிதருக்குள்ளேயு மந்நியோந்நிய நித்திய நேசத்தைப் பிறப்பிக்கத்தக்கதாக யாவரையு மொரேதாய்தகப்பனுக்குச் சந்ததியாய்ப்பலுகச்செய்தார். ஆதலாற் சகோதரருக்குள்ளே யிருக்கவேண்டியசினேகஞ் சகலமனிதருக்குள்ளேயு மிருக்கக்கடவது. பின்னு மெதைப் பிறருனக்குச் செய்யவேணுமென்று விரும்புகிருயோ அதையேயவர்களுக்குச் செய்யவும் எதைப் பிறருனக்குச் செய்யவேண்டாமென் றிருக்கிருயோ அதையே யவர்களுக்குச் செய்யாதிருக்கவும் வேண்டுமென்பது இயல்வேதக்கட்டளையாமே. ஆதலால் தமதுமட்டில் பிற ருபசார தயவு நேசமாய்நடக்கவேணுமென் றெல்லாரும் விரும்புகிற அத்தன்மைபோலே பிறர்மட்டில் தாங்க

ளுநடக்கக்கடவார்கள். இவ்வுத்தமவிதமா யெல்லாருநடந்து ஒருவரொருவரைச் சி நேகிப்பார்களேயாகி லிப்பரதேசமாகி ய பிரபஞ்சத்தில் மனிதரை வருத்துகிற பொல்லாங்குகள் நீங்கிப்பூலோகமேமோ க்ஷத்தின்சாயலாகும். ஏனெனிற் பிறர்சி நேகமில்லாமையினாலேவிசேஷமாய்ச்சக லவிததின்மையக்கிரம நிர்ப்பாக்கியங்களு மண்ணுலகத்திற்பலுகிவிஸ்தரிக்கிறதுமன் றிப் பிறர்சிநேகத்தாற்சகல வுதவிசகாயந ன்மைப் பாக்கியமும்விளைகிறதே நிச்சய ம். இத்தனை நன்மைக்குரிய இவ்வுத்தமபுண் ணியத்தை மனிதரிடத்தி லுறுதிப்படுத்த த்தக்கதாகச் சர்வேசுரன்யாவர்க்கு மொ ரோசந்ததிமூலங் கட்டளையிட்டது போ லே யதற்குச்சம்பாவனையாக யாவர்க்கு மொரோபரகதியையு நியமித்தருளினார். ஆ தலாற் பேரின்ப மோக்ஷவிராச்சியத்திற் பிரவேசிப்பவர்களெல்லாரு மந்நியோந் நிய பரிசுத்த சிநேகபந்தனத்திலேதா னே மட்டில்லாவாநந்தபாக்கியத்தை ய நுபவிப்பார்கள். பிறர்சிநேகமில்லாதவர்

களோவெனி லெல்லாருந் தேவநீதித் தீர்வையாற் பசாசுகளோடு மற்றச் சகல பாவிகளோடும் ஒரே நரகத்தீயிற் சேர்க்கப்பட்டிருந்தாலு நித்தியபகை விரோதத்தால் ஒருவரொருவரை நிந்தித்துத் தூஷித்து வாதிப்பதினாற் சொல்லிலடங்காதகொடூரவாக்கினையை யநுபவிப்பார்கள். இதை நன்றாய் நினை.

உ. பிறர்சிநேகமானது தேவசிநேகத்துக்குப் பிரியாத் துணையாமே. யாதொருவனைச்சிநேகித்தால் அவன்சாயலுஞ்சம்பந்தமுமாயிருக்கிறதெல்லாமும் பிரியமாயிருக்கும். அப்படியிருக்கச் சர்வேசுரனைச் சிநேகிப்போமேயாகில் நம்மைப்போலே யவருடைய சிஷ்டியுஞ் சாயலுமாகியபிறரையு மெப்படிச் சிநேகியாதிருக்கக்கூடும்? ஆதலால் வேதத்திலெழுதப்பட்டிருக்கிறதாவது: யாதாமொருவன் தான்சர்வேசுரனைச் சிநேகிக்கிறேனென்றுந் தன்சகோதரனைப் பகைப்பானே யாகில்வன்பொய்யன். ஏனென்னில் தான் பார்க்கிற தன்சகோதரனைச் சிநேகியா

தேபோனால் தான் காணாத சர்வேசுரனை யெப்படிச்சிநேகித்திருக்கலாமென்றெ ழுதியிருக்கின்றது. பின்னும் பிறர் சர்வே சுரனுடைய சாயலாயிருக்கிறதுமல்லாம ல் அவராலேசிநேகிக்கவும் படுகிறார்கள். அவர்களையிரட்சிக்கப் பிதாவாகிய சர்வே சுரன் தம்முடைய ஏகசொந்தக்குமாரனை யிவ்வுலகத்திற் கனுப்பினார். அந்தப்பரம தேவகுமாரன் அவர்கள்நேசத்தைப்பற்றி த்தம்மையிரத்தப்பலியாகவொப்புக்கொ டுத்துக் கடினமரணத்தை யடைந்தாரே. சர்வேசுரனாலிவ்வளவுஞ் சிநேகிக்கப்பட் டவர்க ளுன்சிநேகத்துக்குப் பாத்திரவா ன்களல்லவென்றெண்ணுவாயோ? அப்ப டியெண்ணுவாயாகில் சர்வேசுரனுக்கெ வ்வளவோபொருந்தாதஅவமானமாகும்! பிறனைச் சிநேகிப்பதே சகலபலிகளிலு முக்கியமென்று வேதத்திற் சொல்லியிரு க்கின்றது.ஆதலால் நீ சர்வேசுரனுக்குப்பி ரியப்பட விரும்புவாயேயாகில் அகத்திய மாய்த்தேவசிநேகத்தோடே பிறர்சிநே கத்தையுங் கொண்டிருக்கக்கடவாய்.

ரு. பிறரைச் சிநேகிக்கவேணுமென்ப
து உறுதியானதேவகட்டளையாமே. நா
மும்களைச் சிநேகித்ததுபோலே நீங்களு
மந்நியோந்நியசிநேகத்தைக்கொண் டுங்
களைச் சிநேகிக்கவேணுமென்று உங்களு
க்குப்புதுக்கட்டளையிடுகிறேனென்றுசே
சுநாதர்திருவுளம்பற்றினர். அந்தத் திவ்
வியகர்த்தர் நமதுபேரில்நந்த சிநேகம்
வைத்து நமக்குச் சகல நன்மைகளையுஞ்
செய்து நமக்காகப் படாதபாடெல்லாம்
பட்டுத்தமதுபிராணனையுந் தந்தாரே.அ
ப்படியிருக்கத் தாம் நம்மைச் சிநேகித்த
துபோலே நாம் பிறரை நேசிக்கவேணு
மென்றதினால் எவ்வளவோவுத்தம மெய்
யான சிநேகத்தைக் கொண்டிருக்கவே
ணுமென்று கற்பித்தார். பின்னு மிந்தக்கட்
டளை சர்வேசுரனைச் சிநேகிக்கவேணுமெ
ன்கிறகட்டளைக் கொத்ததென்று நிச்சயி
த்தார். ஆதலால் தேவசிநேக மீடேற்ற
த்துக் கவசியமாயிருக்கிறதுபோலே பிற
ர்சிநேகமு முழுதும்வசரமென்பதுறுதி
மீளவு முன்னேப்போலே யுன் புறத்தியா

ரைச் சிநேகிப்பாயாகவென்றுந் திவ்விய கர்த்தர்கற்பித்தார். ஆதலா லுன்னுஸ்திமு தலியதுகளைவிட நீ யுன்னையதிகமாய்ச் சி நேகிக்கிறதுபோலே புறத்தியாரையுநே சிக்கவும் பிறசிநேகத்தைக் கைவிடுகிறதை விட அதுகளையிழக்க உறுதிமனங்கொண் டிருக்கவும்வேண்டும். தேவசிநேகத்திலு ம் பிறர்சிநேகத்திலுந் தேவகட்டளையெ ல்லா மடங்கியிருக்கின்றது. மேலுந்தக்கப டி பிறரைச் சிநேகிக்கிறவ ன்வசியமாய்த் தேவசிநேகமுள்ளவனு யிருப்பானென் கிறதினுல் புறத்தியாரைச் சிநேகிக்கிறவ ன் தேவகற்பனைகளை நிறைவேற்றினுனெ ன்று அர்ச்.-சின்னப்பனென்கிற அப்போ ஸ்தலனெழுதினுர். ஆதலாற் பிறர்சிநேகத் தை யெவ்வளவோமுக்கியமா யநுசரிக்க வேணுமென்றுநன்ருய்நினை.

அர்ச்.-அருளப்பரு மிவ்வுத்தமபுண்ணியத்தை யநே கம்விசை தம்முடையநிருபங்களில் கற்பித்ததுமல்லா மல் மரணபரியந்தந் தமதுதிருவாக்கினுலு மதைப்ப டிப்பித்தார். அவர் விருத்தாப்பியமானபின்பு நடக்க மாட்டாமையா லவருடையசீஷாக்க ள்வரையெடுத் துச் சபையில் கொண்டுவந்துஸ்தாபிப்பார்கள். அப் போ தவர் நெடும்பிரசங்கம்பண்ணக் கூடாமையால்

பிரியமானபிள்ளைகளே! அந்நியோந்நியமாக வுங்க ளைச்சினேகியுங்களென் றடிக்கடிவசனிப்பார். இதெ ப்போதும்சொல்லப்பட்டதினுல்சீஷாக்கள்சலித்துநீ ரிந்தவார்த்தையைமாத்திர மெப்போதுஞ் சொல் வதேதென் றவரைக்கேட்டார்கள். அதற் கவர் இது வே கர்த்தர்கற்பனை இதையே நன்றாயநுசரிததால் போதுமென்றார். இப்படிப்பிறரைச்சினேகிப்பது சே சுகிறீஸ்துவின் விசேஷகட்டளையாயிருக்க நீ பிறர்சி னேகமில்லாதவனுகிலுன்னைக்கிறீஸ்துவனென்பதெப் படி? மோக்ஷத்தை யடைவதெப்படி? ஆனுற் பி றர்சினேகதனை யுபசாரவார்த்தைகளினுலேமாத்திர ங் காட்டுவது போதாது. அதையிருதயத்திற்கொண் டிருக்கவு நடக்கையி லுண்மையாகவநுசரிக்கவும்வே ண்டியது. அதெப்படியெனில் அவரவர் தமக்கபேட் சித்துத்தேடுகிற நன்மை சுகபாக்கியமெல்லாம் பிற ருக்குங்கிடைக்கவேணுமென்று முழுமனதுடனே வி ரும்பித் தக்க சமயங்கிடைக்கிறபோதெல்லா மவர்க ளாத்துமவிரட்சணியத்துக்குஞ் சரீரப்பிழைப்புக்கு ந் தர்மநன்றிசகாயஞ்செய்யத் தம்மாலியன்றமட்டு ம் பிரயாசப்படவும் பிறர்சினேகத்துக்குவிரோதமா ண காய்மகார வற்ம நிந்தை யிகழ்ச்சி யபதூறுகுண் டணிமுதலிய சகலகுற்றங்களையு மிகுந்த வெச்சரிக் கையோடே விலகவும்வேண்டும். மேலும் பகையான து பிறர்சினேகத்துக் கொவ்வாததா யிருக்கிறதுபோ லே கெட்டநேசமும அதற்கு முழுதும விரோதமா யிருக்கின்றது. அதெப்படியெனில் கெட்டநேசத்தா ல் ஆத்துமசேதமுதலியதின்மைகளு நித்திய ஆக்கி னைகளும் வருகின்றமையால் அதைக்கொணடவன் ற ன்னையுந் தான்கெட்டவன்புகூர்ந்திருக்கிறவனையுமெ ய்யாகவே பகைத்துச் சிதைக்கிறுனென்னத் தகுமே. ஆதலால் இலவலேசமுங் கெட்டநேசத்துக் கிடங்

கொடாமல் எப்போதுந் தேவசமுகத்திற் பரிசுத்த
மாய்நடக்கக்கடவாய். கிறீஸ்துவேதமஸ்தாபிக்கப்ப
டுப்பரமபினவுடனேகிறீஸ்துவர்களுக்குள்ளே யதிச
யமான பரிசுத்த அந்நியோந்நிய சிநேகமசர்வலோ
கத்திலும் விளங்கிற்று. விசேஷமாய் அப்போஸ்தலர்
வாசஸ்தலமான எருசலேமென்கிற திருநகர்முதலிய
விடங்களிற் கிறீஸ்துவர்களெல்லாரு மொரேமனமு
மொரே ஆத்துமமுமாயிருக்கிறதாகத் தோன்றினார்க
ள். அநேகர் தங்களாஸதிகளைப் பொதுவிலேவைத்து
த் தரித்திரர்களுக்கு வேண்டியவுதவியெல்லாஞ்செய்
துகொண்டு வந்ததினா லவர்களுக்குள்ளே தரித்திர
ரொருவருமிருந்ததில்லை. இத்தனையதிசயமான சுத்த
நேசத்தைப்பார்த்து அஞ்ஞானிகள்பிரமித்துக் கிறீ
ஸதுவர்களுக்குள்ளே யெவ்வளவோ அந்நியோந்நியசி
நேகமுண்டு! பாருங்களென்றாச்சரியத்துடனேசொல்
வார்கள். இதினால்சர்வேசுரனுக்குத்தோத்திரமும்வே
தத்துக்குமேன்மையுஞ் சகலவிசுவாசிகளுக்கும் அகம
கிழ்ச்சிநன்மைப்பாக்கியமு மெவ்வளவுண்டாயிற்றெ
ன்று ஆராலேசொல்லக்கூடுமே? சத்தியதிருச்சபையி
லெக்காலத்திலும பிறர்சிநேகம விசேஷமானபிரகா
ரமா யநுசரிக்கப்பட்டது. இந்தப்புண்ணியத்தைப்
பற்றிக் கணக்கில்லாத ஐசுவரியவான்கள் பிணியாளிக
ளுக்குந் தரித்திரர்களுக்கும் அடைக்கலமாகத் தர்ம
வீடுகளையேற்படுத்தத்தங்களாஸ்தியெல்லாந்தந்தார்
கள். மிளவுமெண்ணிறந்தவுத்தமபூமான்களுப புண்ணி
யஸதிரீகளும இல்லறத்தைத்துறந்து அப்படிப்பட்
ட வெவ்வேறான தர்மவீடுகளில் பிறருக்கூழியஞ்செய்
வதிலே தங்கள்ஜீவியகாலத்தைச் செலவழித்தார்கள்.
அநேகமுறை தொத்துவியாதியான கொள்ளைநோய்
மிகவும்பயங்கரமாய் விஸ்தரிக்குஞ்சமயத்திலும்பிறர்
சிநேகநிறைந்த அநேகாநேகபுண்ணியவாளர்சாவுக்

கஞ்சாமல் வியாதிக்காரருக்கூழியம்பண்ணத்தங்கள் பிராணனையுமொப்புக்கொடுத்தார்கள்.முன்னாளிலுமி ந்நாளிலுஞ் சத்தியதிருச்சபையை மங்காவொளியோ டே பிரகாசிப்பித்த விந்த வுத்தம பிறர்சிநேகத் தி ஷ்டாந்தங்களுமல்லாமல் இக்காலத்திலேயும் வி சேஷமாய்ப் பிறராத்துமங்களை யீடேற்றத்தக்கதா கத் திரளானசத்தியகுருக்கள் தங்கள்தேசம் பந்து க்கள் சுகமுதலியசகலத்தையும்விட்டு அஞ்ஞானதே சத்தாருக்குச் சத்தியவேதத்தைப்போதிக்க எல்லாப் பிரயாசவருத்தங்களுக்கு முள்ளாகிறார்கள். அவர்களி ல்நேகர் சத்தியவேதத்துக்கு நிஷ்டூரப்பகை கலாப நடத்துகிற குரூரவிராசாக்களாலுந் துஷ்ட அஞ் ஞானசனங்களாலு மற்றப் பற்பல ஆபத்துக்களா லுந் தங்களுக்குநேரிட்டிருக்கிற மாணத்துக்கு மஞ் சாமல் பிறர்சிநேகத்தைப்பற்றித் துணிந்துசந்தோ ஷமாய்ச் சகலவாதைகளுக்கு முட்படப்போகிறதை யுங் காண்கிறோமல்லவோ ? ஆ! பிரியமுள்ளவனே, இத்தனை சுகிர்தமாதிரிகைகளைப்பார்த்துத் திருச்ச பையின்மாட்சியாகிய இவ்வுத்தமபுண்ணியத்தை நீ யநுசரிக்காதிருக்கக்கூடுமோ ? பிறர் சுகிர்தநேசமெ ன்கிற திவ்வியஅக்கினி எத்திசையிலும் பற்றியெரிகிற போதே யுன்னிருதய மின்ன முயிரில்லாச்சடலம்போ லக்குளிர்ந்திருக்கலாமோ? தகாதே. நீயுமுண்மையா னபத்தியோடே பிறர்சிநேகத்தையு மதற்கடுத்த பு ண்ணியங்களையும்உன்னாலியன்றமட்டு மநுசரிக்கக்கட வாய.முந்தமுந்த உன்பெற்றாருறவின்முறையாருபகா ரிகள்முதலியவர்களைச் சிநேகிக்கிறதேமுறை. ஆகிலு ஞ் சுபாவமான அந்தநேசஞ் சர்வேசுரனுக்கதிகபிரிய முமாய் மோக்ஷத்துக்குப்பலனுள்ள புண்ணியமுமாயி ருக்கத்தக்கதாகச் சர்வேசுரனைப்பற்றி விசேஷமாயவ ர்களைச்சிநேகித்து அந்த இயல்பானபக்ஷத்தைத் தேவசிநேகத்தின்பரிசுத்தவக்கினியாலர்ச்சிக்கவுமு

றுதிப்படுத்தவும்வேண்டியது. ஆனால்தன்னைச்சேர்ந்தசுற்றத்தாருறவின்முறையார் சிநேகிதர்முதலியவர்களைச் சிநேகிப்பது பிறர்சிநேகத்துக்குப்போதுமென்றிராதே. பிறர்சிநேகஞ்சகலமனிதரையுமரவணைக்கும். எத்தேசத்தார்க்குமெக்குலத்தார்க்குமெவ்வேதத்தார்க்குமெவ்வந்தஸதார்க்குந் தடையுமின்றிவெறுப்புமின்றி நன்மைசெய்யவிரும்பும். ஆனால்பலபேருக்கநேகதகாக்குணமுண்டே, அவர்களையெப்படிநேசிக்கலாமென்று சொல்லுவாயாக்கும். ஆயினுமொருகுறையுமில்லாதமனித னிவ்வுலகத்தி லெங்கே? சர்வேசுரனு மனுஷரும் உன்சொந்தக்குறைகளைப்பொறுக்கவேணுமென்றிருக்கிறாயே. அப்படியிருக்கப்புறத்தியாருடையகுறைகளைநீபாராட்டுவதேது? அதுகளைத்திருத்தி நீக்கினாலேதாவிளை. அதுவுன்னாற்கூடாதாகிற் பிறர்சிநேகத்தா லதுகளைச்சகித்துப் பொறுப்பதேகடமையொழிய அதுகளைப்பற்றிப் பிறர்சிநேகத்தைவிட்டுவிட நியாயமில்லை. புறத்தியா ரெப்படிப்பட்டவர்களாயினு மவர்களிடத்திலுள்ள தேவசாயலையுஞ் சர்வேசுரனா லுண்டாக்கப்பட்ட மனுஷீகத்தையுஞ் சேசுநாதரிரத்தத்தா லிரட்சிக்கப்பட்ட அவர்களாத்துமத்தையு மெப்பொழுதுஞ் சிநேகிக்கக்கடவோம். ஆகிலுந் துர்மார்க்கருடைய பாவங்களையும் அஞ்ஞானிகள் பதிதர்முதலியவர்களுடைய அபத்தங்களையு மொருபோது மங்கீகரித் தேற்றுக்கொள்ளலாகாது. வேதத்துக்கும் நல்லொழுக்கத்துக்குமொவ்வாததெல்லாம் வெறுத்துத்தள்ளவுந் தான்கெட்டுப்போவதற் கேதுவாகிய துர்மார்க்கர் விசேஷசிநேகத்தைவிலகி யெச்சரிக்கையாயிருக்கவும் வேறுதேவகட்டளையுண்டே. ஆதலா லப்படிப்பட்டவர்கள்மட்டில் தக்கவெச்சரிக்கையநுசரிக்கவும் பிறர்சிநேகசாதாரணகடமையின்படியே பொதுவி லவர்களைநேசித்து அவர்கள்கேட்டின்பேரில் மனமிரங்கியவர்

களுக்காகச் சர்வேசுரனைமன்றுடி யவர்களை நல்வழியில் திருப்பப்பிரயாசப்படவும்வேணும். மீளவும் மேற்சொன்னபடிச் சகலரையுஞ் சினேகிக்கவேணுமென்கிறபொதுக்கடனையுமன்றிச் சத்தியவேதத்தால் நமக்குவிசேஷபந்தனமானவர்களுமாய் ஞானஸ்நானத்தால் நமமோடேசர்வேசுரனுக்குப் பிள்ளைகளாகி நமக்கு ஞானசகோதரருமா யிருக்கிற சகல கிறீஸ்துவர்களையும் விசேஷபட்சத்தோடே நேசித்து வேண்டியசமயத்தி லவர்களுக்குப் பிரதானமா யுதவிசகாயஞ்செய்வதே கடமையாமே. ஆதலாலிந்தச் சுகிர்தவொழுக்கத்தைச் சுறுத்கினாயா யநுசரிப்பாயாக. அர்ச்.-சின்னப்பர் தேவசினேகமும் பிறர்சினேகமுமடங்கியபரிசுத்த சினேகத்தின் மேன்மையைப்பாராட்டி விசுவாசத்துக்கு நமபிக்கைக்கு மிதுவேமுக்கியமென்றும், தீர்க்கதரிசனம் அன்னியபாஷைகளைப்பேசுமற்புதவரம் ஞானமுதலிய தேவவரங்களொழிந்துபோக அதுவொருபோதுமொழியாதென்றும் நிச்சயித்தார். மோக்ஷவாசிகளின் சிறப்பான ஆடையதுவே: அதில்லாமல் பேரின்பவிராச்சியத்திலொருபோதும்பிரவேசங்கிடையாது. அத்தாலே மோக்ஷமகிமைக்குத்தக்கவர்களாகிறோம. ஆகையாற்சர்வேசுரனோடுஞ்சகல அர்ச்சியசிஷடர்களோடு முன்னையேகபந்தனமாக்கி யுன்னை நித்தியபேரின்ப ஆநந்தத்தாற் பூரிக்குமிந்தவுத்தமமானபுண்ணியத்தைப் பூரணமாயடைவதற்கு ஆசையோடு வருந்தக்கடவாயாக.

## உகூ௭.-நாள்.

## பகைவரையுஞ்சினேகிக்கக்கடமை.

க. அக்கினிக்குத்தண்ணீர் பொருந்தாததுபோலே பகையானது சத்தியவேத

த்தைக்குப்பரிச்சேதமொவ்வாது. அதனால் த்
தமத்தில்பிறர்சிநேகமுந் தேவசிநேகமு
மென்கிற தேவஅக்கினியையவித்துத்தேவ
கற்பனைக்குமுழுதும்விரோதமாமே. அதெ
ப்படியெனில்அநேகநேகமுறைசேசுநா
தர்பகையைமிகவுங்கண்டித்துவிலக்கிப்பிற
ர் நமக்குச்செய்யுங் குற்றங்களையெல்லாம்
பொறுக்கக்கற்பித்தார். அப்படிச் சர்வத்
துக்கு மதிபதிகர்த்தா வுன்பகையைவெ
றுத்து அதை நீ விட்டுவிடவேணுமென்
று கட்டளையிடுகிறபோதே விடமாட்டே
னென்னலாமோ? அவருடைய கற்பனை
யை யப்படி மீறக்கூடுமோ? மீளவுஞ் சே
சுநாத ருன்னால்பகைக்கப்பட்டவன் தம
க்குப் பிள்ளையென்றுஞ் சகோதரனென்
றுந் தம்மால்நேசிக்கப்பட்டுத் தமது தி
ருவிரத்தத்தா லிரட்சிக்கப் பட்டவனென்
றுந் தம்மைப்பற்றி நீயவனுக்குப்பொறு
த்தலைக் கொடுக்கவேணுமென் றுன்னைக்
கேட்கிறார். அவ்விதமாய்த் தமக்குப்பந்
தனமானவர்களி லொருவனுக்குச் செய்ய
ப்படுவதெல்லாந் தமக்கேசெய்யப்பட்ட

தா யிருக்குமென்று திருவுளம்பற்றினர். அப்படியிருக்க நீயுன்புறத்தியானைப் பகைத்தால் சேசுநாதனைப் பகைத்தாற் போலாகுமே. அதற்கு நீயஞ்சாதிருக்கலாமோ? உன்பகை அவர்மேற்சாருமென்றறிந்து மதின்கொடூரமிவ்வளவுதூரமோடவிடலாமோ? பிறனுனக்கு என்னென்ன குற்றஞ்செய்திருந்தாலும் உன்பொறுத்தலுக்கு எவ்வளவு அபாத்திரவான்களானாலுஞ் சேசுநாத ரதற்குப் பாத்திரமாயிருக்கிறாரல்லவா! அவருனக்காகத் தம்முடைய திருவிரத்தத்தைச்சிந்தித் தம்முடையபிராணனைத்தற்திருக்கத் தாமே தமக்குப் பிள்ளையாயிருக்கிறவர்களுக்காகக் கேட்கிறபொறுத்தலை நீ கொடாதிருப்பதெப்படி? ஆ! பிரியமுள்ளவனே யுன்னை மீட்டிரட்சித்த திவ்வியகர்த்தருக் கிவ்வளவுபெரிதான துரோகஞ்செய்யாம லவருடைய திருமுகத்தைப்பார்த்து வற்மமெல்லாம்விட்டுவிடக்கடவாய்.

உ. வற்மமானது வற்மிக்கிறவனுக்கே கொடியவிஷமாகும். ஒருபதிதன் பாடுப

ட்டசுரூபத்தை யெய்த அம்பு அவன்மே ற்றிரும்பி யவனைக்கொன்றதுபோலே தே வசாயலாகிய பிறர்மேல் நீயெய்கிற ப கையென்கிற அம்பு உன்மேற்றிரும்பி யுன் னுத்துமத்தைக்கொல்லும். அதெப்படி யெனில் நீயுன்புறத்தியாரை நடத்தும் பி ரகாரமே சர்வேசுர னுன்னை நடத்துவார். பிறர்மேல் நீ கோபபகைவைத்தால் தேவ நீதியின் கோபபகையும் உன்பேரிலேவந் துநிற்கும். நீங்கள் மனிதர்க்குப் பொறு த்தலைக்கொடாவிட்டால் உங்கள்பிதாவுமு ங்கள்பாவங்களைப் பொறுரொன்று சேசு நாதர்தாமே திருவுளம்பற்றினர். அவரரு ளிச்செய்த பரமண்டலமந்திரத்தைப் ப கையோடு நீசொல்லுகையில் எங்கள்கடன் காரருக்கு நாங்கள்பொறுக்குமாட்போல் எங்கள்கடன்களை யெங்களுக்குப் பொறு மென்கிறபோது சுவாமீ! எனக்குக்குற்ற ஞ்செய்தவனை நான்பொறுக்காமற் பகை க்கிறதுபோலே நீருமென்னைப் பொறுக் காமல்வற்மியும், அவனை நான் பழிவாங்கத் தேடுகிறதுபோலே என்னை நீரும்பழிவா

ங்குமென்பதற்குச் சமானமாமே. ஆகை யாலிந்தவாக்கியத்தைக்கொண்டு நீயேயு னக்குக்கடின தீர்வையிடுகிறாய். அதெப்ப டியெனில் நீவிளுவறிந்தநாள்முதற்கொண் டு நீசர்வேசுரனுக்குச் செய்தபொருந்தா த பாவத்துரோகங்களையெல்லா மெண் ணக்கூடுமோ? பிறருனக் கென்னென்னகு ற்றஞ்செய்திருந்தாலும் அந்தக்குற்றங்க ளையு நீசர்வேசுரனுக்குச் செய்ததுரோக ங்களையுஞ் சீர்தூக்கிப்பார்த்தா லிதுகளள வில்லாக்கன மதிகங்கொண்டிருக்கிறதாக விளங்குமல்லவா? அப்படியிருக்க நீபொ றுயாகில் சர்வேசுரனுன்பாவங்களை யெப் படிப்பொறுக்கக்கூடும்? ஆதலா லுன்ப கையினாலே யுன்பாவங்களோடு நித்தியந ரகாக்கினியி லமிழ்ந்தத்திரிகிறாய். இதைந ன்றாய்நினை.

௫. வற்மத்தை விட்டுவிடுகிறதுபோதா மல் தன்பகைவனைச்சிநேகிப்பதே தேவ கட்டளையாமே. இதைக்குறித்துச் சேசு நாதர் திருவுளம்பற்றினதாவது: பரமண் டலங்களிலேயிருக்கிறவருமாய் நல்லோர்

பேரிலுந் தீயோர்பேரிலுந் தமது சூரிய
னையுதிப்பிக்கிறவருமாய் நீதிமான்கள்மே
லும் அநீதர்மேலும் மழைபெய்விக்கிறவ
ருமாயிருக்கிற உங்கள்பிதாவுக்கேற்ற மக்
களாகத்தக்கதாக உங்கள்சத்துராதிகளைச்
சிநேகியுங்கள், உங்களைப் பகைக்கிறவர்க
ளுக்கு நன்மைசெய்யுங்கள், உங்களை யவ
தூறு முபத்திரவமும் படுத்துகிறவர்களு
க்காக மன்றுடுங்கள், உங்களைச்சபிக்கிறவ
ர்களையாசீர்வதியுங்களென்று திருவுளம்ப
ற்றினர். மீளவு மிதைத் தமது திவ்வியமா
திரிகையாலும்படிப்பிக்கத்தக்கதாக அவ
சிலுவையிலேமரிக்கிறசமயத்தில் தம்மை
பற்மித்து நிந்தித்துத்தூஷித்துக் கொ
ல்ப்படுத்துகிறவர்களுக்காகத் தம்முடை
ய பரமபிதாவைமன்றுடிப் பொறுத்தலை
க்கேட்டார். அவரவர் தந்தம் பகையாளிக
ரின்குற்றங்களைப்பொறுத்து அவர்களை
ச்சிநேகிக்கவேணுமென்று திவ்வியகர்த்
த ரித்தனை யுறுதியான கட்டளையினுலும்
இப்படிப்பட்ட வதிசயமான மாதிரிகை
யினுலுங் கற்பித்திருக்கையில் நீயின்ன மு

ன்பகைவரைப் பொறுத்துச் சிநேகியா திருப்பதென்ன? அவர்களுனக்கென்ன ன்ன குற்றஞ்செய்திருந்தபோதிலும் யூதர் சேசுநாதருக்குச் செய்த துரோகங்களுக்கு மவரைச்சிலுவையிலறைந்த கொலைபாதகத்துக்கும் நிகராமோ?

தன் பகையாளிகளோடு சமாதானமாவதற்கொரு தாமசமுமாகாது. சூரியனுங்கள் கோபத்தின்மேல் அஸ்தமிக்கவேண்டாமென்று வேதக்கட்டளையாமே. ஆதலால் இராவருமுன்னே தானே பகைவற்மமெல்லாமவிட்டுநித்தியசமாதானமாகவேண்டும். வற்மத்தோடேநித்திரைசெய்வது தன்மடியிற்புகுந்தவிஷசாப்பத்தோடு நித்திரைசெய்வதற்குச்சமானம். சுகத்துடனேநித்திரைசெய்யப்போனவநேகர் நித்திரையில் சடிதியாய்ச்செத்தார்களே. அப்படியே நீ திடீரென்றுபகையோடேசெத்தால் நரகத்திலேவிழுவது தப்பாது. மேலும் பகைசாவானபாவமாகையால் அது உன்மனதிலுள்ள தனையு முன்னிடத்திலொருபுண்ணியமும்பலன்கொள்ளாது. உன்கையால்சர்வேசுரன் ஒருகாணிக்கைமுதலா யேற்றுக்கொள்ளார். மேலுஞ்சேசுநாதசுவாமி திருவுளமபற்றினதாவது: நீ பீடத்துக்கண்டையில் உன்காணிக்கையையொப்புக்கொடுக்கிறபோது உன்சகோதரன் உன்பேரில் ஏதோமனஸ்தாபங்கொண்டிருக்கிறனென்று நீ ஞாபகப்படுத்திக்கொள்ளுவாயாகில் பீடத்துக்குமுன்பாகவுன்காணிக்கையைவிட்டுமுந்தியுன்சகோதரனோடேயுறவாகப்போகக்கடவாய். பின்புவந் துன்காணிக்கையை ஒப்புக்கொடுப்பாயென்றார். இந்தத்திருவாக்கியத்தை ந

னுயிக்கவனித்தாற் சிலர்சொல்லுகிறபடியே வற்ம
ம் எனக்கில்லை, என்னெதிராளிக்குமாத்திரமுண்டெ
ன்றுசமாதானமாகததேடாததற்கு நியாயமில்லை. ஏ
னெனி லப்படிப்பட்டவர்களைததானே சேசுநாதர்ச
மாதானமாகப்போகச்சொன்னார். பின்னும பரமகர்
த்தர் சமாதானமில்லாதவர்கள்கையாற் காணிக்கை
யேற்றுக்கொள்ளமாட்டாதிருக்க வற்மததோடேதம
மைததேவநறகருணையிலவாங்கவருகிறவர்களையேறறு
க்கொள்ளக்கூடுமோ? பரிச்சேதங்கூடாது. ஆதலாநீ
பகையோடேதேவநற்கருணைவாங்க வொருபோதும
நீடதலைதயண்டததுணியாதே. ஆகிலுந் தேவநற்கரு
ணையென்கிற திவ்வியபோசனமின்றி யுன்னுதவுமன்
கெட்டுபபோகவிடவுமாகாது. ஆதலா லவசியமாய்
ப்பகையைததீர்தது, நிததியசமாதானமாகிததக்கவூ
யத்ததோடு திவ்வியநன்மைவாங்கவேண்டும். ஆனா
ல் என்பகையாளியெனக்குமிகவும்பொல்லாபபுச்செ
ய்தான, என்னையாவலாதிபபடுத்தினான், என்னைத்
தூஷித்துக் கொடியபேச்செல்லாம்பேசினான், என
பிழைப்பையுங்கெடுத்தான், நானவனுக் கெப்படிப்
பொறுத்தல் கொடுப்பேனென்பாயாக்கும. ஆ! பிரி
யமுள்ளவனே, அவனுனக்குச்செய்தகுற்றங்களைமா
த்திரம் பெரிதாயெண்ணிமற்றதெல்லாமேன்பாராம
ற்போகிறாய்? அநேகமுறை கோபமுஞ் சுய...கூடு
னானக்குருடுண்டாக்கி மோசம்போக்கின்றது. வற
மத்தினாலுண்டாகிறமயக்கத்தி லோரற்ப பேச்சுவி
லேசானகாரியமுமொருமலையைப்போலப பெரிதாய்
த்தோன்றும. மேலும நீயேயுன்னெதிராளிக்கு மற்
றமனிதர்க்குஞ் சர்வேசுரனுக்கும விசேஷமாயநேக
குறறங்களைச்செய்யவில்லையோ? உனக்குபபொறுத்
தல்கிடைக்குமபடிக்கு நீ பொறுக்கவேண்டாமோ?
பின்னு மவன்பேரிலேமாத்திரங் குறறமெல்லாமிருந்

தபோதிலுமவனுனக்கென்னவதிகதின்மைசெய்திருந் தபோதிலு மதுசமாதானத்துக்குத் தடையாயிருக்க லாகாது. ஏனெனில் அந்தப்பொல்லாப்பெலலா மு ன்பகையினாலேதிராத்துமன்றி நீயேயுன்வற்மத்தினா லுனக்குவருவிக்கிற தேவகோபாச்கினைமுதலிய தின் மைகளுக்குக்கணக்குமில்லை. அதுகளை நீயணராதபடி க்குப் பகையுன்னைமயக்கிக் கேட்டுக்குள்ளாக்குகின்ற தென்றுபார் : ஒருத்த னுன்னிடத்தி லொருகாசைத் திருடினதைப்பற்றி யுன் ஐஸ்திபாஸ்தியெல்லாம் ஆற் றிலெறிந்துபோடுவாயோ ? ஓரடிபட்டதைப்பற்றி நீயே யுன்னைக்கத்தியால்குத்திக்கொல்லுவாயோ ? அ ப்படிச்செய்வது முதிர்ந்தபைத்தியமென்பாயே. ஆ னாலொருவ னுன்னைத்திட்டினசிலபேச்சுக்களையும் உ னக்குவருவித்தசில நஷ்டத்தையும்பற்றி யுன் ஞானந ன்மையெல்லாம்ழித்து, மோக்ஷசுதந்தரமிழந்து, ப கையென்கிறகத்தியா லுன்னாத்துமத்தைக் கொன்று, தேவகோபத்துக்கு நித்தியநரகாக்கினைக்கு முள்ளா கப்போகிறது எவவளவோவதிகபைத்தியமுங் கேடு மாகும் ! அப்படி நீயே யுனக்குச்சத்துருவாகவேண்டா ம். உன்னெதிராளி யுனக்குச்செய்த பொல்லாப்பை விட அவன் தன்னாத்துமத்துக்கேவருவிக்கிறசேதமதி கமெனகிறதினாலே யவன்மேல்மனமிரங்கி யவனுக் காகச்சர்வேசுரனைமன்றாடுவதே நியாயம. அப்படிப் பட்டவிரக்கப்பொறுமைசமாதானத்தா லுனக்கு ம வனுக்கும் வந்தபொல்லாப்பெல்லாம் பரிகாரமாகித் தீருமொழிய மற்றப்படியல்ல. ஆனாலெனக்குவற்ம மேயில்லை. இன்னானின்னானேடேபேசமாத்திரமாட் டேனென்று லதுவுமோசமு நமபக்கூடாதவார்த்தை யுமெனத்தகும. ஏனெனிற புகை நெருப்பின்டை யாளமாயிருக்கிறதுபோலே தன்னெதிராளியோடுபே சாதடாமைவழக்கமாய்வற்மத்தின் தப்பாத அடை

பாளமாயிருக்கும். பின்னையுமென் பகைபாளியெனக்குச்சின்னவன்.முந்திநான்வனேடேபேசப்போவானேனென்பாயோ? அப்படியுன்னந்தஸ்துக்கு மவன்றஸ்துக்குங் கொஞ்சவித்தியாசமிருந்தபோதிலும அதுவுஞ்சமாதானத்துக்குத் தடையாயிருக்கலாகாதே. ஏனெனில்ப்படிப்பட்ட வித்தியாசத்தைவிடச் சர்வேசுரனுக்கும் மனிதருக்கு மெவ்வளவோதூரவித்தியாசமுண்டென்று யோசித்துக்கொள். ஆகிலும் பரமகர்த்தர் மனிதர்க்குச் சகலநன்மையுஞ் செய்தபின்னரவர்களாலே நன்றிகெட்ட வக்கிரமத்துரோகமெல்லாஞ்செய்யப்பட்டிருந்தாலு மவர்களுடையபாவங்களைப்பொறுமையோடேசகித்து,அதுகளால்வர்களுக்குவந்தநின்மைகளைப் பரிகாரஞ்செய்யவு மவர்களோடே மறுபடியுறவாகவுந் தமை மிகவுந்தாழ்த்தியவதரித்துத் தாமேயவர்களைத் தேடத்திருவுளமாகியெழுந்தருளிவந்தாரே. நீயே யவருக்கு அநேகதுரோகஞ்செய்திருந்தபோதிலு முனக்குமறுபடியுங் கணக்கில்லாதநன்மைசெய் துன்னை யிரட்சிக்கவேண்டிய பலமுறை யுன்பாவங்களை மன்னித்து, உன்னேடு மறுபடியுறவாகத் தமதிஷ்டப்பிரசாதத்தாலுந் தேவநற்கருணையினுலு முன்னிடத்திலெழுந்தருளித் தம்மைத்தாமே யுனக்குத்தந்தருளினுரல்லோ. அதறகுப்பின்னும் உன்வற்மத்தால் நீ யவருக்கேற்காத பாவியாயிருந்தாலு முன்னிடத்திற்ப்ழிவாங்க நியாயமாயிருந்து மின்னமும பொறுக்க ஆயத்தமாயிருக்கிறுர். நீங்கள்மனிதர்குற்றங்களை யவர்களுக்குப்பொறுப்பீர்களேயாகிலுங்கள்பரமபிதாவுமுங்கள்பாவங்களை யுங்களுக்குமன்னிப்பாரொன்று திருவுளமபற்றினுர். இப்படிச்சர்வத்துக்கு மதிபதிகர்த்தாவாகியசர்வேசுரன் தமக்கேசெய்யப்பட்ட கொடிய துரோகங்களைமுதலாய்த் தமதுசமூகத்தில் நீசப்புழுக்களாகியபாவிகளுக்

குத் தாமேமுந்திப்பொறுத்து, அவர்களையிரட்சிக்கும்படிக்கு அவர்களோடுறவாகத்தேடுகிறபோதே நீயுனக்குச்சரிசமானரும் உன்சகோதரருமாகிய மனிதனைத்தேடிப் பொறுத்தலைக்கொடாதிருக்கலாமோ? இன்னமுன்பகையாளிகளோடே சமாதான சினேகிதமாகாதபடிக்கு என்னசாக்குப்போக்குச் சொல்லக்கூடும்? முந்திச்சமாதானத்துக்குப் போகிறவனெவனோ அவன்தா ன்திகபுண்ணியபலனையடைவான். உன்பகையாளியுனக்குச்சின்னவனானால் வனோடுதயவுபக்ஷமாய்ப்பேசுவதேசமாதானமாகும். அவனுனக்குச் சரியொத்தவனாகில் தக்கபடிமறுவுறவாடிச் சமாதானமாகவேணும். அவனுனக்குப்பெரியவனாயிருப்பானாகிற்சமாதானமாகப் பொறுதியையைக் கேட்பதேமுறை. ஆனால்வெளிச்சடங்குக்குமாத்திர முன்பகையாளிகளுக்குமுன்பாகக்கைகுவித்துச் சர்வேசுரனுக்குத் தோத்திரஞ்சொல்வதுபோதாது. அவர்களுனக்குச் செய்தகுற்றங்களையெல்லா முழுமனதுடனே பொறுத்து மறக்கவும், அவர்களைச்சினேகித்து அவர்களுக்குன்னாலியன்றமட்டு நன்றியுபகாரஞ்செய்யவுங் கடவாய். மீளவு மொருவிசையல்லவே உனக்குக்குற்றஞ்செய்யப்படும்போதெல்லா மப்படியேபொறுக்கவேண்டுமென்பதுதிவ்வியகர்த்தருடைய கற்பனையாமே. அதெப்படியெனில்ஒருநாள் அர்ச்.-இராயப்பர் அவரைநோக்கி யாண்டவரோ! என்சகோதர னெனக்குக் குற்றஞ்செய்வதை யெத்தனைதரம்பொறுப்பேன். ஏழுதரமோவென்றுகேட்டதற்கு ஆண்டவர்பிரத்தியுத்தரமாக நாமுனக்குக்கற்பிக்கிறது ஏழுதரமல்ல, எழுபதுதரமாமேயென்று திருவுளம்பற்றினார். இதனாற்கணக்கில்லாததரம்பொறுக்கவேணுமென்று கற்பித்தாற்போலாயிற்று. அப்படியல்லோசர்வேசுரனுன்னிடத்திலு மற்றமனுமக்களிடத்திலு மெண்ணிக்

கைக்குள்ளடங்காத குற்றங்களைப் பொறுத்துக்கொண்டுவருகிறார். பொறுமை யுனக்கில்லாததுபோலே யவருக்குமில்லாமற்போயிருக்குமாகி லெத்தனையோ நாளைக்குமுன்னே யுன்னையுஞ் சர்வலோகத்தையுஞ் சங்கரித்திருப்பார். ஆனால் தன்பகையாளிகள்மட்டி லிவ்வளவுபொறுமையாயிருப்பதும் அவர்களைச்சிநேகிப்பது மனிதராறகூடாதென்றெண்ணுவாயாகில் நம்மைப்போல மனிதராயிருந்த அர்ச்சியசிஷ்டர்களிடத்தில்விளங்கின அதிசயப்பொறுமையின் திஷ்டாந்தங்களைப்பார். சர்வேசுரனா விராசாங்கத்துக்கேற்படுத்தப்பட்டிருந்த தாவீதன் சவுலென்கிறவிராசாவினால் தமக்குச்செய்யப்பட்டகொடியவநியாயவுபத்திரவத்தைநெடுநாள்பொறுத்ததுமன்றித் தம்மைக்கொல்லத்தேடுகையில் தமதுகையில்கப்பட்டிருந்த அவனைத் தம்மைச்சேர்ந்தவர்கள் கொல்லாதபடிக்கு விலக்கி யிரண்டுவிசையு மவனைக்காப்பாற்றினார். பின்னு மவன்படையிற்பட்டிறந்ததினால் மிகவுந்துக்கித்தழுதார். அர்ச். - முடியப்பர் தம்மைக்கல்லாலெறிந்து கொலைப்படுத்துகிறவர்களுக்காகச் சர்வேசுரனைமன்றாடிப் பொறுத்தலைக்கேட்டார். இன்னமவேறொருதிஷ்டாந்தத்தைக்கேள். குவால்பேர்த்து அருளப்பனென்கிற துரைமகன்படையிற்சேவித்திருக்கையி லவருடையசகோதரனை யொருத்தன்கொலைசெய்தான். ஆதலாற்காலத்தின்வழக்கப்படியே கொன்றவனைக்கொன்று பழிவாங்குதற்குப் பெரியவெள்ளிக்கிழமையிலேதானே நல்லசமயங்கிடைக்கவே அவர் வாளையுருவிவெட்டப்போனார். அப்போது கொலைபாதகன் சேசுநாதர்சிலுவையிலறையுண்டபாவனையாகத்தன்கரங்களைவிரித்து,அவருடையதிருநாமத்தாற ஜீவனையும்பொறுத்தலையு மிரந்துகேட்டான். அதற்கு அருளப்பர் மனமிளகிப் பாவிகளுக்காக மரித்தகர்த்

தாைப்பற்றி யவனுக்குப்பொறுத்தலைத்தந்து, அவனைச்சகோதரனாக அணைத்துக்கொண்டார். பின்னுமொருகோயிலிற்பிரவேசித்துப் பாடுபட்டகர்த்தர் சுரூபத்துக்குமுன்பாகமன்றாடிச் சுவாமீ பொறுக்கிறவர்களுக்குப் பொறுத்தலைத்தரவாரத்தைப்பாடுகொடுத்தீரே. இதோ என்சத்துராதிக்குப்பொறுத்தலைத் தந்தேன். என்பாவங்களைப்பொறுத்தருளுமென்றார். அதற்குக்கர்த்தர் பொறுத்தோமென்றாற்போலே சுரூப மற்புதமாகத் தலைகுனிந்தது. அந்தவற்புதத்தைக்கண்டதினாலுந் தமதாத்துமத்தில் நிறைந்த தேவவரப்பிரசாதத்தினாலு மவரகமகிழ்ந் துலோகத்தைத்துறந்து சந்நியாசம்பண்ணிப் பெரிய அர்ச்சியசிஷ்டரானார். அப்படியே நீயுமுன்பகையாளிகளுக்குப் பொறுத்தலைத்தந்து சர்வேசுரனிடத்திலே கிருபையையு மட்டில்லாப்புண்ணியசம்பாவனையையு மடைவாயாக.

---

## ௬௰ம். - நாள்.

---

## தேவமாதா வணக்கத்தினுத்தமம்.

௧. உத்தமபுண்ணியத்துக்கு முயர்ந்த பட்டத்துக்குந் தக்கவணக்கஞ்செலுத்துவது அகத்தியமான முறையல்லவோ! அப்படியிருக்கப் பரிசுத்தகன்னிமரியம்மாளை வணங்குவது எவ்வளவோ நியாயமாமே. ஏனெனில் மூந்தமுந்த அத்திருக்கன்

னி மாசில்லாமலுற்பவித்தவளுமாய்ச் சக லசிஷ்டிகளிலு மிகுந்த மேன்மையுள்ளவ ளுமாய்ப் பிறியதத்தத்தினாற் பூரணமா னவளுமா யதிசயதேவவரங்களாலுஞ் சக ல உத்தம சுகிர்தங்களினாலும் அலங்கரிக்க ப்பட்டவளுமா யிருக்கிறாள். அவளுடை யபுண்ணியங்களைச சரியாய் விவரிக்க மனி தர் நாவுகளினாலேகூடாது. சகல அர்ச்சிய சிஷ்டர்களிடத்திலு மெத்தனையாச்சரியத் துக்குரியபுண்ணியங்கள் நிறைந்திருந்தா லும் பூரணசந்திரன் சகலநட்சத்திரங்களை விட வானத்துக்கும்பூமிக்குங் குளிர்ந்தபி ரகாசத்தோடு விளங்குகிறதுபோலே தேவ மாதா அவர்களெல்லாரையும்விடப் பர லோகத்துக்கும் பூலோகத்துக்கு மிக்க வொளியோடும் நிறைந்ததயவோடும் வி ளங்கிப் பாவவிருளில்மிழ்ந்தின மனிதர்க் குப்புண்ணியநெறியைக் காட்டுகின்றாள். பின்னும் இத்திருக்கன்னிபெற்ற தேவமா தாவென்கிறபட்டத்துக்கு நிகரானபட்ட ம் படைப்புண்ட சகல வஸ்துக்களுக்குள் ளேயுமில்லை. அதினுடையமாட்சிமை ம

னிதர்க்குமாத்திரமல்லவே, மோட்சவாசி களுக்குமுதலாய் மகிமைவாக்குக்கெட்டாததா யிருக்கின்றது. ஏனெனில் சர்வத்துக்கும்வல்லவருமாய்ச் சகலலோகங்களுக்கும் ஆண்டவருமாய்ப் பரமதேவனுமாயிருக்கிற சுதனாகியசர்வேசுர னிந்தப்பரிசுத்த கன்னியினுதரத்தில்அர்ப்புதமாயவதரித்து அவளுடைய திருமகனாகி முப்பதுவருஷ காலம் வணக்கத்துடனே யவளுக்குக் கீழ்ப்படிந்துகொண்டுவந்தார். இப்படிச் சர்வத்துக்கு மதிபதியிராசாவாகிய கர்த்தர்வணங்கிக் கீழ்ப்படிந்தபரமதேவதாயாரை நாம்பத்தியுடன் வணங்காதிருக்கக் கூடுமோ? இராசாவையீன்றதாயாருக்குச்செய்யப்படுந் தோத்திரவணக்கம் இராசாவுக்குப்பிரியமும் வணக்கமுமாயிருக்கிறது போலே தேவமாதாவுக்குச் செய்யப்படுந் தோத்திரவணக்கமெல்லாந் திவ்வியகுமாரனுக்குப் பிரியமுந் தோத்திரமுமாயிருப்பதுமல்லாமல் அத்திருமாதாவுக்கு வணக்கக்குறை யவமானஞ்செய்தாற் கர்த்தருக்கேற்காத துரோகமுமாமே. மீளவுத்

ீதவமாதா நமக்கும் வணக்கத்துக்குரிய தாயாராயிருக்கிறதன்றியுஞ்சர்வத்துக்கும் இராக்கினியுமாஞள். அதெப்படியெனி லெத்தனையிராச்சியங்களிலோரிராசாவின் செங்கோல்செல்லுமோ வத்தனையிராச்சி பங்களுக்கு மவனுடைய தாயா ரிராக்கினி யாயிருப்பாள். ஆதலால் தேவமாதாவெ ற்ற திருக்குமாரன் செங்கோன்மை சர்வ லோகத்திலுஞ் செல்லுகையால் இந்தப் பரமதாயார் சர்வலோகத்துக்கும் இராக்கி னியாயிருக்கிருள். இதெல்லாமிப்படியி ருக்கையால் தேவ ஆராதனைமாத்திர நீங் கலாக மற்றச் சகலவணக்கத்துதிஸ்தோத்தி ரத்துக்கு முரியவளா யிருக்கிருளென்ப துறுதி.

௨. தேவமாதாவை வேண்டிக்கொள் ளுதற்குஞ் சர்வநியாயமு நம்பிக்கையுமு ண்டு. அதேதெனில் அந்தப்பரமதாயார் நமக்குக் கிருபை யிரக்கப்பட்சநிறைந்த மாதாவாயிருக்கின்றமையால் நமதுமன் ருட்டுக்குப் பராமுகமா யிருக்கமாட்டா ள். அவளுடைய பிரியகுமாரஞகிய சே

சுநாதர் கபாலமலையில் சிலுவையினின்று அவளைநோக்கித் தம்முடையசிஷனைக்காண்பித்து இதோவுன்மகனென்று திருவுளம்பற்றினதினால் தமதிடமாகத் தம்முடையசீஷராக்களாகிய நம்மெல்லாரையும் வளுக்குப் புத்திரராக வொப்பித்தருளினார். நாமிப்படிப்பட்ட ஆண்டவளுக்குப் பிள்ளைகளாயிருப்பதற்கு அபாத்திரவான்களாயிருந்தாலுந் தமமுடையதிருக்குமாரன் சிலுவையிலேமரிக்கிறவேளையில் தமக்குவசனித்த கடைசிவாக்கியத்தை மறக்கமாட்டாமலவளைப்பற்றி யன்போடே நம்மைப் பிள்ளைகளாக வேற்றுக்கொண்டிருக்கிறாளென்கிறதுக்குச் சந்தேகமில்லை. ஆதலால் தாயானவள் தன்பிள்ளைகளையிகுந்தபக்ஷத்தோடே விசாரித்துக்காப்பாற்றிச் சவரட்சணைசெய்கிறதுபோலே தேவமாதா நம்மை யநந்ததபட்சத்தோடே விசாரித்துக்காப்பாற்றி யீடேற்றவிரும்புகிறாளென்பதுறுதி. பிள்ளைகஸ்தியிக்கட்டி லழுது அபயமிடுஞ்சத்தந் தாயிருதயத்தில் அம்புபோல்தைத்து அதை

யிளகச்செய்யுமல்லோ? அப்படியிருக்கத் தயாபத்தாயாகிய தேவமாதா தம்முடைய பிள்ளைகளிக்கட்டில் தம்மைநோக்கிய பயமிடுஞ்சத்தத்தை யிரக்கமில்லாமற்கேட்கக்கூடுமோ? நமக்குமாதாவாகக் குறிக்கப்படுவதற்குமுன்னமே மனிதர்பேரில் திசய இருதையிரக்கத்தா லவர்க ளிரட்சிப்புக்காகத் தம்மாலியன்றவுதவியெல்லாஞ்செய்தாள். அதற்காகவே யுலகஇரட்சகருக்குமாதாவாவதற்குச் சம்மதித்தாள். நமக்காகச் சிலுவையிலிறையுண்ட திருமேனியு நம்மையிரட்சித்ததிருவுதிரமு மவருடைய திருவுதரத்தி லுண்டானதல்லோ? சேசுநாதரவளுக்கு ஏகநேசகுமாரனு யிருந்தாலும்மனிதரிரட்சணியத்துக்காக அவரையிரத்தப்பலியாக வொப்புக்கொடுத்தாள். தாமேயவருடைய சிலுவையடியிற் படாதகஸ்தியவமானமெல்லாம்பட்டு வியாகுலமென்கிறவாளா லூடுருவப்பட மனமொப்பினுள். இப்படியிருக்கத் தேவமாதாவுக்கு நமதுபேரிலுள்ள விரக்கக்கிருபைப்பட்சத்தையு நம்மை யீடேற்றுத

ற்குள்ள வாசையையு மிவ்வளவென்று ஆ
ராலளவறுக்கக்கூடும்!

௩. நமக்குத்தேவகிருபை யுதவிசகாய
ம்வருவிக்கத் தேவமாதாவின் மன்றாட்டு
க்குச் சர்வபலமுமுண்டு. இதைநியாயத்
தோடே வேதபாரகர் நிச்சயித்தார்கள். அ
தெப்படியேனில் அந்தப்பரமநாயகியி
ன் திருக்குமாரன் சர்வவல்லவரா யிருக்கிற
தினாலுந் தம்முடையநேசதாயார் மன்றா
ட்டைத்தள்ளமாட்டாததினாலுந்தேவமா
தாகேட்டதெல்லாந் தப்பாமலாகும். சே
சுநாதரிவ்வுலகத்திற் சஞ்சரித்துத் தமது
திருவேதத்தைப் போதிக்கத்துவக்கிறசம
யத்தில் தாமற்புதஞ்செய்யுநேர மின்ன
ம்வரவில்லையென்றபோதிலுந் தம்முடை
ய திருமாதாவின் மன்றாட்டைப்பற்றித் த
மதுமுதலற்புதத்தைச் செய்தருளினார். அ
வர் அத்திருத்தாயார்பேரில்வைத்தநேசப்
பெருக்கம் மோக்ஷவிராச்சியத்தி லதிகரி
த்தாற்போலே பூரணமாய்விளங்கி யிருப்
பதொழிய மற்றப்படியல்ல. ஒருநாள்
அர்ச்.-விறிசித்தம்மாள் ஒரு தரிசனைகண்

ரி சேசுநாதர்தம்முடைய திருத்தாயாரை நோக்கி மாதாவேயுமக்குச்சித்தமானதை நம்மிடத்திற்கேளும், உம்முடையமன்று ட்டு வியர்த்தமாயிருக்கமாட்டாது. நீர் பூலோகத்தில் நமதுவேண்டலையொருபோதுந் தள்ளாததினாலே பரலோகத்தில்நாமும் உமதுவேண்டலைத் தள்ளமாட்டோமென்றதைக்கேட்டெழுதினாள். அர்ச்.-தமியானி இராயப்பர் தேவமாதாவைப்புகழ்ந்து தேவகிருபையின் பொக்கிஷங்களெல்லாமுமது திருக்கைவசமாயிருக்கிறதென்று வசனித்தார். சகலவரப்பிரசாதங்களையுந் தந்தருளுகிறவள் நீரோ, நமதிரட்சணிய முமது திருக்கையிலுள்ளதென்றும் அர்ச்.-பெற்நர்தீனெழுதினார். சர்வேசுரன்தேவமாதாவைக் கனமகிமைப்படுத்தத்தக்கதாக அவள்மூலமாகநமக்குத் திவ்விய இரட்சகர் தந்தருளப்பட்டாப்போலவள்மூலமாகவு மவருடைய புண்ணியபேறுக ளிஷ்டப்பிரசாதமுதலியவரங்கள் நமக்குக்கிடைக்கும்படிச் சித்தமானதொன்று மதீறநேகசாஸ்திரிகளும் அர்ச்சிய

சிஷ்டர்களும் போதித்தார்கள். அதைப்பற்றிச் சாதாரணதிருச்சபை தேவமாதாவைத் துதித்து வல்லமையுள்ளகன்னியே! பரலோகத்தின்வாசலே, எங்கள்சீவமே, எங்கள்தஞ்சமே, எங்கள்மதுரமேயென்று மன்றாடுவது தக்கமுறைமையாயிற்று. ஆதலால் நமக்கன்புள்ளதாயாருமாய்ப் பரமதேவமாதாவுமாய்த் தேவ அருளாகிய திரவியப்பெருக்கவாய்க்காலுமா யிருக்கிற பரலோக பூலோக இராக்கினியுடைய மன்றாட்டினுதவியினு லீடேற்றமுதலிய சகலநன்மையுங் கிடைக்குமேயல்லாமற் கிடைக்கக்கூடாத வுபகாரசகாயமேயில்லை. அப்படியிருக்க இந்தப் பரமநாயகியையெவ்வளவோபத்திநம்பிக்கையோடே வணங்கித்துதித்து வேண்டிக்கொள்ளக்கடவோம்.

ஆனால் தேவமாதாவுக்குப் பிரியப்படவு மவளிடத்தில் ஆதரவுபெறவும பிரதானமாய்ச்செய்யவேண்டியதென்னவென்றால் அவளிடததில் விளங்கின புண்ணியமாதிரிகைகளைச்சுமுத்திரையாயநுசரிக்கவேணும். நீசஅடிமைகளோடேகூடித் தமக்குத்துரோகஞ்செய்து அயோக்கியமாய்நடக்குந் தஞ்சொந்தப் பிள்ளைகளை இராசாக்கள் தமக்கு மக்களல்லவென்று வெறுத்

னுப்பிறக்கணித்துத்தள்ளுவார்களல்லவோ? அப்படி
யிருக்கச் சேசுநாதருக்குத்துரோகஞ்செய்து தன்னை
ப் பசாசுக்கடிமையாக்கித்துர்க்கந்தப்பாவச்சேற்றி
ற்புரளும் அசுத்தமானபாவியைத்தமக்குப் பிள்ளையா
கப்பரிசுத்ததேவமாதாவேற்றுக்கொள்ளக்கூடுமோ?
பாவியானவனொருவன் ஒருநாள் தேவமாதாவை நோ
க்கி நீரெங்களுக்குத் தாயாராயிருக்கிறீரென்று காண்
பியுமென்று வேண்டிக்கொள்ளவே தேவமாதா பிரத்
தியுத்தரமாக நீயேயுன்னை நமக்கு மகனாகக் காண்பி
யென்றுரைத்தருளினாள். ஆதலாற் பிரியமுள்ளவனே!
தேவமாதாவின் சுகிர்தமாதிரிகையையநுசரிப்பதானு
ன்னை அந்தப்பரமஇராக்கினிக்கேற்றபிள்ளையாகக்கா
ண்பிக்கக்கடவாய். அத்திருநாயகி சகல உத்தமபுண்
ணியங்களினால்அலங்கரிக்கப்பட்டிருந்தாலுமிகுதியா
ன தாழ்ச்சியுங் கெடாதகன்னிமையு நிகரில்லாததேவ
சினேகமும உத்தம பிறர்சினேகமுமாறாதபொறுமை
யும்விசேஷவெளியோட்டவளிடத்தில்விளங்கினதாமே.
அதெப்படியெனிலபரலோகத்தினின்றெழுந்தருளிவ
ந்த தேவதூதன் அவளைப்பிறிபதத்தத்தினால்பூரணமா
னவளென்றுவாழ்த்தி அவள்தேவகுமாரனுக்குப்பரம
தாயாவதற்குநியமிக்கப்பட்டிருக்கிறாளென்று அறிவி
த்தபோதே, அர்ச்.-கன்னிமரியம்மாள் திசயமானதா
ழ்ச்சியால்த்தப்புகழுக்கஞ்சித்தம்மைச்சர்வேசுரனு
டைய அடிமையென்றாள். கெடாதகன்னிமையின்மே
ல்வைத்தவநந்த இஷ்டத்தைப்பற்றிக்கன்னிசுத்தத்
தைக்கைநவிடுவதைவிடத் தேவமாதாவென்கிற பட்ட
முஞ் சர்வலோகத்தினிராக்கினியென்கிறமகிமையுந்த
மக்குத்தேவையில்லையென்றிருந்தாள். ஆதலால் தம்
முடையகன்னிமைக்கொருகுறையுமின்றி இஸ்பிரீத்து
சாந்துவின் அற்புதமானஇஷ்டப்பிரசாதத்தினால்தா
ம் தேவகுமாரனைப்பெறுவதை யறிந்தபின்புமாத்திர

ந் தேவமாதாவாவதற்குச்சம்மதித்தாளொழிய மற்ற
ப்படியல்ல. தேவசினேகமுதலிய சுகிர்தமியற்கிகளில்
தாமுற்பவித்தநாள்முதல் தம்முடையசீவியகாலமெல்
லாமொருகுறையுமின்றிச் செலவழித்தாளென்பதுறு
தி. தேவசினேகத்தையும்பிறர்சினேகத்தையும்பற்றித்
தேவநீதிக்குத்தரிப்பாகவு மனிதர்க்கிரட்சிப்பாகவுந்
தம்முடைய ஏகநேசகுமார னிரத்தப்பலியாவதற்கு
ச்சம்மதித்து அவனைப்பின்சென்றாள். அவரோடேகூ
டத்தேவசித்தத்தின்படியேயெண்ணிலுஞ்சொல்லிலு
மடங்காத்துன்பதுயரவவமானவியாகுலங்களுக்கும் அ
சையாத தைரியபொறுமையோடுட்பட்டு அவர்மரித்
தவேளையிலுமுறையிடவாய்திறவாமல்வரரையுண்டசி
லுவையடியில் நிலைநின்று அவரோடேதாமும் பலியா
கவிரும்பினாள். அவளுடையபுண்ணியங்களின் மாட்சி
மையை விவரிக்கவெணுமாகில் முடியாது. அப்படியி
ருக்க, நீயந்தப்புண்ணியங்களை யநுசரிக்காமல் அப்ப
டிப்பட்டபரிசுத்தமாதாவுக்கு எப்படிப்பிரியப்படக்
கூடும் ? அவள்பேரிற் பத்தியில்லாமலு மெப்படிக்க
ரையேறக்கூடும? தேவமாதாவின்பேரி லுண்மையா
ன பத்தியீடேற்றத்தி னிச்சயமான குறிப்பென்றும்
அந்த ஆண்டவள்பேரிலே பத்தியில்லாமை நித்திய ஆ
க்கினைக்குள்ளாவதற் கடையாளமென்றும் வேதபார
கர்கள்நிச்சயித்தார்கள், ஆதலால்ன்புவணக்கத்துக்கு
ரிய இத்திருத்தாயார்பேரி லுருக்கமுள்ளபத்திவைத்
து அதிலே நாளுக்குநாள்வளருகிறதுக்குப் பிரயாசப்
படக்கடவாய், ஒருபிள்ளை தான் நேசிக்கிறமாதாவை
வணங்காம லொருநாளு மிராததுபோலே நீயுன் நே
சபரமதாயாரை வணங்காமலொருநாளுமிராதே.தே
வதாயார்பேரில் மிகுந்தபத்தியால விளங்கின பேற்கு
மான்ஸென்கிறவர் தேவமாதாவிடத்தில் எப்படிக்கி
ருபைபெறலாமென்று தாமரிக்கிறசமயத்திலே கே

ட்கப்பட்டதற்கு நிலைமையோடநுசரிக்கப்படு மிலவ
லேசமான சுகிர்தக்கிருத்தியத்தாலு ம்தைப்பெறலா
மென்றார். ஆயினும் அந்தப்பரமஇராக்கினியையெவ்
வளவுபத்தியோடேசேவிப்போமோ அவ்வளவு தய
வோடு நம்மையாதரிப்பாளென்பதற்குச் சந்தேகமி
ல்லை. அநுதினமுந் தேவமாதாவுக்குத் தோத்திரமர
ண யாதோர்செபத்தைச்செபிப்பதேமுறை. காலமே
விழித்தெழுந்திருக்கிறபோதும் இராத்திரியில் நித்தி
ரைசெய்யப் போகிறபோதும வீட்டிற்பிரவேசிக்கிற
போதும வெளியிற்போகிறபோதும் அந்த ஆண்டவ
ளுக்குவணக்கஞ்செய்வதும் அநுதினமு ம்வளைக்குறித்
துஜெபத்துமூன முமணிச்செபமு அவளுடையபிரார்த்
தனை யவளுடைய ஏழுவியாகுலங்களைக்குறித்து ஏழு
பரமண்டல பிறியதத்தமந்திரம் அவளுடையபரிசு
த்தகன்னிமைக்குத் தோத்திரமாக மூன்றுபிறியதத்
தமந்திரம் அல்லது அந்தப்பரமநாயகியின் வணக்
கத்துக்கான வேற்றமந்திரஞ்செபிப்பதும அவள்பே
ரிற்பத்தியுள்ளவர்களின் சுகிர்தவழக்கமாமே. அல்லா
மலுந் தங்களை யிந்தப் பரம இராக்கினியி னுதரவி
லொப்பித்ததற் கத்தாட்சியாக அவளால் தந்தருள
ப்பட்ட திருவிருதாங்யவுத்தரீயம் அவளுடையசுரூப
முதலிய அடையாளத்தைத்தரித்துக் கொள்வார்கள்.
பின்னுந் தங்களாலேகூடுமாகி ல்ந்த ஆண்டவளைக்கு
றித்துச் சகலசனிக்கிழமைகளிலும, அவளுடையதி
ருநாட்களுக்கு முந்தினநாட்களிலு மொருசந்தியா
யிருக்கிறதும் நல்லபாவசங்கிர்த்தனம்பண்ணியந்தத்
திருநாட்களில் நன்மைவாங்கிறதுமிகவுமுத்தமமுறை
யாமே. ஆனால் விசேஷமாய்ப் பாவத்தந்திரச்சோத
னைமுதலிய ஆபத்துக்களில் அந்த ஆண்டவளை மிகு
ந்தபத்திநம்பிக்கையுடன்மன்றாடி யாதரவைக்கேட்
பதவசரம். மூத்தனான எவுத்திக்கியானென்பவர் தே

வமாதாவைத்துதித்து முத்திப்பேறுபெற்றவளே! சர்வவல்லபமுள்ள வுமது ஆதரவைப்பத்தியோடே கேட்டிருந்தும் உமமால்கைவிடப்பட்டவ னெப்போதாகிலுமிருந்ததுண்டோ? மெய்யாகவே யொருவனுமில்லையென்று நிச்சயித்தார். ஆதலாற பத்தியுடன் தேவமாதாவை மன்றாடினவர்களி லுதவிபெறுதவர்களொருவருமிருந்ததில்லையென்பதுறுதி. நீ தேவமாதாவைமன்றாடி ஆசையோடேகேட்டதை யெப்போதாகிலும் பெறுதிருந்தாயாகில் பத்திக்குறைவோடு மன்றாடினதினுலாவது உனக்குத் தகாக்காரியங்களைக்கேட்டதினுலாவது, உன்வேண்டுதலுக்குவிரும்பின் பலனிடையாமற் போயிற்றென்றெண்ணக்கடவாய். ஆகிலு ம்ப்படிப்பட்ட சமயத்திலேமுதலாய் உன்பாபாக்கிரமங்களால் தேவமாதாவி னுதாரத்துவத்துக்கு விக்கினஞ்செய்யாயாகில் தேவமாதாவுன்வேண்டுதலை வியர்த்தமாய்ப்போகவிடாமல் நீ கேட்டவரங்களிலுமேன்மையான நன்மைகளைக் கேட்டருளுவாளென்னத்தகும். ஆனுல்நேசர்தங்கள்பாவநடத்தையைவிடாமல் இவ்வுளகிகசுகங்களைப்பெற் றநுபவிக்கவுந் தங்களுக்குவந்த தேவகோபாக்கினைக்குத் தப்பித்துக்கொள்ளவுந் தேவமாதாவுக்கு வேண்டுதலைச்செய்வார்களொழியமற்றப்படியல்ல. அப்படிப்பட்டவக்கிரமிகள்கிருபைபெற அபாத்திரவான்களாயிருந்தாலுந் தயைநிறைந்ததேவமாதா அவர்களை உபகாரப்பாசத்தாலிழுத்து நன்னெறியிற்றிருப்பத் தக்கதாகவநேகவிசை யவர்களுக்குமுதலாய்த் தம்முடையமன்றாட்டினுலே நன்மைசெய்தருளுவாள். ஆகினும் பரிசுத்தகன்னி தங்கள்பாவங்களில் மூர்க்கமாயிருக்கிறபாவிகளை யாதரிக்காமற்போனு லதிசயமோ! தேவமாதாசகலருக்கு நன்மைசெய்யவிரும்பினுலுந் தம்முடைய திருக்குமாரனுக்குத் துரோகஞ்செய்கிறவர்களை யே

ப்படியாதரிக்கக்கூடும்? யாதொருபாதகன் ஓரிராசா
மகனைக்கொலைசெய்து தன்பாதகத்தின்பேரில் மன
ஸ்தாபமில்லாம விரத்தக்கறைபிடித்த கையோடே
தாயாகிய இராக்கினியிடத்தில்வந்து தண்டனிட்டு
யாதொருநன்மைகேட்கத்துணிந்தால் இராக்கினியி
ன்மனம் பொறுக்குமோ? பாவீ! நீயே யுன்பாவ
த்தால் பரிசுத்ததேவமாதாவின் திருக்குமாரனாகிய
சேசுநாதரைச் சிலுவையிலறைந்து கொலைப்படுத்தி
னாய். இன்ன மநுதினமு நீசெய்கிறபாவத்துரோகங்க
ளினால் மறுபடியு மவரைச்சிலுவையி லறைகிறப்போ
லாகின்றது. உன்பாவத்துரோகங்களின்பேரில மன
ஸ்தாபப்படாமல் இரத்தக்கறைபிடித்த வுன்னாத்து
மத்தோடேபரிசுத்ததேவமாதாவைமன்றாடி இலௌ
கீகநன்மைச் சுகபாக்கியத்தைக்கேட்டா லிந்தத்தி
ருத்தாயின்மன முன்னை யெப்படிப் பொறுக்கக்கூடு
ம்? உன்மேலெப்படிக்கிருபைவைக்கக்கூடும்? ஆனா
றபாவத்தைவெறுத்து அதினின் றிரட்சிக்கப்படவும
உன் ஞானச்சத்துருக்களை வெல்லவுங் கரையேறவும்
ஆசைப்பட்டுத் தேவமாதாவி னாதரவைத்தேடி வந்
தால் அந்த ஆண்டவளுடையகிருபை யுனக்குக்கிடை
க்குமென்பது நிச்சயம். உன்பாவங்களெத்தனைகொ
டூரமாயிருந்தபோதிலுமுனக்கெப்படிப்பட்ட ஆக்கி
னை வரவிருந்தாலும் நீ யுன்பாவங்களை மெய்யாகவே
வெறுத்து அதுகளைவிட்டுவிலகநிச்சயமானபிரயாசப்
பட்டாறபாவிகளுக்கடைக்கலமாகிய தேவதாயாருன
க்குமடைக்கலமாயிருப்பாள். அந்தப்பரமநாயகிதயா
ளதாயாகையால் உனக்குத்தேவகிருபைகிடைக்கும்ப
டிக்குச்செய்தருளுவாள். அப்படியெத்தனையோபாவி
களைப் பசாசி னடிமைத்தனத்தினின்று மீட்டுத்தம்மு
டைய மன்றாட்டி னுதவியினாலீடேற்றினாள். நாமபரக
தியையடைவதற் கெவ்வளவோவாவாசைப்பட்டாலுநம்

மையீடேற்றுதற்காகத் தேவமாதாகொண்டிருக்கிற
வாசைப்பெருக்க மதைவிடமிகவும்திசமமே. பசாசி
ன் தலையைநசுக்குகிறதுக்குத்தேவகிருபையால் நியமி
க்கப்பட்டவள்வளே. மனுமக்களின்பேரில் மாறுதகா
ய்மகாரப் பகையுள்ள அந்தச்சத்துருதானே தன்கை
யினின்று தன்னடிமைகளானபாவிகளைத் தேவமாதா
பறித்ததின்மேல் அநேகவிசை முறையிட்டதைக்கே
ட்டு மகாத்துமாக்கள்நிச்சயித்தறிவித்தார்கள். ஆகை
ல்தேவமாதா மனந்திரும்புகிறபாவிகள்பேரிவித்தனை
தயவாயிருக்கையில் நன்னெறியில் நடக்கிறபுண்ணி
யாத்துமாக்களின்பேரிலெவ்வளவோபட்சநிறைந்தகி
ருபையாயிருக்கிறாள். இந்த ஆண்டவளுடையவிசேஷ
வுதவியினாலே அதிசயமானபரிசுத்தத்தனத்தையும்அ
ர்ச்சியசிஷ்டதனத்தையும் அடைந்த புண்ணியாத்து
மாக்களித்தனையென்று கணக்கில்லை. திருச்சபையில்
வேதசாஸ்திரத்தினாலு மதிசயமான புண்ணியங்களினா
லும் ஞானச்சுடராய்விளங்கின அர்ச்.-அகுஸதீன், தா
மாசேன் அருளப்பர், செற்மானுஸ், அஞ்செல்முஸ், பெ
ற்நர்துஸ், சாமிநாதர், வெஞ்சேஞ்சியார், சவேரியார்
முதலிய அர்ச்சியசிஷடர்களும்வேதபாரகர்களுமிந்த
ப்பரமநாயகியின்பேரிலுள்ள பத்தியினாலும்திகரித்து
அவளைவணங்கிறதிலும் ஸதுதிக்கிறதிலுமின்பப்பட்டு
அவளுடையபுண்ணியமகிமை ஸதோத்திரங்களைப்பா
ராட்டியெழுதிவைத்தார்கள். மீளவுந்தேவமாதாவுடை
யமன்றாட்டினால் மனிதர்களுக்குக்கிடைத்தநன்மையு
பகாரங்களைச் சொல்லிமுடியாது. சர்வேசுரன் தாமே
யித்திருக்கன்னி யிராக்கினியை மனிதர்களுக்குள்ளே
முக்கியப்படுத்தும்பொருட்டு அவளுடையமன்றாட்டி
னுதவியைக்கேட்டவர்களுக்கு நன்மையாகவெண்ணி
க்கையில்லாத அற்புதங்களை நடத்தியருளினார். தே
வமாதாவின்வேண்டுதலினா லுயிர்த்தமரித்தோருமதி
ர்த்தகடினவியாதிகளு நீங்கினபஞ்சம் படை நோய்

மூதலிய ஆபத்துத்தின்மைகளுங் கொண்டசெயங்க ளு முறிந்தசத்துருக்களின்சேனைகளுங் காப்பாற்ற ப்பட்டபட்டணங்களு நிலைநின்றவிராச்சியபாரங்களு நிர்மூலமானபதிதமதங்களு மிவைமுதலான வெண் ணிக்கைக்குள்ளடங்காதபுதுமைகளு மிதற்குப்பிரசி த்தமானவத்தாட்சியாமே. அதுகளிலொரு திஷ்டா ந்தஞ்சொல்லிக்காட்டுவோம்: மகாபேர்பெற்றஅர்ச். கிறகோரியென்கிறபாப்பானவர்காலத்தில்உரோமாபு ரியிலே மிகுந்தபயங்கரமான கொள்ளைநோய்கண்டு விஸ்தாரமாய்ப்பரம்பிற்று. அதுதினமு மநேகமாயி ரம்பேர் மரணத்துக்கோராயத்தமுஞ்செய்யநேரமி ல்லாமல்திடீரென்றுசாவார்கள். சனங்கள்நேகநாள் தவசும் வேண்டுதலும் பிரார்த்தனையுஞ்செய்துவந் தாலும் அந்தப்பயங்கரமானநோய்தீங்காமலுங் கு றையாமலு மெப்பக்கத்திலுஞ்சேதப்படுத்தும். இ தைக்கண்டு அர்ச்.-பாப்பானவர் தயாளதாயாகிய தேவமாதாவினுதரவைத்தேடவேணுமென்றுகற்பித் து அர்ச்.-லுக்காஸென்கிறசுவிசேஷகர் கையாலெழு தப்பட்டஅந்தப்பரமநாயகியின்படமெழுந்தருளுப டியாகப்பட்டணத்தைச் சுற்றிக்கொண்டுபோகவே ணுமென்று கட்டளையிட்டார். அப்போது யாவர்க்கு மாச்சரியமாகநடந்தபிரசித்தமானஅற்புதமாவது: அத்திருப்படமெந்தெந்தத்தெருக்களிலெழுந்தருளி வந்ததோ அதுகளிலுடனேவியாதிநீங்கிப்போனதன் றியும் எழுந்தருளுபடிமுடியாத்துக்குமுன்னே யெரி ருகோபுரத்தின்மேல்மனுவுருவமுள்ள வொருசம்மன சானவர் இரத்தந்தோய்ந்தவொருவாளை யுறையிலே மறுபடிபோடுகிறதாகக் காணப்பட்டார். அந்தக்ஷ ணமேபட்டணமெங்கும் அந்தப்பயங்கரமான நோ ய்முழுதுநீங்கிற்று. அப்போதுசம்மனசுகள் தேவமா தாவைவாழ்த்திப் பரலோகத்துக்கிராக்கினியே! ம னங்களிகூரும், அதேதெனில் பாக்கியவதியானவுமது

துதிருவுதரத்தில்வதரித்தவர் திருவுளம்பற்றினவாக்கின்படியேயுயிர்த்தெழுந்தருளினாரென்று இன்பமான விராகமாய்ப்பாடக் கேட்கப்பட்டது. அத்துடன் அர்ச்.-பாப்பானவர் எங்களுக்காகச்சர்வேசுரனை மன்றாடுமென்கிறவாக்கியத்தைக்கூட்டி அந்நாள்துவக்கித் திருச்சபையில்வழங்கிறவிந்தமந்திரத்தைமுடித்தார். இக்காலத்திலுந் தேவமாதாவினால்நடந்த வற்புதங்களுக்குக்கணக்கில்லை. விசேஷமாயிந்த ஆண்டவளுடையவற்புதத்திருச்சுரூபத்தின்மூலமாகச்சம்பவித்த பற்பலவற்புதுமைகள்மிகவும்பிரசித்தமாயிருக்கின்றன. இப்படியேதேவமாதாவின்பேரில்வைத்தவுறுதியானநம்பிக்கை வீணாய்ப்போகாது. ஆதலால் தயைபக்ஷநிறைந்த அத்திருத்தாயாரை மாறாதபத்தியுடன்வணங்கித் துதித்து நேசித்துச் சேவித்துன்னையவளடைக்கலத்தில்வைக்கவு மவளுடையவுத்தமமாதிரிகைகளையநுசரிக்கவுங்கடவாயாக. அப்படியேசுமுத்திரையாய்நடப்பாயாகில் நீதிருமாதாவினாதரவினால் திவ்வியகுமாரனிடத்திலுங் கிருபைபெற்று அவருக்குப்பிரியனாகிய பேரின்பவிராச்சியத்திற் சேருவதுதப்பாது.

---

## ௩௰௧ம் - நாள்.

### காவலானசம்மனசானவர் முதலிய சகலசம்மனசுகள்பேரிலும் அர்ச்சியசிஷ்டர்கள்பேரிலு முள்ள பத்தியின் தகுதி.

௧. மனிதரைக்காக்கவு நடப்பிக்கவும் அவர்களுக்குவேண்டியவுதவிசகாயஞ்செ

யியவுஞ் சர்வேசுரன்வரவருக் கொருசம்மனசானவனை நியமித்தருளினு ரென்பது வேதசத்தியமாமே. அப்படித்தேவகிருபையால் நமக்குக்காவலாயிருக்கிற சம்மனசுகளை யடிக்கடி நினைத் தாசரித்துவணங்குவது அவர்கள்மட்டில்நமதுபேரிலுள்ள முதற்கடமையாமே. ஏனெனில் அவர்கள் அசரீரிகளுமா யுத்தமஞானசுரூபிகளுமாயிருக்கிறதினுல் மனிதரிலு மிகவுமேன்மையான சுபாவமுள்ளவர்களா யிருக்கிறதுமல்லாம லெப்போது மோரற்பமாகுமின்றிச் சர்வேசுரனுக்குப் பிரமாணிக்கராகித் தவருத நிலைமைபெற்றிருக்கின்றமையா லவருடையபேரின்ப தரிசனையையு மோக்ஷாநந்தமகிமையையு மளவற்ற பாக்கியத்தையும் பெற்றிருக்கிருர்கள். மீளாவு தம்மிடத்திற் சர்வேசுரனுடைய ஸ்தானுபதிகளுமாய் நமக்கு மிகவு முபகாரிகளுமாயிருக்கிருர்கள். இத்தனை பலத்த நியாயங்களிருக்கையால் எத்தனையோசிரவண தாழ்ச்சி பற்றுதலோ டவர்களை வணங்கக்கடவோம்.

உ. நம்முடையகாவலான சம்மனசுக ளின்மட்டில் நன்றியறிந்தபத்தியே நம திரண்டாங்கடமையாகும். ஏனெனில்வர்க ள் நம்மைமிகுந்த தயவன்போடேநேசி த்து நமக்குச்செய்தருளுகிற நன்மையு பகாரங்களுக்குக் கணக்கில்லை. அவர்கள் தங்கள் மேன்மையைமறந்தாற்போல ந ம்மைப்பற்றிப் பேரின்பவிராச்சியத்தினி ன்றிறங்கி இப்பிரபஞ்சத்தில் நமக்குதவி சகாயஞ்செய்ய வெந்நேரமு நமதண்டை யில் தரித்திருக்கிறார்கள். நமக்காகச் சர் வேசுரனைமன்றாடி நம்முடையவிண்ணப் பங்களையு மவருக்கொப்புக்கொடுக்கிறார் கள். நமக்குச்சம்பவிக்கிற துன்பத்துயரங் களில்நமக்காறுதல்வருவிக்கவு நமக்குநே ரிடுகிறவிக்கின மோச பொல்லாப்பு ஆப த்துக்களை நீக்கவு மிடைவிடாமல் கவனிக் கிறார்கள். நம்மைச்சுற்றிக்கொண்டிருக்கி ற ஞானச்சத்துருக்களைச்செயித்து விலக் கவும் பாவத்தந்திரச்சோதனைகளை வெரு த்துத்தள்ளிவிடவும் நமக்குப்பலத்த வுத விபண்ணுகிறார்கள். நாமிவ்வுலகமென்கி

ற தின்மைச்சமுத்திரத்தில் முழுகிப்போ
காதபடிக்கு நமக்கு அடைக்கலமுமாதர
வுமாயிருக்கிறூர்கள். இவ்விதமாகத்தம்மா
லியன்றமட்டுஞ் சகல பொல்லாப்புக்களி
லேயுநின்று நம்மைக் காப்பாற்றுகிறதுமெ
ன்றி நாம்நன்னெறியில் நடப்பதற்கானபு
த்திமதிகளேயேவித் தேவபத்திபிறர்சினே
கம் தர்மமுதலிய புண்ணியங்களை நம்மிட
த்தில் விளைவிக்கவும் நம்முடையகுற்றங்
களை நமக்குக்காட்டி நம்முடையபாவ அ
க்கிரமங்களைத் தடுத்துவிலக்கவும் அதுக
ளின்பேரில் நாம் மிகுந்த வெறுப்பாகி
மனஸ்தாபப்பட்டுத் தபசுசெய்யும்பொ
ருட்டுச் சிலமுறை நமது நன்மைக்காகத்
தயவோடே நம்மைத்தண்டித்துக் குண
மாக்கவும் நமக்கெவ்வித நன்றியுபகாரமு
ஞ்செய்யவு நம்மையீடேற்றிப்பேரின்ப
விராச்சியத்திற் சேர்ப்பிக்கவு மெந்நேர
மு மநுவலாயிருக்கிறூர்கள். நம்முடைய
ஈடேற்றமே யவர்களுக் காசையல்லாதே
வேறில்லை. நமக்கித்தனை நன்மையுபகார
ங்களைச்செய்கிற நம்முடையகாவலான ச

ம்மனசுகள்பேரில் நாமிகவுநன்றியறிந்த பத்தி நேசங்கொண்டிராவிட்டால் நம்மையென்னென்று சொல்லத்தகும்?

௯. அவர்களுடைய சுகிர்த ஏவுதல்களைப் பிரமாணிக்கமாயநுசரிப்பதே நமது மூன்றுங்கடமையாமே. சர்வேசுரன் இஸ்ருயலித்தாரை நடப்பிக்க ஒருசம்மனசானவரை யனுட்புகையில் தமக்குப்பிரியமாயிருந்த அந்தச்சனத்துக்குக் கற்பித்ததாவது: இதோ வுனக்குமுன்போகவு முன்னைவழியிற்காக்கவும் நாமாயத்தப்படுத்தின ஸ்தலத்தி லுன்னைப் பிரவேசிக்கப்பண்ணவு நம்முடைய தூதனை யனுப்புவோம். அவரையாசரிக்கவும்வர்சொற்படிக்கேட்கவு மவரையசட்டைபண்ணலாமென்றெண்ணுதிருக்கவுங்கடவாய். ஏனெனில் நம்முடைய நாம மவரிடத்தி லுள்ளதன்றியு நீ செய்யும்பாவங்களை யவர்பொறுப்பதில்லை. நீ யவர்சொர்படியேகேட்டு நாங்கற்பிக்கிறதெல்லாஞ் செய்வாயாகி லுன்சத்துருக்களுக்கு நாமேயெதிராளியாகியுன்னையுபத்திரவப்படுத்துபவர்களை யுபத்தி

ரவப்படுத்துவோமென்று திருவுளம்பற்
றினார்இதையுன்காவலான சம்மனசின்ம
ட்டிற் சர்வேசுர னுனக்கேகற்பித்தாரென்
றெண்ணிக்கொள்ளக்கடவாய். நீபரதேச
மாகிய இவ்வுலகத்தில் வழிப்போக்கனுகி
யமட்டு முன்னை நடப்பித்துக்காக்கவு முன
க்கு நியமிக்கப்பட்ட பேரின்பவிராச்
சியத்திற் சேர்ப்பிக்கவுமுன்காவலானசம்
மனசானவ ருனக்குத்துணையாகத் தேவ
கிருபையால் தந்தருளப்பட்டிருக்கையி
ல் அவரையாசரித்து அவரேவினபடி நட
ப்பாயாகி வீடேறுவாயென்கிற நம்பிக்
கையுமன்றியிவ்வுலகத்தில்வரால்வரலாகிய
வுதவிசகாயத்தோடே சர்வேசுரனுடைய
ஆதரவுமுனக்குக்கிடைக்கும். ஆனுல்வரோ
வின புத்திமதிகளைத்தட்டி யவரைப்பிறக்
கணித்துச்சட்டைபண்ணுகிருப்பாயாகில்
வராற்கைநெகிழப்பட்டுச்சகலகேடுகளு
க்குமாக்கினைகளுக்குமுள்ளாவதற்குப்பா
த்திரவானுவாய். இதைநன்றாய்நினை.

எருசலேமாநகரில் சம்மனசுகள் சேசுநாதரையு
ம் அபபோஸதலரையும் வாதைபபடுத்தின யூதருடை
யபாவங்களைப் பொறுக்க மாட்டாம விவ்விடத்தில்

நின்று அகலுவோமாக அகலுவோமாக வென்றதா யொரு சத்தங் கேட்கப்பட்டது. அப்படிச் சம்மன சுகளாற் கைவிடப்பட்டவுடனே அந்தப்பாவிகளான யூ தர்கள் தங்கள்பட்டணத்தோடே சத்துருக்கள் கையில் கப்பட்டுச்சங்காரமானார்கள். உன்காவலான சம்மன சின் சுகிர்த் ஏவுதல்களையநுசரியாயாகில் நீயு மவரா ற் கைவிடப்படுவதே சர்வ நிர்ப்பாக்கியத்துக்கு நித்தி யகேட்டுக்கு முள்ளாவதற்குப்போதும். கள்ளருந் து ஷ்டமிருகங்களுநிறைந்த பயங்கரமான அகண்டகா ட்டில் வழியறியாதவன் பிரயாணஞ்செய்கையில் தன க்கு ஆதரவும் வழிகாட்டியுமாயிருக்கிறவனைப் பின் செல்லாதிருப்பானே? சொற்படி நடவானாகில் வனாற் கைவிடப்பட்டு அநுகூலமாகத் தன்பிரயாணத்தை நி றைவேற்றக்கூடாமல் எத்தனையோ ஆபத்தி லகப்ப டுவான். இவ்வண்ணமே சத்துருக்களுந் தின்மைகளும் டர்ந்த அடவியாகிய இவ்வுலகத்திற பலவீனனுமாயீ டேற வழிதெரியாதவனுமாய்த்திரிகிற நீ உன்னையா தரிக்கவும பரகதியிறசேருமட்டுய நடபபிக்கவு முன க்குத்துணையாகியபரமதூதனுடைய ஏவுதலையநுசரி யாதேபோனால் நெறியுங்கதியுந்தபபியெத்தனையோ தின்மைகளுக்குள்ளாவாய். ஆகையா லதறகுஞ்சியுன காவலானசமமனசானவ ருனனுள்ளததிற சொல்லு ஞ்சுகிர்தயோசனைகளுக்குச் செவிகொடுத்தெல்லாத் திலு மவருடைய ஏவுதலையநுசரிப்பாயாக. மீளவு மவ ருக் கிலவமேலசமும வணக்கக்குறைவாய்நடவாதபடி க்கெந்நேரமு மெச்சரிக்கையாயிருக்கக்கடவாய். அ வருனனண்டையிலெப்போதும பிரசந்நமாயிருக்கை யாலும எந்தபபாவமுமஅவருக்குமிகவு மருவருபபா யிருக்கிறதினாலும அவர்சந்நிதியி லொருபாவமுமின றியெக்காலமும பரிசுத்தமாய் நடக்கவேண்டும. ம னிதர்முனபாக வொருபாவத்துரோகத்தையுஞ் செ

யத் துணியாயே. உனகாவலானசமமனசு முதலிய மமனசுகள் முனபாக அப்படிபபட்டவெட்கதது குரியவக்கிரமஙகளை யெபபடிசசெய்யததுணிவாய்? ணக்காதரவாககச சர்வேசுரன் தம்முடைய சம்மன களிலொருவனை நியமித்திருக்கிறதும் அந்தசசம்ம சானவ ரிடைவிடாம லுனக்குக் காவலாகநிறகிறது எவ்வளவோ வாசசரியததுக்குரிய தயவுமுபகார மாயிருக்கின்றது! ஓரிராசாச ததுருக்கள்நடுவில்வசி குமொருகுடியானவனைக் காக்கத தம்முடைய சனு களி லொருபிரபுவை நியமித்தால் அந்தக்குடியான பன்பிரமித்திராசாவுக்கு எவ்வளவோ வணக்சத்தோத் திரஞ்செய்வான்!மேலும்அந்தப்பிரபுமிகுந்ததயவோ வனைச்காப்பாற்றுகிறதி லெந்நேரமு முத்தியோக மாயிருப்பதற்குநன் றியறிதலாகவென்னவுபசாரஸ்து தியாசாரம் பண்ணுதிருபபான்? ஆனாலொருகுடியா னவனுக்கு மோரிராசாசனுவாகிய பிரபுவுக்குமெவ்வ ளவுதூரவித்தியாசமிருந்தபோதிலும் அதைவிடநம க்குந் தேவதூதர்களாகியசம்மனசுகளுக்கு மெவ்வள வோ அதிகமானவித்தியாசமுண்டு!அபபடியிருக்கச்சர் வேசுரன்தம்முடையதேவதூதர்களிலொருவனை நமக் குக்காவலாகநியமித்ததயவுக்கும் நமமுடையகாவலா னசம்மனசானவர் நம்மையெந்நேரமு மாதரித்துக் காபபாற்றுகிறநேசத்துக்கும் எத்தனையோவணக்க ஸ்துதி தோத்திரஞ் செலுத்தக்கடவோம! காவலா னசமமனசுகளால் நமக்குக்கிடைக்கிற நன்மையுதவி களு மவர்கள்நமமைநடத்துகிறபட்சமும யாவாக்கு மவிளங்குமபடிக்கு இரபயேலென்கிற சமமனசான வர் தோபியாஸென்கிற புண்ணியாத்துமாவானவரு டையகுமாரனுக்கு மனுவுருவத்தோடே தோன்றவும அவனுக்குதூரதேசத்துக்கு வழிகாட்டியாகவும், ஓராற்றிலே மிகவும்பெரிதான கொடுமீ ன்வனைவிழு

ங்கப்பாய்ந்தசமயத்தி லவனைக்காப்பாற்றவும் , ஆஸ்தியுள்ளவொருகற்பலங்காரியை யவனுக்குக்கலியாணஞ்செய்வித்துத் தேவ ஆசீர்வாதம்வருவிக்கவும் பசாசின தந்திரங்களைவிலக்கவும் தங்கள்பிரயாணத்துக்குக்காரணமாயிருந்த கடன்பணங்களைத்திருமபத்தருவிக்கவுந் தோபியாஸென்பவருக் குண்டாயிருந்த கண் குருட்டைப்பரிகாரஞ்செய்யவும, இவைமுதலான நன்றியுபகாரங்களையெல்லாம்பண்ணவு மிந்தவதிசயச்செய்தியெல்லாமவேதாகமங்களிலெழுதப்படவுஞ் சர்வேசுரன்திருவுளமானார். இதனாலுன்காவலான சம்மனசானவர்மூலமாக வுனக்கு வேண்டியவுதவிசகாயமெல்லாங்கிடைக்கலாமென் றறிக. ஆதலால்வர்பேரி லநந்த பத்திநம்பிக்கைவைத்து அநதிசந்திதப்பாம லவரைவணங்கவும பசாசின்தந்திரச்சோதனைமுதலிய ஆபத்துக்களி லவரைவேண்டி யுதவிகேட்கவும அடிக்கடிய வரைநினைத்து அவருக்குநன்றியறிந்ததோத்திரஞ்செலுத்தவுங்கடவாயாக.

மீளவுங் கிருபைச்சமுத்திரமாகியகர்த்தர் சகலசம்மனசுகள் அர்ச்சியசிஷ்டர்களின் மன்றாட்டினாலு நாம் தம்மிடத்திற கிருபையையு மநேகவுதவி யுபகாரநன்மைகளையும பெறத்தயாபமுள்ளசித்தமாயிருக்கிறபடியினாலேயவர்களையுமடிக்கடி வணக்கத்துடனேவேண்டிக்கொள்ளுவதே நன்மையாமே. விசேஷமாய்அவனவன் தானபேர்கொண்ட அர்ச்சியசிஷ்டர்பேரில் தக்கபத்தியாய் அவராதரவில் தன்னையொப்பிக்கக்கடவான். மேலும அர்ச்சியசிஷ்டர்களுக்குள்ளே அர்ச். சூசையப்பரை விசேஷபத்தியோடு வணங்கிமன்றாடுகிறதற் கநேகநியாயமுண்டு. அதேதெனி லவரதிசயமானதாழ்ச்சிபொறுமைகற்புவிரதமுதலிய புண்ணியங்களால் விளங்கினவருமாய்க் கன்னிமைகெடாத தேவமாதாவுக்குய பரிசுத்தபத்தாவுமாய்ச சேசுநா

தனைவளர்த்த தகப்பனுமாயிருந்தமையால் மோக்ஷ
த்திலேவிசேஷமகிமைபெற்றிருக்கிறார். இவ்வுலகத்தி
லிவருக்குக்கீழ்ப்படிந்து அநந்தநேசத்தோடவரா
ல்நடத்தப்பட்ட சேசுநாதர் அவருடையமன்றாட்
டை விசேஷகிருபையோடேற்றுக்கொள்வாரென்கிற
தற்குச்சந்தேகமில்லை. அன்றியுஞ்சேசுநாதருந்தேவ
மாதாவும தமக்குத்துணையாய்நிற்க அர்ச். சூசையப்
பர்பாக்கியமானமரணத்தையடைந்தமையால் நாமு
நல்லமரணத்தையடையத்தக்கதாக வேளைக்குவேளை
யவரைமன்றாடுவதுத்தமம. பின்னும அர்ச். சவேரியார்
இத்தேசத்துச்சனங்களைச்சத்தியதிருச்சபையிலுட்ப
டுத்தவுமீடேற்றவு மிகவும்பேட்சித்து அதிலேதமதுபி
ராணனைச்செலவழித்ததினாலே இத்தேசத்தாருக்கு அ
ப்போஸ்தலருமநேசத்தாப்பனுமானவரென்னத்தகு
ம. ஆதலாலவரையுமபத்தியோடே துதித்துக்கொண்
டாடியிரந்துகொள்வதேமுறை. மீளவுமித்தேசத்தில்
விசேஷவணக்கத்தைப்பெற்றிருக்கிற அர்ச். இஞ்ஞா
சியார் அந்தோனியார்முதலிய அர்ச்சியசிஷ்டர்களைத்
தக்கபத்தியோடேவணங்குவது மவர்களுடையமன்றா
ட்டுக்கிளுதவியைக்கேட்பதும மிகவுநியாயமாமே.
ஆகிலும அப்பத்துவேளையில்மாத்திரம அர்ச்சியசிஷ்டர்
களுடைய வேண்டுதலினுதவியைத் தேடுவதுபோதா
து. பிரதானமாயவர்களுடைய புண்ணியமாதிரிகைக
ளையநுசரித்து அவர்களோடேகூடநித்தியமாய்ப்பரமே
ரின்பத்தரிசனையிற்சகல பாக்கியங்களையு மநுபவிப்பத
ற்குப்பாத்திரவானாகவேண்டும்.



## மிருகங்களுக்குவருகிற நோய்களிலே வேண்டுதல்

ஆண்டவரேயடியோர்கள்தேவரீரைமிகுந்ததாழ்ச்சியோடாராதித்து வணங்கிநமஸ்கரித்து உமதிரக்கப்பெருக்கத்தைக்குறித்துமன்றாடிக்கேட்கிறோம். அதேதெனில்கடினநோயாற்பிடிக்கப்பட்டிருக்கிற இந்தமிருகங்களுமது ஆசீர்வாதத்தினலே நோய்நீங்கிச்சுகமடைந்து மேலும் யாதொருபிணிபடாதபடிக்குப் பசாசின் சகலதோஷபலங்களு மிதுகளைவிட்டுவிலகிப்போகப்பண்ணியருளும். சர்வதயாபரசர்வேசுரா!இப்படிப்பட்டமௌனசீவாத்துமாக்கள் மனுஷனுடையபிரயாசத்துக்கு ஆறுதலாகவும்மாற்கொடுக்கப்பட்டிருப்பதால், எங்கள்பிழைப்புக்கு வேண்டியிருக்கிற இதுகள் எங்களுக் குபகாரமாகவிருக்கும்படிக்குக் கிருபைபண்ணியருளும். இந்தமன்றாட்டுக்களை... ஆமென் சேசு.

## பூச்சிகளா லழியப்படுகிற பயிர்களு க்குத்திருச்சபையால் நியமிக்கப் பட்ட வேண்டுதல்.

---

வானமும்பூமியும்படைத்த சர்வேசுர னுடைய நாமத்தினால் எங்களுக்குச்சர்வ சகாயமு நன்மையுமுண்டாவதாக.

மு.— சுவாமீ எங்கள்பிரார்த்தனையைக் கேட்டருளும்.

து.— எங்கள்பயசத்த முமதுசந்நிதிம ட்டும் வரக்கடவது.

பிரார்த்திக்கக்கடவோம்.

ஆண்டவரே! நாங்கள்பண்ணுகிறவேண் டுதலைத் தேவரீர் தயாபகருணையாற் கேட் டருள மன்றாடுகிறோம். அதேதெனில் எ ங்கள்பாவங்களுக்குநீதியுள்ளவாக்கினையா கவந்த இந்தப்பூச்சிகளுடைய நெருக்கி டையையுமது கருணைகடாக்ஷத்தாலேநோ க்கி யுமதுதிருநாமத்துக்குப் புகழ்ச்சியு ண்டாகும்படிக்கு இதுகளை நீக்கியருளும். அப்படியே யிந்தத்துஷ்டப்பூச்சிக ளுமது கட்டளைப்பலத்தினாற் றூரத்தள்ளுண்

டுபோகவும் இந்தப்பயிர்கள் விக்கினமின்றி நன்ருகவிளையவும் இதிலுண்டாகிறபலனுமதுபணிவிடைக்கு மெங்கள்பிழைப்புக்கும் பிரயோசனமாகவுங் கிருபைசெய்தருளும். இந்தமன்ருட்டுக்களை . . ஆமென்சேசு.

---

மழைக்காக வேண்டுஞ்செபம்.

தப்பில்லாதகிரமத்தோடு சகலத்தையுநடப்பிக்கிறசர்வேசுரா! நாங்களுயிருப்பவும் நடக்கவு மிருக்கவுங் காரணரானகர்த்தாவே! எங்களுக்குப் போதுமானமட்டுந் ததிமாரிபெய்யவுந் தவசதானியமுதலான சம்பத்துக்க ளோங்கியதிகரிக்கவுங் கிருபைசெய்தருளும். நாங்க ள்திகதாற்பரியத்தோடு நன்றியறிந்து தர்மநெறியிலேநடந் துமக்குத் திருப்பணிபுரிந்து மோக்ஷசம்பத்தைநாடி யடையவு மநுக்கிரகித்தருளுஞ்சுவாமீ. இந்தமன்ருட்டுக்களை . . . . . ஆமென்சேசு.

## வீரமாமுனிவர்பாடியதேவாரம்.

கருணம்பரப்பதிகம் - பண் - ஆந்தளகுறிஞ்சி.
இரா. - சவுராஷ்டிகம் - ஆதிதாளம்.

மூவர் முதலா முற்றிணையா மூவர்ளாயோர்மெய்ப்
பொருளாய்த் — தாவா நடனுய்த் தயைச் கடலாய்
த்தானுய்த் தனிமுத் தொழிற்பரனுய்க் — காவாநி
ன்றென் னுளத்தரசாய்க் கருணைம்பர்மாயாதிபரா —
ஆவா யுன்னை யனைவருமுன னலர்த்தாட்பணியாவா
றெனறேனே. கருணைம்பரம. க.
நேரா நிலையிற் றன்வயத்தாய்நெடுங்கார்கடந்தே
யென் அமுளாய்ச் — சூராருடல்செய் யுருவிலனுய்த்
தொக்க நன்மை யாவுமுளாய்ப் — பேரா தணுகா
தெங்குமுளாய்ப் பின்மூவுலகோர்காரணனு — யோ
ராதிவற்றை யுலகெல்லா முன்றுட்பணியா வாறென்
றேனே. கருணைமபரம். உ.
வான்கொள் ளொளிசெய்சுடர்படைத்தி மண்கொ
ள்பலநல் லுயிர்படைத்தி — கான்கொன்கனியோடு
லர் படைத்தி கதிர்கொண்மணியோடணிபடைத்தி—
பான்கொள் ளவையு நீ படைத்தியிவைசால்பன்றெ
ன் றுனைத்தந்தி — யூன் கொள்ளுருநீயாயினபின் னு
ன்றுட் பணியாவாறென்றேனே. கருணைம்பரம். ங.
தனிமைத்தலைமை யுண்டென்பார் தயையின் மிக்கு
ள்ளன்புணர்ந்தோ — ரினிமைத்தலைமை யுனதென
பா ரிணையாச்சீர்கொள் ளுன்குணத்தாற் — கனிமை
த்தலைமையுனதென்பார் கவினே களியேயுனையென்
பார் — நனிமெய்யிதாயனைவருமுன் னற்றுட்பணி
யாவா றென்றேனே. கருணைமபரம. ச.
பொருளைசெய் தெப்பொருளினுமுட்புணர்ந்தப்
பொருள்கெட்டழியாய்நீ— யருளேபுரிந்துசெய்பொ

ருளர் லாமோர்பயனும்வேண்டாய்நீ — மருளேய
றியாய் தயைமறவாய் மாறுநட்பெம்மேலொழியா
— யிருளேமிகவீ துணராவுன்னிணைத்தாட்பணியாவா
றென்றே. கருணும்பரம். ரு.

சுவையேயூட்டியளிப்போய்நீ தொன்றேய் மாற்
றுமருந்தோய்நீ — நவையேநீக்கிக் களிப்பொய்நீ
நகையேயாற்று மினியோய்நீ — யவையேபுகழி னு
யர்ந்தோய்நீயமரர்புகழப்படுவோய்நீ — யிவையே
யுண்டாய்ப்பின்னுலகுன் னிணைத்தாட்பணியாவாறெ
ன்றே. கருணும்பரம். சா.

ஒளியேநலதே வெவ்வொளியை யொளித்துக்கடந்
த வொளியோய்நீ — களியேநலதே லாசையறக் க
சடற்றொழியாக்களியோய்நீ — தெளியேவருநூற்க
லைநலதேற் றிரநூலுணரத்துந்தெளியோய்நீ — வெ
ளியேயிவையோர்ந் தனைவருமுன் மென்றுட்பணியா
வாறென்றே. கருணும்பரம். எ.

காணுர்மலர்பெய் துன்றிருத்தாட் கருத்திற்கொள்
வார் துயர்கொள்ளார் — நாணுவழியே நனிவாழ்வா
ர் நயமும்புகழுமிக்கனபின் — வாணுர்பயன்கொள்
வாரொன்றும் மாறுமெய்யிஃதாகியிவண் — டேணுரி
ன்பநுகர்குவருன் றிருத்தாட்பணியாவாறென்றே.
கருணும்பரம். அ.

மலையேயுன்னல் லாணிலையா மதுவேயமுதேகொல்
நஞ்சாங் — கலையேவெளிறு மொளியிருளாங் களி
யேதுன்பமாந்திருவி — னலையேவற்றிநல்குரவா ம
டலேவலியே குறையாமிந் — நிலையேயாகியுலகெல்
லா நின்றுட்பணியாவாறென்றே. கருணுமபரம. கூ.

கார்சேர்மின்னே யிங்கிளமை கடல்சேர்திரையே
யிங்குடைமை — நீர்சேர்நுரையேயிங்கினிமை நிசிசே
ர்நுளமபேயிங்கொளிமை — சீர்சேருன்னைச்சேர்ந்த
வர்க்கே திறமபாவொழியாவாழ்வுளதாம — பார்சே

ாவரு மிஃதறிந்துன் பணித்தாட் பணியாவாறென்
ளு. கருணைபரம. ய.
வல்லாரில்லை யுனையல்லால் வாழாரில்லையுனைச்சேர்
ந்தா — வில்லாரில்லை நீ யிரங்க விவணீமுனியகளே
ாரில்லை — செல்லார் வானோர் தொழுதேத்துஞ்
செல்லற்கரிய வுன்பெருமைக் — கல்லாருண்டோ பி
ன்புலகுன் கவின்றுட்பணியாவாறென்னே.
கருணைபரம, யக.
வான்மேல்மாரத்தனையு மண்மே லரச ரத்தனையு
— நான்மே லுயர்வோ ரத்தனையு நுண்மாண் பறி
வோரத்தனையுங் — கான்மேன் முனிவ ரத்தனையுங்
கன்னிமடவா ரத்தனையு — மேன்மே விறைஞ்ச மற்
றுலகுன் மென்றுட்பணியா வாறென்னே.
கருணைபரம. யஉ.

---

## தாவீதிராசாவின தமுதற்சங்கீதம்.

வீரமாமுனிவர்பாடல். - உலா.

தீயோ ருரைகேளான் றீயோர் வழிச்செல்லான்
றீயோர் முறையோதான் செல்வோனே - தூயமறைச்
சொல்லொன்றேதேடகத்தான்சோரா திராப்பகற்
செல்லொன்றேசூழுணர்வான் செல்வோனே - யொல்
லெனப்பாய்
நீர்முகத்துப் பொய்யா நிறைகனிகொய் கொம
பொப்பான்
கார்முகத்துப் பாசிலையுங் காய்ந்துதிரா - சீர்முகத்து
மாசில்லோர்க் கெல்லா மயக்கமற வாழ்வாமே
ஆசுள்ளோர்க் கப்படியோ வன்றென்றே - ஏசுபெறக்
காமமுதற் பற்றுதலாற் கால்சுழற்றுந் தூசியென
நாமமுத லற்றழிவார் நச்சறிவார் - வீமமிகத்

திர்வையிடு நாளிற் சிதைந்தேங்கி நல்லவருட்
சோர்வையுறத் தாமபிரிந்து சூழந்துவார் - பேர்
ர்வையில்
தூயோர் நெறியறிவான் சூழாள்வான் கேடுக்குந்
தீயோர் நெறியறிவான் - சேர்ந்து.

---

# நல்லமரணத்துக்கு
# ஆயத்தம்.

நல்லமரணத்தினால் நித்தியபேரின்ப பாக்கியமுந் துர்மரணத்தினால் நித்திய நரக நிர்ப்பந்த வாக்கினையும் வருகிறபடியினாலே நல்லமரணத்துக்கு ஆயத்தம்பண்ணுகிறது யாவர்க்கும மகா அவசரமானகாரியம். இதைவாசிக்கிற பிரியசகோதரனே ! என்னயோசிக்கிறாய் ? சாவு இன்றைக்கோ நாளைக்கோ எந்தவேளையோ தெரியாதே. நீதேடுகிற இலௌகிகசுகங்கள் நீசாகிறசமயத்தி லுனக்கெவ்வளவாகிலும்பிரயோசனமாயிருக்குமா? உன்னாத்துமத்தை யீடேற்றுகிறதேயுனக்குக் காரியமொழிய மற்றதெல்லாம் விழலும்பாழுமாயிருக்கின்றது. அநேகருக்கு நல்லபிராயத்திலுஞ்சடிதியிலுஞ் சாவுவருகையால் தளர்ந்த பிராயமாவது வியாதியாவது வருமட்டுக்குங் காத்திராமலெப்பொழுதும் அதுக்கு ஆயத்தஞ்செய்ய வேண்டியது. அப்படி நல்லஆயத்தஞ் செய்கிறவர்களுக்கு மரணமும் இதின் நினைவு மினடமாயிருக்கும்.

நல்லமரண ஆயத்தத்துக்கு ஆத்தும சுத்திகரமானது பிரதானமாயிருக்கையால்டிக்கடி யுன்னாத்துமசோதனைபண்ணி யதைச்சுத்திகரிக்கவும், மாசற்றதாய்க் காப்பாற்றவுங் கடவாய். மீளவும மாதத்துக்கொருநாளை நியமித்து அன்றைக்குத்தானேசாகிறது

க்குஆயத்தஞ் செய்கிறதுபோலே யுன்னுவியன்றமட்டும் நல்லபாவசங்கீர்த்தனம்பண்ணிப் பத்தியோடே தேவநற்கருணையைவாங்குதல் முதலாகிய நற்கிருத்தியங்களைக்கொண்டு சர்வேசுரனுடையதீர்வையிலுன்னுடத்தையின் கணக்குக்களையொப்பிக்கிறதுக்காகவுன்னை யொழுங்குபடுத்தக் கடவாய். அடிக்கடி தங்கள்கணக்குக்களையொழுங்குபடுத்தாத வர்த்தகர் நஷ்டத்திலும் நிர்ப்பாக்கியத்திலு மமிழ்ந்திப்போகிறது போலே தங்களீடேற்றத்தைச் செவ்வையாய் விசாரியாதவநேகர் நித்தியகேட்டுக் குள்ளாகிறார்கள்.

ஆனால் வியாதிமுதலிய ஆபத்துவந்தவுடனே மரணத்துக்கு விசேஷ ஆயத்தஞ் செய்வாயாக. இன்னம்பிழைக்கலாமென்கிற நம்பிக்கைவைத்துத் தாமதம்பண்ணாதே. அநேகர் நாளுக்குநாள் தாமதஞ்செய்தசமயத்தி லவர்களுக்குச் சடிதியி லவஸ்தையுமறிவுதடுமாற்றமுஞ் சாவும்வந்ததினால் தங்கள்பாவங்களோடே நரகத்தி னக்கினியில விழுந்தார்கள். நீபகைதிருட்டு ஆவலாதிமுதலிய அநியாயஞ்செய்திருந்தால் முந்தமுந்த வுன்னாலே கூடினமாத்திரம் எல்லாத்துக்கும பரிகாரமுஞ் சமாதானமுஞ் செய்வாயாக. அப்படிச்செய்யாவிட்டா லொருபோது முனக்குப் பரகதிகிடைக்குமென் றெண்ணாதே.

மேலுஞ் சர்வபாவத்தையும் வெறுத்துவிட்டு முன்செய்தபாவங்களை யுன்கண்ணீராலும நல்லபாவசங்கீர்த்தனத்தினாலுங் கழுவக்கடவாய். ஆகையால் கடின அவஸ்தைவருமட்டுங்காத்திராம லித்தனை அவசரமானகாரியத்துக்கு வேண்டிய நல்ல அறிவு நினைவுமிருக்கும்போதே பாவசங்கீர்த்தனத்துக்குக் குருவானவரை வரவழைப்பிப்பாயாக. பின்னுங்குருவானவருடைய ஏவுதலின்படியே தகுந்தசமயத்தில் அவஸ்தைப்பூசுதலையும அவஸ்தை நன்மையையு மாசை

யோடும் பத்தியோடும் பெற்றுக்கொள்வாயாக. ஆனு ல் நல்லஆயத்த மில்லாதவர்களுக்கு அதெல்லாம பி ரயோசனமற்றதாய்ப் போமென்கிறதினு லந்தச்சம யத்திலே விசேஷமாய்த்தேவநீதிக்கும நரகத்துக்கு ந்தக்கபயப் பாவத்தின்மேல் மிகுந்தவெறுப்புச்துக்க மனஸ்தாபங் கஸ்தியிற்பொறுமை யுறுதியான விசுவா சம்திவ்வியதயவின்மேற் குறையாதநமபிக்கை, மகா பத்திதேவசினேகம், தேவசித்தத்துக்குக்கீழ்ப்படித ல், சர்வேசுரனை மோக்ஷவிராச்சியத்திலே தரிசிக்கவி ருந்தவாசை யிவைமுதலான புண்ணியங்களையுன்னுத் துமத்திலே யெழுப்பப்பிரயாசப்படக்கடவாய்.

உனக்குப்பாவசங்கீர்த்தனமுதலிய தேவத்திரவிய அநுமானங்களைக்கொடுக்கக் குருவானவர் சமீபத்தில் லாதேபோனுலுன்னுத்துமத்தைக்கறையேற்ற இன் ன பதிகப்பிரயாசப்படவேணும. ஆகையாற் பாவசங்கீ ர்த்தனத்துக்கும் அவஸ்தைப் பூசுதலுக்குந் தேவநற் கருணைக்கு மிகுந்த வாசைப்பட்டு; அதுக்குத்தகுந்த ஆயத்தஞ்செய். பின்னும் உன்பாவங்களைப்பற்றி, அ ந்தத் திவ்வியவுதவிகளுனக்கில்லாதே போயிற்றென் றெண்ணித் தாழ்ச்சியாய்த் தேவகிருபையைமன்றடு. மேலுமளவில்லாதசகலநன்மைச்சுரூபியாயிருக்கிறச ர்வேசுரனுக்கேற்காதபாவத்துரோகங்களைச்செய்ததி னுலேமிகுந்தவுத்தமமனஸ்தாபப்பட்டு அவருடையம ட்டில்லாதநன்மைத்தனத்தைப்பற்றி யெல்லாத்தை யுமபார்க்க அவரைமுழுமனதோடேசினேகிப்பாயாக. இனி யவருக்குத்துரோகஞ்செய்கிறதைவிடச் சாகவ பேட்சிப்பாயாக. அவரோடேசதாகாலமும்பழுதற்ற அன்பினுல்ஒன்றித்திருக்கவாசைப்படவுங்கடவாய். அ ந்த அவசியமானகருத்துக்களைப்பற்றி அடிக்கடிமே லானவுத்தமமனஸதாபமந்திரஞ்சொல்லுவாயாக.

உன்வியாதியினிமித்தம் அக்கியானிகளுடையமந்தி ரதந்திரச் சடங்குகளையொருகாலுஞ் செய்யவொட்

-ாதே.செய்யச்சொல்லுகிறவர்களுணக்குத்தேவசாப
ந்தைவருவிக்குஞ்சத்துருக்களென்றெண்ணுவாயாக.
யாதியிற்செபத்தைவிட்டுவிடாதே. நெடுஞ்செபத்
தச்சொல்லவு முழுங்காலிலிருக்கவுங் கூடாமற்போ
றல், படுக்கையிற் பத்தியோடே யடிக்கடிசிறுவசன
களால் வேண்டிக்கொள்வாயாக. அடிக்கடிவிசுவா
 நம்பிக்கை தேவசிநேகமுயற்சிகளையும் உத்தமம
ஸதாபபரமண்டலபிறியதத்த விசுவாசமந்திரங்க
ளயும் இதிலுள்ள மனவல்லயச்செபஙகளையுஞ் செபி
பாயாக. நீதானே யதுகளை வாசிக்கவும உச்ச
க்கவுங கூடாமற்போனால் வேறொருவனுன்னருகில்
ாசிக்கச்சொல்லிக்கேட்பாயாக.



## வியாதியில் மனவல்லயச்செபங்கள்.

தயவுள்ளபிதாவே! உம்முடைய அள
வில்லாத கிருபையினு லென்பாவங்களைப்
பொறுத்தருளும்; மகாபாவியாகிய அடி
யேன்மேலிரக்கமாயிரும்.

உம்முடையநீதிப்பிரகாரமாயெனக்கு
த் தீர்வையிடாதேயும். தயாளமுள்ள கர்த்
தாவே! பாவிகளுக்காக வும்முடைய திரு
விரத்தத்தைச்சிந்தினீர். அதிலொருதுளி
யாகிலு மடியேன்மே லிரக்கமாய் விழப்
பண்ணி யென்னைப்பரிசுத்தனுக்கும்.

ஆ! என்நல்லபிதாவே, தேவரீருக்குநா
ன் துரோகஞ்செய்தது எவ்வளவ்வா அநி

யாயம், எவ்வளவோ நன்றியறியாமை! என்பாவங்களையெல்லா முழுமனதோடே வெறுத்து விடுகிறேன்.

நிஷ்டூரப்பாவமே! என் திவ்வியகர்த்தரை வாதித்தாய், எனக்குமோக்ஷவாசலையடைத்து என்னை நரகத்நிற் பயங்கரவாக்கினைகளுக்குள்ளாக்கக்காரணமாயிருந்தாய். உன்னையென்றென்றைக்கு மரோசித்துத்தள்ளுகிறேன்.

என்பிரியயேசுவே! என்பாவத்துக்குப் பரிகாரமாகஇந்தககஸ்திகொடுக்கிறீர். அடியேன்மே லுமக்குள்ள தயவினாலேயென்னைத்தண்டிக்கிறீர். உமக்குத்தோத்திரஞ்சுவாமீ. உம்முடையசித்தத்தின்படியே ஆகட்டுஞ்சுவாமீ.

ஆ! என்னுத்தும மேயிந்தககஸ்தியுனக்குக் கடினமாய்த்தோன்றுகிறதுக்குநியாயமில்லை. உன்பாவங்களுக்கு அவிழ்தம் வேண்டாமோ? பரமகர்த்தர் உன்பாவங்களுக்காக உன்னைப்பார்க்கிலு மெத்தனையோ அதிக கஸ்தி நிர்ப்பந்த மநுபவித்தார்!

ஆ! என்திவ்வியசேசுவே, மாசில்லாதவ ராகியதேவரீர் அடியேனுக்காகப் பொ றுமையோடே சகலகஸ்தியும் பட்டிருக் கப் பாவியாகிய நான் கஸ்திபொறுக்கா மலெப்படிமுறையிடுவேன்? சுவாமீ! என க்குப்பொறுமை தந்தருளும். தேவரீரநு பவித்த கடினபாடுகளையு மரணத்தையு ம்பார்த்து, என்மரணநேரத்திலே யென் னையிரட்சித்தருளுஞ்சுவாமீ.

என்திவ்வியகர்த்தாவே! தேவரீர் திருச் சபையைக்கொண்டு எனக்குப்போதிவிக் கிறதெல்லா முறுதியாகவிசுவசிக்கிறேன். என்விசுவாசத்தை யதிகரிக்கச் செய்தரு ளும்.

என்மதுரசேசுவே! எனக்காகக்கடின பாடுகளைப்பட்டு, நிஷ்டூரமரணத்தை ய டைந்தீர்; உம்மை நம்பியிருக்கிறவர்களை யிரட்சிக்கவார்த்தைப்பாடுகொடுத்தீர்; உ ம்மைமுழுமனதோடே நம்பியிருக்கிறே ன். என்னைக்கைவிடாதேயும்; என்னைப்பர கதியிற் சேர்த்தருளுஞ்சுவாமீ.

மட்டில்லாத சகலநன்மைச்சுரூபியாயி

ருக்கிற சர்வேசுராசுவாமீ என்னிருதயத்
தைமுழுதும் உமக்கு ஒப்புக்கொடுக்கி
றேன். தேவரீ ரளவில்லாத சினேகத்துக்
குப் பாத்திரமா யிருக்கிறபடியினலே யு
ம்மை நான் முழுமனதோடே நேசிக்கி
றேன். எல்லாத்தைப்பார்க்கிலு மும்மை
ச்சினேகிக்கிறேன். சுவாமீ உம்முடைய தி
வ்விய சினேகத்தின்க்கினியை யென்னுத்
துமத்திலெரியப்பண்ணும்.

ஆ! அன்புள்ளஇரட்சகரோ, பிரியமுள்
ளயேசுவே! என்மேலுள்ள அன்பினலெ
னக்காக உம்முடையபிராணனைத்தந்தீர்;
உம்முடைய அன்பினல் உமதுதிருக்கரத்
தி லென்பிராணனைவிட ஆசையாயிருக்கி
றேன். என் னன்பே என்சீவியமே இந்
தப்பரதேசத்தைவிட்டு, எப்போ தும்மு
டைய பாக்கியமுள்ளதரிசனையடைவேன்!

அர்ச்.-மரியாயே! பாவிகளுககடைகக
லமே, தயாளமுள்ள தாயே, எனககாகவு
ம்முடைய திருககுமாரனை வேண்டிககொ
ள்ளும். தேவமாதாவே யென்பேரிலே த
யையாயிரும், எனககு உதவியாயிரும். எ

ன்காவலானசம்மனசானவரே! இந்தவாப
த்துள்ளவேளையில் இடைவிடாமலென்னை
க காத்தருளும். நான் பேர்கொண்டிருக்க
கிற அர்ச்சியசிஷ்டரே! சகல மோக்ஷவா
சிகளே, அடியேனும் பரகதியையடைந்
து உங்களோடே சர்வேசுரனைத்தரிசித்து
ஸ்துதிக்கும்படிக்கு எனக்காகவேண்டிக்
கொள்ளுங்கள்.* ீசசுவே! மரியாயே.சூ
ஸையே, எனக்கு அடைக்கலமாயிருங்கள்.

* இந்தவார்த்தைகளை யடிக்கடி விசேஷமாய் மர
ணநேரத்திற் சொல்லுவாயாக.

---

## நல்லமரணமடைவதற்கான
## செபம்.

பிதாவாகிய சர்வேசுரனுக் கேகசுதனு
மா யெங்களாண்டவருமாயிருக்கிற சேசு
கிறீஸ்துவே தேவரீர்சிலுவையில்றையுண்
டிருக்கும்பொழுது மகாகொடூரக்கஸ்தி
வேதனைப்பட்டதுமல்லாமல் விசேஷமா
யுமது திருஆத்துமந் திருச்சரீரத்தைவி
ட்டுப்பிரியும்பொழுதுசொல்லிலடங்காத
வேதனையையநுபவித்தீரே. அந்தக்கஸ்தி
திர்ப்பந்தங்களையெல்லாம்பார்த்துஉமது

திருமரணத்துக்கு நான் பங்காளியாயிருக்கும்படி யடியேன் நல்லமரணமடையக் கிருபைபண்ணியருளுஞ்சுவாமீ.

சேசுவேயுமமுடைய திருத்தாயாருக்கு மும்மக்குநடுவிலிருந்து உமது அன்போடாவிபிரிய அர்ச்.-சூசையப்பருக்குத் தேவரீர் கிருபைசெய்ததுபோலவும் மகாபத்திநேயத்தோடு சற்பிரசாதமுட்கொண்டவுடனே அன்போடுயிர்விட அர்ச் -அமிர்தநாதருக்கநுக்கிரகஞ் செய்ததுபோலவும் - சேசுவே! சேசுவே, சேசுவே, என்றுயிர்விட அர்ச்.-இஞ்ஞாசியாருக்கிரக்கஞ்செய்தது போலவும் ஆவிபிரியுமளவும் அலமந்து அறிவுதடுமாறுதிருந்து அன்பின்முயற்சியிலுயிர்பிரிய அநேகமகாத்துமாக்களுக் கருள் செய்ததுபோலவும் பாவியாயிருக்கிற வடியேனுககு மப்படிப்பட்ட அர்ச்சியசிஷ்டர்களுடைய மன்றாட்டைகுறித்துக கிருபைசெய்தருளி யெனதுவிபிரியுமளவு முமதன்பு அகலாதிருககவும் உமதன்பிலே யடியேனுயிர்விடவு மநுக்கிரகம் புரியுஞ்சுவாமீ.

ஆ! என்சேசுவே, என்னன்பிலும், என்னன்போடும், என்னன்புக்காகவும், என்னன்பினாலுந், தேவரீருயிர்விடத் திருவுளமானதுபோல் அடியேனும் உமதன்பிலும், உமதன்போடும், உமதன்புக்காகவும், உமதன்பினாலு முயிர்விட அபேட்சிக்கிறேன்சுவாமீ.

ஆ! என்னன்பே, நிர்மலமான அன்பே, உன்னையித்தனையற்பமாய் ஸ்நேகித்த இந்த அந்நீதவுலகத்தைவிட் டென்னைப்பிரித்து, உன்னை யொருபோதும்கலாதுஸ்நேகிக்கும் அமலநாட்டிற்சேர்த்தருளுவாயாக.

அர்ச்.-மரியாயே! சர்வேசுரனுடைய மாதாவே யுமதுடையநேசத்திருக்குமாரன் சிலுவையில்றைபட் டிருக்கும்பொழுது மவருடையதிரு ஆத்துமந் திருச்சரீரத்தைவிட்டுப்பிரியும்பொழுதுஞ் சீவன் பிரிந்த சரீரத்தை யுமதுமடியில்வைத்திருக்கும்பொழுதுந் தேவரீரடைந்த மட்டிலடங்காத துக்கவியாகுலத்தைப் பார்த்து என்மரணசமயத்தி லென்பாவங்களை யுமது கருணையால்மறைத்து என் துர்க்குணங்

களை யுமது கிருபையாணிக்கி விசுவாசத்தி லுறுதியு நம்பிக்கையிற்றிடமுந் தேவசி னேகத்திற் பெருக்கமுங்கொண்டு சத்து ருவின் சோதனையில்கப்படாமற் செயங் கொள்ளவுமும்மோடுகூட வுமமுடைய தி ருக்குமாரனை நித்தியமுந்தரிசித்துஸ்நேகி க்கவு மெ◌க்காகவிசேஷமா யந்த ஆபத் தானசமயத்தில் மன்றாடவேணுமென்று மிகுந்ததாழ்ச்சிவிநயத்தோ டும்மைமன் றாடிக்கொள்ளுகிறேன்.

உலகத்தைச்செயித்து மோக்ஷத்தைய டைந்து உங்களிரக்ஷணியத்தின்மேலே க வலையற்று எங்களிரக்ஷணியத்தின்மேற் சி ந்தையாயிருக்கும் அர்ச்சியசிஷ்டர்களே! ஆபத்துநிறைந்தவிந்த வுலகத்திற்சத்துரு க்கள் நடுவி லகப்பட்டுத் தயங்கிநிற்கின்ற வெனக்கெப்பொழுதும்டைக்கலமாயிரு க்கவும் விசேஷமா யென்மரணசமயத்தி லெனக்கபயந்தரவு முங்களை மன்றாடுகி றேன். மட்டில்லாதநன்மையை யுங்களு க்குச்செய்தருளின சர்வேசுரனுடையம ட்டற்ற நன்மைத்தன்மையைக் குறித்து எனக்கு நல்லமரணம்வரவும் நானுமுங்

ளோ டொருவனுயிருந்து நித்தியமுஞ் சர்வேசுரனுடைய நன்மைத்தனத்தை வாழ்த்தி ஸ்துதித்து வணங்கி நமஸ்கரிக்கவு மெனக்காகப் பரமகர்த்தாகிய அவனை வேண்டிக்கொள்ளுங்கள். ஆமென்சேசு.

☞ வியாதிக்காரனுடைய இனத்தாருஞ் சினேகிதருமானவர்களே! இந்த ஆபத்துள்ளசமயத்தில் இவனாத்துமம் பரகதியிற் சேரும்படிக்கு உங்களாலியன்றமட்டுஞ் செபத்தினாலும் புத்திசொல்லுதலினாலும உதவிசெய்யுங்கள். இவன் தன்னாத்துமகாரியத்தைச் சரியாய்த்தீர்க்கவு மடிக்கடிசர்வேசுரனை நினைத்துமன்றாடவும ஏவுதலைச்சொல்லுங்கள். அதினால் இவன்பரகதியையடைந்தபிறகு உங்களையென்றென்றைக்கும ஆசீர்வதிப்பான். ஆனால் உங்கள்சட்டையினாலே இவன் நரகத்தின்க்கினியில்விழுந்தா லிவனுக்குமுங்களுக்கு மெத்தனையோகேடாயிருக்கும. இப்போது இவன்மேல் மனமிரங்காதிருப்பீர்களோ.

---

## அவஸ்தைப்பிரார்த்தனை.

சுவாமீ * இவன்மேற்கிருபையாயிரும்.
கிறீஸ்துவே இவன்மேற்கிருபையாயிரும்.
பரமண்டலங்களிலேயிருக்கிறபிதாவாகிய சர்வேசுரா.—இவனுக்குத்தயை செய்தருளுஞ்சுவாமீ.

---

* ஸதிரீயானால் இவள்மேற்கிருபையாயிருமென்றுசொல்லவும்.

உலகத்தை மீட்டிரட்சித்த சுதனாகிய சர்வேசுரா.

இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரா.

அர்ச்.-தமதிறித்துவமாயிருக்கிற ஏகசர்வேசுரா.

இவனுக்கிரக்கமாயிருந்தருளும் சுவாமி.

அர்ச்.-மரியாயே.

தூதரும் அதிதூதருமாகிய சகல அர்ச்.-சம்மனசுகளே.

அர்ச்.-அபேலே.

புண்ணியாத்துமாக்களான சகல அர்ச்சியசிஷ்டர்களே.

அர்ச்.-அபிராமே.

அர்ச்.-ஸ்நாபக அருளப்பரே.

அர்ச்.-சூசையப்பரே.

பிதாப் பிதாக்களுந் தீர்க்கதரிசிகளுமாகிய சகல அர்ச்.-ர்களே.

அர்ச்.-இராயப்பரே.

அர்ச்.-சின்னப்பரே.

அர்ச்.-பெலவந்திரரே.

அர்ச்.-அருளப்பரே.

அப்போஸ்தலருஞ் சுவிசேஷகருமாகிய சகல அர்ச்சியசிஷ்டர்களே.

இவனுக்காக வேண்டிக்கொள்ளும்.

ஆண்டவருடைய சகல பரிசுத்த சீஷர்க்களே.

மாசில்லாத சகல அர்ச்.- குழந்தைகளே.

அர்ச். -மூடியப்பரோ.

அர்ச். - செய்யப்பரோ.

வேதசாட்சிகளான சகல அர்ச்சிய சிஷ்டர்களே.

அர்ச்.-சில்வேஸ்திரியுவே.

அர்ச்.-கிறகோரியுவே.

அர்ச்.- அகுஸ்தீனுவே.

மேற்றிராணியரும் ஸ்துதியருமாகிய சகல அர்ச்சியசிஷ்டர்களே.

அர்ச்.-ஆசீர்வாதப்பரோ.

அர்ச்.-பிருஞ்சீஸ்குவே.

குருக்களுந் தம்பாதனருமாகிய சகல அர்ச்.-ர்களே.

அர்ச்.-மரியமக்தலேனையே.

அர்ச்.-பிரகாசியம்மாளே.

அர்ச். கித்தேரியம்மாளே.

கன்னியாஸ்திரீகளும் விதவைஸ்திரீகளுமாகிய சகல அர்ச்.-ர்களே.

எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்.

ஆண்டவருடைய திருவடியார்களான ஸ்திரீபூமான்களாகிய சகல அர்ச்சியசிஷ்டர்களே. இஉளுஞ்.

தயாபரனாயிருந்து,—இவனுடையபாவங்களைப்போக்கியருளுஞ்சுவாமீ.

தயாபரனாயிருந்து,—இவன்பிரார்த்தனையைக்கேட்டருளுஞ்சுவாமீ.

தயாபரனாயிருந்து,— இவனை யிரட்சித்துக்கொள்ளுஞ் சுவாமீ.

சகலபாவங்களிலேநின்று ,

தேவரீருடையகோபத்திலுந் தண்டனையிலு நின்று,

தேவரீருடைய தயவின்மேல் அவநம்பிக்கையிலு மரண அவஸ்தையிலு நின்று,

சாவின் பயங்கரத்திலுஞ் சீவன்மேலுள்ள மிகுந்த ஆசையிலு நின்று,

துர்மரணத்திலேநின்று,

நரகவாதனையிலுஞ் சகல பொல்லாப்பிலுநின்று,

பசாசின்சோதனையிலுந் தந்திரத்திலுநின்று,

இவனை யிரட்சித்துக்கொள்ளுஞ் சுவாமீ.

உலக்காரியத்தி லூன்றி நித்தியத்தி
ற்கு ஆயத்தப்படாத அசட்டையிலுநி
ன்று,

தேவரீருடைய திரு அவதாரத்தைப்
பார்த்து,

தேவரீருடைய சிலுவையையும் பா
டுகளையும்பார்த்து,

தேவரீருடைய திருமரணத்தையும்
அடக்கத்தையும்பார்த்து,

தேவரீருடையமகிமையான உத்தா
நத்தைப்பார்த்து,

தேவரீருடைய வதிசயமான ஆரோ
கணத்தைப்பார்த்து,

தேற்றரவுபண்ணுகிறவரான இஸ்பி
ரீத்து சாந்துவின் வரப்பிரசாதத்தைப்
பார்த்து,

மரணவேளையிலேயும் நடுத்தீர்க்
கிறநாளிலேயும்,

இவனையிரட்சித்துக்கொள்ளுஞ்சுவாமீ.

பாவிகளாகிய நாங்கள்தேவரீ
ரைமன்றாடுகிறோம்,

இவனுடையபாவங்களைப்
பொறுத்தருளவேணுமென்று
தேவரீரைமன்றாடுகிறோம்,

எங்கள்மன்றாட்டைக்கேட்டருளுஞ்சுவாமீ.

௱௭௮. அவஸ்தைப்பிரார்த்தனை.

உலகத்தினுடையபாவங்களைப் போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையே,—எங்கள்பாவங்களைப்போக்கியருளுஞ் சுவாமீ.

உலக....மற்றதும்.

சுவாமீ கிருபை.... மற்றதும்.

மூ.—சுவாமீ எங்கள்மன்றாட்டைக்கேட்டருளும்.

து—எங்கள் அபயசத்தம் உமதுசந்நிதிமட்டும் வரக்கடவது. பர.

---

ஆத்துமங்கேவுகிறபோது.

இவ்வுலகத்தைவிட்டுப் பிரிகிற இந்தக் கிறிஸ்துவனுடைய ஆத்துமமே! உன்னைப் படைத்த சர்வவல்லபப்பிதாவாகிய சர்வேசுரனுடையநாமத்தினாலும்வருடன்நித்தியசீவியமுள்ளதேவனாகிய அவருடைய அமலசுதனுமா யுனக்காகப் பாடுபட்டவருமா யிருக்கிறசேசுகிறீஸ்துவினுடைத்தினாலும்,உன்னிடத்திலெழுந்தருளிவந்தவராகிய இஸ்பிரீத்துசாந்துவினுடைத்தினாலும்

தேவமாதா பத்திச்சுவாலகர் ஞானதிக்கர் முதலான நவகணவானோர்களுடையநாம தகினாலும்பிதாப்பிதாக்கள் தீர்க்கதரிசிகள் அப்போஸ்தலர்கள்சுவிசேஷகர்வேதசாட் சிகள் ஸ்துதியர் கன்னிய ரிவர்களுடைய நாமத்தினாலும், சுவாமியுடைய திருவடி யாரான சகலஅர்ச்-ர்களுடையநாமததினா லும், இந்தநிர்ப்பாக்கியமான பரதேசத் தைவிட்டுநிறைந்தநம்பிக்கையோடுனது நித்தியவீடாகிய பரகதிக்குபபுறப்படுவா யாக. இன்றுநீசமாதானத்தின் வாசமடை ந்து,சியோனென்ற மோக்ஷவிராச்சியத் திலேகுடிகொண் டிளைப்பாறக்கடவாய். ஆமென்சேசு.

---

ஆத்துமம்பிரிந்தவுடனே
சொல்லுகிறது.

சுவாமீ கிருபையாயிரும்.
கிறீஸ்துவே கிருபையாயிரும்.
சுவாமீயிவன்மேற் றயையாயிரும். பர.
சர்வேசுரனுக்கு உகந்த சகல அர்ச்-ர்க ளே! இவனுக்குச்சகாயமாகவாருங்கள் அ ர்ச்சியப்பிரபுத்துவங்களைக் கொண்டிருக்

கிற பத்திச்சுவாலகரோ, ஞானதிக்கரோ,பத்திராசனரோ, நாதகிருத்தியரோ, சத்துவகரோ,பலவத்தரோ,பிாதமிகரோ,அதிதூதரோ. தூதரோ! இவனுக்கு எதிராகவந்து, இவனுடைய ஆத்துமத்தைக்கூட்டிக்கொண்டுபோய்ப் பராபரகர்த்தருடைய சந்நிதியிலே விடுங்கள்.

இந்தப் பரதேசத்தைவிட்ட ஆத்துமமே அநந்தகாருண்ணிய கிறிஸ்துவானவர் இன்றைக்குன்னைத் தம்முடைய திருவடியாராகிய அறவோருடைய சமுதாயத்தில்லைழத்தருளுவாராக. தமது தேவசந்நிதியிலுன்னை வைத்துக்கொள்ளுவாராக. சம்மனசுகள் அபிராமிருக்கிறஸ்தலத்துக்குன்னையழைத்துக்கொண்டுபோய் விடக்கடவார்களாக. பர. தீர்த்தம்

---

## அடக்கஞ்செய்யுமொழுங்கு.

வேண்டியநேரமானபின்பு
பிரேதமெடுக்கிறதுக்குமுன்செபம.

சுவாமீ! இவனுக்குமுடிவில்லாத காலத்தின் பேரின்பசுகத்தைக்கட்டளையிட்டரு



நித்திய கர்த்தாவாகியசேசுவே! தேவரீ ருமதுதிரு
மரணத்தால்பசாசையு மரணத்தையுஞ்செயித்து ம
கிமையோடுயிர்த்தெழுந்தருளவும்அடியோர்களையுயி
ர்ப்பிப்பீரென்கிற வுறுதியான நம்பிக்கையைக்கொடுக்
கவுங் கல்லறையி லடக்கம்பண்ணப்படத்திருவுளமா
னீரேசுவாமீ. அடியேன்பிரமாணிக்கமா யும்மைச்சே
வித்துநல்லமரணத்தையடையவும் பேரின்பமகிமை
யோடுயிர்க்கவு மநுக்கிரகஞ்செய்தருளுஞ்சுவாமீ.

னும். நித்தியகாலத்தின் பிரகாசமிவனுக் குப் பிரகாசிக்கக்கடவது. ஆமென்சேசு.

சுவாமீகிருபையாயிரும்.

கிறீஸ்துவே கிருபையாயிரும்.

சுவாமீ இவன்மேற்றயையாயிரும், பர.

நரகவாசலிலேநின் றிவனுடைய ஆத்துமத்தைக் கைதூக்கிரட்சித்துக்கொள் ளுஞ்சுவாமீ! இவன்சமாதானத்தி லிளைப் பாறக்கடவானாக.

மூ.—சுவாமீ! நாங்களிந்தஸ்தலத்திலே யிருந்து கூப்பிடுகிறசத்தம்.

து.—தேவரீருடைய சந்நிதிமட்டும்வ ரக்கடவது.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ! தேவரீருடைய அடி யானாகிய இவனுடைய ஆத்துமத்தின்பா வ்வசுத்தத்தைப்போக்கி, உலகத்துக் கிவ ன் செத்தவனாயிருந்தாலும் பாகதியிலும க்குப்பிழைக்கிறவனாயிருக்கவும், சரீரத்தி ன் துர்ப்பலத்திஞலிவன்செய்தகுற்றங்கள் உமது மட்டில்லாத கிருபாகடாக்ஷத்தா ற்பொறுக்கப்படவும், அநுக்கிரகம்பண்

ணியருளவேணுமென்று தேவரீரைவேண்டிக்கொள்ளுகிறோம். இந்தமன்றாட்டுக்களையெல்லாம் எங்களாண்டவரானசேசுநாதருடைய திருமுகத்தைப்பார்த்துத் தந்தருளுஞ்சுவாமீ ஆமென்சேசு.

பிரேதமெடுத்துக்கொண்டுபோகையில்.

மு.—சுவாமீ!தேவரீர் நரகவாதனையிலேயுஞ்சகலநோயுபத்திரவங்களிலேயுநின்று—து. உம்முடைய அடியானாகிய இவனுத்துமத்தை யிரட்சித்தருளுஞ் சுவாமீ.

மு.—சுவாமீ! தேவரீர் ஏனோக் எலியாசென்பவர்களைச் சாதாரணமான உலோகசாவிலேநின்றிரட்சித்ததுபோலே—இவனுத்துமத்தையுமிரட்சித்தருளுஞ்சுவாமீ.

சுவாமீ!தேவரீர்நோயனைச்சலப்பிரளயத்திலேநின் றிரட்சித்தது போலே, இவ.

சுவாமீ! தேவரீர் அபிராமென்பவனை ஊறென்கிறபட்டினத்தின் அக்கியானத்திலேநின் றிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் ஈசாக்கென்பவனைத்தன் தகப்பன்கையாற் பலியாகிறதிலேநின் றிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் சோபென்பவனைத்த ரித்திரத்திலுந் துன்பத்திலுநின் றிரட்சி த்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர்சோதுமென்கிற பட்டினத்திலும் அந்தப்பட்டினத்தைச் சுட்டெரித்த அக்கினியிலுநின்று லோத்தென்பவனையிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் எசிப்த்துத்தேசத்திராசனுன பராவோனிடத்திநின்று மோயீசனையிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் தாவீதென்கிறவனைக் கோலியாத்தென்ற இராட்சதன்கையிலுஞ்சவுலென்றஇராசன்கையிலுநின்றிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் தனியேலென்பவனைச் சிங்கங்களின் கெபியிலேநின் றிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் இரக்கமற்ற நரூக்கன் கையிலு மவன்குரூரத்தியிலுநின்று மூன்றுபாலனையிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! தேவரீர் சுசானுளென்கிற புண்ணியவதியை அவதூறிலேநின் றிரட்சித்ததுபோலே, இவ

சுவாமீ! தேவரீர் அர்ச்.-இராயப்பரையு
ஞ் சின்னப்பரையுஞ் சிறைக்கூடத்திலும்
விலங்கிலுநின் றிரட்சித்ததுபோலே, இவ.

சுவாமீ! கன் யாஸ்திரீயும் வேதசாட்சி
யுமாகிய தேக்கிலா ளென்பவளை மகாநி
ஷ்டுர ஆக்கினைகளிலேநின் றிரட்சித்தது
போலே, இவ.

தேவரீருடைய அடியாளுகிய இவனுத்
துமத்தையு மிரட்சித்து, உமதுமோக்ஷ
இராச்சியத்தின் செல்வபாக்கியங்களுக்கு
ம், நித்தியாநந்த சந்தோஷித்துக்கும் ப
ங்காளியாயிருக்கக் கிருபைசெய்தருளும்.

ஆமென். சசு.

கல்லறையிற்சென் றவுடனே.

சுவமீகிருபை. . . . மறறதும.

சுவாமீ எங்கள்பிரார்த்தனே. . . .

பிரார்த் திக்கக்கடவோம்.

சர்வேசுராசுவாமீ! இரக்கம்புரிகிறதும்
பொறுத்தலளிக்கிறதும், எப்பொழுது
மும திருவுளத் தியல்பாமே. ஆதலால்
இன்று இவ்வுலகத்தினின் றழைக்கத் தேவ
ரீர் திருவுளமாயின இந்த அடியானுடை

ய ஆத்துமத்தைச் சத்துருவின்வச மளிக்காமலுங் கடைசிப்பரியந்த மதைக்கைவிடாமலுமிருக்க உம்மைப் பிரார்த்திக்கிறோம். தேவரீரை யத்தியந்த விசுவாசத்தோடு நம்பியிருந்தபடியால்இந்தஆத்துமம் பாதாளவாதனை யநுபவியாமல் நித்தியாநந்தத்தை யடையும்படி பரிசுத்த தூத ரதைக் கைப்பற்றிக்கொண்டுபோய்ப் பரகதியாகிய நித்தியபேரின்பநாட்டிற் சேர்த்தருளக் கட்டளையிட்டருளுஞ் சுவாமீ.இந்தமன்றாட்டுக்களையெல்லாஞ்சேசுநாதருடைய திருமுகத்தைப்பார்த்துத் தந்தருளும். ஆமென்சேசு.

குழியில்வைத்தவுடனே.

சுவாமீகிருபை....மற்றதும்.

சுவாமீஎங்கள்பிரார்த்....ீர்த்தம். பர.

சுவாமீதேவதிருவுளத்தைப்பத்தியோடு அங்கீகரித்திருந்த இவன் தன் குற்றங்களுக்கேற்ற ஆக்கினையையநுபவியாமல்மன்னிப்பை யடையவும், வானோர்களோடுகூட மோக்ஷவிராச்சியத்தில் நிரந்தரமும்மைஸ்துதிபுரியவும், மரித்த உம்முடைய

அடியாளுகிய இவனுக்குக்கிருபைகூர்ந்த ருளவேணுமென்று தேவரீரை மன்ருடுகிரேும். இந்தமன்ருட்டு....



## பாலரடக்கம்.

இப்பொழுதும் என்றென்றைக்கும்சர்வேசுரனுடைய திருநாமம்வாழ்த்தப்படக்கடவது.

சுவாமீகிருபை....மற்றதும்.

சுவாமீஎங்கள்பிரார்த்....பர.தீர்த்தம்.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வவல்லபமும் அளவற்ற தயாளமுமுள்ள சர்வேசுரா! ஞானஸ்நானத்திலுலே ஞானப்பிறப்பையடைந்து, இந்தப் பரதேசத்தைவிட்டு நீங்குகிற குழந்தைகளுக்குச்சொந்தப்புண்ணியபேறுகள்ஒன்றுமில்லாதிருந்தாலுந் தேவரீர் உடனே யவர்களெல்லாருக்கு நித்தியபேரின்ப சீவியத்தைத் தந்தருளுகிறதுபோலே யிந்தப்பிள்ளையினுத்துமத்துக்கு இன்று தந்தருளினீரென்று விசுவசிக்கிற அடியோர்கள் ஆ

ப்பொழுதுங் கன்னியாஸ்திரீயாயிருக்கிற அர்ச்.-மரியாயினுடைய மன்றாட்டினாலு ஞ் சகல அர்ச்சியசிஷ்டர்களுடைய வேண் டுதலினாலும் இவ்வுலகத்திற் பரிசுத்த இரு தயத்தோ டும்மைச் சேவிக்கவும் பரகதி யில் மூத்தரான மாசில்லாத குழந்தைக ளோடேகூடத் தேவரீரைச் சதாகாலமுந் தரிசிக்கவும் எங்களுக்குக் கிருபைசெய்த ருளுஞ்சுவாமீ. இந்த மன்றாட்டுக்களையெ ல்லாம்.... மற்றதும்.

பின்பு தேவமாதாவின் பிரார்த்தனைசொல்லவும்.

குழியில் வைத்தவுடனே.

வாலருங் கன்னியரும் பாலரோடு விர தருஞ் சர்வேசுரனுடைய நாமத்தை ஸ்து திக்கக்கடவார்கள்.

சுவாமீ கிருபை ...., மற்றதும். பர.

பாலர்களை நமது அண்டையில் வரவிடு ங்கள், ஏனெனில்மோக்ஷவிராச்சியம் அப் படிப்பட்டவர்களுடையது.

பிரார்த்திக்கக்கடவோம்.

சர்வத்துக்கும் வல்லவருமாய் நித்தியசீ வியருமாய் மாசற்ற கற்புடையோருக்கு ப் பிரசந்த கருணையுள்ளவருமா யிருக்கிற

சர்வேசுரா! தேவரீரிந்தப்பாலனுடையஆ த்துமத்தையின்றுமோக்ஷவிராச்சியத்துக் கழைத்தருளக் கிருபைபண்ணினீரோ! அ டியோர்களுக்குங்கிருபைசெய்துநாங்கள் பாவதோஷமின்றிச்சீவித்து,உமமுடைய உபத்திரவமான திருப்பாடுகளின் பலன்க ளினாலும், மோக்ஷபாக்கிய சம்பந்நரா ண அர்ச். மரியாயிமுதற் சகலமோக்ஷவா சிகளுடைய வேண்டுதலினாலும்உம்மாலே தெரிந்துகொள்ளப்பட்ட சகல அறவோ ர்களோடு முடிவில்லாத மோக்ஷவிராச்சிய த்திற் களிகூர்ந்திருக்க வநுக்கிரகம்பண் ணியருளும். இந்தமன்றாட்டுக்களை யெல் லாம்.... மற்றதும்.

ஆமென்சேசு.

---

## பதிதரைமறுப்பதற்குரிய திருச் சபைப்போதனையின் சங்க்ஷேபம்.

க. பிதாச்சுதனிஸ்பிரீத்துசாந்துவாகிய * திரியே கசர்வேசுரனைமாத்திரந் தெய்வமென்றாராதித்து வ ணங்கி இந்த அர்ச்சிய தமதிறித்துவத்தி னிரண்டா

---

* அர்ச்.-மத்தேயு,உ அ-அதி. ௰௯-||உ-கொரிந்தி யர், ௰௩-அதி. ௰௩.|| க. அருளப்பர், ரு-அதி. எ.

மாளாகிற சுதனாகியசர்வேசுரன் நமக்காகமனிதனா கப்பிறந்து சிலுவையிலறையுண்டு மரித்துயிர்த்ததி னாலேயு மவரொருவரே யுலகஇரட்சகராயிருக்கிறதி னாலேயு மவருடைய புண்ணியபலன்களின்மேல்மாத் திர நம்முடையவிரட்சணியத்தின் நம்பிக்கையெல்லா ம் வைக்கவேணுமென்று பொதுவாயிருக்கிற- அர்ச்.- திருச்சபைவிசுவசிக்கின்றது.

௨. சேசுநாதரைப்பற்றித் தேவ இரக்கத்தா வில வசமாய் நம்முடைய பாவங்கள் பொறுக்கப்பட்டுத் தேவ இஷ்டப்பிரசாத நமக்குக்கொடுக்கப்படுகிறதெ ன்பது சாதாரணத்திருச்சபையின் விசுவாசப்போத னையாமே.

௩. சர்வேசுரனுடைய பிள்ளைகளுக்கு நித்தியசீவி யமுண்டென்கிறதுறுதி.அந்தப்பேரின்ப மோக்ஷபா க்கியமானது நம்முடைய ஆண்டவராகிய சேசுகிறீ ஸ்துநாதருடைய புண்ணியபலன்களைப்பற்றித் தம்மு டையகற்பனைகளை யநுசரிப்பவர்களுக்குத் தாங்கொ டுப்பதாக வார்த்தைப்பாடுகொடுத்த சர்வேசுரனு டைய அளவற்றகிருபையுபகாரமுமாய் அந்தவார்த் தைப்பாட்டி னிமித்தமாகக் கிறீஸ்துவர்களுடைய தர்மக்கிரியைகளுக்கு மவர்கள்பெற்றபேறுகளுக்குந் தப்பாமற்கொடுக்கப்படுஞ் சம்பாவனையுமாயிருக்கி றதாகப் பொதுவாயிருக்கிற அர்ச்.-திருச்சபை படி ப்பிக்கின்றது.

௪. * சேசுகிறீஸது நாதரோடேவாழ்கிற அர்ச்.- ர்கள் மனிதருக்காகச் சர்வேசுரனை மன்றாடுகிறார்க ளென்றுந் தேவசுதனாகிய சேசுகிறீஸதுநாதர்மாத்தி ரமே நமமுடையஇரக்ஷகராயிருக்கையி லவர்வழியா க அர்ச்.-ர்கள் நமக்காகச் சர்வேசுரனிடத்திலேவே

---

* ௬ா௫௬-ம. பக்கமுதற் காண்க.

ண்டிய நன்மைகளை யடையும்பொருட்டாய் நாம்வர்களைமன்றாடுகிறது பிரயோசனமுமாய் நன்மையுமாயிருக்கிறதென்றும் பொதுவாயிருக்கிற-அர்ச்.- சபை படிப்பிக்கின்றது. ஆனாற்றிருச்சபை பூசைப்பலிமுதலிய தேவ ஆராதனையை அர்ச்சியசிஷ்டர்களுக் கொடுக்கொடாமல் அவர்களைக்குறித்து அவர்களுக்கு முடிசூட்டிய சர்வேசுரனுக்குமாத்திரமே யொப்புக்கொடுக்கின்றது. இந்த நியாயங்களைபபற்றியே- அர்ச்சியசிஷடர்களைபபார்த்து மன்றாடுகிறபோது எங்களுக்காகவேண்டிக்கொள்ளுங்களென்றுஞ் சர்வேசுரனைபபார்த்து மன்றாடுகிறபோது எங்களுக்குத்தயைபண்ணி யிரட்சியும்-எங்கள்பிரார்த்தனையைக் கேட்டருளுஞ்சுவாமீயென்றுஞ்சொல்லுகிறோம்.

ரு. * திருச்சுரூபங்களைத்தேவஆராதனையால்வணங்கவுந்தேவத்துவமாவது சத்தியாவது அந்தச்சுரூபங்களி லுண்டாயிருக்கிறதென்று விசுவசிக்கவும் யாதோருபகாரத்தை யதுகள் தானே நமக்குச்செய்யமன்றாடவும அதுகளின்மேலேதானே நம்பிக்கைவைக்கவு மொண்ணாதெனறுவிலக்கி அதுகள்வழியாக அச்சுரூபங்களினாற்றோற்றுவிக்கபபட்டசேசுநாதர்தேவமாதா மற்றமோக்ஷவாசிகளுக்கே தக்கபடியே நம்முடையவணக்கமும் வேண்டுதலுஞ் செலுத்தவேணுமென்று- அர்ச்.- பொதுத்திருசசபைகற்பிக்கின்றது. ஆகையால்ந்தசசுரூபங்களுக்குமுன்பாக முழங்காலிலிருக்கும்போதாயினும அந்தச்சுரூபங்களை முத்தமிடும்போதாயினும் அதுகளுக்கந்தசசங்கை நமஸ்காரம்பண்ணும ல்துகள்சாயலாயிருக்கிற சேசுகிறீஸதுவையும அர்சசியசிஷ்டர்களையுங்குறித்தே அந்தசசங்கைநமஸ்காரம்பண்ணுவதுசத்திய திருச்சபையின்முறைமையாமே.

---

* ௯௱ ௰.-பக்க முதறகாண்க.

சு. * திருச்சபை பூர்வீகந்துவக்கி நடந்தபாவனை யாக அர்ச. - பண்டங்களுக்குச்செய்யுஞ் சங்கையை யு மத்தன்மையே கண்டுணர்ந்து உயிரில்லாத வஸ்து வாகிய பண்டத்துக்கு வணக்கஞ்செலுத்தாம லதின் வழியாக அதுசம்பந்தமுள்ள கர்த்தருக்காவது மோ க்ஷவாசிகளுக்காவது செலுத்துவதே கிரமம்.

எ. இக்கருத்தோடுதானே பொதுத்திருச்சபை சி லுவையைச்சங்கித்துச் சகலசடங்குகளிலேயும் அதி னடையாளத்தை வரைகின்றது. சிலுவையைவணங்கு கிறபோது மரத்தின்பேரில் நம்முடைய பாதகங்களை சசுமந்துகொண்டுபோக்கினவரைத் திருச்சபைவண ஙகுகிறதென்றும் அடிக்கடி சிலுவையடையாளத்தை வரைகிறதினுற் றமமுடைய பிள்ளைகளாகிய நமதுபே ரிலுள்ளபக்ஷத்தால் நமக்காகமரித்தசேசுகிறீஸ்துவி னின்வை நமக்குவருவிக்கக் கருத்தாயிருக்கிறதென்று மெல்லாருக்குந்தெரிந்திருக்கின்றது.

அ. தேவனுமனிதனு மொன்றுயிருக்கிற சேசுகிறீ ஸ்து ஒருவர்மாத்திரமே தமதுஅளவற்ற மகத்துவ த்தைப்பற்றி நமமுடையபாவஙகளுக்குவேண்டியபரி காரமபண்ணுகிறதற்குத்தக்கவரென்று திருச்சபை படிப்பிக்கின்றது. அந்தபபரிகாரத்தின்பலனை நமக் குத் தந்தருளுகிறவித மிரண்டுண்டு. ஒன்றில்நமக்க ற்பமாகிலு மாக்கினையிடாமல் முழுதும பாவநிவார ணமபண்ணுகிறது. ஒன்றில் நித்திய ஆக்கினையாகி ய கனமானவாக்கினையை அநித்திய ஆக்கினையாகிய கொஞ்சவாக்கினையாக மாற்றுகிறது.— முதல்வகை ப்பாவநிவாரணமானது அவருடையநன்மைத்தனத்து

---

* ௪. அரசராகமம, ௰௩• அதி.உ௧. அர்ச்.-மத்தே யு,௬-அதி. உ௰. உ௧. முயற்கியாகமம், ௰௬.-அதி. ௰௧. ௰௨.

க்குமுழுது மொத்ததாயிருக்கிறதால் ஞானஸ்நானந்
திலது நிறைவேறுகின்றது. — உம்- வகையோவெளி
ற் றயையோடேநீதிகலந்திருக்கிறதினால் ஞானஸ்நா
னமபெற்றபிற்பாடு மறுபடிபாவத்தில் விழுகிறவர்க
ளுக்குப் பாவவிமோசனங் கட்டளையிடுகிறதில் நிறை
வேறுகின்றதென்று விசுவசிக்கிறோம.

௬. * இந்தநியாயத்தைபபற்றியேபாவசங்கிர்த்த
னத்திற் பாவிகளுக் கவனவன்பாவஙகளின்கடினத்து
க்குத்தக்க வபராதத்தைக் கட்டளையிடுகிறது சத்தி
யதிருசசபையின் முறைமையாமே. அந்தவபராதத்
துக்குப் பாவிகள் தாழ்ச்சியோடேயுட்பட்டு அதைத்
தீர்க்கக்கடவார்கள். அதற்குப்பேர்பாவப்பரிகாரமெ
ன்று முத்தரிப்பென்றுஞ் சொல்லப்படும். பாவிகள் ப
டுகிறமனஸதாப மிகுதியைப்பற்றியாகிலுஞ் சாதார
ணத்திருச்சபை பாவிகளைசசெய்யசசொல்லிக் கட்ட
ளையிடுகிற தர்மக்கிருத்தியங்களைப் பற்றியென்கிலு ம
வர்களுக்கிடவேண்டிய ஆக்கினையைக்குறைக்கிறதும்
முழுதும்விடுதலாக்கிறதுமுண்டு. அதற்குப்பேர் பல
னென்றுசொல்லப்படும். அந்தவாக்கினையைக் குறை
யப்பண்ணுகிறபலன் தனிப்பலனென்று மதைமுழுது
ம் விடுதலாக்கிறபலன் பரிபூரணபலனென்றும் பெயர்
பெறும். அப்படிப்பட்டபலன்களைக்கட்டளையிடுகிற த
ற்குசசேசுநாதசுவாமி தமதுதிருசசபைக்குவல்லமை
யைத் தந்தருளினாரென்றும் - அதுகளைநாமடைகிறதி
னாலே நமக்கு மிகுந்த ஞானப்பிரயோசன முண்டா
மெனறும் அந்தப்பலன்மட்டிலே விசுவசிக்கிறோமொ
ழிய மற்றப்படியல்ல.

௰. தேவ இஷ்டப்பிரசாதத்தோடு விசுவாசிகள் ம

---

* அர்ச்.-மத்தேயு, ௰௬-அதி. ௰௯|| ௫-அதி. ௰௬ ||
௰௮-அதி. ௰௮. அர்ச.- அருளப்பர். ௨௰-அதி. ௨௨-
௨௩.

ரணத்தையடைந்திருந்தபோதிலு மவர்களியாதோர த்பகுற்றத்தினுலாவது தங்கள்பாவங்களுக்கெல்லாம வேண்டியபரிகாரஞ்செய்யாததினுலாவது தேவநீதியி டத்திலின்னங்கடன்பட்டவர்களாயிருந்தால்தேவநீதி யவர்களுக்கிடுகிறவாக்கினையை யநுபவிக்கவேண்டி * மறுலோகத்திலுத்தரிக்கிறஸ்தலத்தின்க்கினியிலேசில காலமிருந்து அந்தவாக்கினையையநுபவித்து உத்தரிக் கிறார்களென்று பொதுத்திருசசபை விசுவசித்துப் ப டிப்பிக்கின்றது. அவர்களைச சர்வேசுரன் தண்டித்தா லு மவருக்குப்பிள்ளைகளுமாய் நமக்குசசகோதரரு மாயிருக்கிறார்களென்கிறது நிசசயம. இதைப்பற்றி யே திருசசபையின் ஐக்கியத்திலே யின்னந் தேவநீ திக்குக் கடன்காரராய் மரணத்தையடைந்த புண்ணி யாத்துமாக்களுக்காகச செபமபண்ணுகிறதுந் தா ன தர்மஞ்செயகிறதும விசேஷமாய்ப்பூசைப்பலியொ ப்புக்கொடுக்கிறது முத்தரிக்கிறஸ்தலத்தி லவர்களுக் குதவியாயிருக்குமென றுறுதியாய்விசுவசித்துத் திரு சசபைதுவக்கின காலமுதற்கொண்டு கிறீஸதுவர்க ளுலகெங்கு மந்தத் தர்மயுதவிகளைச செய்துகொ ண்டுவந்தார்கள். மேலும மக்கபெயரொன்றவர்களு டைய காலத்திலே விசுவாசிகள்சேசுகிறீஸது நாதர் வ ருவதற்குமுன்னமே மரித்தோர்களுக்காகச செய்யுஞ் செபமவர்களுக்குபபிரயோசனமா யிருக்கிறதென்றெ ண்ணிக்கொண்டிருந்ததுமன்றி யந்தச் சுகிர்தமுறை மையைச் சர்வேசுரன்றுமே வேதாகமஙகளிலே மிகவு மபுகழ்ந்துயர்த்தினா.

---

* அர்ச்.-மத்தேயு, ௰உ-அதி. ஈஉ-ஈக. || காட்சி. உக-அதி. உஎ. மீளவும-அர்ச்.-மத்தேயு, ரு-அதி. உரு-உக.—க-கொரிந்தியர், ஈ-அதி. ௰ஈ-௰ச-௰ரு. க-இராயப்பர்,ஈ-அதி. ௰அ-௰க-உ௰.

## ஏருச. பதிதரைமறுப்பதற்குரிய

யக * சேசுகிறீஸ்துநாதர் தமமுடைய அப்போஸ்த லருக்கு மவர்களிடமாயிருக்கிறவர்களுக்குந் திருவுளம் பற்றினதாவது: நீங்களாருடையபாவங்களைப்பொறு ட்பீர்களோ வவர்களுடையபாவங்கள் பொறுக்கப்படு ம். ஆருடையபாவங்களைப் பொருமவிருப்பீர்களோ வ வர்களுடையபாவங்கள் பொறுக்கப்படாதிருக்கும், பூ லோகத்திலே நீங்கள் கட்டுகிறதெல்லாம் பரலோக த்திலுங்கட்டப்படும், பூலோகத்திலே நீங்கள்விழுக்கி றதெல்லாம் பரலோகத்திலு மவிழ்க்கப்படுமென்றார். ஆகையால்ஞானஸநானம்பெற்றுத்திருச்சபையின் அ திகாரத்துக்குட்பட்டபின்பு செய்தபாவங்களைப்பொ றுக்கவும்பொருமவிருக்கவுந் திருச்சபைக்குக்கொடுக் கப்பட்டவதிகாரத்தை நிறைவேற்றும் பாவசங்கீர் த்தன சிமமாசனத்திலிருந்து குருக்களிடுந்தீர்வைக் குட்பாவிகள் தக்கஆயத்தத்தோடுட்படுவதினுற்பாவப் பொறுத்தலை யடையவேண்டுமென்று சேசுநாதர்சித் தமாயிருக்கிருரென்றுவிசுவசிக்கிரேம். திருசசபையி ற்றேவ ஊழியர் சேசு கிறீஸ்துவினுமத்தாற் பாவவி மோசனவார்த்தைசொல்லும்பொழுது சேசுகிறீஸ்து நாதர் தாமேயிந்தத்தீர்வையிடுகிருர் அவருக்குவதிலா கத்தானே குருக்கள் கிருபைநிறைந்த நீதிசெலுத்து கிறவர்களாகஸ்தாபக பண்ணப்பட்டிருக்கிருர்கள். குருக்கள் வெளிப்பணிவிடை செய்யும்பொழுது கா ணப்படாத பரமகுருவாகிய சேசுநாதருள்ளத்திலே பாவப்பொறுத்தலைக்கொடுத்தருளுகிருர்.

யஉ. சுவிசேஷத்திற் றெளிவா யெழுதப்பட்டபடி யுமஅர்ச். சின்னப்பருடைய போதகத்துக் கொத்த படியும அப்போஸ்தலர் காலந்துவக்கிச் சகல வேத பாரகருந் திருச்சபை பரம்பினவெத்திசையிலும்பர

* ௱சுசு மபக்க முதற்காண்க;

ம்பரையாய்ப் படிப்பித்துக்கொண்டுவந்ததற்கொத்தபடியும் சேசுகிறீஸ்துநாதரருளிச்செய்த வாக்கியத்தின் சுய அர்த்தத்தின்படியும் * சேசுகிறீஸ்துநாதர் மெய்யாகவே தேவநற்கருணையி லெழுந்தருளியிருக்கிறாரென்றும்வருடைய திருச்சரீரமுந் திருவிரத்தமு மாத்துமமுந் தேவசுபாவமு மப்பத்தினுடைய குணங்களுக்குள்ளேயும் இரசத்தினுடைய குணங்களுக்குள்ளேயும் அடங்கியிருக்கிறதென்றும் அதைப்பற்றிச சுவாமியுடையசர்வவல்லபத்தினாலப்பமுமிரசமுஞ்சேசுகிறீஸ்துவின் திருச்சரீரமாகவுந்திருவிரத்தமாகவுமாறிப்போகிறதென்றும பொதுத்திருச்சபை விசுவசித்துப்படிப்பிக்கின்றது.

அந்தப்போதனையின்படியேயும் புது ஏற்பாட்டிற் புதியகுருப்பட்டத்தையும் * புதியபலியையுந் தாம ஸதாபகமபண்ணுவதாகப் பழையவேதத்திற்றீர்கதரிசிகள்வழியாய்ச சர்வேசுரன் கொடுத்தருளினவார்த்தைப்பாட்டின்படியேயும பூசையானது மெய்யானபலியென்றும அதிலே சேசுநாதர் தமமைத்தாமே நமக்காகத் தம்முடைய பிதாவாகிய சர்வேசுரனுக்குப்பலியாகக் குருக்களின் கைங்கரியத்தைக் கொண்டொப்புக் கொடுத்தருளுகிறாரென்றுந் தாம் ஒருவிசை சிலுவையினிறைவேற்றினபலியைப் பூசையிலேதொடர்ந்துசெலுத்துகிறதற்காகவுந்தாம்படைத்தகடினம

* உராயளம். பக்க மூதற் காண்க.

* பூசைக்குமுற்குறி சனிபபாகமம, யச- அதி.யஅ. தீர்க்கதரிசியான மலக்கியாஸ், க-அதி. ய,-யக. கீதாகமம, ௱கூ-ச. திவ்வியபூசை சேசுகிறீஸதுவினால் ஸதாபிக்கப்பட்டதற்குதாரணம்: ஆச்.- லூக்காஸ, உஉ- அதி. யகூ.-உய. அதற்கத்தாட்சி : க. கொரிந்தியர், ஙஅதி. யகூ. முதலிய. எபிரேயர், யகூ- அதி. ய.

ரணத்தைத்தோற்றுவித்து உலகமுடிகிறவரைக்கும் சிலுவைபபலியின் ஸமரணத்தை மனிதரிடத்தில மாருமல் ஸதிரப்படுத்துகிறதற்காகவும் நாம்நுதினமும் நம்முடைய தோஷத்துரோகங்களுக்குப்பொறுத்தலையடையத் தக்கதாக இரக்ஷணியமான அதின்பலனை நமக்குத் தந்தருளுகிறதற்காகவும் இந்தப்பலியை ஸதாபகம்பண்ணினுரென்றுந் திருச்சபை விசுவசித்துப்படிப்பிக்கின்றது. அப்பம்இரசமாகியவிருவகைக் குணங்களிலும * ஒவ்வொருவகைக்குணங்களுக்குள்ளுஞ் சேசுநாதர்மெய்யாகவே யெழுந்தருளியிருக்கையால் இருவகைக்குணங்களிலே தேவநற்கருணையுட்கொள்ளுகிறகுருக்களு மொருவகைக்குணங்களில் மாத்திரமுட்கொள்ளுகிறமற்றக்கிறீஸ்துவர்களுஞ்சரியாகவே அந்தத் திவ்வியகர்த்தருடைய திருச்சரீரத்தையுமிரத்தத்தையு முட்கொள்ளுகிருர்களென்று விசுவசிக்கிறது நியாயந்தானே. மீளவுமொருவகைக்குணங்களுக்குள்ளேமாத்திரந் தேவநற்கருணையைவாங்கவேணுமென்று திருச்சபை கட்டளையிடதற் கநேககாரணமான நியாயமுண்டாயிருக்கிறதாமே.

௰௬. விசுவாசமந்திரத்தில் இஸ்பிரீத்துசாந்துவை விசுவசிக்கிறேமென்று சொன்னமாத்திரத்திற் பொதுத்திருச்சபையையும்விசுவசிக்கிறேமென்றுஞ்சொல்லுகிறேம். இதைக்கொண் டெக்காலத்திலேயும் பொதுத்திருச்சபை படிப்பிக்கிற தவருதசத்தியத்தையறிந்தங்கீகரிக்கவேண்டுமென்கிறகட ன்மதுபேலிருக்கிறதென்றெடுத்துக்கொள்ளுகிறேம். ஏனென்றல் அந்த

---

* அர்ச்.- அருளப்பர், ௬.- அதி. ௫௧ - ௫௭-௫௯.|| உரோமையர், ௬ - அதி. ௩. அசு.- லூக்காஸ, உ௪. அதி. ௩௰-௩௧. அப்போஸதலர் நடபடி, உ-அதி. ச௨. ச௬||உ௰. அதி. எ||க. கொரிந்தியர், ௰-அதி.௰எ.

த்திருச்சபைதானே நாமெக்காலமும் விசுவசிக்கவே ண்டியதெல்லாம் நமக்குபதேசிக்கவுஞ் சுவிர்தசத்தி யநெறியில் நம்மை நடப்பிக்கவுஞ்சர்வேசுரனுல்ஸதா பிக்கப்பட்டு இடைவிடாமலவராற் சத்தியத்தைப்ப டிப்பிக்கவும் நடத்தவும்பட்டுவருகின்றது.

ஆனபடியினலே * திருச்சபை தனக்குண்டாகிய வதிகாரத்தைப் பொய்யைப்படிப்பிக்கிறதிற் செலு த்துமோவென்று பயப்படுகிறதற்கிடமில்லை. அப்படி ச்சந்தேகப்படுகிறவர்கள்பரமகர்த்தனை நம்பாமல்வ ர் தமதுதிருச்சபைக்கு விரோதமாயெழும்புகிறதப்ப றையான போதனைகள்முதலிய பசாசின் வல்லபங்க ளெல்லாம்தைதமேற்கொள்ள மாட்டாதென்றுந் தா ந்தாமே யந்தச்சபையோ டுலகமுடியுமளவு மிருப் போமென்றுங் கொடுத்தவார்த்தைப்பாட்டை வி சுவசியாததினலே திவ்வியகர்த்தருக்கு மிகவுமேற்கா த துரோகஞ்செய்கிறர்கள். நம்மைப்படைத்து நம க்குவேண்டிய காரியங்களையுமிந்திருக்கிற சர்வேசு ரன் நமது நன்மைக்காகச் சகலஅதிகாரத்தையும்பா

---

* கிறீஸ்துவினுடையதிருச்சபை யென்றென்றைக் கு நிற்கும். அர்ச். மத்தேயு, ௰௬-அதி. ௰௮. || உ௮-அதி. உ௰. அர்ச். அருளப்பர், ௰௪ - அதி. ௰௬ - ௰எ. தாவீதன், ௬எ-கீதம, ௮. இசையாகியார், ௯-அதி. எ. எரேமியாஸ, ௩௧-அதி. ௩௫-௩௬. எசெக்கியேல், ௩எ-அதி. உ௪-உ௬. தனியேல், உ-அதி. ௪௪. திருச்சபை யென்றென்றைக்குங் கிறீஸ்துவினுடைய குடியிருப்பு. தாவீதன், ௱௩௧-கீதம, ௱௩-௰௪. கற்புடையாளென்னு ந் திருச்சபைதனக்கு மணவாளராயிருக்கிற சேசுகிறீ ஸ்துவினல் மிகவுநேசிக்கப்பட்டு ஒருபோதுங் கெடா தென்பது. எபேசியர், ௫-அதி. உ௪ - உ௫ - உஎ உ௯-௩௧-௩௨. இப்படியநந்தமுளவாம்.

உ௩

ர்க்கச் சந்தேகமின்றியுறுதியாய் ஸ்தாபகம்பண்ணிக் கொண்டிருக்கிறதிருச்சபையின் திகாரத்துக்குக்கிறீஸ் துவர்கள்யாவருங் கீழ்ப்படியச சித்தமாயிருக்கிறுர். ஆனதைப்பற்றித் திருச்சபையிலிருந்து ‡ வேதப்பு ஸ்தகங்களேயும் அப்போஸ்தலர் காலந்துவக்கிப் பரம்பரையாய்வழங்கிவருகிற வேதபோதனைகளேயுஞ் சத்தியப்பொருளாகக் கைக்கொண் டிந்தத்திருச்சபையைக்கொண்டுதானே யதுகளுக்குள்ள மெய்யர்த்தத்தை யறிகிறேம். இந்தத்திருச்சபைதான் விசுவாசிகளுக்குள்ளேபிறக்கிற தர்க்கங்களைத் தீர்க்கிறதற்குத் தக்கது. அப்படிச சாதாரணத் திருச்சபையா வியாதொருவேததர்க்க மொருவிசை தீர்ப்பானபிறகு தீர்த்ததை மறுபடிசோதியாமற் ருழ்ச்சியோ டேற்றுங் கொள்ள வேணுமென்பது குன்றுதசத்தியமாமே.

---

‡ வேதாகமங்களிலே அாத்தமறிதற்கரியதுகளுண் டென்பது - அர்ச்.-இராயப்பர், உ-நிருபம், ௩- அதி. ௰௬. அவனவனுக்குத் தோன்றினபடி யர்த்தம்பண்ணப்படாது - அர்ச்.-இராயப்பர், உ - நிரு. முதல்- அதி. உ௰. கல்விநூலெல்லாங்கடந்த மேலான ஞானநூலாகிய வேதங்கற்ரேர்க்கு மரிதாயிருக்கையில் ஒளிவிடுமணியைச்சேற்றிற் புதைத்தாற்போலவேதப்பு ரட்டர்தப்பறையாகத்திருப்பிக்கெடுத்துவெளிப்படுத்தினவுட்பயன்விளங்காதசிலபுஸ்தகங்களேவேதமென்றுன்னிக் கல்லாரும் புல்லோரு மூண்மையறியாமலொருவர்க்கொருவர் புல்லறிவாண்மையாற் றர்க்கித்துத்தடுமாறுவார்கள். இதனுல் மூழ்கவறியாதவ னிரத்தினத்திற் காசைப்பட்டுச் சமுத்திரத்திலிறங்கிச் சாவதும்பால வேதக்கடலிலிறங்கத் துணிந்தகல்லாருமிரத்தினங்கள்போ லதிர்புதைந்திருக்கின்றவுட்பயன்றியாமல் விபரீதஙகளேநினைத்துத் தங்களுயிரைக் கோல்வார்களெனபதற் கையப்படவேண்டுமோ?

தேவசுதனாகிய கர்த்தர் தமது திருச்சபையுறுதியாயி ஸ்தாபகம் பண்ணப்பட்டிருக்கும் பொருட்டாக வெக்காலத்திலு மொரேபிரசித்தமான தலைவராலு கையி லொரேசபையாயிருக்கவேணுமென்று சித்தமாகி யதைக்காப்பாற்றி நிலைநிறுத்த ‡ அர்ச்.-இராயப்பரையு மிவரிடமாயிருப்பவர்களையுந் தலைவராக ஸ்தாபகம்பண்ணிவைத்தருளினார். ஆகையாற் சேசுநாதர் அர்ச்.-இராயப்பருக்குக்கொடுத்த மேலானவதிகார மிவரிடமாயிருக்கப்பட்ட அர்ச்.-பாப்புமாருக்குண்டாயிருக்கிறதென் றங்கிகரிக்கிறோம். இந்த நியாயத்தைப்பற்றிப் பொதுச்சங்கமாகக் கூடினசாதாரணத்திருச்சபையும் வேதபாரகருஞ் சகலகிறீஸ்துவர்களுக் கெந்நாளும்படிப்பித்துக்கொண்டுவந்த பிரகாரம் அர்ச்.-பாப்புமாருக்குப்பணிந்து கீழ்ப்படிந்து நடக்கவேணும். இதுவுமன்றி இவ்வதிகாரத்துக்குச்சுவிசேஷத்திலுண்டாயிருக்கிற வஸ்திவாரமெம்மாத்திர முறுதியாயிருக்கிறதென்றும் அதுபரம்பரையாய்த் தவறாமல்நடந்துகொண்டுவந்தது எம்மாத்திரந்திஷ்டாந்தமா யிருக்கின்றதென்றுங் கேட்டறிந்தபின்னர் கிறீஸ்துவர்கள் குருட்டாட்டங்கொள்ளாமல்தையெப்படிமறுத்துப் பிறக்கணிக்கலாம் ?

## திருச்சபைக்குப்புறம்பான
## புறச்சமய கண்டனம்.

நம்முடைய இரட்சகரானசேசுநாதர் படிப்பித்த பிரகாரம * அப்போஸ்தலர்காலந்துவக்கிப் பரமப

‡ அர்ச்.-மத்தேயு, ௰௬-அதி.௰௮-௰௯. அர்ச்.-லூக்காஸ், ௨௨-அதி. ௩௧-௩௨. அர்ச்.-அருளப்பர், ௨௧-அதி. ௰௫-முதலிய. அர்ச்.-மத்தேயு, ௰-அதி. ௨-முயற்சியாகமம, ௫-அதி.௨௯.கலாத்தியர், ௨-அதி.௭-௮.

* ௰௭.

ரையாயத் திருச்சபை விசுவசித்துப் படிப்பிச்கிற சு
ர்வேசுரனுடைய சத்தியவேதபோதனைக்கு விரோ
தமாகப் புதிதாய்முளைத்த அநேக புறச்சமயத்தா
ர் தாங்களுஞ் சர்வேசுரனுடைய வேதத்தைப்போ
திக்கிறோமென்று திரிகிறாகள். ஆனால் இகலோகபர
லோக மெல்லாத்தையுந் தாமொருவராயிருந்துத
னிக்கோலோச்சும் ஏககடவுளைப்போலும் எந்நாளு
மொரேநெறியிலிருக்கும் ஏகவேதம்போலும் பரம்ப
ரைதொட்டு ஏகநாயக சேசுகிறீஸ்து ஸ்தானியாய்
முதிர்ந்தமாட்சிமைபெற்றுத் திருச்சபைக்குக்காண
ப்படும ஏகதலைவராய்க் குருச்சபைக்கெல்லா மகா
பரிசுத்தசிரோஷ்டாசாரியராய் விளங்காநின்ற அர்ச்.
(*) பாப்பும் ஏகவேதமாயினும் விரித்தெழுதப்பட்
ட-எ௰உ- வேதாகமங்களைப்போலே அத்தியந்தஞா
னக்கருத்தி லனைவருங்பொருந்தி அரியமந்திராலோ
சனைகருதுவர்களாதலிற் * கருதினூர்களென்னப்பட்
ட- எ௰உ-பெரியவேதாந்திகளும் மேற்றிராணியார்க
ளில் விசேஷமேன்மைபெற்றபிதாப்பிதாக்களும் அதி
மேற்றிராணியார்களும் அப்போஸ்தலர்களிடமான
மேற்றிராணிய ரீட்டங்களும் இஸ்பிரீத்துசாந்துவின்
பூரணஅநுக்கிரகத்தால் தெய்வஞானமென்கிற வரம்
பெற்றவேதபாரகரு மடாதிபதிகளு மாதவமுனிக
ளு மகாரிஷிகளும் வகுப்புவகுப்பாய் வகைவகைச் ச
ங்கமாய்க் கல்விசாஸ்திர கலைக்கியானங்களிற் றேர்ந்
து சார்வதா வேதபாராயணமபண்ணி வேதாகமங்க
ளெல்லா மோதியுணர்ந்து வித்தியாபாரகராய் மெ
ய்ஞ்ஞான போதகராய்ப் பாலசந்நியாசம்பண்ணிப்
பரமசுதியின் பாக்கியமேயெண்ணிப் பொன்னாசைபெ
ண்ணாசை மண்ணாசைவிடுத்து உடலையொறுத்துத்தரி
த்திரக்கோலந்தொடுத்துக் காரணக்குருக்களாய் அ
றவடிவினாரய்த் தவவேடம்பூண்டுகடவுளடியே தலை

(*) ௰அ. * ௰கூ.

மேற்கொண்டு இந்தவுலகமாகியந்தந் சத்தியவேத த்தைப்போதிக்கப் புறப்படுந்துறவோர்களான அந் வோர்கூட்டங்களும் அந்தந்தக் கூட்டங்களுக்குத்த லைவராய்விளங்கிய அதிபிதாக்களும ஏகமனத்தராய் அர்ச்-பாப்புவுக்குப் பணிந்துவீற்றிருந்து ஒரேபோ க்காய் ஒரேவாக்காய் விதித்தசுவிர்தவேதபோதனை யை மெய்யென்னலாமோ? அல்லது விரோதத்தாலு ம் விபரீதபுத்தியாலுஞ் சிலரெழும்பி வெவ்வேறமா ர்க்கங்களைத்தொடங்கித்தங்களுக்குப் பெருங்கீர்த்தியு ம்வரவே பேராசைகொண்டு தங்களுக்குப்பிரியமாக த்தோன்றின பிசகெல்லாம் பெருநியாயமாகவெடுத் துத் தங்கள்மனம்போனபோக்கே வேதநெறியாக வெண்ணிவேதவாக்கியங்களுக்குவிரோதார்த்தம்பண் ணியொருவர்சொன்னதை மற்றொருவர் மறுத்துச சத் தியத்தைப்பகைத்துத் தர்க்கிக்கமாத்திர மொருமித் து அறவழிவிடுத்து உலகோர்க்கெல்லாமபொதுவாய் நிற்கின்றசாதாரணவேதமென்னுந் தகுநாமமவிட்டு த் தங்கள்தங்கள் பெயர்களையந்தந்தச சமயங்களுக் கிட்டுநிலையின்றித்தவறித்தாறுமாருய்வழங்குகின்றப ற்பலபுறச்சமயபோதனையைமெய்யென்னலாமோ? ந ல்லறிவுடையோ ராலோசித்தால் மெய்யும்பொய்யுமி திற் பிரத்தியக்ஷமாமே. மீளவுங் கடவுள்வதரித்த வ ந்நாள்முத விந்நாள்வரைக்கு மொருநெறியினிற்கு ந்திருச்சபைப் போதனையைப் பெரிதென்பவோ, சூ௲ாயஎ-ட்.வருஷத்துக்குப்பின்புவறமத்தினெழும்பி சிலர்பிதற்றினவிபரீதசாதனையைப்பெரிதென்பவோ? இதைப்பெரிதென்பவர்கள் சூ௲ாயஎ - வருஷமட்டு ந் * திருச்சபைவழுவிக்கெட்டுப்போனதென்று ம்தி

---

* திருச்சபைவழுவாமைமுதலிய-வேதவிளக்கம் கூ-ம். ய-ம். அதிகாரங்களிலும்வேதப்புரட்டலைநீக்கு ஞ்சஞ்சீவி ௲ாஎசு-ம்.பக்கத்திலுங்காண்க.

லேயறநெறிநின்று வீடுபெற்றவ ரந்நாள்வரைக்கு
மொருவருமில்லையென்றுஞ் சொல்வார்களோ? சொன்
னார்களாகில் உலகமுடியுமட்டுந் திருச்சபையழியா
தென்று மெந்நாளுந்தாமே கூடவிருப்போமென்று
ந்திருவளம்பற்றின சேசுநாதருடைய திருவாக்குத்தத்
தங்கள் வீண்போயிற்றென்றுஞ் சொல்லக்கடவார்க
ள். சொல்லார்களாயின வழுவாததிருச்சபையில்வந்
துசேராமல் மயங்கித்திரிவானேன்? அவர்கள் மேய்ப்
பனில்லாதவாடுகள்போலவு நாதனில்லாத நகர்நாடு
போலவுந் தலைவனில்லாத தளங்கள்போலவுங் காவல
னைவிட்டுக் கண்டபடிதிரியும பெண்டுகள்போலவு
மொருதலையின்றித்திரிகிறார்கள். அவனவன் றனக்குத்
தான் குருவாய்த்தோன்றித் தன்சுயவிச்சை யநுசரி
க்கையில் விளையாதஅபத்தமுந் தீமையுமுண்டோ?
அவர்களுடைய சமயங்கள் வேறுவேறாய்ப்பிரிந்து
போனதெவ்விதமென்னில், தேவமாதா மற்ற (‡)
மோக்ஷவாசிகளை வணங்குவதாகாதென் றொருசமய
த்தான்சொல்ல அதிலிருந்து புறப்பட்டமற்றொருவ
ன் சேசுநாதர்முதலாய்த் தெய்வமல்லவென்றுந் தி
ரித்துவஏகத்துவமென்கிறபுத்திக்கெட்டாதபரமவிர
கசியத்தின் விஷயத்திலு மயங்கித் தடுமாறித் திரித்
துவமேது ஒருத்துவந்தானென்றும் அதிலிருந்து மு
ளைத்த வேறொருவன் ஒருத்துவந்தானேது தெய்வ
மேயில்லையென்றும் இப்படியே திருச்சபையைவிட்டு
நீங்கினவர்களுக்குள்ளே ஆடுகள்சாயுங் காட்டுவழி
போல ஒன்றுக்கொன்றொவ்வாம லுண்டானசமயங்க
ள் அநேகமுளவாம்.

---

(‡) மோக்ஷவாசிகளுடையதன்மையு மவர்களடை
ந்திருக்கிற நன்மையுந் தத்துவபோதகசுவாமி ஆத்து
மநிர்ணயம். ருரு, ருச, ருடு-ம். பாடங்களிற்காண்க.

ஆயினுந் தெய்வமேயில்லையென்கிற * நாஸ்திகன தெய்வமுண்டானால் நமது கண்ணுக்குத் தோன்றுதோகண்டதாரென்பான். † அகத்துக்கண்ணு லறியவேண்டியதை முகத்துக்கண்கொண்டுபார்க்கவேண்டுமென்பதாற் சருக்கரையைநாக்கிலேவையாமல் மூக்கில்வைத்துத்தித்திக்கவில்லை யென்றவன்போல்வானும். அவன்றன் முப்பாட்டன்முதலானமுந்தையோரைக்காணாமையா லவர்களுமில்லையென்பானோ? இல்லையென்பானாகிற் றான்வந்தவழி யெதுவென்றுசொல்வான். தன்னகத்திருக்கிற பிராணனைத் தான்காணாதிருக்கஅதையுண்டென் றெப்படிநம்புகிறான்? இதினுந் தெளியானாகில் வல்லமையுடையோனவனையஞ்சாதவிதமாய்த் தூணிலேவரிந்துகட்டித் ‡ தறுகணாளரைவிட்டுச் சகியாதமேரையாய்ச் சாட்டைமாறுவித்து அவன்சமயத்து வாழ்வெல்லாஞ் ** சண்டமாருதமபோல வாரியெடுத்து வெறுமனையாக்கிவிடுகிறபொழுது ஏனிந்தஅநியாயஞ்செய்கிறீர்களென்பான். அதறகுப் பாவபுண்ணியமில்லை, நடுநியாயமில்லை, நரகமோக்ஷமில்லை, அதனாலேதுசெய்யினுங்கவையில்லையென்றுசொல்லியச்சண்டாளர் அதுமெய்யென்றின்னமநந்தகொடூரமாகவே குதிரைச்சமட்டியா லவனைப்புடைக்க ஆகாசத்தைநாக்கி யபயமிட்டு ஐயோ சர்வேசுரனில்லையோ சர்வேசுரனில்லையோ, இந்தவநீதக்காரரை யழிக்கவேண்டாமோ, அழித்து நரகத்திலமிழ்த்தவேண்டாமோவென்று கூப்பிடுகிறவனாயிருப்பான். இலவர்விடிற் சர்வேசுரனைப்பற்றி யென்

---

* தெய்வமில்லையென்கிறவன்.

† தத்துவபோதகசுவாமி ஆத்துமநிர்ணயம் ௯-ம். பாடங்காண்க.

‡ படைவீரர். ** பெருங்காற்று.

ஊனவிடுங்களென்று மன்றுடுகிறவ னுவான். அப்பொ ழுதுதேவனுநீதியு மோக்ஷமு நரகமு முண்டென்று அவனுடையபுத்திமனுேச்கண் டெளிந்துகாணலாயி ருச்குமென் றறியவும். ஆகையால நலலறிவுடையோ ரனைவருமித் தன்மையான இருள்மதங்களிலேமயங்சா மல வடமொழியாற் கத்தோலிக்கென்றுந் தமிழமொ ழியாலுலகத்துக்கெலலாம் பொதுவாய்நிற்கின்ற சா தாரணவேதமென்றும்பெயர்கொண்டோங்கி உரோ மை மாநகரமேதலையிடமாகநின்று வானமண்டலத் தில்விளங்குங்கிசணமாவிபோலப் பூமண்டலமெங்கும் போதிக்கப்பட்டு விளங்கிவழுவாது வளர்கின்ற திரு ச்சபைபடிப்பிக்குஞ் சத்தியவேதபோதனையை நன் மார்க்கமென்று விசுவசித்து நன்னெறிநடந்து நற்க திபெற்றுவாழ்வார்கள்.



# சின்னகுறிப்பிடம்.

## முதற்பிரிவு.

### ஏகதிறித்துவ சர்வேசுரன்பேரில்.

கு. - சர்வத்துக்குங் கர்த்தாவாயிருக்கிறவராா்?

சீ. - சர்வேசுரன்.

கு. - எத்தனை சர்வேசுரன்?

சீ. - ஒரே சர்வேசுரன்.

கு. - அவர் தேவசுபாவத்திலொருவராயிருந்தாலும் ஆள்வகையிலே யெப்படியிருக்கிறார்?

சீ. - திறித்துவமாயிருக்கிறார்.

கு. - திறித்துவமா யிருக்கிறாரென்கிறதுக் கர்த்தமென்ன?

சீ. - ஆள்வகையிலே மூவராயிருக்கிறாரென்று அர்த்தமாகும்.

கு.- மூன்றாட்களுக்குப் பெயரென்ன?

சீ. - பிதா சுதன் இஸ்பிரீத்துசாந்து.

கு. - பிதா சர்வேசுரனோ?

சீ. - சர்வேசுரன்.

கு. - சுதன் சர்வேசுரனோ?
சீ. - சர்வேசுரன்.
கு. - இஸ்பிரீத்துசாந்து சர்வேசுரனோ?
சீ. - சர்வேசுரன்.
கு. - மூவரும் மூன்று சர்வேசுரனோ ஒரேசர்வேசுரனோ?
சீ. - ஒரேசர்வேசுரன்.
கு. - எப்படி ஒரேசர்வேசுரன்?
சீ. - இந்தமூன்றாட்களுக்கும் ஒரேஞானம் ஒரேசித்தம் ஒரேவல்லமை ஒரேதேவசுபாவ மிருக்கிறபடியினாலே மூவரும் ஒரேசர்வேசுரன்தான்.
கு. - இவர்களுக்குள்ளே வல்லபம் மகிமைமுதலான லிஷணங்களில் வித்தியாசமுண்டோ?
சீ. - இல்லை, மூவரும் எல்லாத்திலுஞ் சரிசமானமாயிருக்கிறார்கள்.
கு. - இப்படி யேகமுந் திறித்துவமுமாகிய சர்வேசுரனுக்குப்பிரதான லிஷணங்களெத்தனை?
சீ. - ஆறு.
கு. - ஆறுஞ்சொல்லு.

சீ. - ௧-வது, சர்வேசுரன் ஒருவராயிருக்கிறார். ௨-வது, அநாதியாயிருக்கிறார். ௩-வது, சரீரமில்லாமலிருக்கிறார். ௪-வது, அளவில்லாத சகலநன்மைச்சுரூபியாயிருக்கிறார். ௫-வது, எங்கும் வியாபித்திருக்கிறார். ௬-வது, எல்லாத்துக்கும் ஆதிகாரணமாயிருக்கிறார்.

## ௨ம்-பிரிவு.

### உலகசிஷ்டிப்பும் மனிதனுடையகேடும்.

கு. - சர்வேசுரன் எல்லாத்துக்கும் ஆதிகாரணமா யிருக்கிறதெப்படி?

சீ. - பரலோகத்தையும் பூலோகத்தையும் அதுகளிலடங்கிய சகலத்தையும் உண்டாக்கிக் காப்பாற்றுகிறதினாலே எல்லாத்துக்கும் ஆதிகாரணமாயிருக்கிறார்.

கு. - அவருண்டாக்கினதுகளிற் பிரதான வஸ்துக்களென்ன?

சீ. - அசரீரிகளாகிய சம்மனசுகளும் ஆத்துமமுஞ் சரீரமுமுள்ள மனுஷர்களுந்தான்.

கு. - சம்மனசுகளெல்லாருந் தங்கள் மேன்மையான அந்தஸ்திலே நிலைகொண்டார்களோ?

சீ. - இல்லை, சிலர் ஆங்காரத்தினாலே மோக்ஷத்தையிழந்து, நரகாக்கினைக்குள்ளானார்கள்.

கு. - இப்படிக்கெட்டுப்போன சம்மனசுகள் பெயரென்ன?

சீ. - பசாசுகள்.

கு. - சர்வேசுரன்மனுஷர்களை யேதுக்காக வுண்டாக்கினார்?

சீ. - தம்மையறிந்து சிநேகித்துச்சேவிக்கவும், அதினால் மோக்ஷத்தையடையவும் உண்டாக்கினார்.

கு. - அவர் எந்த அந்தஸ்திலே ஆதிதாய் ஆதிதகப்பனை யுண்டாக்கினார்?

சீ. - பரிசுத்தமும் பாக்கியமுமான அந்தஸ்திலே அவர்களையுண்டாக்கினார்.

கு. - அவர்கள்தைப் போக்கடித்ததெப்படி?

சீ. - பசாசைநம்பிச் சர்வேசுரனால் விலக்கப்பட்டகனியைத் தின்றதினாலேபோக்கடித்தார்கள்.

கு. - அதினா லிவர்களுக்கு மிவர்கள்சந்ததியாருக்கும் வந்தகேடென்ன?

சீ. - பசாசுக்கடிமையாகிச் சாவு நரக முதலிய வாக்கினைகளுக்குப் பாத்திரவா ன்க ளானார்கள்.

## ௩௯ - பிரிவு.

மனுஷருடைய இரட்சிப்பின்பேரில்.

கு. - நம்மை யிரட்சிக்கிறதுக்காக ம னுஷனாய்ப்பிறந்தவரார்?

சீ. - அர்ச்.-திறித்துவத்தின் இரண்டா மாளாயிருக்கிற சுதனாகியசர்வேசுரன்.

கு. - அவர் எப்படி யுற்பவித்துப் பிற ந்தார்?

சீ. - இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வே சுரனாலேகர்ப்பமா யுர்பவித்து அற்புத மாகப் பிறந்தார்.

கு. - ஆரிடத்திலேநின்றுபிறந்தார்?

சீ. - ஒருகாலுங் கன்னிமகிமைகெடாத அர்ச்.-கன்னிமரியம்மாளிடத்திலேநின்று பிறந்தார்.

கு.-சுவாமிபிறந்தவெட்டாநாள்அவரு க்கு என்னபெயரிட்டார்கள்?

சீ.-சேசுவென்கிற பெயரிட்டார்கள்.

கு.-சேசுவென்கிறபெயருக்கர்த்தமெ ன்ன?

சீ.-நம்மையிரட்சிக்கிறவர்.

கு.-சேசுநாதசுவாமி யிவ்வுலகத்திலே யெத்தனைவருஷகாலமிருந்தார்?

சீ.-முப்பத்துமூன்று வருஷகாலமிருந்தார்.

கு.-இவ்வுலகத்தி லென்னசெய்துகொண்டுவந்தார்?

சீ.-சகலபுண்ணியங்களையு மற்புதங்களையுஞ்செய்து, தம்முடையதிவ்விய வேதத்தைப் போதித்து, அப்போஸ்தலர்களையேற்படுத்தினார்.

கு.-சேசுநாதசுவாமிக்கு எத்தனைசுபாவமுண்டு?

சீ.-தேவசுபாவம்மனுஷசுபாவ மிரண்டுசுபாவமுண்டு.

கு.-எந்தச்சுபாவத்திலேபாடுபட்டார்?

சீ.-மனுஷசுபாவத்திலேயாடுபட்டார்.

கு.-ஆருக்காகப்பாடுபட்டார்?

சீ.-நமக்காகப்பாடுபட்டார்.

கு.-என்னபாடுபட்டார்?

சீ.-போஞ்சுபிலாத்தி னதிகாரத்தில் மிகுந்த பாடுபட்டுச் சிலுவையில்லறையுண்டு,

கடினமானமரணத்தையடைந்து, கல்லறையிலடக்கப்பட்டார்.

கு.- அப்போது சுவாமியுடையதிரு ஆத்துமமெங்கேபோச்சுது?

சீ.- பாதாளங்களிலே யிறங்கி, அங்கேயிருந்தபுண்ணியாத்துமாக்களுக்கு மோக்ஷ பாக்கியங்கொடுக்கப்போச்சுது.

கு.- சேசுநாதசுவாமிகல்லறையைவிட்டு உயிர்த்தெழுந்தருளினரோ?

சீ.- மரித்தமூன்றுநாள் உயிர்த்தெழுந்தருளினர்.

கு.- உயிர்த்தபிற்பாடு பூலோகத்திலேயெத்தனை நாளிருந்தனர்?

சீ.- நாற்பதுநாளிருந்தார்.

கு.- அந்தநாற்பதுநாளும் என்னசெய்துகொண்டுவந்தார்?

சீ.- அநேகம்விசை தம்முடையசீஷர்களுக்குப் பிரத்தியக்ஷமாகத் தம்மைக்காண்பித்து, அவர்களை வேதசத்தியங்களில்ஸ்திரப்படுத்திக்கொண்டுவந்தார்.

கு.-நாற்பதாம் நாளெங்கேயெழுந்தருளிப்போனார்?

சீ.-பரமண்டலங்களிலெழுந்தருளிச்சர்வ த்துக்கும்வல்லபிதாவாகியசர்வேசுரனுடை யவலதுபாரிசத்தி லுட்கார்ந்திருக்கிறார்.

கு.-இப்போது சேசுநாதசுவாமி யெங் கேயிருக்கிறார்?

சீ.-சர்வேசுரனாகியமட்டும் எங்குமிருக் கிறார், மனுஷனாகியமட்டும் பரலோகத்தி லுந்திவ்விய நற்கருணையிலு மிருக்கிறார்.

சூம்.-பிரிவு.

இஸ்பிரீத்துசாந்துவின் ஆகமனத்தின்பேரிலும் திருச்சபையின்பேரிலும்.

கு.-சேசுநாதசுவாமி பரலோகத்துக் கெழுந்தருளினபத்தாம்நா ளென்னசெய் தார்?

சீ.-தம்முடைய அப்போஸ்தலர்களுக் குத்திடனாக இஸ்பிரீத்து சாந்துவையனு ப்பினார்.

கு.-இஸ்பிரீத்துசாந்துவையடைந்தபின் அப்போஸ்தலர்க ளென்னசெய்தார்கள்?

சீ.-உலகத்தினெத்திசையிலும் பிரசங்கி த்துத்திருச்சபையைஸ்தாபித்தார்கள்.

கு.-திருச்சபைக்குத் தலைவராயிருக்கிற வரார்?

சீ.-சேசுநாதசுவாமிதான்.

கு.-அவர்தமக்குவதிலாய்ப் பிரத்தியக்ஷ தலைவராகஆரைஸ்தாபித்தார்?

சீ.-அர்ச்.-இராயப்பரை ஸ்தாபித்தார்.

கு.-அர்ச்.-இராயப்பருக்குப் பதிலாகத் திருச்சபைக்குத் தலைவராயிருக்கிறவராார்?

சீ.-அர்ச் -பாப்பானவர்.

கு.-மற்ற அப்போஸ்தலர்களுக்குப்பதிலாயிருக்கிறவர்களார்?

சீ.-மேற்றிராணிமார்கள்.

கு.-சேசுநாதரும்அப்போஸ்தலரும்எத்தனை திருச்சபையை ஸ்தாபித்தார்கள்?

சீ,-கத்தோலிக்கென்கிற வொரோதிருச்சபையை ஸ்தாபித்தார்கள்.

கு.- அதுக்குப்புறம்பாயிருக்கிறவர்களுக்குமோக்ஷமுண்டோ?

சீ.-இல்லை.

கு.-இல்லையென்கிறதுக்குத்திருஷ்டாந்தமென்ன?

சீ.-திருச்சபையின்சொற்படிகேளாதவன் அக்கியானியைப் போலேயுனக்குஆகக்கடவானென்றுகர்த்தர்திருவுளம்பற்றினார்.

## ஞம்.-பிரிவு.

### மனிதருடைய முடிவுகளின்பேரில்.

கு.-பாவத்தினிமித்தஞ் சகலமனுஷர்க ளுககும்வருகிற ஆககினையென்ன?

சீ.-சாவு.

கு.-சாவுககுப்பின் சம்பவிககிறதென்ன?

சீ.-தனித்தீர்வை.

கு.-தனித்தீர்வைககுப்பிறகு சாவானபா வமுள்ள ஆத்துமாககளெங்கேபோகிறு ர்கள்?

சீ.-நரகத்துக்குப்போகிறுர்கள்.

கு.-பரிசுத்த ஆத்துமாக்கவெங்கேபோ கிறுர்கள்?

சீ.-மோக்ஷத்துககுப்போகிறுர்கள்.

கு.-தங்கள் பாவங்களுககாக முழுதும் உத்தரியாத புண்ணியாத்துமாககளெங் கேபோகிறுர்கள்?

சீ.-உத்தரிக்கிறஸ்தலத்துக்குப் போகி றுர்கள்.

கு.-உத்தரிக்கிற ஸ்தலத்திலே யென்ன மாயிருககிறுர்கள்?

சீ.-தங்கள்பாவங்களுககுத்தககவேதனை

ப்பட்டு உத்தரிக்கிறார்கள். முழுதும் உத்தரித்தபிறகு மோக்ஷத்தையடைவார்கள்.

கு.-தனித்தீர்வையல்லாமல் வேறே தீர்வையுண்டோ?

சீ.-பொதுத்தீர்வையுமுண்டு.

கு.-பொதுத்தீர்வை யெப்போது நடக்கும்?

சீ.-உலகத்தின்முடிவிலே நடக்கும்.

கு.-உலகமெப்படிமுடியும்?

சீ.-உலகமெல்லாம் நெருப்பினாலேவேக மனுஷரெல்லாருஞ் செத்துப்போவார்கள்.

கு.-பின்னுமென்னசம்பவிக்கும்?

சீ.-சேசுநாதசுவாமி மனுஷரெல்லாரையும் ஆத்துமசரீரத்தோடேகூட எழுப்பி, மிகுந்த வல்லபத்தோடு நடுத்தீர்க்கவருவார்.

கு.-எப்படி நடுத்தீர்ப்பார்?

சீ.-அவனவன்செய்த பாவபுண்ணியங்களையெல்லாஞ்சகலருக்குமுன்பாக அறியப்பண்ணிப்பாவிகளைச்சபித்து நரகத்திலேதள்ளி நல்லவர்களை யாசீர்வதித்துமோ

க்ஷத்துக்குக் கூட்டிக்கொண்டுபோவார்.

கு.-பாவிகள் நரகத்திலேபடுகிற ஆக்கி னையென்ன ?

சீ.-சர்வேசுரனையொருகாலுங் காணம ல் ஊழியுள்ளகாலம் பசாசுகளோடேநெ ருப்பிலேவெந்து, சகலஆக்கினையு ம்நுப விக்கிறுர்கள்.

கு.- நல்லவர்கள்மோக்ஷத்தி ல்நுபவிக் கிறபாக்கியமென்ன ?

சீ.-சர்வேசுரனைமுகமுகமாகத்தரிசித்து எப்போதைக்குஞ் சகலபேரின்பபாக்கி யங்களையு ம்நுபவிக்கிறுர்கள்.

## சும்.-பிரிவு.

### கற்பனைகள்பேரிலும் பாவத்தின்பேரிலும்.

கு.-மோக்ஷத்தையடைகிறதுக்கு வேத சத்தியங்களை விசுவசிக்கிறது போதுமா ?

சீ.-போதாது, சர்வேசுரனுடையகற்ப னைகளையுந் திருச்சபையின் கட்டளைகளையு ம்நுசரித்துப்பாவத்தைத்தள்ளிப்புண்ணி யத்தைச்செய்யவும் வேண்டியது.

கு.-சர்வேசுரனுடைய கற்பனைக ளெத் தனை ?

சீ.-பத்து.

கு.- பத்துஞ்சொல்லு.

சீ.-சர்வேசுரன் நமக்கருளிச்செய்த....
மற்றதும். ய௫-ம்.பக்கங்காண்க.

கு.-திருச்சபையின்கட்டளைகளெத்தனை?

சீ.-அஞ்சு.

கு.-அஞ்சுஞ்சொல்லு.

சீ. ஞாயிற்றுககிழமைகடன்றிருநாள்...
...மற்றதும். யகூ-ம. பக்கங்காண்க.

கு.-பாவமாகிறதென்ன ?

சீ.-தேவகட்டளைகளைமீறுகிறதேபாவம்.

கு.-எத்தனைவகைப்பாவமுண்டு?

சீ.-சன்மப்பாவம் கர்மப்பாவம் இரண்டுவகைப்பாவமுண்டு.

கு.-சன்மப்பாவமாகிறதென்ன ?

சீ. ஆதிதாய் ஆதிதகப்பனாலேயுண்டாகி, நம்மோடே கூடப்பிறக்கிறபாவம்.

கு.-கர்மப்பாவமாவதென்ன ?

சீ.-அவரவர் புத்தி விவரமறிந்தபிற்பாடு மனதுபொருந்திச் செய்கிறபாவம்.

கு.-கர்மப்பாவ மெத்தனைவகையுண்டு?

சீ.-சாவானபாவம் அற்பபாவம் ஆக இரண்டுவகையுண்டு.

கு.-சாவானபாவமாவதென்ன?

சீ.-தேவஇஷ்டப்பிரசாதத்தைப் போக்கடித்து, நம்மைநரகத்துக்குப் பாத்திரவான்க ளாக்குகிறபாவம்.

கு.-அற்பபாவமாவதென்ன?

சீ.-தேவஇஷ்டப்பிரசாதத்தைக் குறைத்துச்சாவானபாவத்துக்கு வழியுமாகி,நம்மையுத்தரிக்கிறஸ்தலத்துககுப் பாத்திரவான்களாக்குகிறபாவம்.

எ-ம்.-பிரிவு.

தேவ அநுக்கிரகத்தின்வசரம், செபம, தேவத்திரவிய அநுமானங்களின்பேரில்.

கு.-பாவத்தைவிலக்கி, மோக்ஷத்தை யடைகிறதுக்கு நம்முடைய சொந்தப்பலம்போதுமோ?

சீ.-போதாது. நமக்குத்தேவ் வரப்பிரசாதத்தின் அநுக்கிரகம் வேண்டியது.

கு.-தேவ்வரப்பிரசாதத்தை யடைவதெப்படி?

சீ.-செபத்தினுலுந் தேவத்திரவியஅநுமானங்களாலும் அடையலாம்.

கு.-ஆகையால்டிக்கடி செபம் பண்ணவேணுமோ?

சீ.-வேணுமென்று காத்தர் கற்பித்தார்.

கு.-தேவத்திரவிய அநுமானங்களெத்தனை?

சீ. ௭எழு. ௧-வது, ஞானஸ்நானம், ௨-வது, உறுதிப்பூசுதல், ௩-வது, நற்கருணை, ௪-வது, பச்சாத்தாபம், ௫-வது, அவஸ்தைப்பூசுதல், ௬-வது, குருத்துவம், ௭-வது, மெய்விவாகம்.

கு.-ஞானஸ்நானமாவதென்ன?

சீ.-சன்மப்பாவத்தையுங் கர்மப்பாவத்தையும்போக்கி, நம்மைச் சர்வேசுரனுக்குத் திருச்சபைக்கும் பிள்ளைகளாக்குகிற தேவத்திரவிய அநுமானம்.

கு.-உறுதிப்பூசுதலாவதென்ன?

சீ.-நம்மைச்சத்தியவேதத்திலே திடப்படுத்துகிறதற்காக இஸ்பிரீத்துசாந்துவையும்வருடையவரப்பிரசாதங்களையுநமக்குக்கொடுக்கிறதேவத்திரவிய அநுமானம்.

கு.-நற்கருணையாவதென்ன?

சீ.-அப்பத்தின் குணங்களுக்குள்ளேயுமுந்திரிகைப்பழவிரசத்தின் குணங்களுக்குள்ளேயுஞ் சேசுநாதசுவாமியுடையதிருச்சரீரமுந்திருவிரத்தமுந் திருஆத்துமமு

ந் தேவசுபாவமு மடங்கியிருக்கிற தேவத்திரவிய அநுமானம்.

கு.-பச்சாத்தாபமாவதென்ன?

சீ.-ஞானஸ்நானம்பெற்றபிற்பாடு செய்தபாவங்களையெல்லாம் விமோசனமாக்குகிறதேவத்திரவிய அநுமானம்.

கு.-அவஸ்தைப்பூசுதலாகிறதென்ன?

சீ.-வியாதிக்காரர்களிடத்தில் மீதியாகியபாவங்களுக்குப் பரிகாரமாகவு மவர்களுடைய ஆத்துமத்துக்குஞ் சரீரத்துக்கும் ஆறுதலாகவுமுண்டாக்கப்பட்ட தேவத்திரவிய அநுமானம்.

கு.-குருத்துவமாவதென்ன?

சீ.-திவ்வியபூசைபண்ணவுந் தேவத்திரவிய அநுமானங்களை நிறைவேற்றவுஞ் சுதந்தரங்கொடுக்கிற தேவத்திரவிய அநுமானம்.

கு.-மெய்விவாகமாவதென்ன?

சீ.-சமுசாரியாகிறவர்களுக்குத்தேவஆசீர்வாதத்தையும்அவர்கள்தர்மவழியாய் நடக்கவுந் தங்கள்பிள்ளைகளைத் தக்கபிரகாரமாய்நடப்பிக்கவும் வேண்டிய தேவசகா

யத்தையுங்கொடுக்கிற தேவத்திரவியஅநுமானம.

---

ஞானஸ்நானங் கொடுக்கிறவகை.

கு.-ஞானஸ்நானங் கொடுக்கிறதெப்படி?

சீ.-௲-வது, திருச்சபைஞானஸ்நானங்கொடுக்கிறகருத்தோடே நானும் ஞானஸ்நானங்கொடுக்கிறேனென்றுமனதிலே நினைத்துக்கொள்ளுகிறது. உ-வது, பிள்ளைக்கு இடவேண்டியபேரை யுச்சரித்து, அதின்தலையின்பேரில் தண்ணீர்வார்க்கிறபோது தான்தானே சொல்லவேண்டியதாவது:

பிதாவுடையவுஞ் சுதனுடையவும் இஸ்பிரீத்துசாந்துவுடையவும் நாமத்தினாலே நான் உன்னை க்கழுவுகிறேன்.

கு.- அவஸ்தைச்சமயத்தில் ஆராகிலும் ஞானஸ்நானங்கொடுக்கவேண்டியதோ?

சீ.- அப்படிப்பட்டசமயத்திலாராகிலுங்கொடுக்கவேண்டியதுதான்.

பாவசங்கீர்த்தனத்துக்கு வேண்டியகாரியம்.

கு.- பாவசங்கீர்த்தனம் பண்ணுகிறதுக்கு எத்தனைகாரியம் வேணும்?

சீ.- அஞ்சுகாரியம்வேணும்.

கு.- அந்த அஞ்சுகாரியமுஞ்சொல்லு.

சீ.- ௧-வது, தான்செய்தபாவங்களை நினைக்கிறது, ௨-வது, தான்செய்தபாவங்களுக்காகமனஸ்தாபப்படுகிறது, ௩-வது, இனிமேலொருகாலும் ஒருபாவத்தையுஞ் செய்வதில்லையென்று கெட்டியானமனதோடே பிரதிக்கினை பண்ணுகிறது, ௪-வது, தன்பாவங்களையெல்லாமொன்றுமொளியாமற் குருவுடனே சொல்லுகிறது, ௫-வது, குருகட்டளையிட்ட அபராதத்தைத்தீர்க்கிறது.

தேவநற்கருணை ஆயத்தம்.

கு.- தேவநற்கருணையிலேயெழுந்தருளியிருக்கிறவராா்?

சீ.- சேசுநாதசுவாமி.

கு.-அதிலெப்படியெழுந்தருளியிருக்கிருர்?

சீ.-தம்முடையதிருஆத்துமத்தோடேயுஞ் சரீரத்தோடேயும் இரத்தத்தோடேயுந் தேவசுபாவத்தோடேயு மெய்யாகவே யெழுந்தருளியிருக்கிருர்.

கு.-ஆகையால் தேவநற்கருணையைவாங்குகிறபோது என்னவாங்குகிறீர்கள்?

சீ.- நம்முடைய திவ்வியகர்த்தராகிய சேசுநாதருடைய திருச்சரீரத்தையு மிரத்தத்தையும் ஆத்துமத்தையுந் தேவசுபாவத்தையுந்தானேவாங்குகிறோம்.

கு.-அதிலே அப்பமஇலவலேசமாகிலுமுண்டோ?

சீ.- அப்பத்தின் உருபம் உருசிமுதலான குணங்களிருந்தாலும் அப்பமில்லை.

கு.- அப்பம் என்னமாய்ப்போச்சுது?

சீ - சேசுநாதருடைய திருச்சரீரமாகமாறிப்போச்சுது.

கு.-தேவநற்கருணையை வாங்குகிறதுக்கு எத்தனைவகைஆயத்தம்வேண்டியது?

சீ.- ஆத்தும ஆயத்தம் சரீர ஆயத்தம் இரண்டுவகைஆயத்தமும் வேண்டியது.

கு.-ஆத்துமஆபத்தமென்ன?

சீ.-ஆத்துமஞ்சாவானபாவமில்லாமல் பரிசுத்தமாயிருக்கத்தக்கதாக நல்லபாவசங்கீர்த்தனஞ்செய்திருக்க வேண்டியது.

கு.-சரீர ஆபத்தமென்ன?

சீ.-நடுச்சாமந் துவக்கித் தேவநற்கருணைவாங்குமட்டும் ஒன்றுஞ் சாப்படாமலுங் குடியாமலுந் தாம்பூலமுதலிய புறத்திப்பண்டங்களை வாயிலே போடாமலுஞ்சுத்தஉபவாசமா யிருக்கவேண்டியது.

கு.-சேசுநாதசுவாமி தேவநற்கருணையையுண்டாக்கினமுகாந்தரங்களெத்தனை?

சீ.-நாலு. க-வது. தம்முடையமரணத்தை ஞாபகப்படுத்தவும், உ-வது, திருச்சபைக்குத்துணையாயிருக்கவும், ௩-வது, நமதாத்துமத்துக்குத்திவ்வியபோசனமாகவும், ௪-வது, தாம் சிலுவையிற்செலுத்தின பலியை என்றென்றைக்கும் பூசையிலேதொடர்ந்துநடத்தவுமுண்டாக்கினார்.



## அர்ச்சியசிஷ்டதமதிறித்துவ
## ஏகத்துவ விளக்கம்.

சகலநன்மைச் சுரூபமுமாய்ச் சகலத்திற்கு மாதி காரணமுமாயிருக்கிற சர்வேசுரனிடத்திலே விளங்கியிருக்கின்ற திறித்துவ ஏகத்துவமென்கிற பரமவிரகசியமானது கரைகாணாததுமாய் நிலையாததுமாயிருக்கிற நன்மைசமுத்திரமென்றும் மனுஷருக்கெட்டாத நிகராதமகிமையுடையதென்று மங்கிகரிக்கக்கடவதாமே.

மட்டில்லாத வித்த வற்புதமான பரமஇரகசியமானது மட்டுள்ளதாய்ப்படைப்புண்ட எப்படிப்பட்ட கூர்மையான புத்திக்குமெட்டாத அகோசரமாயிருக்கின்றது. ஆயினும் அதையாண்டவர் தாமே திருவுளம்பற்றினதினாலே முழுவிசுவாசத்தோடு நம்புகிறதற்கு மிகவு முறுதியுந்தெளிவுமான காரணமிருக்கின்றது. ஆதலா லிந்ததேவஇரகசியத்தின்மனுஷருக்கெட்டாதமாட்சிமேன்மையையுந்தெளிந்த நம்பிக்கையையும்பற்றி மகாமகாப்பட்டவேதபாரகருஞ் சகல சாஸ்திர வித்தியாசம்பன்னரும் ஞானருட்சியரும இந்தப் பரம இரகசியத்திலே தாம் விஸ்தாரப்பிரசங்கம்பண்ணிச் சொன்னதெல்லாங் கதிரோனுனசூரியனைக் கரியமையாலெழுதிக் காட்டினதற்குங் கரைகாணாதகடல்நீரைச சிறியகமண்டலத்திலெடுத்து வார்த்ததற்கு மொக்குமென்றார்கள். மேலும நண்டுவளையை இரத்தினகசித சித்திராலங்கார வரமனைக்கு நிகராகவொப்பிட்டாலும அப்படிப்பட்ட அகண்டமான பரமபொருளை யுவமிக்கப் படைக்கப்பட்டவஸ்துக்களி லொன்று நிகராயிராது. ஆதலாற் கொஞ்சமான இந்தப் புன்சொல்வி லகண்டமான பராபரவஸ்துவைச சொல்லிக்காட்டுகிறதை என்னத்துக்கொக்குமென்னலாம்? பரிதிமண்டலத்தைக்கா

ட்டும்பனிததுளிக்கு ருதலா யீடுபடாது; ஆயினும்ப த்தியா லுற்றுப்பார்க்கக்கடவதாமே. அதென்னவெ னில் அர்சசியசிஷட தமதிறித்துவம் ஏகத்துவமாயி ருக்கிறதெப்படியென்று கேட்கிறவர்களே ஒளிவும் நிறமும் ஒப்பமும் ஒரு இரத்தினமல்லாதே பலவோ? பத்திரமும சித்திரமும பரிமளமும் ஒருபுஷபமல்லா மல்நேகமோ? அன்றியும புத்தி மனது நினைவென்கிற மூன்றுசத்திகள் தனித்தனியின்னமுள்ளதுகளாயேக மாகிப் பாவத்தைக்கொண்டிருச்கிற வொருநரசீவப் பொருளல்லாமல்வெவவேறே? இவ்வண்ணம்மமுமூ ன்றுதன்மையுள்ளஒரோஇரத்தினமஒரோமலர் ஒரோநர சீவனபோலும், மும்மடிப்பாய்மடித்திருக்கின்ற ஏக மானபட்டாடைபோலும், பிதாச்சுதனிஸ்பிரீத்துசா ந்துவென்னுந் தெய்வமானமூன்றுட்களாகியும் ஒரோ தேவசுபாவத்தோடு அகண்டமானஒருபராபரவஸது வாயிருசகிற ஏகசர்வேசுரனென்பது இவவலேசமா னுலு மிருமனப்படாம லங்கீகரிக்கத்தக்க குன்றுதச த்தியமாமே.

பீளவும் - விருத்தம்.

பாலதில்வெளிறும் வாசமுஞ்சுவையும் பரவியமுக் குணமிருக்குஞ்—சாலதிலுலாந் தயிர்க்குப வ்வெளிறு ந் தண்ணறைசுவையுமுக்குணமா—மேலதிலண்டா ம்வெண்ணெயில்வெளிறும் விரையுநற்சுவையு முச்கு ணமாங்—காலதினென்றுள் ளாமிருபொருட்குங் கல ந்தனமுக்குணம்போன்றே. ஞானதிக்கராயர் காப் பியம்-திருமந்திரப்படலம்.

இவ்வரியகவியில்-நிறம் வாசனை-உருசி- இம்முக்கு ணமும்-பால்-தயிர்-வெண்ணெயிம்மூனறினுந்தனித் தனி யொவ்வொன்றிற்குமுண்டாகியெல்லாம் அமிர் தமென்னு மொருபொருளா யிருக்கின்றதுபோல -

நீதி-தயை-நட்பு-இம்மூன்றுதேவதகுதியும்-பிதாசுதன் இஸ்பிரீத்துசாந்துவென்னுந்தேவதிறித்துவத்தினொவ்வொருதுவத்திற்கு முண்டாகி - ஏகத்துவமானவொரேகடவுளாய் விளங்கியிருக்கின்றுரென்கிற பிரத்தியக்ஷசாதகமாமே.

மட்டில்லாதவல்லபத்தாற் கடவுளுண்டுபண்ணினவஸ்துக்களேமுமமூன்று-ஒவ்வொன்றுயிருக்கக்கடவுள்தாமே திறித்துவ ஏகத்துவமாயிருக்கிறதரிதென்றுபேதையிற்பேதையுஞ் சொல்லான். மேலுமிது நன்றுகவிளங்கததானபரிக்கிரகமுதலிய தகுதியான நியாயங்களைத் தத்துவபோதகசுவாமி-௩-ங்-காண்டம -௧௨-பாடங்களினும், ஆத்தும நிர்ணயம்-௩௩-ம -பாடத்தினும், சாங்கோபாங்கர் புராந்திமகாண்டம்-அநாதியுகத்தின் - ௩-அதிகாரத்தினுங்காண்க.

## சேசுநாதருடையமாம்ஸ ஐக்கியவிளக்கம்.

அநந்த கிருபையால் மனிதனை யிரட்சிக்கத் திறித்துவ - ஏககடவுளி னிரண்டாமாளான சுதனுகியசர்வேசுரன் நாமாதாரமாயிருந்து ஆசிறையாதாரமான திருவுடலெடுத்தவதரித்த மாம்ஸ ஐக்கியமானது புத்திச் சந்நிதானத்திலே யிராத்துமாய்ப் புத்திக்குள்ளே யடங்காத்துமா யிருக்கின்றவற்புதமானமேலானபரமஇரகசியமாமே.அப்படியேமிகவுமாச்சரியத்துக்குரியவிதமாய்- அர்ச். கன்னிமரியாயியுடைய நிர்மலமான திருவுதரத்திலே தாம் பரிக்கிரகம்பண்ணின மனுஷசுபாவத்தோடு தேவசுபாவமும் பொருந்தவீக்கி மெய்யானதேவனுமெய்யான்மனிதனுமொன்றுக வவதரித்துப் பாடுபட்டிரட்சித்த பரமகருணையைப் பகுத்தறியாத சிலபாபாத்துமாக்கள் உலகெலாமவிளங்க வெறிக்குஞ்சூரியனைத் தங்களுள்ளங்கையால் மறைக்கத்துணிந்தாற்போல உலகஇரக்ஷகரை

ண சேசுநாதருடைய தெய்வீகத்தன்மையை மறைக்
கமருள்கொண்டலைவார்கள்.

இதற்கு - மூவரம்மானையுரை.

ஒழுங்குள்ள சோலைசூழ்ந்த பொன்னசலாப்புரிக்
கரசனானவர் மெய்யானதேவனு மெய்யானமனிதனு
மொன்றாய்ச் சேர்ந்தவர்காணம்மானை, அத்தன்மை
த்தா யவ்விரண்டுமொன்றாய்ச் சேர்ந்தவொன்றதா
மாகிற்பகைவர்கைக்குட்பட்டுச் சாவதேனம்மானை,
மானிடர்செய்த பாவமென்னு நித்தியசாவைக் கொல்
லத் தாஞ்செத்துச் சாகாமலுயிர்த்தெழுந்தா ராகை
யால் மெய்யானமனிதனு மெய்யானதேவனு மொன்
றானவர்காணம்மானையென்க.

(நசரைக்கலம்பகம் - ௪௨.)

மரித்ததைக்குறித்து ஆண்டவர்மனிதனென்று நம்
பினவன் அவரோ மீளவு முயிர்த்ததைக்குறித்துத் தே
வனென்று நம்பானோ? நம்பானாகில்முழுமூடனென்ன
ப்படுவான்.

மீளவும். ஒருவார்த்தையாலுலகத்தைமீட்கவல்ல
நர தேவனுயிரைத்தரவேண்டுமோவெனில் ஒருசொ
ற்கொண்டு முடித்தகாரியம்பெரிதோ - உயிரையே
தந்து முடித்தகாரியம் பெரிதோவென்று முந்த
யோசிக்கவும். நமக்குமோக்ஷபாக்கியத்தைக்கொள்
ளத்தாமே தந்தருளினவிலையின்மிகுதியால்மோக்ஷ
செல்வமெவ்வளவு அரிதென்றும்அப்படிப்பட்ட அ
நந்தபரமாநந்தசெல்வத்தைப் போக்கடிக்கக் கா
ரணமாயிருந்தபாவமெவ்வளவுபெரிதென்றும் நாம
றிந்து அப்படியுயிரைத்தந்து தேடிவைத்த மோ
க்ஷத்தைவிரும்பவும் உயிர்ப்பழிவாங்கின பாவத்துக்
குப்பயந்ததை வெறுக்கவும்வேண்டி உயிரினுமரிய
பொருளில்லாமையாலுயிரையேதந்தாரொழிய மற்ற
ப்படியல்ல.

தேவசுபாவத்திணுமிப்பாடுண்டோவெனில்விலையே றப்பெற்ற இரத்தினமுதலான ஸ்படிகபாத்திரங்களை த்தவிடும்பாடியாகத் தகர்த்தாலு மதுகளின்பிரகாச த்தில்றப்பவருத்தமுமபின்னமுமண்டாது. அவ்வண்ண மே பிரகாசத்துக்கு நிகரான தெய்வீகத்தன்மையி லோரற்பபாடுமெணுகினதில்லையென் றறியக்கடவது.

## மேலுமிதற்குத்
## தேம்பாவணிச் செய்யுள்.

கடுமரத்திழிந்தநஞ்சுட்கடுத்தடும்வினையைக்காக்க நெடுமரத்திழிந்ததேவநிலைமருந்துரியதென்ன வடுமரக்கனியான்மாக்கட்கமைந்ததொற்பழியையெ ந்தை—கொடுமரத்தறையுண்டெம்மைக்குணித்திறந் தொருங்குதிர்த்தான்.

நச்சுமரத்திலொழுகின நஞ்சினுள்ளே கடுத்துக் கொல்லும் வினைகளைக்காக்கமற்றொருநெடுமரத்தினி ன்றெழுகிய தேவமருந்து வேண்டுமென்று விலகி னமரத்தின்கனியையுண்டதனால் மனிதர்க்குவந்த ப ழம்பழியை ஆண்டவர்தாமே மற்றொருகொடியமரத் தில்றையுண்டிறநதுதிர்த்தாரென்க.

வேறு. தனத்தெழுதிவைத்ததென வுறுஞானத் தருதியினுன் — மனத்தெழுதிவைத்தமறை மறையத் தீமை மல்கியதாற் — கனத்தெழுதிவைத்தமின்னலொ த்தவாழ்க்கை காதவிதனுப் — புனத்தெழுதி வைத்த பொருளொத்தவ்வேதம் புறத்தொழிநதார்.

பொற்றகட்டெழுதினாற்போல ஞானமென்னுமெ ழுத்தினால் மனிதர் மனத்திலவர்களை யுண்டாக்கின பொழுதே எழுதிவைத்தவேதம் பின்புமறையும்படி யவர்கள்செய்த பாவங்கள்மிகுந்ததனால் மேகத்தின் மேலெழுதப்பட்ட மின்போலொளிதந்தொழியு மிப் பூவுலகின் வாழ்க்கையைவிரும்பி மலையினின்றிழியுமரு

வி மணல்மேலெழுதியகல்விப்பொருள்ழிந்ததுபோல அவ்வேதநூலழியும்படி யதைவிட்டொழிந்தார்களெ ன்க.

(மனிதரிருதயத்தி லெழுதின இயல்வேதத்தையெ ண்ணுதொழிந்தார்களென்று இருகல்லின்மேலதைவ ரிவேதமாக வெழுதியளித்தார்-அதனையும்விட்டார்க ளென்று-அளவில்லாதகருணைக்கடலான ஆண்டவ ருள்வேதமெழுதியளித்ததன்மையாவது.)

வேறு. செல்வின்மேல்வரையில் வரைந்தநூலிவன் றன் றீட்டவோர்விலங்கலுமேறிக — கல்வின்மேல்வ ரைந்த வெழுத்தொழிந்தாகக் கண்டருந தயையின ச்சுருதி—எல் வின்மேனமிளிர் தன்னுடலமேடாகவிரு ப்பயிலாணியாற்பொறித்து—வில்வினமேலவிர் செம் புனலின்மையிட்டு மெலிவறவிளங்கலேசெய்தான்.

மேகங்களைக்கடந்த மலையுச்சிமே லெழுதப்பட்ட வேதநூ லிக்கடவுள் தாமீட்டெழுதும்படி தாமொரு மலையுச்சிமேலேறிக் கல்விலேபதித்த வெழுத்துக்க ளொழிநதனவென்றுகண்டு தாநதயைபுரிநது சூரிய னைப்பவிளங்கிய தமதுதிருமேனியே யேடாகக்கொ ண்டு கூர்நதவிருப்பாணிகளா லவ்வேதநூற்பொறித் தெழுதிச் சிநதின தமது திருக்குருதியென்னும் விளங் கியமையையிட்டு மெலியாதபடிவேதம்விளங்கவேசெ ய்தாரென்க.

வேறு. அழுதார்நத துயர்க்கரத்திற் பிறநதுதைக் கு மரந்தையின்பா லருநதிவளர்நதருள்வளர்நத — பொழுதார்நத வஞ்சகத்தார் பகைசெய்தார்ப்பப் பொறையேராய்ப் பூட்டிச்செம்புனற்சேருக— வுழு தார்நத வார்வவிதைவித்திப்பின்னு முரியவரநீரிறை த்து விளைநதவின்பம் — வழுதார்நதவையகத்தா ரு யதற்கீநதான் மணிக்கலத்தூ டமுதேநது மருண் மொய்மார்போன்.

சுவாமிதாம்-மனிதனுயழுது நிறைந்த துயர்களின் கையிலேபிறந்து கசக்குநதுன்பங்களின் துபாலையுண் டுவளர்ந்து - அவரோடுதமது தயையுமவளர்ந்தபொ ழுது பாவிகளவருக்குப்பகைசெய்து முழங்கவிற்று மே பொறுமையையேயொன்றுமூட்டிச் சிந்தியதமதி ரத்தத்தினுற் சேருக்கியுழுது நிறைந்த தமதுதயை யைவித்தாகவினாத்தபின்ன ரவரவர்க்கானவரங்களை நீராகவிறைத்து இதனுல்விளையுமாக்ஷப்பேரின்பத் தை யிவ்வுலகத்தார்வாழ்வதற்குத் தந்தார்-மாணிக் கத்தாற்செய்தபாத்திரத்தில்முதையேநினைதுபோ ல் நிறைந்த கருணையைக்கொண்ட மார்பினையுடையசு வாமியென்க.

அன்றியும்-அநந்தமகிமைச்சுரூபமான சுதனுகியசூ ர்வேசுரன் நாமாதாரமாயிருந்து - ஆசிறையாதார மாகிய அவருடையதிருச்சரீரத்திலும ஆத்துமத்திலு மநுபவித்த-அரியபாடுகளின்மேல்தத்துவபோதக சு வாமி-௬-ங் காண்டம்-௨௫-௨௬-ம். பாடங்களில் வி ரித்துணர்த்திய-௰௨- நியாயங்களையும், சாங்கோபாங் கர்பச்சிமகாண்டம்-௬ருந்தயுகத்தின் - ௭ம்- அதிகார ம்-முதல்இலம்பகத்தையுங்காண்க.

## இரக்ஷகர்திருப்பாடுகளைக்குறித்துப் பிரலாபிக்கிறதேம்பாவணிப் பாடல்.

தோடிபுனுகவராளி- கண்டாராகம்.

ஐயாவிவ்வா றெங்கள்பொருட்டா லயர்வுற்றுய்
மெய்யார்துன்பத் தொன்றெனவுன்பால் விளைவுண்
டோ—மையார்பெட்பாற்றீவினைசெய்தடினுவெல்லா
முய்யாவொன் றன் றேவுயிர்சிந்த வுணர்வுற்றுய். ௧

## ௭௯௨. தேம்பாவணிப்பாடல்.

கோன்பானின்பா லென்றெதிரின்றிக்குறையின்றி
வானபானின்றே யெங்கணு நின்றேய் மகிழ்கின்று
யூனபானின்றோர் பேணியெடுத்தா யுயிர்சிந்தத்
தேனபானின்றுரினப தென்றுய்திருவல்லோய். ௨
வாராயோவெம் பேதுமிரங்கி மனுவல்லற்
பாராயோவெம் பேயினம்வென்றே பகையெல்லாந
தீராயோவென் றேநகையினமேற்சிறைதீர்த்தாய்
தாராயோவின் றுன்றையேத்தத்தகவன்றே. ௩
விண்மேல்வைத்த நன்றிவருநாம் வினைசெய்ய
மண்மேல்வைத்த காவணினக்கேவளாவின்றிப்
புண்மேல்வைத்த தீநிகர் துனடம் புகுவித்தோ [௪
மெண்மேல்வைத்தவெஞ்செயிராரா ரிணைசொல்வார்.
வேண்டாவின்பம வெஃகியதன்மைவிளைதிதாற்
றுண்டாவினைமைக் கொண்டுபிறந்தாய் தகுதன்மை
பூண்டாய்புனகண் பாலெனவுண்டாய் புரிவோங்கி
மாண்டாயோர்கைம் மாறுவழங்கக் கடவேமோ. ௫
பொய்ம்மாறின்று யாசைவிளைக்கும் புணையுய்த்த
மைம்மாறின்றுய்பேயுருநாகவபநாறிப் [க்
பைம்மாறின்றுய்நிற்கெனவெம்மாற் பயனுண்டாய்
கைம்மாறுனக்கே யாங்கள்வழங்கக் கடவேமோ ௬.
உன்னையுள்ள சீர்க்கறியோமேயுலகுள்ள
முன்னைபின்னையாமறியோமே முரியாமல்
தின்னையேத்தி நன்னெறிநிற்ப வறியோமே
பின்னையோர்கைம் மாறுபிணிக்கக்கடவேமோ. ௭
தாயுநீயேதந்தையுநீயேதவறுநன
றீயுநீயேயென றறிவோமே யிதுவல்லாற்
காயும்பாவத் தன்மையுநின்றன கனியன்பு
மாயுங்காலத் தஃதறியோநாமறியோமே. ௮
பாயோர்செந்நீர் கொண்டுன தங்கப்படமீதே
நீயோநாமோ விவ்வரிவைத்த நிலையெனபோ
மாயாவஞ்சத்திவ்வரிநாஞ்செய் வரியென்று
லோயாவனபாலுனவரியென்றுலுளைபொய்யோ. ௯

பற்றக்கற்போர் நூற்பலகற்றுற் பயனெனறோ
வொற்றக்கு ரு வி வரியொன்றே யுணர்வெல்லா
முற்றக்கற்பா ராயினுமெம்மால்முழுதாகா [ம
கற்றககட்டா துண்பொருள்காட்டாய்கலைவல்லோய்.

## கர்த்தாவினது
## அன்பின்பெருக்கத்தைத்துதிக்கும்
## பாடல்.

ஒனறில்லாதெல்லா முளவாக்கினோனல்லா
னன்றில்லாவையத்திந நனறிசெய்வானயாரோ
நனறிசெய்வாரில்லா நாம் வாழத்தானிறநது
வெனறிசெய்வா னெமக்குநீயல்லால்வேறியாரோ.

அனபுடையரொனபுமரிநதளிப்பார் தனதுயிரோ
டெனபுடைய மெய்யெல்லா மீநதுணவெனபாண
யாரோ — யீயநதுணவெனறெவ்வுயிர்க்குமெவ்வுணவு
மீட்டியிவண் — வேயநதுணத்தா னுண்ணிரநத நீ
யல்லால்வேறியாரோ.

கைம்மாறிவண்வெஃகாக் காமுற்றிவையெல்லா
மெய்ம்மாறெமக்களிப்ப விஞ்சரு—செனறேனயாரோ
விஞ்சருடசெனருசறநாமீவாழத்தானெநது
நெஞ்சருடசெனறீங்கிறக்குநீயல்லால்யார்யாரோ.

இம்மூனறுசெய்யுளும் வெண்பாவிற்குரிய செப்ப
லோசையால்வநதன.

## கர்த்தாவினது
## அளவில்லாவல்லமையைத்துதிக்கும்
## பாடல்.

மாற்றுரைமாய்த்த கதநீதிமாற்றி மாற்றுரையாற்
றமனுவா — யேற்றுரையேற்ற வடுகாலநீக்கி யேற்
றுரையேற்றவிழிந்தே — தேற்றுரையாற்ற வழுதா

விவாழ்ந்த றேற்றுரையுய்ப்பமடிவா — யாற்றுரையா
ற்று மருளாய்ந்தியாரு ளருவீராவாண்மையறிவார்.

ஒருநாதனென்று தனியேகனென்று மொருமூவ
ரென்றுபெயராய்க் — குருவாகிவந்து தணராதகன்
று குறுசாதுமெங்குமுளனாய்ப் — பொருளாதியென
று பொருடோறுநினறு பொருடோறழிந்துசிதை
யா — யருவாகிநினறுமுருவோயியாரு ளருவீராவாண்
மையறிவார்.

வினையொன்றுமின்றிவினைசெய்துசெய்தவினை தன்
னிலொனறும்விழையாய் — நினைவொனறுமினறி ம
றவொனறுமினறி நிகிலநதெரிநததிலவாய் — முனை
வொனறுமினறிமுனிவாய்முனிநது முதிர்கினறவனபு
முயல்வா — யனையொனறுமினறி யுயர்வோயியாருள
ருவீராவாண்மையறிவார்,

---

# தேவசங்கீதப்

## பிரார்த்தனை.

| | |
|---|---|
| **Deus, in adjutorium meum intende.** | சர்வேசுராளனக்குதவியாக நோக்கியருளும். |
| **Domine, ad adjuvandum me festina.** | கர்த்தாவே யெனக்கொத்தாசைசெய்யத்தீவிரியும். |
| **Gloria Patri, et Filio, et Spiritui Sancto.** | பிதாவுக்கும் சுதனுக்கும் இஸபிரீத்து சாநதுவுக்குந் தோத்திரமுண்டாக. |
| **Sicut erat in principio, et nunc, et semper, et in sæcula sæculorum. Amen.** | ஆதியிலிருநததுபோலே யிப்பொழுது மெப்பொழுதும் அநவரத சதாசாலமுமுணடாகக்கடவது. ஆமென்சேசு. |

## ௱௯ - ம். சங்கீதம்.

Dixit Dominus Domino meo : * sede à dextris meis.

ஆண்டவர் என் னாண்டவருக்குத் திருவுளம்பற்றினதாவது: நாம் உம்முடைய சத்துருக்களை யும்முடைய பாதங்களுக்கு மணையாகப் போடுமட்டு நமது வலது பாரிசத்தி லுட்காருமென்றார்.

Donec ponam inimicos tuos, * scabellum pedum tuorum.

Virgam virtutis tuæ emittet Dominus ex Sion : * dominare in medio inimicorum tuorum.

ஆண்டவர் சியோனினின் றுமது வல்லமையின் செங்கோலைப்புறப்படச்செய்வார். உம்முடைய சத்துருக்களின் நடுவே அரசாளும்.

Tecum principium in die virtutis tuæ in splendoribus sanctorum: * ex utero ante luciferum genui te.

உமது வல்லமையி னாளிலே அர்ச்சியசிஷ்டர்களின சோதிமகிமையி லிராசாதிபத்தியமுமமுடனே. விடியற்காலத்தி னட்சத்திரத்துக்குமுன் உம்மை நம்மகட்டினின்றுசனிப்பித்தோம்.

Juravit Dominus, et non pœnitebit eum:*tu es Sacerdos in æternum secundum ordinem Melchisedech.

நீர் என்றென்றைக்கும்மெல்கிசெதேக் கென்பவருடையமுறைமையின்படி குருவாயிருக்கிறீரென் றாண்டவராணையிட்டார். அதுவுமவருக்குமனஸ்தாபமா யிராது.

Dominus à dextris tuis; *confregit in die iræ suæ reges.

ஆண்டவருமது வலதுபாரிசமாயிருக்கிறார். தமதுகோபநாளி லிராசாக்களைமுறித்தார்.

Judicabit in nationibus, implebit ruinas : * conquassabit

அவர்சனங்களில் நடுத்தீர்த்துக் கேடுகளை நிறைவே

capita in terrâ multorum.

De torrente in viâ bibet: * propterea exaltabit caput.—Gloria Patri, et Filio, etc.

ற்றிப்பூமியி லநேகருடைய தலைகளை நசுக்குவார்.

வழியிலேவெள்ளத்திற்குடிப்பார். ஆகையால் தலையெடுப்பார். பிதாவுக்குஞ் சுதனுக்கும். . .

## ௱௰ - ம். சங்கீதம்.

Confitebor tibi, Domine, in toto corde meo; * in concilio justorum et congregatione.

Magna opera Domini; * exquisita in omnes voluntates ejus.

Confessio et magnificentia opus ejus; * et justitia ejus manet in seculum seculi.

Memoriam fecit mirabilium suorum misericors et miserator Dominus; * escam dedit timentibus se.

Memor erit in seculum testamenti sui;

கர்த்தாவே நீதிமானகளுடைய சங்கத்திலுஞ் சபையிலுமென் முழுவிருதயத்துடனே தேவரீரைஸ்துதிப்பேன்.

கர்த்தாவின் கிரியைகள் பெரியதுகளுமாயவருடைய சகலகிருத்துக்களுக்கும் பொருந்தினதுகளுமாயிருக்கின்றன.

அவருடையசெய்கைதோத்திரப்பாராட்டலுமாட்சிமையுமாயிருக்கின்றது. அவருடைய நீதியநவரதசதாகாலமு நிற்கின்றது.

கிருபைதயாபநிறைந்தகர்த்தர் தம்முடைய வற்புதங்களின் ஞாபகத்தையேற்படுத்தினார், தமக்கஞ்சுகிறவர்களுக்கு ஆகாரத்தைத் தந்தருளினார்.

என்றென்றைக்குந் தமதுடன்படிக்கையை நினைப்

* virtutem operum suorum annuntiabit populo suo.

பார், தம்முடைய செய்கைகளின்வல்லமையைத் தம்முடைய சனமானவர்களுக்கு வெளிப்படுத்துவார்.

Ut det illis hæreditatem gentium; * opera manuum ejus veritas et judicium.

அதெப்படியெனிற் சனங்களின் சுதந்தரத்தை யவர்களுக்குத் தந்தருளுவார். அவருடைய கரங்களின் கிரியைகளுண்மையு நீதியுமாயிருக்கின்றன.

Fidelia omnia mandata ejus, confirmata in seculum seculi; * facta in veritate et æquitate.

அவருடைய கற்பனைகளெல்லாம் பிரமாணிக்கமுள்ளதுகளுமா யநவரதசதாகாலத்துக்கு முறுதிப்பட்டதுகளாய்ச் சத்தியத்திலு நியாயத்திலும ஸ்தாபிக்கப்பட்டதுகளுமாயிருக்கின்றன.

Redemptionem misit populo suo: * mandavit in æternum testamentum suum.

அவர் தமது சனத்துக்கு இரட்சணியமனுப்பினார். தமதுடன்படிக்கையை நித்தியமாகக் கட்டளையிட்டார்.

Sanctum et terribile nomen ejus: * initium sapientiæ timor Domini.

அவருடைய நாமம்பரிசுத்தமும் பயங்கரமுமாமே, கர்த்தருக்குப் பயப்படுவதே ஞானத்துக்குத் துவக்கம்.

Intellectus bonus omnibus facientibus eum; * laudatio ejus manet in seculum seculi.

அதை யநுசரிக்கிறவர்களெல்லாருக்கும் நல்லுணர்ச்சியுண்டு. அவருடையபுகழ்ச்சி அநவரதசதாகாலமு நிலைநிற்கும்.

Gloria Patri, et Filio, etc.

பிதாவுக்கும்...

## ௱௰௧-ம். சங்கீதம்.

Beatus vir, qui

சர்வேசுரனுக்குப்பயப்ப

timet Dominum; * in mandatis ejus volet nimis.

டுகிறவன்பாக்கியவான், அவருடைய கற்பனைகளில் மிகவும்பிரியப்படுவான்.

Potens in terrâ erit semen ejus; * generatio rectorum benedicetur.

அவனுடையசந்ததிபூமியில்வல்லபமுள்ளதாகும். செம்மையானவர்களின் வங்கிஷம்ஆசிர்வதிக்கப்படும்.

Gloria et divitiæ in domo ejus; * et justitia ejus manet in seculum seculi.

மகிமையுந்திரவியங்களும் அவனவீட்டிலிருக்கும், அவனுடைய நீதித்தனமைஎன்றென்றைக்கு நிலைநிற்கின்றது.

Exortum est in tenebris lumen rectis: * misericors et miserator, et justus.

செம்மையானவர்களுக்கு இருளிற்பிரகாசமுதித்தது, அது தயாபமுங்கிருபையுநீதியுமுள்ளவர்தாமே.

Jucundus homo qui miseretur et commodat, disponet sermones suos in judicio: * quia in æternum non commovebitur.

மனமிரங்கி யிரவல்கொடுத்துநியாயத்தோடுதன் பேச்சுக்களை யொழுங்குபடுத்துகிறவன்பாக்கியவான், ஏனெனில் என்றென்றைக்கும் அசைக்கப்படான்.

In memoriâ æternâ erit justus; * ab auditione malâ non timebit.

நீதிமான் நித்திய கீர்த்தியைக்கொண்டிருப்பான். அவனுருன கேள்விகளாலவனுக்குப்பயமிராது.

Paratum cor ejus sperare in Domino, confirmatum est cor

அவனிருதயஞ்சர்வேசுரனில் நம்பிக்கைவைக்கஆயத்தமுள்ளதாமே, அவனிருதயந்திடமாயிற்று. தன்சத்துரா

ejus; * non commovebitur donec despiciat inimicos suos.

திகளைக் கீழே பார்க்குமட்டும் அவன் சைககப்படான்.

Dispersit, dedit pauperibus, justitia ejus manet in seculum seculi; * cornu ejus, exaltabitur in gloriâ.

வாரியிறைத்துத் தரித்திரர்களுக்குக்கொடுத்தான். அவன் நீதித்தனமை அநவரதசதாகாலமுநிற்கும். அவனுடைய வல்லப மகிமையோடேயுயர்த்தப்படும்.

Peccator videbit et irascetur, dentibus suis fremet et tabescet; * desiderium peccatorum peribit.—Gloria. . .

பாவியிதைக்கண்டு காய்ந்து தனபல்லுக்களைக்கடித்து ஏங்கிக் கரைந்துபோவான. பாவிகளினபேட்சை கெடும்.—பிதாவுக்கும். . .

## ௱௰௨-ம். சங்கீதம்.

Laudate, pueri, Dominum; * laudate nomen Domini.

பிள்ளைகளே கர்த்தரைத் துதியுங்கள் ஆண்டவருடைய நாமத்தைப்புகழுங்கள்.

Sit nomen Domini benedictum: * ex hoc nunc et usque in seculum.

ஆண்டவருடைய நாமமிப்பொழுது மிதுமுதலென்றென்றைக்குந் தோத்திரிக்கப்படக்கடவது.

A solis ortu usque ad occasum: * laudabile nomen Domini.

சூரியனுதிக்கிறதிசை துவக்கி யஸதமிக்கிற திசைமட்டும் ஆண்டவருடையநாமந்துதிக்குரியதாமே.

Excelsus super omnes gentes Domi-

ஆண்டவர் சகலசனங்களின்மேலுமுயர்ந்தவர், அவரு

nus, * et super cœlos gloria ejus.

Quis sicut Dominus Deus noster, qui in altis habitat, * et humilia respicit in cœlo et in terrâ?

Suscitans à terrâ inopem; * et de stercore erigens pauperem;

Ut collocet eum cum principibus, * cum principibus populi sui.

Qui habitare facit sterilem in domo; * matrem filiorum lætantem. — Gloria...

டையமகிமை வானங்களிலு மேலானதாமே.

உந்நதஸ்தலங்களில் வசிக்கிறவருமாய்ப் பரலோகத்திலும் பூலோகத்திலுந் தாழ்வான துகளைமுதலாய்நோக்கிறவருமா யெளியவனை மண்ணினின்றெடுக்கிறவருமாயத்தரித்திரனைப் பிரபுக்களோடுந் தன ஜனத்தின் தலைவர்களோடுமஸ்தாபிக்கும்படியவனைக் குப்பையினின்றுயர்த்துகிறவருமாய்மலடியை யநேக பிள்ளைகளுடைய சந்தோஷமுள்ளதாயாகவீட்டிற் குடியிருக்கப்பண்ணுகிறவருமாயிருக்கிற வெங்கள்சர்வேசுரனாகிய கர்த்தருக்கு நிகராயிருப்பவனார்?

பிதாவுக்கும...

## ௱௰௩-ம். சங்கீதம்.

In exitu Israel de Ægypto, * domûs Jacob de populo barbaro.

Facta est Judæa sanctificatio ejus, * Israel potestas ejus.

Mare vidit et fugit; * Jordanis con-

இஸ்ரூயேலித்தார் எஜிப்த்திலும் யாக்கோபுடைய வீடடார் துஷ்டச்சனத்திலுமிருந்து புறப்படுகையில்,

யூதரினம் அவருடையபரிசுத்தசனமும் இஸ்ரூயேல் அவருடைய விராசாங்கமுமாயின.

கடல் அதைக்கண்டு ஓடிவிலகிற்று. யோர்தானதி யி

versus est retrorsùm.

ன்னிடடுத் திரும்பிற்று.

Montes exultaverunt ut arietes ; * et colles sicut agni ovium.

மலைகள் ஆட்டுக்கிடாய்களைப்போலேயுங் குன்றுகள் ஆட்டுக் குட்டிகளைப் போலேயுந்துள்ளின.

Quid est tibi, mare, quòd fugisti ? * Et tu Jordanis , quia conversus es retrorsùm?

கடலேநீயோடிவிலகினதற்கும்யோர்தானதியேநீபின்னிடடுத் திரும்பினதற்கு

Montes exultastis sicut arietes ? * Et colles sicut agni ovium ?

மலைகளே நீங்கள் ஆட்டுக்கிடாய்களைப்போலவுங் குன்றுகளேநீங்கள்ஆட்டுக்குட்டிகளைப்போலவுந் துள்ளினதற்குங் காரணமேது.

A facie Domini mota est terra ; * à facie Dei Jacob;

பூமியானதுகர்த்தருடையசமுகத்தினாலுமியாக்கோபுடைய சர்வேசுரன்சந்நிதியினாலும்திர்ந்தது.

Qui convertit petram in stagna aquarum ; * et rupem in fontes aquarum.

அவர்கற்பாறையைத்தண்ணீர்த் தடாகங்களாகவுங் கன்மலையை நீரூற்றுக்களாகவுமாற்றுகிறவர்.

Non nobis, Domine , non nobis ; * sed nomini tuo da gloriam.

எங்களுக்கல்ல கர்த்தாவே எங்களுக்கல்ல உமது நாமத்துக்கே தோத்திரத்தைசசெலுத்தும.

Super misericordiâ tuâ et veritate tuâ, nequando dicant gentes, *ubi est Deus eorum ?

உமமுடையதயாபமுமெண்மையுமவிளங்கவும் அவர்களுடைய தேவனெங்கேயென்றுபிறசனங்கள்சொல்லாதபடிக்குந்தானே.

Deus autem noster in cœlo ; * omnia quæcumque voluit fecit.

ஆனால் எங்கள்தேவன் பரமண்டலத்திலிருக்கிறார். அவர் தமக்குச்சித்தமாயிருந்ததெல்லாஞ் செய்தார்.

Simulacra gentium argentum et aurum,* opera manuum hominum.

சனங்களின் விக்கிரகங்கள் மனிதர்களுடைய கைகளினவேலைகளான வெள்ளியும்பொன்னுந்தானே.

Os habent et non loquentur ; * oculos habent et non videbunt.

அதுகளுக்குவாயிருந்தும் பேசாது, கண்ணிருந்துங் காணாது.

Aures habent et non audient ; * nares habent et non odorabunt.

அதுகளுக்குக்காதிருந்துங் கேளாது, நாசியிருந்து முகராது.

Manus habent et non palpabunt , pedes habent et non ambulabunt ; * non clamabunt in gutture suo.

அதுகளுக்குக்கையிருந்துந் தடவாது, காலிருந்து நடவாது, தங்கள் தொண்டையினாலே சத்தமிடாது.

Similes illis fiant qui faciunt ea , * et omnes qui confidunt in eis.

அதுகளைச் செய்கிறவர்களும் அதுகளை நம்புகிற சகலரும் அதுகளுக்குச்சமானமாகக்கடவார்கள்.

Domus Israel speravit in Domino;*adjutor eorum, et protector eorum est.

இஸ்ரயேல்வீட்டார் கர்த்தரை நம்பிக்கொண்டார்கள். அவர் அவர்களுக்குதவியுமாதரவுமாயிருக்கிறார்.

Domus Aaron speravit in Domino ; * adjutor eorum , et protector eorum est.

ஆரோன்வீட்டார் கர்த்தரை நம்பிக்கொண்டார்கள், அவர் அவர்களுக் குதவியு மாதரவுமா யிருக்கிறார்.

Qui timent Dominum , speraverunt in Domino; * adjutor eorum , et protector eorum est.

கர்த்தருக்குப் பயந்தவர்களெவர்களோ அவர்கள் கர்த்தரை நம்பிக்கொண்டார்கள். அவர் அவர்களுக்கு உதவியு மாதரவுமா யிருக்கிறார்.

Dominus memor fuit nostri :* et benedixit nobis.

கர்த்தர் நம்மை நினைத்து நம்மையாசீர்வதித்தார்.

Benedixit Domui Israel ; * benedixit domui Aaron.

இஸ்ரயேல்வீட்டாரையாசீர்வதித்தார், ஆரோன்வீட்டாரை யாசீர்வதித்தார்.

Benedixit omnibus qui timent Dominum : * pusillis cum majoribus.

கர்த்தருக் கஞ்சுகிற சிறியோரும் பெரியோருமாகிய சகலரையுமாசீர்வதித்தார்.

Adjiciat Dominus super vos: * super vos et super filios vestros

உங்கள்பேரிலும் உங்கள்பேரிலு மன்றியுங்கள் மக்கள்பேரிலும் ஆண்டவர் மேன்மேலும் நன்மை பொழிவாராக.

Benedicti vos à Domino : * qui fecit cœlum et terram.

பரலோகத்தையும் பூலோகத்தையுஞ் சிஷ்டித்தவராகிய கர்த்தராலே நீங்களாசீர்வதிக்கப் படுவீர்களாக.

Cœlum cœli Domino:* terram autem dedit filiis hominum.

பரமண்டலங்களி லுந்நதமான பரமண்டலமே கர்த்தருடையது. பூமியையோவெனில் மனுமக்களுக்குத் தந்தருளினார்.

Non mortui laudabunt te, Domine: * neque omnes qui descendunt in infernum.

கர்த்தாவே! செத்தவர்களும் நரகத்திலிறங்குகிற சகலருந்தேவரீரைஸ்துதியார்கள்.

Sed nos qui vivimus benedicimus Domino: * ex hoc nunc et usque in seculum.—Gloria etc.

சீவிக்கிற நாங்களோவென்றுவிப்பொழுதுமிதுமுதலென்றென்றைக்குங் கர்த்தரைத்தோத்திரிக்கிறோம். — பிதாவுக்கும்...

CAPITULUM.

Benedictus Deus, et Pater Domini nostri Jesu Christi, Pater misericordiarum, et Deus totius consolationis, qui consolatur nos in omni tribulatione nostrâ — *R.* Deo gratias.

நம்முடையஆண்டவராகிய சேசுகிறீஸ்துவுக்குப் பிதாவுமாய் மிகுந்தகிருபையுள்ளதகப்பனுமாய் நமதுதுன்பமெல்லாத்திலு நமக்குத்தேறுதல்தருகிறசர்வஆறுதலின் கடவுளுமாயிருக்கிற சர்வேசுரன்தோத்திரிக்கப் படுவாராக. — சர்வேசுரனுக்குநன்றியறிந்ததோத்திரமுண்டாக.

HYMNUS. — பாடல்மொழிபெயர்த்தது.

Lucis Creator optime,
Lucem dierum proferens,
Primordiis lucis novæ,
Mundi parans originem

பிரகாசத்தின்பரமசிஷ்டிகரே நாட்களுக்கு ஒளியைத் தந்தருளுகிறவரே புதுப்பிரகாசத்தி னுதயத்தாலுலகத்துவக்கத்துக்கு எத்தனஞ்செய்தீர்.

Qui mane junctum vesperi,
Diem vocari præcipis,
Illabitur tetrum chaos,
Audi preces cum fletibus.

Ne mens gravata crimine,
Vitæ sit exul munere,
Dum nil perenne cogitat,
Seseque culpis illigat..

Cœleste pulset ostium,
Vitale tollat præmium,
Vitemus omne noxium,
Purgemus omne pessimum.

Præsta, Pater piissime,
Patrique compar Unice,
Cum Spiritu Paracleto,
Regnans per omne seculum,
Amen.

அந்தியோடே கூடச் சந்தியைப்பகலென்றழைக்கக் கற்பித்தீர். பயங்கரக்கலக்கமான வந்தகாரநேரிடுமே. அடியோர்களழுகையோடுமக்குச்செய்கிற வேண்டுதல்களைக்கேட்டருளும.

ஆத்துமநித்தியமானதொன்றுநினையாமற்பாவக்கட்டுக்களுக்குடபடடுப் பாதகப்பாரத்தாலமுங்கி, நித்தியசீவியமென்கிற பலனையிழந்து அதற்குப் புறம்பாகாதபடிச்செய்தருளும்.

மன்றாட்டினாற் பரலோகத்தின் கதவைத்தட்டி நித்தியசீவியமென்கிற பலனையடையவும் அக்கிரமமெல்லாம்விலக்கி அசுத்தமெல்லாஞ்சுத்திகரிக்கவுமெங்களுக் கநுக்கிரகம்பண்ணுவீராக.

கிருபைநிறைந்தபிதாவே கேட்கிறவரந் தந்தருளும். பிதாவுக்குச் சரிசமானமானவரும் இஸ்பிரீத்து சாந்துவோடே சதாகாலமுமிராச்சியபரிபாலனம் பண்ணுகிறவருமாகிய ஏகசுதனே எங்களுக்கிந்தச்சகலநன்மையுஞ் செயதருளும்.

ஆமென்சேசு.

அர்ச்.-தேவமாதாசுவாமியைப்புகழ்ந்த பத்துவாக்கியம். ௮௮-ம.பக்கங்காண்க.

Magnificat * anima mea Dominum:

Et exultavit Spiritus meus * in Deo salutari meo.

Quia respexit humilitatem ancillæ suæ * ecce enim ex hoc beatam me dicent omnes generationes.

Quia fecit mihi magna qui potens est :* et sanctum nomen ejus.

Et misericordia ejus à progenie in progenies * timentibus eum.

Fecit potentiam in brachio suo : * dispersit superbos mente cordis sui.

Deposuit potentes de sede, * et exaltavit humiles.

Esurientes implevit bonis , * et divites dimisit inanes.

Suscepit Israel puerum suum, * recordatus misericordiæ suæ.

Sicut locutus est ad patres nostros,* Abraham, et semini ejus in sæcula.—Gloria...

அநேகதிருநாட்களிலே-௱௰௬-ம். சங்கீதத்துக்குப்பதிலாகப்பாடப்படும்

௱௰௬ம். சங்கீதம்.

Laudate Dominum omnes gentes: * laudate eum, omnes populi.

சகலசாதிகளேகர்த்தரைப்புகழுங்கள். சகலசனங்களேயவரைஸ்துதியுங்கள்.

Quoniam confirmata est super nos misericordia ejus: * et veritas Domini manet in æternum.

ஏனெனில்வருடைய தயாபம்நமதுபேரில்ஸ்திரமானதனறியும், கர்த்தருடைய உண்மையென்றென்றைக்குநிலைநிற்கும்.

Gloria Patri...

பிதாவுக்கும்...

## தேவமாதாமுதலிய அர்ச்.-கன்னியர் திருநாட்களிற் பாடப்படுஞ் சங்கீதங்கள்.

க-வது. Dixit Dominus.

உ-வது. Laudate, pueri.

௩-வது. ௱உக-ம். சங்கீதம்.

Lætatus sum in his, quæ dicta sunt mihi: * in domum Domini ibimus.

ஆண்டவருடைய வீட்டுக்குப் போவோமென்றெனக்குச் சொல்லப்பட்டதுகளைப்பற்றிச் சந்தோஷப்பட்டேன.

Stantes erant pedes nostri, * in atriis tuis, Jerusalem.

எருசலேநகரே எங்கள் பாதங்க ளுன்னுடைய முகவாசல்களில் நிலைநின்றன.

Jerusalem, quæ ædificatur ut civitas; * cujus participatio ejus in idipsum.

எருசலேநதன்னிலிசை விணக்கமுள்ள பட்டணமாகக் கட்டப்பட்டிருக்கிறதாமே.

Illuc enim ascenderunt tribus, tribus Domini, * testimoni-

அங்கே கர்த்தருடைய கோத்திரங்களாகிய கோத்திரங்கள் இஸ்ரயேலுக்கிடப்பட்ட கட்டளையின்ப

um Israel, ad confitendum nomini Domini.

டியே கர்த்தருடைய நாமத்தைத் தோத்திரிப்பதற்கேறிப்போயின.

Quia illic sederunt sedes in judicio: * sedes super domum David.

ஏனெனில் அங்கே தாவீதுடைய வீட்டின் மேலான ஆசனங்களாகிய நியாயாசனங்கள் ஸ்தாபிக்கப்பட்டன.

Rogate quæ ad pacem sunt Jerusalem, * et abundantia diligentibus te.

எருசலேநகருடைய சமாதானத்துக்கானவைகளை மன்றாடிக் கேளுங்கள், உன்னைச் சிநேகிக்கிறவர்களுக்குப் பூரிப்புண்டாகக்கடவது.

Fiat pax in virtute tuâ: * et abundantia in turribus tuis.

உன் வீரத்திற் சமாதானமும் உன் கோட்டைகளிற் சம்பூரணமுமுண்டாவதாக.

Propter fratres meos, et proximos meos, * loquebar pacem de te.

என் சகோதரரையும் என் சேர்ந்தாரையும்பற்றி யுனக்காகச் சமாதானம் பேசினேன்.

Propter domum Domini Dei nostri, * quæsivi bona tibi.

நமமுடைய சர்வேசுரனாகிய கர்த்தாவின் தேவாலயத்தைப்பற்றி யுனக்குச் சகல நன்மையுந் தேடினேன்.

Gloria Patri. . .

பிதாவுக்கும். . . .

## ௱௨௬-ம். சங்கீதம்.

Nisi Dominus ædificaverit domum, * in

ஆண்டவரொரு வீட்டைக் கட்டாராகில் அதைக்

vanum laboraverunt qui ædificant eam.

கட்டுகிறவர்கள் வீணுயுழைக்கிருர்கள்.

Nisi Dominus custodierit civitatem, * frustra vigilat qui custodit eam.

ஆண்டவரொருபட்டணத்தைக் காக்காராஞல்லதைக்காக்கிறவன் விருதாவாய் விழித்திருந்து பராமரிக்கிருன்.

Vanum est vobis ante lucem surgere :* surgite postquam sederitis, qui manducatis panem doloris.

விடிகிறதுக்குமுன் நீங்களெழுந்திருக்கிறது வியர்த்தம். துயரமுள்ள வப்பத்தைச் சாப்படுகிறவர்களே நீங்களிளைப்பாறின பின்பு எழுந்திருங்கள்.

Cum dederit dilectis suis somnum: * ecce hæreditas Domini, filii; merces, fructus ventris.

தமக்குப் பிரியமானவர்களுக்கு நித்திரைதந்தருளினபின்பு இதோ கர்த்தருடையசுதந்தரமாகப் புண்ணியபலனும் உதரத்தின் கனியுமாகியபுத்திரராவார்கள்.

Sicut sagittæ in manu potentis,* ita filii excussorum.

உபத்திரவப் பட்டவர்களுடைய புத்திரர்பலசாலியின்கையிலுள்ள அம்புகளுக்குச்சமானம்.

Beatus vir qui implevit desiderium suum ex ipsis: *non confundetur cùm loquetur inimicis suis in portâ.—Gloria. . .

அவர்களால் தன்னுசைக்குத்திருத்தியடைந்த மனிதனேபாக்கியவான். ஒலிமுகவாசலில் தன்சத்துராதிகளோடே பேசும்பொழுது வெட்கத்துக்குள்ளாகான்.—பிதாவுக்கும. . .

## ௮௱௰. தேவசங்கீதப்பிரார்த்தனை.

### ௱௪௭-ம். சங்கீதம்.

Lauda, Jerusalem, Dominum: * lauda Deum tuum, Sion.

எருசலேம்நகரே ஆண்டவரைத் துதி, சியோனே யுன் சர்வேசுரனைத் தோத்திரி.

Quoniam confortavit seras portarum tuarum: * benedixit filiis tuis in te.

ஏனெனில் உன் வாசற் கதவுகளின் தாப்பாள்களைப் பலப்படுத்தினார். உன்னிலுள்ள உன்பிள்ளைகளை யாசீர்வதித்தார்.

Qui posuit fines tuos pacem: * et adipe frumenti satiat te.

அவருன்னெல்லைகளுக்குச் சமாதானங் கட்டளையிட்டுக் கோதும்பையின் கொழுமையினா லுன்னைத் திருத்தியாக்கினார்.

Qui emittit eloquium suum terræ: * velociter currit sermo ejus.

அவர் தமது வார்த்தையைப் பூமிக்கனுப்புகிறார், அவருடைய வாக்கியந் தீவிரமாயோடுகின்றது.

Qui dat nivem sicut lanam, * nebulam sicut cinerem spargit.

அவர் பஞ்சடைவாக வுறைந்தமழையைத் தருகிறார், சாம்பலடைவாக மூடுபனியைத் தூவுகிறார்.

Mittit crystallum suam sicut buccellas: * ante faciem frigoris ejus quis sustinebit?

தமது கன்மழையைத் துணுக்குகளாக வனுப்புகிறார். அவருடைய குளிரின் முன்பாக நிற்பவனார்?

Emittet verbum suum, et liquefaciet ea: * flabit spiritus ejus, et fluent aquæ.

தமதுவார்த்தையை யனுப்பி யதுகளை யுருக்குவார். அவருடைய காற்று வீசினமாத்திரத்தில் தண்ணீரோடும்.

Qui annuntiat verbum suum Jacob, * justitias et judicia sua Israel.

யாக்கோபென்கிறவருக்குத்த மதுவார்த்தையையும இஸ்ருயேலுக்குத் தம்முடைய நீதிப்பிரமாணங்களையு நடுத்தீர்வைகளையு மறிவிக்கிறார்.

Non fecit taliter omni nationi :* et judicia sua non manifestavit eis. — Gloria...

அவர்எல்லாச்சனத்துக்குமிப்படிச் செய்ததுமில்லை அவர்களுக்குத் தம்முடைய நடுத்தீர்வைகளை வெளிப்படுத்தவுமில்லை. — பிதாவுக்கும...

## HYMNUS.

இதன்மொழிபெயர்த்தல்-அசு-ம. பக்கங்காண்க.

Ave, maris stella,
Dei Mater alma,
Atque semper virgo,
Felix cæli porta.
Sumens illud Ave
Gabrielis ore,
Funda nos in pace,
Mutans Hevæ nomen.
Solve vincla reis,
Profer lumen cæcis,
Mala nostra pelle,
Bona cuncta posce.
Monstra te esse Matrem,
Sumat per te preces
Qui pro nobis natus,
Tulit esse tuus.
Virgo singularis,
Inter omnes mitis,
Nos culpis solutos,
Mites fac et castos.
Vitam præsta puram,
Iter para tutum,
Ut videntes Jesum,
Semper collætemur.
Sit laus Deo Patri,
Summo Christo decus,
Spiritui Sancto,
Tribus honor unus.
Amen.

# அரும்பதங்கட்குப்பயன்.

அட்சயம் - என்பது - அழியாமை. (௭) ௩௭.

அப்போஸ்தலர் - எது. நம்முடைய ஆண்டவர நேகசீஷர்களுக்குள்ளே தாந்தெரிந்துகொண்டு மேலானதுருப்பட்டத்துக்கேற்படுத்தின பன்னிரண்டுபிரதானசீஷர்களை தமது வேதம்பரப்புகிறதற்குலோகமெங்குந்திரிந் துபதேசிக்கத் தம்முடையஸ்தானாபதிகளாக வனுப்ப திருவுளமானதினால் அனுப்பப்பட்டவர்களென்கிற வர்த்தத்தைக்கொண்டு அவர்களுக்குத்தாமே யிட்டருளின நாமமாம். தத்துவபோதகசுவாமி-௫-ம். காண்டம், ௰௭-ம். பாடங்காண்க. (௰௭) ௭௫௩.

அமலோற்பவி - எது. அமல் - மாசில்லாத, உற்பவி - உற்பவத்தையுடையவள். இதுசன்மப்பாவமின்றி யுற்பவித்த மாசில்லாத தேவதாயாருக்குத் தகுதியானபெயராம். (௰௫) ௮௩.

அர்ச்சியசிஷ்டதமதிறித்துவம் - எது. அர்ச்சிய பூசிக்கத்தக்க, சிஷ்ட - நல்ல, தம - மேலான என்றுளதாற் பூசிக்கத்தக்க நல்லமேலான திறித்துவமென்றர்த்தமாம். ௫.

அல்லெலூய்யா - எது. வானோர்களால் அத்தியந்தமனோரமியத்தா லுரைக்கப்பட்ட எபிரேபாஷைச் சொல்லாம். அதிலேசுவாமியைஸ்துதியென்பயனாகும். இத்தேவமொழிதமிழிற்பயன்றருமாறென்னையெனில் அல் - இரவு, எல் - பகல், உய் - உய்தல், ஆ - ஆக, அல்லுமெல்லு முய்தலாகக்கடவதெனவும், சுவாமிபிறந்தது முத்தாநமானது மிராக்காலமாயினு மவ்விராவிருணீங்கி யவ்விருநேரமுஞ் சோதிப்பிரகாசமாய்ப் பகற்போன்றிருந்ததால் இராப்பகலாயிற்றெனவு மாதவில் உலகத்தைமூடியிருந்த பாபாந்தகாரம்பறந்து ஞானவெளிச்சமுண்டாயிற்று. ஆகையால் உயிர்வாழ்தலாகக்கடவதெனவும்பயனாம். ௭.

# அரும்பதங்கட்குப்பயன். ஆ

ஆகமனகாலம்-எது. வருகையின்காலம். இது கர்த்தர்பிறந்த திருநாளுக்குமுன் நான்காம ஞாயிற்றுக கிழமைதுவககிய த்திருநாள்வரைககு முள்ளகாலத்துககு வழஙகுகிறபெயராம. ஏனெனி லவருலகத்திலெழுந்தருளிவந்ததுபோல நமதாத்துமத்தி லெழுந்தருளிவருதற்கு அப்போதாயத்தஞ்செய்யத்தக்ககாலமாம. (யச) கூக.

ஆதன்-அல்லது-ஆதம-எது. மனிதன் -அல்லது மண்ணலாயினவனென-அநாதிபிதாவால் நமமுடைய ஆதிதகப்பனுக களிககப்பட்ட நாமமாம. அக.

ஆமென்சேசு-எது. தொடர்மொழியாம. எபிரேபாஷைச் சொல்லாகிய ஆமெனென்பது மந்திரங்களி னீற்றில்வருகையில் ஆம-அப்படியாகக் கடவதென்றுபயனும. சேசு என்பது- இரட்சகருடையதிருநாமதேயமாம். அவருடையபுண்ணியபலன்களாலு பத்தியஸ்தத்தாலுந்தேவஅநுக்கிரகமுதலியசகலநன்மையுஞ்சகலபுண்ணியபேறு நாமடைவதால்அவருடைய திருநாமமானதுசகலசெபத்தியானங்களி னீற்றிலே சொல்லப்படுவதென்றறிக. மேற்சொன்ன வேதப்பயனுக்குமுற்றுமேற்கத்தமிழிலும்ஆ -என்-சேசு, ஆமென்சேசுவென அருமையாயர்த்தங்கொண்டவாறு. (க) க.

ஆராதனை-எது வணககமென்றும பூசித்தலென்றுமர்த்தமாம. சர்வேசுரனுககுமாத்திரமே தேவாராதனைசெல்லும். தேவமாதாவுககுச் செல் லுகிறவாராதனை யேதெனில தேவாராதனைநீங்கலாகவுஞ் சகலமோக்ஷவாசிகளுககுஞ் செய்யப்படுகிற வணககத்திற்கு மேலானதாகவுமிருக்கிற உத்தம வணககமாம, மோக்ஷவாசிகளுககோவென்றுல்பூவாசிகளுககுச்செல்லுகிற வணககததைவிட வேததுககுரியம்மேலான

வணக்கஞ் செய்யப்படுமென்றறிக. தத்துவபோதக் சுவாமி-௫ம். காண்டம், ௭ம். பாடத்தினும், மந்திரவியாக்கியானம்-௧-கற்பனையினும், வேதவிளக்கம்-௫-ம ௪-ம். அதிகாரங்களினும், வேதப்புரட்டலைநீக்குஞ்சஞ்சீவி-௫-ம். காண்டம், ௨ம், அதிகாரத்திலுங்காண்க.
(௨) ௰.

ஆரோகணம்-எது. ஏறுதல். (௮) ௯௰௭.

இன்னுசியார்-அல்லது இஞ்ஞாசியார்-எது. சீர்மைப்பாஷையில் இடுகுறிப்பெயராம். இது தமிழில் பிரயோகமாகிவழங்குகிறபடிக்கதிலிருக்கிறபயன் யாதெனில்-இன்-இனிமை, ஆசியார்-ஆசீர்வாதமுடையார், இனிமையாகியஆசீர்வாதமுடையாரெனவாம். ௮௭.

என்னையுமென்பதற்குமிலாய் எங்களையுமெனவோதலாம். இப்படியந்நகர் இந்தமந்திரமுதலியசெபங்களைச் செபிக்கும்போது பன்மைவழங்குவதமுறை. (௫) ௫௮.

ஏவைபெயரைமாற்றி-எது. ஸ்திரீயானவள் பாதாளசர்ப்பமாகிய பசாசின் தலையை நசுக்குவாளென்று சர்வேசுரன் திருவுளம்பற்றினதைக்கேட்டு-ஆதிதகப்பன் ஆதிதாயின்பேரைமாற்றிச் சீவியருடையதாயென்றர்த்தமான ஏவையென்கிறபெயரை யவளுக்குத்தந்தமையாற் பசாசின் தலையைநசுக்கின பரமஸ்திரீயான தேவமாதா ஆதிதாயின்பெயரைமாற்றினகாரணமென்னத்தகுமே. (௯) ௮௪.

ஐவகைத்தாய்மார்-எது. உயிர்த்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய். ௮௨.

கடவுள்தன்மையென்னும் ஞானவார்க்குக்கெட்டாத பரமபொருள்பட வடமொழிப்படி தேவத்துவம் எனத் தத்துவபோதகசுவாமி காண்டமுதலியவற்றிற் கூறியபடியும் கடவுளினுண்மை வல்லமையென்னும் பொருள்படத் தேவதத்துவம் எனத்தமிழிற் செ

ருமபான்மையும வழங்குவதன்றி வீரமாமுனிவருந் தேமபாவணிமுதலியவற்றிற் கூறியபடியும இதிலே கலந்துகூறப்பட்டது.

கணவாய் - எது. மலைகளிடையிற் பிரிபட்டும் அருவியாலறுபட்டுமிருக்கிற பாதாளங்களுக்குப்பெயராமாயினும கண்ணினீர்க்கணவாய் என்றது கண்ணீர் சொரிந்துகொண்டிருக்கிற வுபத்திரவமான வுலகமென்றிங்கேவேதப்பயனுடை. ௩௫.

கருதினர்கள்-எது. இலத்தீன் பாஷையில் திருச்சபையூன்றியிருக்கிற மூலமானவர்களென்றும, தமிழில் அரியசுந்திராலோசனை கருதுவர்களென்று மர்த்தமாகும். அது அர்ச்.-பாப்பானவருக்கு இரண்டாந்தஸ்திவிருக்கிற-எஉ-பெரியவேதாந்திகளுக்குப் பெயராம். (௰௬) ௭௯௰.

கொடிமுந்திரிகையென்பதை வடமொழியால்திராக்ஷாவென்றும், திசைச்சொல்லால் தீவுதாழ்ச்சியென்றும, பெரும்பான்மையுந்தேவதாழச்சியென்றும்வழங்குவர். இவரருள் தேவதாழச்சியென்னுஞ்சொல் சுவாமிநம்மைமீட்குமபொருட்டுச்சிந்தப்பாடுபடவும்ளவற்றவன்பினால் நமமோடெப்பொழுதுமவசிக்குமபொருட்டுத் தேவநற்கருணையில்றபபெருட்களினுருபத்தால்மறைந்திருக்கவு மேற்கொண்டதெய்வீகதாழச்சியைவிளக்குவதா விதையேமுக்கியமாயிப்புஸ்தகத்துட் பலவிடத்திற்பிரயோகித்திருக்கிறது.

சமாதானம-எது. வேதாகமங்களிற் சகலவிதநன்மைச்சமபூரணத்துக்குப்பயனுகவழங்கும. (௰) ௮௪.

சமமனசுகள்-எது. தேவதூதருக்குத் தத்துவபோதகசுவாமியாற்சொல்லப்பட்ட வடமொழிப்பெயர். சம-மனசு, நல்லமனசு என்றர்த்தமாம. ௪.

சவேரியார்- இதுபிறபாஷையில் இந்துதேசத்தின் அப்போஸ்தலராக விளங்கினவருக்கு வமிசப்பெயராயினுமதுவேதமிழிற்கு மிக்கவுரித்தாய்க்கொள்ளுமப்

## அாயகூ. அருமப்தங்கட்குப்பயன்.

யுனென்னவெனில்: சவம - மரித்தசடம, இரியார் கெடார், இவவிரண்டு திரட்டெனனும்விகாரத்தால்,சர்வ ஈசுரன் சர்வேசுரனெனறதுபோல - சவ• இரியார், சவேரியார், மரித்த சடமழியாதவொன- இட்பொழுதும பேறகடலடுத்த கோலவநகரத்து அற்புதமா யவர் திருச்சரீர மழியாமல்விளஙகுகின்றதையுணர் ததுமரியட யனைக்காண்க. அள.

சியோன்-எது - யூதேயநாட்டில் எருசலேமபட்டணத்துக்குத்தென்புறத்திலிருக்கிறவோர்மலையாமே, இதன்மேல் தாவீதிராசா வரமனைகட்டியிருந்தார். இதுவேதத்தில் மிகவுங்கொண்டாடப்பட்டதுமாய்த்திருச்சபைக்கு மோட்சத்துக்கு மொப்பிடப்பட்டதுமாயிருக்கின்றது. (யகூ) உருஅ.

சுதபரமபரை - எது - பிள்ளைபிள்ளைதலைமுறையென்றுபயனும. (யக) அகூ.

செமமறிப்புருவை - எது - செமமறி யாட்டின்குட்டியென்றும. சேசுநாதர் ஓராட்டுச்குட்டியைப்போல்அத்தியந்தசாந்தகுணப் பொறுமையால்விளங்கிமுறையிடவாய்திறவாமல்பலியானபடியால்செமமறிப்புருவையோடுவமிக்கவு மதின்பேரால்விசேஷிக்கவுமபட்டிருக்கிறார். (சு) ருக.

சேசுநாதர் - என்னுந் தேவதிருநாமத்திற்குப் பயன்- வேதப்பாஷையிலுள்ளபடியேபிரதிபதங்களாய்த் தமிழிற்பிரயோகிக்கப்பட்டபடி- இரட்சகர்புரவலனென்பதாமே. மீளவு மத்திருநாமத்தின்சத்தமே சே-பிள்ளை, சு- நல்ல, நாதர்-ஆண்டவர்-என்றுளதால் - பிள்ளையாகவந்தவதரித்தநல்ல ஆண்டவனென்று தமிழிற் கொள்ளுந் தகுதியானபயனையுங்காண்க. உ.

ஸ்திரீயே-என்றதேதெனனில் மரிக்கிறவேளையில் சேசுநாதர் பரிசுத்தவுதரத்தி லுற்பவித்த தமமையீன்ற திருமாதாவை அத்தியந்தநேசத்தோடேநோக்கி

த் தம்முடைய பெறபேறுபங்கடைந்து தம்மோடொ
ன்றுகிற சமஸ்தரையு மவளுக்குப்புத்திரராகவுமவளை
யவர்களுக்கு மாதாவாகவு நியமித்தருளுகையி லாண்
டவரநுபவிக்கிற பெருங்கடலு மொவ்வாத்துரிதங்க
ளெல்லாந்தமதுள்ளத்தில்நுபவிக்கிற மாதாவினுடை
யமனது அதிகமாய் நோகாதபடிக்குத் தாயேயென்
றழையாமல் ஸ்திரீயேயென்றருளிச்செய்தது மனோ
வாக்குக்கெட்டாத அரியபக்ஷமுள்ளகருணையென்றும
பசாசின்தலையை நசுக்குதற் குலகத்திலாதிமுதல் தே
வவாக்கினாற் குறிக்கப்பட்ட வுத்தமஸதிரீயானவள் இ
வள்தானென்றுவிளக்க அந்தவார்த்தையை யுரைத்
தாரொன்றுமறிக. ரூருக.

தேவத்திரவிய அநுமானம் என்பதில் தேவத்திர
வியம-எது. தேவவரப்பிரசாதமென்றும் அநுமான
ம்-எது. அடையாளமென்றும் பயனும். இது பஞ்சே
ந்திரியங்களாற் காணப்பட்டபொருளாகிச் சர்வேசு
ரன் ஸ்தாபித்தகட்டளையினு விஷேடப்பிரசாதத்தைக்
காட்டவும் பயக்கவும் வல்லதாம. ருஅஅ.

தேவவசீகிர்தம்அல்லதுதேவ்வசீகரம்-எது. தெய்வ
த்தால் வசியமபண்ணிக்கொள்ளப்பட்ட தென்றர்த்த
மாகும். யரு.

பரிக்கிரகம்-எது. கைக்கொள்ளுதல். (யஉ) அகூ.

பாடல் -எது.சிலவிடங்களில் இலத்தீன்பாடல்மொ
ழிபெயர்க்கப்பட்டதென்பதற்குப் பிரயோகிக்கப்ப
ட்டதென்றறிக. ரூகூரு.

அர்ச்.- பாப்பு-எது. இலத்தீன்பாஷையில் பிதாக்க
ளின்பிதா-Pater Patrum - எனனுமிருமொழியின்முத
ல்சையாம். தமிழில்-பா-பரவுதல், அப்பு, கட னென்னு
மிருமொழிகூடினதா லுலகெங்குஞ்சத்தியவேதத்தை
ப்பரவச்செய்யவும் எங்கும்பரவின திருச்சபையையா
ளவுங்கடமைபெற்றவனென்றர்த்தமாம. (யஅ) எசுய.

பெலிக்கான்-எது-ஓர்பட்சி. இதுதன்மார்பைக்கு

அளயிஅ. அரும்பதங்கட்குப்பயன்.

த்தியொழுகுமிரத்தத்தைத் தன்குஞ்சுகளுக் காகா ரமாயளித்துவளர்க்குமென்றதினல் நம்மையிரட்சி க்கத் தமதுதிவ்வியதிருவிரத்தத்தைச்சிந்தி யதனையு ந் தமதுதிருசசரீரத்தையு நமக்குத் திவ்வியசஞ்சீவி யாகவும் போசனமாகவுந்தந்தருளியநம்முடைய ஆ ண்டவருக்கொப்பிடப்பட்டது. (ரு) ளருஉ.

பகிழ்கின்றது - எனத்தேமயாவணி-கருணையன மா ட்சிப்படலம்-சயம-கவிமுதற் காண்க. அஅ.

மீறை - எது - விலையேறப்பெற்றவோர்பிசினும். அதுமரித்தவுடல்களுக்குப்பூசுதற்குரிய பரிமளபதா ர்த்தமானதால் துக்கத்துக்குமரணத்துக்குமிலக்ஷ ணமாயிற்று. ளளஅ.

விருக்தச்சேதனம் - எது - சர்வேசுரன் யூதரோடு செய்திருந்தவுடன்படிக்கைக்கடையாளமாக அவர்க ளுக்குள் தேவசுற்பனையால்வழங்கியசேதனசாரமாம். (ரு) ருக.

விருந்தாடி - எது - விருந்து அளிக்கிறவனென்றர் த்தமாம். இஸ்பிரீததுசாந்துவானவர் தமதுபேரில த்தியந்தபத்தியுள்ளோரை யாதரித்து அவர்களுக்கு த்தந்தருளுகிற ஆறுதல்முதலிய வரப்பிரசாதங்களி லுள்ள வின்பமானது சகலபதார்த்தங்களி னினிமை க்குமேலானதாகையால் ஆத்துமங்களுச்கு மதுரவி ருந்தாடியென்னப்பட் டிருக்கிறர். (ச) சரு.



# பொருளட்டவணை.

அானஉம். பொருளட்டவணை.

# பிழை திருத்தல்.

அமாவாசிகளின் அட்டவணையில் - ௲௮௪௮, ௲௮௫௬, ௲௮௬௪ ௵ மாசிமாதத் திலக்கத்துக் கொன்றைக்கூட்டவும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௮ | ௨௪ | குறிட்புகளின் | குறிப்புக்களின் |
| ௨௰ | ௰௭ | மழைக்கால | மழைகால |
| ௪௩ | ௰௯ | அதிசயபணி | அதிசயப்பணி |
| ௬ | ௧ | நமஸ்து | நம் |
| ௰௨ | ௯ | ஞாஸநாண | ஞானஸநான |
| ௰௮ | ௮ | அகமியா | அகம்மியா |
| ௩௬ | ௬ | முத்திபேறு | முத்திப்பேறு |
| ௭௧ | ௨௨ | யுத்ததம | யுத்தம |
| ௭௬ | ௰௬ | முயற்சிகளை | முயற்சிகளையும் |
| ௮௨ | ௰௮ | தம்முடைய | தன்னுடைய |
| | ௨௰ | தேவதுரோக | தேவத்துரோக |
| ௮௩ | ௨ | ம்வளை | மிவளை |
| | ௰௩ | வாசீர் | ஆசீர் |
| ௯௮ | ௩ | கருனை | கருணை |
| ௱௨௨ | ௨௧ | தவேரீ | தேவரீ |
| ௱௩௨ | ௪ | மிதுகளிணியதில் | மிணியதுகளில் |
| ௱௪௪ | ௨௰ | திவய | திவ்விய |
| ௱௫௭ | ௰௧ | காயங்ளால் | காயங்களால் |
| ௱௯௰ | ௰௭ | சச்சரவுப்பட்ட | சச்சரவுபட்ட |
| ௱௯௬ | ௧ | திருனடி | திருடின |
| ௱௯௮ | ௫ | யென் | என் |
| ௨௱௰ | ௰௨ | மஸதாப | மனஸதாப |
| ௨௩௮ | ௨௰ | சரிர | சரீர |
| ௨௪௪ | ௯ | சரீரவவயவ | சரீர-அவயவ |
| | ௨௧ | தேரீர் | தேவரீர் |

# பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௨௫௪ | ௰௬ | தோத்தரித்து | தோத்திரித்து |
| ௨௭௮ | ௮ | நிர்ப்பாக்கியபாவி | நிர்ப்பாக்கியப்பாவி |
| ௨௮௪ | ௫ | ஞாற்றை | ஞாத்தை |
| ௨௯௬ | ௯ | குணஙளி | குணங்களி |
| | ௭ | குணங்களில் | குணங்களில் |
| ௨௯௪ | ௰௫ | சுகிர்தவலங்கார | சுகிர்த-அலங்கார |
| ௬௱௧ | ௧ | கழட்டி | கழற்றி |
| ௬௪௰ | ௧ | ஜீதவாகம் | ஜீத-ஆகம |
| ௬௪௪ | ௰௮ | நீரவிடட | நீர்விட்ட |
| ௬௪௭ | ௰௯ | அதிக்சதிக | அதிகவதிக |
| ௬௯௰ | ௧ | கல்லார்ச்கு | கல்லாக்கு. |
| ௬௯௧ | ௰௨ | லவலேசமிட | லவலேசமுமிட |
| ௬௯௮ | ௬ | பவன்வன்னடை | பவன்ண்டை |
| ௬௭௰ | ௰௧ | மதுர்மர்ன | மதுரமான |
| ௬௭௫ | ௰ | செல்வி | சொல்வி |
| ௬௯௯ | ௫ | மாமெவ்வர | மாவெவ்வர |
| | ௰ | மேற்று | மேத்து |
| ௪௱௧ | ௰௧ | மததனே | மத்தனே |
| ௪௬௬ | ௰௯ | நமது | நம்முடைய |
| ௪௪௪ | ௨௨ | சொந்தகாரிய | சொந்தக்காரிய |
| ௪௫௧ | ௫ | வகைசெல்வ | வகைச்செல்வ |
| ௪௫௨ | ௮ | கடோரபக்ஷி | கடோரப்பக்ஷி |
| ௪௮௯ | ௰௫ | புலந்து | பிளந்து |
| ௪௯௰ | ௭ | சொல்லவிட | சொல்விலட |
| ௫௱௨ | ௯ | தனது | தன் |
| ௫௱௭ | ௰௮ | சுகிர்தகுஞகுண | சுகிா தகுண |
| ௫௨௧ | ௬ | நின்றுயெங்கே | நின்றெங்கே |
| ௫௬௫ | ௨௬ | பத்துபதினேந்து | பத்துப்பதினேந்து |
| ௫௪௯ | ௰௮ | பாவதந்திர | பாவத்தந்திர |
| ௫௫௨ | ௰௪ | பறிந்து | பறித்து |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௫௭௫ | ௨௨ | கண்க்ளை | கண்களை |
| ௫௯௩ | ௰௧ | கற்புதேவ | கற்புத்தேவ |
| ௬௦௫ | ௨௭ | முதவிய | முதவிய |
| ௬௦௯ | ௪ | படிகற்பி | படிக்கற்பி |
| ௬௦௰௪ | ௰௩ | லக்ஷணசாய | லக்ஷணச்சாய |
| ௬௦௰௮ | ௮ | யிட்ட் | யிட்ட |
| ௬௨௮ | ௰௨ | நன்மையாகி | நன்மைக்காகி |
| ௬௩௩ | ௰௫ | தமது | தம்முடைய |
| ௬௫௬ | ௧ | மெய்மற | மெய்ம்மற |
| ௬௬௪ | ௨௭ | சுகிர்தசாய | சுகிர்தச்சாய |
| ௬௬௫ | ௰௯ | அகோரகுளிர் | அகோரக்குளிர் |
| ௬௭௬ | ௮ | முதவிய | முதவிய |
| ௬௮௬ | ௨௫ | போல்லா | பொல்லா |
| ௭௦௬ | ௧ | திருவுதிர | திருவுதர |
|  | ௨ | ப்டி | படி |
| ௭௨௰ | ௬ | களிப்பொய்நீ | சளிப்போய்நீ |
|  | ௰௪ | லுணரத்து | லுணர்த்து |
| ௭௨௩ | ௰௭ | நார்தின் | நரகத்தின் |
| ௭௩௯ | ௰ | அந்நீத | அநீத |
| ௭௪௪ | ௰௫ | சுவமீ | சுவாமீ |
| ௭௫௫ | ௨௩ | தாம்மடைநத | தாமடைந்த |
| ௭௬௧ | ௨௫ | லெழும்பிசில | லெழும்பிச்சிலை |
| ௭௬௮ | ௭ | மஷர் | மனுஷர் |
| ௭௭௭ | ௰௫ | யுண்ட.கி | யுண்டாகி |

